ஸ்ரீ:





ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ பகவத்கீதை.

## இரண்டாம் ஷட்கம்

ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச்செய்த கீதாபாஷ்யம், ஷி பாஷ்யத்திற்கு ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த தாத்பர்யசந்த்ரிகை, கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷை, இவைகளுக்குச் சரியான தமிழ் மொழி பெயர்ப்பும், ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகங்கள், கீதா ஶ்லோகங்கள் இவைகளுக்கு பாஷ்யத்துக்கிணங்கப் பதவுரையும், ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டுகளுக்குப் பொழிப் புரையுமுள்ளது.

திருவஹீந்த்ரபுரம் சேட்லூர் வித்வான், பகவத்விஷயம்
ஸ்ரீ உ. வெ. நரசிம்மாசார்யார் ஸ்வாமியால் செய்யப்பட்டு

சிந்தாத்ரிப்பேட்டை ஸத் ஸம்ப்ரதாய வர்த்தனீ ஸபையாரால் பிரசுரம் செய்யப் பெற்றது.

இதன் விலை ரூபா. **3-8-0.**
தபாற்கூலி வேறு.

சச்சிதாநந்தம் பிரஸ், கோமளேசுவரன் பேட்டை, சென்னை.

1914.

# 2-வது ஷட்க கீதா ஶ்லோகங்களின்



# அகாராதி.



அ - அத்தியாயம், ஶ் - ஶ்லோகம், ப - பக்கம்.

# கீதா ஶ்லோகங்களின் அகராதி.

| | அ. | ஶ். | ப. |
|---|---|---|---|
| யச்சாவஹாஸார்த்தம் | 11 | 42 | 438 |
| யத்கரோஷி யதஶ்நாஸி | 9 | 27 | 241 |
| யத்ர காலே த்வநாவ்ருத்தி | 8 | 23 | 152 |
| யதாகாஶஸ்திதோ | 9 | 6 | 189 |
| யதா நதீநாம் பஹவோ | 11 | 28 | 416 |
| யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் | 11 | 29 | 416 |
| யதக்ஷரம் வேதவிதோ | 8 | 11 | 117 |
| யத்யத்விபூதிமத் ஸத்வம் | 10 | 41 | 359 |
| யம் யம் வாபி ஸ்மரந் | 8 | 6 | 106 |
| யஸ்மாந்நோத்விஜதே | 12 | 15 | 489 |
| யாந்தி தேவவ்ரதா | 9 | 25 | 233 |
| யே சைவ ஸாத்விகா | 7 | 12 | 34 |
| யே து தர்ம்யாம்ருதம் | 12 | 20 | 198 |
| யே து ஸர்வாணி | 12 | 6 | 471 |
| யே த்வக்ஷரமநிர் | 12 | 3 | 467 |
| யேऽப்யந்யதேவதா | 9 | 23 | 229 |
| யேஷாம் த்வந்தகதம் | 7 | 28 | 81 |
| யோ ந ஹ்ருஷ்யதி | 12 | 17 | 493 |
| யோ மாமஜமநாதிம் ச | 10 | 3 | 279 |
| யோ யோ யாம் யாம் | 7 | 21 | 67 |
| **ர** | | | |
| ரஸோऽஹமப்ஸு கௌந்தேய | 7 | 8 | 29 |
| ராஜவித்யா ராஜ | 9 | 2 | 178 |
| ருத்ராணாம் ஶம் | 10 | 23 | 338 |
| ருத்ராதித்யா வஸவ | 11 | 22 | 404 |
| ரூபம் மஹத்தே | 11 | 23 | 405 |
| **லே** | | | |
| லேலிஹ்யஸே | 11 | 30 | 418 |
| **வ** | | | |
| வக்துமர்ஹஸ்யஶேஷேண | 10 | 16 | 320 |
| வக்த்ராணி தே த்வரமாண | 11 | 27 | 410 |
| வாயுர்யமோऽக்நிர் | 11 | 39 | 434 |
| விஸ்தரேணாத்மநோ | 10 | 18 | 323 |
| வ்ருஷ்ணீநாம் வாஸுதேவ | 10 | 37 | 354 |
| வேதாநாம் ஸாமவேத | 10 | 22 | 335 |
| வேதாஹம் ஸமதீதாநி | 7 | 26 | 77 |
| வேதேஷு யஜ்ஞேஷு | 8 | 28 | 167 |
| **ஶ** | | | |
| ஶுக்லக்ருஷ்ணே கதீ | 8 | 26 | 165 |
| ஶுபாஶுபபலைரேவம் | 9 | 28 | 244 |
| ஶ்ரேயோ ஹி ஜ்ஞாநம் | 12 | 12 | 481 |
| **ஸ** | | | |
| ஸகேதி மத்வா ப்ரஸபம் | 11 | 41 | 438 |
| ஸததம் கீர்த்தயந்த | 9 | 14 | 206 |
| ஸ தயா ஶ்ரத்தயா | 7 | 22 | 69 |
| ஸமோऽஹம் ஸர்வபூதேஷு | 9 | 29 | 246 |
| ஸம: ஶத்ரௌ ச | 12 | 18 | 495 |
| ஸர்காணாமாதிரந்த | 10 | 32 | 347 |
| ஸர்வத்வாராணி | 8 | 12 | 119 |
| ஸர்வபூதாநி கௌந்தேய | 9 | 7 | 191 |
| ஸர்வமேதத்ருதம் | 10 | 14 | 316 |
| ஸஹஸ்ரயுகபர்யந்த | 8 | 17 | 139 |
| ஸாதிபூதாதிதைவம் | 7 | 30 | 81 |
| ஸுதுர்தர்ஶமிதம் | 11 | 52 | 453 |
| ஸந்துஷ்டஸ் ஸததம் | 12 | 14 | 484 |
| ஸந்நியம்யேந்த்ரிய | 12 | 4 | 467 |
| ஸ்தாநே ஹ்ருஷீகேஶ | 11 | 36 | 429 |
| ஸ்வயமேவாத்மநா | 10 | 15 | 318 |
| **ஹ** | | | |
| ஹந்த தே கதயிஷ்யாமி | 10 | 19 | 324 |

# ஸ்ரீமத் பகவத்கீதை.

ஸ்ரீ ஊதெ ஷாமவஹு ாஊா நுஜாய நமஃ
ஸ்ரீ ஃ்ருஷ்ணாய வாஸு தேவாய நமஃ
ஸ்ரீ ஊதெ நிமஊா ஷ ஊஹா ஜெ ஸிகாய நமஃ

ஏழாவது அத்யாயம்.

பா-அ] ஆறு அத்யாயங்களடங்கிய முதலாவது பாகத்தினுல் மேலான அடையவேண்டிய ப்ரயோஜனமாகிய பரப்ரஹ்மமாயும், தோஷங்களில் லாதவனுயும், எல்லாலோகங்களுக்கும் ஒரேகாரணமாயும்,எல்லாவற்றை

---

தா] ஆறு அத்யாயங்களடங்கிய இந்த இரண்டு பாகங்களுக்கும் ஸங்கதிசொல்லுகிருர்—'ஆறு அத்யாயங்களடங்கிய' என்றுரம்பித்து. 'மேலான' என்றுரம்பித்து 'சேரல்லுவதற்காக' என்கிறவரையிலுள்ள வாக்யங்களால் இரண்டாவது ஆறு அத்யாயங்களின் அர்த்தம் சொல்லப்பட்டது. அதற்கு மேலுள்ள வாக்யங்களால் முதலாறு அத்யாயங்களின் அர்த்தம் சொல்லபபட்டது.'ஆறு அத்யாயங்களடங்கிய முதலாவதுபாகத்தினுல்' என்பதற்கு'சோல்லப்பட்டது' என்பதோடு அன்வயம் சொல்ல வேண்டியது. [1] "ஊாஃ—வெத்" என்பது முதலிய ஶ்லோகங்களின் அர்த்தத்தைக் காட்டுகிருர்—'மேலான அடையவேண்டிய ப்ரயோஜன மாகிய' என்று. இத்தால் பரிசுத்தமான ஜீவாத்மா மாத்ரத்தை விலக்குகிறது. மேலான அடையவேண்டிய ப்ரயோஜனமாய் இருக்கைக்குக் காரணங்கள் 'பரப்ரஹ்மமாயும்' என்பது முதலியவை. [2] "வாஸ ஹஷவாஸயா" என்பது முதல் மேலே சொல்லப்போகிருர். தான் புருஷோத்தமன் என்று மேலே சொல்லப்போகிற [3] ஸந்தர்ப்பம் முதலியவைகளின் அர்த்தம் 'தோஷங்களில்லாதவனுயும்' என்பது. இத்தால் அறிவில்லாத வஸ்துக்களிலிருக்கிற மாறுதல்களும், அறிவுள்ள வஸ்துக்களிலிருக்கிற க்லேஶம் முதலியவைகளும், பரிஹரிக்கப்பட்டன. [4] "ஊஹம் ஸவ-ஸ்ய ஹவஃ" என்பது முதலியவைகளின் அர்த்தத்தைச் சொல்லுகிருர்—'எல்லா லோகங்களுக்கும்' என்றுரம்

---

[1] பகவத்கீதை, 8–16. [2] பகவத்கீதை, 10–12.
[3] பகவத்கீதை, 15–வதுஅத்யாயம். [4] பகவத்கீதை, 10–8.

பாரையுந் தெரிந்துகொண்டவனும், எல்லா வஸ்துக்களாயும், ஸத்யஸங்கல் பனும், பெரியவிபூதிகளையுடையவனும் இருக்கிற, லக்ஷ்மிக்கு நாயக னாகிய நாராயணனை அடைவதற்கு உபாயமாகிய அவனைப்பற்றிய உபா ஸநத்தைச் சொல்லுவதற்காக, அதற்கு அங்கமாகியும், ஆத்மஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கிற கர்மயோகத்தின் அநுஷ்டானத்தினால் உண்

டா] பித்து. அறிவுள்ள வஸ்துக்கள் அறிவில்லாத வஸ்துக்கள் இவைக ளாகிய எல்லா லோகத்துக்கும் நிமித்த காரணமும் உபாதாந காரண முமாகிய என்றர்த்தம். இப்படி அடையவேண்டியதே காரணம் என்று சொன்னதினால் எல்லாவற்றிற்கும் மேலான ஆசாசம் ஒன்றுண்டு, என்னும் மதம் நிராகரிக்கப்பட்டது. நிமித்த காரணமாயும் உபா தாநகாரணமாயும் இருப்பதற்கு உபயோகங்களாயும் [1] "ஏதத்யோநீநி பூதாநி" என்றிவை முதலிய இடங்களில் தாத்பர்யமாய்க்கொள்ளப் பட்ட அர்த்தம 'எல்லாவற்றையும் தெரிந்துகொண்டவனும்' என்பது முதலியவை. 'எல்லா வஸ்துக்களாயும்' என்பதற்கு எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாகையினால் எல்லாவற்றையும் தனக்கு சரீரமாக உடைய வனும் என்றர்த்தம். [2] "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" என்றல்லவோ மேலே சொல்லப்போகிறார் [3] "ஸர்வமிதம் ப்ரோதம்" என்பது முதலியவைகளாலும் விபூத்யத்யாயம் முதலியவைகளாலும் பெரிய விபூதிகளையுடையவனாயிருக்கை சொல்லப்படப்போகிறது. நாராயணன் என்னும் பதத்தின் அர்த்தமும் 'மேலான' என்றாரம்பித்து 'விபூதி களையுடைய வனும்' என்கிற வரையிலுள்ள பதங்களால் காட்டப் பட்டது. இதனால் சொல்லப்பட்டதாவது [4] "பரத்வாந்நிரவத்யத்வாத் பித்ருத்வாத் ஹிதசோதநாத் | அந்தராத்மதயா தோஷப்ரதிக்ஷேபக்ஷமத்வத: || போகலீலார்த்தநிஸ்ஸீமவிபூதித்வயயோகத: | ஸ்ரீ ஸஹாயத்வாச்சைவ ஸேவ்யோ நாராயண: பர: ||" 'அடைவ தற்கு உபாயமாகிய அவனைப்பற்றிய உபாஸநத்தை' என்பதற்கு,

[1] பகவத்கீதை 7—7. [2] பகவத்கீதை 11—40. [3] பகவத்கீதை 7—7.

[4] இது தாத்பர்யசந்த்ரிகை செய்தவரின் சுருக்கமான ச்லோகம். இதன் அர்த்தம்—'பரத்வாத்' மேலானவனாகையினாலும் 'நிரவத்யத்வாத்' தோஷங்களில் லாதவனாகையினாலும் 'பித்ருத்வாத்' தகப்பனாகையினாலும் 'ஹிதசோதநாத்' நன் மையையறிந்தவனாகையினாலும் 'அந்தராத்மதயா' அந்தராத்மாவாகையினாலும 'தோஷப்ரதிக்ஷேபக்ஷமத்வத:' தோஷங்களைப் போக்கத்தகுந்தவனாகையினாலும் 'போகலீலார்த்தநிஸ்ஸீமவிபூதித்வயயோகத:' போகத்துக்காகவும் லீலைக்சாகவும்

பா] டாக்கப்படுகிறதுமான அவனை அடைகிறவனுகிய ஜீவாத்மாவின் உண்மையைப்பார்ப்பது சொல்லப்பட்டது. இப்பொழுது ஆறு அத்யாயங்களடங்கிய நடுபாகத்தினுல் பரப்ரஹ்மமாகிய பரமபுருஷனுடைய ஸ்வரூபமும், பக்தி என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிற அவனைப்பற்றிய

---

*ரூ]பரமாத்மாவைப்பற்றிய உபாஸநமே[1] தத்க்ருது ந்யாயத்தினுல் அவனை அடைவதற்கு உபாயம் ஜீவாத்மாவைப்பற்றிய ஞானமும் கர்மங்களின் அநுஷ்டானமும் அந்த உபாஸநத்தை உண்டுபண்ணுகிறபடியினுல் பரம்பரையாக உபாயம் என்று தாத்பர்யம். அங்கங்களையும் அடைகிறவனையும் சொன்னபிறகு அங்கியையும் அடையவேண்டியதையும் சொல்லுகிருர், என்று ஸங்கதி என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'இப்பொழுது' என்றாரம்பித்து. கீழ்ச் சொல்லப்பட்ட பரிசுத்தமான ஜீவாத்மாவைவிட வேறுபட்டவன் என்பதையும், மேல்சொல்லப்போகிற மஹிமைகளின் சுருக்கத்தையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிருர்—'பரப்ரஹ்மமாகிய பரமபுருஷனுடைய ஸ்வரூபமும்' என்று. இத்தால் தத்வங்களைப்பற்றிச் சொல்லும் வாக்யங்களிலிருக்கும் பொதுவான ப்ரஹ்ம என்னும் பதம் நாராயணனென்கிற விசேஷத்தில் முடிவை உடையது, என்று காட்டப்பட்டது. பிறகு மோக்ஷத்திற்கு உபாயத்தைச் சொல்லும் வாக்யங்களிலிருக்கும் பொதுவான "வேதநம்"(அறிவு)"உபாஸநம்"(இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருத்தல்) என்னும் பதங்களும் விசேஷத்திலேயே முடிகின்றன என்று சொல்லுகிருர்—'பக்தி என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிற' என்றாரம்பித்து. இப்படி இரண்டு வாக்யங்களாலும் இந்த இரண்டு ஆறு அத்யாயங்களின் ஸங்க்ரஹ ஶ்லோகங்களும் வ்யாக்யானம் செய்யப்பட்டன. [2] 'ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே யோகலக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே | ஆத்மாநுபூதிஸித்த்யர்த்தே பூர்வஷட்கேந சோதிதே || மத்யமே பகவத்தத்வயாதாத்ம்யாவாப்திஸித்தயே | ஜ்ஞாநகர்மாபிநிர்வர்த்யோ பக்தியோக:*

---

*ஏற்பட்ட எல்லையில்லாத இரண்டு விபூதிகளையுடையவனுகையினுலும் 'ஸ்ரீமத்தவாத்' லக்ஷ்மிக்கு நாயகனுனபடியினுலும்'அயம்' இந்த 'நாராயண:' நாராயணன் 'உபாஸ்ய:' உபாஸிக்கத்தக்கவன்'பர:' மேலான 'ப்ராப்ய:' அடையத்தகுந்தவனும்*

[1] *வேதாந்த சாஸ்த்ரத்தில் ஏற்பட்ட ஒருந்யாயம் பரமாத்மாவை எவ்விதமாக இங்கே உபாஸிக்கிருனே அப்படியே அடைகிருன் என்பது அதின்கருத்து.*

[2] *கீதார்த்தஸங்கரஹம், 2, 3 ச்லோகங்கள்.*

உபாஸனமும் சொல்லப்படுகிறது. இது மேலே * "யத꞉ ப்ரவ்ருத்திர்பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் । ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ꞉ ॥" என்றாரம்பித்து † "விமுச்ய நிர்மமஶ்ஶாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே ॥ ப்ரஹ்மபூத꞉ ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி । ஸம꞉ ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ।" என்னுமளவாகச் சுருக்கிச் சொல்லப்படப் போகிறது.

---

தா] ப்ரக்ருதித꞉ ॥ என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது. 'ஆத்மஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கிற' என்பதினால் 'ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம்' என்னும் பதம் வ்யாக்யானம் செய்யப்பட்டது. அது ஸூத்ரம் இவ்விதஜ்ஞானத்தினால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டிருக்கிறது என்பது முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறதல்லவா. "யோகஶ்சித்தவ்ருத்திநிரோத꞉" என்கிற இடத்தில் யோகமாவது வேறு விஷயங்களிலிருந்து மனதின் வ்யாபாரத்தைத் தடுத்தல். அதினாலுண்டாகும ஆத்மாவை நேராகப் பார்த்தல் "ஆத்மாநுபூதி" என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. ஆகையினால புனருக்தி தோஷம் இல்லை என்கிற அபிப்ராயத்தினால் 'உண்மையைப் பார்ப்பது' என்று சொல்லப்பட்டது. 'பரப்ரஹ்மமாகிய' என்பது "தத்த்வயாதாத்ம்ய" என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறது. இவ்விடத்தில் "தத்த்வ" என்பது ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. "யாதாத்ம்ய" என்பது உண்மையான ஸ்வபாவத்தைச்சொல்லுகிறது. பக்தி கர்மங்களின் அநுஷ்டானத்தினால் உண்டாக்கப்படுகிற ஆத்மஸாக்ஷாத்காரத்தினாலுண்டாகிறது என்பது பதினெட்டாவது அத்யாயத்தில் சொல்லப்படப்போகிறது என்று சொல்லுகிறார்—'இது மேலே' என்றாரம்பித்து. [1] 'அவனையே அறிந்துகொண்டு ஸம்ஸாரத்தைத்தாண்டுகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருப்பதால், அறிவது மாத்ரத்தினால் மோக்ஷமுண்டென்று தோன்றுகிறதே; [2] 'உபாஸனம் செய்யவேண்டும்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறபடியால் உபாஸனமாகிய அறிவினால் மோக்ஷமுண்டானாலுமுண்டாகட்டும். அப்படியிருந்தாலும் பக்தியினால் மோக்ஷமுண்டாகும் என்று ஓரிடத்திலும் ஶ்ருதியில் சொல்லப்படவில்லையே, கர்மங்களுடன் சேர்ந்து மோக்ஷத்திற்குக் காரணம் என்று ஶ்ருதியில் சொல்லியிருப்பதும்

---

* பகவத்கீதை, 18–46 † பகவத்கீதை, 18–53, 54.

1 ச்வேதாச்வதரோபநிஷத் 3–8. 2 ப்ருஹதாரண்யகோபநிஷத் 1.1–4–15.

பா] பக்தி என்னும் தசையையடைந்த உபாஸனமே பரமாத்மாவை அடைவதற்கு உபாயம் என்று வேதாந்தவாக்யங்களிலேற்பட்டிருக்கிறது. *'அவனையே அறிந்துகொண்டு ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான்' †'அவனை இவ்விதமாகத் தெரிந்துகொண்டவன் இவ்விடத்திலேயே மோக்ஷத்தையடைந்தவனாகிறான்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களில் சொல்லியிருக்கிற அறிவு, ‡'அடே ஆத்மாபார்க்கத்தக்கவன்' என்றாரம்பித்து 'த்யானம் செய்யத்தக்கவன்' §'ஆத்மாவாகிய லோகத்தை உபாஸனம் செய்யவேண்டியது' ¶'ஸத்வகுணம் சுத்தமானால் நிலையான நினைவு உண்டாகும் (அப்படிப்பட்ட) நினைவு உண்டானால் எல்லா ஸம்ஸாரபந்தங்களுக்கும் நீங்குதல் உண்டாகும்' ‖'பராபரனாகிய அவன் பார்க்கப்பட்டானேயானால் மனதின் பந்தங்கள் விட்டுப்போகின்றன, எல்லா ஸம்ஶயங்களும் நீங்கிவிடுகின்றன' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளின் அர்த்தத்தையே சொல்லவேண்டியதாகையால் இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருத்தலும், நேராகப்பார்ப்பதுபோல்

---

தா] *தள்ளமுடியாதே, பரமபுருஷனைப்பற்றிய உபாஸனமே மோக்ஷத்திற்கு ஸாதநம் என்பதும் சொல்லமுடியாதே. ஏனெனில் ருத்ரன், இந்த்ரன், முதலியவர்களைப்பற்றிய உபாஸனங்களும் மோக்ஷ ஸாதனங்களாக அதர்வ ஶிரஸ்ஸு ப்ரதர்தந வித்யை முதலிய இடங்களில் ஶ்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறபடியால், என்றிவை முதலிய ஆக்ஷேபங்களை மனதில் வைத்துக்கொண்டு ஸமாதானம் சொல்லுகிறார்*—'பக்தி என்னும் தசையையடைந்த' *என்றாரம்பித்து. உபாஸனமே மோக்ஷத்திற்கு ஸாதனம், அறிவது மாத்ரம் அல்ல, என்று ஒரு ப்ரதிஜ்ஞை; அதிலும் பக்தி என்னும் தசையை அடைந்ததே என்று இரண்டாவது ப்ரதிஜ்ஞை; இப்படிப்பட்ட உபாஸனம் மாத்ரமே கர்மமும் சேர்ந்தல்ல என்று மூன்றாவது ப்ரதிஜ்ஞை; அதுவும் பரமாத்மாவைப் பற்றியதே என்று நான்காவது ப்ரதிஜ்ஞை; இது* 'பரமாத்மாவை அடைவதற்கு உபாயம்' *என்பதினால் தத்க்ருது ந்யாயத்தை அநுஸரித்து ஏற்பட்டது.* 'வேதாந்த வாக்யங்களில் ஏற்பட்டிருக்கிறது' *என்பதற்கு, இவை நான்கும் வேதாந்த வாக்யங்களினாலேயே ஏற்*

---

* *ஶ்வேதாஶ்வதரோபநிஷத்*, 3-8. † *புருஷஸூக்தம்.*

‡ *ப்ருஹதாரண்யகம்*, 6-5-6. § *ப்ருஹதாரண்யகம்*, 1-4-15.

¶ *சாந்தோக்யோபநிஷத்*, 7-26-2. ‖ *முண்டகோபநிஷத்*, 2-2-8.

பா]இருப்பதும் த்யானம் உபாஸனம் என்னும் பதங்களால் சொல்லப்படுகிறதுமானதே என்று தெரிந்துக்கொள்ளப்படுகிறது. மறுபடியும் * 'இந்த

---

தா] பட்டவைகள் நம்மால் கல்பிக்கவேண்டியவைகளுமல்ல, [1] உபப்ரும்ஹணங்களை அபேக்ஷிக்கக்கூடியவைகளுமல்ல என்பது தாத்பர்யம். இவைகளுக்குள் முதலாவது ப்ரதிக்ஞையை ஸ்தாபிக்கிறார்—'அவனையே' என்றாரம்பித்து, 'தெரிந்துகொள்ளப்படுகிறது' என்கிறவரையில். "ச்ரோதவ்ய: [illegible]" என்கிற இரண்டு பதங்களும் [illegible] செய்யக்கூடியவைகளான வேதாந்தத்தைக்கேட்பது, அப்படிக்கேட்ட அர்த்தம் மனதில் உறுதிப்படுவதற்காக மனனம் செய்வது, இவைகளை அநுவதிக்கிறபடியினால் அந்தப் பதங்களை விட்டு பார்க்கத்தக்கவன், த்யானம் செய்யத்தக்கவன், என்று விதிக்கிற பாகமே மாத்ரம் இவ்விடத்தில் எடுக்கப்பட்டது. த்யானம், உபாஸனம், இவை இரண்டு பதங்களும் இவ்விடத்தில் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று காட்டுவதற்காக, இரண்டு பதங்களுமுள்ள வாக்யங்களை இங்கெடுத்தது. பார்க்கத்தக்கவன் த்யானம் செய்யத்தக்கவன் என்கிற இரண்டு பதங்களும் வெவ்வேறு அர்த்தங்களைச் சொல்லுகிறதாக லோகத்தில் ப்ரஸித்தங்களாகையாலும், ஒரே வாக்யத்திலிருக்கிற இவை இரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுவதாயிருந்தால் புநருக்தி என்னும் தோஷம் வருகிறபடியாலும், பார்ப்பதும் த்யானம் செய்வதும் தனித்தனியாகவே விதிக்கப்படுகின்றன என்று ஆக்ஷேபம்வரில், அதற்கு ஸமாதானமாக அவைகளுள் ஒன்று பொதுவானபதமாகவும் மற்றொன்று விசேஷமான பதமாகவும் இருக்கிறபடியால், ஒரே அர்த்தத்தையே சொல்லுகின்றன என்று காட்டுவதற்காக, நினைப்பதுமாத்ரத்தையும் பார்ப்பது மாத்ரத்தையும் தனித்தனியாக ஸம்ஸாரபந்தம் விடுவதற்குக்காரணமாகச் சொல்லுகிறதாகையினாலே யே, ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறவாக்யங்களை எடுத்திருக்கிறது. இத்தால் சொல்லப்பட்டதாவது, ஒரே ஸந்தர்ப்பத்தில் சொல்லப்பட்டிருக்கிற விசேஷத்தில் அதே ஸந்தர்ப்பத்தில் சொல்லியிருக்கும் பொதுவான பதங்களுக்குத் தாத்பர்யம் என்பது ந்யாயத்தினால் ஏற்பட்டது. ஆகையினால் இந்த ஸந்தர்ப்பத்தில் "வேதநம்" (அறிவு)

---

* முண்டகோபநிஷத், 3-2-3.

[1] இதிஹாஸம் புராணம் முதலியவை.

தா] முதலிய பொதுவான பதங்களுக்கு த்யானம் உபாஸனம் என்னும் பதங்களால் சொல்லப்படுகிற விசேஷத்திலே தாத்பர்யம் ஒப்புக்கொள்ளவேண்டும். த்யானமாவது எண்ணெயின் தாரையைப்போல இடைவிடாமல் உண்டாகிற நினைவுகளின் தொடர்ச்சி என்று 'இடைவிடாதநினைவு' என்றர்த்தமுள்ள ஸ்ருதிவாக்யம் முதலியவைகளால் ஏற்பட்டிருக்கிறது. அந்த இடைவிடாத நினைவும் எல்லாஸம்ஸார பந்தங்களும் விடுவதற்குக் காரணமாக விதிக்கப்பட்டிருக்கிறது; பார்ப்பதும் அதற்குக் காரணமாக விதிக்கப்பட்டிருக்கிறது; இவைகள் இரண்டும் தனி உபாயங்களல்ல. ஏனெனில், இதில் ஒன்று அதிக ப்ரயாஸமுள்ளது, மற்றொன்று அவ்வளவு ப்ரயாஸமில்லாததாகையினாலும் இவை இரண்டுக்கும் ப்ரயோஜனம ஸமமாகையினாலும் ப்ரயாஸமில்லாத உபாயமிருக்கும் பொழுது அதிகப்ரயாஸமுள்ள உபாயத்தை ஒருவரும் அங்கீகரிக்கமாட்டாராகையினாலே அது உபாயமின்றிக்கே போகவேண்டிவருமாகையால், ஒன்றை வழிபாகக்கொண்டு மற்றொன்று உபாயம் என்பது ஸரியல்ல. அப்பொழுது ஒன்றை விதித்த இடத்திலேயே மற்றொன்றும் ஏற்பட்டபடியினாலே தனித்தனியாக விதிக்கவேண்டியதில்லையாகையால் பார்ப்பதை "ஸ்ம்ருதி" (நினைவு) என்னும் பதத்தினால் உபசாரமாய்ச் சொல்லுவதில் ஒரு குணமுமில்லை. ஆகையால் நினைவே "தர்சந" (பார்ப்பது) என்னும் பதத்தினால் விசேஷித்துச் சொல்லப்படுகிறது. நினைவு பார்ப்பதாகையாவது விசதமாய்த் தோன்றுகிறபடியினால் பார்ப்பதுபோலிருத்தல் தான் பயந்தவன் காமீ இவர்களுக்கு நினைவே ஊற்றத்தின் மிகுதியினால் பார்ப்பது போலிருத்தலை அடையும் என்பது [1] "வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் । க்ருஹீததநுஷம் ராமம் பாசஹஸ்தமிவாந்தகம்" ॥ [2] "லீநேவ ப்ரதிபிம்பிதேவ" என்றிவை முதலிய இடங்களிலும்சொல்லப்பட்டிருக்கிறதல்லவா; இவ்

---

[1] ஸ்ரீமத்ராமாயணம் ஆரண்யகாண்டம், 39--14 'வ்ருக்ஷே வருக்ஷே ச' மரங்கள்தோறும்'சீரக்ருஷ்ணாஜிநாம்பரம்'மரவுரியையும் மான்தோலையும்தரித்தவராயும் 'க்ருஹீததநுஷம்' பிடிக்கப்பட்ட வில்லையுடையவராயும் 'பாசஹஸ்தம்' பாசத்தைக் கையில் தரித்த'அந்தகமிவ' யமனைப்போலுமிருக்கிற'ராமம்' ராமனை 'பச்யாமி' பார்க்கிறேன்; (இது ராவணனிடத்தல் மாரீசன் வார்த்தை.)

[2] மாலதீமாதவம் அங்கம்-5மாலதியினிடத்தில் ஆசையுள்ள மாதவன் வார்த்தை'லீநேவ' ஒளித்துக்கொண்டவள் போலும 'ப்ரதிபிம்பிதேவ' ப்ரதி பலித்துத் தோன்றினாள்போலும்.

பா] ஆத்மா அனேகமான கேள்விகளாலும் எப்பொழுதும் மனனம் செய்வதாலும் த்யானம் செய்வதினாலும் அடையத்தகுந்தவனல்ல; எவனை இந்த ஆத்மா விரும்புகிறானோ அவனுக்கு இந்த ஆத்மா தன்னுடைய ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்துகிறான் என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினால் இன்னும்சில விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கிறபடியினால், பரமாத்மா

---

த்ரா] விதமாக 'த்ருஷ்டி (நினைவு) ஈக்ஷண (பார்ப்பது) இவை இரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்பது ஏற்பட்டபிறகு, ஓரேவாக்யத்திலிருக்கிற பார்க்கத்தக்கவன் த்யானம் செய்யத்தக்கவன் எனகிற இவை இரண்டு பதங்களும், ஒன்று பொதுவாகவும் மற்றொன்று விசேஷமாகவும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று. பிறகு இரண்டாவது ப்ரதிஜ்ஞையை நிரூபிப்பதற்காக சொல்லுகிறார்—'மறுபடியும்' என்றாரம்பித்து. இதனால் சொல்லப்பட்டதாவது, இந்த ஆத்மா என்றர்த்தமுள்ள வாக்யம் முதல் மேல்சொல்லப்படுகிற குணமில்லாத கேட்பது மனனம்செய்வது த்யானம் செய்வது இவைகளையே விலக்கியிருக்கிறது. அவைகளை முழுமையுமே விலக்குகிறதென்னில் அனேகப்ரமாணங்களுக்கு விரோதம் வருமாகையினால் 'எவனை இந்தப் பரமாத்மா விரும்புகிறானோ' என்றர்த்தமுள்ள வாக்யம முதலிய ஶ்ருதிவாக்யத்தினால் பகவான் விரும்புவதற்குக் காரணமான தன்னுடைய ப்ரயத்னத்தினால் உண்டாக்கக்கூடிய ஒரு விதமான குணம் விதிக்கப்படுகிறது. பகவான் ஸ்வதந்த்ரன் என்பதை மாத்ரம் சொல்லுவதாயிருந்தால், பகவானுக்கு பக்ஷபாதம் தயையில்லாமை முதலியதோஷங்கள் வருமாகையினாலும் [1] ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாகையினாலும அதுயுக்தமல்ல; ஏற்கனவே ஏற்பட்டிருக்கும் குணத்தைச்சொன்னபோதிலும் வேறுவிதிக்கத்தகுந்ததில்லாமையால் [2] ஶாஸ்த்ரம வ்யர்த்தமதான்; அவ்விதமாக பகவான் விரும்புவதற்குக்காரணமாயும் நம்முடைய ப்ரயத்னத்தினால் உண்டாக்கக் கூடிய குணம் பக்திதான். மிகவும் ப்ரியனானவன்தான் விரும்பத்தகுந்தவனாகிறான், பரமாத்மாவினிடத்தில் ப்ரீதியுள்ளவன தான அவனால விரும்பத்தகுந்தவனாகிறான். [2] "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸச மம ப்ரிய:" என்கிற பகவானுடைய வார்த்தையினாலேயே அப்படி ஏற்படுகிறபடியினால் என்று மற்ற உபாயங்களில் காணப்படாத இந்த ப்ரீதி மிகவும் ஸாதகமானது என்பதைக்காட்டுகிறார்—'நினைக்கப்படுகிற' என்றாரம்பித்து.

---

[1] பக்திப்ரபத்தியை விதிக்கிற சாஸ்த்ரங்கள். [2] பகவத்கீதை, 7—17.

பா] லினுல் விரும்பத் தகுந்தவனுயிருக்கைக்கு காரணமாக நினைக்கப்படு கிற வஸ்து மிகவும் ப்ரியமாயிருக்கிறபடியினுலே தானும் மிகவும் ப்ரிய மான தொடர்ச்சியான நினைவே உபாஸனம் என்னும் பதத்தினுல் சொல் லப்படுகிறதென்று நிஶ்சயிக்கப்படுகிறது. இதுவே பக்தி என்று சொல்லப் படுகிறது, * "[illegible]"

---

தா] [1] "[illegible]" என்றாரம்பித்து, [2] "[illegible]" [3] "[illegible] ||" என்றிவை முதலிய வசனங்களால் பகவானிடத்தில் பக்தி மிகவும் ஸுகம் என்பது ஏற்பட்டிருக்கிறது. இப்படியிருந்தாலும் பக்தி மோக்ஷத்திற்கு உபாயம் என்று எப்படி ஏற்பட்டது, என்கிற ஆக்ஷே பத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறுர்—'இதுவே' என்றாரம்பித்து. பூஜிக்கத்தக்கவரிடத்தில் ப்ரீதியே பக்தி என்று தாத்பர்யம். "[illegible]" என்கிறவிடத்தில் சொல்லுகிற ஸ்நேஹமும் பூஜிக்கத்தக் கவர்களிடத்தில் செய்யும் ப்ரீதியே என்றெண்ணிக்கொள்ளவேண் டியது, அப்படிக்கொள்ளாவிடில் ப்ரீதியுடன் தன் பத்னியை நினைத் துக்கொள்ளுதலும் பக்தியாக வேண்டிவருமாகையால். இப்படி உபாஸ னமே பக்தி என்னும் தசையையடைகிறது என்று ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் ஶ்ருதிஸ்ம்ருதி இவைகளுக்கு ஒன்றுக்கொன்று விரோதம்; ஒப்புக்கொண்டால், ஸ்ம்ருதி [4] உபப்ரஹ்மணமாயும் ஶ்ருதி அத்தால்

---

* முதல் ஷட்கம் 69-வது பக்கம் 2-வது புட்நோட்டைப் பார்க்க.

1 விஷ்ணுபுராணம், 1–20–19. 'அவிவேகாநாம' தேஹாத்ம விவேகமில் லாதவர்களுககு சப்தம் முதலிய விஷயங்களில் 'யா' எந்த 'ப்ரீதி:' ப்ரீதியோ.

2 விஷ்ணுபுராணம், 1–20–18. 'தேஷுதேஷு' அந்தந்த ஜன்மங்களில் 'அச்யுத' பகவானே 'தவயி' உம்மிடத்தில் 'பக்தி.' பக்தியானது 'ஸதா'எப்பொழு தும் 'அச்யுதா' நழுவாததாய் 'அஸ்து' இருக்கவேண்டியது.

3 விஷ்ணுபுராணம், 2–6–44. 'புநராவ்ருத்திலக்ஷணம்' திரும்பிவருவதை ஸ்வபாவமாக உடைய 'நாகப்ருஷ்டகமனம்' ஸ்வர்கலோகம் போவது 'க்வ' எஙகே; 'முக்திபீஜம்' மோக்ஷத்திற்குக காரணமான 'அநுத்தமம்' மிகவும் சிறந்த 'வாஸுதேவேதி' வாஸுதேவா என்று 'ஜபம்' ஜபம் செய்வது 'க்வ' எஙகே.

4 ச்ருதியின் அர்த்தத்தை விவரமாய்த் தெரிவிககிறது.

பா] வசனங்களும் ஒரே அர்த்தத்தைச்சொல்லுகின்றன என்பது ஸித்தித்தது. இதில் ஏழாவது அத்யாயத்தில் உபாஸனம் செய்யப்படுகிறவனுகிய பரமபுருஷனுடைய ஸ்வரூபத்தின் உண்மையும், ப்ரக்ருதியினுல் அதற்கு மறைவும், அது நிவ்ருத்திப்பதற்காக பகவானிடத்தில் ப்ரபத்திசெய்ய வேண்டுமென்பதும், உபாஸனம் செய்பவர்களுடைய மாதிரிகளின் வித்யாஸங்களும், ஞானியின் மேன்மையும் சொல்லப்படுகிறது.

ஶ்ரீபகவாநுவாச

மய்யாஸக்தமநா: பார்த² யோக³ம் யுஞ்ஜந் மதா³ஶ்ரய: ।
அஸம்ஶயம் ஸமக்³ரம் மாம் யதா² ஜ்ஞாஸ்யஸி தச்ச்²ருணு ॥ க

---

ஜா] உபநிஷத்துக்களும் சொல்லுகின்றன என்பதும் நிரூபிக்கப்பட்டது. அதிலும் [1] 'மஹானான ப்ரபுவான இந்தப் புருஷன் ஸத்வகுணத்தை உண்டாக்குகிறவன்' என்றர்த்தமுள்ள வாக்யமிருக்கிற படியினுல் ஶ்வேதாஶ்வதரோபநிஷத்து புருஷனைப்பற்றிச் சொல்லுகிறது என்பது வ்யக்தமாயிருக்கிறது. அதில சொல்லியிருக்கும் "ஶிவ" முதலிய பதங்களும் சுத்தி என்னும் குணம் பகவானிடத்தில் இருக்கிறபடியினுல் அதைச் சொல்லிக்கொண்டு பகவானையே முக்யமாகச்சொல்லுகின்றன. அதர்வ ஶிரஸ்ஸு ப்ரதர்தந வித்யை முதலிய இடங்களிலும் ருத்ரன் இந்த்ரன் முதலியவர்களுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனைப்பற்றிய உபாஸநமே விதிக்கப்படுகிறது, என்று சாரீரகஸூத்ரத்தில் ஸ்த்தாபிக்கப்பட்டது. 'இதில்' என்பதற்கு இந்த நடு ஆறு அத்யாயங்களுக்குள் என்றர்த்தம். 'உபாஸநம் செய்யப்படுகிறவனுகிய' என்பதினுல் முன் அத்யாயத்தில் ப்ரஸ்தாவித்ததோடு ஸங்கதியும் காட்டப்பட்டது. உபாஸனம் செய்யப்படுகிறவனுகிய பரமபுருஷனல்லவோ ஆறுவது அத்யாயம் கடைசி ஶ்லோகத்தில் "மாம்" (என்னை) என்று ப்ரஸ்தாவிக்கப்பட்டான். இத்தால் [2] "ஸ்வயாதா²த்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதி⁴ஶ்ஶரணாக³தி: । ப⁴க்தபே⁴த³: ப்ரபு³த்³த⁴ஸ்ய ஶ்ரைஷ்ட்²யம் ஸப்தம உச்யதே ॥" என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகமும் வ்யாக்யானம் செய்யப்பட்டது.

---

[1] ச்வேதாச்வதரோபநிஷத், 3-12.

[2] கீதார்த்தஸங்க்ரஹம், 11 ச்லோகம்.

ஸ்ரீ பகவாநு ஸ்ரீ க்ருஷ்ணன், உவாச சொன்னார்.

ப-ரை.] பார்த்த ஓ அர்ஜுன, மயி என்னிடத்தில், ஆஸக்த மநா: மிகவும் பற்றுதலை அடைந்த மனதை உடையவனாய், மதாஶ்ரய: என்னையே ஆதாரமாக உடையவனாய், யோகம் (என்னைப்பற்றிய) யோகத்தை, யுஞ்ஜந் செய்கிற, (நீ) மாம் என்னை, அஸம்ஶயம் ஸந்தேஹமில்லாமல், ஸமக்ரம் முழுமையும், யதா எப்படி, ஜ்ஞாஸ்யஸி அறியப்போகிறாயோ, தத் அதை, ஶ்ருணு கேள். ௧

பா.] என்னிடத்தில் மிகவும் விருப்பத்துடன் பற்றுதலை உடைய மனதை உடையவனாய், அதாவது என்னிடத்திலிருக்கும் ப்ரீதியின் மிகுதியினால் என்னுடைய ஸ்வரூபம், குணங்கள், வ்யாபாரங்கள், விபூதிகள் இவைகளோடு பிரிவு உண்டாயிற்றேயானால், அந்த க்ஷணத்திலேயே சிதறிப்போகும் ஸ்வபாவமுடையவனாகையினால் என்னிடத்

---

தா) பிறகு கீழ் பக்தி செய்யவேண்டியவனாக "மாம்" என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட தன்னையே, அந்த பக்தி முடிவு பெறுவதற்காக உள்ளபடியே உபதேசிக்கிறேன், என்று இந்த ஸ்லோகத்தினால் பகவான் சொன்னார். "ஆஸக்த" என்கிற இடத்தில் "ஆ" என்னும் உபஸர்க்கத்தினால் உபாஸநம் செய்வதற்காக உண்டாகவேண்டிய விருப்பம் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'மிகவும் விருப்பத்துடன்' என்று. அதையே காரணத்துடன் விஸ்தாரமாகச்சொல்லுகிறார்—'அதாவது' என்று ஆரம்பித்து. 'விபூதிகள்' என்னும் பதத்தினால் இவ்விடத்தில் பகவானுக்கு அஸாதாரணங்களான கைங்கர்யம் செய்கிறவர்களும் குடை முதலிய வஸ்துக்கள் ஆபரணங்கள் முதலியவைகளும் சொல்லப்படுகின்றன. லீலாவிபூதிநித்யவிபூதி என்கிற விபூதிகள் மாத்ரமல்ல, அவைகளோடு பிரிவு ஒரு பொழுதும் உண்டாகாததாகையினால். அதன்றிக்கே—விபூதிகளுடன் பிரிவாவது பகவானுடைய விபூதிகள் இவை, என்கிற அநுபவமில்லாமையாகவுமாம். ஸ்வரூபம் முதலியவைகளோடு பிரிவும் தன்னிஷ்டப்படி அநுபவமில்லாமையே. 'சிதறிப்போகும் ஸ்வபாவமுடையவனாகையினால்' என்பதற்கு, ஒரு கார்யத்தையும் செய்வதற்கு யோக்யதை இல்லாமையாகிற சிதறுதல் உண்டாகிறபடியினால் என்று அர்த்தம். இதனால் மனதுக்கு இம்மாதிரியான ஸ்வபாவமுண்டாகும் என்று சொல்லப்படுகிறது. புநருக்தி தோஷம் வருமே என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்காக

பா] **தில்** மிகவும் உறுதியாக வைக்கப்பட்ட மனதை உடையவனாய், அப்படியே தானும் என்னைவிட்டுச் சிதறிப்போகக்கூடியவனாகையினால், என்னை ஒருவனையே ஆதாரமாக உடையவனாய்க்கொண்டு என்னைப் பற்றிய யோகத்தைச் செய்ய ப்ரவ்ருத்தித்த நீ, யோகத்துக்கு விஷயமாகிய என்னை ஸந்தேஹமில்லாமலும் பூர்த்தியாகவும் எந்த என்றால் சொல்

---

தா] **'தானும்'** *என்று சொல்லப்பட்டது. "ஆத்மாச்ரய:" என்கிற இடத்தில்* [1] *"ஜலாசயா:" என்றிவை முதலிய இடங்களில் போல என்னையே என்று சொல்லப்படுகிறது என்று காட்டுகிறார்*—'என்னை ஒருவனையே ஆதாரமாக உடையவனாய்க்கொண்டு' *என்று என்னுடைய அநுபவத்தையே ஆதாரமாக என்று அர்த்தம். யோகத்துக்கு உபகாரம் செய்கிற பக்தி செய்யத்தகுந்த விஷயமாகிய பகவானுடைய தத்வஜ்ஞானம் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறதே யொழிய, நேராக யோகத்தின் அநுஷ்டானம் சொல்லப்படவில்லை, என்கிற அபிப்ராயத்தினால் "யுஞ்ஜந்" என்கிற பதத்தின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்*—'யோகத்தைச்செய்ய ப்ரவ்ருத்தித்த' *என்று. ஆரம்பிக்கப்பட்டு முடிக்கப்படாமலிருக்கிறதைச் சொல்லுகிற வர்த்தமான என்கிற பதத்தின் அர்த்தத்தில் ஆரம்பம் மாத்ரம் இங்கே சொல்லப்படுகிறது, என்று தாத்பர்யம். யோகம் செய்வதற்கு முன்னமேயே உள்ளபடி அறியவேண்டும் என்று ஏற்படுவதற்காக* 'யோகத்திற்கு விஷயமாகிய' *என்று சொல்லப்பட்டது. "அஸம்சயம், ஸமக்ரம்" என்கிற இரண்டுபதங்களும், க்ரியைக்கு விசேஷணங்கள் "ஸமக்ரம்" என்னும் பதம் ஸந்தேஹங்கள இல்லாமைக்காக எல்லாஸ்வபாவங்களோடும் கூடியவனாக என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்று காட்டுவதற்காக* 'பூர்த்தியாகவும்' *என்று சொல்லப்பட்டிருக்கிறது. விசேஷத்தைப்பார்ப்பதினாலன்றோ ஸம்சயம் நிவ்ருத்திக்கும். "ச்ருணு" என்று மேலே சொல்லி இருப்பதினாலும், மேல் ஶ்லோகத்தின் அர்த்தத்தை யோசிப்பதினாலும், மேல் ஶ்லோகத்தில் நான் சொல்லப் போகிறேன் என்று சொல்வதும்,* 'கேள்' *என்று இங்கே சொல்வதும், ஒரே விஷயத்தைப்பற்றி இருக்கவேண்டும் என்று ஏற்படுகிறபடியினால் இவ்விடத்தில் "யதா" என்னும்*

---

[1] *ஸ்ரீமத்ராமாயணம் ஆரண்யகாண்டம். ஜலத்தை ஸாப்பிடுகிறவர்கள் என்று அர்த்தம். எல்லோரும் ஜலத்தை ஸாப்பிடுகிறவர்களாகையினாலே தனித்துச் சொன்னது ஜலத்தையே ஸாப்பிடுகிறவர்கள் என்று காட்டுவதுபோல.*

பா] ரத்தைப்பற்றிய ஞானம்; அதாவது எப்படி நான் என்னைவிட வேறான எல்லாச் சேதனு சேதனங்களின் கூட்டத்தைப் பார்க்கிலும் எல்லாக் கெட்ட குணங்களுக்கும் விரோதமான ஸ்வபாவமுடையவனுகையினுலும், அநேகவிதங்களாயும், எல்லையில்லாதமேன்மையை உடையவைகளாயும், எண்ணிறந்தவைகளாயமிருக்கிற கல்யாண குணங்களையும் எண்ணிறந்த விஸ்தாரமான விபூதிகளையுமுடையவனுகையினுலும், வேறுபட்டவனே, அப்படிப்பட்ட வேறுபட்ட ஸ்வபாவத்தைப்பற்றி ஞானத்துடன் என்னுடைய ஸ்வரூபத்தைப்பற்றிய ஞானத்தையும் சொல்லப்

---

தா] படுகின்றன. அன்றிக்கே—'கேள் சொல்லப்போகிறேன்' என்பவைகளாவது அந்த ஞானவிஜ்ஞானங்களைக் கொடுக்கக்கூடிய வாக்யங்களின் வழியாக அவைகளோடு அன்வயிக்கிறதாகவுமாம். "ஜ்ஞாநம ஜ்ஞாத்வா" (ஞானத்தை அறிந்துகொண்டு) என்பது "பாகம் பசதி" (சமயல் சமைக்கிருன்) என்பதைப்போல (அதாவது இரண்டுபதங்களும் சேர்ந்து தெரிந்துக்கொண்டு என்று அர்த்தமாகிறது). இத்தால் விஜ்ஞான என்னும் பதம் த்யானத்தைச் சொல்லுகிறது என்று சிலர் வ்யாக்யானம செய்தது நிராகரிக்கப்பட்டது. வஸ்துவின் உண்மையான ஸ்திதியைத் தெரிந்துகொள்வதல்லவோ இவ்விடத்தில் "யஜ்ஜ்ஞாத்வா" என்கிற மேல்பாதியினுல் சொல்லப்படுகிறது. ஆகையினுல் [1]ஸ்வரூபநிரூபகதர்மங்களையும் [2]நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான தர்மங்களையும் சொல்லுகிறபடியினுல், ஞானவிஜ்ஞான என்கிற பதங்களுக்குப் புனருக்தியில்லை. உபயலிங்கங்களை உடையவனுகையினுலும், இரண்டு விபூதிகளையுடையவனுகையினுலும், எல்லா வஸ்துக்களையும் விடத் தான் வேறுபட்டவன் என்று மேல் சொல்லப்போகிறதைக் காட்டுகிருர்—'எப்படி நான்' என்று ஆரம்பித்து. [3] "ஜ்ஞாநஞ்ச விஜ்ஞாந குணோபபந்நம் கர்மாஶுபம் பஶ்யதி வர்ஜநீயம்"

---

[1] எவைகளைத் தெரிந்துகொள்ளாமல் ப்ரஹ்மத்தை தெரிந்துகொள்ள முடியாதோ அப்படிப்பட்ட ஸத்யத்வம் முதலியவைகள்.

[2] ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொண்டபிறகு அதனிடத்தில் அறியக்கூடிய சக்தி முதலியவைகள்.

[3] 'விஜ்ஞானகுணோபபன்னம்' பகுத்தறிவோடுகூடிய, 'ஞானம்து' ஞானமே, 'அசுபம் கர்ம' கெட்ட கர்மத்தை, 'வர்ஜநீயம்' விடத்தகுந்ததாக, 'பச்யதி' அறிகிறது.

பா] போகிறேன். அதிகமாகச் சொல்வதினால் ப்ரயோஜனம் என்ன? எந்த ஞானத்தைத்தெரிந்து கொண்டபிறகு என்னைப்பற்றிப் பின்னும் தெரிந்துகொள்ளவேண்டியது மிகுதி வேறே இருக்கப்போகிறதில்லையோ, அப்படிப்பட்ட ஞானத்தை சொல்லப் போகிறேன் என்று சேர்த்துக் கொள்ளவும். உ

பா-அ] மேல் சொல்லப்போகிற ஞானம் கிடைக்கக்கூடிய தல்ல என்று சொல்லுகிறார்—

மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத꞉ ॥ ௩

ப-ரை] மநுஷ்யாணாம் மனிதர்களின், ஸஹஸ்ரேஷு ஆயிரங் களுக்குள், கஶ்சித் ஒருவன், ஸித்தயே ஸித்தியின் பொருட்டு, யததி ப்ரயத்னப்படுகிறான்; யததாமபி ப்ரயத்னம் செய்து கொண்டு, ஸித்தா நாம் ஸித்தியை அடைந்தவர்களுடைய ஸஹஸ்ரேஷு ஆயிரங்க ளுக்குள், கஶ்சித் ஒருவன், மாம் என்னை, தத்த்வத꞉ உண்மையாக வேத்தி அறிகிறான்? ௩

பா] மனுஷ்யர்களாவது ஶாஸ்த்ரத்தை அறியாமல் அறிந்தபடி

---

தா] என்கிற இடத்திலும் விஜ்ஞான என்கிற பதத்தினால் இதுவே சொல்லப்படுகிறது. உயர்ந்த விஷயத்தைப்பற்றிய ஞானம் அதைத் தவிர மற்றதை அநுஸரம் செய்யக்காரணமானதாகையினால் "அஶேஷத꞉" (முழுமையும்) என்கிற இறகு விவரணமாயும் ஞானத்தை ஸ்தோத்ரம் பண்ணுவதாயுமிருக்கிற மேல் பாதிக்கு வ்யாக்யானம் செய் கிறார்—'அதிகமாகச் சொல்வதினால் ப்ரயோஜனம் என்ன' என்று ஆரம்பித்து. "இஹ பூய꞉" என்பவைகளின் அர்த்தம், 'என் னைப்பற்றிப்பின்னும்' என்பது. அவஶ்யமாய்த் தெரிந்துகொள்ளவேண் டிய எல்லா ஆகாரங்களோடும் கூடியதாக இவ்விடத்தில் உபதேசிக்கி றேன், என்று சொல்லப்பட்டது. உ

மறுபடியும் வேறுவிதமாக மேல் சொல்லப்போகிற ஞானமே ஸ்தோத்ரம் செய்யப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல் லுகிறார்—'மேல் சொல்லப்போகிற' என்று ஆரம்பித்து. இவ் விடத்தில் "மநுஷ்யாணாம்" என்கிற பதமானது மநுஷ்ய ஜாதியை மாத்ரம் குறித்ததல்ல, தேவதைகள் முதலியவருக்கும் பக்தி யோகம் செய்வதற்கு அதிகாரமுண்டு, என்று ஶாரீரக ஸூத்ரத்தில் ஸ்தா

பா] அநுஷ்டிக்கவும் யோக்யதை உள்ளவர்கள். அப்படிப்பட்ட ஆயிரம் பேயர்களுக்குள் ஒருவன்தான் ஸித்தியடையுமளவும் ப்ரயத்னம் செய்கிறான். ஸித்தியடையுமளவாக ப்ரயத்னம் செய்கிற ஆயிரம் பேயர்களுக்குள் ஒருவன்தான் என்னைத்தெரிந்துகொண்டு என்னிடத்திலிருந்து ஸித்தியை அடைவதற்கு ப்ரயத்னம் செய்கிறான். என்னை அறிந்த ஆயிரம் பேயர்களுக்குள் ஒருவனாவது உள்ளபடியே என்னை அறிகிறானா? ஒருவருமில்லை என்று அபிப்ராயம். *"வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" †"மாம் து வேத ந கஶ்சந" என்றல்லவோ மேலே சொல்லப்போகிறார்.

---

*தா] பிக்கப்பட்டிருக்கிற படியினால். ஆகையினால் ஸித்தியடைகிறவரையிலும் ப்ரயத்னம் செய்ய யோக்யதையுள்ளவர்களைமாத்ரம் குறிக்கிறது என்றுகாட்டுகிறார்—'ஶாஸ்த்ரத்தை' என்று ஆரம்பித்து. ஸித்தி அடைகிறவனாயிலும் ப்ரயத்னம் செய்வதுமாத்ரம் அனேகமாக எல்லோருக்கும் பொது. ஆகையினால் "ஸித்தயே" என்னும் பதத்திற்கு "கஶ்சித்" (ஒருவன்) என்றுசொல்லப்பட்ட விசேஷத்தோடு அன்வயம் பொருந்துவதற்காக 'ஸித்தியடையுமளவும்' என்று சொல்லப்பட்டது. "மாம்வேத்தி" (என்னை அறிகிறான்) என்று சொல்லப்பட்ட அறிவு, அவனால் ஸித்தியை அடைகிற வரையில் ப்ரயத்னம் செய்வதற்காக என்பது "யததாமபி ஸித்தாநாம்" என்கிற அநுவாதத்தின் கருத்து, என்று சொல்லுகிறார்—'என்னைத் தெரிந்துகொண்டு' என்று ஆரம்பித்து. 'உள்ளபடி' யாவது அடையத்தக்கவனாக இருக்கிற அவனே அடைவிக்கிறவனாகவுமிருக்கை முதலியது. "தத்த்வத:" என்கிற விசேஷமான அறிவு, பொதுவான அறிவு உண்டானால், உண்டாகும்; ஆகையினால் "யததாமபிஸித்தாநாம் கஶ்சிந்மாம் வேத்தி, தேஷாமபி கஶ்சிந்மாம் தத்த்வதோ வேத்தி" என்று இரண்டு வாக்யங்களாக மேல் பாதியைச் சொல்லிக்கொள்ளவேண்டும் என்கிற அபிப்ராயத்தினால் 'ஸித்தியடையுமளவாக ப்ரயத்னம் செய்கிற' என்று ஆரம்பித்து இரண்டுவாக்யங்களாக அர்த்தம் சொல்லப்பட்டது. "கஶ்சிந்மாம்வேத்தி" (ஒருவன் என்னை உள்ளபடியே அறிகிறான்) என்கிற இடத்தில் ஒருவன்தான் அறிகிறான், இருவர்களில்லை என்று அர்த்தம் சொல்வது வ்யாஸர் பீஷ்மர் முதலிய அனேகம் பெயர்கள் உள்ளபடி அறிந்தவர்களைக் கண்டிருக்கிறபடியால் யுக்தமல்ல. ஒருவன் அறியவே அறிகிறான், என்று சொல்வதும் இவ்விடத்தில் வ்யர்த்தம். மேலே அப்படிப்பட்டவன்*

---

* பகவத்கீதை, 7—19 † பகவத்கீதை, 7—26.

பூமிராபோऽநலோ வாயு: கம் மநோ புத்திரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா ॥ ௪

ப-ரை.] பூமி: பூமி, ஆப: ஜலம், அநல: தேஜஸ்ஸு, வாயு: காற்று, கம் ஆகாயம், மந: மனது, புத்திரேவ ச புத்தியும், அஹங்கார: அஹங்காரம், இதி என்று, அஷ்டதா எட்டு விதங்களாக, பிந்நா பிரிந்திருக்கிற, ப்ரக்ருதி: உலகத்திற்குக் காரணமாகிய வஸ்து, மே என்னுடையது. ௪

பா.] விசித்ரங்களாய், அளவில்லாத அநுபவிக்கக்கூடிய

---

தா] *துர்லபன் என்கிற வார்த்தைக்கு விரோதமும் வரும்; ஆகையினால் இங்கே வஸ்துவின் ஸ்வபாவத்தினாலும் மேல் சொல்லப்போகிற வார்த்தைகளோடு பொருந்தியிருப்பதினாலும் ஏற்பட்டதாகிய துர்லபன் என்பதையே காட்டுகிறார்—'ஒருவருமில்லை' என்று.* ௩

*பிறகு இந்தஶ்லோகம் முதல பன்னிரண்டாவது ஶ்லோகம்வரையில் தன்னுடைய உண்மையான ஸ்வபாவத்தைஉபதேசிக்கிறார். அதில முதலில் கார்யமாயும் காரணமாயுமிருக்கிற அசேதன வஸ்துக்களைவிட வேறுபட்டவனாக இருக்கையை அவைகளுக்குத்தான் யஜமானனாக இருக்கையை முன்னிட்டுக் காட்டுகிறார். ப்ரக்ருதியின் கார்யங்களாகிய பூமி முதலியவைகளை இங்கே ப்ரக்ருதி என்று சொல்லியிருக்கிறபடியினால். வ்யஷ்டி ஸ்ருஷ்டியைக் குறித்து ப்ரக்ருதியாக இருக்கை சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'விசித்ரங்களாய்' என்று ஆரம்பித்து. இங்கு சிலர் சொல்லுவதாவது, [1] 'எட்டு ப்ரக்ருதிகள்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறபடியினால், பூமி முதலிய பதங்களினால் தந்மாத்ரைகள் சொல்லப்படுகின்றன. "மந:" என்கிற பதத்தினால் மனதிற்குக் காரணமாகிய அஹங்காரம் சொல்லப்படுகிறது. "அஹங்கார:" என்னும் பதத்தினால் அஹங்கார வாஸனைக்கு இருப்பிடமாயும் எல்லாவற்றிற்கும் மூலகாரணமுமான அவ்யக்தம் சொல்லப்படுகிறது என்று. இப்படி எல்லாப் பதங்களுக்கும முக்யமான அர்த்தத்தை ஒளிப்பதினாலுண்டாகும் கஷ்டத்தை விட வ்யஷ்டி ஸ்ருஷ்டியை குறித்துக் காரணமாக இருக்கை சொல்லப்படுகிறது என்பதே மேலானது என்று தாத்பர்யம், அதுவுமன்றிக்கே—"ப்ரக்ருதி:" என்னும்*

---

[1] *கர்போபநிஷத்து*

பா] வஸ்துக்கள், அநுபவிப்பதற்கு ஒத்தாசைக்கருவிள் அநுபவிக்கும் இடங்கள் இவைகளாக நிற்கிற இந்த லோகத்திற்குக் காரணமாகிய [வா ஸனைமுதலியகுணங்களை உடைய பூமி ஜலம் தேஜஸ்ஸு வாயு ஆகாசம் முதலியவைகளாகவும், மனது முதலிய இந்த்ரியங்களாகவும் மஹான்

---

தா] பதத்தினால் மூலப்ரக்ருதியே சொல்லப்படுகிறது. காரணமாயும் கார்யமாயும் இருக்கிற வஸ்து ஒன்றுகையினால் அந்த ப்ரக்ருதியே இப்படி எட்டுவிதங்களாகப் பிரிந்து இருக்கிறது என்று சொல்லப்படு கிறது. அந்த ப்ரக்ருதியே முதலில் ஒன்றுக இருந்து, பிறகு எட்டு விதங்களாக மாறி இருக்கிறதல்லவா. இவ்விடத்தில் தன்னைப் பற்றி உபதேசம் செய்ய ப்ரவ்ருத்தித்தவருக்கு ப்ரக்ருதி எட்டு விதம் என்று உபதேசம் செய்வது பொருந்தாது. அது தன்னு டையது என்பதினால் பொருத்தமுண்டே என்பதும் யுக்தமல்ல, அது எட்டுவிதம் என்று முன்னே உபதேசிக்கப்படாமையினால். ஆகையினால் ப்ரத்யக்ஷம் முதலியவைகளினால் ஏற்பட்ட ப்ரதிவீ முதலிய வஸ்துக்களாக மாறியிருக்கும் ப்ரக்ருதியே இங்கே அநு வதிக்கப்படுகிறது. தனக்கு அவைகளைவிட வேறுபட்டவனுக இருக்கையும், அதற்கு ஶேஷியாக இருக்கையும், அதற்கு நியந்தாவாக இருக்கையும் ஏற்படவேண்டியதற்காக, "மே" (என்னுடையது) என்பதினால், அது தனக்கு ஶேஷமாக இருக்கிறது என்பது விதிக் கப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'எனக்கு ஶேஷபூதம்' என்று சொல்லப்பட்டது. "விதி" (அறி) என்று பூமி முதலிய வைகளுக்கு ஒன்றுக்கொன்று வித்யாஸத்தைக் காட்டவேண்டியதற் காகவும் அவைகள் அநுபவிக்கத்தகுந்தவைகளாக வேண்டியதற்காக வும் இங்கு சொல்லப்படாத தந்மாத்ரைகளின் கார்யவிஶேஷங்களைக் காட்டுவதற்காகவும் 'வாஸனை முதலிய குணங்களை உடைய' என்று சொல்லப்பட்டது. இத்தால் பஞ்சபூதங்களைச் சொன்னது தந்மாத் ரைகளையும் குறிப்பிடுவதற்காக என்பதுவும் தெரிவிக்கப்பட்டது. இந்த அபிப்ராயத்தினால்தான் 'ஆகாசம் முதலியவைகளாகவும்' என்கிற இடத்தில் 'முதலிய' என்கிற பதம் சொல்லப்பட்டிருக்கிறது. தந்மாத்ரைகளுக்கும் பஞ்சபூதங்களுக்கும் அதிக வித்யாஸமில்லாத தினால் கணக்கிட்டுச் சொன்னது. "மந:" என்னும் பதம் கருவிக ளாகிய இந்த்ரியங்களின் கூட்டங்களைக்குறிப்பதற்காக, என்று தெரி விப்பதற்காக 'மனது முதலிய இந்த்ரியங்களாகவும்' என்று சொல்லப்

பா] அஹங்காரம் இவைகளாகவும் எட்டுவிதங்களாகப் பிரிந்திருக்கிற இந்த வஸ்து எனக்கு சேஷபூதம் என்று அறி. ௪

[Grantha verse] ॥ ௫

ப தை.] [Grantha] பாதைபலமுள்ள அர்ஜுன, [Grantha] இது, [Grantha] தாழ்ந்த (ப்ரக்ருதி,) [Grantha] இதைவிட, [Grantha] வேறானதாயும், [Grantha] ஜீவாத்மாவாகிய, [Grantha] உயர்ந்த, [Grantha] என்னுடைய, [Grantha] ப்ரக்ருதியை, [Grantha] அறி, [Grantha] எந்த ப்ரக்ருதியினால், [Grantha] இந்த, [Grantha] லோகமானது, [Grantha] தரிக்கப்படுகிறதோ. ௫

பா] இது என்னுடைய தாழ்ந்த ப்ரக்ருதி, இதைக்காட்டிலும் வேறானதாய் அதாவது ஆத்மாவுக்கு அநுபவிக்கத்தகுந்ததாய் அறிவில்

---

தா] பட்டது புத்தி அஹங்காரம் என்னும் பதங்கள், இவ்விடத்தில் ஞானம் கர்வம் முதலிய வெவ்வேறு அர்த்தங்களைச் சொல்லுகின்றன என்கிற பரமதத்தை விலக்குவதற்காக ஒரு விதத் தத்வங்களைச் சொல்லுகிறது என்று தெரிவிக்கிறார்—'மஹான் அஹங்காரம் இவைகளாகவும்' என்று இப்படி ஸமஷ்டி வ்யஷ்டி இந்த தத்வங்கள் முழுமையும் சொல்லப்பட்டதாகிறது ஆறும் வேற்றுமை பொதுவாக ஸம்பந்தங்களைச் சொல்லுவதாகவிதிக்கப்பட்டிருந்தபோதிலும் இவ்விடத்தில் உடைமை உடையவன் என்கிற ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது என்று முடிவு செய்யப்பட்டது. ௪

இப்படி அசேதனங்களைகாட்டிலும் தான் வேறுபட்டவன் என்பது சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட ஜீவாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டிருக்கை இந்த ஸ்லோகத்தில் சொல்லப்படுகிறது. "[Grantha]"என்பதற்குத் தாழ்ந்தது, அதாவது முக்யமல்லாதது என்று அர்த்தம், "[Grantha]" என்னும் பதமானது மிகவும் வேறுபட்ட ஸ்வபாவத்தைக்காட்டுகிறது. "[Grantha]" என்கிற இதினாலேயே ஸ்வரூபம் வேறு என்று சொல்லக்கூடியதாக இருந்தபோதிலும் "[Grantha]" என்கிற பதமானது வேறுபட்ட ஸ்வபாவத்தை உறுதிப்படுத்துவதற்காக என்கிற அபிப்ராயத்தினால 'அதாவது' என்றிவை

பா] லாத இந்த ப்ரக்ருதியைவிட வேறுபட்ட ஆகாரத்தை உடைய தாய் அதை அநுபவிப்பதினால் அதையும்விட முக்யமானதாய் அறியும் தன்மையையுடையதாகிய என்னுடைய ப்ரக்ருதியை அறி. எந்த ப்ரக்ருதியினால் அறிவில்லாத இந்த லோகம் முழுமையும் தரிக்கப்படுகிறதோ. ரு

ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய ।
அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா ॥ சா

ப.ரை.] ஸர்வாணி எல்லா, பூதாநி ப்ராணிகளும், ஏதத்யோநீநி கீழ்ச்சொல்லப்பட்ட இரண்டு விதங்களான ப்ரக்ருதிகளையும் காரணங்களாக உடையவைகள்; (ஆகையினால்) அஹம் நான் க்ருத்ஸ்நஸ்ய எல்லா, ஜகத: லோகத்துக்கு, ப்ரபவ: உத்பத்தி ஸ்த்தானம்; ததா அப்படியே, ப்ரலய: லயத்தை அடையும் ஸ்த்தானம். சா

---

தா] முதலானது சொல்லப்பட்டது. [1] 'அநுபவிக்கிறவன் அநுபவிக்கத் தக்கது' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தை அநுஸரித்து அநுபவிக்கிறவனாக இருக்கை அநுபவிக்கத்தக்கதாக இருக்கை இவைகளினால் மேன்மையும் தாழ்வும் காட்டப்பட்டது. "இதம் ஜகத்" என்று, ப்ரமாணங்களில் ஏற்பட்டதைச்சொல்லியிருப்பதற்குச் சுருக்கமில்லாமையினால் 'முழுமையும்' என்று சொல்லப்பட்டது. அவ்விடத்தில் "இதம்" என்று சொல்லியிருக்கிறபடியினால் அறிவில்லாத வஸ்து என்பது ஏற்பட்டது. இந்த விதமான தரித்தலும், விழித்துக்கொண்டிருக்கும் பொழுது ஸங்கல்பத்தினால் என்பது ப்ரத்யக்ஷத்தினாலேயே ஏற்பட்டது, மற்ற ஸமயத்தில் ஸ்வரூபத்தினால் தரிக்கிறது.

இப்படி ஸமஷ்டியாயிருக்கும் தசை சொல்லப்பட்டது. "ஏதத்யோநீநி" என்கிற பாதி ஶ்லோகத்தினால் வ்யஷ்டி சொல்லப்படுகிறது. "அஹம் க்ருத்ஸ்நஸ்ய" என்கிற பாதியினாலோ ஸமஷ்டி வ்யஷ்டி இவை இரண்டையும் சேர்த்து இவைகளுக்குக் கார்யமாயிருக்கை முதலியன சொல்லப்படுகின்றன. "ஸர்வாணி பூதாநி" (எல்லாப்ராணிகளும்) என்று சேதனமும் அசேதனமுமாகிய கார்யங்களைச் சொல்லியிருக்கிறபடியால், "ஏதத்" என்கிற பதமும் கீழ்

---

[1] ஶ்வேதாச்வதரோபநிஷத், I-12.

பா] இந்தச்சேதனஸமஷ்டி அசேதனஸமஷ்டியாகிய என்னுடைய இருவகையான ப்ரக்ருதித்வயக்காரணமாக உடையவைகளாயும், ப்ரஹ்மா முதல் புழுவரையிலும் உயர்ந்தவைகளாயும் தாழ்ந்தவைகளாயும் இருக்கிற சேதனம் அசேதனம் இவைகள் கலந்த எல்லா ப்ராணிகளும் என்னுடையவைகள் என்று எண்ணிக்கொள். என்னுடைய இரண்டு விதமான ப்ரக்ருதிகளைக் காரணமாக உடைய அவைகள் என்னுடையவைகள் அல்லவா; அப்படி எல்லாலோகங்களும் இரண்டு வித ப்ரக்ருதியைக் காரணமாகவுடையவைகளாகையாலும் எனக்கு சேஷபூதங்களாகையாலும் எல்லா லோகங்களுக்கும் நானே உத்பத்தி

---

தா] *ப்ரஸ்தாவிக்கப்பட்ட மாதிரியான ப்ரக்ருதி புருஷன் இவைகளைச் சொல்லுகிறதேயொழிய ப்ரக்ருதியைமாத்ரம் சொல்லுகிறதல்ல என்று காட்டுகிறார்—'இந்தச்சேதன' என்றாரம்பித்து. இதனால் ஜீவாத்மாவுக்கு ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லாமலிருந்தபோதிலும், தேவன் முதலிய சரீரங்கள் இந்த்ரியங்கள் அவைகளாலுண்டான ஞானம் க்ரியை ஸுக துக்கங்களின் அநுபவம், இவைகளுடன் கூடிய தசையையுடைய தனக்கு இதற்குமுன் அசேதனத்துக்கு ஸமானமாயிருக்கும் தசையை யுடைய தானேகாரணம் என்பது யுக்தம் என்று காட்டப்பட்டது, மூலத்தில் "ஈதீயாநி" (என்னுடையவைகள்) என்னும் பதம் இல்லை; அப்படி இருக்க வ்யாக்யானத்தில் ஏன் அப்படி சொல்லப்படுகிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'என்னுடைய இருவகையான' என்றாரம்பித்து. [1] பதம் சொல்லப்படாவிட்டாலும் வாக்யத்துக்கு அர்த்தம் ஏற்படுகிற படியினால் "ஊ்தி" (என்று) என்னும் பதம் தன்னுடையது என்பதைக்குறிப்பதற்காக என்று தாத்பர்யம். பகவானுடைய அபிப்ராயத்திலிருக்கும் வார்த்தையாகையினால் என்னுடையவைகள் என்று சொல்லியிருக்கிறது. 'அப்படி' என்பதற்கு அப்படியிருக்கும்பொழுது என்றர்த்தம். இத்தையே விவரிக்கிறது 'இரண்டுவித ப்ரக்ருதியை' என்பதுமுதல். அன்றிக்கே—'அப்படி' என்னும் பதம் முன்பு சொன்ன சேஷியாயிருக்கை முதலியவற்றைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது என்று*

---

1 *என்று எண்ணிக்கொள் என்று சொல்லாமற்போனாலும் வாக்யத்தைச் சொன்னமாத்ரத்தினாலேயே அதன் அர்த்தம் ஏற்படுகிறபடியினால் என்று கருத்து*

பா] யாகுமிடமும்; நானேலயிக்குமிடமும் நானே ஶேஷீ என்றுமறி. அந்தச்சேதநம் அசேதனம் இவைகளுக்கு ஸமஷ்டியாகிய ப்ரக்ருதி புருஷன் இவை இரண்டுக்கும் பரமபுருஷனைக் காரணமாகவுடைத்தாயிருக்கை, ஶ்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் ஏற்பட்டிருக்கிறது. * 'மஹாந் அவ்யக்தத்தில் லயிக்கிறது. அவ்யக்தம் அக்ஷரத்தில் லயிக்கிறது; அக்ஷரம் தமஸ்ஸில் லயிக்கிறது; தமஸ்ஸு பரனான தேவனிடத்தில் லயிக்கிறது'; என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறது. †"விஷ்ணோஃஸ்வரூபாத் பரதோஹிதே த்வே ரூபே ப்ரதாநம் புருஷஶ்ச விப்ர"

தர]சொல்லுகிறதாகவுமாம். "ப்ரபவஃ ப்ரலயஃ" என்னும் பதங்கள் இவ்விடத்தில் உத்பத்தியாகும் இடம் லயத்தை அடையும் இடம் இவைகளைச்சொல்லுகின்றன. ப்ரக்ருதியைப்பற்றிச் சொல்லும் வாக்யத்தில் [1] "அஜாம்" (உத்பத்தியில்லாத) என்னும் ஜீவர்களைச் சொல்லுமிடத்தில் [2] "நித்யாநாம்" (நித்யர்களான) என்னும் ஶ்ருதிகளும் [3]"ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி" என்றிவை முதலான ப்ரமாணங்களுமிருக்கும்பொழுது கார்யங்களைப்பற்றிச்சொல்லுகிற "ஸர்வ" (எல்லா) என்னும் பதத்தினுல் இந்த இரண்டு வித ப்ரக்ருதிகளையும் சொல்லுகிறதென்பது எப்படித் தெரிந்துகொள்ளப் படுகிறது, என்கிற ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம் சொல்லுகிறார்— 'அந்தச் சேதனம்' என்றாரம்பித்து. ப்ரக்ருதி புருஷன் இவை இரண்டுக்கும் பரமாத்மாவினிடத்தில் லயம் ஶ்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறபடியினுல், அவைகள் பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பத்தியாகின்றனவென்பதும், ஸித்தமன்றோ என்கிற அபிப்ராயத்தினுல் ஶ்ருதி வாக்யத்தை எடுக்கிறார்—' மஹாத் அவ்யக்தத்தில் ' என்றாரம்பித்து. ப்ரக்ருதி புருஷன் இவைகளுக்குப் பரமாத்மாவினிடத்தில் லயமாவது பாலில் கலந்த நீர்போலப் பிரிக்கமுடியாத ஸம்பந்தம்; ஆகை

* ஸுபாலோபநிஷத்—2.

† விஷ்ணுபுராணம், 1—2—24. 'விப்ர' ஓ ப்ராஹ்மண, 'ப்ரதாநம்' ப்ரக்ருதியம், 'புருஷச்ச' புருஷனும் 'பரத:' மேலான 'விஷ்ணோ:' பகவானுடைய 'ஸ்வரூபாத்' ஸ்வரூபத்திலிருந்து 'உதிதே' உண்டான 'த்வே' இரண்டு 'ரூபே' ரூபங்கள்.

[1] ச்வேதாச்வதரோபநிஷத், 4—5.　[2] ச்வேதாச்வதரோபநிஷத், 6—16.

[3] பகவத்கீதை, 13—19.

பா] *"ப்ரக்ருதிர்யா மயாக்யாதா வ்யக்தாவ்யக்த ஸ்வரூபிணீ । புருஷச்சாப்யுபாவேதௌ லீயேதே பரமாத்மனி ॥ பரமாத்மா ச ஸர்வேஷாமாதார: பரமேச்வர: । விஷ்ணுநாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே" என்றிவை முதலான ஸ்ருதிஸ்ம்ருதிகளிருக்கின்றனவல்லவா. ௬

தா] யால் வஸ்துவின் ஸ்வரூபம் நித்யமாகையால் "அஜாம்" என்ற ஸ்ருதியில் சொல்லியிருப்பதற்கு விரோதமில்லை. மேற் சொன்ன அர்த்தத்தில் ஸ்ம்ருதியையும் ப்ரமாணமாகக்காட்டுகிறார்—"ப்ரதேசா: ஸ்ஸ்ரவா:" என்றாரம்பித்து. "பரதோதிதே" என்றவிடத்தில் "பரத:, உதிதே" என்று பதம் பிரித்துக்கொண்டு "பரத:" உயர்ந்த விஷ்ணுவின் ஸ்வரூபத்திலிருந்து "உதிதே" உண்டான என்று அர்த்தம் சொல்லிக்கொள்ளவேண்டியது. வ்யாகரணப்படி "உ பரத உதிதே" என்று சேரவேண்டியிருந்தபோதிலும், ருஷியின் வாக்யமாகையால் "பரதோதிதே" என்று சேர்ந்திருக்கிறது. அன்றிக்கே—இந்த ஸ்ம்ருதியும் ப்ரளயத்தைத்தான் சொல்லுகிறது. ப்ரளயத்தைச் சொல்லும் ஸந்தர்ப்பத்தில் இருக்கிறபடியால் அப்பொழுது "தோ ஸவஸ்ணுதே" (தோ என்கிற தாது பிரித்தலைச் சொல்லும்) என்கிற தாதுவின் மேல் 'திதே" என்பது நிஷ்டா என்னும் விகுதியைக் கடைசியில் உடையபதம் அதற்குவெவ்வேறான என்றர்த்தம்; இதனால் ப்ரளயத்தை யிலும் ப்ரக்ருதி புருஷன் பகவான் இவைகளுக்கு ஒருவர்க்கொருவர் ஸ்வரூபத்தில் பேதமுண்டு என்று சொல்லப்பட்டதாகிறது. அதுவுமன்றிக்கே—"ஸதிதே" என்றாவது பதம் பிரித்துக்கொள்ளவேண்டியது. அதற்குப்பிரிவில்லாத என்று அர்த்தம், இதனால் அவைகளுக்குப் பிரிக்கமுடியாத ஸம்பந்தம் சொல்லப்பட்டதாகிறது; ப்ரளயத்தைச் சொல்லும் ப்ரகரணத்தில் இந்த வசனமிருக்கிறபடியினாலும் இங்கும் மேலும் மேலும் எடுக்கப்படுகிற வசனங்களுக்கு ஸமமான அர்த்தத்தைச் சொல்லவேண்டும் என்கிற அபிப்ராயத்தினாலும் இப்படியே இந்த வசனத்துக்கு அர்த்தம் சொல்லவேண்டியது. இப்படித்தான் சொன்ன அர்த்தத்தில் ப்ரமாணமாக வ்யக்தமாகச் சொல்லுகிற வசனத்தை உதாஹரிக்கிறார்—"ப்ரக்ருதிர்யா" என்றாரம்பித்து. ௬

* விஷ்ணுபுராணம் 6–4–39, '40. 'வ்யக்தாவ்யக்தஸ்வரூபிணீ' ப்ரகாசமாயும் ப்ரகாசமில்லாததுமான ஸ்வரூபத்தையுடைய 'யா' என்ற 'ப்ரக்ருதி'

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய ।

ப-ரை. தநஞ்ஜய ஓ அர்ஜுன, மத்த: என்னைவிட அந்யத் வேறான, கிஞ்சித் ஒரு, பரதரம் மேலான வஸ்துவும், நாஸ்தி இல்லை.

பா] எப்படி எல்லாவற்றிற்கும் காரணமான இரண்டுவித ப்ரக்ருதிகளுக்கும் காரணமாகையினாலும் எல்லா அசேதனவஸ்துக்களுக்கும் சேஷியான சேதனத்துக்கும் சேஷியாக இருக்கையினாலும், காரணமாயிருக்கையிலும் சேஷியாயிருக்கையிலும் நானே மேலானவனே,

---

தா] "மத்த: பரதரம்' என்கிற ஶ்லோகத்தில் முன்பு சொன்ன அர்த்தத்தையே அகற்று மாறாக இல்லை என்று சொல்லி உறுதிப்படுத்துகிறதென்று சொல்லும் பக்ஷத்தில், இந்த ஶ்லோகத்துக்கு அதிக ப்ரயோஜனமில்லை. "அஹம் பரதர:" (நான் மேலானவன்) என்று கீழ்ச்சொல்லப்படாமையால் என்னைத்தவிர வேறு மேலான வஸ்து இல்லை, என்று அதற்கு விரோதத்தைத் தடுப்பதும் அவ்வளவு உசிதமல்ல; ஆதலால் கீழ்ச்சொல்லப்படாத அர்த்தத்தைச் சொல்லுகிறது என்னும் அர்த்தம் ஸம்பவிக்கும்பொழுது அதை விடுவதும் தகுதியல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—எப்படி' என்றாரம்பித்து, முன் ஶ்லோகத்திலிருக்கும் "தயா" என்னும் பதம் இங்கே இழுத்துக்கொள்ளப்பட்டது. அத்தால் எண்ணிறந்த பெரிய விபூதிகளையுடையவனாயிருக்கை எண்ணிறந்த குணங்களையுடையவனாயிருக்கைக்கு உதாஹரணமாகக் காட்டப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அப்படியே ஞானம்' என்றாரம்பித்து. 'சேஷியாக இருக்கையினாலும்' என்கிறவரையிலுள்ள வாக்யத்தினால் வஸ்துவினுடைய ஸ்திதியைக் காண்பித்திருக்கிறார். மேல் 'காரணமாயிருக்கையிலும் சேஷியாயிருக்

---

ப்ரக்ருதியானது 'மயா' என்னால் 'ஆக்யாதா' சொல்லப்பட்டதோ அதுவும் 'புருஷச்ச' புருஷனும் 'ஏதௌ' இந்த 'உபௌ' இரண்டும் 'பரமாத்மநி' பரமாத்மாவினிடத்தில் 'லீயேதே' லயத்தை அடைகின்றன 'ஸர்வேஷாம் எல்லாவற்றிற்கும் 'ஆதார:' ஆதாரமான 'பரமேச்வர.' எல்லாவற்றிற்கும் மேலான நியந்தாவான 'பரமாத்மாச' பரமாத்மாவும் 'ஸ.' அந்த 'விஷ்ணு நாமா' விஷ்ணுவென்று பேருடையவனாக 'வேதேஷு ச' வேதங்களிலும் 'வேதாந்தேஷு ச' உபநிஷத்துக்களிலும் 'கீயதே' சொல்லப்படுகிறான்.

பா] அப்படியே ஞானம் சக்தி பலம் முதலியகுணங்களையுடையவனாகை யினாலும் நானே மேலானவன்; என்னைவிடவேறான ஞானம் பலம் முதலியகுணங்களையுடைய ஒரு மேலானவஸ்துவும் இல்லை. ௬½

---

தா]கையிலும்' என்பதினால் மேன்மையின் மாதிரியைச் சொல்லுகிறார்; ஆதலால் புநருக்தி தோஷமில்லை. 'நானே மேலானவன்' என்றுசொல்லுவது அஸாத்யம்; ஏனெனில் என்னைவிட மேலானவன் இல்லை என்று தடுத்திருந்தபோதிலும் ஸமமானவன் இல்லை என்று ஏற்படவில்லையாகையால், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்— 'என்னை விட வேறான' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது, "மத்த:" (என்னைவிட) என்கிற இடத்திலிருக்கும் ஐந்தாவது வேற்றுமை "பரதர:"(மேலானவன்)என்பதோடு அந்வயிக்கிறதில்லை, ஏனெனில் அப்படிச்சொல்லும்பக்ஷத்தில் "அந்ய" (வேறான) என்கிற பதம் அந்வயிக்காமல் போய்விடுமாகையினால் "மத்த: அந்யத் பரதரம் நாஸ்தி" (என்னைவிட வேறு மேலான வஸ்து இல்லை) என்று அந்வயம் சொன்னால், நானே மேலானவன் என்று ஏற்பட்டது. ஆகையினால் பகவானுக்கு ஸமமானவனும் மேலானவனும் இல்லை என்று சொல்லப்பட்டதாகிறது என்பது. 'ஞானம் பலம் முதலிய குணங்களையுடைய ஒரு மேலானவஸ்துவும்' என்பதினால், ப்ரஹ்மா, ருத்ரன், முதலியவர்களும் பரிசுத்தமான ஜீவாத்மாக்களும் சேர்ந்துச் சொல்லப்பட்டார்கள். இப்படி [1] "ஸங்க்ராவ:" என்றிவை முதலிய ஶ்லோகங்களால் வேறொன்றை எதிர்பாராமல் ப்ரக்ருதியே மாறுதலையடைகிறது என்னும் வாதமும், ஜீவாத்மா மாத்ரம் ஸமீபத்திலிருப்பதினாலேயே ப்ரக்ருதி மாறுதலையடைகிறது என்னும் வாதமும், ப்ரக்ருதி புருஷன் இவைகள் பகவானுக்கு ஶேஷபூதங்களல்ல என்னும் வாதமும் நிராகரிக்கப்பட்டன. "மத்த: பரதரம்" என்கிற இந்த ஶ்லோகத்தினால் மும்மூர்த்திகள் ஒன்றென்றும், ஸமமானவர்கள் என்றும், அவர்களை விட மேலானது பரப்ரஹ்மமென்றும், அவர்களுக்குள்ளேயே விஷ்ணுவைத்தவிர வேறொருவர் பரப்ரஹ்மம் என்றும், அந்தந்தக்கல்பங்களில் தனித்தனி பரப்ரஹ்மங்கள் உண்டாகின்றன என்றும் சொல்லும்பக்ஷங்கள் தள்ளப்பட்டன. ௬½

---

[1] பகவத்கீதை, 7—4.

மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥ 7

ப-ரை.] ஸூத்ரே நூலில், மணிகணா இவ மணிகளின் கூட்டங்கள் போல, இதம் இந்த, ஸர்வம் எல்லாம், மயி என்னிடத்தில் ப்ரோதம் கோர்க்கப்பட்டிருக்கிறது. 7

பா] கார்யமான அவஸ்த்தையையும் காரணமான அவஸ்த்தையையும் உடைய சேதனம் அசேதனம் ஆகிய வஸ்துக்களின் கூட்டம் எனக்கு ஶரீரமாய் இருந்துகொண்டு நூலில் மணிகளின் கூட்டம்போல அந்தராத்மாவாயிருக்கும் என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கிறது அதாவது என்னை ஆதாரமாக உடைத்தாயிருக்கிறது. * 'எவனுக்கு

தா] பிறகு கீழ்ச்சொல்லிய எல்லாவற்றிற்கும் உபாதாநகாரணமாயிருக்கையினால் ஏற்பட்ட விகாரத்தையுடையவனாக இருக்கையைப் பரிஹரிப்பதற்காகவும், ப்ரக்ருதிபுருஷர்கள் இவைதனித்தனியாக இருக்கின்றன என்று சொல்லும் வாதத்தை நிராகரிப்பதற்காகவும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருக்கையை முன்னிட்டு, எல்லாவற்றையும் சரீரமாக உடைத்தாயிருக்கை இந்தப் பாதி ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது. "ஸர்வமிதம்" என்பதினால் எல்லா அவஸ்த்தைகளையுமுடைய சேதநாசேதனமாகிய எல்லாவஸ்துக்களும் சொல்லப்படுகின்றன என்கிற அபிப்ராயத்தினால் 'கார்யமான' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. நூலையும் மணிகளின் கூட்டத்தையும் உதாஹரணமாகச் சொன்னதினாலும் "ப்ரோதம்" (கோர்க்கப்பட்டிருக்கிறது) என்னும் பதத்தினாலும் தான் அவைகளுக்குள் நுழைந்திருப்பதும், தான் ஆதாரம் அவைகள் தன்னை ஆதாரமாகவுடையவைகள் என்பதும் தோன்றுகிறபடியினால், ஶரீரங்களின் இலக்கணமும் அவைகளுக்குண்டு என்று காட்டப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் 'எனக்கு ஶரீரமாய் இருந்துகொண்டு' என்று சொல்லப்பட்டது. ஒன்றே எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கிறதென்பதும் உள்ளே நுழைந்திருப்பதும்மறைந்து கொண்டிருக்கையும், தன்னையாதாரமாகவுடைய ப்ரக்ருதி முதலியவைகளால் தனக்கு ஸ்திதி இல்லாமையும், இங்கு நூலை உதாஹரணமாகச் சொன்னதாலேற்பட்டது. "ப்ரோதம்" (கோர்க்கப்பட்டிருக்கிறது) என்பதினால் ப்ரஹ்மததுக்கு அந்த வஸ்துக்களின் வெளியில் நிறைந்திருக்கையில்லை என்று தோன்றுகிறபடியால் அதை நீக்குவதற்

* ப்ருஹதாரண்யகோபநிஷத், 5—7—3.

பா] ப்ரதிவீ சரீரமோ' * 'எவனுக்கு ஜீவாத்மா சரீரமோ' † என்றும் இவன் எல்லா ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாயும் பாபங்கள் இல்லாதவனும் பரமபதத்திலிருப்பவனும் இருக்கிற ஒரு நாராயணனுகிய தேவன்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களில் லோகங்களும் ப்ரஹ்மமும் சரீரமாயும் ஆத்மாவாயும் இருக்கின்றன என்பது அந்தர்யாமி ப்ராஹ்மணம் முதலிய ஶ்ருதிகளில் ஏற்பட்டிருக்கிறது. எ

பா-அ.] ஆகையினாலே எல்லாம் பரமபுருஷனுக்கு ஶரீரங்களாகையினாலும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாகிய பரமபுருஷனுக்கு விசேஷ

---

தா] காகச சொல்லுகிறார்—'அதாவது' என்று ஆரம்பித்து. இங்கே ஸுபாலோபநிஷத்தின் வாக்யத்தை யெடுத்தது அந்த அந்தர்யாமி நாராயணன் என்பது வ்யக்தமாயேற்படுவதற்காகவும், அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில சொல்லப்படாத வஸ்துக்களையும் சேர்த்துக்கொள்ளுவதற்காகவும். எ

இப்படி "ஐ-ஹ்ரா॰"—என்றிவை முதலான ஶ்லோகங்களிலே பேதஶ்ருதிகளின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. 'ஊயிஷ வ-ம்'' என்கிற ஶ்லோகத்திலே கடக ஶ்ருதியின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. இவை இரண்டிலும் ஏற்படுத்தப்பட்ட அபேத ஶ்ருதிகளுடைய அர்த்தத்தின் விவரணம் செய்யப்படுகிறது என்கிற அபிப்ராயத்திலே சொல்லுகிறார்-'ஆகையினுல்' என்று. சிலர் "ஊயிஷ-ஜி-ம்" என்கிற ஶ்லோகத்திற்கு ரஸம் முதலிய ஸ்வபாவங்களையுடைய என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கிறது என்றர்த்தம், அதைவிவரிக்கிறது "ரஸோஹம்"என்பதுமுதல் என்று வ்யாக்யானம் செய்கிறார்கள் அதைப் பரிஹரிப்பதற்காகச் சொல்லுகிறார்— 'எல்லாம் பரமபுருஷனுக்கு ஶரீரங்களாகையினாலும்' என்று கீழ்ச்சொல்லியபடி மற்றவர் சொன்ன அர்த்தத்திலேவெனில் ஆகாரமாயிருக்கை [1] ஆதேயமாயிருக்கை இவைகளை [2] மாறுடிச்சொல்லுகிறது முதலிய தோஷம்வரும் என்று

---

* சதபத ப்ராஹ்மணம் காண்வபாடம் 5 ப்ர 6 அத் 5 ப்ரா 30 வா

† ஸுபாலோபநிஷத், 7 கண்டம்.

[1] தாங்கப்படுவதாயிருக்கை.

[2] இந்த ச்லோகத்தில 'ரஸோஹம் அப்ஸு' என்பதனால் ஜலத்தில் இருக்கும் ரஸம் நான் என்று ஜலம் ஆதாரமாகவும் ரஸம் ஆதேயமாகவும் சொல்லப்பட்டிருக்க அதற்கு விரோதமாக ரஸமாகிய என்னிடத்தில் ஜலம் இருக்கிறது என்று ஜலத்தை ஆதேயமாகவும் ரஸத்தை ஆதாரமாகவும் சொல்லுகிறது.

ணங்களாகையினாலும், பரமபுருஷனே எல்லாவற்றையும் தனக்கு விசேஷணங்களாகவுடையவனாக இருக்கிறான். ஆகையினால் எல்லாப் பதங்களினாலும் பரமபுருஷனே சொல்லப்படுகிறான் என்று அந்தந்த வஸ்துக்களுடன் சேர்த்துச் சொல்லுகிறார்—

*ரஸோऽஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி ஶஶிஸூர்யயோ:।*
*ப்ரணவ: ஸர்வவேதேஷு ஶப்த: கே பௌருஷம் ந்ருஷு॥*

*புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச தேஜஶ்சாஸ்மி விபாவஸௌ।*
*ஜீவனம் ஸர்வபூதேஷு தபஶ்சாஸ்மி தபஸ்விஷு॥* ௯

*பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த ஸனாதனம்।*
*புத்திர்புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்வினாமஹம்॥* ௧௦

*பலம் பலவதாம் சாஹம் காமராகவிவர்ஜிதம்।*
*தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப॥* ௧௧

ப-ரை] கௌந்தேய குந்தியின் பிள்ளையாகிய அர்ஜுன, அப்ஸு ஜலங்களில் ரஸ: ருசி என்னும் குணமாகவும், ஶஶிஸூர்யயோ: சந்த்ர ஸூர்யர்களிடத்தில், ப்ரபா காந்தியாகவும், அஸ்மி ஆகிறேன், ஸர்வவேதேஷு எல்லா வேதங்களிலும், ப்ரணவ: ப்ரணவமாகவும், கே ஆகாயத்தில், ஶப்த: ஓசையாகவும், ந்ருஷு புருஷர்களிடத்தில், பௌருஷம் புருஷத்தன்மையாகவும், ப்ருதிவ்யாம் பூமியில், புண்ய: பரிசுத்தமான, கந்த: வாஸனையாகவும், விபாவஸௌ நெருப்பில், தேஜ: எரிக்கும் சக்தியாகவும், அஸ்மி ஆகிறேன். ஸர்வபூதேஷு எல்லாப்ராணிகளிடத்திலும், ஜீவனம் ப்ராணனோடிருத்தலுக்குக் காரணமாகவும், தபஸ்விஷு தபஸ்ஸு செய்பவர்களிடத்தில் தப: தபஸ்ஸாகவும் அஸ்மி ஆகிறேன். பார்த அர்ஜுன மாம் என்னை, ஸர்வபூதானாம் எல்லாப்ராணிகளுக்கும், ஸனாதனம் அநாதியான, பீஜம் உபாதானகாரணமான ப்ரக்ருதியாக, வித்தி அறி, புத்திமதாம் புத்தியையுடையவர்களுடைய, புத்தி: புத்தியாகவும், அஸ்மி ஆகிறேன். தேஜஸ்வினாம் பராக்ரமமுடையவர்களின் தேஜ: பராக்ரமமாகவும் பரதர்ஷப ப்ரதவம்சத்தில் உத்தமனான அர்ஜுன, அஹம் நான் பலவதாம் பலசாலிகளுடைய, காமராகவிவர்ஜிதம் காமம் ராகம் இவைகளில்லாத பலம் பலமாக

வும், ஊ-ஙு-ஞெ-தஷு-ஊ ப்ராணிகளிடங்களில், யஊ-ஙாவிரூ-ஊஊஃ தர்மங்களுக்கு விரோதமில்லாத, காஊஃ காமமாகவும் ஊஷூ ஆகிறேன். அ-கக

பா] இந்த வெவ்வேறு வகையான எல்லா வஸ்துக்களும் என்னிடத்திலேயே உண்டானவைகள்; எனக்கு சேஷபூதங்கள்; எனக்கு சரீரங்களாகையினால் என்னிடத்திலேயே இருக்கின்றன; ஆகையினால் அந்தந்த ஸ்வபாவங்களோடு கூடியவனாய் நானே இருக்கிறேன் அ-கக.

---

தா] *தாத்பர்யம். விசேஷணங்களைச்சொல்லும் பதங்களுக்கு விசேஷணங்களையுடையவஸ்துவைச்சொல்லும் ஸ்வபாவமுண்டென்பது* [1] *ஜாதிகுணம் இவைகளைச்சொல்லும் பதங்களில் பொதுவாக ஏற்பட்டிருக்கிறது என்றுகாட்டுவதற்காக 'விசேஷணங்களாகையினாலும்' என்றுசொல்லியிருக்கிறது. சொல்லப்படுவதாவது முக்யமான சக்தியினாலேயே காட்டப்படுகை ரஸம் முதலிய பதங்கள் லோகத்தில் நிஷ்கர்ஷகங்களாகவே (அதாவது அவைகளையுடைய வஸ்துவைச் சொல்லாமல் அவைகளைமாத்ரம் சொல்லுகிறதாகவே) ப்ரயோகிக்கப்படுகின்றன; இந்த ஸ்லோகத்திலும் ஜலம் முதலிய வஸ்துக்களைச் சொல்லும் பதங்களோடு சேர்க்காமலே ஜலத்தில் ரஸம் என்று சொல்லப்படுகிறது; ஆதலால் இந்த ஸ்லோகத்தில் "ரஸஃ" என்னும் பதம் அதையுடைய ஜலத்தைச் சொல்லுவதற்கில்லை, ஆனாலும் ரஸம் முதலியவைகள் பரமாத்மாவுக்கு சரீரங்களான வஸ்துக்களுக்கு விசேஷணங்களாகையினால் பரமாத்மாவே எல்லாவற்றிற்கும் விசேஷ்யமாகையினாலும் இந்த ஸ்லோகத்தில் "ரஸஃ" என்னும் பதம் "ஊஹம்" என்னும் பரமாத்மாவைச் சொல்லும்பதத்துடன் சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறபடியினாலும் அந்தப் பரமாத்மாவிஷயத்தில் அது நிஷ்கர்ஷகம் (அதாவது அவைகளையுடைய வஸ்துக்களைச் சொல்லாமல் அவைகளை மாத்ரம் சொல்லுகிறது) என்பது இல்லையென்றே ஒப்புக்கொள்ள வேண்டும் ஆங்காங்கு வஸ்துக்களை எடுத்ததோவெனில் அந்தந்த வஸ்துக்களில் முக்யமான ரஸம் முதலிய விசேஷணங்களையுடையவன் நானே என்று தெரிவிப்பதற்காக அந்தந்தவஸ்துக்களுக்குவிசேஷணங்களான ரஸம்முதலியவைகள் பரமாத்மாவுக்கு விசேஷணங்கள்*

---

1 *ஜாதியைச் சொல்லும் பதம் ப்ராஹ்மணன் மாடு குடம் முதலியன; குணத்தைச் சொல்லும் பதம் வெளுப்பு கறுப்பு முதலியன.*

தா] என்பது [1]"க்ஷாம் ந்யாவேந்யா விஷதி–"என்றிவைமுதலான இட ங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்று தாத்பர்யம் ரஸம். பூமியில் இருந்தபோதிலும், ஜலத்திலும் ரூபம் முதலிய வேறுகுணங்களிருந்த போதிலும்"ரஸோஹமப்ஸு"(ஜலத்தில் ரஸம் நான்) என்று ஜலத்தில் ரஸத்தைமாத்ரம் தனித்தெடுத்தது தேஜஸ்ஸிலிருந்து, ஜலமாகமாறு தலையடைந்ததிலிதற்கு முன்னிராத ரஸமே முக்யமானகுணமாதலால் வேறொரு இடத்திலும் [2]"ஆத்தகந்தா ததோ பூமி: ப்ரளயத்வாய கல்பதே"என்றிவை முதலான வசனத்தினால் ப்ருதிவீ முதலிய வ்யத்யாஸங் கள் வாஸனை ரஸம் முதலியவைகளாலுண்டானவைகள் என்பது சொல் லப்பட்டது. இப்படியே மேலும் முக்யமாகத் தனித்துச் சொல்லி இருக்குமிடங்களிலும் உசிதத்துக்குத தக்கபடி அறிந்து கொள்ள வேண்டியது. "ப்ரபா" ஆவது தனக்கு ஆதாரமான வஸ்துவை விட வேறானதாய் மற்ற இடங்களில் பரவுகிற தேஜஸ்ஸு என்று சொல்லப்படுகிற வஸ்து. இந்தக் காந்தியினாலேயே சந்த்ரன் ஸூர்யன் இவர்கள் லோகத்துக்கு உபகாரம் செய்கிறார்கள்; ஆகையால் அவர் கள் இந்தக்காந்தியையே முக்யமாக உடையவர்கள். எல்லாவேதங் களுக்கும் காரணமாயிருக்கைமுதலியவைகளால் ப்ரணவம் எல்லா வேதங்களிலும் முக்யமானது. "பௌருஷம்" ஆவது ஆண் தன்மை; அதாவது எந்த அடையாளங்களால் புருஷன் என்று தெரிந்து கொள்ளப்படுகிறதோ அவை என்றுசிலர்சொல்லுகிறார்கள் வேறுசிலர் வம்சத்தின் பரம்பரைக்குக் காரணமான ரேதஸ்ஸு என்று சொல் லுகிறார்கள்; அன்றிக்கே—"பௌருஷம்" ஸாமர்த்யம், அதாவது கர்த்தாவாகும் ஶக்தி என்றர்த்தம்; அந்த ஶக்தியினாலல்லவோ கர்த் தாவாகிய ஜீவாத்மாவுக்கு மற்ற இந்த்ரியம் முதலிய காரணங்களை விட முக்யமாயிருக்கை சொல்லப்படுகிறது. இந்தயோசனையில் "ந்ரு ஷு" என்பதற்கு ஜீவாத்மாக்களில் என்றர்த்தம் அதுவுமன்றிக்கே— "பௌருஷம்" ஆண்மை அதாவது, பெண் நபும்ஸகர்கள் இவர் களுக்கில்லாத தைர்யம் முதலிய ஸ்வபாவம்; அப்பொழுது "ந்ருஷு"

---

[1] விஷ்ணுபுராணம் 1—14—28 'ய:' எந்தபகவான், 'காடிந்யவான்' கடின மாயிருக்கும் தன்மையையுடையவனாய்க்கொண்டு 'பிபர்த்தி' உலகத்தைத்தாங்கு கிறானோ.

[2] விஷ்ணுபுராணம் 6—4—14. 'ததா' அப்பொழுது 'ஆத்தகந்தா' க்ர ஹிக்கப்பட்ட வாஸனையையுடைய'பூமி:'பூமியானது'ப்ரளயத்வாய' ப்ரளயத்தை யுடைவதற்காக 'கல்பதே' தக்கதாகிறது.

தா] என்பது புருஷர்களைச் சொல்லுகிறது. "புண்யோ கந்த:" (பரிசுத்தமான வாஸனை) என்றது துளஸி முதலியவைகளின் வாஸனை, நல்ல வாஸனையாகவுமாம். அந்த வாஸனை இருப்பதினாலல்லவோ ப்ருதிவீ ஸத்வம் வ்ருத்தியடைவதற்காவது ஸுகத்திற்காவது காரணமாகிறது இவ்விடத்தில் 'விபாவஸு' என்பது நெருப்பு; அதில் தேஜஸ்ஸாவது வஸ்துக்களைக் கொளுத்தும் ஶக்தி "பூத" என்னும் பதத்தினால் இவ்விடத்தில் சரீரத்தையுடைய ப்ராணிகள் சொல்லப்படுகின்றன "ஸர்வ" என்னும் பதத்தினால் இவ்விடத்தில் ப்ரஹ்மா, ருத்ரன் முதலியவர்களையும் சேர்த்துச் சொல்லுகிறது அவைகளில் "ஜீவநம்" ஆவது, ப்ராணனோடு இருத்தல், ப்ராணன இருப்பதற்குக் காரணமாகவுமாம். எதற்காரணத்தினால் எல்லா ப்ராணிகளும் ஜீவிக்கின்றனவோ அது. அதுவுமன்றிக்கே—எல்லா ப்ராணிகளிடங்களிலும் எதிர்பார்க்கக்கூடிய ரூபமாகவுமாம், "ஸர்வபூதாநாம் ஸநாதநம் பீஜம்" (எல்லா ப்ராணிகளுக்கும் ஆதியான காரணம்) என்றது ப்ரக்ருதியை. அன்றிக்கே - ஒவ்வொரு வஸ்துக்களிலும் முக்யமான குணங்களைச் சொல்லிவருகிற ஸந்தர்ப்பமாகையினால் "பீஜம்" என்னும்பதம் இவ்விடத்தில் உபாதானகாரணமாக இருக்கையாகிற ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. அதாவது, மாறுதலை அடைகிற எல்லா வஸ்துக்களுடையவும், அப்படி மாறுதலை அடையும் ஶக்தி, என்று அர்த்தம். அதுவன்றிக்கே "பீஜம்" முளைப்பதற்குக்காரணம், அதாவது ஜங்கமஸ்தாவரங்களாகிற எல்லாவஸ்த்துக்களுடையவும் அததற்கு உபாதானகாரணமாகிய வஸ்துக்கள். "புத்தி:" ஆவது, நிஶ்சயம், அல்லது ஞானமாகவுமாம். "தேஜஸ்வி" களாவது பராக்ரமத்தை உடையவர்கள்; அவர்களுடைய தேஜஸ்ஸாவது, மற்றவர்களினால் அவமானம் செய்யக்கூடாமை. பிறரை அவமானம் பண்ணக்கூடிய சக்தியாகவுமாம். தேஜஸ்ஸென்பது, அபிமானம் என்று சிலரும், ஸாமர்த்யம், என்று சிலரும் சொல்லுகிறார்கள். பலமாவது, சுமையைத் தாங்கும் ஶக்தி. காமம் ராகம் இவைகளினால் அததின் கார்யத்தில ப்ரவ்ருத்தித்தபலம், அயலாரைப் பீடித்தல் முதலியவைகளுக்குக் காரணமாகையினால் தர்மத்திற்கு உபயோகமான ஶரீரம் முதலியவைகளைத் தரிப்பது முதலியவைகளை மாத்ரம் பற்றியது, என்று தெரிவிப்பதற்காக, "காமராகவிவர்ஜிதம்" என்று சொல்லப்பட்டது, காமமாவது ஆசையின் முதிர்ந்த தசை ராகமாவது ஆசை, அதுவுமன்றிக்கே-"காம" என்னும் பதம்

தா] ஆசைப்படத்தகுந்த வஸ்துவைச் சொல்லுகிறது. அதைப்பற்றிய ஆசை காமராக, என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது "ஸர்வேஷு" என்பதற்குதேவன், மனுஷ்யன் முதலிய ப்ராணிகளில் என்று அர்த்தம். "யதா3ஹ காம:" என்றால், தன்னுடைய பத்னியினிடத்தில் ப்ரீதி முதலியது. பிறகு "ரஸோஹம்" என்றிவை முதலாகச்சேர்த்துச்சொல்லி இருப்பதைக் காரணத்துடன் நிரூபிக்கிறார்— 'இந்த' என்றாரம்பித்து. இது பரமபுருஷனாலுண்டாக்கப்பட்ட ஶக்தியை; உடையது, என்று காட்டுவதற்காக,"ராஜாராஷ்ட்ரம்", (இத்தேசமே ராஜா) என்றிவை முதலிய வார்த்தைகளைப்போல ஆரோபித்துச் சொல்லப்பட்டதல்ல, முக்யமான அர்த்தமே ஸம்பவிக்கும்பொழுது முக்யமல்லாத அர்த்தத்தைச்சொல்லுவது உசிதமல்லவாகையினால் என்று தாத்பர்யம். 'இந்த' என்பதினால் பகவானைத்தவிர மற்றவர்களினால், செய்யமுடியாமை நினைக்கப்பட்டது.'எல்லா' என்பதினால் ப்ரஹ்மா ருத்ரன் முதலியவர்களினாலும் மற்றவர்களினாலும் செய்யப்படுகிற வஸ்துக்களும்அந்த ப்ரஹ்மா முதலியவர்களை ஶரீரமாகவுடைய பரமாத்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன, என்று முன்பு "அஹம் க்ருத்ஸ்நஸ்ய" என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டமை ஜ்ஞாபகப்படுத்தப்பட்டது. மேல் சொல்லப்போகிற ரஜோகுணம் நிறைந்த வஸ்துக்களைக்காட்டிலும், தமோகுணம் நிறைந்த வஸ்துக்களைக்காட்டிலும், வேறுபட்டமையைத் தெரிவிப்பதற்காக 'வெவ்வேறான' என்று சொல்லப்பட்டது. [2] "ஏதத்யோனீநி பூதாநி" என்று மேலும் சொல்லப்போகிறார் இத்தால் [3] "நவிலக்ஷணத்வாத்" என்கிற அதிகாரணத்தின் அர்த்தமும் ஞாபகப்படுத்தப்பட்டது. 'என்னிடத்திலேயே உண்டானவைகள்' என்பது முதலியவை அந்தந்த வஸ்துக்களுக்குத்தக்கபடி ஆங்காங்கு ஸம்பவிக்கும் வண்ணம், சேர்த்துச் சொல்வதற்குக் காரணம். குணங்கள், ஜாதி ஶரீரங்கள் இவைகளில் ஒரேமாதிரியாகச் சேர்த்துச்சொல்வதற்குக் காரணம் பிரிக்க முடியாமல் சேர்ந்திருக்கை, என்று தெரிவிப்பதற்காக, 'என்னிடத்திலேயே சேர்ந்திருக்கின்றன' என்று சொல்லப்பட்டது. அ, கூ, ம, கக

---

1 பகவத்கீதை, 7–6. [2] பகவத்கீதை,

[3] சாரீரகஸூத்ரம 2, 1, 4, அஸ்ய, இக்தப்ரபஞ்சத்துக்கு விலக்ஷணத்வாத், ப்ரஹ்மத்துக்கு மாறான ஸ்வபாவத்தை உடைத்தாயிருக்கையினால் ந,ப்ரஹ்மத்தினிடத்திலிருந்து உண்டாகிறதென்பது பொருந்தாது.

𑌯𑍇 𑌚𑍈𑌵 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌾 𑌭𑌾𑌵𑌾𑌃 𑌰𑌾𑌜𑌸𑌾𑌸𑍍𑌤𑌾𑌮𑌸𑌾𑌶𑍍𑌚 𑌯𑍇 ।
𑌮𑌤𑍍𑌤 𑌏𑌵𑍇𑌤𑌿 𑌤𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌹𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌤𑍇 𑌮𑌯𑌿 ॥ ௧௨

ப-உரை.] 𑌯𑍇 எந்த, 𑌭𑌾𑌵𑌾𑌃 வஸ்துக்கள், 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌾𑌃 ஸத்வ குணத்தினாலுண்டானவைகளோ, 𑌯𑍇 எந்த வஸ்துக்கள், 𑌰𑌾𑌜𑌸𑌾𑌃 ரஜோகுணத்தினாலுண்டானவைகளோ, 𑌯𑍇 எந்தவஸ்துக்கள், 𑌤𑌾𑌮𑌸𑌾𑌃 தமோகுணத்தினாலுண்டானவைகளோ, 𑌤𑌾𑌨𑍍 அவைகளை, 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌏𑌵 என்னிடத்திலிருந்தே உண்டானவைகள், 𑌇𑌤𑌿 என்று, 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 அறி, 𑌅𑌹𑌂 𑌤𑍁 நானோவெனில், 𑌤𑍇𑌷𑍁 அவைகளிடத்தில், 𑌨 இல்லை, 𑌤𑍇 அவைகள், 𑌮𑌯𑌿 என்னிடத்தில், (இருக்கின்றன.) ௧௨

பா] தனித்து எதற்காகச் சொல்லப்படுகிறது; ஸத்வ குணத்தி

---

தா] "𑌶𑌮𑍋 𑌦𑌮𑌃" என்றிவை முதலியவைகள் மற்றவைகளையும் குறிப்பிடவேண்டியதற்காகச் சொல்லப்பட்டது என்பதையும், "𑌯𑍇 𑌚" என்கிற ஸ்லோகம் இந்த ஸந்தர்ப்பத்தை முடிக்கிறது, என்பதையும் காட்டுகிறார்—'தனித்து எதற்காகச் சொல்லப்படுகிறது' என்று 'அவைகளுக்குக் காரணங்களாகவும்' என்றதினால் ஷஷ்டீ ஸமாஸமும் சேர்க்கப்படுகிறது. இந்தத் தேஹமாக இருத்தல் முதலியவைகளைப் பிரித்துச் சொன்னது இப்பொழுது அனுபவிக்கப்படுகிறவிதங்களை அனுவாதம் செய்கிற "𑌯𑍇 𑌚" (எந்த) என்கிற பதத்தின் அபிப்ராயத்திலேற்பட்டது. 'ஸத்வகுணத்தினாலுண்டானவை' என்றிவை முதலியது தேஹம் முதலியதில் தனித்தனியே அன்வயிக்கிறது. மேலும் [1] "𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌷𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 𑌸𑍁𑌖𑌂 𑌸𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌤𑌾" என்றிவை முதலியன ஸத்வகுணத்தினாலுண்டாகும் ஸ்வபாவங்கள். [2] "𑌅𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌃 𑌪𑌰𑌿𑌤𑌾𑌪𑌶𑍍𑌚 𑌕𑍍𑌰𑍋𑌧𑍋 𑌮𑍋𑌹𑌸𑍍𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌮𑌾" என்றிவை முதலியவைகள் ரஜோகுணத்தினாலுண்டாகும் ஸ்வபாவங்கள். [3] "𑌅𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌥𑌾 𑌮𑍋𑌹𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑌾" என்றிவை முதலியவைகள் தமோகுணத்தினாலுண்டாகும் ஸ்வபாவங்கள். வேறு

---

[1] 'ப்ரஹர்ஷ:' ஸந்தோஷம் 'ப்ரீதி' அன்பு 'ஆனந்த:' ஆனந்தம் 'ஸுகம்' ஸுகம் 'ஸம்சாந்தசித்ததா' சாந்தியையுடைய மனதையுடையவனாக இருக்கை.

[2] 'அதுஷ்டி:' ஸந்தோஷமில்லாமை 'பரிதாப:' துக்கம் 'க்ரோத:' கோபம் 'மோஹ:' அஜ்ஞானம் 'ததா' அப்படி 'அக்ஷமா' பொறுமை

[3] 'அவிவிக்த:' பகுத்தறிவு இல்லாமை 'ததா' அப்படி 'மோஹ:' அஜ்ஞானம்

பா] னுலுண்டானவைகளும்; ரஜோகுணத்தினுலுண்டானவைகளும், தமோகுணத்தினுலுண்டானவைகளும், இந்த உலகத்தில் தேஹமாகவும் இந்த்ரியங்களாகவும் அனுபவிக்கக்கூடிய வஸ்துக்களாகவும் அவைகளுக்குக் காரணங்களாகவும் எந்தெந்த வஸ்துக்களிருக்கின்றனவோ; அவைகளெல்லாவற்றையும் என்னிடத்திலிருந்தே உண்டானவைகளாக அறி. அவைகள் எனக்கு ஶரீரங்களாகையினுல் என்னிடத்திலேயே இருக்கின்றனவென்றும் அறி. நானே ஒருபொழுதும் அவைகளுக்கு வஶப்பட்ட ஸ்திதியை உடையவன் அல்ல. அதாவது மற்ற இடங்களில் ஶரீரம் ஆத்மாவுக்கு வஶப்பட்ட ஸ்திதியை உடையதாக இருந்தபோதிலும் ஆத்மாவின் இருப்புக்கு ஶரீரத்தினுலும் உபகாரம் இருக்

---

தா] *இடங்களில் விஸ்தாரமாகச்சொல்லப்பட்ட இவைகளும் இந்த இடத்தில் அபிப்ராயத்தில்கொள்ளப்பட்டன.* "ம1த்த ஏவ" (என்னிடத்திலிருந்தே) *என்கிற ஏவகாரத்தினுல், நிமித்தகாரணம் உபாதான காரணம் இவ்விரண்டும் ஒன்று என்பதும்,* 'ஸத்வகுணத்தினுலுண்டானவைகள்' *என்றிவை முதலியவைகளினுல் விசித்திரங்களான ஶக்தியை உடையவைகள் என்பதும், அவைகளுக்குத் தகுந்தபடி அநேக நிமித்த காரணங்கள் உண்டு என்பது ஸரியல்ல என்பதும், தெரிவிக்கப்பட்டது. காரணமாக இருக்கையுடன் ஒன்று சேர்த்துச் சொல்லுகைக்குக்காரணமாகிய நியமனத்தை உள்ளடக்கிக்கொண்டிருக்கிற ஶரீரமாகையினுல் அவனுக்கு வஶப்பட்டிருக்கும் என்பதும்,* " மயி " (என்னிடத்தில்) *என்பதிலுள்ள ஏழாம் வேற்றுமையினுல் சொல்லப்படுகிறது, என்று காட்டுவதற்காக,* 'எனக்கு ஶரீரங்களாகையினுல் என்னிடத்திலேயே இருக்கின்றன' *என்று சொல்லப்பட்டது.* " நத்வஹம் தேஷு " *என்கிற இடத்தில் வ்யாபித்திருப்பதே இல்லை என்று சொல்லுகிறது, என்கிற ப்ரமத்தை நீக்குவதற்காகச் சொல்லுகிருர்*—'நானே' *என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் இது ப்ரஸ்தாவமே இல்லாதபொழுது எதற்காக விலக்கப்படுகிறது, என்று ஆக்ஷேபித்துக்கொண்டு ஸமாதானம் சொல்லுகிருர்*—' அதாவது' *என்றுரம்பித்து.* "து" *என்னும் பதம் இவ்விடத்தில் ஆக்ஷேபத்தைத் தடுப்பதற்காக. எவ்வித உபகாரமும் இல்லை என்று தடுக்கும்*

---

*ப்ரமாத:' அஜாக்ரதை* '*ஸ்வப்னதந்த்ரிதா*' *தூக்கம் சோம்பலிவைகளை உடையவனுக இருக்கை.*

பா] கிறது. எனக்கோவெனில் அவைகளினால் அப்படிப்பட்ட ஒருவித மான உபகாரமும் இல்லை. கேவலம் விளையாட்டுமாத்திரம் தான்ப்ரயோஜனம் என்று அர்த்தம் ௰உ

*த்ரிபிர்குணமயைர்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் ।*
*மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரமவ்யயம் ॥* ௧௩

ப-ரா.] த்ரிபி: மூன்றுகளான, குணமயை: ஸத்வம் முதலிய குணங்கள் நிறைந்த, ஏபி: இந்த, பாவை: வஸ்துக்களினால், மோஹிதம் மயக்கப்பட்ட, இதம் இந்த, ஸர்வம் எல்லா, ஜகத் லோகமும், ஏப்ய: கீழ்ச்சொல்லிய வஸ்துக்களைக்காட்டிலும், பரம் மேலானவனாகியும், அவ்யயம் அழிவில்லாதவனாகவுமிருக்கிற, மாம் என்னை, நாபிஜாநாதி அறிந்துகொள்ளுகிறதில்லை. ௧௩

பா] ஆதலால் இப்படிச் சேதனாசேதனங்களாகியும் எனக்குச் சேஷபூதங்களுமான எல்லா லோகமும் அந்தந்தக்காலங்களில் என்னி

---

தா] பக்ஷத்தில் இவைகளை உண்டாக்கினது வ்யர்த்தமட் என்பதைப் பரிஹரிப்பதற்காக 'அப்படிப்பட்ட' என்று சொல்லப்பட்டது. அபிப்ராயத்தில் வைக்கப்பட்ட வேறுவிதமான உபகாரத்தை "ஸஹஸ்ரம்" என்னும் பதத்தில் அபிப்ராயமாகச்சொல்லப்பட்ட, ஸகல இஷ்டங்களினாலும் நிறைந்தவன், என்பதைக்காரணமாகக் கொண்டு காட்டுகிறார்—'கேவலம்' என்று. ௰உ

இப்படித் தன்னுடைய ஸ்வபாவம உபதேசிக்கப்பட்டது. பிறகு "த்ரிபி:" என்றிவை முதலிய ஶ்லோகங்களினால் ப்ரக்ருதியினால் இது மறைக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்—இவ்விடத்தில் "மாம்" (என்னை) என்பதினால் "ஸர்வாவபாஸக:" என்றாரம்பித்துச்சொல்லப்பட்ட தன்னுடைய உண்மையான ஸ்வரூபம், குணமயமான வஸ்துக்களைவிடத் தான்மேலானவன் என்பதைத் தெரிவிப்பதற்காக அநுவதிக்கப்பட்டது, என்று காட்டுவதற்காகச்சொல்லுகிறார்—'ஆதலால்' என்று ஆரம்பித்து. உத்பத்தி, ப்ரளயம் இவைகளுக்கு விரோதமில்லாமல் இருக்கவேண்டியதையும், ஸ்லாக்கற்பங்களிலும் தானே காரணம் என்பதையும, அபிப்ராயத்தில வைத்துக்கொண்டு 'அந்தந்தக்காலங்களில்' என்று சொல்லப்பட்டது. "த்ரிபி:, குணமயை:, ஏபி:" என்கிற மூன்று பதங்களினாலும் துக்கத்

பாடத்திலிருந்தே உண்டாகிறது. என்னிடத்திலேயே லயத்தை அடைகிறது. என்னிடத்திலேயே இருக்கிறது. ஆகையினால் நானே காரண தசையிலும் கார்யதசையிலும் எல்லாவற்றையும் ஶரீரமாக உடையவனாகையினால் எல்லா விஶேஷணங்களையும் உடையவனாக இருக்கிறேன். ஆகையினால் காரணமாக இருக்கையினாலும், ஜ்ஞானம் முதலிய எண்ணிறந்த கல்யாணகுணங்களின் கூட்டங்களினாலும் மற்றெல்லா விதங்களினாலும் உயர்ந்தவன், என்னைவிட வேறான வஸ்து ஒருவிதமான கல்யாணகுணத்தினாலும் உயர்ந்ததில்லை. இப படிப்பட்டவனாகியும், மூன்று விதங்களான ஸத்வம், ரஜஸ், தமஸ்,

---

*தா] தோடு கலந்திருக்கையும், நாஶத்தை அடையும் தன்மையும், தன்னைவிட உயர்ந்த வஸ்துவை உடையவைகள் என்பதும், சொல்லப்படுகின்றன. ரஜோகுணம் தமோகுணம் கலந்திருப்பதினால் துக்கத்தோடு கலந்திருக்கை உண்டு; ஸத்வம் முதலிய மூன்று குணங்களும் ஸுகம் துக்கம் அஜ்ஞானம் இவைகளை ஸ்வபாவமாக உடையவைகளல்லவா. கார்யமாகையினால் அழியும்தன்மையும் இந்த்ரியங்களினால் அளவிட்டு அறியப்படுகிறபடியினால் அறபமாக இருத்தலும் உண்டு என்று தாத்பர்யம் "ஶ்ரம், ஸஹ்ஸ்ரம், ஸுஶ்யம்" என்கிற மூன்று பதங்களினாலும் எல்லாத் துக்கங்களுக்கும் விரோதமான ஸ்வரூபத்தை உடையவனாக இருக்கையும், எல்லையில்லாத ஆனந்தமாக இருக்கையும், நித்யமாக இருக்கையும், அபிப்ராயத்தில்கொள்ளப்பட்டன, என்று காட்டுகிறார்—' இப்படிப்பட்டவனாயும் ' என்று, காரணமாகையினாலே தகப்பனாகையினால் எல்லாவற்றிற்கும் நன்மையை விரும்புகிறவனும், ஶேஷியாகையினால் தனக்கு ஶேஷபூதமான வஸ்துக்கள் உஜ்ஜீவிப்பதையும் தன்னுடைய லாபமாக நினைத்துக்கொண்டிருப்பவனும், எல்லாவற்றையும் அறிந்தவனாக இருக்கை, எல்லா ஶக்தியையுமுடையவனாக இருக்கை, முதலியவைகளினால் அநிஷ்டங்களை நிவ்ருத்தி செய்தல், இஷ்டத்தை அடைவித்தல் இவைகளில் வேறொன்றையும் எதிர்பாராதவனுமான என்பது, 'இப்படிப்பட்டவனாகியும்' என்கிற பதத்தின் அபிப்ராயம். துக்கத்தோடு கலந்திருக்கை முதலியவைகளை உடையவைகளாகக் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட வஸ்துக்களே "ஸஹ்ஸ்ரः" என்கிற இடத்தில் மேன்மைக்கு எதிர்த்தலையாகச் சொல்லப்படுகின்றன என்று தெரிவிப்பதற்காக—'மூன்று விதங்களான' என்றிவை முதலியது சொல்லப்*

பா] என்னும் குணங்களினாலுண்டான வஸ்துக்களைவிட எனக்கு அஸாதாரணங்களான கல்யாண குணங்களின் கூட்டங்களினாலும் அனுபவிக்கக்கூடியவைகளான எல்லாவிதங்களினாலும் மிகவும் உயர்ந்தவனாகியும், எப்பொழுதும் ஒரேவிதமான ஸ்வபாவத்தை உடையவனுமான என்னை அந்த மூன்று குணங்களினாலுண்டானதாகியும்

---

தா] பட்டது. "ஶாஶ்வதம்" என்கிற இடத்தில் [1] 'தமோகுணத்துக்கு மேலான இடத்தில் என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலிய இடங்களிற்போல இடத்தைச் சொல்லுகிறது, என்பதை விலக்குவதற்காக—'உயர்ந்தவனாகியும்' என்று சொல்லியிருக்கிறது. 'அனுபவிக்கக்கூடியவைகளான எல்லா விதங்களினாலும்' என்றது ஸமுத்ரத்திற்குள் குளப்படி இருக்கிறது என்பது போல; அதாவது [2]'இவனுக்கு இந்த லோகத்தில் எது இருக்கிறதோ எது இல்லையோ அவை யெல்லாம் இந்த ப்ரஹ்மத்தினிடத்தில் இருக்கிறது என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறதல்லவா ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ளவஸ்துக்கள் ஶப்தம் ஸ்பர்சம் முதலியவைகளாலனுபவிக்கத்தக்கவைகள்; பரமாத்மாவோ ஜ்ஞானம் சக்திமுதலிய கல்யாணகுணங்களினாலும், தன்னுடைய ரூபத்திலிருக்கின்றவைகளும் ப்ரக்ருதிஸம்பந்தமுள்ள ஶப்தாதிகளைக்காட்டிலும் மேலான ஸுகத்தையே ஸ்வபாவமாகவுடையவைகளுமான ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத ஶப்தாதிகளாலும், பரமாத்மாவை ஆதாரமாகவுடையவைகள் என்று தெரிந்துகொள்ளுவதினால் அப்ராக்ருதமானவைகளுக்குச் சமானங்களான ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள ஶப்தாதிகளாலும், தனிதனியே அனுபவிக்கத்தக்கவனாக இருக்கையில் எல்லையில்லாத மேன்மையையுடையவன் என்று தாத்பர்யம். இப்படி சொல்லப்பட்ட மிகவும் போக்யமான ஸ்வபாவத்துக்கு மாறுதலில்லாமையினால், காலத்தினாலளவை விலக்குகிறது—அவ்யயம்" என்னும் பதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எப்பொழுதும் ஒரே ஸ்வபாவத்தையுடையவனுமான' என்று. 'அந்த' என்பதற்குக் கீழ்ச் சொன்ன மூன்று தோஷங்களோடு கூடிய என்றர்த்தம். 'மூன்று' என்பதற்கு குணங்கள் ஒன்றுக்கொன்று குறைந்ததாகவும் அதிகமாகவும் இருந்தாலும் விட்டுப் பிரியாதவைகள், ஆகையினால் குணமயங்களான வஸ்துக்களுக்கு துக்கத்தோடு கலந்தி

---

[1] புருஷஸூக்தம். [2] சாந்தோக்யோபநிஷத், 8—3.

பா] மிகவும் அற்பங்களாகியும், க்ஷணத்திற்குள் அழியக் கூடியவைகளாகியும் முன் செய்த கர்மங்களுக்குத்தக்கபடி தேஹமாகியும் இந்த்ரியங்களாகியும் அனுபவிக்கத்தக்கவைகளாகியும் இருக்கிற வஸ்துக்களினால் மயக்கப்பட்ட, தேவதை, பசு, மனுஷ்யன், ஸ்தாவரம், இவைகளாகப் பிரிந்திருக்கிற இந்த லோகம் தெரிந்துகொள்ளுகிறதில்லை. கங

---

தா] ருக்கை விடமுடியாது என்று தாத்பர்யம். 'மிகவும் அற்பங்களாகியும்' என்பதற்கு அவரவர் கர்மங்களுக்குத்தக்கபடி உண்டாகிற முக்குணமயங்களான போகங்களும் அந்தக் கர்மங்களுக்குத்தக்கபடி அற்பங்கள் என்று தாத்பர்யம். 'க்ஷணத்திற்குள் அழியக்கூடியவைகளாகியும்' என்றதற்கு அந்தக் கர்மங்கள் ஒழிந்தால் பிறகு ஒரு க்ஷணமும் நிற்க சக்தியற்றவைகள் என்று தாத்பர்யம். ஸத்வகுணத்தினால் மோஹம் எப்படி உண்டாகும்? என்னில், இவ்விதமாக ஸமாதானம் சொல்லவேண்டியது. விஷம் கலந்த அன்னத்தில் தேனைக்கலந்தால் அது மூடனுக்கு எப்படி இதை நாம் ஸாப்பிடவேண்டும் என்கிற ஆசையை உண்டாக்குகிறதோ, அப்படியே அவனவன் கர்மத்துக்குத்தக்கபடி அனிஷ்டத்தில் முடிவு பெறுகிற அற்பஸுகத்துக்குக் காரணமானதையினால் ஸத்வகுணமே மோஹத்துக்குக்காரணமென்பது உசிதம் என்று. "ஸவ-ஂ" என்னும் பதம் இவ்விடத்தில் தேவதை என்னும் ஜாதிக்குள்பட்ட ப்ரஹ்மா, ருத்ரன், முதலியவர்களையும் சேர்த்துச் சொல்லுகிறது. "ஜ-ஂ" என்னும் பதமானது நமால் கண்டறியப்படுகிற அனுபவிக்கும ஜீவாத்மாக்களின் கூட்டங்கள் விசித்ரங்கள் என்பதைத் தெரிவிக்கிறது; "ஜமசு" என்னும் பதமும் அசேதனத்தோடு சேர்ந்த சேதனங்களைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால 'தேவதை' என்றிவை முதலானது சொல்லப்பட்டது. [1] 'ஶரஹ்மாத்யாஃ ஸகலா தேவாஃ மநுஷ்யாஃ பஶவஸ்ததா । விஷ்ணுமாயாமஹாவர்த்தமோஹாந்ததமஸாவ்ருதாஃ ॥' என்றிவை முதலியது இங்கே அனுஸந்திக்கத்தக்கது. கங

---

[1] விஷ்ணுபுராணம், 5-30-17. 'பரும்மாத்யா.' பிரும்மா முதலிய 'ஸகலா:' எல்லா 'தேவா:' தேவதைகளும் 'ததா' அப்படியே 'மனுஷ்யா.' மனுஷ்யர்களும் 'விஷ்ணுமாயா:' பகவன்மாயையகிற 'மஹாவர்த்த' பெரிய சுழலொலுண்டாகப் பட்ட 'மோஹ' அஜ்ஞானமாகிற 'அந்ததமஸா இருட்டினால் வருதா. மறைக்கப் பட்டவர்கள்.

பா-அ] ஸ்வபாவத்தினுலேயே எல்லையில்லாத மேன்மையை யுடைய ஆனந்த ஸ்வரூபனுகவும் அழிவில்லாதவனுகவும் எப்பொழுதும் ஒரேவிதமான ஸ்வபாவத்தை உடையவனுகவும் லோகத்தில் இருக்கும் வஸ்துக்களிலுள்ள அநுபவிக்கக்கூடிய ஸ்வபாவங்களினுல் மிகவும் சிறந்தவனுகவும் இருக்கிற நீர் இருக்கும்பொழுது மிகவும் அற்பங்களாயும் குணமயங்களாயும் அழிவுள்ளவைகளாகவுமிருக்கிற வஸ்துக்களில் எல்லா ஆத்மாக்களுக்கும் இது அநுபவிக்கக்கூடியது என்கிற புத்தி எப்படி உண்டாகிறது? என்கிற ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம் சொல்லுகிறுர்— கரு½

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா। கரு½

ப-ரை] தைவீ தேவனுகிய என்னுல் உண்டாக்கப்பட்டதும், குணமயீ ஸத்வம் முதலிய குணங்கள் நிறைந்ததுமான, ஏஷா இந்த, மம என்னுடைய, மாயா ப்ரக்ருதியானது, துரத்யயாஹி தாண்ட முடியாததல்லவா? கரு½

---

தா] வஸ்துக்களின் ஸ்திதி கீழ்ச்சொல்லியபடியிருக்கும்பொழுது இந்த மோஹம் உண்டாவதே பொருந்தாதே என்கிற ஆக்ஷேபத்திற்கு "தைவீஹ்யேஷா" என்கிற ஶ்லோகம் ஸமாதானம் சொல்லுகிறதென்று அவதாரிகை சொல்லுகிறுர்—'ஸ்வபாவத்தினுலேயே' என்றுரம்பித்து. 'எல்லா' என்பதற்கு ஸகலருமிம் மோஹமிட்டிருக்கிறபடியினுலே தத்வஜ்ஞானத்துக்கறிவில்லாதிருக்கிற தேவஜாதிக்கும் என்று தாத்பர்யம். உயர்ந்ததும் தாழ்ந்ததும் சேர்ந்திருக்கும்பொழுது உயர்ந்ததைச் சொல்லுவதே பதத்துக்கு ஸ்வபாவம் என்பது 'ஆத்மாக்களுக்கும்' என்பதினுல் காட்டப்பட்டது. இவ்விடத்தில் "ஹி" என்னும் பதம் தாண்டமுடியாமைக்குக் காரணத்தைச் சொல்லுகிறது "தைவீ" என்னும் பதத்திலிருக்கும் விகுதிக்குதேவனுல் ஸ்ருஷ்டிக்கப்பட்டது என்றர்த்தம். "திவு க்ரீடா" என்றுரம்பித்துச் சொல்லப்படுகிற "திவு" என்கிற தாதுவிலிருந்து "தேவ" என்னும் பதம் உண்டானது. இத்தால் தேவனுடைய தன்சக்தியை என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமும் குறிக்கப்பட்டது "தைவீ மம" என்னும் பதங்களாலுண்டாகிற, மாயையை ஸ்ருஷ்டித்த தேவன் வேறு என்னும் ப்ரமத்தை விலக்குவதற்காக 'என்னுலேயே' என்று சொல்லப்பட்டது ஸ்வதந்த்ரனுயும அகடிதகடனு ஸாமர்த்ய முள்ள வனுயு

பா] என்னுடையதும், இந்தஸத்வம், ரஜஸ், தமஸ், என்கிறகுணங்களி ஞல் நிறைந்ததுமானப்ரக்ருதியானது எந்தக்காரணத்திஞலே விளையாடுவ தற்காக ப்ரவ்ருத்தித்த என்ஞலேயே செய்யப்பட்டதோ; ஆதலால் ஒருவரா லும்தாண்டமுடியாதது. இந்த ப்ரக்ருதி, "மாயா" என்னும் பதத்திஞல் சொல்லப்படுகிறது, என்பது அஸுரர்களுடையவும், ராக்ஷஸர்களுடைய வும்அஸ்த்ரம் முதலியவைகளைப்போல விசித்ரங்களான கார்யங்களைச்செய் கிறபடியிஞல், * "ததோ பகவதா தஸ்ய ரக்ஷார்த்தம் சக்ரமுத்தமம் | ஆஜகாம ஸமாஜ்ஞப்தம் ஜ்வாலாமாலி ஸுதர்ஶநம் || தேந மாயா ஸஹ ஸ்ரம் தச்சம்பரஸ்யாஶு காமிநா | பாலஸ்ய ரக்ஷதா தேஹமேகைகஶ்ச விஶோதிதம்" என்றிவை முதலான இடங்களில் மாயா என் னும் பதம் எப்படிச் சொல்லப்பட்டிருக்கிறதோ அப்படியே. ஆதலால்

---

தா] மிருக்கிற பகவாஞல் தன்னுடைய லீலைக்காக ப்ரவர்த்திப்பிக்கப்பட் ட மாயை பகவானல்லாத மற்றெல்லாராலும்தாண்டமுடியாதல்லவா? என் பது 'ஒருவராலும்' என்பதினபிப்ராயம். இவ்விடத்தில் "அத்யய" என் னும் பதத்திற்கு நாசம் அர்த்தம், என்பதை நீக்குவதற்காகச் சொல் லுகிருர்—'தாண்டமுடியாதது' என்று. "துரத்யயா" என்னும் பதத்தி ற்கு வருத்தப்பட்டு தாண்டக்கூடியது அதாவது பகவானிடத்தில் ப்ர பத்தி செய்யாதவர்களால் தாண்டமுடியாது என்றர்த்தம். "மாயா" என்னும் பதத்திற்கு மற்றவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட அர்த்தத்தை நிராகரிக்கப்போகிறவராய் தன்ஞல் ஒப்புக்கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிருர்—'இந்தப்ரக்ருதி' என்ருரம்பித்து. உண் மையாகவே இருக்கிற அஸுரர்களுடையவும் ராக்ஷஸர்களுடைய வும் அஸ்த்ரம் முதலியவைகளில் "மாயா" என்னும் பதத்தை ப்ர யோகித்திருப்பது அவை பொய் என்பதைப் பொறுத்ததல்ல என்று தாத்பர்யம் 'எப்படிசொல்லப்பட்டிருக்கிறதோ' என்பதற்கு

---

* விஷ்ணுபுராணம், I-19-19, 20. 'ததः' பிறகு 'தஸ்ய' அந்த ப்ரஹ்லா தனை 'ரக்ஷார்த்தம்' காப்பாற்றுவதற்காக பகவதா பகவாஞல் 'ஸமாஜ்ஞப்தம்' ஆஜ் ஞாபிக்கப்பட்ட 'ஜ்வாலாமாலி' ஜ்வாலைகளின் வரிசைகளை உடைய 'ஸுதர்சனம்' ஸுதர்சனம்என்கிறபெயரைஉடைய 'உத்தமம்' உயர்ந்த 'சக்ரம்' சக்ராயுதமான து 'ஆஜகாம' வந்தது 'ஆசுகாமிநா' வேகமாகப்போகிற 'பாலஸ்ய' குழந்தையான ப்ரஹ்லாதனுடைய'தேஹம்' சரீரத்தை 'ரக்ஷதா' காப்பாற்றுகிற 'தேந' அந்தசக்கர த்திஞல் 'தத்' அந்த 'சம்பரஸ்ய' சம்பராஸுரனுடைய 'மாயாஸஹஸ்ரம்' அநேகமா யைகள் 'ஏகைகச்யேன' தனித்தனியாக ஸுவிதிதம் கொல்லப்பட்டது.

I வ்யாகரணம் தாதுபாடம்.

பா] மாயா என்னும் பதம் பொய் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறதல்ல. இந்திரஜால வித்யை செய்கிறவன் முதலியவரிடத்திலும் சில மந்த்ரங்களினாலும், ஔஷதம் முதலியவைகளினாலும் பொய்யான வஸ்துவைப் பற்றிய உண்மையான புத்தியையுண்டாக்கிறபடியினால் மாயாவீ என்று

---

தா] "தேநமாயாஸஹஸ்ரம்" என்கிற இடத்தில் மாயமான வஸ்துவைச் சொல்லுகிறதென்பது பொருந்தவும் முடியாது, ஏனெனில் பொய்யாகிய வஸ்து ஆயுதத்தால் கொலைசெய்வது அஸாத்யமன்றோ, என்று தாத்பர்யம். 'முதலான' என்னும் பதத்தினால் "[1] மாயயா வேத்தி ஸததம் ப்ராணினாம் ஸுபாஸுபம்" [2] "தேவமாயேவ நிர்மிதா" என்றிவை முதலிய ப்ரயோகங்களும் சேர்த்துச் சொல்லப்பட்டன. மேலும் [3] நீதீசாஸ்த்ரத்தில் ஸாமம் முதலிய நான்கு உபாயங்களை நிரூபித்தபின்பு இன்னும் சில மாயா, உபேக்ஷா, இந்த்ர ஜாலம், முதலிய அமுக்யங்களான மூன்று உபாயங்கள் சொல்லப்பட்டன. அதில் மாயையாவது, ஒருவிதமாக இருக்கும் வஸ்துவை வேறுவிதமாகமாற்றும் சக்தி, இந்திரஜாலமாவது, ஒருவிதமாக இருக்கும் வஸ்துவை வேறுவிதமாகக்காட்டும் சக்தி, என்று பிரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் "மாயாவீ" என்னும் பதம் உண்மையானவஸ்துவைக் குறிக்கிறதே, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆதலால்' என்று "மாயா" என்னும் பதத்தின் ப்ரயோகமானது உண்மையான வஸ்துவைக் குறிக்கிறதாகையினால், என்று அர்த்தம். பொய்யான வஸ்துவைக்காட்டுகிறவர்களிடத்தில் மாயையின் ஸம்பந்தமிருக்கிறபடியினால் "மாயாவீ" என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால் "மாயா" என்னும் பதம் பொய்யான வஸ்துவினிடத்திலும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறதே? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இந்திர ஜால வித்யை செய்கிறவன்' என்று ஆரம்பித்து. பொய்யாக இருத்தலைப் போலவே பொய்யானவஸ்துவை உண்டாக்குதலும் "மாயா" என்னும் பதத்திற்கு அர்த்தமல்ல, என்று காட்டுவதற்காக 'உண்

---

1 'ப்ராணினாம்' ஜந்துக்களுடைய 'சுபாசுபம்' பாபபுண்யங்களை 'மாயயா' தன்னுடைய ஞானத்தினால் 'ஸததம்' எப்பொழுதும், 'வேத்தி' அறிகிறான்.

2 ஸ்ரீமத்ராமாயணம் பாலகாண்டம் 1—26. 'தேவமாயேவ' தேவதைகளின் மாயைபோல 'நிர்மிதா' ஸ்ருஷ்டிக்கப்பட்ட (ஸீதை) என்று சொல்லிக்கொள்ள [illegible]

3 நீதிசாஸ்த்ரம்.

பா] ப்ரயோகம் செய்யப்படுகிறது. அப்படியே அவ்விடத்தில் மாயையாவது மந்த்ரங்களும், ஔஷதம் முதலியவைகளுமே. எல்லா ப்ரயோகங்களுக்கும் பொருந்தியிருக்கிற ஒன்றே பதத்துக்கு அர்த்தமாகுமாகையினுல்? அவ்விடத்தில் பொய்யான வஸ்துக்களில் மாயை என்னும் பதத்தை ப்ரயோகிப்பதும் மாயையினுல் உண்டாக்கப்படுகிற புத்திக்கு விஷயமாக இருக்கிறபடியினுல் "ஜ்ஞா꞉ க்ரோஶந்தி" (கட்டில்கள் கூவுகின்றன)

---

தா] மையானபுத்தியை' என்று சொல்லப்பட்டது. ப்ரமமாகிய ஞானமும் தன்ஸ்வரூபத்தைப்பற்றினவரையிலுண்மையே. இந்த ஞானத்தினுல் இல்லாத இடத்தில் இருப்பதாகக் காட்டப்பட்ட வஸ்துதான் பொய் யென்று சொல்லப்படுகிறது. ஆனுலும் முடிவாய்ப் பொய்யான வஸ்துவின் ஸம்பந்தம் மாயை என்று சொல்வதற்குக்காரணம் ஆயிற்றே என்னும் ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—அப்படியே' என்று ஆரம்பித்து, மந்த்ரம், ஔஷதம் முதலியவைகளும் பொய்யான வஸ்துவும் சேர்ந்திருக்கும்பொழுது இதுவே மாயை என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறது, என்று நிஶ்சயிப்பதற்கு என்னகாரணம் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்— 'எல்லா ப்ரயோகங்களுக்கும்' என்று ஆரம்பித்து. ஒரு ஶக்தியினுலேயே நிர்வாஹம் ஸம்பவிக்கும்பொழுது அநேக ஶக்தி கற்பிப்பது யுக்தமல்ல, என்று தாத்பர்யம். பொய்யான வஸ்துக்களிலும் இது மாயை என்கிற ப்ரயோகம் இருக்கிறது; அதில் விசித்ரமான கார்யத்தைச் செய்கையாகிற காரணமில்லாமையினுல் பொய்யாக இருத்தலே அப்படிச் சொல்லப்படுதலுக்குக் காரணமாக ஒப்புக்கொள்ளவேண்டும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'அவ்விடத்தில்' என்று ஆரம்பித்து. இதின் கருத்தாவது எந்த இடத்தில் ஸம்பந்தத்தினுலோ, அல்லது அதின் குணமிருப்பதினுலோ, ப்ரயோகத்திற்குக் காரணம் சொல்லமுடியாதோ, அந்த இடத்தில் வேறு ஶக்தி உண்டு, என்று கற்பிப்பதினுலுண்டாகும் ப்ரயாஸம் பொறுக்கத்தக்கது. இவ்விடத்திலோ மாயையினுலுண்டாக்கப்படுகிற ஞானத்திற்கு விஷயமாக இருக்கிறபடியினுல் பரம்பரையாக ஸம்பந்தம் ஸம்பவிக்கிறது. பொய்யாக இருக்கையே அப்படிச் சொல்லப்படுவதற்குக் காரணம் என்று ஒத்துக்கொள்ளும்பக்ஷத்தில் அஸ்த்ரம் முதலியவைகளில் பொய்யான வஸ்துவின் ஸம்பந்தம் கொஞ்சமேனுமில்லை; பொய்யான வஸ்துவுக்குக் குணமிலலா

பா] என்பதுபோல உபசாரமாக ஏற்பட்டது. இந்தக்குணமயமாயும் மண்மை யுமான பகவானுடைய மாயையே * "மாயையை ப்ரக்ருதி என்று அறி"

---

தா] மையினாலேயே அதின் குணத்தின் ஸம்பந்தமும் வெகு ஸாரம்ஸியமாக ரிக்கப்பட்டது. மேலும் பொய்யாகிய ஸூக்துச்ரிப்பியில் ப்ரதிக்கப் பட்ட வெள்ளி முதலியவைகளில் மாயை என்னும் பதத்தின் ப்ர யோகம் இல்லாமையினால் பொய்யான ஸில வஸ்துக்களில் தான் அப்படி ப்ரயோகிப்பது உண்டு என்று சொல்லவேண்டும்; அப்படி ஸிலவற்றிற்கு என்ன விசேஷம் என்று யோசித்துப்பார்க்குமிடத்து நாம் சொன்னவிசேஷத்திலேயே முடிவு பெறும், என்று. [1] "த்வம் ஹி தேவ லோககதிர் த்வாம் ந ஜாநந்தி கேசந | மாயாம் விசாலாக்ஷீம் தவ பூர்வபரிக்ரஹாம் ||" [2] "யோகநித்ரா மஹாமாயா" என்றிவை முதலான இடங்களிலும் பகவான் விசித்ரமான கார்யங் களைச் செய்வதற்கு உபயோகமாக இருக்கிறபடியினாலாவது, ப்ரக்ருதி என்னும் வஸ்துவுக்கு அபிமானிதேவதையாக இருக்கிறபடியினாலா வது. ஸ்ரீலக்ஷ்மியைக்குறித்து "மாயா" (மாயை) என்னும் பதம் சொல் லப்பட்டிருக்கிறது. ஆகையினால் விசித்ரங்களான கார்யங்களைச் செய் கையே மாயை என்னும் பதத்தினால் சொல்லப்படுவதற்குக் காரண மாகிறது என்பது, யுக்தம்தான் என்பது. ப்ரக்ருதியிலும் விசித்ரமான ஸ்ரு ஷ்டிக்குக் காரணமாகிய உண்மையான ப்ரக்ருதியிலேயே மாயை என் னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார் — 'இந்த' என்று ஆரம்பித்து. இந்த ஸ்ருதியில இருக்கும் "மஹேச்வர:" என்னும் பதமானது ருத்ரனைச் சொல்லுகிறது, என்கிற ப்ரமத்தை நீக்குவதற்காக 'பகவானுடைய' என்று சொல்லப்பட்டது ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தும் புருஷஸூக்தத்தில சொல்லி இருக் கும பதங்கள் வருவதினாலே புருஷஸூக்தத்தை ஞாபகப்படுத்துகிற

---

* ச்வேதா ச்வதா உபநிஷத்து, 4–10.

1 தேவ ஓ தேவனே, 'த்வம்ஹி' நீயோவெனில், 'லோககதி:' லோகத்துக்கெல் லாம் கதியாவாய், 'த்வாம்' உன்னை, 'தவ' உன்னுடைய 'பூர்வபரிக்ரஹாம்' முதல் பதியான 'விசாலாக்ஷீம்' அகன்ற கண்களையுடைய, 'மாயாமயரூபிணீம்' மாயை யை விட்டு. 'கேசித்' ஒருவரும், 'நப்ராஜாநந்தே' அறியவில்லை

2. யோகநித்ரை என்றும், மஹாமாயை என்றும் ஸ்ரீதேவிக்குப் பெயர் என்று சோதுதுகொள்ளவும

பா]மாயையை உடையவனை மஹேஶ்வரனென்று அறி' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் சொல்லப்படுகிறது. இதினாலுண்டாக்கப்படும் கார்யமாவது பகவானுடைய ஸ்வரூபத்தை மறைத்தலும், தன்னுடைய ஸ்வரூபத்தில் இது அனுபவிக்கத்தக்கது, என்கிறபுத்தியும். ஆகையினால் பகவானுடைய மாயையினால் மறைக்கப்பட்ட எல்லாலோகமும் பகவானை எல்லையில்லாத மேன்மையை உடைய ஆனந்த ஸ்வரூபனாகத் தெரிந்துகொள்ளுகிறதில்லை. கங½

---

தா]படியினாலும்; 'ஸத்வகுணத்தை உண்டாக்குகிறவன்' என்றுசொல்லி இருக்கிறபடியினாலும் பகவானைப்பற்றிச்சொல்லுகிறது என்றே தோன்றுகிறது "ஈஶான, ஶிவ" என்றிவை முதலிய பதங்களோ அந்தப்பகவானுக்கே காரணப் பெயராக இருந்துகொண்டு அந்தந்தப்பதங்களினால் சொல்லப்படுகிற குணங்கள் பகவானிடத்தில் இருக்கிறபடியினால் அவனையே சொல்லுகின்றன. ருத்ரனுக்கு மற்ற ஶ்ருதிகளில் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கையும், கர்மங்களுக்கு வஶப்பட்டிருத்தலும் சொல்லி இருக்கிறபடியினாலே, என்று தாத்பர்யம். இந்த ஶ்ருதிவாக்யத்திலும், மாயையை ப்ரக்ருதியாக அறி என்று சொல்லி இருக்குமிடத்தில் ப்ரக்ருதியைக்குறித்து மாயை என்பது விதிக்கப்படுகிறதில்லை பின்னையெதென்னில் மாயா என்னும் பதத்தின் அர்த்தத்தை அனுவாதம் செய்து அது ப்ரக்ருதி, என்பது விதிக்கப்படுகிறது, என்பது வாக்யத்தின் ஸ்வாரஸ்யத்தினால் ஏற்பட்டது. இதற்கு அடுத்த கீழ்வாக்யத்தில் [2]'இந்த மாயையிலிருந்து இந்தமாயையை உடையவன் இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிறான். இந்த ப்ரபஞ்சத்தில் மற்றொருவன் மாயையினால் கட்டப்பட்டிருக்கிறான்' என்று சொல்லப்பட்டிருக்கும்பொழுது அந்த மாயையாவது எது என்கிற கேள்வி உண்டாயிருக்கிற படியினால், என்று தாத்பர்யம். இந்த ஸந்தர்பத்தில் மாயை என்னும் பதத்தை ப்ரயோகித்ததற்குக் காரணமாயும் ப்ரக்ருதத்தில் உபயோகமுமான விசித்ரமான கார்யத்தைக்காட்டுகிறார்—'இதனாலுண்டாக்கப்படும்' என்று ஆரம்பித்து. இவை எல்லாவற்றையும் மனதில் வைத்துக்கொண்டு பகவானாகிய யாமுன முனியென்னும் ஆளவந்தாரினால் [3]"ஸ்யாமோஹம் ப்ரக்ருதா வ்ருத்திஶோகர் ஶரணாமதிஃ ॥" என்று அருளிச்செய்யப்பட்டது.

---

[1] ச்வேதாச்வதரம், 4–10  [3] கீதார்த்தஸங்க்ரஹம், 11 ச்லோகம்.
[2] ச்வேதாச்வதரம், 4–9.

பா-அ.] இந்த ப்ரக்ருதியை விடுவித்துக்கொள்வதற்கு உபாயத்தைச் சொல்லுகிறார்- - கசு

மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே । கஎ

ப-ரை] யே எவர்கள், மாமேவ என்னையே, ப்ரபத்யந்தே சரணமாக அடைகிறார்களோ, தே அவர்கள், ஏதாம் இந்த, மாயாம் ப்ரக்ருதியை, தரந்தி தாண்டுகிறார்கள். கஅ

பா] ஸத்ய ஸங்கல்பனும் மிகுந்த தயையை உடையவனும், வ்யத்யாஸங்களை யோசிக்காமல் எல்லா ஜனங்களையும் காப்பாற்றுகிறவனுமா

---

தா] கீழ்ச்சொன்ன ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் செய்கிறார்—'ஆகையினால்' என்று ஆரம்பித்து. ௬௫

[1] "ப்ரக்ருதிப்ராப்திரோயிஷ்டா சரணாகதிः" என்கிற ஶ்லோகத்தில் "சரணாகதிः" என்பதற்கு முன் அந்த நிவ்ருத்தி செய்வதற்காக என்று வைத்துக் கொள்ளவேண்டியது, என்று காட்டிக் கொண்டு மேல் க்ரந்தத்துக்கு அவதாரிகை சொல்லுகிறார் 'இந்த ப்ரக்ருதியை' என்றாரம்பித்து எவனுடைய உத்தரவினால் தாண்ட முடியாத விலங்கு ஏற்பட்டதோ அதன் நிவ்ருத்தியும் அவனாலேயேசெய்யவேண்டியது என்று "மாமேவ" (என்னையே) என்பதின் அபிப்ராயம் என்று காட்டுகிறார்—"ஸத்ய ஸங்கல்பனும்' என்றாரம்பித்து பந்தத்தைப்பற்றிய ஸங்கல்பம் மாத்ரம் ஸத்யம் என்பதில்லை; பின்னை மோக்ஷத்தைப்பற்றின ஸங்கல்பமும் ஸத்யமே, ஆகையால் அவனே சரணமாக அடையத்தக்கவன் என்று தாத்பர்யம். சக்தியுள்ளவனாக இருந்தாலும தயையில்லாதவனைச் சரணமாக அடைவதினால் ஒரு ப்ரயோஜனமுமில்லை ஆகையினால்—'மிகுந்த தயையையுடையவனும்' என்று சொல்லபபட்டது. தயையையுடையவனாயிருந்தாலும் லோகத்து மனிதரைப்போல் அவனுக்கு, இவன் அங்கீகரிக்கத்தக்கவன், இவன் அங்கீகரிக்கத்தகாதவன், என்கிற வ்யத்யாஸமிருக்கும் பக்ஷத்தில் பொறுக்க முடியாத அபசாரங்களைச் செய்துகொண்டிருக்கிற இந்த ஜனத்திற்கு அப்படிப்பட்டவனைச்சரணமாக அடைவதால் என்ன ப்ரயோஜனம, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக 'வ்யத்யாஸங்களை' என்றாரமபித்துச் சொல்லப்பட்டது, காக்கை, ஸுக்ரீவன் என்

---

1 கீதார்த்தஸங்க்ரஹம்' 11ச்லோகம்

பா] இருக்கிற என்னையே எவர்கள் ஶரணமாக அடைகிறார்களோ, அவர்கள் என்னுடையதாயும், குணமயமாயும் இருக்கிற இந்த ப்ரக்ருதியை விட்டு என்னையே உபாஸனம் செய்கிறார்கள் என்று அர்த்தம். ௧௪

பா-அ] பகவானைப்பற்றின உபாஸனத்தையுண்டாக்குகிற பகவானிடத்தில் ப்ரபத்தியை ஏன் எல்லோரும் செய்கிறதில்லை? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—

*𑌨 𑌮𑌾𑌂 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑍋 𑌮𑍂𑌢𑌾𑌃 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌃 ।*
*𑌮𑌾𑌯𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌆𑌸𑍁𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥*　　௧௫

ப-ரை.] 𑌮𑍂𑌢𑌾𑌃 தெரியாதவர்கள், 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌃 மனிதர்களுக்குள் தாழ்ந்தவர்கள், 𑌮𑌾𑌯𑌯𑌾 மாயையினால், 𑌅𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃 அபஹரிக்கப்பட்ட ஞானத்தையுடையவர்கள், 𑌆𑌸𑍁𑌰𑌂 அஸுரர்களுடையதான 𑌭𑌾𑌵𑌂 ஸ்வபாவத்தை 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 அடைந்தவர்கள் (ஆகிய நான்கு விதமான) 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑌃 பாவம் செய்தவர்கள் 𑌮𑌾𑌂 என்னை 𑌨 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 ஶரணமாக அடைகிறதில்லை. ௧௫

---

தா] னும்குரங்கு, விபீஷணன், த்ரௌபதீ, முதலியவர்கள் விஷயத்தில் இது ஸ்பஷ்டமாக இருக்கிறது [1]"𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌰𑌾𑌵𑌣𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍" என்று அவனுடைய வார்த்தையுமிருக்கிறது. "𑌏𑌤𑌾𑌂" (இந்த) என்பதின் அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'என்னுடையதாயும் குணமயமாயும் இருக்கிற' என்று. அப்படி யிருந்தாலும் என்று சேர்த்துக்கொள்ளவேண்டியது. உபாஸனத்தைச் சொல்லும், ஸந்தர்ப்பமானபடியினாலும், மேலேசொல்லப்போகிற [2] ஆர்த்தன் முதலிய நான்குவித அதிகாரிகளுக்கும் பொதுவாயிருக்கவேண்டியதாகையினாலும் உபாஸனத்துக்கு அங்கமான ப்ரபத்தியே இங்கு சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இந்த ப்ரக்ருதியை விட்டு' என்றாரம்பித்து. ௧௪

---

1 ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம். 18-35. '𑌰𑌾𑌵𑌣𑌃' ராவணன் 'ஸ்வயம் யதிவா' தானேவந்திருந்தபோதிலும் (அழைத்துக்கொண்டுவா) என்று மேலே சேர்த்துக்கொள்ளவும்.

2 ப்ரபத்தி பண்ணினவர்கள் ப்ராக்ருதியைத் தாண்டி மோக்ஷத்தை அடைகிறார்கள் என்று சொன்னால் ஆர்த்தன் முதலியவர்களுக்கு மோக்ஷம் பலமல்ல ஐச்வர்யமே பலம் ஆகையால் எல்லோருக்கும்பொதுவாகாது என்றறியவும்

பா] பாபகர்மங்களைச் செய்தவர்கள் என்னைச் சரணமாக அடைகிறதில்லை. அவர்கள் தங்கள் தங்கள் பாவங்களின் தாரதம்யத்தினால் மூடர்கள் என்றும், நராதமர்கள் என்றும், "மாயயாபஹ்ருதஜ்ஞாநா:" (மாயையினால் அபஹரிக்கப்பட்ட ஞானத்தை உடையவர்கள்) என்றும், "ஆஸுரம்பாவமாஶ்ரிதா:" (ஆஸுரஸ்வபாவத்தை உடையவர்கள்) என்றும் நான்கு விதமாகிறார்கள். மூடர்களாவது விபரீதமான ஞானத்தை உடையவர்கள். அதாவது கீழ்ச்சொன்னபடி பகவானுக்கு

---

தா] 'ப்ரபத்யந்தே' (அவர்கள் சரணமாக அடைகிறார்களோ) என்று ஏன் தனித்துச்சொல்லவேண்டும் என்கிற ஆக்ஷேபத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு கேட்கிறார்—'பகவானிடத்தில்' என்றாரம்பித்து. புண்ணியங்களைச் செய்யாதவர்கள், பாவங்களைச் செய்தவர்கள், என்கிற வ்யத்யாஸம் நேராகத்தோன்றியிருப்பதில்லை. அவர்களுக்குச் சாஸ்த்ரத்தைச் சொல்லியிருப்பதோ விடவேண்டிய ஆசாரங்களில் முக்யமானதையும் அங்கீகரிக்கவேண்டிய ஆசாரங்களில் முக்யமானதையும் தெரியப்படுத்துவதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பாபகர்மங்களைச் செய்தவர்கள்' என்றாரம்பித்து. மேல் ச்லோகத்தில் இருக்கும் "சதுர்விதா:" என்னும்பதம் இவ்விடத்திலும் நான்கு விதமானவகுப்பையுடைய மனிதர்களை எடுத்திருப்பதினால் அவ்விடத்திலிருந்து இழுத்துச் சேர்த்துக்கொள்ளப்பட்டது. "ஜநா:" என்பது முதலிய விசேஷணங்கள் ஒரே இடத்திலேயே ஒன்று சேர்ந்தவைகளாக ஏன இருக்ககூடாது என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காக, இந்த நான்கு பதங்களுக்கும் வ்யாக்யானம் செய்கிறார்—மூடர்களாக இருக்கை, மாயையினால் அபஹரிக்கப்பட்ட ஞானத்தையுடையவர்களாக இருக்கை, இவை இரண்டிக்கும் நடுவில் ஒருவிதத்தை "நராதமா:" (மனிதர்களுக்குள் அதமர்கள்) என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பகவானுடைய' என்றாரம்பித்து. உபநிஷத்துக்களில் சொன்ன அர்த்தங்களில் நிச்சயம் இல்லாமற்போனாலும் எல்லாலோகங்களிலும் ப்ரஸித்தங்களான இதிஹாஸபுராணம் முதலியவைகளினால் பொதுவான ஞானம் உண்டாயிருக்கிறது. மேருபர்வதம் முதலியவைகளிடத்திற்போல ஸம்ஶயம் என்கிற ஞானம் இல்லாமையால் அவனை ஆஶ்ரயிப்பதற்கு யோக்யதையில்லை. ஞானம் உண்டானாலல்லவோ அதை அபஹரிக்கலாம்;

பா]ஶேஷமாக இருக்கையையே ஸ்வபாவமாக உடைய தன்னையும் அனுபவிக்கக்கூடிய வஸ்துக்களின் கூட்டத்தையும் தனக்கு ஶேஷமாக எண்ணிக்கொண்டு இருக்கிறவர்கள். நராதமர்கள் (மனிதர்களுக்குள் அதமர்கள்) ஆவது—பகவானுடைய ஸ்வரூபம் பொதுவாக அறியப்பட்டிருந்தபோதிலும் அவனை ஆஶ்ரயிப்பதற்கு யோக்யதை இல்லாதவர்கள். "மாயயாபஹ்ருதஜ்ஞாநா:" (மாயையினால் அபஹரிக்கப்பட்ட ஞானத்தை உடையவர்கள்.) ஆவது—என்னைப்பற்றியும் என்னுடைய ஐஶ்வர்யத்தைப்பற்றியும் எவர்களுக்கு உண்டான ஞானம் இது அஸம்பாவிதம் என்று தெரிவிக்கக்கூடிய கபடயுக்திகளினால் அபஹரிக்கப்பட்டதோ அவர்கள். "ஆஸுரம்பாவமாஶ்ரிதா:" (அஸுரர்களுடைய ஸ்வபாவத்தை அடைந்தவர்கள்) ஆவது—என்னைப்பற்றியும் என்னுடைய ஐஶ்வர்யத்தைப்பற்றியும் எவர்களுக்கு மிகவும் உறுதி

---

தா] அதுவும் விசித்ராங்களான மயக்கங்களை உண்டாக்குகிறபடியினால் மாயை என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற குத்ருஷ்டிகளுடையவும், பாஹ்யர்களுடையவும் கபடயுக்திகளாலேயே, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னைப்பற்றியும்' என்றாரம்பித்து. "ஆஸுரம்பாவமாஶ்ரிதா:" (அஸுரர்களுடைய ஸ்வபாவத்தை அடைந்தவர்கள்) என்கிற இது அபஹரிக்கப்படாத ஞானத்தை உடையவர்களைப் பற்றியது, என்று சொல்லுகிறார்—'மிகவும் உறுதியாக உண்டான' என்று. நன்றாய்க் கீழே நிரூபிக்கப்பட்டமாதிரியாக ப்ரமாணங்களினாலும் யுக்திகளினாலும் மறுக்கமுடியாதபடி நிஶ்சயிக்கப்பட்ட, என்று அர்த்தம். "ஆஸுரம்பாவம்" என்பதற்கு அஸுரர்களுடைய ஸ்வபாவம் என்று அர்த்தம்; அஸுரர்கள் பகவானை மிகுந்த ஶக்தியுள்ளவன் என்று தெரிந்துகொண்டே த்வேஷம் செய்கிறார்களல்லவா. பதினாறாவது அத்யாயத்தில் ஆஸுர ப்ரக்ருதிகளின் ஸ்வபாவம் சொல்லப்படுகிறது. [1] "விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ்ததாஸுர:" என்று சொல்லியிருக்கும் ந்யாயத்தினாலும அஸுரர்களின் ஸ்வபாவமாவது பகவானிடத்தில் த்வேஷம்தான் என்கிற, அபிப்ராயத்தினால்

---

[1] மஹாபாரதம் விஷ்ணுதர்மம் 109–74, 'விஷ்ணுபக்திபர:' விஷ்ணுவினிடத்தில் பக்தியுள்ளவன், 'தேவ:' தேவாம்சமுள்ளவன், 'ததா' அப்படியே 'விபரீத:' அதற்குமாறான ஸ்வபாவமுள்ளவன், 'அஸுர:' அஸுரஸ்வபாவமுள்ளவன்.

பாபியாக உண்டான ஞானம் அவர்களுக்கே என்னிடத்தில் த்வேஷத்திற்குக்காரணமாகிறதோ. அவர்கள் இதில் முதலில் சொன்னவர்களை விட மேன்மேலும் சொல்லப்பட்டவர்கள் அதிக பாபிகள். சரு

*சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந ।*
*ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப ॥ ௧௬*

ப-ரை] பரதர்ஷப பரத்வம் சக்தி ச்ரேஷ்டனை, அர்ஜுந ஓ அர்ஜுனனே, ஸுக்ருதிந: புண்யகர்மங்களைச் செய்தவர்களாகிய, ஆர்த்த: கெட்டுப்போன ஐச்வர்யம் மறுபடியும் கிடைக்கவேண்டும் என்கிற எண்ணமுள்ளவனும், அர்த்தார்த்தீ புதிதான ஐச்வர்யம் கிடைக்கவேண்டும் என்கிற எண்ணமுள்ளவனும், ஜிஜ்ஞாஸு: கைவல்யத்தை விரும்புகிறவனும், ஜ்ஞாநீ ச பகவானுடைய திருவடியை விரும்புகிறவனுமாகிய; சதுர்விதா: நான்கு வகையான, ஜநா: ஜனங்கள், மாம் என்னை, பஜந்தே உபாஸிக்கிறார்கள். சசு

பா] புண்யகர்மங்களைச் செய்தவர்கள் என்னை சரணமாக அடை

---

தா]'த்வேஷத்திற்குக் காரணம்' என்று சொல்லப்பட்டது. இவர்களுக்குள் மேன்மேலும் சொல்லப்பட்டவர்கள் ஞானத்தினால் மேன்மையுடையவர்கள் ஆதலால், சிறந்தவர்கள், என்கிற ப்ரமம் நேரும் ஆதலால் அதை நிராகரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'இதில் முதலில் சொன்னவர்களை விட' என்று ஆரம்பித்து. [1] "விசேஷாதிக்ய ந்யாயம்" என்கிற ந்யாயத்தினால் அதிகமான ஞானமே இவ்விடத்தில் அதிக பாபி ஆவதற்குக் காரணம். ஞானம் அதிகமாக இருந்தாலும் பகவானிடத்தில் பராங்முகமாக இருப்பது அதிகமான பழைய பாபத்தினாலேயே, என்று தாத்பர்யம். ௧௫

"சதுர்விதா பஜந்தே" என்கிற இடத்தில் பக்தியோகத்தில் முடிவுபெறுகிற ப்ரபத்தி சொல்லப்படுகிறது. முன்ஸ்லோகத்தில் "ந ப்ரபத்யந்தே" (சரணமாக அடைகிறதில்லை) என்று அதையே நிஷேதித்து இருப்பதினாலே அதை விதிப்பதே உசிதமாகையினால்,

1 கௌதமதர்மம் 12—6 'விதுஷ:' தெரிந்தவனுடைய, 'அதிக்ரமே' அக்ரமத்தில், 'தண்டபூயஸ்த்வம்' அதிகசிக்ஷை

பா] ந்து என்னை உபாஸிக்கிறார்கள். அவர்களும் தங்கள் தங்கள் புண்ய காமங்களின் தாரதம்யத்தினால் நான்கு விதமானவர்கள். புண்யங்களின் மிகுதியினால் ஞானம் விசேஷமாக உண்டாகிறபடியினால் மேன்மேலும் சொல்லப்பட்டவர்கள் அதிகமாகச்சிறந்தவர்களாகிறார்கள். "ஆர்த:" ஆவது முன்னிருந்த நிலை தவறினவன். அதாவது நழுவிப்போன ஐஶ்வர்யத்தை உடையவனாய் மறுபடியும் அதை அடையவேண்டும் என்கிற ஆசையை உடையவன். "அர்தார்தீ" ஆவது இதுவரையிலும் ஐஶ்வர்யத்தை அடையாதவனாக இருந்து ஐஶ்வர்யத்தை அடையவேண்டும் என்கிற ஆசையை உடையவன். இவ்விருவருக்கும் முன் இருந்த நிலையில் பேதம்மாத்திரமுள்ளது, ஐஶ்வர்யத்தைப்பற்றியதா

---

*தா] என்கிற அபிப்ராயத்தினால்—'என்னை ஶரணமாக அடைந்து' என்று சொல்லப்பட்டது. புண்யங்களைச்செய்தவர்கள் என்பது, எல்லோருக்கும் ஸமமாக இருக்கும்பொழுது அதிகாரிகளுக்குள் பேதம் எப்படி ஏற்பட்டது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக 'புண்ய கர்மங்களின் தாரதம்யத்தினால்' என்று சொல்லப்பட்டது. தாரதம்யத்தை விவரிக்கிறார்—'புண்யங்களின் மிகுதியினால்' என்று. விஶ்வாஸம் முதலியவை ஸாதாரணமாக இருந்தபோதிலும், ஞானத்திற்கு விசேஷம் ப்ரயோஜனங்களிலுண்டான ஆசைகளின் வ்யத்யாஸத்தினால் ஏற்பட்டது. இவ்விடத்தில் "ஆர்த:" என்னும் பதமானது ஆர்த்திக்குக் காரணமான முன் தஶையிலிருந்து நழுவினதைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'முன்னிருந்த நிலை தவறினவன்' என்று. ஆர்த்தன் பகவானை உபாஸநம் செய்வது தன் ஆர்த்தி நிவ்ருத்திப்பதற்காகவே; என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதாவது' என்று ஆரம்பித்து. ஶ்லோகத்தில் சொல்லி இருக்கிற வரிசைக்ரமத்தை விட வஸ்துக்களின் ஸ்வபாவத்தினால் ஏற்படும் வரிசைக்ரமம் ப்ரபலமாகையினால் ஜிஜ்ஞாஸுக்கு முந்தியே அர்த்தார்த்தியை எடுத்தது. ஆர்த்தனை விட அவனுக்கு வ்யத்யாஸத்தைக் காட்டுகிறார்—'இதுவரையிலும்' என்று ஆரம்பித்து. "அர்த" என்னும் பதமானது இவ்விடத்தில் ப்ரார்த்திக்கத்தகுந்த போகங்களைச் சொல்லுகிறது. பதத்தை முன்னிட்டு அல்லவோ அதிகாரிகளின் பேதம் இங்கே சொல்லப்படுகிறது. ஆர்த்தனுக்கும் அர்த்தார்த்திக்கும் ஐஶ்வர்யம் ஒன்றே பலம், அவர்களுக்குள் உட்பிரிவு வெவ்வேறாகையினால் பேதம் ஏற்படுத்தப்பட்டது என்னில், இப்படியே இன்னும்*

பா]கையினால் இவ்விருவர்க்கும் அதிகாரம் ஒன்றே "ஜிஜ்ஞாஸு:" ஆவது ப்ரக்ருதியை விட்டு நீங்கின ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை

---

தா]சில பேதங்களும் சொல்லமுடியுமோ? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இவ்விருவருக்கும்' என்று ஆரம்பித்து ப்ரஸித்தமான உட்பிரிவைக்கொண்டு அவர்களுக்கிருக்கும் விசேஷத்தைக் காட்டியிருக்கிறது; என்று தாத்பர்யம். "ஜிஜ்ஞாஸு:" என்னும் பதத்தினால் ஞானத்தை விரும்புகிறவன் அதாவது பகவானை அறியவேண்டும் என்கிற ஆசையுள்ளவன் சொல்லப்படுகிறான் ஆவது என்றாவது அன்றிக்கே [1]"யூயம் ஜிஜ்ஞாஸவோ பக்தா:" என்று பக்தர் முதலியவர்கள் சொல்லியிருப்பதைப்போல பக்தியும் விசேஷமாயும் இல்லாமல் கேவலம் அபேக்ஷையினால்மாத்ரம் பகவானைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்கிற எண்ணமுள்ளவனாவது சொல்லப்படுகிறான் என்றாவது, ஏன் ஒப்புக்கொள்ளக்கூடாது? மேலும் [2]"ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத் ஸ்ரியமிச்சேத் ஹுதாசநாத் | ஈச்வராஜ் ஜ்ஞாநமன்விச்சேத் மோக்ஷமிச்சேஜ் ஜநார்த்தநாத் ||" என்று சொல்லப்பட்ட நான்குவித அதிகாரிகளும் சொல்லப்படுவதாகத் தோன்றுகிறபடியினால் இங்கு "ஜிஜ்ஞாஸு:" என்று சொல்லப்பட்டவனும் அந்த இடத்தில் சொல்லப்பட்ட ஞானத்தை விரும்புகிறவனாக இருப்பதே உசிதம்; என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ப்ரக்ருதியை விட்டு' என்றாரம்பித்து. பகவானையறியவேண்டுமென்கிற ஆசையுள்ளவனுக்குக் கடைசியாகப் பகவானே அடையவேண்டிய ப்ரயோஜனமாக ஒப்புக்கொள்ளப்பட்டான் ஆகையால் ஞானிக்கும் ஜிஜ்ஞாஸுக்கும் ப்ரயோஜனத்தில் பேதமில்லை; இவ்விடத்திலோ ப்ரயோஜனத்தின் பேதத்தினால் அதிகாரிகளின்பேதம் சொல்லப்படுகிறது; அதில் "ஜிஜ்ஞாஸு:

---

[1] 'யூயம்' நீங்கள், 'ஜிஜ்ஞாஸவ:' தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற ஆசையையுடைய 'பக்தா:' பக்தர்கள்.

[2] மாத்ஸ்யபுராணம் 77-49, 'பாஸ்கராத்' ஸூர்யனிடத்திலிருந்து, 'ஆரோக்யம்' ரோகநிவ்ருத்தியை, 'இச்சேத்' விரும்பவேண்டும், 'ஹுதாசநாத்' அக்னியினிடத்திலிருந்து, 'ஸ்ரியம்' செல்வத்தை, 'இச்சேத்' விரும்பவேண்டும், 'ஈச்வராத்' ருத்ரனிடத்திலிருந்து, 'ஜ்ஞானம்' ஞானத்தை, 'அன்விச்சேத்' விரும்பவேண்டும் 'ஜநார்த்தநாத்' பகவானிடத்திலிருந்து 'மோக்ஷம்' மோக்ஷத்தை, 'இச்சேத்' விரும்பவேண்டும்

பா ]அடையவேண்டும் என்கிற ஆசையை உடையவன். ஞானமே இந்த ஜீவாத்மாவுக்கு ஸ்வரூபமாகையினால் "ஜிஜ்ஞாஸு:" (ஞானத்தை விரும்புகிறவன்) என்று சொல்லப்பட்டது. ஞானியாவது "உதாரா: ஸர்வ ஏவைதே" என்று ஆரம்பித்துச்சொல்லப்பட்ட பகவானுக்கு சேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடைய ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டவன். அதாவது ப்ரக்ருதியை விட்டுப் பிரிந்த கேவலம் ஜீவாத்மாவினிடத்தில் முடிவு பெறாமல் பகவானையே அடையவேண்டும் என்கிற ஆசையை உடையவனாய் பகவானையே முக்யமான ப்ரயோஜனமாக நினைத்துக்கொண்டிருப்பவன். சகு

தா ]அர்த்தார்த்தீ' என்று. வெளியிலிருக்கும் ப்ரயோஜனங்களைவிரும்புகிறவர்கள் சொல்லப்பட்டார்கள். பகவானை விரும்புகிறவன் ஞானீ என்று சொல்லப்பட்டான். ஜீவாத்மாவின் ஸ்வரூபமும் அதிகமான ஆனந்த ரூபமானது என்றும், ப்ரயோஜனம் என்றும் வேறு இடங்களில் ப்ரஸித்தமாயிருக்கிறது; இந்தக் கீதையிலும் மேலே இந்த அதிகாரிகளுக்குப்பேதம் நிரூபிக்கப்படப்போகிறது. ஆகையினால் மிகுதியாயிருக்கிறபடியால் ஆத்மாவை விரும்புகிறவனைச் சொல்லுகிறது-இந்த "ஜிஜ்ஞாஸு" என்னும் பதம், என்று தாத்பர்யம். ஞானத்தைவிரும்புகிறவன் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற"ஜிஜ்ஞாஸு"என்னும்பதத்திற்கு ஆத்மாவை விரும்புகிறவன் என்று அர்த்தம் எப்படி சொல்லப்படுகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஞானமே' எனறாரம்பித்து. பரிசுத்தமான ஆத்மாவை அநுபவிப்பதாகிற ஞானம் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். "ஜ்ஞாநீ" வேறு அதிகாரி என்பதற்கு அநுகுணங்களாயிருக்கிற மேலே சொல்லப்போகிற விசேஷங்களை நினைத்துக்கொண்டு விசேஷமான ஞானத்தையுடையவன் என்பதைக்காட்டுகிறார்—"உதாரா:" என்றாரம்பித்து. 'கேவலம் ஜீவாத்மாவினிடத்தில் முடிவுபெறாமல்' என்பதற்கு பட்டணத்திற்குப்போகவேண்டும் என்கிற எண்ணமுள்ள வழிப்போக்கன் நிழலுள்ள மரத்தடியில் தூங்குவதைப்போல, ஜீவாத்மாவை அநுபவிப்பதினாலுண்டாகும் காலதாமதம்; என்று தாத்பர்யம். இங்கே ஜிஜ்ஞாஸுவைப்பற்றிச் சொல்லவேண்டியதையெல்லாம் எட்டாவது அத்யாயத்தில் விஸ்தாரமாக சொல்லப்போகிறோம். விசேஷமான ஞானத்திற்கு ப்ரயோஜனமாக மேலான பலத்தை அங்கீகரித்துக் கொண்டிருக்கையைச் சொல்லுகிறார்—'பகவானையே அடையவேண்டும்

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர்விஸிஷ்யதே |
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: || கஎ

பதவுரை.] தேஷாம் அவர்களுக்குள், நித்யயுக்த: என்னுடன், எப்பொழுதும் சேர்ந்திருக்கிறவனும், ஏகபக்தி: ஒரே வஸ்துவினிடத்தில் பக்தியுள்ளவனுமான, ஜ்ஞாநீ ஞாநியானவன், விஸிஷ்யதே மேலானவன், ஹி எந்தக்காரணத்தினால், ஜ்ஞாநிந: ஞாநிக்கு, அஹம் நான், அத்யர்த்தம் மிகவும், ப்ரிய: ப்ரியனோ (அப்படியே) ஸ: ச அவனும், மம எனக்கு, ப்ரிய: ப்ரியன். கஎ

---

தா] என்கிற ஆசையையுடையவனாய்' என்று. அதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்---'பகவானையே' என்றாரம்பித்து. 'பகவானையே' என்றதற்கு ஆத்மாவை அநுபவிப்பதினாலுண்டாகும் ஸுகமாத்ரத்தைப் பொறுக்காதவன் என்பது கருத்து. கசு

இப்படி பக்தர்களின் பிரிவு சொல்லப்பட்டது, அவர்களுக்குள் ஞானியின் மேன்மையை இந்த ஸ்லோகத்தினால் காட்டுகிறார். இந்த அர்த்தத்தை மேலேயும் [1] "சதுர்விதா மம ஜநா பக்தா ஏவ ஹி தே ஸ்ருதா: | தேஷாமேகாந்திந: ஸ்ரேஷ்டா தே சைவாநந்யதேவதா: || அஹமேவ கதிஸ்தேஷாம் நிராஸீ: கர்மகாரிணாம் ; யே ச ஸிஷ்டாஸ்த்ரயோ பக்தா: பலகாமா ஹி தே மதா: || ஸர்வே ச்யவநதர்மாண: ப்ரதிபுத்தஸ்து மோக்ஷபாக்" என்று சொல்லப்போகிறார். இது ஸ்தோத்ரம் செய்வதற்காக மாத்ரமோ? என்று ஆக்ஷேபிக்கிறார்—

---

1 மஹாபாரதம் சாந்திபர்வம் மோக்ஷதர்மம் 350, 33-34-35, 'சதுர்விதா:' நான்குவிதமானவர்களும், 'மம' என்னுடைய, 'ஜநா:' ஜனங்கள், 'தே' அவர்கள், 'பக்தா ஏவ' பக்தர்களாகவே, 'ஸ்ருதா:' சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டார்கள், 'தேஷாம்' அவர்களுக்குள், 'ஏகாந்திந:' ஞானிகள், 'ஸ்ரேஷ்டா:' சிறந்தவர்கள், 'தே சைவ' அவர்களே, 'அநந்யதேவதா:' வேறு தேவதையை உடையவர்களல்ல, 'நிராஸீ: கர்மகாரிணாம்' பலன்களில் ஆசையில்லாமல் கர்மங்களைச் செய்கிற, 'தேஷாம்' அவர்களுக்கு, 'அஹமேவ' நானே, 'கதி:' அடையவேண்டியவன், 'ஸிஷ்டா:' மிகுதியான, 'பக்தா:' பக்தர்கள், 'யே' எவர்களோ, 'தே து' அவர்களோவெனில், 'பலகாமா:' பலன்களிலாசையுடையவர்களாக, 'மதா:' எண்ணப்பட்டார்கள், 'ஸர்வே' எல்லோரும், 'ச்யவநதர்மாண:' நழுவுதலை ஸ்வபாவமாக உடையவர்கள், 'ப்ரதிபுத்தஸ்து' ஞானியோவெனில், 'மோக்ஷபாக்' மோக்ஷத்தையடைகிறவன்.

பா] அவர்களுக்குள் ஞானீ மேலானவன் ஏனெனில் நித்யமாய் சேர்ந்திருப்பவனானபடியினாலும், ஒரே இடத்தில் பக்தியையுடையவனானபடியினாலும், என்னொருவனையே ப்ரயோஜனமாகவுடைய ஞானிக்கு என்னுடன் ஸம்பந்தம் நித்யமல்லவா, மற்ற இருவர்களுக்குமோவெனில் தங்கள் இஷ்டபலம் கிடைக்கிறவரையிலும் என்னுடன் ஸம்பந்தம். அப்படியே ஞானிக்கு என்னொருவனிடத்திலேயே பக்தி, மற்ற இருவருக்குமோவெனில் தங்கள் இஷ்டபலத்திலும் அதற்கு ஸாதநமாகையினால் என்னிடத்திலும் பக்தி. ஆகையினால் அவனே மேலானவன் மேலும் ஞானிக்கு நான் மிகவும் ப்ரியனல்லவா. இங்கே

---

தா] 'ஏனெனில்' என்று. மேலே சொல்லி இருக்கும் இரண்டு விசேஷணங்களும் ஞானி சிறந்தவன் என்பதற்குக் காரணத்தைச் சொல்லுகின்றன என்று சொல்லுகிறார்—'நித்யமாய்' என்றாரம்பித்து. 'என்னொருவனையே' என்றிவை முதலான வாக்யத்திற்கு அடைவிக்கிறவனாகிய பகவானே அடையத்தக்கவனுமானபடியினால் பலதசையிலும் பகவானுடன் ஸம்பந்தம் தொடர்ந்திருக்கிறது என்றர்த்தம். ஆர்த்தனும், அர்த்தார்த்தியும் ஒரே அதிகாரிகள் என்று கீழே நிஸ்சயம் செய்திருக்கிறபடியினால் 'மற்ற இருவர்களுக்கும்' என்று சொல்லியிருக்கிறது. இதனால் கைவல்யத்தை விரும்புகிறவனுக்கும் பலதசையில் பரமாத்மா போக்யம் என்கிற அநுஸந்தானம் இல்லை, என்று ஏற்பட்டது. எவனுக்கு ஒரே வஸ்துவினிடத்தில் பக்தி இருக்கிறதோ, அவன் "ஏகபக்தி:" என்று சொல்லப்படுகிறான். இது வ்யதிகரணபஹுவ்ரீஹி என்று சொல்லப்படுகிறது. "ஏக" என்னும்பதத்தினால் நினைக்கப்பட்ட, உபாஸிக்கப்பட்ட வஸ்துவும் பலமும் ஒன்று, என்பதைக் காட்டுவதற்காக—'என்னொருவனிடத்திலேயே' என்று சொல்லப்பட்டது. "ப்ரியோஹி" என்றிவைமுதலிய மேற்பாதியினால் அதற்கே மற்றொருகாரணமும் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மேலும்' என்று. மிகவும் உயர்ந்தமேன்மையைச் சொல்லுவதற்காகச் சொல்லுகிறார்—'இங்கே' என்றாரம்பித்து. "அத்யர்த்தம்" என்றால் சொல்லத்தகுந்த வஸ்துக்களை அதிக்ரமித்த, என்று அர்த்தம், இங்கே சொல்லத்தகுந்த வஸ்துக்களை அதிக்ரமிக்கையாவது, மற்ற சொல்லத்தகுந்த வஸ்துக்களைவிட விலக்ஷணமாக இருக்கை, அதாவது இவ்விடத்தில் சொல்லமுடியாமையே. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஞானிக்கு நான்' என்றாரம்பித்து. இவ்வி

பா] "ஸத்யம்" என்கிற இடத்தில் "ஸர்வ" என்னும் பதம் சொல்லத்தக்கது—என்னுமர்த்தத்தைச் சொல்லுகிறது. ஞானிக்கு நான் எப்படிப்ரியனோ அது, எல்லாம் தெரிந்தவனுயும், எல்லா சக்தியுமுள்ளவனுயுமிருக்கிற என்னாலும் சொல்லமுடியாது (அவன் என்னிடத்தில் வைத்திருக்கும்) ப்ரீதிக்கு அளவில்லாமையால், அப்படியே ஞானிகளுக்குத் தலைவரான ப்ரஹ்லாதனுடைய ப்ரீதி *"[illegible]" என்று சொல்லப்பட்டிருக்கிறது அப்படியே அவனும் எனக்குப்ரியன். கஎ

---

சா] —டத்தில் சொல்லமுடியாதென்பது ப்ரமாணமுடையவார்த்தையானாயினுல், அவனாலும் சொல்லமுடியாது என்பது ஏற்பட்டது, என்கிற அபிப்ராயத்தினுல்—'எல்லாம் தெரிந்தவன்' என்பது முதலியவை சொல்லப்பட்டன. எல்லாவற்றையும் தெரிந்துகொண்டவனுல் தெரிந்துகொள்ளப்படாதது எதுவோ; அது இல்லாத வஸ்துவாகவே இருக்கும். எந்தவிஷயத்தில் இவன் சக்தியற்றவனோ அந்தவிஷயத்தில் இவன் ஈச்வரனுகமாட்டானே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறுர்—'ப்ரீதிக்கு' என்று ஆரம்பித்து. ஆகாயப்பூவைப்போல வஸ்துவில்லாமையினுல் தெரிந்துக்கொள்ளாமை தோஷமாகாது. அப்படி இல்லாவிடில் பரமித்தவனுக வேண்டிவரும். இல்லாமலென்பது இல்லாமையாலே அதைச் சொல்லக்கூடிய பதமுமில்லை. ஆகையினுலே அப்படிப்ரயோகியாததும் சக்தியில்லாமைக்குக் காரணமாகாது என்று தாத்பர்யம் "ஹி" என்பதினுல் காட்டப்பட்ட ப்ரஸித்திக்கு உதாஹரணம் காட்டுகிறுர்—'அப்படியே' என்றாரம்பித்து. 'ஞானிகளுக்குத் தலைவரான' என்பதினுல் பிறப்பிலேயே ஏற்பட்ட எல்லையில்லாத ஞானத்தை யுடைத்தாயிருக்கையும், அதைத்தடுக்கிற அனேக வார்த்தைகளாலும் அனேகங்களான பயமுறுத்தல்களினுலும் அசைக்க

* விஷ்ணுபுராணம் 1-17-39, க்ருஷ்ணே' க்ருஷ்ணனிடத்தில், 'ஆஸக்தமதி:' நன்றாகப்பற்றுதலையடைந்த புத்தியையுடைய, 'ஸது' அந்த ப்ரஹ்லாதனும் 'மஹோரகை:' பெரியபாம்புகளால், 'தச்யமான:' கடிக்கப்பட்டவனுயிருந்தாலும், 'ஸதா' எப்பொழுதும், 'தத்ஸ்ம்ருத்யா ஹ்லாதஸம்ஸ்தித:' பகவானை நினைப்பதினுலுண்டான ஆனந்தத்தில் இருந்துகொண்டு, 'ஆத்மந' தன்னுடைய, 'காத்ரம்' தேஹத்தை, 'நவிவேத' அறியவில்லை.

உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் |
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் || ௧௮

---

தா] டியாமையும், சொல்லப்படுகிறது. "க்ருஷ்ண" என்பதினால் [1]"க்ருஷிர் பூவாசக: ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதி வாசக:" என்று சொல்லியிருக்கிறபடி இவ்விடத்தில் ஸுகத்திற்குக் காரணமாக இருக்கை முதலியது சொல்லப்படுகிறது. ப்ரவாஹம்போல் அனாதியாக வந்துகொண்டிருக்கும் க்ருஷ்ணாவதாரங்களிற்செய்த காளியமர்தனத்தை ஞாபகப்படுத்துகிறதாகவுமாம். பக்தர்களின் துக்கத்தை யிழுத்துவிடுகிறபடியினால் க்ருஷ்ணன் என்று சொல்லப்படுகிறானாகவுமாம். அதிகமான துக்கத்திற்குக்காரணமிருந்தபோதிலும் துக்கத்தை அனுபவியாமலிருந்தது, எல்லையில்லாத வேறொரு விஷயத்திலுண்டான ப்ரீதியினால் மகத்தை அடைந்திருந்தபடியினால், என்று தாத்பர்யம். அப்பொழுது தன் ஆத்மாவைப் பற்றிய ஞானமேயில்லை, வீடுமுதலியவைகளைப்போன்ற ஶரீரத்தைப் பற்றியஞானமில்லை, யென்பதற்குக்கேழ்க்கவும்வேண்டுமோ என்று"ஆத்மநோ மாத்ரம்" என்பதின் கருத்து. "ஸ ச மம ப்ரிய:" 'அவனுமெனக்குப்ரியன் என்னுமிடத்திலும்"அத்யர்த்தம்"என்னும்பதம் "ச"என்பதின் ஶக்தியினாலும், வஸ்துவின் ஸ்வபாவத்தினாலும்,சேர்த்துக்கொள்ளப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்'அப்படியே' என்று. [2] மூன்றுவிதங்களான அளவுகளுமில்லாத எல்லையில்லாத ஆனந்தத்தையே ஸ்வரூபமாகவுடையவனாகவும்,விபூதிகளையுமுடையவனுமிருக்கிற நான் எப்படி ஞானிக்குப்ரியனோ, அப்படியே இந்த ஞானி ஒருவனே எனக்கு எல்லையில்லாத ப்ரீதிக்குப்பாத்திரனாகிறான், என்று சொல்லப்பட்டது. "ஸ ச மம ப்ரிய:" என்கிற இடத்தில் எல்லையில்லாதப்ரீதியைச் செய்துகொண்டிருந்தாலும் மிகவும் உதாரனானபகவானுக்கு பக்தன் ப்ரீதிசெய்வதைக் காரணமாகக்கொண்டு தான் ப்ரீதி செய்கிறபடியினால் அத்ருப்தி காட்டப்பட்டது, என்று சிலஆசார்யர்கள் சொல்லுகிறார்கள். ௧௭

---

1 மஹாபாரதம் உத்யோகபர்வம் 69—5. 'க்ருஷி:' க்ருஷி என்னும் பதம் 'பூவாசக:' பூமியைச்சொல்லுகிற 'ஶப்த:' பதம் 'ணச்ச' ண: என்னும் பதமும் 'நிர்வ்ருதிவாசக:' ஸுகத்தைச்சொல்லுகிறது

2 I-வது ஷட்கம் 7-வது பக்கம் தாத்பர்யசந்த்ரிகையின் புட்நோட்டைப்பார்க்க.

ப-ரை] ஏதே இவர்கள், ஸர்வே ஏவ எல்லாருமே, உதாரா: உதாரர்கள், ஜ்ஞாநீ து ஞானியோவெனில், மே எனக்கு, ஆத்மா ஏவ ஆத்மா (என்று) மதம் எண்ணப்பட்டது, ஹி எந்தக்காரணத்தினால், ஸ: அந்த ஞானி, யுக்தாத்மா, என்னுடன் ஸம்பந்தத்தை ஆசைப்பட்ட மனதையுடையவனாய்க்கொண்டு, மாம் ஏவ என்னையே. அநுத்தமாம் மிகவும் உத்தமமான, கதிம் அடையவேண்டிய ப்ரயோஜனமாக, ஆஸ்தித: எண்ணிக்கொண்டிருக்கிறானே? கஅ

பா] இவர்களெல்லோருமென்னையே உபாஸிக்கிறார்களாகையால் உதாரர்கள். எவர்கள் என்னிடத்திலிருந்து ஏதாவதொன்றை வாங்கிக்கொள்ளுகிறார்களோ அவர்களல்லவோ எனக்கு எல்லா ஆஸ்தியையும் கொடுக்

---

*தா] "தேஷாம் ஜ்ஞாநீ" என்கிற ஶ்லோகத்தில் சொன்ன அர்த்தமே இந்தஶ்லோகத்தினால் உறுதிப்படுத்தப்படுகிறது. ஞானி மிகவும் ப்ரியன் என்று சொன்னதினால் மற்றவர்கள் கொஞ்சம் ப்ரியர்கள் என்றேற்பட்டது. அதுதான் "உதாரா:" என்றது முதல் கால் ஶ்லோகத்தினால் விஸ்தாரமாகச்சொல்லப்படுகிறது; பகவானொருவனையே உபாயமாகவுடையவர்களாயிருக்கை எல்லோருக்கும் பொதுஎன்பது 'என்னையே உபாஸிக்கிறார்கள்' என்பதினால் காட்டப்பட்டது "உதாரா:" என்னும் பதத்திற்கு அல்பமான ப்ரயோஜனமுள்ள, உயர்ந்தவர்கள் என்று அர்த்தம் சொல்வதை விலக்குவதற்காக ப்ரஸித்தியை அனுஸரித்து அர்த்தம் சொல்லுகிறார்—'உதாரர்கள்' என்று.யாசகர்களாயிருப்பவர்களுக்கு உதாரத்தன்மை எப்படி ஸம்பவிக்கும்? என்கிற ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'எவர்கள் என்னிடத்திலிருந்து' என்றாரம்பித்து. எல்லாப் பலன்களையும் கொடுக்கும் தன்மையாகிற மிகுந்த உதாரத்தன்மையே எனக்கு எல்லா ஆஸ்தியும், அது வாங்கிக்கொள்ளுகிறவர்களைப்பொறுத்தது, அவர்களில்லாவிட்டால் எனக்கு அது எப்படி ஸம்பவிக்கும், என்று சொல்லப்பட்டது. "மதம்" என்று "நபும்ஸகலிங்கம்" (ஒன்றன்பால்) ஆகயிருக்கிறபடியினால் "ஜ்ஞாநீ" என்பதுடன் அந்வயிக்காது "மத:" என்று மற்றவர்கள்சொன்ன "பும்லிங்கம்" (ஆண்பால்) ஆனபாடமோ ப்ரஸித்தமல்ல ஆதலால் "இதி" (என்று) என்னும்பதம் சேர்த்துக்கொள்ளப்பட்டது. வேதாந்தத்திலேற்பட்ட ஸித்தாந்தமாயிருந்தாலுமிருக்கட்டும், இல்லாமற்போனாலும் போகட்டும், க்ருஷ்ணனுடைய ஸித்தாந்தம் இது, என்று தாத்பர்யம் அனேக ப்ரமாணங்களுக்கு விருத்தமாகையி*

பா]கிறவர்கள். ஞானியோவெனில் எனக்கு ஆத்மா, அவனாலேயே என்னுடைய ஸ்வரூபம் தரிக்கப்படுகிறது, என்று நான் நினைக்கிறேன். ஏனிப்படி என்னில் எந்தக்காரணத்தினால் இந்த ஞானி என்னை விட்டுப் பிரிந்து தன் ஆத்மாவைத்தரிப்பது முடியாதாகையால் என்னையே மிகவும் உயர்ந்த

---

தா] னால் இவ்விடத்தில் 'ஆத்மா" என்னும் பதம் அபேதத்தைச் சொல்லுகிறதல்ல, அப்படிச் சொல்லில் "மே" (எனக்கு) என்று பேதத்தைக் காட்டுகிற ஆறும் வேற்றுமையாகச்சொல்லியிருப்பதும் விரோதிக்கும் ஆகையால் அதின் தாத்பர்யத்திலிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அவனாலேயே' என்றாரம்பித்து. சரீரத்துக்கு அதைத்தரிப்பவன் ஆத்மாவல்லவா? "ஆத்மைவ" என்று "ஏவ" என்பதோடு சேர்த்துச்; சொல்லியிருக்கிற விது, ப்ரீதியின் மிகுதியைக் காட்டுவதற்காக ஆத்மா என்பதை ஆரோபித்துச் சொல்லியிருக்கிறது. அபிமானம் மாத்ரத்தைப் பலமாகவுடைய இந்த உம்முடைய வித்தாந்தத்திற்கு எதை ப்ரமாணமாக நினைத்திருக்கிறது; என்கிற கேள்விக்கு ஸமாதானமாக "ஆஸ்தித:" என்றிவை முதலான மேல் பாதி சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—"ஏனிப்படி என்னில்' என்று. "ஹி" என்பது காரணத்தைச் சொல்லுகிறது. 'யுக்தாத்மா" என்பது ஆசையைக்காட்டுகிற "க்த" என்னும் விகுதியையுடையது. எவனுடைய மனது பரமாத்மாவுடன் ஸம்பந்தத்தை ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறதோ அவன் இவ்விடத்தில் "யுக்தாத்மா" என்று சொல்லப்படுகிறான். இவையெல்லாவற்றையும் மனதில் வைத்துக்கொண்டு 'என்னைவிட்டுப்பிரிந்து தன் ஆத்மாவைத் தரிப்பது முடியாதாகையினால்' என்று சொல்லப்பட்டது. என்னைப்பற்றிய அனுஸந்தானமில்லாமற்போனால் வேறு வஸ்துக்களை அனுஸந்தானம் செய்யவும் ஸாமர்த்யமில்லாத ஸ்வபாவத்தையுடையவனாகையினால் என்றர்த்தம். 'என்னையே' என்பதற்கு என்னுடன் ஸம்பந்தமில்லாதபோது அஸத் ஆகவே. ஆய்விடும் என்று தாத்பர்யம். 'என்னையே' என்பதற்கு உபாயமாகிய என்னையே; வேறுபலத்தின் கொஞ்சபாகத்தையுமல்ல, என்றர்த்தம் 'அடையத்தகுந்த ப்ரயோஜனமாக' என்பதற்கு அவ்விடத்தில "கதிம்" என்னும் பதம் அடையத்தகுந்த வஸ்துவைச் சொல்லுகிறது, என்று தாதபர்யம். ஞானி பகவானால் தன் ஆத்மாவைத் தரித்துக்கொண்டிருக்கிறான் என்பது ப்ரமாணங்களுக்கு ஒத்திருக்கிறபடியினால் இப்படியே இருக்கலாம்;

பா] அடையத்தகுந்த ப்ரயோஜனமாக எண்ணிக்கொண்டிருக்கிறானே, ஆகையினாலேயே அவனைவிட்டுப்பிரிந்து எனக்கும் ஆத்மாவைத் தரிக்கமுடியாதாகையால் எனக்கு அவனாத்மாவல்லவா ௧௮

பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்³யதே ।
வாஸுதே³வஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது³ர்லப⁴: ॥ ௧௯

ப-ரை] பஹூநாம் அநேகங்களான, ஜந்மநாம் ஜந்மங்களுடைய, அந்தே கடைசியில், ஜ்ஞாநவாந் ஞானத்தை உடையவனாய்க்கொண்டு,

---

ஈா] ஆனாலும் பகவான் ஞானியால் தன்னுடைய ஆத்மாவைத் தரித்துக் கொண்டிருக்கிறான் என்பதற்கு என்ன ப்ரமாணம் ஏற்பட்டதென்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஆகையினாலேயே' என்றாரம்பித்து. ஸரஸமான மனதையுடையவர்களாய் என்னுடைய அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டவர்களுக்கிது வ்யக்தமாயிருக்கிறது, என்றபிப்ராயம் அப்படியே [1]"நதஸ்யாந்ய: ப்ரியதர: ப்ரதிபுத்தைர்மஹாத்மபி: । வித்யதே த்ரிஷு லோகேஷு ததோஹமேகாந்திதாம் கத: ॥ நாரதைதத்தி தே ஸத்யம் வசநம் ஸமுதாஹ்ருதம் । நாஸ்ய பக்தை: ப்ரியதரோ லோகே கஶ்சந வித்யதே ॥" என்று சொல்லியிருக்கிறது 'ஆகையால் எனக்கு அவனாத்மாவல்லவா' என்பதற்கு ஆதாரமாயிருக்கை முதலியவைகளில் சில விசேஷங்களைவோ ஆத்மாவுக்கு இலக்கணம் என்று தாத்பர்யம், ஐஶ்வர்யம் முதலியவற்றை விரும்புகிற எல்லோரும் என்னுடைய ஸ்வரூபத்திற்கு மேன்மையை உண்டாக்குகிறவர்கள், ஞானியோவெனில் என்னுடைய ஸ்வரூபம் நிற்பதற்கே காரணம், என்று தன்னுடைய பக்தர்களை ஸ்தோத்ரம் செய்கிறார்] இந்த ஶ்லோகத்தினால். ௧௮

---

1 'தஸ்ய' அந்தபகவானுக்கு 'மஹாத்மபி:' மஹாத்மாக்களாகிய 'ப்ரதிபுத்தை' ஞானிகளைத்தவிர 'அந்ய:' வேறு 'ப்ரியதர:' மிகவும் இஷ்டமானவன் 'த்ரிஷு' மூன்று 'லோகேஷு' லோகங்களில் 'நவித்யதே' இல்லை 'தத:' ஆகையால் 'ஏகாந்திதாம்' ஞானியாயிருக்கையை 'கத:' அடைந்தவனாக 'அஸ்மி' ஆகிறேன் 'நாரத' ஓ நாரதருஷியே 'ஸத்யம்' உண்மையான 'ஏதத்' இந்த 'வசநம்' வார்த்தை 'தே' உனக்கு 'ஸமுதாஹ்ருதம்' சொல்லப்பட்டது 'அஸ்ய' இந்த ஈச்வரனுக்கு 'பக்தை' பக்தர்களைத்தவிர வேறு 'ப்ரியதர' மிகவும் ப்ரியமானவனை 'கஶ்சந' ஒருவனும் 'லோகே' லோகத்தில் 'நவித்யதே' இல்லை

வாஸுதேவ: ஸ்ரீ க்ருஷ்ணனே, ஸர்வம் எல்லாமும், இதி என்று, (எண்ணிக்கொண்டு) மாம் என்னை, ப்ரபத்யதே அடைகிறான், ஸ: அந்த, மஹாத்மா மஹாத்மாவானவன், ஸுதுர்லப: மிகவும் கிடைக்கத்தகாதவன். ௧௯

பா] எனக்கு ஶேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடைய ஆத்மாவின் உண்மையைப்பற்றிய ஞானத்தை முன்னிட்டு என்னை ஆஶ்ரயிக்கிறது என்கிற விது ஸ்வல்பக்கணக்கினால் எண்ணப் பட்ட புண்யஜன்மங்களின் பலமல்ல; பின்னை எப்படியெனில் அனேகங்களான புண்யஜன்மங்களின் கடைசியில் வாஸுதேவனு க்கு ஶேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடையவன் நான், அவனுக்கு வஶப்பட்ட ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளை உடை யவன், அந்தப்பகவானும் எண்ணிறந்த கல்யாண குணங்களினால் மிகவும் மேலானவன், என்கிற ஞானமுள்ளவனாகி, பசவானே எனக்கு

---

*தா] மறுபடியும் கீழ்ச்சொல்லிய ஞானத்தை உடையவனாக இருக் கை, அனேகஜன்மங்களில் செய்யப்பட்ட புண்யங்களுக்குப்பலமாகை யினாலே கிடைப்பது மிகவும் அரிதாகையினால் ஞானியின் மேன் மையைக் காட்டுகிறார்—இந்த ஶ்லோகத்தில் "யேஜந்மகோடிபிஸ்ஸி த்தாஸ்தேஷாமந்தேऽத்ரஸம்ஸ்திதி:" என்கிற பஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தை யும்' 'ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு'' என்றிவை முதலிய ஸ்ம்ருதிக ளையும் நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'எனக்கு ஶேஷமாக' என்று ஆரம்பித்து. "பஹூநாம் ஜந்மநாம்'' என்கிற இடத்தில் அனேக ஜன்மங்கள் உண்டானமைமாத்ரம் சொல்லப்படவில்லை; அது இவ்விடத்தில் உபயோகமற்றதாகையினால், அனேகஜன்மங்கள் மாத்ரம் ஞானமுண்டாவதற்குக் காரணமாகச் சொல்லப்படவில்லையல்லவா ? அப்படியாகில் எல்லோரும் ப்ரயத்னம் இல்லாமல் ஞானியாகக் கூடுமாகையினால். ஆதலால் 'புண்யஜன்மங்களின்' என்று விஶே ஷித்துச் சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட ஞானத்தை உடை. யவனாக இருக்கை இப்படிப்பட்ட விஶேஷமான ப்ரபத்திக்குக்கார ணம் என்று காட்டுவதற்காகவும், ஞானிக்கு அனேக ஜன்மங்க ளுண்டு என்கிற ப்ரமத்தை நீக்குவதற்காகவும். 'ஞானமுள்ளவனாகி' என்று சொல்லப்பட்டது. "வாஸுதேவஸ்ஸர்வம்'' (வாஸுதேவ னே எல்லாம்) என்று சேர்த்துச்சொல்லியிருப்பது லோகமெல்லாம்*

பா] மேலான அடையத்தகுந்த ப்ரயோஜனமும், அடைவிக்கிற வனும், என் ஆசையில் இருக்கிற மற்றெல்லாமும் அவனே, என்று என்னை உபாஸிக்கிறான். அப்படிபட்ட பெரிய மனதை உடையவன் இந்த உலகத்தில் மிகவும் துர்லபன். "வாஸுதேவஸ்ஸர்வம்" என்ப

---

தா] இல்லை என்றாவது, அவைகள் ப்ரமாணத்தினிடத்தில் ப்ரதிக்ஷிப்பட்டன என்றாவது, அவைகள் ப்ரஹ்மத்தோடு ஒன்று என்றாவது, சொல்லுகிறது என்பது பொருந்தாததாகையினாலும், சரீரமும் ஆத்மாவாயிருப்பதினால் அப்படி சொல்லியிருக்கிறதென்பதைப் பார்க்கிலும் இந்த ஸந்தர்ப்பவிசேஷத்தினால் ஏற்பட்ட அர்த்தமே அவஶ்யமாய் க்ரஹித்துக்கொள்ள வேண்டியதாகையினாலும்—'பகவானே எனக்கு மேலான அடையத்தகுந்தப்ரயோஜனம்' என்றிவை முதலானது சொல்லப்பட்டது. இந்த லோகத்திலிருக்கும் தாயகம் முதலியவைகளை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'என்னுடையிலிருக்கிற' என்றாரம்பித்து. [1]"ஸுஶ்ரீஸ்தா வி தாஸுஶ்ரீவ" என்பதும் 'தாயார்தகப்பனார், உடன்பிறந்தவன், இருப்பிடம், காப்பாற்றுகிறவன், மித்ரன் அடையத்தகுந்தவன், எல்லாம், நாராயணனே' என்பார்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளும் இங்கே நினைக்கப்பட்டன. இவ்விடத்தில் ஶரணாகதி உபாஸனத்துக்கு அங்கம் என்று சொல்லுகிறார்—'என்னை உபாஸிக்கிறான்' என்று. ஞானிக்கும் ஸ்வரூபம் 'மஹாத்' (பெரிது) என்பது ப்ரமாணங்களுக்கு விருத்தமாகும். கும்பலைப் பரிசுத்தமாக்கும் தன்மை முதலிய பெருமைகள் இருந்தபோதிலும் அவைகளை இங்கேசொல்லவேண்டிய அவஶ்யமில்லை. ஆகையால் விசேஷமான ஞானத்தினாலுண்டான பெருமையே இவ்விடத்தில் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'பெரியமனதை உடையவன்' என்று இதரங்களிலாசையுள்ளவனாய் பகவானை உபாஸிக்கிறவன் துர்லபனாகையினால் அவனை விலக்குவதற்காக "ஸர்வ" என்னும் சப்தம் சொல்லப்பட்டிருக்கிறது, என்று தெரியப்படுத்துவதற்காக 'மிகவும் துர்லபன்' என்று சொல்லப்பட்டது. 'வாஸுதேவஸ்ஸர்வம்" என்று சேர்த்துச் சொல்லியிருப்பதற்கு மற்றவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட அர்த்தத்தை

[1] 'த்வமேவ' நீயே 'மாதா' தாயாரும் 'பிதா' தகப்பனும் 'த்வமேவ' நீயே.

பா]தற்கு இதுதான் அர்த்தம். "வி்யொஹிஜ்ஞாநிநொத்யர்த்தம்" "ஆஹி தஸ்யஹிமாத்ரா ஜ்ஞாநொவாஸுதேவம்ஶம்" என்று ஆரம்பித்திருக்கிறபடியினால். ஜ்ஞாநவாந் என்பவனும் கீழ்ச்சொல்லிய அடையாளமுள்ளவனே. இவனே கீழ்ச்சொல்லப்பட்ட ஞானியாகையினால். "ஸுக்ருதிநாவுஃ" என்று ஆரம்பித்து. * ' ஸஹங்கார இதீயம்மெ பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா । அபரெயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் விதிமெ பராம் । ஜீவபூதாம்" என்று சேதநாசேதநங்களாகிய இரண்டு விதங்களான ப்ரக்ருதியும் பரமபுருஷனுக்கு ஶேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடைத்தானவைகள் என்பது சொல்லப்பட்டது. † " ஸஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகதஃ ப்ரபவஃ ப்ரலயஸ்ததா । மத்தஃ பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய" என்று ஆரம்பித்து. ‡" யெசைவஸாத்விகாபாவா

---

தா] நிராகரித்துக்கொண்டு தன்னால் சொல்லப்பட்ட அர்த்தத்தை உறுதிப்படுத்துகிறார்— " வாஸுதெவஸ்ஸர்வம் என்றாரம்பித்து. இவ்விடத்தில் ஆரம்பம், ப்ரயோஜனம் வேறானதைக்காரணமாகக்கொண்டு அதிகாரிகளின் பேதத்தைச் சொல்லவந்தது. ஸங்கர்ப்பத்துக்கு விருத்தமான அர்த்தமும ஸங்கர்ப்பத்துக்கு உபயோகமில்லாத அர்த்தமும், ஸங்கர்பத்திலேயே ஏற்பட்டதும் ஸங்கர்ப்பத்துக்கு மிகவும் உபயோகமுமான அர்த்தமிருக்கும்பொழுது ஆதரிக்கத்தக்கதல்ல, என்று தாத்பர்யம். "ஜ்ஞாநவாந்" என்கிற இடத்திலும் ப்ரம்ஹம் எல்லா விஶேஷங்களுமற்றது, என்கிற ஞானத்தையும், ஜீவாத்மா மாத்ரத்தைப்பற்றிய ஞானத்தையும், விலக்குவதற்காகச் சொல்லுகிறார்— "ஜ்ஞாநவாந்" 'என்பவனும்' என்றாரம்பித்து. 'கீழ்ச்சொல்லிய அடையாளமுள்ளவனே, என்பதற்கு தன்னுடைய ஆத்மாவை வாஸுதேவனுக்கு ஶேஷமாயிருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடையவன், என்று தெரிந்துகொண்டவனே, என்றர்த்தம். கீழ்ச்சொல்லிய அடையாளமுள்ளவனாக இருக்கைக்குக் காரணத்தைச் சொல்லுகிறார்–'இவனே' என்றாரம்பித்து "ஜ்ஞாநீ த்வாத்மைவ" என்று முன்புசொல்லப்பட்ட ஞானிக்கு கீழ்ச்சொல்லிய அடையாளமுள்ளவனாகயிருக்கை எப்படி சொல்லப்படு

---

* பகவத்கீதை, 7–4, 5.　　† பகவத்கீதை, 7–6, 7.

‡ பகவத்கீதை, 7–12.

¶ பகவத்கீதை, 7–2(.

பா] வாஸுதேவஸர்வமிதி ஸமஹாத்மாஸுதுர்லப: । "ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய" என்று கார்யதசை, காரணதசையாகிய இரண்டுதசைக ளையுமுடைய இரண்டுவித ப்ரக்ருதிகளும் பரமபுருஷனுக்கு வசப்பட்ட ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளை உடையவைகள் என்பதும், பரமபுருஷ னே எல்லா ஸ்வபாவங்களினாலும் எல்லா வஸ்துக்களையும்விட மேலா னவன் என்பதும் சொல்லப்பட்டது ஆகையினால் இப்படிப்பட்டவ னே இவ்விடத்தில் ஞானி என்று சொல்லப்படுகிறான். கக

பா-அ.] அந்த ஞானிதுர்லபன் என்பதையே நிரூபிக்கிறார்:—

*காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே(அ)ந்யதேவதா: ।*
*தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥* உ0

ப-ரை] ஸ்வயா தங்களுடையதான, ப்ரக்ருத்யா ஸ்வபாவத்தினால், *நியதா:* கட்டப்பட்டவர்களாய், *தைஸ்தை:* அந்தந்த, *காமை:* ஆசைகளினால், *ஹ்ருதஜ்ஞாநா:* அபஹரிக்கப்பட்டஞானத்தை உடைய வர்களாய்க்கொண்டு, *தம் தம்* அந்தந்த, *நியமம்* நியமங்களை, *ஆஸ்தாய* அடைந்து, *அந்யதேவதா:* இதரதேவதைகளை, *ப்ரபத்யந்தே* ஆஸ்ரயிக் கிறார்கள். உ0

---

*தா]கிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார் "ஸர்வே ராவ:" என்று ஆரம்பித்து என்று அநுவாதன்றிக்கே கீழ்ச்சொல்லிய ஞானியாகையினால், என்பதினால் ஓரே வஸ்துவினிடத்தில் பக்தியுள் ளவனாக இருக்கைமுதலியன சொல்லப்படுகிறது "ஸர்வேராவ:" என் றாரம்பித்துச்சொல்லும் வாக்யத்தினால் வேறொருகாரணம் சொல்லப் பட்டிருக்கிறது. 'கார்யதசை காரணதசை, இவைகளை உடைய, என்ப தற்குக் கார்யமாக இருக்கை காரணமாக இருக்கையாகிய இரண்டுதசை களுமுடைய என்று அர்த்தம். ஸ்வரூபஸ்திதி முதலியவைகள் அந்த பகவானுக்கு அதீனமாக இருக்கின்றன என்பது "ஜயிஸ்வம் ரஹோ ஹம்" என்றிவைமுதலான இடங்களில் வ்யக்தமாகச் சொல்லப்பட் டிருக்கிறது. கீழ்ச்சொல்லிய அடையாளமுள்ளவன் என்பதை முடிக் கிறார்—'ஆகையினால்' என்றுஆரம்பித்து. 'அவனே' என்பதற்கு வாஸு தேவனுக்கு சேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடைய வன் என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்ட அடையாளமுள்ளவனே என்று அர்த்தம். சக*

**பா]உலகத்திலுள்ள எல்லா மனிதர்களும் குணமயங்களான வஸ்துக்களைப்பற்றிய தங்களுடையதான வாஸனைகளோடு எப்போழுதும் சேர்ந்து கொண்டவர்களாய்த் தங்கள் தங்கள் வாஸனைக்குத் தகுந்தவைகளாயும் குணமயங்களாயும் தங்களி னுலாசைப்படப்பட்டவைகளாயு மிருக்கிற வஸ்துக்களினுல் அபஹரிக்கப்பட்ட என் ஸ்வரூபத்தைப்பற்றிய ஜ்ஞானத்**

---

தா]*“காமைஸ்தைஸ்தை:” என்று ஆரம்பித்து 27-வது ஶ்லோகம் வரையிலுமுள்ள க்ரந்தத்திற்கு ப்ரக்ருதத்தோடு ஸங்கதி சொல்லுகிருர்*—**‘அந்த’** *என்று ஆரம்பித்து. வேறு தேவதைகளிடத்திலும் வேறு பலங்களிலும் ஆசைமுதலியவை இதற்குத் தடையாகும், என்று தாத்பர்யம். பன்மையாகச் சொல்லி இருப்பதற்குச் சுருக்கமில்லாமையையும், “ஸர்வபூதாநி ஸம்மோஹம்” என்று மேலே சொல்லப்போகிறதையும் நினைத்துக்கொண்டு* **‘எல்லா’** *என்று சொல்லபபட்டது.* **தங்களுடையதான’** *என்பதற்கு அநாதியான தங்களுடைய அனுபவத்தினுலுண்டானதாயும், ஒவ்வொரு ஆத்மாவுக்கும் அததற்குத் தகுந்தபடி தனித்தனியே இருப்பதாயும், அந்தந்த ஆத்மாவுக்குப் பலத்தைக் கொடுக்கக்கூடியதுமான, என்று அர்த்தம். இந்த வாஸனைத் தனித்தனியாக விஷயங்களைப் பற்றிய ஆசையை உண்டாக்குகிறது, என்று தெரிவிப்பதற்காக*—**‘குணமயங்களான வஸ்துக்களைப்பற்றிய’** *என்று சொல்லப்பட்டது. இத்தால் ஸ்வபாவம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற ப்ரக்ருதி யென்னும் பதமானது இவ்விடத்தில் “காமைஸ்தைஸ்தை:” என்பவை முதலிய பதங்களோடு சேர்ந்திருக்கிறபடியினுல் அந்தந்த ஆசைக்குக் காரணமான ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட வாஸனையைச் சொல்லுகிறது, என்பதும் தெரிவிக்கபபட்டது “நியதா:” என்பதற்கு ஓரிடத்திலும் தனித்திருக்கையைக் கண்டறியாத சேர்க்கை அர்த்தம், என்கிற அபிப்ராயத்தினுல்* **‘எப்போழுதும் சேர்ந்துகொடவர்களாய்’** *என்று சொல்லப்பட்டது.* **‘அந்தந்த’** *என்று இரட்டித்துச சொல்லி இருப்பதின் அபிப்ராயத்தைச் சொல்லுகிருர்:—***தங்கள் தங்கள் வாஸனைக்குத் தகுந்தவைகளாயும்’***என்று. “ஹ்ருதஜ்ஞாநா:” என்று மேலே சொல்லப்போகிற காம என்கிற பதத்தின் அர்த்தத்தையே சொல்லவேண்டியதாகையினுல் இவ்விடத்தில் இருக்கும் காம என்னும் பதமும் இச்சிக்கப்படுகிறது என்னும் அர்த்தத்தையே சொல்லுகிறது. “ஹ்ருதஜ்ஞாநா:” என்னுமிடத்தில் ஞான என்கிற பதத்தினுல் முன்பு ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஞானமே சொல்லப்படுகிறது, என்று தெரிவிப்பதற்காக*—**‘அபஹரிக்கப்பட்ட என் ஸ்வரூபத்தைப்பற்றிய ஞானத்**

தா] தாரணமான நியமத்தை அடைந்து அவர்களையே ஆஶ்ரயித்து ஆரா தனம் செய்கிறார்கள். 20

யோ யோ யாம்யாம் தநும் பக்த: ஶ்ரத்தயார்சிதுமிச்சதி।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவ விதாம்யஹம் ॥ 21

ப-ரை] யோய:-எவனெவன், பக்த:- பக்தியை உடையவனாக, யாம்யாம் எந்தெந்த, தநும்- சரீரத்தை, அதாவது எனக்கு ஶரீரமாகிய எந்தெந்த தேவதையை, ஶ்ரத்தயா- விஶ்வாஸத்தினால், அர்சிதும் - ஆராதிப்பதற்கு, இச்சதி- விரும்புகிறானோ, தஸ்ய தஸ்ய - அவனவனுக்கு, தாம்- அந்த, ஶ்ரத்தாமேவ- விஶ்வாஸத்தையே, அசலாம்- உறுதியாக, அஹம்- நான். விதாமி- செய்கிறேன். உக

பா] அந்தத் தேவதைகளும் என்னுடைய ஶரீரங்கள் என்று * 'எவன் ஸூர்யனிடத்தில் இருக்கிறானோ எவனை ஸூர்யன் தெரிந்துகொள்ள வில்லையோ எவனுக்கு ஸூர்யன் ஶரீரமோ' என்று அர்த்தமுள்ள வாக்

---

தா] கும்படி செய்கிறார்கள் என்று அர்த்தம். ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையோசித்துப் பார்த்ததினால் 'அவர்களையே' என்பது ஏற்பட்டது, "ததேகோபாயதாயாச்ஞா" என்றல்லவோ ப்ரபத்தியின் லக்ஷணம். 20

இப்படி இதர தேவதைகளிடத்திலும் வேறு பலன்களிலும் பற்றுதலை உடையவர்களும் அந்தந்தத் தேவதைகளின் ஆராதனங்களும் அதின் பலன்களும் நிறைவேறமற்போனால், [1] "மத்தகாஶிந்யா: த்ருஷ்டா தியக்ஷு காமிதா" என்கிற ந்யாயத்தினால் அநிஷ்டபலன்களுக்குக் காரணங்களாகிய ஶாஸ்த்ரங்களினால் விலக்கப்பட்ட உபாயங்களில் மூழ்கிவிடுவார்கள் என்று நினைத்து, மிகுந்த கருணையை உடையவனாகிய நானே அந்தத் தேவதைகளின் ஆராதனங்களுக்குக் காரணமாகிய ஶ்ரத்தைக்குத் தடைகளின் நிவ்ருத்தியையும் அவைகளின் பலன்களையும் கொடுக்கிறேன் என்று இந்த இரண்டு ஶ்லோகங்களினால் சொல்லுகிறார். ஒரு பகவானே, ராமன் க்ருஷ்ணன் முதலிய அவதாரங்களைப்போல ஸூர்யன் முதலிய ஶரீரங்களை அடைகிறாரே யல்லாமல் வேறொரு ஜீவன் இல்லை என்கிற குத்ருஷ்டிகளின் மதத்தை நிராகரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'அந்தத்தேவதைகளும்' என்று ஆரம்பித்து. அதின் கருத்தாவது-முன் ஶ்லோகத்தில் "யேऽந்யதேவதா:"

---

* ப்ருஹதாரண்யகம் 5 - 7.

1 மத்தகாஶிந்யா: - உத்தமமான ஸ்திரீயின், அலாபே-கிடையாமையில், திர்யக்ஷு - மிருகங்களிடத்தில், காமிதா - காமுகனுக இருக்கை, த்ருஷ்டா பார்க்கப்பட்டது.

பா]யம் முதலிய ஶ்ருதிகளினால் சொல்லப்பட்டிருக்கிறது. என்னுடைய ஶரீரம் என்று தான் தெரிந்துகொள்ளாமற் போனபோதிலும் எவனெவன் எந்தெந்த ஸூர்யன் முதலிய என்னுடைய சரீரத்தை ஶ்ரத்தையினால் ஆராதனம் செய்ய விரும்புகிறானோ, அவனவன் தெரிந்துகொள்ளாமலிருந்த போதிலும் இந்த ஶ்ரத்தை என்னுடைய சரீரத்தைப்பற்றியது என்று

---

தா](இதர தேவதைகளை ஆஶ்ரயிக்கிறார்கள்) என்று சொல்லியிருப்பது பகவானுடைய அஸாதாரணவிக்ரஹங்களைப்பற்றியவைகளாகக் கூடிய பகவானைப்பற்றியவைகளைச் சொல்லுகிறது என்பது சரியல்ல; ஏனெனில் அவைகளில் ராமன் க்ருஷ்ணன் முதலியவர்களிடத்தில் போல "அந்யதேவதா:" (இதர தேவதைகளை) என்று சொல்லியிருப்பது பொருந்தாதாகையினால். ஆகையினால் வேறு தேவதைகளைப்பற்றிச் சொல்லுகிறது என்பது அவஶ்யமாக ஒப்புக்கொள்ள வேண்டும். 1 "தேவாந் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி" என்று மேலே சொல்லப்போகிறார். ஆகையினால் இவ்விடத்தில் "தநும்" (ஶரீரத்தை) என்னும் பதமானது கீழ்மேல் ஸந்தர்ப்பங்களை அநுஸரித்து சில ஜீவர்களைச் சொல்லுகிறது என்பது. ஜீவர்களாகிய எல்லாத் தேவதைகளும் பகவானுக்கு ஶரீரம் என்பதைத் தெரிவிப்பதற்காக ஶ்ருதி வாக்யத்தை எடுத்துக் காட்டுகிறார்—எந்தப் பகவான் என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் பகவானுக்கு ஶரீரம் என்று உபாஸனம் செய்வது சொல்லப்படவில்லை. அப்படிக்காகில் 2 ப்ரதர்தநவித்யை முதலியவைகளைப் போலப் பரமாத்மாவைப்பற்றிய உபாஸனம் ஆகிவிடும், 3 "ந து மாமபிஜாநந்தி தத்த்வேந" என்று மேலே சொல்லப்போகிற படியினாலும். என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னுடைய ஶரீரங்கள் என்று தெரிந்துகொள்ளாதபோதிலும்' என்று. ஆகில் 'தநும்' (ஶரீரத்தை) என்று இங்கே சொல்லியிருப்பது பொருந்ாதது அன்றியும் ப்ரயோஜனமற்றதாகவுமாகிறது; "யாம்யாம் தேவதாம்" (எந்தெந்த தேவதையை) என்றல்லவோ சொல்லவேண்டும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அவனவன்' என்று ஆரம்பித்து ராஜாவினுடைய ஜீவாத்மஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் ராஜாவினுடைய ஶரீரத்துக்கு அலங்காரம் முதலியவைகளைச் செய்கிறவனுக்கு ராஜாவினுடைய ஆத்மாவினாலேயே எப்படிப் பலம் கொடுக்கப்படுகிறதோ (அப்படியே இங்கும்). என்கிற ந்யாயத்தைக் காட்டுகிற

---

1 பகவதகீதை, 7, 23

2 உபநிஷத்தில் சொல்லிய 32 ப்ரம்மவித்யைகளிலொன்று. பரமாத்மாவை இந்த்ரனுக்கு அந்தர்யாமியாக உபாஸித்தல் 3 பகவத்கீதை, 9, 24

பா]நான் தெரிந்துகொண்டு அந்தந்த ஶ்ரத்தையையே தடையில்லாத தாய்ச்செய்கிறேன். 21

ஸ தயா ஶ்ரத்தயா யுக்தஸ்தஸ்யாராதநமீஹதே ।
லபதே ச ததः காமாந்மயைவ விஹிதாந்ஹி தாந் ॥ 22

ப-ரை] ஸः-அந்தமனிதன், தயா அப்படிப்பட்ட ஶ்ரத்தயா-ச்ரத்தையோடு யுக்தः-கூடினவனுய், தஸ்ய அ-ந்த த்தேவதையின். ஆராதநம்-ஆராதன, த்தை, ஈஹதே - ஆசைப்படுகிருன், ததः - அந்த ஆராதனத்தினுல், மயைவ-என்னுலேயே,விஹிதாந்-செய்யப்பட்ட, காமாந்-இஷ்டங்களை, லபதே-அடைகிருன். ௨௨

பா] அப்படித் தடையில்லாத ஶ்ரத்தையையுடைய அந்த மனிதன் அந்த இந்த்ரன் முதலிய தேவதையின் ஆராதனத்தைக் குறித்து ஆசைப்படுகிருன்; எனக்கு ஶரீரங்களான இந்த்ரன் முதலிய தேவதைகளின் ஆராதனங்களினுல் தன்னுல் விரும்பப்பட்டவைகளும் என்னுலேயே கொடுக்கப்பட்டவைகளுமான தன்னிஷ்ட பலங்களை அடைகிருன். அவர்கள் ஆராதனம் செய்யும்பொழுது தங்களால் ஆராதிக்கப்படுகிற இந்த்ரன்

---

*தா] படியினுல் "தநும்" என்கிற பதம் மிகவும் பொருத்தமுடையது, என்று தாத்பர்யம். உண்டாகிய ஶ்ரத்தை சலிக்காமல் இருப்பதாவது. ஒரு தடையுமில்லாமல் பலம் கிடைக்கும் வரையிலும் இடைவிடாமல் செய்யப்படுகை, என்கிற அபிப்ராயத்தினுல் 'தடை இல்லாததாய்' என்று சொல்லப்பட்டது.* 21

*இந்த ஶ்லோகத்திலும் ஸ தயா என்னும் பதங்களை ஸஸ: தயா தயா (அவனவன் அந்தந்த) என்று இரட்டித்துச் சொல்லிக்கொள்ள வேண்டியது. தயா(அந்த)என்றது இங்கு பிரஸ்தாவிக்கப்படுகிற அர்த்தத்துக்கு உபயோகமான ஆகாரத்தைக் குறிக்கிறது, என்று தெரியப்படுத்துவதற்காக—'தடையில்லாத' என்று சொல்லப்பட்டது. அந்யதேவதாः என்றும் 'தநும்' என்றும் கீழ் ஶ்லோகங்களில் ஸ்த்ரீலிங்கம் (பெண் பால்) ஆகச்சொல்லியிருக்க இங்கு தஸ்ய என்று பும்லிங்கம் (ஆண் பால்) ஆகச் சொல்லியிருப்பது புத்தியிலிருக்கும் அந்தந்த தேவர்களைக்குறிக்கிறது; 'தேவாந் தேவயஜோயாந்தி' என்றல்லவோ மேலும் சொல்லப்போகிருர், என்கிற அபிப்ராயத்தினுல் 'அந்த இந்த்ரன் முதலிய தேவதையின்' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் தஸ்யாः என்றும் பதம் பிரிக்கலாம், ஆனுலும் ஆ என்னும் உபஸர்க்கமில்லாத ராதநம் என்னும் பதம் ஆராதனத்தை ச்சொல்லுகிறதென்பது ப்ரஸித்த*

பா]முதலியதேவதைகள் என்னுடைய ஶரீரங்கள் என்றும், ஆகையினால் அவர்களுக்குச் செய்யும் ஆராதனங்களும் என்னுடைய ஆராதனங்கள், என்றும் தெரிந்துகொள்ளுகிறதில்லை; ஆனாலும் வாஸ்தவத்தில் அவைகளை என்னுடைய ஆராதனங்களாகையினால் அந்த ஆராதனங்களைச் செய்ப வர்களின் இஷ்ட பலத்தை நானே கொடுக்கிறேன். 22

---

தா]மல்ல, ஆகையினால் அதை அனுஸரிக்கிறது. அன்றியில் தாத்பர்யத் தினாலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறது, [illegible] என்று பதம் பிரிக்கப்பட்டிருக்கிறதாகவுமாம். 'தைஸ்' என்பதைப்பற்றிய வ்யாக்யானம் 'எனக்கு ஶரீரங்களான இந்த்ரன் முதலிய தேவதைகளின் ஆராதனங்களினால்' என்றது. இதின் தாத்பர்யமாவது 'தைஸ்' என்பதற்கு இந்த்ரன் முதலியதேவதைகளினால் என்பதாகும், என்பது உசிதமல்ல, 'மயைவ விஹிதாந்ஹிதாந்' என்று தானே பலம் கொடுக்கிறதாகச் சொல்லுகிறபடியினால். ஆகையினால் தான் பலம் கொடுப்பதற்குக் காரணம் மாத்ரம் இங்கே சொல்லவேண்டியது. ஆகலால், 'தஸ்யாராதநம்' என்று கீழ்ப்பிரதானமாகப் ப்ரஸ்தாவிக்கப்பட்டதையே குறிக்கிறது இது, என்பது. 'ஹிதாந்' என்கிற இதில் 'ஹி' என்பது அவ்யயம். கீழ் எல்லா இடங்களிலும் 'அந்த' என்று சொல்லி இருக்கிறபடியினால் "காமாந்" (இஷ்டபலங்களை) என்கிற இதிலும் "தாந்" (அந்த) என்று சொல்வது உசிதம். பகவான் எல்லா இஷ்டபலங்களையும் கொடுக்கிறார் என்பதைத் தெரிவிக்கிறபடியினால் அவஶ்யம் வேண்டியதாம்; ஹிதங்கள் என்று சொல்வது இந்த ஸந்தர்ப்பத்துக்கு விரோதம். "அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்" என்று அவைகளை நிந்திக்கப்ரவ்ருத்தித்திருப்பதினால், என்கிற அபிப்ராயத்தினால் 'தன்னால் விரும்பப்பட்டவைகளும்' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. உன்னைப்பற்றிய ஞானமில்லாதவனுக்கு நீ எப்படிப் பலம் கொடுக்கிறாய்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக "மயைவ" என்கிற பதத்தின் அபிப்ராயத்தில் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அவர்கள்' என்று ஆரம்பித்து. அவர்களுக்கு முன்னுடைய அனுக்ரஹத்தினாலேயே பலம்கிடைப்பதாக இருந்தால் அப்பொழுது உன்னையே நேரிலுபாஸிப்பவர்களைவிட அவர்களுக்கு என்ன வ்யத்யாஸம் என்கிற ஆக்ஷேபமும் இங்கே ஞாபகப்படுத்தப்பட்டது.

22

அந்தவத்து ஃபலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் |
தேவாந்தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி || 23

ப-உ] அல்பமேதஸாம்- அல்பமான புத்தியையுடைய, தேஷாம்- அவர்களுக்கு, தத்- அந்த, ஃபலம்- ப்ரயோஜனமோவெனில், அந்தவத் - அழிவையுடையதாக, பவதி - ஆகிறது, தேவயஜ:- (இதர) தேவதைகளை ஆராதிப்பவர்கள, தேவாந்- (அந்த) தேவதைகளை, யாந்தி - அடைகிறார்கள், மத்பக்தாஅபி - என்னிடத்தில் பக்தியுள்ளவர்களும், மாம் - என்னை, யாந்தி - அடைகிறார்கள். உ௩

பா] அல்பமான புத்தியையுடையவர்களாய் இந்த்ரன் முதலிய தேவதைகளை மாத்ரம் ஆராதிப்பவர்களுக்கு, அந்த ஆராதனத்தின் பலமானது அல்பமாகவும் அழிவையுடையதாகவு மாகிறது. ஏனெனில் எந்தக் கார

தா] கீழ்ச் சொல்லிய ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்— இந்த ஶ்லோகத்தில். முதல் பாதியில் ஒரே வாக்யமாக இருத்தல் ஸம்பவிக்கிறபடியினால் வாக்யம் வேறு, என்கிற ப்ரமத்தை நிராகரிப்பதற்காக 'அல்பமான புத்தியையுடையவர்களாய்' என்று சேர்த்து அர்த்தம் சொல்லப்பட்டது. 'தேஷாம்' (அவர்களுக்கு) என்றது பலம் அல்பமாவதற்குக் காரணத்தைக் காட்டுகிறது, என்று சொல்லுகிறார்— 'இந்த்ரன் முதலிய தேவதைகளை மாத்ரம் ஆராதிப்பவர்களுக்கு'; என்று. அதற்குக் காரணம் அல்பமான புத்தியை யுடையவர்களா யிருக்கை. 'அல்பமேதஸ:' என்பதற்கு அல்பங்களான இந்த்ரன் முதலிய தேவதைகளிடத்திலும், அவர்களால் கொடுக்கப்படும் பலங்களிலும் புத்தியையுடையவர்கள், என்றர்த்தம். அன்றிக்கே அல்பங்களான வஸ்துக்களைப்பற்றிய தாகையால் அல்பமான புத்தியையுடையவர்கள் என்றுகவுமாம். அல்பமான புத்தியை யுடையவர்களாதலால் அவர்களுடைய பலமும் அல்பம், என்று அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'அல்பமாகவும் அழிவையுடையதாகவும் ஆகிறது' என்று சொல்லப்பட்டது. 'தேவாந்தேவயஜ:' என்கிற இடத்திலிருக்கும் தேவ என்னும் பதமானது [1] கோபலீவர்தந்யாயத்தை அனுஸரித்து இங்கே மேலே 'மத்பக்தா:' என்கிற இடத்தில் 'மத்' என்னும்பதத்தினால்சொல்லப்படுகிற பகவானைத் தவிர மற்ற தேவதைகளைச் சொல்லுகிறது, அன்றிக்கே மனுஷ்யர் முதலியவைகளோடு ஸமமாகச் சொல்லப்பட்ட கர்மங்களுக்கு வசப்பட்ட தேவ ஜாதியைச் சொல்லுகிறதாகவுமாம், என்கிற

1-வர்ல்யம் 270- பக்கம் புட்நோட்டைப் பார்க்கவும்.

பா]ணத்தினல் இந்த்ரன்முதலியதேவதைகளைஆராதிப்பவர்கள் அவர்களை
யே அடைகிறர்களோ இந்த்ரன்முதலிய தேவதைகளும் அளவிடப்பட்ட
போகத்தை உடையவர்களும் ஸ்வல்பகால மிருப்பவர்களுமோ ஆகையி
னல் அவர்களுக்கு ஸமானமான போகத்தை அடைந்தவர்களும் அவர்க
ளுடன் நழுவிவிடுகிறர்கள். அந்தக் கர்மங்களே என்னுடைய ஆராதனங்
கள் என்று தெரிந்துகொண்டு ஸ்வல்பமான பலங்களிலாசையைவிட்டு
என்னை ஸந்தோஷப்படுத்துவதொன்றையே பலமாகக் கொண்டவர்கள்

---

தா]*அபிப்ராயத்தினல்* '**இந்த்ரன்முதலிய**' *என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. இந்த்ரன்முதலியவர்களை அடைவது பலம் அல்பம் என்பதற்கும் அழிவையுடையது என்பதற்கும் எப்படிக் காரணமாகும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறர்*—'**இந்த்ரன் முதலிய தேவதைகளும்**' *என்றாரம்பித்து. அவர்கள் அல்பமான போகத்தையுடையவர்களென்பதும், அழிவையுடையவர்களென்பதும் இருக்கட்டுமே; அதினல் உம்முடைய அனுக்ரஹத்தினல் பலத்தை அடையக் கூடியவர்களாகிய அவர்களை உபாஸனம் செய்பவர்களுக்கென்ன? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறர்*—'**ஆகையினல்**' *என்று ஆரம்பித்து. இந்த்ரன் முதலிய தேவதைகளை மாத்ரம் ஆராதிப்பவர்களுக்கு அவர்களால் விரும்பப்பட்ட அந்த இந்த்ராதிகளின் ஸாயுஜ்யம் முதலிய பலன்களையே பகவான் கொடுக்கிறர், ஸாயுஜ்யமாவது அவர்களுக்கு ஸமானமாகிய போகத்தையுடையவர்களாயிருக்கைதான், ஆதலால் இந்த்ரன் முதலியவர்களின் போகம் அல்பமாயும், கொஞ்சக்காலமிருக்கக் கூடியவைகளாயுமிருக்கிறபடியினல் அதற்கு ஸமானமாகிய அவர்களை ஆராதிப்பவர்களின் போகமும் அப்படிப்பட்டதாகவே இருக்கும், என்று தாத்பர்யம். 'ஸாம' என்று சொல்லப்பட்ட பகவானுடைய ஸ்வரூபம் எல்லையில்லாத ஆனந்தமயமாகையினல் அவனுக்கு ஸமமாக இருக்கையை அடைந்தவனுக்கும் எல்லையில்லாத போகத்தையுடையவனாக இருக்கை ஏற்பட்டிருக்கிறது. 1'போகமாத்ரஸாம்யலிங்காச்ச' என்று ஸூத்ரம் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த பகவான் அழிவில்லாதவனானபடியினலே அவனை உபாஸனம் செய்தவர்களின் போகமும் அழிவில்லாதது என்பதைக்*

---

1 *சாரீரகஸூத்ரம்* 4-4-21 *முக்தனுக்கு போகம் மாத்திரம் பகவானேடு ஸமம் என்கிறதினல் ஜகத்ஸ்ருஷ்டி முதலியதில்லை யென்றர்த்தம்.*

பா] என்னை அடைகிறார்கள் மறுபடியும் திரும்புகிறதில்லை ‡ 'மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே' என்றல்லவோ மேலே சொல்லப்போகிறது 23

மற்றவர்களோ வெனில் எல்லோரும் ஆஶ்ரயிக்க வேண்டியதற்காக நான் மனுஷ்யன் முதலியவர்களிடம் அவதாரம் செய்திருப்பதையும் ப்ரயோஜன மற்றதாகச்செய்து விடுகிறார்கள்,—

**அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபுத்தய: |**
**பரம் பாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம் ||** உச

தா] காட்டுகிறார்—'மறுபடியும் திரும்புகிறதில்லை' என்று. இவ்விடத்தில் அபிப்ராயத்தில் கொண்டிருக்கும் அர்த்தத்தை மேலே சொல்லப்போகிற வாக்யத்தினால் விளக்குகிறார்—'மாமுபேத்ய' என்றாரம்பித்து. இந்த விஷயத்திலும் 1 'அநாவ்ருத்தி: ஶப்தாத் அநாவ்ருத்தி: ஶப்தாத்' என்று ஸூத்ரம் சொல்லப்பட்டிருக்கிறது. 'உதாரா: ஸர்வ ஏவைதே' என்கிற இடத்தில், பகவானிடத்தில் வேறு பலங்களை ப்ரார்த்திக்கிறவர்களுக்கும் கடைசியில் மோக்ஷத்தில் முடிவுண்டாகும் என்பது, 'அப்படியே இதர தேவதைகளிடத்தில் பக்தி செய்பவர்களுக்குத் தங்களிஷ்ட வஸ்துக்கள் கிடைப்பதே பலம், பகவானிடத்தில பக்தி செய்கிறவர்களுக்கோவெனில் அவ்வளவு மாத்ரம் பலமல்ல; பின்னை யெதெனில் தன்னை விரும்பப்படாமலிருந்தாலும் ஸ்வபாவத்தினாலேயே பாபங்கள் நாசமடைகிறபடியினாலும் ஸத்வ குணம் அதிகமாய் வ்ருத்தியடைகிறபடியினாலும் பரீக்ஷித்தங்களான தர்மங்களில் ஶ்ரத்தை யுண்டாகிறபடியினால் மெள்ள மெள்ள ஞானம் வைராக்யம் இவைகளுண்டாய் அவைகளின் வழியாய் முன்பு சொல்லிய விசேஷமான பக்தியுண்டாகிறபடியினால் வெகுகாலம் கழிந்தபின்பாவது பகவானை யடைவதாகிய பலம் கிடைத்து விடுகிறது; ஆகையால் அவன் அழிவில்லாத பதத்தை அடைந்தவனாகிறான் என்பது அபிப்ராயம்' என்று நாராயணார்யரால் சொல்லப்பட்டது. இந்த அர்த்தம் பராண்டில்ய ஸம்ஹிதையில் பாகவதாபசாரத்தைச்சொல்லுமிடத்தில், 3 'மஹாவநம் ஸமாஶ்ரித்ய ததேகஶரணா நரா: | க்ஷீணாவித்யா லபந்தே ச காலக்ரமாதா கதிம்' என்று சொல்லப்பட்டது. 23

‡ பகவத்கீதை 8 - 16

1 சாரீரகஸூத்ரம் 4-4-22 (முக்தனுக்கு அநாவ்ருத்தி: திரும்பிவாராமை சப்தாத்: சருதி வாக்யத்தினால் ஏற்படுகிறது.

ப-ரை] அபுத்தய:-புத்தியில்லாதவர்கள், மம என்னுடைய, அவ்யயம் அழிவில்லாத, அநுத்தமம் இதற்குமேலுயர்ந்த தோன்றில்லாத, பரம் உயர்ந்ததான, பாவம் ஸ்வபாவத்தை, அஜாநந்த: அறியாதவர்களாய் மாம் என்னை, அவ்யக்தம் இதற்கு முன்னுற்பத்தியை அடையாதவனாகவும் (கர்மவஶத்தினால்), வ்யக்திம் உற்பத்தியை, ஆபந்நம் அடைந்தவனாகவும் மந்யந்தே என்னுகிறார்கள். 24

பா] என்றுசொல்லுகிறார். எல்லாக்கர்மங்களினாலும் ஆராதிக்கத்தக்கவனாயும் எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனாயும்வாக்கினாலும்மனஸினாலும்அளவிடக்கூடாதஸ்வரூபம்ஸ்வபாவம் இவைகளைஉடையவனாகவுமிருக்கிற நான் மிகுந்த கருணையினாலும் ஆஶ்ரயித்தவர்களிடத்தில் ப்ரீதியினாலும் எல்லோராலும் ஆஶ்ரயிக்கத் தகுந்தவனாவதற்காக என்னுடைய ஸ்வபாவங்

---

தா] வேறு பலங்களிலும் வேறு தேவதைகளிடத்திலுமுண்டான வாஸனையினாலல்லவோ உம்மைபபற்றிய ஞானம்தடுக்கபபடுகிறது என்று சொல்லப்பட்டது. உம்மை நேரில் பாராமலிருந்தாலல்லவோ அது பொருந்தும் நீர் கருணைமுதலிய குணங்களினால் ஏவப்பட்டவராய் எல்லோராலு மாஶ்ரயிக்கத்தகுந்தவனாவதற்காக அவதாரங்களைச் செய்து எல்லா ஜனங்களுடையவும் கண்களுக்கும் பார்க்கத்தகுந்தவனாக நிற்கும்பொழுது எபபடி உம்மை விடுதல் ஸம்பவிக்கும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் இந்த ஶ்லோகம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்---'மற்றவர்களோ வெனில்' என்று ஆரம்பித்து. 'இதரெ' (மற்றவர்கள்) என்பதற்குக் கீழ்ச்சொல்லிய நான்குவகைப்பட்டபுண்யஶாலிகளைவிடமற்றவர்கள் என்று அர்த்தம். "பரம்பாவம்" என்பதினால் அபிப்ராயத்தில்கொள்ளப்பட்ட எல்லையில்லாத மேன்மை ஸௌலப்யம்இவைகளாகிறஸ்வபாவங்களைக்காட்டுகிறார்.--'எல்லாக்கர்மங்களினாலும்' என்று ஆரம்பித்து,'அவதரித்திருக்கிறேன்' என்பதுவரையாக. 'என்னுடையஸ்வபாவங்களைவிடாதவனாய்'என்பது"அவ்யயம்"என்னும் பதத்தின்அபிப்ராயத்தி லிருக்கும் அர்த்தத்தைச்சொல்லியிருக்கிறது. இதைவிட உயர்ந்ததில்லைஆகையினால் "அநுத்தமம்" என்று சொல்லப் படுகிறது. அதாவது எல்லையில்லாத மேன்மையை உடையது என்று அர்த்தம். இவ்விடத்தில் "அவ்யக்தம்,வ்யக்திமாபந்நம்" என்கிற பதங்களின் ஸாமர்த்தியத்தினால் அவதாரங்களைச் சொல்லுகிறது என்பதும், அதிலும் "மாம்" என்கிற பதத்தின் பொருத்தத்தினால் க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகிறதென்பதும் ஏற்பட்டது, [என்று அபிப்ராயத்தில்

பா]களைவிடாதவனாய்வஸுதேவருக்குமகனாய்அவதரித்திருக்கிறேன்.என்றிப்படிப்பட்ட அழிவற்றஇதற்குமேலுயர்ந்த தோன்றில்லாத உத்தமமான ஸ்வபாவத்தைத்தெரிந்து கொள்ளாதவர்களாய் ஸாதரணமான ராஜாக்களின் குமாரர்களுக்கு ஸமமானவனாகவும் இதற்கு முன் ப்ரகாஶத்தை அடையாமலிருந்து இப்பொழுது கர்மவஶத்தினால் ஒருவகை ஜன்மத்தை அடைந்து ப்ரகாஶத்தை அடைந்தவனாகவும், என்னைப் புத்தியில்லாதவர்கள் எண்ணுகிறார்கள் ஆகையினால் என்னை ஆஶ்ரயிக்கிறதில்லை. கர்மங்களினால் என்னை ஆராதிப்பதுமில்லை. 24

---

தா] வைதந்நக்கொண்டு 'வஸுதேவருக்குக் குமாரனாக அவதரித்திருக்கிறேன்' என்றும், 'ஸாதாரணமான ராஜாக்களின் குமாரர்களுக்கு ஸமமானவனாகவும்' என்றும்சொல்லப்பட்டது. அன்றிக்கே இதுஎல்லாஅவதாரங்களையும் குறிக்க வேண்டியபதற்காக விஶேஷமான அவதாரத்தை உதாஹரணமாகச் சொல்லியிருப்பது மாத்திரமாகவுமாம். ''அவ்யக்தம்,வ்யக்திமாபந்நம்'' என்கிற இரண்டு பதங்களும் வெவ்வேறு அர்த்தங்களைச் சொல்லுகின்றன என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்.—'ஸாதாரணமான' என்று ஆரம்பித்து. அல்பமான புத்தியை யுடையவர்களால் அறியத் தகுந்ததா யிருக்கிறபடியினால் இவ்விடத்தில் நிந்திக்கப்படுகிற அர்த்தம் இதுவாகத்தான் இருக்க வேண்டும், என்று தாத்பர்யம். இதற்கு முன் ப்ரகாசமாகாமலிருந்த நம் இப்பொழுது அவதாரத்தினால் பரகாசமாக இருத்தலும் ப்ரமாணங்களால் ஏற்பட்டது; ஆகையினால் அது எப்படி இங்கே நிராகரிக்கப்படுகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம். 'கர்மவசத்தினால் ஒருவித ஜன்மத்தையடைந்து' என்று சொல்லப்பட்டது. 1 உத்ஸர்காபவாதந்யாயத்தை அநுஸரித்து இங்கே அர்த்தத்தைச் சுருக்கிச் சொல்லவேண்டும். என்று தாத்பர்யம் 'அவ்யயம்' என்பதினால் பரமாத்மா அவனுடைய அவதாரம் முதலியவைகளைப் பற்றிக் கேழ்ப்பதும் அதை நினைப்பதும் இல்லை என்பதும், அவைகளின் மேன்மையைத் தெரிவிக்கக் கூடிய அடையாளங்களைப் பார்த்தாலும் அதை ஊஹித்தறியக் கூடிய பக்தி யில்லாமையும், சொல்லப்படுகிறது. ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்---'ஆகையினால்' என்றாரம்பித்து. ஆஶ்ரயிப்பதாவது இவ்விடத்தில் ப்ரபத்தியை முன்னிட்டு பக்தி செய்கிறது அதில்லாமையினால் அதற்கங்கமாகிய வர்ணாஶ்ரம தர்மங்களையும், ஸ்தோத்ரம் நமஸ்காரம் முதலியவைகளையும் செய்கிறதில்லை, என்று சொல்லுகிறார்—'கர்மங்களினால்' என்றாரம்பித்து. 24

---

1 முதல்வால்யூம் 9-வது பக்கம் புட்நோட் பார்க்கவும்.

பா] இவ்விதமாக ஏன் ப்ரகாசமாகிறதில்லை? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்.—

*நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத: |*
*மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ||* உரு

ப-ரை] யோகமாயாஸமாவ்ருத: (தேவன் மனுஷ்யன் என்று சொல்லப்படுகிற சரீரங்களைப் போன்ற அவயவங்களின் சேர்க்கையை யுடைய தேகங்களின்) சேர்க்கையாகிய மாயையினால் மறைக்கப்பட்டிருக்கிற, அஹம் நான், ஸர்வஸ்ய எல்லா ஜனத்துக்கும், ந ப்ரகாச: ப்ரகாசமாவதில்லை, (ஆகையால்) மூட: தெரியாத, அயம் இந்த, லோக: ஜனம், மாம் என்னை, அஜம் பிறப்பில்லாதவனாகவும், அவ்யயம் அழிவில்லாதவனாகவும், ந அபிஜாநாதி தெரிந்து கொள்ளுகிறதில்லை. 25

பா] ஜீவாத்மாக்களுக்கு அஸாதாரணங்களான மனுஷ்யனாயிருக்கை முதலிய அமைப்புடன் சேர்ந்திருக்கை என்று பேருடைய மாயையினால் மறைக்கப்பட்டிருக்கிற நான் எல்லோருக்கும் ப்ரகாசமாவதில்லை

தா] ஒருவராலும் தடுக்கப்படாத ஸங்கல்பத்தையுடையவர் ஸங்கல்பித்து எல்லோராலும் ஆச்ரயிக்கத்தகுந்தவனாகப் போகாக அவதரித்தீரோயாகில் ஏன் அதற்கு ப்ரயோஜனம் உண்டாகவில்லையென்று ஆக்ஷேபிக்கிறான்—'இவ்விதமாக' என்று ஆரம்பித்து. இதில் மாயாசப்தம் விசித்ரங்களான கார்யங்களை உண்டாக்குகிற வஸ்துவைச் சொல்லுகிறது, என்று முன்னமே நிரூபிக்கப்பட்டது. முன் குணங்களுடைய ப்ரக்ருதியினால் மறைக்கப்பட்டிருக்கையே வெளியில் பாதமாக அவதாரதசை இவை இரண்டுக்கும் பொது. அவதாரதசைக்கு மாத்ரம் அஸாதாரணமானமறைவுக்குக் காரணம் சொல்லுவது உசிதம், ஸங்கல்பம் முதலியவையோ வெனில் முன்போலவே இரண்டுக்கும் ஸாதாரணம்; யோக என்னும் பதமும் ஸம்பந்தம் என்னும் அர்த்தத்தில் அதிகமாக ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறபடியினால் அந்தயே சொல்லத்தக்கது அப்படி ஸம்பந்தப்பட்டதும் இந்த ஸந்தர்ப்பத்திலேற்பட்டது. அதாவது இவ்விடத்தில் உசிதமாகையினாலும் வேறு இடங்களில் ப்ரஸித்த மாகையினாலும் மனுஷ்யன் முதலிய அமைப்பு, வேஷம், பாஷை முதலியவைகளே. இதனாலேயே இந்த்ரஜாலமாகிய மாயை இல்லை என்பதும் ஏற்பட்டது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மனுஷ்யனாயிருக்கை முதலிய' என்று. 'ப்ரகாசமாவதில்லை' என்பதுடன் பரமாத்மாவின் ஸ்வபாவத்துடன் என்று சேர்த்துக் கொள்ளவும். இப்படியாகில் இந்தக் குற்றம்

பா] என்னிடத்தில் மனுஷ்யனு யிருக்கை முதலிய அமைப்பைப் பார்த்த மாத்திரத்திஞலே மூடமான இந்தலோகமானது இந்த்ரன் வாயுஇவர்களை விட மேலான கார்யத்தைச்செய்துக்கொண்டிருந்தாலும் ஸூர்யன் அக்னி இவர்களைவிட மேலான தேஜஸ்ஸையுடைவனுக யிருந்தாலும் பிறப் பில்லாதவனுகவும், அழிவில்லாவனுகவும், எல்லா லோகங்களுக்கும்

---

தா] உம்முடையது தான் என்கிற கேள்விக்கு பதில் சொல்லுகிருர்—'மூடமான'என்ருரம்பித்து எல்லோராலும் அடையத்தகுந்தவனுவதற் காக ஆங்கீகரிக்கப்பட்ட மனுஷ்யாவதாரம்முதலியது கெட்டபுத்தியுடை யவர்களுக்கு விடுவதற்குக் காரணமாயிற்று. பரமாத்மாவின் ஸ்வபா வம் முழுமையும் மறைக்கப்படவுமில்லை, லோகத்தில் கண்டறியாத கார்யங்கள் தேஜஸ்ஸு முதலியவைகளை ப்ரகாசம் செய்துகொண் டிருக்கிறபடியினுல்; ஆனுல் மூடமான இந்த லோகமானது சிலபாகங் களில் மாத்ரமாயிருப்பதிஞலே மேகங்களால் மறைக்கப்பட் டிருக்கிற ஸூர்யனை மினுமினும் பூசசி என்று ப்ரமிக்கிறது, என்கிற அபிப்ரா யத்திஞல் சொல்லுகிருர்-'என்னிடத்தில்' என்ருரம்பித்து.'மூடமான' என்பதற்கு என்னிடத்தில் மனுஷ்யன் என்கிற ப்ரமத்தை யுடைய தென்றர்த்தம். "மாம்" (என்னை) என்று அப்பொழுது காணப்படுகிற ஆகாரத்தைச் சொல்லி யிருப்பதின் சக்தியிஞலும் வேறு இடங்களில் சொல்லப்பட் டிருக்கிறபடியிஞலும் 'வாயு இந்த்ரன் இவர்களைவிட மேலான கார்யத்தைச் செய்துகொண் டிருந்தாலும்' என்றிவை முதலி யது சொல்லப்பட்டது. பரதசையிலிருக்கும் ஸ்வபாவத்தைத் தெரிந் து கொள்ளாமை எல்லோருக்குமே உள்ளதல்லவா; இவ்விடத்திலோ வெனில் 'பரம் பாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம்' என்று மனுஷ்யனு யவதரித்திருக்கும் பொழுதே யிருக்கும் மேன்மையைத் தெரிந்து கொள்ளாமை சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் இல்லை என்று சொல் லப்படுகிற ஜ்ஞானம் உண்டாவதற்குக் காரணமான அடையாளங் களைச் சொல்லியிருக்கிறது. எல்லையில்லாத ப்ரகாசத்தையுடையவனு யிருக்கை ஜகத்திற்குக் காரணமாகிய பரமாத்மாவின் ஸ்வபாவம்என்று வேதாந்தங்களில் நிஶ்சயிக்கப்பட் டிருக்கிறது. வாயு இந்த்ரன் இவர் களைவிட மேலான கார்யத்தைச்செய்துகொண்டிருத்தலும் எல்லாவற் றையும் நியமிக்கிறவனுயிருக்கைக்கு அடையாளம். 'அஜம்'என்பதிஞல் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிருர்---'எல்லாலோகங்களுக்கும்

பா] ஒரேகாரணமாகவும், எல்லாவற்றிற்கும், ஈஶ்வரனாகவுமிருக்கிற நான் எல்லோராலும் ஆஶ்ரயிக்கத் தகுந்தவனாதற்காக மனுஷ்யனாயிருக்கை முதலிய அமைப்பை அடைந்திருக்கிறேன் என்று தெரிந்துகொள்ளுகிற தில்லை. 25

**வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந |**
**பவிஷ்யாணி ச பூதாநி மாம் து வேத ந கஶ்சந ||** உசு

ப-ரை] அர்ஜுந அர்ஜுநா, அஹம் நான், ஸமதீதாநி முன்னிருந்தவை களும், வர்த்தமாநாநி இப்போழுதிருந்து கொண்டிருப்பவைகளும், பவிஷ்யாணிச இனிவரப்போகிறவைகளுமான, பூதாநி ப்ராணிகளை, வேத அறிகிறேன், மாம் து என்னையோவெனில், கஶ்சந ஒருவனும், நவேத அறியவில்லை. 26

பா] முன்னிருந்தவைகளும் இப்பொழுது இருப்பவைகளும் இனி உண்டாகப் போகிறவைகளுமான எல்லாப் பிராணிகளையும் நான் தெரிந்து கொள்ளுகிறேன், என்னையோ வெனில் ஒருவரும் தெரிந்து கொள்ள வில்லை, என்னால் அறியப்படுகிற மூன்று காலங்களிலுமிருக்கிற ப்ராணிக

தா] ஒரே காரணமாகவும்' என்று "அவ்யயம்' என்றதினால் நினைத்த அர்த்தத்தை சொல்லுகிறார் 'எல்லாவற்றிற்கு மீஶ்வரனாகவும்' என்று. அழிவில்லாதவனாயிருக்கையாவது ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் மாறுதலில்லாதவனாயிருக்கை யல்லவா, இதனால் [1]அஜோபிஸந் நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோபிஸந்' என்று முன்பு சொன்னது ஞாபகப்படுத்தப் பட்டதாகவுமாம். பிறப்பில்லாதவனாகவும், அழி வில்லாதவனாகவும் தெரிந்து கொள்ளுகிறதில்லை. பின்னை எப்படி என் னில், மற்றப்புருஷர்களைப்போலவே கர்மத்துக்கு வசப்பட்ட பிறப்பை யுடையவனாகவும், ஞானத்தின் சுருக்கம் முதலியவைகளையுடையவனா கவும் அறிகிறார்கள். என்று தாத்பர்யம். 25

தா] கீழ் ஶ்லோகம் 'நாபிஜாநாதி' (தெரிந்து கொள்ளுகிறதில்லை) என்று இவ்வளவு மாத்ரம் சொல்லியிருக்கிறபடியினால் இப்பொழுதிரு ப்பவர்களை மாத்ரம் சொல்லுகிறது என்று ஸந்தேஹப்படவேண் டாம் மூன்று காலங்களிலு மிருக்கிற ப்ராணிகளும் என்னைத் தெரிந்து கொள்ளுவதில்லை என்று இந்த ஶ்லோகத்தினால் சொல்லப் படுகிறது. இதில் 'ஸமதீதாநி' (முன்னிருந்த) என்று தனித்துச் சொல்லப்பட்டிருக்கிற படியினால் 'பூதாநி' என்பது ப்ராணிகளை மாத்திரம் சொல்லுகிறது. தான் எல்லாவற்றையும் தெரிந்து கொண்

1 பகவத்கீதை 4-6.

னுக்குள், இப்படிப்பட்ட வென்னை எல்லோராலும் ஆஶ்ரயிக்கத் தகுந்த வனுவதற்காக வஸுதேவர் மகனுப் அவதாரம் செய்திருப்பவனுய்த் தெரிந்துகொண்டு என்னையே ஆஶ்ரயிக்கிறவன் ஒருவனும் கிடைக்க வில்லை ஆகையால் ஞானீ மிகவும் துர்லபன் தான் என்றார்த்தம். 26

அப்படியல்லவா

**𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।**
**𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌂 𑌸𑌰𑍍𑌗𑍇 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥ ௨௭**

ப-ரை] 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 சத்துருக்களைக் கொல்லும் ஸ்வபாவமுள்ள, 𑌭𑌾𑌰𑌤 பரதவம்ஶத்திற் பிறந்த அர்ஜுன, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 எல்லாப்ராணிகளும், 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨—𑌇𑌚𑍍𑌛𑌾 ஆசை, 𑌦𑍍𑌵𑍇𑌷 விரோதம், (இவைகளினுல்) 𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 உண்டாகிய, (அதாவது) ஆசைக்கும் த்வேஷத்துக்கும் விஷயமாகத் தோன்றுகிற, 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑍇𑌨—𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵 சீதோஷ்ணம் முதலிய இரட்டைகளாகிய, 𑌮𑍋𑌹𑍇𑌨 அஜ்ஞாநத்திற்குச் காரணமான வஸ்துவினுல், 𑌸𑌰𑍍𑌗𑍇 ஸ்ருஷ்டி காலத்திலேயே 𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌂 அஜ்ஞானத்தை, 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 அடைகிறதுகள். 27

பா] ஆசை த்வேஷம் இவைகளினுலுண்டாகிற சீதோஷ்ணம் முதலிய "இரட்டை" என்கிற பெயரை உடைய அஜ்ஞானத்துக்குக் காரணமாகிய வஸ்துவினுல் எல்லாப்ராணிகளும் உண்டாகிற பொழுதே அஜ்ஞானத்தை அடைகின்றன. இத்தால் சொல்லப்பட்டது யாதெனில் ஸத்வாதி

---

தா] டவன் என்பது இங்கே எதற்காகச் சொல்லப்படுகிறது,' என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்; 'என்னுல்' என்றாரம் பித்து. அந்தப்பகவானை அறிவதற்குபலம் அவனையே ஆஶ்ரயிப்பதுதான் என்று காட்டுவதற்காக 'என்னை ஆஶ்ரயிக்கிறவன்' என்று சொல்லப் பட்டது. முக்யமாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்த்தத்தோடு சேர்க்கிருர் 'ஆகையினுல்' என்றாரம்பித்து 26

இப்படி ஜ்ஞாநி துர்லபன் என்பதற்காக மூன்று காலங்களிலுமிருக்கும் எல்லா ப்ராணிகளுக்கும் பொதுவான பகவானை அறியாமைக்குக் காரணம் இந்த ஶ்லோகத்தினுல் சொல்லப்படுகிறது. என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்.—'அப்படி அல்லவா' என்று. பதங்களுக்கு அர்த்தத்தையும் அன்வயத்தையும்காட்டுகிருர்.-'ஆசைத்வேஷம்' என்று ஆரம்பித்து. உண்டாகும் காலத்திலேயே ஆசைத்வேஷமிவைகள், காரணமில்லாமையினுல் உண்டாகாது அப்படிக்கு உண்டானுல் ஏன் அவைகள் பகவானைப்பற்றி உண்டாகக்கூடாது, ஆசைத்வேஷமிவைகள் மாத்திரத்தினுலேயே சீதோஷ்ணங்கள் உண்டாகாதே? எனெனில்

குணங்கள் நிறைந்த ஸுக துக்கம் முதலிய இரட்டைகளில் பூர்வ பூர்வ ஜன்மங்களில் எந்த எந்த விஷயங்களைப்பற்றிய ஆசாத்வேஷங்கள் அடிக்கடி பரிசயம் செய்யப்பட்டதுகளோ அதின் வாஸனையினால் மறுபடி உண்டாகும் பொழுதே அந்த இரட்டையே ஆசைக்கும் த்வேஷத்துக்கும் விஷயமாக ப்ரகாசித்துக் கொண்டு எல்லாப்ராணிகளுக்கும் மயக்கத்திற்குக் காரணமாகிறது அந்த மயக்கத்தினால் எல்லா

---

தா] அவை குளிர்காலம் வெய்யிற்காலம் முதலிய நன்மைகள் தீமைகள் காரணத்தினால் உண்டாகக்கூடியவைகள் ஆகையினால், இந்த இரட்டை மோஹம் என்கிற பதத்திற்கு எப்படி அர்த்தமாகும் அப்படியானால் மோஹத்தினால் மோஹத்தை அடைகின்றன என்று சொல்லத்தக்கமாகிறபடியினால் ஆத்மாச்ரயம், என்கிற தோஷம் வருமே? ஆசைத்வேஷங்களே "த்வந்த்வ" என்கிற பதத்தினால் சொல்லப்படுகிறது அவைகளிலுண்டாகும் மோஹம், த்வந்த்வமோஹம், என்னப்படுகிறது, என்றிவை முதலாக மற்றவர்கள் வ்யாக்யானம் செய்திருப்பதும் புனருக்தி முதலிய தோஷங்கள் வருகிறபடியினால் சரியல்ல. இத்தால் எனக்கு ஸுகமுண்டாகவேண்டும் துக்கமுண்டாகக் கூடாது என்கிற உறுதியான ஆசைத்வம் த்வந்த்வமோஹம், என்னப்படுகிறது, என்பதும் உசிதமல்ல, என்றிவைமுதலிய ஆக்ஷேபங்களை பரிஹரிக்கும்படி வ்யாக்யானம் சொல்லுகிறார்.—'இத்தால் சொல்லப்பட்டது யாதெனில்' என்று ஆரம்பித்து. பூர்வ ஜன்மத்திலுண்டான வாஸனை என்கிற காரணம் இருக்கிறது. வாஸனையும் தன்னுடைய காரணமான [illegible] அதைப்பற்றியே இருக்குமாகையினால் ஆசை த்வேஷாதிகளுக்கு காலத்தோடு சேர்தல் பிரிதல் இவைகளைப்பற்றி உண்டாகட்டுமே என்கிற கேள்விக்குமிடமில்லை. இவ்விடத்திலுண்டாகும் ஆசை த்வேஷம் இவைகளுக்கு விஷயமாக ப்ரகாசித்தல் 'மோஹம்' என்னும் பதத்திற்கு மோஹத்திற்குக் காரணமான என்று அர்த்தம். இதனால் சீதோஷ்ணம் முதலிய இரட்டைகளில் மோஹம் என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. மோஹத்தின் காரணத்தினால் மோஹமுமுண்டாவதில் ஆத்மாச்ரயம் முதலிய தோஷங்களுமில்லை, என்று தாத்பர்யம். அனுபவிக்கத்தகாத வஸ்துவில் இது அனுபவிக்கத்தகுந்தது என்கிற புத்தியும், த்வேஷம் செய்யத்தகாத வஸ்துவில் இது த்வேஷம் செய்யத்தக்கது என்கிற புத்தியும் இவ்விடத்தில் மோஹம் என்னப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—

பா] ப்ராணிகளும் அஜ்ஞானத்தை அடைகின்றன. அதாவது, அவைகளைப் பற்றிய ஆசைத்வேஷம் இவைகளை ஸ்வபாவமாக உடையவைகளா கின்றன. என்னோடு சேருதல் பிரிதல் இவைகளினால் ஸுக துக்கங்களை அடையும் ஸ்வபாவங்களை உடையவைகளாகஆகிறதில்லை. ஜ்ஞானியோ வெனில் என்னோடு சேர்தல் பிரிதல் இவையொன்றினாலேயே ஸுக துக்கங்களை அடையும் ஸ்வபாவத்தை உடையவன். ஒரு ப்ராணியும் இப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளதாக உண்டாகிறதில்லை என்பது 27

**யேஷாம் த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம்|**
**தே த்வந்த்வமோஹநிர்முக்தா: பஜந்தே மாம் த்ருடவ்ரதா:|| 28**

ப-ரை] புண்யகர்மணாம் புண்ய கர்மங்களை உடைய, யேஷாம் எந்த, ஜநாநாம் ஜனங்களுக்கு, பாபம் பாபமானது, அந்தகதம் குறைவைஅடைந்ததோ, தே அவர்கள் த்வந்த்வமோஹநிர்முக்தா: இரட்டைகளினாலுண்டாகும் மோஹத்திலிருந்து விடுபட்டவர்களாய், த்ருடவ்ரதா: உறுதியான ஸங்கல்பத்தை உடையவர்களாய், மாம் என்னையே பஜந்தே அடைகிறார்கள். 28

பா] எவர்களுக்கு அனேக ஜன்மங்களில் செய்யப்பட்ட சிறந்த புண்ணியங்களின் கூட்டத்தினால் துணமயங்களான இரட்டைகளில்

---

தா] அவைகளைப்பற்றிய' என்று ஆரம்பித்து. இப்படிப்பட்டவைம் மோஹத்தினால் ஆசை த்வேஷம் இவைகள் நேரில் உசிதமான விஷயத்தை விட்டு விடுகிறது, என்று காட்டுகிறார்—'என்னோடு சேர்தல்' என்று ஆரம்பித்து. உசிதமான விஷயத்தில் ஆசையும் த்வேஷமுமுடைய மிகவும் துல்லபனான ஜ்ஞானி இவர்களை விட வேறுபட்டவன் என்று காட்டுவதற்காக நிரூபிக்கிறார்—'ஜ்ஞானியோவெனில்' என்று ஆரம்பித்து [1] "ஜ்ஞாநீ து பரமைகாந்தீ ததாயத்தாத்மஜீவந:| தத்ஸம்ஶ்லேஷவியோகைகஸுகது:க: ததேகதீ: ||" என்று ஸங்க்ரஹத்தில் சொல்லியிருக்கிறது இவனைவிட வேறுபட்டிருக்கையே எல்லாப் பிராணிகளுக்கும் பிறப்பிலேற்பட்டது, என்று காட்டுகிறார்— இப்படிப்பட்ட' என்று ஆரம்பித்து. 27

இப்படி எல்லா ப்ராணிகளும், அஜ்ஞானத்தை அடைகிறதேயானால் பகவானைப் பற்றிய உபாஸனம் ஒருபொழுதும் ஒருவனுக்கும் உண்டாகாதாகையினால "சதுர்விதா பஜந்தே மாம்" என்றிவை முதலாகக் கீழ்ச் சொன்னது பொருந்ாதே? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமா

---

1 கீதார்த்த ஸங்க்ரஹம் 29 ஶ்லோகம்.

பா]ஆசைக்கும் த்வேஷத்துக்கும் காரணமாயும் என்னிடத்தில் ப்ரீதிக்குத் தடங்கலாயும் அநாதிகாலமாக உண்டானதாயு மிருக்கிற பாபம் குறைவை அடைந்ததோ, அவர்கள் கீழ்ச் சொல்லிய புண்ணியங்களின் தாரதம்மியத்தினால் என்னையே சரணமாக அடைந்து, குணமயங்களான மோஹத்திலிருந்து விடுபட்டவர்களாய்க் கைவல்யத்திற்காகவும் சிறந்த

---

தா]தானம் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. 'புண்யகர்மணாம்' (புண்ணிய கர்மங்களை உடைய) என்பது பாபம் நிவ்ருத்தியாவதற்குக் காரணத்தைச் சொல்லுகிறது. "தர்மேண[1] பாபமபநுததி" (தர்மத்தினால் பாபத்தைப் போக்குகிறான்" என்று ச்ருதியிலும் ஸ்ம்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. "ஜநாநாம்" (ஜனங்களுக்கு) என்கிற பதமும் புண்ணியமதிகமாவதற்குக் காரணமான அநேக ஜன்மங்களைக் காட்டுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'அனேக ஜன்மங்களில் செய்யப்பட்ட சிறந்த புண்ணியங்களின் கூட்டத்தினால்' என்று சொல்லப்பட்டது. பகவானை அறிவதற்குத் தடையான பாபங்களை நிவ்ருத்தி செய்வதினால் அவை சிறந்தவை என்பது சொல்லப்பட்டது. 'குணமயங்களான' என்னும் பதத்தினால் ஸுக துக்கங்களான பகவானுடன் சேர்தல் பிரிதலாகிய இரட்டை விலக்கப்பட்டது. "த்வந்த்வமோஹநிர்முக்தா:" என்று இருவகையான பலன்களைச் சொல்லுகிற படியினால் தடையான பாபத்தினும், இரட்டைகளில் ஆசை த்வேஷங்கள் இவைகளுக்குக் காரணமான தென்றும், பகவானிடத்தில் ப்ரீதிக்குத் தடையான தென்றும் பேதம் காட்டப்பட்டது. அநேக ஜன்மங்களில் செய்யப்பட்ட சிறந்த புண்ணியங்களினால் நாசம் செய்யத் தகுந்தது என்று தெரிவிப்பதற்காக 'அநாதிகாலமாக உண்டானதாயு மிருக்கிற' என்று சொல்லப்பட்டது. உபாஸனம் செய்ய ஆரம்பிக்கும் பொழுதே பாபமும் ஸுக துக்கங்களாகிய இரட்டையும் முழுமையும் நாசமடைவதில்லையாதலினால் "அந்தகதம்" என்னும் பதத்தினால் கொஞ்சம் மிகுதியாக இருத்தல் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'குறைவை அடைந்ததோ' என்று சொல்லப்பட்டது. கீழ்ச் சொல்லிய "[illegible]" என்றிவை முதலியவைகளையும் நினைத்துக்கொண்டு சொல்லப்போகிற "ஜராமரணமோக்ஷாய" என்றிவை முதலியவைகளையும் நினைத்துக் கொண்டு சொல்லுகிறார்— 'கீழ்ச் சொல்லிய' என்று. இவ்விடத்தில் ஸுகதுக்கங்களாகிற மோஹத்திலிருந்து விடுபட்ட

---

1 தைத்திரீயம் நாராயணம் 50 அனுவாகம்.

பா]ஐஶ்வர்யத்திற்காகவும், என்னை அடைவதற்காகவும் உறுதியான ஸங்கல்பத்தை உடையவர்களாய்க் கொண்டு, என்னைக் குறித்தே பக்தி செய்கிறார்கள். 28

பா] இவ்விடத்தில் பகவானைக் குறித்து பக்தி செய்கிற மூன்றுவித அதிகாரிகளுக்கும் அறியவேண்டிய விசேஷங்களையும், செய்யவேண்டியவைகளையும் ப்ரஸ்தாவிக்கிறார்.

ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே |
தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம் || உக

பா] யே எவர்கள், ஜராமரணமோக்ஷாய கிழத்தனம், மரணம், இவைகளை நீக்குவதற்காக, அதாவது கைவல்யத்திற்காக, மாம் என்னை, ஆஶ்ரித்ய அடைந்து, யதந்தி ப்ரயத்னம் செய்கிறார்களோ, தே அவர்கள், தத் அந்த, ப்ரஹ்ம ப்ரஹ்மத்தை, விது: அறிந்து கொள்ளுகிறார்கள், க்ருத்ஸ்நம் எல்லா, அத்யாத்மம் அத்யாத்மத்தையும், விது: தெரிந்து கொள்ளுகிறார்கள், அகிலம் எல்லா, கர்ம கர்மத்தையும், விது: தெரிந்து கொள்ளுகிறார்கள். 29

---

தா]வர்களாய்என்று சொல்லி இருக்கிறபடியினால் ஐஶ்வர்யத்தைவிரும்புகிறவர்களுக்கு ப்ரஸ்தாவமே இல்லை, என்று நினைக்கக்கூடாது. அவர்களுக்கும் மிகவும் அல்பமான இரட்டைகளின் நிவ்ருத்தி அவஶ்யம் வேண்டியதாகையினால் "வ்ரத" (விரதம்) என்னும பதம் ஸங்கல்ப விசேஷங்களில் அவஶ்யமாக உபயோகிக்கப்படுகிறது. அதின் ஸம்பந்தமிருக்கிறபடியினால் சில காரியங்களிலும் ப்ரயோகிக்கப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் "உறுதியான ஸங்கல்பத்தை உடையவர்களாய்" என்று சொல்லப்பட்டது. "த்ருடவ்ரத" (உறுதியான ஸங்கல்பத்தை உடையவனுப்) என்னும் பதத்தினால ப்ரமாணங்களை அநுஸரித்து வேறு தேவதைகளைவிட்டு விரதல்முதலிய நியமங்களும் சொல்லப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் 'என்னைக்குறித்தே பக்தி செய்கிறார்கள்' என்று சொல்லப்பட்டது. மாம்பஜந்தே" (என்னைக் குறித்து பக்தி செய்கிறார்கள்) என்பதினாலேயே அந்த பக்திக்குஅங்கமாகிய வ்ருதம் முதலியவைகளும்ஏற்பட்டபடியினாலே 'என்னை அடைவதற்காகவும்' என்னு மளவுமுள்ள வாக்யத்தினால் "த்ருடவ்ரதா:" என்பது தங்களுக்கு இஷ்டங்களான பலங்களைப்பற்றியது, என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. 28

பா] ப்ரக்ருதியை விட்டு நீங்கிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைக் காண்ப தற்காக என்னை ஆம்ரயித்து எவர்கள் யத்தினம் செய்கிறார்களோ, அவர் கள் அந்த ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்ளுகிறார்கள். அத்யாத்மத்தைமுழு மையும் தெரிந்து கொள்ளுகிறார்கள். கர்மத்தையும் தெரிந்து கொள்ளு கிறார்கள். 29

**ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யே விது: |**
**ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ: ||30**

ஸ்ரீ கண்ணபிரான் அருளிச்செய்த

ஸ்ரீமத் பகவத்கீதையில் ஏழாவது அத்யாயம் முற்றிற்று

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:



ப-ரை] யே எந்த ஐம்வர்யார்த்திகள், ஸாதிபூதாதிதைவம் அதி பூதம் அதிதைவம் இவைகளோடுகூடிய, ஸாதியஜ்ஞம் ச அதியஜ்ஞத்தோடு கூடியவனுயு மிருக்கிற, மாம் என்னை, விது: தெரிந்து கொள்ளுகிறார் களோ, தே அந்த மூன்றுவிதமான அதிகாரிகளும், யுக்தசேதஸ: (ஸந்த:) என்னிடத்திலேயே வைக்கப்பட்ட மனதை உடையவர்களாய்க் கொண்டு, ப்ரயாணகாலேऽபி மரணகாலத்திலும், மாம் என்னை, விது: அறிகிறார்கள். 30

பா] இவ்விடத்தில் "யே" (எவர்கள்) என்று மறுபடியும் சொல்லி இருக்கிறபடியினால் முன் சொன்னவர்களைவிட வேறான அதிகாரிகள்

---

தா] பிறகு எட்டாவது அத்யாயத்தில் விஸ்தாரமாகச் சொல்லப் போகிற அர்த்தத்துக்கு ப்ரஸ்தாவனை இந்த இரண்டு ச்லோகங்களினால் செய்யப்படுகிறது, என்று சொல்லுகிறார்— இவ்விடத்தில், என்று ஆரம்பித்து. "ஜராமரணமோக்ஷாய" (கிழத்தனம் மரணம் இவை களை விலக்குவதற்காக) என்றிவ்வளவு மாத்திரம் சொல்லி இருப்பதனால் 'ப்ரக்ருதியை விட்டு நீங்கிய ஜீவாத்மாவின் ஸ்வரூபததைக் காண்பதற் காக' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் ப்ரயத்னமாவது ஆராதனம் தான் சொல்லப்பட்டது. இந்த "ப்ரஹ்ம அத்யாத்ம கர்ம" முதலிய ஏழுக்கும் கேள்வியை முன்னிட்டு விஸ்தாரம் மேலே வரப் போகிறது. இவ்விடத்தில "விது:" (அறிகிறார்கள்) என்று ஸித்த மாகச் சொல்லி இருப்பது விதி (கட்டளை)யைக் காட்டுவதற்காக. 29

"ஸாதிபூத" என்னும் ம்லோகம் ஐம்வர்யார்த்திகளைப் பற்றிச்சொல்லுகிறது, என்று சொல்லுவதற்காக அதிகாரிகளின் பே

பா] ஏற்படுகிறார்கள். அதாவது ஐஶ்வர்யத்தை விரும்புகிற எவர்கள் அதிபூதத்தோடுகூடிய, அதிதைவத்தோடும்கூடிய என்னைத்தெரிந்துகொள்ளுகிறார்களோ, என்னுமிது அனுவாதம் செய்வதைப் போலிருந்தாலும் இதற்கு முன் சொல்லப்படாத அர்த்தத்தைச் சொல்வதினால் விதிக்கிறதுதான். அப்படியே 'ஸாயிபஜ்ஞம்' (அதியஜ்ஞத்தோடு கூடிய) என்பதும் வஸ்துவின் ஸ்வபாவத்தினால் மூன்று அதிகாரிகளுக்கும் பொதுவாக விதிக்கப்படுகிறது. மூன்று அதிகாரிகளுக்கும் நித்யநைமித்திகங்க

---

தா] தக்கைக்காட்டக் கூடிய அடையாளத்தை முதலில் காட்டுகிறார்— 'இவ்விடத்தில்' என்று ஆரம்பித்து. முன் சொன்ன அதிகாரியைப் பற்றிச் சொல்லுகிறதாக இருந்தால் "ஸாயிபஜ்ஞம்வதேவிது:" (அவர்கள் அதியஜ்ஞத்தோடு கூடிய என்னைத் தெரிந்து கொள்ளுகிறார்கள்) என்றல்லவோ சொல்லவேண்டும். அப்படி சிஷ்டர்கள் படிக்கவில்லையே. 'யே' (எவர்கள்) என்னும் பதத்தைத் திருப்பிச் சொன்னதற்கும் ப்ரயோஜனம் வேறொன்றுமில்லை, என்று தாத்பர்யம். கேள்விக்கு மேலே சொல்லப்போகிற பதிலினாலும் இந்த அதிகாரிகளின் பேதம் ஏற்படும். இப்படிப் பொதுவாய்த் தெரிந்து கொள்ளப்பட்ட அதிகாரிகளின் பேதத்தை அதிபூத முதலிய பதங்களின் ஸாமர்த்தியத்தினால் விசேஷித்துச் சொல்லுகிறார். 'ஐஶ்வர்யத்தை விரும்புகிற' என்று 1 'ஜராமரணமோக்ஷாய' என்கிற இடத்திற்போல இவ்விடத்திலும் 'யே' என்னும் பதமிருக்கிறபடியினால் அனுவாதம் என்று தோன்றுகிறது அதை நிராகரிக்கிறார்—'என்னுமிது' என்று ஆரம்பித்து. 2 அக்னி தேவதையைக் குறித்து எட்டுக் கபாலங்களில் எந்தப் புரோடாசத்தைச் செய்கிறார்களோ" என்கிற ஶ்ருதி வாக்யம்போல இதுவும், என்று தாத்பர்யம். இது விதி, என்பது மேலே கேட்கும் கேள்வி முதலியவைகளினாலும் ஏற்படப்போகிறது. தெரிந்து கொண்ட விஷயத்தில் கேள்விக்கு இடமில்லையல்லவா "ஸாயிபஜ்ஞ" என்பது ஒரு அதிகாரியைப் பற்றிச் சொல்லப்பட்டிருந்த போதிலும் வஸ்துவின் ஸ்வபாவத்தினாலே மூன்று அதிகாரிகளிடத்திலும் அன்வயிக்கிறது, என்பதைக் காட்டுகிறார்—அப்படியே, என்று ஆரம்பித்து. வஸ்துவின் ஸ்வபாவத்தினால், என்பதற்கு எல்லா அதிகாரிகளுக்கும் பொதுவாக ப்ரமாணங்களில் ஏற்பட்ட யஜ்ஞமென்று பெயரை உடைய வஸ்து

---

1 பகவத்கீதை - 29. 2 ஶதபத ப்ராம்மணம் 2,5,1,11 இந்த ஶ்ருதி வாக்யத்தில் "யத்" (எந்த) என்கிறபதமிருந்தபோதிலும் விதியாக மீமாம்ஸகர்களினால் ஒப்புக்கொள்ளப்பட்டது அப்படியே இதுவும்

துக்குத்தக்கபடி என்னைத்தெரிந்து கொள்ளுகிறார்கள், என்று சொல்லப்பட்டதாகிறது. 30

ஸ்ரீபகவத்ராமாநுஜமுனி யென்னும் பாஷ்யகாரர் அருளிச்செய்த
ஸ்ரீமத் கீதா பாஷ்யத்தில் ஏழாவது அத்யாயம்
முற்றிற்று.

ஸ்ரீ பகவதே ராமாநுஜாய நம:

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



---

காரிகளுக்கும் என்று சொன்னது யுக்தமல்ல, ஞானிகளுக்கு இவ்விடத்தில் ப்ரஸ்தாவமே இல்லாமையினால், என்கிற ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம் சொல்லுகிறார்----'இத்தால்' என்று. 'யஜ்ஞ°' மரணகாலத்திலுண்டாகும் ஞாபகம், இவைகள் மாத்திரம் மூன்றுவித அதிகாரிகளுக்கும் பொது, என்பது விவக்ஷிதமாக இருக்கிறபடியினால் என்று தாத்பர்யம். (30)

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த
தாத்பர்ய சந்த்ரிகையில் ஏழாவது அத்யாயம்
முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:.





ஸ்ரீ யாமுநமுநயே நம:

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்.

## ஏழாவது அத்யாயத்தின் ஸங்க்ரஹம்.

ஸ்வயாதா²த்ம்யம் ப்ரக்ருத்யாऽஸ்ய திரோதி⁴ஶ்ஶரணாக³தி: |
ப⁴க்தபே⁴த³: ப்ரபு³த்³த⁴ஸ்ய ஶ்ரைஷ்ட்²யம் ஸப்தம உச்யதே || ௧௧

ப-ரை] ஸ்வயாதாத்ம்யம் தன்னுடைய உண்மையும், ப்ரக்ருத்யா ப்ரக்ருதியினால், அஸ்ய இதற்கு திரோதி: மறைவும், (அதை நிவ்ருத்தித்துக்கொள்வதற்காக), சரணாகதி: பகவானையே சரணமாகப்பற்றுதலும், பக்தபேத: பக்தர்களின் பிரிவும், ப்ரபுத்தஸ்ய ஞானியின் ச்ரைஷ்ட்யம் மேன்மையும், ஸப்தமே ஏழாவது அத்யாயத்தில், உச்யதே சொல்லப்படுகிறது. 11

ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த

ஸ்ரீ கீதார்த்தஸங்க்ரஹரக்ஷை

இவ்விடத்தில், பாஷ்யத்தில், 'ஏழாவது அத்யாயத்தில், பரமாத்மாவாகிய பரம்புருஷனுடைய ஸ்வரூபத்தின் யாதாத்ம்யமும், ப்ரக்ருதியினால் அதற்கு மறைவும், அதை நிவ்ருத்திபண்ணுவதற்காக பகவானிடத்தில் ப்ரபத்தி செய்யவேண்டியது என்பதும், உபாஸனம் செய்பவர்களுடைய ப்ரக்ருதிகளின் வ்யத்யாஸங்களும் ஞானியின் மேன்மையும், சொல்லப்படுகிறது,' என்று சொல்லி இருக்கிறது. இவ்விடத்தில் ப்ரக்ருத்யா என்னும் பதத்தினால் 'தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா' என்கிற இடத்திலுள்ள "மாயா" என்னும் பதம் வ்யாக்யானம் செய்யப்பட்டது. 'குணமயீ' என்று விசேஷணம் சொல்லி இருப்பதினால் இந்தப் பிரக்ருதியே சொல்லப்படுகிறது என்று ஏற்படுகிறதல்லவா, ச்ருதியிலும் 1 "மாயையை உடையவன் இந்த மாயையிலிருந்து இந்த

1 - -ஶ்வேதாஶ்வதரோபநிஷத் - 4 - 9, 10.

ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிறான், இந்த ப்ரபஞ்சத்தில் மற்றொருவன் மாயையினால் தடுக்கப்பட்டிருக்கிறான்'' என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட மாயை, அதை உடையவன், இவர்களைப்பற்றி, 2 'மாயையை ப்ரக்ருதி என்று அறியவேண்டும், மாயையை உடையவனை மஹேஶ்வரன் என்று அறியவேண்டும்'' என்கிற வாக்யத்தில் தானே விவரித்திருப்பதினாலும், ஆகையினால் விசித்திரங்களான ஸ்ருஷ்டிக்கு ஒத்தாசைக் கருவியான வஸ்துவாகையினால் இங்கு ப்ரக்ருதியிலேயே மாயை, என்னும் பதம் ப்ரயோகித்திருக்கிறது, என்று தாத்பர்யம். எட்டாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் ஸங்கதி சொல்லுமிடத்திலும் இந்த ஶ்லோகத்தின் அர்த்தம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, 'ஏழாவது அத்யாயத்தில் பரப்ரஹ்மமாகிய வாஸுதேவனே உபாஸிக்கத்தகுந்தவன் என்பதையும், சேதனா சேதனங்களாகிய எல்லா வஸ்துக்களுக்கும் ஶேஷி என்பதையும், காரணம் என்பதையும், ஆதாரம் என்பதையும், எல்லா வஸ்துக்களையும் தனக்கு ஶரீரமாக உடையவனாதலாலும் எல்லா வஸ்துக்களையும் தனக்கு விஶேஷணமாக உடையவனாதலாலும் எல்லா ஶப்தங்களினாலும் சொல்லத்தகுந்தவன் என்பதையும், எல்லாவற்றையும் நியமிக்கிறவன் என்பதையும், எல்லாக் கல்யாண குணங்களினாலும் அவனே மேலானவன் என்பதையும், ஸத்வம் ரஜஸ் தமஸ் இவைகள் நிறைந்தவைகளாயும், தேஹம் இந்த்ரியம் அநுபவிக்கத் தக்க வஸ்து இவைகளாகப்பிருந்திருப்பவைகளாகவும் அநாதிகாலமாக உண்டான பாபங்களின் பெருக்கைக் காரணமாக உடையவைகளாகவும் இருக்கிற வஸ்துக்களினால் இதற்கு மறைவையும், மிகவும் சிறந்த புண்ணியங்களைக்காரணமாகஉடையபகவானை ஶரணமாக அடைவதினால் அதின் நிவ்ருத்தியையும், புண்ணியங்களின் வ்யத்யாஸத்தினாலுண்டான புத்தியின் வ்யத்யாஸத்தினால் ஐஶ்வர்யம் கைவல்யம் பகவானை அடைதல், இவைகளை ஆசைப்படுவதினால் உபாஸகர்களின் பேதத்தையும், பகவானை அடையவேண்டும் என்று ஆசையை உடையவன் எப்பொழுதும் பகவானுடன் சேர்ந்திருப்பதினாலும் ஒரே இடத்தில் பக்தி உள்ளவனாதலாலும் மிகவும் பகவானுக்கு ப்ரியமானவன் ஆதலாலும், சிறந்தவன் என்பதையும், துர்லபன் என்பதையும், நிரூபித்து இந்த மூன்று அதிகாரிகளுக்கும் அறிய வேண்டியவைகளுடையவும், அநுஷ்டிக்க வேண்டியவைகளுடையவும் பேதங்களையும் ப்ரஸ்தாவித்தார், என்று.

ஸ்ரீ மந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த
ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை ஏழாவது அத்யாயம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீ மந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த
கீதார்த்த ஸங்க்ரஹம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



தானின்ற வுண்மையைத் தன்றனி மாயை மறைத்தமையும்
தானன்றி மாயை தனைத்தவிர்ப் பான்விர கற்றமையும்
மேனின்ற பத்தர்க ணால்வரில் ஞானிதன் மேன்மைகளும்
தேனின்ற செங்கழ லான்றெளி வித்தனன் பார்த்தனுக்கே.

ப-ரை] தேன் - மது, நின்ற - தேங்கி நின்ற, செம் - சிவந்த, கழலான் திருவடிகளை உடைய ஸ்ரீ கண்ணபிரான், தான் - தான், நின்ற - அவதாரஞ்செய்து நின்ற, உண்மையை - ஸத்யமான ஸ்வபாவத்தை, தன் - தன்னுடைய, தனி - ஒப்பற்ற, மாயை - ப்ரக்ருதியானது, மறைத்தமையும் - மறைத்துக் கொண்டிருப்பதையும், மாயைதனை - இப்ரக்ருதியை, தவிர்ப்பான் - போக்குவதற்கு, தானன்றி - தானில்லாமல், விரகுவேறு உபாயம், அற்றமையும் - இல்லாமையையும்,மேல்நின்ற - மேலாகிநின்ற பத்தர்கள் நால்வரில் - நான்குவித பக்தர்களுக்குள், ஞானிதன்—ஜ்ஞானியினுடைய, மேன்மைகளும்-மேன்மைகளையும்,பார்த்தனுக்கு அர்ஜுனனுக்கு, தெளிவித்தனன் - அறியும்படிச் சொன்னான், ஏ அசை.

வ்யாக்யானம்.

'ஸ்வயாதாத்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதிம் ஶரணாகதிம் ।
பக்தபேதம் ச பக்தஸ்ய ஶ்ரைஷ்ட்யம் ஸப்தம உக்தவான்' ॥

என்கிற ஏழாவது அத்யாயத்தின் ஸங்க்ரஹ ச்லோகத்தின் அர்த்தத்தை அருளிச்செய்கிறார். இவ்விடத்தில் 'தேனின்றசெங்கழலான்' என்பதினால் பகவானுடைய திருவடிகளைத் தாமரை புஷ்பமாக ரூபித்து அதின் காந்தியைத் தேனாகரூபித்திருக்கிறதாகவுமாம். அன்றிக்கே போக்யதை விஞ்சி இருக்கும் திருவடிகள் என்று தாத்பர்யார்த்தமாகவுமாம். அதுவுமன்றிக்கே "ப்ரணதஸுரகிரீடப்ராந்தமந்தாரமாலாவிகளிதமகரந்தஸ்நிக்தபாதாரவிந்த:" என்று தாமருளிச் செய்தபடியே, 'வாழ்த்தியவாயராய் வானோர்மணி மகுடம் தாழ்த்தி வணங்கும் பொழுது அவர்கள் மகுடங்களில் சூட்டிய மாலைகளிலிருந்து பெருகும் தேன்களினால் எப்பொழுதும் நனைந்திருக்கும் திருவடிகளை உடையவன் என்றாகவுமாம். அதுவுமன்றிக்கே, அல்லாத தாமரை பூக்களைப்போல சிலகாலம் கழிந்தவாறே செவ்விமாறுதலன்றிக்கே எப்பொழுதும் செவ்வி பெற்றிருக்கிறது. என்று திருவடிகளுக்கு

வைலக்ஷண்யம் சொன்னதாகவுமாம். 'தானின்றஉண்மையை' எல்லாரும் வந்து தன்னை ஆஶ்ரயிப்பதற்காக வஸுதேவ க்ருஹத்தில் அவதீர்ணனுய் நிற்கிற உண்மையை, அன்றிக்கே 'தான் நின்ற' தானுகவே வேறொரு ஹேதுக்களினுலன்றிக்கே, ஸ்வபாவஸித்தமாக நின்ற,'உண்மையை' பரத்வம்முதலிய உண்மையான ஸ்வபாவத்தை, அன்றிக்கே 'தான் ப்ரகாசமாகிநிற்கிற' 'அதிவாயுஹி தெஜஸம்' என்றருளிச் செய்யப்பட்ட ஸ்வபாவததை, 'தன்தனிமாயை' 'ஜீஜாயா' என்று சொல்லப்பட்ட பகவானுக்கு ஶேஷபூதமாயும் இப்படிக்கு விசித்திரங்களான காரியம்செய்வதில் தனக்கு ஒப்பில்லாததுமான, 'உுரதூயா' என்று சொல்லப்பட்ட ப்ரக்ருதி, என்னவுமாம். அன்றிக்கே 'தன்' அந்த மனுஷ்யர்களுக்குத் தங்கள் தங்கள் கர்மானுகுணமாக ஏற்பட்ட 'தனி' அவனவன் கர்மானுகுணமாகத் தனித்தனியான ஸத்வரஜஸ் தமோகுணங்களை உடைய ப்ரக்ருதி என்றுகவுமாம். இத்தால் 'ஜராமரணமோக்ஷாய' வ்யக்த்யாஸ்ரிதைராயி:' என்பதின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. 'தான் அன்றி மாயைதனைத் தவிர்ப்பான் விரகற்றமையும்' என்பதினுல் தன்னைத் தவிர வேறொரு உபாயமில்லாமை ஏற்படுகிறதினுல் தானே உபாயம் என் றேற்படுகிற படியினுலே அப்படிக்குப் பகவானே உபாயமாவதற்குக்காரணமாகிய ஶரணுகதிஅர்த்தாத் ஸித்திக்கிறதாகவுமாம். அன்றிக்கே ஆகிஞ்சன்யானன்ய கதித்வங்கள் சொல்லப்படுகிறபடியினுல் இபபடிப்பட்ட அதிகாரிக்குக் கர்த்தவ்யமான ஶரணுகதியும் ஏற்பட்டதாகவுமாம். ஆக இத்தால் 'ஶரணாமதி:' என்பதின் அர்த்தமும் சொல்லப்பட்ட தாகவுமாம் 'மேல்நின்ற' இத்யாதி. "யொமிநாஉவிஸவெஷ்டிா" இத்யாதிகளினுல் எல்லா போகிகளையும் விடமேற்பட்டவனுகச் சொல்லப்பட்டனுயும்,ஆர்த்தன் ஜிஜ்ஞாஸு அர்த்தார்த்தி, ஜ்ஞானி, என்று சொல்லப்பட்ட நான்கு வித பக்தர்களுக்குள் 'தெஷாஂஜ்ஞாநீ' என்று எடுத்துச் சொல்லப்பட்ட, ஜ்ஞானியின் பெருமையையும், இந்த அத்யாயத்தில் அர்ஜுனனுக்கு நன்றுக உரைத்தான் என்று தாத்பர்யம்.

ஸ்ரீ. ஊ. சேட்லூர் வித்வான் நரஸிம்மாசாரியார் செய்த கீதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானத்தில் 8-வது பாட்டு வ்யாக்யானம் முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

ஶ்ரீக்ருஷ்ணாயவாஸுதேவாய ஹரயெ நமஃ



ஸ்ரீ:

# ஸ்ரீமத் பகவத்கீதை.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

## எட்டாவது அத்யாயம்,

### அவதாரிகை.

பா-அ] ஏழாவது அத்யாயத்தில் பரப்ரஹ்மமாகிய வாஸுதேவனே உபாஸிக்கத் தகுந்தவன், என்பதையும், சேதநாசேதனங்களாகிய எல்லா

---

தா] ஸங்கதியைக் காட்டுவதற்காகச் சொல்லுகிறார். 'ஏழாவது அத்யாயத்தில் என்று ஆரம்பித்து. பரப்ரஹ்மமாகிய வாஸுதேவனே உபாஸிக்கத் தகுந்தவன்' என்பது 1 "மய்யாஸக்தமநா:" என்றிவை முதலிய ஶ்லோகங்களின் அர்த்தம். அவ்விடத்திலன்றோ உபாஸனம் ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. அதற்கு அங்கமாக மற்றதெல்லாம் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது. 2 "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத:, 3 வாஸுதேவ ஸர்வம், 4 சதுர்விதா பஜந்தே மாம்" என்றிவை முதலிய ஶ்லோகங்களினால் மேலும் இதற்கே விவரணம் செய்யப்படுகிறது, என்று தாத்பர்யம். 'பரப்ரஹ்மமாகிய' என்பவை முதலிய பதங்களினால், அவித்யை முதலியவையோடு சேர்ந்த ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்றும், த்ரிமூர்த்திகளைவிட மேலான வஸ்துவே ஜகத்காரணம் என்றும் சொல்லும் பக்ஷங்கள் நிராகரிக்கப்பட்டன. 'ப்ரஹ்ம' என்னும் பதம் இவ்விடத்தில் ஒரு விசேஷமான தேவதையைக் குறிக்கும் பதத்தோடு சேர்ந்திருப்பதினால் இதர தேவதைகளே மேலானவர்கள் என்பது நிராகரிக்கப்பட்டது. 'வாஸுதேவ' என்னும் பதத்தினால் இப்பொழுது இவ்விடத்திலிருக்கும் அவதார விசேஷம் சொல்லப்படுகிறது. 'சேதநா சேதனங்களாகிய' என்றிவை முதலிய விசேஷணங்களினால் உபாஸிக்கத்தக்கவனாக இருப்பதற்கும், பரப்ரஹ்மமாக இருப்பதற்கும், உபயோகமான ஆகாரங்களைச் சொல்லி இருக்கிறது. 'சேதநா

1 பகவத்கீதை, 7, 9.
2 பகவத்கீதை, 7, 6.
3 பகவத்கீதை, 7, 19.
4 பகவத்கீதை, 7, 16.

வஸ்துக்களுக்கும் ஶேஷி என்பதையும், காரணம் என்பதையும், ஆதாரம் என்பதையும், எல்லா வஸ்துக்களையும் தனக்கு ஶரீரமாக உடையவனாதலும், எல்லா வஸ்துக்களையும் தனக்கு விஶேஷணமாக உடையவனாதலாலும், எல்லாப் பதங்களினாலும் சொல்லத் தகுந்தவன் என்பதையும், எல்லாவற்றையும் நியமிக்கிறவன் என்பதையும், எல்லாக் கல்யாண குணங்களினாலும் அவனே மேலானவன் என்பதையும், ஸத்வரஜஸ்த

---

சேதனங்களாகிய எல்லா வஸ்துக்களுக்கும் ஶேஷி என்பதையும்' என்பது 1 "பூமிராப:" என்பது முதலான இரண்டு ஶ்லோகங்களின் அர்த்தம். 'எல்லா' என்னும் பதத்தினால், கார்யமாயும் காரணமாயும் இருக்கிற அவஸ்தைகளைச் சொல்லி இருப்பதினால், கார்யங்களான ப்ரஹ்மா ருத்ரன் இவர்களையும் சேர்த்திருக்கிறது. 'காரணம்' என்பது, 2 "ஏதத்யோநீநி" என்கிற ஶ்லோகத்தின் அர்த்தம். 3 "மத்த: பரதரம் நாந்யத்" என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஶேஷத்வம் 4 "நாபிஜாநாதி மாமேப்ய: பரம்" என்கிற இடத்தில் உபயோகமுள்ளதாகையினால் அவ்விடத்திலேயே சொல்லுவதற்காக இவ்விடத்தில் அதை விட்டு 5 "மயி ஸர்வம்" என்கிற இடத்தில் சொல்லப்பட்ட ஆதாரமாக இருக்கை சொல்லப்பட்டது. 6 "ரஸோஹம்" என்றிவை முதலான இடங்களில் சேர்த்துச் சொல்லி இருப்பதினால் ஏற்பட்டது, எல்லாப் பதங்களினாலும் சொல்லத் தகுந்தவன் என்பது. அதற்குக் காரணம் ஆதாரமாக இருக்கை முதலியவைகளினாலேற்பட்ட எல்லா வஸ்துக்களையும் தனக்கு ஶரீரமாக உடையவனாக இருக்கை. இப்படி எல்லா வஸ்துக்களுக்கும் ஶேஷியாக இருக்கை முதலியவைகளை அதனதன் ஸ்தானத்தினால் அந்தந்த அதிகாரிகளினால் அடையத்தகுந்த வஸ்துக்களோடு சேர்த்துச் சொல்லி இருப்பதற்கும் அவைகள் ஶரீரமாகவும் பகவான் அவைகளுக்கு ஆத்மாவாக இருக்கையுமே காரணம், என்பது காட்டப்பட்டது. 7 "யே சைவ ஸாத்விகா பாவா:" என்றிவை முதலிய இடங்களில் அவைகளின் ப்ரவ்ருத்திகளும் பகவானுக்கு அதீனப்பட்டவைகள் என்று சொல்லப்படுகிறபடியினால், பகவான் எல்லாவற்றையும் நியமிக்கிறான், என்பதும் ஏற்பட்டது. எல்லா, என்பதினால் இங்கே சொல்லப்படாதவைகளாய் அபிப்ராயத்திலிருக்கும் மற்றக் கல்யாணகுணங்களும் சேர்க்கப்பட்டன. அவனே, என்கிற ஶ்ருதியினால் 8 "நாந்யத் கிஞ்சிதஸ்தி" என்பதின் அர்த்தம் சொல்லப்பட்டது. 9 "த்ரிபிர்குணமயைர்பாவை:" என்பது முதல் மூன்றரை ஶ்லோகத்தினுடைய அர்த்தம், ஸ்த்வரஜஸ்

---

1 பகவத்கீதை, 7, 4. 2 பகவத்கீதை, 7, 6. 3 பகவத்கீதை, 7, 7.
4 பகவத்கீதை, 7, 13. 5 பகவத்கீதை, 7, 7. 6 பகவத்கீதை, 7, 8.
7 பகவத்கீதை, 7, 12. 8 பகவத்கீதை, 7, 7. 9 பகவத்கீதை, 7, 13.

மோ குணங்கள் நிறைந்தவைகளாயும் ; தேஹம் இந்த்ரியம், அனுபவிக்கத்தக்க வஸ்துக்கள், இவைகளாகப் பிரிந்து இருப்பவைகளாயும் அநாதிகாலமாக உண்டான பாபங்களின் பெருக்கைக் காரணமாக உடையவைகளாகவும் இருக்கிற வஸ்துக்களினால் இதற்கு மறைவையும், மிகவும் சிறந்த புண்ணியங்களைக் காரணமாக உடைய பகவானையே ஶரணமாக அடைவதினால் அதற்கு நிவ்ருத்தியையும், புண்ணியங்களின் வ்யத்யாஸத்தினாலுண்டான புத்தியின் வ்யத்யாஸத்தினால் ஐஶ்வர்யம் கைவல்யம் பகவானை அடைதல் இவைகளை ஆசைப்படுவதினால் உபாஸகர்களின் பேதத்தையும், பகவானை அடையவேண்டும் என்று ஆசையை உடையவன் எப்பொழுதும் பகவானுடன் சேர்ந்திருப்பதினாலும் ஒரே இடத்தில் பக்தியுள்ளவனாதலாலும், மிகவும் பகவானுக்கு ப்ரியமானவனாதலாலும் சிறந்தவன் என்பதையும், துர்லபன் என்பதையும், நிரூபித்து, இந்த மூன்று அதிகாரிகளுக்கும் அறியவேண்டியவைகளுடைய

---

தமோ குணங்கள், என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டது. 1 'தாமேவ' என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ப்ரபத்தி மிகுந்த புண்ணியத்தினால் உண்டாகிறது, என்பது 2 "ஜநாஸ்ஸுக்ருதிந:" என்கிற பதத்தினால் காட்டப்பட்டது, அதையே சொல்லுகிறார்.—மிகவும் சிறந்த, என்று ஆரம்பித்து· 3 " நமாம் துஷ்க்ருதிந:" என்றிவை முதலானது முன்பு சொல்லப்பட்ட மறைவின் விஶேஷங்களைச் சொல்லி இருக்கிறபடியினாலும் புண்ணியஶாலிகளை ஸ்தோத்திரம் பண்ணினதற்கு அங்கமாக இருக்கிறபடியினாலும், அதின் அர்த்தம் இவ்விடத்தில் தனித்துச் சொல்லப்படவில்லை 4 "ஸுக்ருதிந:" என்றிவை முதலியது புண்ணியங்களின் வ்யத்யாஸத்தினால், என்று ஆரம்பித்திருக்கும் வாக்யத்தினால் நினைக்கப்பட்டது. அதற்கு, 'உபாஸனம் செய்கிறவர்களின் பேதத்தையும்' என்பதோடு அன்வயம் சொல்லிக்கொள்ளவேண்டியது. 5 "தேஷாம் ஜ்ஞானீ" என்பது முதலாக இரண்டு ஶ்லோகங்களின் அர்த்தம் 'பகவானை' என்று ஆரம்பித்துச்சொல்லப்பட்டது. 'பஹூநாம் ஜந்மநாம்' என்று ஆரம்பித்து ஸமஹாத்மா ஸுதுர்லப:' என்கிறவரையில் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்.—'துர்லபன் என்பதையும்' என்று. 'யேஷாம்' என்று ஆரம்பித்து அத்யாயத்தின் மிகுதியான பாகத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்.— 'இந்த மூன்று அதிகாரிகளுக்கும்'. என்று.'அறியவேண்டிய'தாவது ஏற்க

---

1 பகவத்கீதை, 7,14. 2 பகவத்கீதை, 7,16. 3 பகவத்கீதை, 7, 15.
4 பகவத்கீதை, 7,16. 5 பகவத்கீதை, 7, 17.

வும், அனுஷ்டிக்கவேண்டியவைகளுடையவும், பேதங்களையும் ப்ரஸ்தாவித்தார். இப்பொழுது எட்டாவது அத்யாயத்தில் கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்ட அறியவேண்டியவைகளுடையவும் அனுஷ்டிக்கவேண்டியவைகளுடையவும் பேதங்களைப் பிரித்துக்காட்டுகிறார்.—

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 - அர்ஜுனன் சொல்லுகிறான்.

𑌕𑌿𑌂 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 ।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌚 𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 𑌕𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ (௧)
𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌥𑌂 𑌕𑍋𑌽𑌤𑍍𑌰 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌕𑌥𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑍋𑌽𑌸𑌿 𑌨𑌿𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 ॥ (௨)

ப-ரை] 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 புருஷர்களுக்குள் ஶ்ரேஷ்டரான, 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 கிருஷ்ணனே, 𑌤𑌤𑍍 அந்த 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ப்ரஹ்மமானது, 𑌕𑌿𑌂 எது, 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 அத்யாத்மமானது, 𑌕𑌿𑌂 எது, 𑌕𑌰𑍍𑌮 கர்மமானது, 𑌕𑌿𑌂 எது, 𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 அதிபூதம் என்று, 𑌕𑌿𑌂 எது, 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 சொல்லப்பட்டது 𑌅𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 அதிதைவம் என்று 𑌕𑌿𑌂 எது, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 சொல்லப்படுகிறது, 𑌅𑌤𑍍𑌰 இவ்விதமான 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 இந்த 𑌦𑍇𑌹𑍇 ஶரீரத்திலே (அதாவது ஶரீரமாகிய இந்த்ரன் முதலிய தேவதைகளிடத்தில், 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 அதியஜ்ஞமானது, 𑌕𑌃 எது, 𑌕𑌥𑌂 அதற்கு அதியஜ்ஞமென்கிற பதத்திற்கு அர்த்தமாக இருக்கை எப்படி, 𑌨𑌿𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃— 𑌨𑌿𑌯𑌤 வஶப்படுத்தப்பட்ட, 𑌆𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 மனதை உடையவர்களினால், 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 மரணகாலத்தில், 𑌕𑌥𑌂 எப்படி, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 அறியத்தகுந்தவனாக, 𑌅𑌸𑌿 ஆகிறீர். 1, 2

---

னவே ஸித்தமாக இருக்கிறது சொல்லப்படுகிறது. அங்கீகரிக்கத்தகுந்ததாவது அனுஷ்டிக்கத்தகுந்தது. இத்தால் '𑌸𑍍𑌵𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂' என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்தின் அர்த்தம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. இது எட்டாவது அத்யாயத்தின் ஸங்க்ரஹம். '𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌕𑍍𑌷𑌰𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌭𑌗𑌵𑌚𑍍𑌚𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑌾𑌂 । 𑌵𑍇𑌦𑍍𑌯𑍋𑌪𑌾𑌦𑍇𑌯𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌮𑌷𑍍𑌟𑌮𑍇 𑌭𑍇𑌦 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇' என்று. பேதத்தைச் சொல்வதே அத்யாயத்துக்கு அர்த்தமாகையினால், அவைகளின் ஸ்வரூபத்தின் ப்ரஸ்தாவம் முன்னமே செய்யப்பட்டது, என்று காட்டப்பட்டது. கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்டதை விவரிக்கிறது என்று ஸங்கதி சொல்லுகிறார். இப்பொழுது, மூலம் ஆரம்பித்து.

பா] கைவல்யத்திற்காக பகவானை ஆஶ்ரயித்து ப்ரயத்னம் செய்கிறவர்களுக்கு அறியவேண்டியதாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மம், அத்யாத்மம், கர்மம் எது வென்று சொல்லவேண்டும். ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கு அறியவேண்டிய அதிபூதமும் அதிதைவமும் எது? மூன்று அதிகாரிகளுக்கும் அறியவேண்டிய அதியஜ்ஞ என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது எது? அதற்கு அதியஜ்ஞ என்னும் பதத்துக்கு அர்த்தமாக

தா] ஜீவாத்மாவின் ஸ்வரூபம் முதலிய அறியவேண்டியவைகளுடையவும், உபாஸனம் முதலிய அனுஷ்டிக்கவேண்டியவைகளுடையவும், வ்யாக்யாஸங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்கிற ஆசையினால் அர்ஜுனன் இந்த இரண்டு ஶ்லோகங்களினால் கேட்கிறான். 'ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:' என்று ஆரம்பித்து முன்னமேயே அதிகாரிகள் மூன்று விதம் என்று சொல்லப்பட்டமையினாலும் 'ஜராமரணமோக்ஷாய' என்றிவை முதலான இடங்களில் 'யே' என்கிற பதத்தையே திரும்பவும் சொல்லியிருப்பதினாலும், வஸ்துக்களின் ஸ்வபாவங்களாலும், அதிகாரிகள் வெவ்வேறு என்பதும், அவர்களுக்கு அறியவேண்டியவைகளுடையவும் அனுஷ்டிக்கவேண்டியவைகளுடையவும் ஏற்பாடுகளும் அர்ஜுனனால் தெரிந்து கொள்ளப்பட்டது. அதிலேயே விஶேஷங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்கிற ஆசையினால் இந்தக்கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. அந்த விஶேஷமும் மேலே சொல்லப்படுகிறது ஆகையினால் 'கிம் தத் ப்ரஹ்ம' என்கிற பாதி கைவல்யத்தை விரும்புகிறவர்களைப் பற்றியது. 'அதிபூதம்' என்கிறபாதி ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களைப்பற்றியது. 'அதியஜ்ஞ:' என்கிற ஶ்லோகமோ வஸ்துவின் ஸ்வபாவத்தினால் மூன்று அதிகாரிகளுக்கும் பொது என்று பிரித்துச் சொல்லுகிறார் —'கைவல்யத்திற்காக' என்று ஆரம்பித்து. "கதம்" (எப்படி) என்றுமாதிரியைபற்றிய கேள்வியில் "அதியஜ்ஞ" என்னும் பதத்திற்கு அர்த்தமாக இருக்கை என்பது தானே ஏற்பட்டது. "அத்ர" (இவ்விதமான) என்கிற இந்தப்பதம் ஶாஸ்த்ரங்களில்குறிக்கப்பட்டிருக்கையைக் காட்டுகிறது. இதையும் மேல் க்ரந்தத்தில் வ்யாக்யானம்செய்யப் போகிறார். [1] எனக்கு தேஹமாகிய இந்த்ராதிகளிடத்தில் " என்று. "அஸ்மிந்" (இந்த) என்கிற பதமோ வெளியில் தனக்கு நேரில் தெரிவதைக்காட்டுகிறது. இப்பொழுதுகேட்கிற அர்ஜுனனுக்கு இந்த்ரன் முதலியவர்களும் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறார்களல்லவோ. "தேஹ, இஹ" என்கிற பதங்களுக்கு ஒரே வாக்

1 கீ,8,4 பாஷ்யத்தில்.

பா] இருக்கை எப்படி ஸம்பவிக்கும். மரணகாலத்தில் ஸ்வாதீனமான மனதை உடைய இந்த மூன்றுவித அதிகாரிகளாலும் எப்படி அறியத்தக்கவர்ஆகிறீர். 1,2

ஸ்ரீ𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ஸ்ரீகிருஷ்ணன் சொல்லுகிறார்.

𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌕𑌰𑍋 𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌃 ॥ ௩

ப-ரை] 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ப்ரஹ்மமானது, 𑌪𑌰𑌮𑌂 சிறந்த, (அதாவது ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற), 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 பரிசுத்தமான ஜீவாத்மஸ்வரூபம், 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 ப்ரக்ருதியானது, 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 அத்யாத்மமாக, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 சொல்லப்படுகிறது, 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌕𑌰𑌃 மனுஷ்யன் முதலியவைகளாக இருக்கையை உண்டாக்குகிற, 𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌃 (ரேதஸ்ஸை) விடுதல், 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌃 கர்மம் என்று பெயரை உடையது. ௩

பா] அந்த ப்ரஹ்மம் என்று கீழே குறிக்கப்பட்டது பரமமான அக்ஷரம். நக்ஷரதி - நாசத்தை அடைகிறதில்லை, ஆகையினால் அக்ஷரமென்று சொல்லப்படுகிறது. அதாவது ஸமஷ்டியான ஜீவாத்மாவின் ஸ்வரூபம். அப்படியே "அவ்யக்தம், அக்ஷரத்தில் லயத்தை அடைகிறது அக்ஷரம் தமஸ்ஸில்

---

தா] பாதத்தில் ஒன்றாகச் சேர்ந்து ப்ரயோகித்தல் சில ப்ரதிகளில் காணப்பட்டிருக்கிறது. அதுவுமன்றி "𑌅𑌤𑍍𑌰" என்பதற்கு இந்த யஜ்ஞத்தில் என்று அர்த்தமாகவுமாம். ப்ரயாணகாலத்தில் இந்த ஜ்ஞானம் மூன்று அதிகாரிகளுக்கும் வேண்டியது. இவ்விடத்திலிருக்கிற பன்மையும் மூன்று அதிகாரிகளையும் காட்டுகிறது. என்கிற அபிப்ராயத்தினால் 'இந்த மூன்று வித அதிகாரிகளாலும்' என்று சொல்லப்பட்டது. 1,2

𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌂' என்கிற இடத்தில் வ்யவதானம் செய்யப்படுகிறதும் விதிக்கப்படுகிறதும் மாறுதலாகத் தோற்றுமாகையினால் அதை நிராகரிப்பதற்காகச் சொல்லுகிறார். அந்த ப்ரஹ்மம் என்று கீழே குறிக்கப்பட்டது. என்று 'ப்ரஹ்ம' என்னும் பதமானது இவ்விடத்தில் பரமாத்மாவின் ஸ்வபாவம் இருக்கிறபடியினால் உபசாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. என்று தாத்பர்யம். '𑌅𑌕𑍍𑌷𑌰𑌂' என்னும் பதத்திற்கு வ்யுத்பத்தியையும் அதின் அர்த்தத்தையும் காட்டுகிறார். '𑌨𑌕𑍍𑌷𑌰𑌤𑌿' என்று ஆரம்பித்து. ஜீவாத்மாக்களின் ஸமஷ்டியில் இந்தப் பதத்திற்கு ஶ்ருதியில் ஏற்பட்ட ப்ரயோகத்தைக் காட்டுகிறார். 'அப்படியே' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் லயமாவது, ஒருவித

பா]லயத்தை அடைகிறது''என்று அர்த்தமுள்ளஶ்ருதி வாக்யம்முதலியது சோல்லி இருக்கிறது பரமம் அக்ஷரமாவது. ப்ரக்ருதியை விட்டு நீங்கிய ஜீவாத்மாவின் ஸ்வரூபம். ஸ்வபாவமாவது, ப்ரக்ருதி அதாவது தான் ஆத்மாவாக அல்லாமலிருந்தும் ஆத்மாவினிடத்தில் சேர்ந்து மிருக்கிற பஞ்சாக்னி வித்யையில் அறியவேண்டியதாகச் சோல்லப்பட்ட ஸூக்ஷ்ம

---

தா]மான சேர்க்கை. அன்றியும்,ஶ்ருதியில்அக்ஷரஎன்னும்பதத்தினால் கொஞ்சம் ப்ரகாஶமாகக் கிளம்பிய ஜீவாத்மாக்களை உடைய ப்ரக்ருதியின் ஒருவகையான தஶையே சொல்லப்படுகிற தாகையினால் நேராக ப்ராயமே அர்த்தம், என்று சொன்னாலும் விரோதமில்லை. ஆகிலும் ஶப்தம் அந்தத் தஶையைச் சொல்வதற்குக் காரணமான ஜீவாத்மாக்களிடத்திலும்தாத்பர்யமுண்டாகையினால் அதை இங்கே உதாஹரணமாக எடுத்தது 'பரமம், அக்ஷரம்' என்கிற இடத்தில் பரமம் என்கிற விஶேஷணத்தினால் கருத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச்சொல்லுகிறார்.—'ப்ரக்ருதியைவிட்டுநீங்கிய'என்றுஆரம்பித்து.ஸ்வபாவஎன்னும் பதத்தின் அர்த்தம். ப்ரக்ருதி என்பது அதாவது விட்டுப் பிரியாமல் சேர்ந்திருக்கும் வஸ்து, என்று, தாத்பர்யம் அது, எது என்கிற கேள்விக்கு, அநாத்மம் என்னும் பதத்தை அனுஸரித்து ஸமாதானம் சொல்லுகிறார்—'தான் ஆத்மாவல்லாமல்' என்று ஆரம்பித்து. ஆத்மாவினிடத்தில் வஸிக்கிறபடியினால் சேர்ந்து கொண்டிருக்கும் வஸ்து, என்று அநாத்மம், என்னும் பதத்தின் வ்யுத்பத்தி. அதினாலேயே தான் ஆத்மாவல்ல என்பதும் ஏற்பட்டது. அவைகளின் வாஸனை முதலியவைகளாவது, அவைகளின் ஸம்பந்தத்தினாலுண்டாகிற அஜ்ஞானம் கர்மம், இவற்றின் வாஸனை முதலியது, ஸூக்ஷ்மமான பஞ்சபூதம் முதலியவைகள் அறியவேண்டியவைகள் என்பதில் ஶ்ருதியை எடுத்துக்காட்டுகிறார். 'பஞ்சாக்னிவித்யையில்' என்று. 1 'ஐந்தாவது ஆஹுதியில் ஜலங்கள் எப்படிப் புருஷன் என்கிற பெயர் பெற்றவைகளாகின்றன (என்பதை) அறிகிறாயா' என்கிற வாக்யம் முதல், 2 இவ்விதமாக ஐந்தாவது ஆஹுதியில் ஜலங்கள் புருஷன் என்கிற பெயர் பெற்றவைகளாகின்றன என்று சொல்லி 3 எவர்கள் இதை இப்படித் தெரிந்து கொள்ளுகிறார்களோ' என்று அர்த்தமுள்ள வாக்யத்தில் 'ஆப:' என்னும் பதத்தினால் குறிக்கப்பட்ட ஸூக்ஷ்மமான பஞ்சபூதங்கள் அறியத்தக்கவைகள், என்றல்லவோ சொல்லப்பட்டது, என்று தாத்பர்யம். உபாயத்தைச் செய்கிறவனாகிய இப்பொழுது இருக்கும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைவிட்டுப் பரிஶுத்தமான ஆத்மஸ்வரூபத்தைச்சொல்லி இருப்பது. மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனுக்கு எந்த

---

1 சாந்தோக்யோபநிஷத் - 5 - 3 - 3.　　2 சாந்தோக்யோபநிஷத் - 5 - 9 - 1.
3 சாந்தோக்யோபநிஷத் - 5 - 10 - 1.

பா] தக்கவைகள் பரிஹரிக்கத்தக்கவை என்பதும் மேலே ‡எதை இச்சித்தவர்களாய் ப்ரும்மசர்யத்தைச்செய்கிறார்களோ' என்கிற ஶ்ருதிவாக்யத்திலேயே சொல்லப்போகிறது. 3

அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஶ்சாதிதைவதம் |
அதியஜ்ஞோऽஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர || (4)

ப-ரை] தேஹப்ருதாம் ப்ராணிகளுக்கெல்லாம், வர ஶ்ரேஷ்டனான அர்ஜுன அதிபூதம் அதிபூதம் என்பது, க்ஷர: மாறுதல்களை அடைகிற, பாவ: வஸ்து, அதிதைவதம் அதிதைவதமும் புருஷ: ஐஶ்வர்யாதிகளை அனுபவிக்கக்கூடிய ஜீவாத்மா, அத்ர இந்த, தேஹே எனக்கு ஶரீரமாகிய இந்த்ராதிகளிடத்திலிருக்கிற நானே, அதியஜ்ஞ: அதியஜ்ஞும் என்று சொல்லப்படுகிறேன். 4

பா] ஐஶ்வர்யத்தையே விரும்புகிறவர்களுக்கு அறியவேண்டியதாகக் கீழேகுறிக்கப்பட்ட அதிபூதமாவது ஆகாஶம் முதலிய பஞ்சபூதங்களி

---

தா] இதற்குக் காரணங்களானகர்மங்களுடனும், அதின்பரபோஜனங்களுடனும், கர்பபவாஸம முதலியவைகளுடனும சேர்ந்து என்று அர்த்தம். பஞ்சாக்னிவித்யையில அசேதனமாகிய ப்ரக்ருதி எல்லா அவஸ்தைகளிலும் சேர்ந்திருக்கிறது, நம்மால்விட முடியாது, கர்ப்பவாஸம், பிறப்பு முதலிய துக்கங்களுக்குககாரணம், என்பவை முதலியவைகள் ஏற்படுகிறபடியினால் இது அருவருககத்தகுந்ததாக இருக்கையும், பயத்தை உண்டாக்கக்கூடியதாக இருக்கையும் தகும். பரிஹரிக்கக்கூடியதாக இருக்கை எதினால் ஏற்பட்டது. என்கிற கேள்விக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'பரிஹரிக்கத்தகுந்தது என்பதும்' என்று ஆரம்பித்தது. 3

'ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கு அறியவேண்டியதாகக் கீழே குறிக்கப்பட்ட, என்கிற இது அதிதைவதம் என்பதுடனும் சேர்த்துக்கொள்ளவேண்டியது, 'அதிபூதம்' 'க்ஷர:' என்னும் பதங்களின் வ்யுத்பத்தியை அனுஸரித்து வ்யாக்யானம் செய்கிறார்—'ஆகாஶம்முதலிய' என்று ஆரமபித்து. 'பூத' என்னும் பதம் ஐந்துக்களைச சொல்லுகிறது. என்பதை விலக்குவதற்காக. 'ஆகாஶம்முதலிய' என்று சொல்லி இருக்கிறது. அனுபவிக்கத்தக்கவைகளான ஶப்தம் முதலிய அவஸ்தை அந்த அவஸ்தைக்கு ஆதாரமான வஸ்துக்கள், இவை இரண்டையும் 'க்ஷர' என்னும் பதத்தினால் சேர்த்துக்கொள்ள வேண்டியதற்

---

‡ சாந்தோக்யம். 5.10,1,

பா] படிப்பட்டபோக்தாவாகும்தலை ஐஶ்வர்யார்த்திகளால்அடையத்தக்கதாகையினுல் அனுஸந்திக்கத்தக்கது. அதியஜ்ஞ என்னும் பதத்தினுல் சொல்லப்பட்டவன் நானே. 'அதியஜ்ஞமாவது, யஜ்ஞங்களினு லாராதிக்கத்தகுந்தவனுக இருப்பவன். எனக்கு தேஹமாகிய இந்த்ராதிகளிடத்

---

தா] இவ்விடத்தில்இவனுக்குஎன்னவிஶேஷம்.என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இந்த' என்று ஆரம்பித்து. பரிஶுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் இவ்விடத்தில் அனுஸந்திக்கத்தக்கதல்ல. அஶுத்தமான ஜீவாத்மாவைப்பற்றியும் இது விடத்தக்கினது என்று நினைக்கவும் வேண்டியதில்லை. 'புருஷ:' என்னும் பதமும் இவ்விடத்தில் புருஷனுக இருக்கும் தன்மையைக் குறிக்கிறது. என்று தாத்பர்யம். 'நானே' என்பது. 'க:'(எது) என்னும் கேள்விக்குப்பதில். 'கதம்' (எப்படி) என்னும் கேள்விக்குப் பதிலையும் அதின் அபிப்ராயத்தையும் விவரிக்கிறார்—'அதியஜ்ஞமாவது' என்று. யஜ்ஞத்தோடு சேர்ந்திருப்பது அதியஜ்ஞம். இவ்விடத்தில் பகவானுக்கு யஜ்ஞத்தோடு ஸம்பந்தம் அவைகளினுல் ஆராதிக்கப்படுமவனுகையினுல். என்று சொல்லுகிறார்—'யஜ்ஞங்களால்' என்று ஆரம்பித்து. இந்த்ரன் முதலியவர்களால்லவோ அந்த யஜ்ஞத்திலாராதிக்கப்படுகிறவர்களாக ஶ்ருதிகளில் சொல்லப்படுகிறார்கள். அப்படிக்கிருக்க நானே, என்று எப்படிச் சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபதிற்கு ஸமாதானம் 'அத்ர தேஹே' என்பதினுல் சொல்லப்படுகிறது. என்று காட்டுகிறார்—'எனக்கு தேஹமாகிய' என்று ஆரம்பித்து. 'அயமாத்மா ஸர்வேஷாம் தேஹே' என்று, பகவானுல் சொல்லப்படுகிறபடியினுல் அந்தப் பகவானுடைய தேஹத்தைப்பற்றியது என்று ஏற்பட்டது. அந்தப் பகவானுடைய தேஹமாவது. 'யஜ தேவபூஜாயாம்' என்கிற தாது பாடத்தை அனுஸரித்துப் பூஜை செய்யப்படும் தேவதையை அபேக்ஷிக்கிற யஜ்ஞ என்னும் பதத்தினுல் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கிற இந்த்ரன் முதலிய தேவதையை என்கிற அபிப்ராயத்தினுல். 'இந்த்ரன் முதலிய' என்று. சொல்லப்பட்டது. '[1] யாம் யாம் தநும்' என்று கீழ்ச் சொன்னதை ஞாபகப்படுத்துகிறார்— 'எனக்கு தேஹமாகிய' என்று. அசேதனமாகிய வஸ்து கர்மத்தினுலல்லவோ ஒருவனுக்கு ஶரீரமாகிறது. அப்படிக் கிவ்விடத்தில ஶரீரமாக இருக்கை ஒரு ஸமயத்திலுண்டானதல்ல என்று தெரிவிப்பதற்காகப் பாஷ்யத்தில் 'தேஹே ஸ்தித' என்று வ்யாக்யானம் பண்ணுமல் 'தேஹபூதே' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. தேஹமாகிய கேவலம் இந்த்ராதிகளை விலக்கு

---

1 ௭, 7, 21.

பா] இதுவும் மூன்று அதிகாரிகளுக்கும் ஸாதாரணமானது மரண காலத்தில் என்னையே நினைத்துக்கொண்டு மரீரத்தைவிட்டு எவன் போகிறனோ அவன் என்னுடைய ஸ்வபாவத்தை அடைகிறான். அதாவது அப்பொழுது எவ்விதமாக என்னை அனுஸந்தானம் செய்கிறனோ அப்படிப்பட்ட ஆகாரத்தை உடையவனாக ஆகிறான். எப்படி ஆதிபரதன் முதலியவர்கள் அப்பொழுது தன்னால் நினைக்கப்பட்ட மான் போன்ற ஆகாரத்தை உடையவர்களானார்களோ அப்படியே, என்று அர்த்தம். 5

---

தா] 'வ்யாணகமே' என்கிற பாதி ம்லோகத்தில் கேட்ட கேள்விக்கு இந்த ம்லோகம் சுருக்கமானபதில் ஆதலால் ஜ்ஞானிமையமாத்திரம்பற்றியதல்ல. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதுவும்' என்று. 'ஸுயியஜ்ஞம்' என்னப்படும் வஸ்துவின் ஸ்வபாவத்தினாலும் மேலே சொல்லப்போகிற ந்யாயத்தினாலும், என்று தாத்பர்யம். அன்வயத்தைக் காட்டுகிறார்.—'மரண காலத்தில்' என்று ஆரம்பித்து. 'ஸோ ஸயாதி' என்கிற இடத்தில் ம்ருதி முதலியவைகளுக்கு விரோதமான ஐக்யத்தை அடைகிறான் என்று அர்த்தம், என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்.—'என்னுடைய ஸ்வபாவத்தை' என்று. ஈம்வரனுடைய ஸ்வபாவத்தை அடையும்பொழுது இவனும் குளவியின்கூட்டில் வைக்கப்பட்ட புழு குளவியாவதுபோல அவனும் வேறொரு ஈம்வரனாகவேண்டி வருமே. மூன்று அதிகாரிகளுக்கும் 1 எட்டுக் குணங்களாகிய பகவானுடைய ஸ்வபாவத்தை அடைவது ஸமமானால் அதிகாரிகளுக்குப பேதமும் இல்லாமற்போகட்டுமே? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அப்பொழுது' என்றுஆரம்பித்து அவரவர்களால் அனுஸந்தானம் செய்யப்படுகிற ஆகார விமேஷங்களினால் ஸாம்யத்தை அடைவது சொல்லப்படுகிறது. ஸாம்யமாவது ஸ்வரூபம் வேறென்று தெரிவிக்கக்கூடிய வ்யத்யாஸம் இருந்துகொண்டிருக்கும்பொழுதே. ஆகையினால் ஒருதோஷமும் இல்லை. என்று தாத்பர்யம். இப்படி, கேள்விகள் பதில் சொல்லப்பட்டதுகள். 'நாஸ்த்ர ஸம்மய:' என்கிற இத்தால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட காரணத்தின் ப்ரஸித்தியைக் காட்டுகிறார்.—ஆதிபரதன் முதலியவர்கள்' என்று ஆரம்பித்து. இந்த உதாஹரணத்தினாலும் ஐக்யத்தை அடைதல் என்கிற ப்ரமம் நிராகரிக்கப்பட்டது. ஆதிபரதருக்குத் தன்னால் நினைக்கப்பட்ட ம்ருகத்தோடு ஐக்யமுண்டாக வில்லையல்லவா. பின்னை ஏதென்னில்? அந்த மானுக்கு ஸமமான ஆகாரத்தை உடைய மான்மரீரத்தை அடைதலே உண்டானது. என்று அந்தச் சரித்திரத்திலேயே ஸித்தமாக இருக்கிறது. 'அப்பொழுது' என்பதற்குத் தேஹத்தைவிட்டுப் பிரியுங்காலத்தில் என்று அர்த்தம். 5

---

1 கர்மங்களில்லாமை கிழத்தன மில்லாமை முதலியன ம்ருதியில் சொல்லப்பட்டவைகள்.

பா] நினைக்கிறவனுக்கு நினைக்கப்படும் வஸ்துவுக்கு ஸமானமான ஆகாரத்தை உண்டாக்குதல் [1] அந்திம ப்ரத்யயத்தின் ஸ்வபாவம், என்று ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறார்.

*யம்யம்வாபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே கலேவரம் |*
*தம்தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித꞉ ||* (அ)

ப-உரை] *அந்தே* மரணகாலத்தில், *யம்யம்வாபி* எந்தெந்த, *பாவம்* ஸ்வபாவத்தை, *ஸ்மரந்* நினைத்துக்கொண்டு, *கலேவரம்* சரீரத்தை *த்யஜதி* விடுகிறானோ, *கௌந்தேய* ஓ அர்ஜுந, *ஸதா* எப்பொழுதும், *தத்பாவபாவித꞉* அந்த ஸ்வபாவத்தையே நினைத்துக்கொண்டிருப்பவனாய், *தம்தமேவ* அந்தந்த ஸ்வபாவத்தையே, *ஏதி* அடைகிறான். 6

பா] மரணகாலத்தில் எந்தெந்த ஸ்வபாவத்தை நினைத்துக்கொண்டு சரீரத்தை விடுகிறானோ, அந்தந்த ஸ்வபாவத்தையே மரணத்துக்குப் பின்

தா] இது பகவானைப்பற்றிய அந்திமப்ரத்யயத்துக்கு மாத்திரம் ஸ்வபாவம் என்று நினைக்கவேண்டாம். பின்னை யெப்படி யென்னில், எல்லாவற்றிற்கும் பொதுவான இது இங்கும் சொல்லப்பட்டது. என்று காரணம் 'யம்யம்' என்னும் ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—நினைக்கிறவனுக்கு, என்று ஆரம்பித்து. 'அந்தே' என்னும் பதமானது முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட மரணகாலத்தைச் சொல்லுகிறது. அந்தப் பதத்திற்கு, அந்திமப்ரத்யயத்தின் ப்ரபாவத்தைத் தெரிவிப்பதற்காக 'ஸ்மரந்' என்பதோடு அன்வயம் சொல்லவேண்டியது, என்று காட்டுகிறார் —மரணகாலத்தில் என்று ஆரம்பித்து. இரட்டித்துச் சொல்லி இருப்பதினாலும் 'வாபி' என்று சொல்லி இருப்பதினாலும் நினைக்கப்படும் விஷயம் இன்னதென்கிற நியமம் இல்லை, என்பதும், உயர்ந்த விஷயம் தாழ்ந்த விஷயம் என்கிற வ்யத்யாஸமில்லை, என்பதும் காட்டப்பட்டது. 'தம்தம்' என்று இரட்டித்துச் சொல்லி இருப்பதினால், கணக்கற்ற அந்தந்த ஸ்வபாவங்களை அடைதல் சொல்லப்படுகிறது. 'ஸதா' என்றதினால் ப்ரபல புண்ணியங்களினாலும் இது தடுக்கமுடியாது, என்பது சொல்லப்படுகிறது. பாவ என்னும்பதமானது இவ்விடத்தில் ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. வஸ்துவைப்பற்றிய ஞாபகமோ ஞானமோ ஏற்படுகிறது. இவ்விடத்தில் 'பாவ' என்னும் பதம் அந்த அர்த்தத்தில் இல்லாததினால், கீழ் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட 'பாவ' என்னும் பதத்தின் அர்த்தத்

1 கடைசி நினைவு அதாவது மரணகாலத்திலுண்டாகும் ஞாபகம்.

பா] னிட்டு அடைகிறான். இந்த அந்திம ப்ரத்யயமும், முன்பு நினைத்துக் கொண்டிருந்த விஷயத்தைப்பற்றியே உண்டாகிறது. 6

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்ய ச ।
மய்யர்பிதமநோபுத்திர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶய: ॥ (எ)

ப-ரை] தஸ்மாத் ஆகையினாலே, ஸர்வேஷு எல்லா, காலேஷு காலங்களிலும், மாம் என்னை, அநுஸ்மர நினைத்துக்கொண்டிரு, யுத்ய ச யுத்தமும்செய், (இவ்விதமாக) மயி என்னிடத்தில், அர்பிதமநோபுத்தி: ஸமர்ப்பிக்கப்பட்ட மனஸ்ஸு புத்தி இவைகளை உடையவனாய்க் கொண்டு, மாமேவ என்னையே, ஏஷ்யஸி அடையப்போகிறாய், அஸம்ஶய: ஸந்தேஹமில்லை. 7

எந்தக்காரணத்தினால் முன்காலத்தில் பரிசயம் செய்யப்பட்ட விஷயத்தைப்பற்றியே அந்திம ப்ரத்யயம் உண்டாகிறதோ. ஆதலால் எல்

---

தா] தைவிட வேறு அர்த்தம் கூறுதல்,' என்னும் தோஷம்வரும் தஞ்ஜ ஸேவ'என்கிற இடத்தில் அதநின்ஸாம்பத்தைஎன்று லக்ஷணை சொல்ல வேண்டிவரும. 'தஞ்ஜஸேவைதி' என்கிற இடத்தில் ஏதாவது ஒரு ஜன்மத்தில் எல்லாருக்கும நேரக் கூடியதான அநத ஜாதியிற் பிறப்புமாத்திரம் அர்த்தம. என்பதை விலக்குவதற்காக 'மரணத் துக்குப் பின்னிட்டு' என்று சொல்லபபட்டது. ஆகிபரதர்மாறு கும் பொழுது நடுவில் வேறு ஜன்மங்கள் உண்டாகவில்லை யல்லவா. 'ஸதா தத்பாவபாவித:' என்பதினால் இந்த அந்திம ப்ரத்யபத்திற்குக் காரணம் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்— இந்த அந்திம ப்ரத்யயமும்' என்று. "தத்பாவபாவித:" என்பதற்கு அதைப்பற்றிய நினைவினால் வாஸனையை உண்டாக்கப்பட்டவன் என்றுவது, எவனால் அந்த வஸ்துவினிடத்தில் மனது வைக்கப்பட்டிருக்கிறதோ, என்றவது அர்த்தம சொலலிக்கொள்ள வேண்டியது. 6

இப்படி அந்திம ப்ரத்யபத்துக்கு வஶப்பட்டு பலம் வர வேண்டிய தாகையினால் அந்திம ப்ரத்யயமும் இடைவிடாமல் த்யானம் செய்வதினாலுண்டாகக் கூடிய தாகையினால், உன்னாலும் அபபடிப்பட்ட த்யானமும் அதற்கு ஒத்தாசைக் காரணமான கர்மமும் செய்பத்தக்கது, என்று இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது. 'ஸர்வேஷு காலேஷு' (எல்லாக் காலங்களிலும்) என்பதினால் 1 அவன் தன் ஆயுஸ்ஸுவரையிலும் இப்படியே இருந்துக்கொண்டு ப்ரஹ்மலோகத்தை அடைகிறான்' என்றும் 2 'ப்ர

---

1 சாந்தோக்யம் 8, 15, 1. 2 ப்ரஶ்ந உபநிஷத், 5, 1.

லாக் காலங்களிலும் மரணமடையும் தினம்வரையில் தினம்தோறும் என்னை த்யானம் செய். தினம்தோறும் த்யானம் செய்வதற்குக் காரணமா

*ப்ராணம் புறப்படும் வரையில் ப்ராணத்தை [illegible]' என்றும் அர்த்தமுள்ள ப்ரக்ருதி வாக்யங்கள் இருக்கின்றன. என் கிற அபிப்ராயத்தினால் 'மரணம் அடையும் தினம் வரையில்' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டது. ஸூத்ரமும் 1 'ஆப்ராயணாத் தத்ராபி ஹி த்ருஷ்டம்' என்று சொல்லி இருக்கிறது. மரணம் வரையில் அல்லது பக்ஷந்தோறும் த்யானம் செய்தாலும் மரணதினம் வரையில் என்று சொல்லலாம். ஆகையினால் அதை விலக்கவேண்டும் என்கிற அபிப்ராயத்தினால் பன்மையாகச் சொல்லி இருக்கிறது, என்று சொல்லுகிறார்—* தினம்தோறும், *என்று 2 '[illegible] பூர்வாபரராத்ரயோர்யுஞ்ஜாந:' என்றிவை முதலிய ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட [illegible] யுஞ்ஜாந விருப்பதற்குத் தகுதியான ஸத்வகுணம் மேலிட்ட காலங்களில், என்று சொல்லப்பட்டதாகிறது. அப்படியே ஸூத்ரமும் 3 'யத்ரைகாக்ரதா தத்ராவிசேஷாத்' என்று சொல்லி இருக்கிறது. 'யுத்யஸ்வ' என்று விதிக்கப்பட்ட யுத்தம் இவ்விடத்தில் 4 'ஃபலவத்ஸந்நிதாவஃபலம் தததங்கம்' என்கிற ந்யாயத்தினால் அந்த த்யானத்திற்கு அங்கம் என்பது ஏற்பட்டது அந்த யுத்தமும் இவ்விடத்தில் ப்ரஸ்தாவித்திருக்கிறபடியினால் உபலக்ஷணமாகச் சொல்லப்பட்டது ஆகையினால் ப்ரமாணங்களில் ஏற்பட்ட தம்முடைய வர்ணாச்ரம கர்மங்கள் யாவற்றையும் செய்ய வேண்டியது, என்று சொல்லப்பட்டதாகிறது, என்னும் அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—* தினம் தோறும் த்யானம் செய்வதற்குக் காரண

1 *ஶாரீரகஸூத்ரம்,* 4, 1, 12, *ஆப்ராயணாத்—மரணம் அடையும் தினம்வரையிலும் உபாஸநம் செய்யவேண்டும், தத்ராபி த்ருஷ்டம்—அது விஷயத்திலும் ப்ரக்ருதியிருப்பதினால்*

2 *பாதஞ்சலயோக ஶாஸ்த்ரம் தம் [illegible] பூர்வாபரராத்ரயோ: ராத்ரியின்முன் பாகத்திலாவது, பின்பாகத்திலாவது, யுஞ்சாந:—யோகாப்யாஸம் செய்து கொண்டு,*

3 *ஶாரீரகஸூத்ரம்* 4. 1,11, *யத்ர-எந்த இடத்திலும் காலத்திலும், ஏகாக்ரதா-மனதுக்கு ஸமாதான முண்டாகுமோ, தத்ர அந்த இடத்திலும் காலத்திலுமுபாஸனம் செய்யவேண்டும். அவிசேஷாத் வேறொரு விசேஷமும் சொல்லாமையினால்,*

4 *கர்மமீமாம ஸாந்யாயம், ஒருகர்மத்திற்குப் பலம் சொல்லி மற்றொரு கர்மம் பலமின்றிச சொல்லியிருந்தால் பல மற்றது பலமுள்ள கர்மத்துக்கு அங்கம் என்பது கருத்து. 'இங்கே அந்திமப்ரத்யயமாகிறபலத்துக்காக, த்யானம்சொல்லப்பட்டது, யுத்தமதற்கு அங்கம்.*

யும், வர்ணாஶ்ரமங்களைச் சேர்ந்ததாயும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதிக்கப் பட்டதாயும் இருக்கிற யுத்தம் முதலியநித்ய நைமித்திககர்மங்களைச் செய். இவ்வித உபாயத்தினால் என்னிடத்திலேயே ஸமர்ப்பிக்கப்பட்ட மனஸ் ஸு புத்தி இவைகளை உடையவனாய்க் கொண்டு மரணகாலத்திலும் என்னையே நினைத்துக்கொண்டு, உன்னால் இஷ்டப்படப்பட்ட ஸ்வபாவத்

மாயும், என்று. வர்ணாஶ்ரமங்களைச் சேர்ந்ததாயும், என்பது இத்தால் குறிக்கப்படுகிற எல்லாக் கர்மங்களுக்கும் பொதுவான ஆகாரம். விதிக் கப்பட்டதாயும், என்பதினால் ஶாஸ்த்ரத்தை விதித்திருப்பது, ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட கர்மங்கள் தவிர மற்ற விஷயங்களைப் பற்றி, என்று காட்டப்பட்டது. நித்யநைமித்திகங்களை, என்பதினால் பலங்களில் ஆசையுடன் செய்யப்பட்ட கர்மங்கள் விலக்கப்பட்டன. 'மய்யர்பிதமநோபுத்தி:' என்பது கீழ்ச்சொல்லிய அர்த்தத்தை அனு வாதம் செய்கிறது, என்று காட்டுகிறார்—இப்படி. என்று உபாயத்தி னால், என்பதற்குக் கர்மம் முதலிய உபாயத்தினால், என்று அர்த்தம் இவ்விடத்தில் மனதை ஸமர்ப்பிக்கையாவது, எப்பொழுதும் நினைத் துக்கொண்டிருக்கை, புத்தியை ஸமர்ப்பிக்கையாவது பலத்தைக் கொடுக்கக்கூடியவன் அவனே என்கிற நிஶ்சயம், இந்த ஸந்தர்ப் பத்திலேற்பட்ட தான இடையில வரக்கூடிய வ்யாபாரத்தைச் சொல்லி இருக்கிறது. மரணகாலத்திலும் என்னையே நினைத்து க்கொண்டு' என்பது. அன்றிக்கே 'இவ்விடத்திலுபாயத்தினால்' என்று. கர்மங்களினுடைய லொத்தமை செய்யப்பட்ட த்யானமே சொல் லப்படுகிறது. அதின் ப்ரயோஜனம், 'மய்யர்பிதமநோபுத்தி:' என்று சொல்லப்பட்டது. அதின் அர்த்தம், மரணகாலத்திலும், என்னையே நினைத்துக்கொண்டு, என்பது. முன்பின் ஸந்தர்ப்பங்களில் தொடர்ந்து வருகிற மூன்றுவித அதிகாரிகளுக்கும் பொது ஆவதற்காக சொல்லு கிறார்—'உன்னுடைய இஷ்டப்படப்பட்ட ஸ்வபாவத்தோடு கூடிய' என்று '1 நிஸ்ஸம்ஶயேஷு ஸர்வேஷு நித்யம் வஸதிவை ஹரி: | ஸஸம்ஶ யாந்ஹேதுபலாந்நாத்யாவஸதி மாதவ:' என்கிற இடத்திலேபோ ல 'அஸம்ஶய:' (ஸம்ஶயமில்லாதவனாய்) என்று அர்ஜுனனுக்கு விஶேஷணமாக இருந்தாலும் அதினாலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்

1 மஹாபாரதம்மோக்ஷதர்மம், 369, 71, ஹரி:—பகவான், நிஸ்ஸம் ஶயே ஷு ஸந்தேஹமில்லாத ஸர்வேஷு எல்லாரிடத்திலும், நித்யம், எப்பொழுதும், வஸதி—இருக்கிறார், மாதவ:—பகவான், ஸஸம்ஶயான் ஸந்தேஹத்தோடுகூடிய வர்களிடத்திலும் ஹேதுபலாந் ஹேதுவாதம் செய்கிறவர்களிடத்திலும் நாத்யா வஸதி இருப்பதில்லை.

கிற ஸ்வபாவத்தோடு கூடியவனாக த்யானம் செய்துகொண்டு என்னையே அடைகிறான். ஆதிபரதர்மானாக இருக்கையை அடைந்ததுபோல ஐஸ்வர்யத்தை உடையவனாக இருக்கையினால் எனக்கு ஸமமான ஆகாரத்தை

---

தைச் சொல்லுகிறார்—'அவ்விடத்தில்' என்று. யோக, என்னும் பதத்திற்கு ஸம்பந்தம் என்று அர்த்தம் சொல்லும்பக்ஷத்தில் இவ்விடத்தில் ப்ரயோஜனமில்லையாதலால் அது த்யானத்தைச்சொல்லுகிறது, என்று சொல்வதே யுக்தம். தத்புருஷ ஸமாஸத்தைவிட த்வந்த்வ ஸமாஸம் இரண்டு பதங்களின் அர்த்தத்தையும் முக்யமாக உடையதாகையினால் ஒப்புக்கொள்ளத் தகுந்தது, என்று நினைத்துச்சொல்லுகிறார்—'அப்யாஸம் யோகம் இவைகளுடன் கூடி இருப்பதினால்' என்று—'நாந்யகாமி நா' என்கிற இது 'நைக' என்பதுபோல, நஞ்ஞோடு ஸமாஸமாகி, வேறொரு இடத்திலும் செல்லாத, என்றுஅர்த்தமாகிறது. அதாவது வேறு விஷயாந்தரங்களில போகும் ஸ்வபாவம் இதற்கில்லை, என்று அர்த்தம். அப்யாஸயோக என்னும் பதத்தினால் முன்பு நினைக்கவேண்டும் என்று சொல்லப்பட்டமையினால் 'அநுசிந்தயந்' என்பது அந்திம ப்ரத்யயத்தைச் சொல்லுகிறது என்று காட்டுவதற்காக 'மரணகாலத்தில்' என்று சொல்லப்பட்டது. அந்திம ப்ரத்யயத்திற்கும் த்யானத்திற்கும் இவ்விடத்தில் புருஷனே விஷயம் அந்தப் புருஷனும் பரமம் என்கிற விசேஷணத்தை அடைந்திருத்தலால் பகவான்தான், என்கிற அபிப்ராயத்தினால் 'என்னை' என்று சொல்லப்பட்டது. 'திவ்யம்' என்பதற்கு ஸூர்ய மண்டலத்திலே இருக்கிற என்று சங்கராசார்யரால் சொல்லப்பட்ட அர்த்தம் மூல ப்ரமாணத்தை அனுஸரித்ததல்ல. 1 'ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்' என்று மேலே சொல்லப்போகிறதற்கு விருத்தமாகவுமிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—மேலே சொல்லப்போகிற ஸ்வபாவத்தோடு கூடியவனை' என்று. அடுத்த இரண்டு ஸ்லோகங்களினால் என்றுசேர்த்துக் கொள்ளவும். ஐஸ்வர்யத்தை விரும்புகிறவனுக்கு அவனால் விரும்பப்படாத பகவானை அடைதல் பலமாக எப்படிச்சொல்லப்படுகிறது. என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—ஆதிபரதர், என்று. மரணகாலத்தில் த்யானம் செய்யப்படுகிற ஐஸ்வர்யத்தைக் கொடுப்பதற்கு உபயோகமான ஆகாரத்தை உடைய பரம புருஷனுக்கு ஸமானமான ஐஸ்வர்யத்தை அடைதல் தான் இவ்விடத்தில் பகவானை அடை

---

1 பகவத்கீதை 8, 9. 2 தமஸ: பரஸ்தாத் என்று ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேலே இருப்பவன் என்று சொல்லப்போகிறதற்கு விரோதம்

ப-ரை] கவிம் ஸர்வஜ்ஞனையும், புராணம் அநாதியாயும், அநுசாஸிதாரம் எல்லாவற்றையும் நியமிக்கிறவனையும், அணோ: அணுவான ஜீவனைக்காட்டிலும், அணீயாம்ஸம் மிகவும் ஸூக்ஷ்மமாகவும், ஸர்வஸ்ய எல்லாவற்றையும், தாதாரம் ஸ்ருஷ்டிக்கிறவனாகவும், அசிந்த்யரூபம் (மற்ற வஸ்துக்களுடன் ஸமம் என்று) நினைக்கமுடியாத ரூபத்தை உடையவனாகவும், ஆதித்யவர்ணம் ஸூர்யனைப்போன்ற வர்ணத்தை உடையவனாகவும், இருக்கிற, தமஸ: ப்ரக்ருதி மண்டலத்துக்கு பரஸ்தாத் மேலே இருக்கிற, திவ்யம் திவ்யனை, பரம்புருஷம் பரமபுருஷனை, பக்த்யா பக்தியோடும், யோகபலேந சைவ யோகத்தின் பலத்தோடும், யுக்த: சேர்ந்துகொண்டவனாய், அசலேந அசங்காத, மநஸா மனதினால், ப்ரயாணகாலே மரணகாலத்தில், ப்ருவோ: புருவங்களுடைய, மத்யே நடுவில், ப்ராணம் ப்ராணவாயுவை, ஆவேஶ்ய வைத்து, ய: எவன், ஸம்யக் நன்றாக, அநுஸ்மரேத் நினைக்கக்கடவனோ, ஸ: அவன், தம் அந்தப் பரமபுருஷனை, உபைதி அடைகிறான்.　　9,10

பா] எல்லாம் தெரிந்தவனையும், அநாதியாயும் எல்லாவற்றையும் நியமிக்கிறவனையும், ஜீவாத்மாவைவிட மிகவும் ஸூக்ஷ்மமாயும்,எல்லாவற்

---

*தா] நமக்குத் தெரியாத வஸ்துவைக்கண்டு அறிகிறவன் அல்லவோ கவி என்று சொல்லப்படுகிறான். இவ்விடத்தில் கவி என்னும் பதம் பகவானைப்பற்றிச் சொல்லுகிறபடியினால், எல்லாவற்றையும் கண்டறிந்தவன், என்பதைச் சொல்லுகிறது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லாம் தெரிந்தவனையும்' என்று. புராண என்னும் பதத்தினால், அநாதியாக இருத்தல் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'அநாதியாயும்' என்று சொல்லப்பட்டது. 'அநு' என்னும் உபஸர்க்கத்தோடுசேர்ந்த, 'ஶாஸி' என்னும் தாதுவானது, பிரித்துத் தெரிவிக்கிறது என்னும் அர்த்தத்தை மாத்திரம் சொல்லுகிறது. என்பதை விலக்குவதற்காக 'எல்லாவற்றையும் நியமிக்கிறவனையும்' என்று சொல்லப்பட்டது. ஈஶ்வரனாக இருப்பவன் தெரிவிக்கிறதாவது உத்திரவு செய்வதுதான், என்று தாத்பர்யம். யாரை நியமிக்கிறது, என்று கேட்கில், 'ஸர்வஸ்யதாதாரம்' என்கிற இடத்திலிருந்து 'ஸர்வஸ்ய' என்னும் பதத்தை இழுத்துக்கொள்ளவேண்டியது. அன்றிக்கே இவ்விடத்தில் ஒரு வஸ்துவையும் குறிக்காமையினால் எல்லாவற்றையும் பற்றியதுதான், என்கிற அபிப்ராயத்தினால், 'எல்லாவற்றை*

றையும் ஸ்ருஷ்டிக்கிறவனும் மற்றெல்லா வஸ்துவையும்விட வேறுபட்ட ஸ்வரூபத்தை உடையவனும், ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத தனக்கு

---

யும்' என்று சொல்லப்பட்டது. 1 'கார்கி! இந்த அக்ஷரத்தின் நியமனத்தில் ஆகாசமும் பூமியும் இவைகள் தாங்கப்பட்டவைகளாக நிற்கின்றன' என்று அர்த்தமுள்ள ச்ருதி வாக்யம் முதலியது இவ்விடத்தில் நினைக்கவேண்டியது. 2 'ஜனங்களுக்கு உள்ளே புகுந்து நியமனஞ் செய்கிற' என்று அர்த்தமுள்ள ச்ருதி வாக்யம் முதலியவைகளில நியமனத்தோடு சேர்த்துச் சொல்லப்பட்ட உள்ளே புகுவதற்கு உபயோகமான அதிக ஸூக்ஷ்மமாக இருக்கை இவ்விடத்தில் 'அணோரணீயாம்ஸம்' என்று சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'மிகவும் ஸூக்ஷ்மமாகவும்' என்று சொல்லப்பட்டது. 3 'முன்பு, தாதாவானவன் எதைச் சொன்னானோ' 4 'ஸூர்யன் சந்த்ரன் இவைகளை தாதா முன்போல ஸ்ருஷ்டித்தான்' என்றிவை முதலான இடங்களில தாதா என்னும் பதம ஸ்ருஷ்டிப்பவனிடத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிறபடியினால், தாதுக்களுக்கு அனேகார்த்தங்கள் உண்டானதினாலும், 'எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தவனும்' என்று சொல்லப்பட்டது, 5 'விஷ்ணுவினால தரிக்கப்பட்ட பூமியே' 6 'விஷ்ணுவென்று பெயருடைய எல்லாவற்றிற்கும் ஆதாரமான தேஜஸ்ஸை' என்று அர்த்தமுள்ள ச்ருதி வாக்யங்களில சொல்லப்பட்ட எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கை எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்த ஸர்வேச்வரனுக்கே பொருந்துமாகையினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லி இருக்கிறதாகவுமாம். இப்படிப்பட்ட ஸ்வபாவங்களை உடையவனானவனுடைய ஸ்வரூபத்தைப் பொதுவாய்ப் பார்க்கப்பட்ட யுக்திகளைக் கொண்டு இது ஸம்பவிக்கக்கூடியதல்ல, என்று சில நினைப்பவர்கள் ஆகையினால அவர்களை நிராகரிப்பதற்காக 'அசிந்த்யரூபம்' என்னும் பதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மற்றெல்லாவற்றையும் விட, வேறுபட்ட ஸ்வரூபத்தை உடையவனாகவும்' என்று. வர்ணத்தை உடைத்தாயிருக்கை ஸ்வரூபத்திற் பொருந்தாதாகையினால் ப்ரமாணங்களிலேற்பட்ட விலக்ஷணமான விக்ரஹத்தின் வழியாய் அதின் ஸம்பந்தத்தைச் சொல்லுகிறார். 'ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத' என்று 7 'எந்தத் தேஜஸ்ஸினால் வ்ருத்தி செய்யப்பட்டவனாய் ஸூர்யன் ப்ரகாசிக்

---

1 ப்ருஹதாரண்யகோபநிஷத், 5,8,9, 2 யஜுஸ் ஆரண்யகம், 3,3, 3 புருஷ ஸூக்தம்.. 4 தைத்திரீயம் நாராயணம், 1,38, 5 யஜுஸ்ஸு 6, 7 யஜுஸ் ஸு தைத்திரிய ப்ராம்மணம், 3,12,9,

கிறானென்' என்றும் 1 'ஸூர்யன் எவனுடைய ப்ரகாஶத்தை உபயோக ப்படுத்திக் கொண்டு ப்ரகாஶிக்கிறானோ, என்றும் '2 அந்தப்பகவானு டையப்ரகாஶத்தினால் இந்த எல்லாவஸ்துக்களும் ப்ரகாஶிக்கின்றன, என்றும் 3 'அந்த பகவானே தேவதைகள் ப்ரகாசமுள்ள வஸ் துக்களெல்லாவற்றையும் விட ப்ரகாசமுள்ளவனாக', என்றும் அர்த்த முள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில், எல்லையில்லாத ப்ரகாசத்தை உடையவனாக இருக்கை ஸித்தமாக இருக்கிறது. "ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்" 4 என்று ஶ்ருதி வாக்யத்தின் ஒரு பாகத்தை எடுத் துச் சேர்த்திருப்பது 5"தமஸ் இருந்தது" என்றும் 'எப்பொழுது தமஸ் இருந்ததோ" என்றும் அர்த்தமுள்ள மற்ற ஶ்ருதி வாக்யங்க ளையும் காட்டுவதற்காக. இத்தால் "தமஸ:" என்று எல்லாவற்றிற்கும் காரணமாகிய தமஸ் என்னும் த்ருவ்யம் சொல்லப்படுகிறது. அதற்கு மேல்என்பதினால் ப்ரக்ருதி ஸம்பந்தமற்றதுஎன்பது ஏற்பட்டது. அதி னாலேயே கர்மங்களுக்கு வஶப்படாமலிருக்கை, நித்யமாக இருக்கை, ஒருவிதமான தோஷமுமில்லாமலிருக்கைமுதலியது ஏற்பட்டது. இந்த ஶ்லோகத்துக்கு ஸமானமான அர்த்தமுள்ள மனுவினால் சொல்லப் பட்ட 6" ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் | ருக்மாபம் ஸ்வப்னதீகம்யம் வித்யாத்தம் புருஷம் பரம்॥" என்கிற ஶ்லோகமுமிரு க்கிறது. ப்ரீதியுள்ளவர்களுக்கு நன்மையைக் கொடுக்கக் கூடியதும் அழகாயுமிருக்கிறதினால் 'ஹிரண்யவர்ணம்' என்றும் "ருக்மாபம்" என்றும் சொல்லப்படுகிறது. விரோதிகளுக்குப் பார்க்கமுடியாமையை யும் அதிக ப்ரகாஶத்தையும் மனதில் வைத்துக்கொண்டு "ஆதித்ய வர்ணம்" என்று சொல்லி இருக்கிறது. 7"திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய" என்றிவை முதலானதும் மேலே சொல்லப் போகிறார். இத்தால் "ஆதித்ய" என்னும் பதம் நித்யமான ஜ்ஞானத்தின் ப்ரகாஶத்தைச் சொல்லுகிறது என்றும், "தமஸ:" என்னும் பதம், அஜ்ஞானத்தைச்

1 ருக்வேதம். 2 முண்டகோபநிஷத், 2,2,11, 3 ப்ரஹதாரண்யகோபநிஷ த், 7, 4, 16, 4 யஜுஸ் 2 அஷ்டகம், 7, 9 5 ஶ்வேதாஶ்வதரோப . நிஷத் 6 மனு, 12, 122,

ஸர்வேஷாம்- எல்லாவற்றிற்கும், ப்ரஶாஸிதாரம்- நியமிக்கிறவனாயிருக்கிற, அணீயஸாம்- மிகவும் ஸூக்ஷ்ம வஸ்துக்களுக்கும், அணீயாம்ஸம்- மிகவும் ஸூ க்ஷ்மமான, ருக்மாபம்- ஸ்வர்ணம் போல காந்தியையுடைய, ஸ்வப்னதீகம்யம்- கனவுகண்டதுபோலிருக்கும் ஜ்ஞானத்தினால் அறியத்தகுந்த, பரம்புருஷம்- பரம புருஷனை, வித்யாத்- அறியக்கடவன்.

7 பகவத்கீதை, 11, 12,

அஸாதாரணமான திவ்யரூபத்தை உடையவனாயும், இப்படிப்பட்டவனாக இருக்கிற பகவானை தினந்தோறும் அப்யஸிக்கப்படுகிற பக்தியுடன் சேர்ந்தயோகத்தின் பலத்தினால் உறுதியானஸம்ஸ்காரத்தை உடைத்தாய்இருக்கையினாலே சலிக்காதமனதினால், மரணகாலத்தில் புருவங்களின்நடுவில் ப்ராணவாயுவை நிற்கும்படிச்செய்து அந்தப் புருவங்களின்நடுவிலே மேற்கூறியதிவ்யஞானபரமபுருஷனை எவன்நினைக்கக்கடவனோ, அவன் அவனை

---

சொல்லுகிறது என்றும், அபலர் சொன்னது நிராகரிக்கப்பட்டது. இந்த இரண்டு ச்லோகங்களுக்கும் அன்வயத்தைக் காட்டுகிறார்—'இப்படிப்பட்டவனாகவு மிருக்கிற' என்று ஆரம்பித்து. "பக்த்யா யுக்தோ யோகபலேந" என்று தனித்துச் சொல்லி இருக்கிறபடியினால் மற்றவர்கள் சொல்லியபடி ப்ராணவாயுவை ஜயிப்பது, பலம் முதலிய தனித்தனியான அர்த்தத்தைச் சொல்லுகிறது என்கிற ப்ரமம் உண்டாகும் அதை நிராகரிப்பதற்காகச் சேர்ந்து ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்று காட்டுவதற்காக 'பக்தியுடன் சேர்ந்த யோகத்தின் பலத்தினால்' என்று சொல்லப்பட்டது. மனது சலியாமலிருக்கைக்குக் காரணமிது. இதற்கு நடுவில் வரக்கூடிய வ்யாபாரம் [illegible] என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற "யோக:" என்கிற பதத்தினால் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'உறுதியான ஸம்ஸ்காரத்தை உடைத்தாய் இருக்கையினாலே' என்று. "அசலேந" என்பதினால் யோகத்தைச் சொல்லுமிடங்களில் சொல்லப்பட்ட சலியாமல் நிலைநிறுத்தல் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—''நிற்கும்படிசெய்து' என்று. இவ்விடத்தில் புருஷனை த்யானம் செய்வதற்கும் புருவங்களின் நடுவே இடமென்று தேசம் சொல்லாமையாலும், யோகப்ரகரணங்களில் இந்த இடமாகச்சொல்லி இருப்பதினாலும் இதுவே இடமாகவிருக்கிறது, என்று நினைத்து 'அந்தப் புருவங்களின் நடுவிலே' என்று சொல்லப்பட்டது. இப்படிப்பட்டவனாக இருக்கும் பரம புருஷனை என்று அன்வயம் சொல்லிக்கொள்ள வேண்டியது. 'தமேவைதி' என்கிற இடத்தில் 'ஏவ' இருக்கிறபடியினால் 'ஸதம் பரம் புருஷமுபைதி' என்கிற இடத்திலும் 'தம்' என்பதும் மற்றதை விலக்குகிறது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அவன் அவனையே அடைகிறான்' என்று 'யஃ ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி' என்று ஆரம்பிக்கப்பட்ட மாதிரியாகவே இங்கும்

யே அடைகிறான் அந்தப்பரம புருஷனுடைய ஸ்வபாவத்தை அடைகிறான் அவனுக்கு ஸமமான ஐஶ்வர்யத்தை உடையவனாகிறான், என்று அர்த்தம். 9,10

பா] பிறகு கைவல்யத்தை விரும்கிறவர்களுக்கு நினைக்கவேண்டிய மாத்திரியைச் சொல்லுகிறார்—

*யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விஶந்தி*

*யத்யதயோ வீதராகா: ।*

*யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி*

*தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ॥ ११*

ப-ரை] வேதவித: வேதம் தேரிந்தவர்கள், யத் எந்த, அக்ஷரம் ப்ரஹ்மத்தை, வதந்தி சொல்லுகிறார்களே; வீதராகா: ஆசையற்ற, யதய: ஸன்யாஸிகள், யத் எந்த ப்ரஹ்மத்தை, விஶந்தி ப்ரவேஶிக்கிறார்களோ, யத் எந்த ப்ரஹ்மத்தை, இச்சந்த: அடையவிரும்புகிறவர்கள், ப்ரஹ்மசர்யம் ஊர்த்வரேதஸ்ஸாக இருத்தல் முதலிய ப்ரஹ்மசர்யத்தை, சரந்தி செய்கிறார்களோ, தத் அந்த, பதம் அறியவேண்டிய வஸ்துவை, ஸங்க்ரஹேண சுருக்கமாக, தே உனக்கு, ப்ரவக்ஷ்யே சொல்லப்போகிறேன். 11

---

*சொல்லபபடுகிறது என்று காட்டுகிறார்—'அந்தப் பரம புருஷனுடைய ஸ்வபாவத்தை அடைகிறான்' என்று. இங்கு அவனை என்று சொன்னது, அவனுடைய ஸ்வபாவத்தைக குறிக்கிறது என்று. தாத்பர்யம். இவ்விடத்தில ஐக்யம அர்ததம் என்னும் ப்ரமத்தை நீக்குகிறார்—'அவனுக்கு ஸமமான' என்று ஆரமபிதது மேலான ஸாம்யததை அடைவதை விலக்குவதற்காக 'ஸமமான ஐஶ்வாயத்தை உடைவன்' என்று சொல்லப்பட்டது. இததால் 'கவிம்' என்றிவை முதலிய பதங்களினால் எல்லாவற்றையும தெரிநதவனாக இருக்கை முதலிய குணங்கள் ஐஶ்வாயத்தைக் கொடுப்பதற்கு உபயோகமாக அனுஸந்திக்க வேண்டியவைகள்என்று சொல்லப்பட்டதுகள். அவைகள் அடையத் தகுந்தவைகளாகவேண்டியதற்காக அல்ல, என்று ஏற்பட்டது. இப்படி மரண காலததில் நினைக்கவேண்டியதாகக் குறிக்கபபட்ட ஆகாரமே அதற்கு முன்பும் த்யானம செய்யததக்கதாகச சொலலப்பட்டது, என்று நினைக்கவேண்டியது, இபபடியே மேலும் கண்டு கொள்ளவேண்டியது.*

லப்படுகிற அப்படிப்பட்ட எல்லா வேதாந்தங்களினுலும் அறியப்படுகிற என்னுடைய ஸ்வரூபமாகிய அக்ஷரம் எப்படி உபாஸிக்கத்தக்கதோ அப்படி சுருக்கமாய் உனக்கு சொல்லப்போகிறேன் என்றர்த்தம்.    11

**ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்ய ச ।**
**மூர்த்ந்யாதாயாத்மந: ப்ராணமாஸ்திதோ யோகதாரணாம் ॥**
**ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந் ।**
**ய: ப்ரயாதி த்யஜந் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥ ௧௩**

ப-ரை] ஸர்வ எல்லா, த்வாராணி ஜ்ஞானம் வெளியில் பரவுவதற்கு வழிகளான இந்த்ரியங்களை, ஸம்யம்ய அடக்கிக்கொண்டு, மந: மனதை ஹ்ருதி ஹ்ருதய கமலத்திலிருக்கும் பரமாத்மாவினிடத்தில், நிருத்ய நிலையாக நிறுத்தி, யோகதாரணாம் யோகம் என்று சொல்லப்பட்ட சலிக்காத ஸ்திதியை, ஆஸ்தித: அடைந்தவனாய், ப்ரஹ்ம ப்ரஹ்மத்தைச்சொல்லுகிற, ஓமிதி ப்ரணவமாகிற, ஏகாக்ஷரம் ஒற்றை யெழுத்தை, வ்யாஹரந் வாயினுல் சொல்லிக்கொண்டு, மாம் என்னை அநுஸ்மரந் நினைத்துக்கொண்டு, ஆத்மந: தன்னுடைய, ப்ராணம் ப்ராண வாயுவை, மூர்த்நி தலையில், ஆதாய வைத்து, தேஹம் ஶரீரத்தை, த்யஜந் விட்டு, ய: எவன், ப்ரயாதி போகிருனே, ஸ: அவன், பரமாம் உயர்ந்த கதிம் ப்ரயோஜனமாகிய பரிசுத்தமான, ஜீவாத்மாவை யாதி அடைகிருன்.    13

---

என்று. இவ்விடத்தில் பதம் என்னும் பதத்தினுல் அறியத்தகுந்தது என்பதைச் சொல்லிக்கொண்டு அதின் வழியாய் உபாஸிக்கத்தக்கதா யிருக்கை அபிப்ராயமாகக் கொள்ளப்பட்டது என்று சொல்லுகிறூர்—'மனதினுல்' என்று யத் (எந்த) தத் (அந்த) என்னும் பதங்களினுல் நினைக்கப்பட்ட ப்ரஸித்தியைக்காட்டுகிறூர்—'எல்லாவேதாந்தங்களினுலும்' என்று அக்ஷரம் என்னும் பதம் இவ்விடத்தில் மாறுதல் முதலிய தோஷங்களில்லாத பரமாத்மாவைச் சொல்லுகிறதாதலால் 'என்னுடைய ஸ்வரூபமாகிய' என்று சொல்லப்பட்டது. எனக்கு அஸாதாரணமான ரூபமாகிய என்றர்த்தம். விகாரமற்ற ரூபத்தையுடையபரமாத்மாவின் உபாஸனம் இவ்விடத்தில் விகாரமற்ற ஸ்வரூபத்தை யுடைய ஜீவாத்மாவை அடைவதற்காக.    11

பா] காது முதலிய ஜ்ஞானம் பரவுவதற்கு வழிகளான எல்லா இந்த்ரி யங்களையும் அடக்கி அதாவது தங்கள் தங்கள் வ்யாபாரங்களி லிருந்து நிவ்ருத்திக்கும்படி செய்து ஹ்ருதய கமலத்திலிருக்கும் அக்ஷரமாகிய என் னிடத்தில் மனதைச் செலுத்தி யோகமென்று பெயருடைய தாரணை யை யடைந்தவனும் அதாவது என்னிடத்திலேயே சலிக்காத ஸ்திதியை

தா] 'ஸர்வத்வாராணி' என்கிற இடத்தில் நவத்வாரங்களேதான் நம்-அவ ற்றை நிராகரிப்பதற்காகவும் ப்ரத்யாஹாரத்தைச் சொல்லுகிறதென்று தெரிவிப்பதற்காகவும் சொல்லுகிறார்—'காது முதலிய' என்றாரம்பித்து. த்வாரமில்லாத தோல் முதலிய இந்த்ரியத்துக்கு த்வாரமென்னும் பதத் திற்கு அர்த்தமாயிருக்கை எப்படிப் பொருந்தும் என்கிற கேள்விக்கு ஸமாதானமாக 'ஜ்ஞானம் பரவுவதற்கு வழிகளான' என்று சொல்லப் பட்டது. அடக்குதலாவது இவ்விடத்தில் ஶப்தம் முதலிய விஷயங்க ளில் போகாமல் தடுத்தல் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'தங்கள் தங்கள் வ்யாபாரங்களிலிருந்து நிவ்ருத்திக்கும்படி செய்து' என்று 'மனோ ஹ்ருதி நிருத்ய' என்கிற இடத்தில் கேவலம் ஹ்ருதயமாத் திரம் த்யானம் செய்யத்தக்கதல்லவே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமா தானம் 'ஹ்ருதயகமலத்திலிருக்கும் அக்ஷரமாகிய என்னிடத்தில்' என்று சொல்லப்பட்டது. ஹ்ருதி (ஹ்ருதயத்தில்) என்னும் பதம் ஹ்ருதயத் திலிருக்கும் புருஷனை லக்ஷணையாகச் சொல்லுகிறது, அப்ப டிக்கில்லாவிடில் 'மாமநுஸ்மரந்' (என்னை நினைத்துக்கொண்டு) என்று மேலே சொல்லப்போகிறது பொருந்ாது என்று தாத்பர்யம். பலமுள்ள 1 'அர்த்த க்ரமத்தினால் துர்பலமான' 2 'பாடக்ரமம் தடுக் கப்படுகிறதென்று நினைத்து 'மனோ ஹ்ருதி நிருத்ய' என்பதற்குப் பிறகு 'ஆஸ்திதோ யோகதாரணாம்' என்பது வ்யாக்யானம் செய்யப் பட்டது. ப்ரத்யாஹாரத்திற்குப் பிறகு சொல்லப்பட்ட தாரணையை விலக்குவதற்காகச் சொல்லுகிறார். 'யோகமென்று பேருடைய தாரணை யை' என்று ஆறாம் வேற்றுமை ஸமாஸத்தைவிட கர்மதாரய ஸமாஸ மே அங்கீகரிக்கத் தக்கதென்பது 3 'நிஷாதஸ்தபதிந்யாயத்தினா லேற்பட்டது' தாரணாம் என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லு கிறார்—'என்னிடத்திலேயே சலிக்காத ஸ்திதியை' என்று. ப்ரணவம் ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறதாகையினால் ப்ரஹ்ம என்று சொல்லியிருக்

1 வஸ்துவின் ஸ்வபாவத்தை அனுஸரித்த வரிசை க்ரமம்.

2 பாடத்தில் ஏற்பட்ட வரிசை க்ரமம்.

3 ஒரு மீமாம்ஸாந்யாயம் நிஷாதனுடைய ஸ்தபதி என்று அர்த்தம் சொல்ல வேண்டும் நிஷாதர்களுக்கு ஸ்தபதி என்று சொல்லக்கூடாதென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது.

பா]யடைந்தவனாய் என்னைச்சொல்லுகிற ப்ரணவமாகிய ஒற்றை யெழுத்தைச் சொல்லிக்கொண்டு அதின் அர்த்தமாகிய என்னை நினைத்துக்

தா] கிறது என்கிறஅபிப்ராயத்தினால்'என்னைச்சொல்லுகிற' என்றுசொல்லப்பட்டது. மந்த்ரம் அர்த்தத்தைப்ரகாசம் செய்துகொண்டு அதின் வழியாய் உபகாரம் செய்கிறதென்பதும் இங்கு ப்ரஹ்ம என்னும் பதத்தினால்ப்ரணவத்தைச்சொன்னதினால் ஏற்படுகிறது.என்கிற அபிப்ராயத்தினால் 'அதின் அர்த்தமாகிய என்னை நினைத்துக்கொண்டு'என்றுசொல்லப்பட்டது. ப்ரணவம்பகவானைச் சொல்லுகிறது என்பதும்,யோகத்திற்கு அங்கமென்பதும் ஶ்ருதி ஸ்ம்ருதி முதலியவைகளில் ஸித்தமாக இருக்கிறது. எப்படி எனில் கடவல்லியில் 1 'எல்லாவேதங்களும்எந்தப் பதத்தைச் சொல்லுகின்றனவோ எல்லாத் தபஸ்ஸுக்களும் எதையே சொல்லுகின்றனவோ எதை விரும்புகிறவர்கள் ப்ரஹ்ம சர்யத்தைச் செய்கிறார்களோ அந்தப் பதத்தை உனக்குச்சுருக்கமாகச் சொல்லுகிறேன் என்று சொல்லிமேலே ப்ரணவத்தை இதுதான்' என்று சொல்லியிருக்கிறது.இங்குப் பெயரினால் பெயரையுடைய வஸ்துவைக் குறிப்பிட்டிருக்கிறது. 2 'ப்ரணவம் வில்லாகவும் ஜீவாத்மா அம்பாகவும் அந்த ப்ரஹ்மம் குறிப்பாகவும் சொல்லப்படுகிறது ஸாவதானத்துடன் அடிக்க வேண்டும் அம்புபோல் தன் மயனாய் விடுவான்' என்றும் அப்படியே 3 'ஜீவாத்மாவைக் கீழ் அரணிக்கட்டையாகவும் ப்ரணவத்தைமேல் அரணிக்கட்டையாகவும் செய்து த்யானமாகிய கடைவதை அப்யாஸம் செய்தால் மறைந்திருக்கிற ப்ரஹ்மமாகிற அக்னியைப் பார்க்கலாம்' என்றும் அப்படியே 4 'பரமாத்மாவை ப்ரணவத்தாலேயே த்யானம் செய்யுங்கள்'என்றும் அப்படியே 5 'எவன் மூன்றுமாத்திரை யுள்ள ப்ரணவமாகிய அக்ஷரத்தினால் இந்தப் பரம புருஷனை த்யானம் செய்கிறானோ அவன் தேஜஸ்ஸாகிய ஸூர்யனிடத்தில் சேர்ந்தவனாய் எப்படி பாம்பு பழையதோலினால் விடப்படுகிறதோ அப்படியே பாபங்களினால் விடப்பட்டவனாய் ஸாமவேதகானத்தைச் செய்துகொண்டிருக்கும் புருஷர்களினால் (அல்லது உபசாரவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வரும் புருஷர்களினால்) ப்ரஹ்மலோகத்துக்கு அழைத்துக்கொண்டு போகப்படுகிறான். அவன் இந்த ஜீவாத்மாவை விட மிகவும் மேலானவனாய் எல்லா வஸ்துக்களுக்கு மந்தராத்மாவா

1. கடோபநிஷத், 1,2,16.

2. முண்டகோபநிஷத் 2-2-4. 3. த்யான பிந்துபநிஷத் 4, முண்டகோபநிஷத் 2-2-6; 5. ப்ரச்நோபநிஷத் 5-5.

பா] கொண்டு தன்னுடைய ப்ராணவாயுவைத் தலையில் வைத்துக்கொண்டு ஶரீரத்தைவிட்டு எவன்போகிறானோ, அவன்ப்ரக்ருதியைவிட்டு நீங்கினதாயும் எனக்கு ஸமமான ஆகாரத்தை யுடையதாயும் திரும்பிவருதலில்

தா] கிய புருஷனைப்பார்க்கிறான்' என்றும் அப்படியே. 1 'தன்னுடைய காரணத்துடன் சேர்ந்திருக்கும் நெருப்புக்கு ரூபம் காணப்படுகிற தில்லை ஆனாலும் நெருப்புக்கே நாஶமில்லை அதுமறுபடியும் விறகுடன் சேர்ந்ததினால் அறியப்படுகிறதோ அதைப்போலவே தன்னுடைய ஶரீரத்தில் ப்ரணவத்தினால் இரண்டையும் அறியலாம்' தன்னுடைய தேஹத்தை அரணிக்கட்டையாகவும் ப்ரணவத்தை மேலரணிக்கட்டையாகவும் செய்து த்யானமாகிய கடைவதை அப்யாஸம்செய்தால் மறைந்திருக்கும் தேவனைக் காணலாம் என்றும் இந்த ப்ஶலோகத்திலேயே ஹ்ருதயத்தி லிருக்கும் விஷ்ணுவைப் பார்க்கலாம்'என்று யோகயாஜ்ஞவல்க்யருடைய பாடம். அப்படியே 2 'வெண்கலமணியின் ஓசை ஓய்வதற்காக எப்படி அடங்குகிறதோ அப்படியே சாந்தியை விரும்புகிறவனால் ப்ரணவம் உச்சரிக்கத்தக்கது அந்த நாதம் எந்த இடத்தில் லயிக்கிறதோ அது பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறது' என்றும் 3 'ப்ரணவமே ஆகாயமாகிய ப்ரஹ்மம் ப்ரணவமே ஆதியான ஆகாசம்'என்றும் 4 'ப்ரணவமாகிய ஒரு அக்ஷரமே ப்ரஹ்மம் இதற்கு நான்குவேதங்களும் நாலுகால்கள் இந்த அக்ஷரம் நாலுபாதங்களை யுடையது முதலாவது பாதத்திற்கு மாத்ரை ப்ருதிவீ அகாரம் என்றாரம்பித்து, முதலாவது சிவந்த நிறமும் மஞ்சள் நிறமுமுள்ளது மஹானான ப்ரஹ்மாவை தேவதையாகவுடையது இரண்டாவது ப்ரகாசமுள்ளது கறுத்தநிறமுள்ளது விஷ்ணுவை தேவதையாகவுடையது மூன்றாவது ஶுபையும் அஶுபையுமானது வெளுப்புநிறமுள்ளது ருத்ரனை தேவதையாகவுடையது இதன் கடைசியில் எந்த நான்காவது அரைமாத்ரையோ அது ப்ரகாசமுள்ளது எல்லா நிறமுமுள்ளது புருஷனை தேவதையாகவுடையது' என்றும் இவ்விடத்தில் அரைமாத்திரைக்கு தேவதையாகிய புருஷனே மும்மூர்த்திகளின்னடுவி லவதாரம் செய்திருக்கும் தரையுடன் கூடினவராய் இரண்டாவது மாத்திரைக்கு தேவதையாகிய விஷ்ணுவாகச் சொல்லப்பட்டார். அப்படியே 5 'ப்ரணவமே ப்ரஹ்மம் ப்ரணவமே இந்த எல்லாமும்' என்றும் 6 'ப்ரணவமே இந்த எல்லாம்'என்றும் அப்படியே 7 'எல்லா தேவதைகளும் ஹ்ருதயத்தி லிருக்கிறார்கள்

1, 2, 3. ஶ்வேதாஶ்வதரோபநிஷத், 1,13,14. 4. அதர்வஶிகோபநிஷத்.
5. தைத்திரீயம் ஶீக்ஷாவல்லீ 8,1.
6. சாந்தோக்யோபநிஷத், 1,18,1. 7. அதர்வஶிரஸ்ஸு 2வது கண்டம்.

லாததுமான ஜீவாத்மாவை அடைகிருன் என்றர்த்தம். 'யஸ்ஸவெடீ ஷாஷ்டு தெஷாநஸ்ஸ்தாநவிநஸ்தி । ஸவ்வெகாக்ஷரஉத்தாக்ஷஸா ஹாஃ வரஷாஂமதிஂ' என்றல்லவோ மேலேயும் சொல்லுகிருர். 13

ஹ்ருதயத்தில் ப்ராணவாயு இருக்கிறது நித்யமாகிய நீயும் ஹ்ருதயத்திலிருக்கிறுய் உனக்கு மாத்திரைகள் மூன்று அதற்குமேலே பரமபுருஷன் எது மேலானதோ அதுவே ப்ரணவம் எது ப்ரணவமோ அதுவே எல்லாவற்றிலும் நிறைந்தது எது எல்லாவற்றிலும் நிறைந்ததோ அதுவே அநந்தன் எது அநந்தனே அதுவே தாரம் எது தாரமோ அதுவே ஸூக்ஷ்மம் எது ஸூக்ஷ்மமோ அதுவே பரிசுத்தமானது எது சுத்தமானதோ அது வைத்யுதம் எது வைத்யுதமோ அதுவே பரப்ரஹ்மம்'என்றும். இவ்விடத்தில் ஸந்தர்ப்பத்தை அனுஸரித்து ப்ரதர்தன வித்யையிலேபோல ப்ரஹ்மத்தை கொஞ்சம் மறைத்துச் சொல்லியிருக்கிறதென்று அறியவேண்டியது. மோக்ஷத்தை விரும்புகிறவனுக்கு இந்தச்சரீரத்தைவிட்டுப் புறப்படும் பொழுதும் ப்ரணவம் சொல்லப்படுகிறது. 1 'பிறகு இந்தஜீவன் எப்பொழுது இந்தச்சரீரத்தினின்றும் உயரக்கிளம்புகிருனே அப்பொழுது இந்த ஸூர்யனுடைய கிரணங்களினலேயே உயரப்புறப்படுகிருன் ப்ரணவத்தைச்சொல்லிக்கொண்டுபுறப்படுகிருன் அவன், மனது எவ்வளவுகாலத்தில் போகுமோ அதற்குள்ளாக ஸூர்யனை அடைகிருன் இந்த ஸூர்யனே வித்வான்களுக்கு ப்ரஹ்மலோகத்தை அடைவிக்கிற வழியாகவும் அவித்வான்களுக்கு அந்த லோகத்துக்குப் போகவொட்டாமல் தடங்கலாகவு மிருக்கிறது அதைப்பற்றி இந்த ஸ்லோகமு மிருக்கிறது ஹ்ருதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் புறப்படுகின்றன அவைகளுக்குள் தலையைக்குறித்துப் புறப்படுகிறது ஒருநாடி அதிஞல் உயரக் கிளம்பி மோக்ஷத்தையடைகிருன் மற்றவைகள் அவரவர்களின கர்மங்களுக்குத் தக்கபடிப் போவதற்கு வழிகளாகின்றன' என்றும் அர்த்தமுள்ள ஸ்ருதிவாக்யங்கள் சொல்லியிருக்கின்றன மஹாபாரதத்தில் ருத்ரனுடையவார்த்தை 2 'ஓமித்யேவஸதாவிப்ராஃ பட்யத்வஂ த்யாதகேஶவம்' என்றிருக்கிறது பகவாஞகிய யாஜ்ஞவல்க்யரும் 3 'தேவதாயாஃ பராயாஶ்ச

1. சாந்தோக்யோபநிஷத், 8,6,5.

2. ஹரிவம்சம் விஷ்ணுபர்வத்தில் 137 11 விப்ரா: ப்ராஹ்மணர்களோ ஸதா எப்பொழுதும் ஓமித்யேவ· ப்ரணவத்தையே படத்வம் சொல்லுங்கள் கேசவம் பகவானை த்யாத த்யானம் செய்யுங்கள்.

3. யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியில் பராயா : தேவதாயா : பரதேவதைக்கு.

லம்ப: ப்ரணவோऽஸ்ய ஸ்ம்ருத:। கஶ்சிதாராதனாகாங்க்ஷீ விஷ்ணோர்பக்த்யா கரோ
தி வை॥ ததாராதனஸாந்நித்ய ப்ரதிமாம் வ்யஞ்ஜிகாம் யதா। தாம்ரப்ர
ஸ்தரவ்யாதிபாஷாணை: க்ருத்வா பாவம் நிவேஶயேத்। ஶ்ரத்தாபக்த்யாதரா
த்யைஶ்ச தஸ்ய தேவ: ப்ரஸீததி। ஓங்காரேண ததாத்மாயம்
உபாஸ்தே ஸ ப்ரஸீததி। ஸர்வத்வாராணி ஸம்யம்ய இத்யாரப்ய நிரூப்ய ச।
இத்யுக்த்வா யாவதந: ப்ராணஸ்யோக்தா யோகதாரணா। ஓமித்யே
காக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்। ய: ப்ரயாதி த்யஜந் தேஹம்
ஸ யாதி பரமாம் கதிம்। யதேதம் ப்ரணவேநாத்யமக்ஷரம் ப்ரதிபத்யதே।
தேநாக்ஷரேண வேதேந வேத்யம் ப்ரஹ்மாதிகச்சதி। ஏதச்சாலம்பநம்
ஶ்ரேஷ்டமேததாலம்பநம் பரம்। ஏததாலம்பநம் ஜ்ஞாத்வா ப்ரஹ்ம
பூயாய கல்பதே। ஶ்ருதிஷு விதிதோ ஹ்யேஷ வேதவாதரதோ ஹ்யாதிரா
தய: தஸ்யோங்கார: ஸ்ம்ருதம் நாதேநாஹ்நித: ப்ரஸீததி। தஸ்மா

---

ப்ரணவ: ப்ரணவம், ஆலம்ப: ஆலம்பனமாக, ஸ்ம்ருத: நினைக்கப்பட்டது. விஷ்ணோ: பகவானுடைய, ஆராதநாகாங்க்ஷ: ஆராதனம் செய்யவேண்டுமென்கிற ஆசையையுடைய, கஶ்சித் ஒருவன், பக்த்யா பக்தியினால், ததாராதனஸாந்நித்ய அவனை ஆராதனம் செய்வதிலும் அவன் ஸாந்நித்யம் செய்வதிலும், வ்யஞ்ஜிகாம் அடையாளமாகிய ப்ரதிமாம் பிம்பத்தை, தாம்ரப்ரஸ்தரவ்யாதி பாஷாணை: தங்கம் முதலிய உலோகங்களாலும் கல் முதலியவைகளாலும், யதா எப்படி கரோதி வை செய்கிறானோ, க்ருத்வா செய்து, பக்திச்ரத்தாதராத்யைச்ச பக்தி விச்வாஸம் ப்ரீதி முதலியவைகளால், பாவம் அபிப்ராயத்தை, நிவேசயேத் வைக்கக் கூடுவனால், தஸ்ய அவனுக்கு தேவ: பகவான், ப்ரஸீததி க்ருபை செய்கிறானோ ததா அப்படியே, ஓங்காரேண ப்ரணவத்தினால், ஆத்மா ஜீவாத்மா உபாஸ்தே உபாஸிக்கிறான், ஸ: அந்த பகவான், ப்ரஸீததி க்ருபை செய்கிறான். ஸர்வத்வாராணி என்றாரம்பித்து, பரமாம்கதிம், என்கிறவரையில் கீதாச்லோகமாகையினால் அங்கே அர்த்தமெழுதப்பட்டிருக்கிறதாகையினால் இங்குவிடுத்தோம். ய: எவன், ப்ரணவேந ப்ரணவத்தினால், ஏதம் இந்த, ஆத்யம் முதலாவது, அக்ஷரம் எழுத்தை, ப்ரதிபத்யதே அறிகிறானோ (அவன்), வேதேந வேதமாகிய, தேந: அந்த, அக்ஷரேண எழுத்தினால், வேத்யம் அறியத்தக்கதாகிய ப்ரஹ்ம ப்ரஹ்மத்தை. அதிகச்சதி அடைகிறான். ஏதத் இது. ச்ரேஷ்டம் சிறந்த, ஆலம்பனம் த்யானம் செய்யத்தக்கது. ஏதத் இது, பரம் மேலான ஆலம்பனம்' ஏதத் இந்த, ஆலம்பனம் ஆலம்பனமாகிய ப்ரணவத்தை, ஜ்ஞாத்வா அறிந்து, ப்ரஹ்மபூயாய ப்ரஹ்மமாவதற்கு கல்பதே தக்கவனாகிறான்.

ஷோமிதி க்ருத்வா தத்பரோ யுஞ்ஜீத ஸதத:। ப்ரஹ்மோங்காரவிதா
நேந தத்த்வேந ப்ரதிபத்யதே। என்று சொல்லியிருக்கிறார். இவ்விட
த்தில் நடுவில் பகவானுடைய வார்த்தைகளென்று ப்ரஸித்தங்களான
ஸர்வஜ்ஞாராணியென்கிற இரண்டுஶ்லோகங்களையு மெடுத்திருப்பதினால்
அவ்விடத்தில் மாம் (என்னை) என்று சொல்லியிருப்பதும் பகவானைப்
பற்றியதே. மறுபடியும் இவ்விடத்தில் ஹிரண்யகர்ப்பர் முதலியவர்க
ளின் ஸித்தாந்தங்களில் ப்ரணவத்தின் அர்த்தை விஸ்தாரமாகச்
சொல்லி முடிவிலும் சொல்லுகிறார்—த்ரிராத்மா த்ரிஸ்வபாவஸ்ச ததா
த்ரிவ்யூஹவானபி। பஞ்சராத்ரே ததா ஹ்யேஷ பகவத்வாசக: ஸ்ம்ருத:।
பலம் வீர்யம் ததா தேஜஸ் த்ரிராத்மேதி ஸம்ஜ்ஞித:। ஜ்ஞானைஶ்வர்யே
ததா ஶக்திஸ் த்ரிஸ்வபாவ இதி ஸ்ம்ருத:। ஸங்கர்ஷண: ப்ரத்யும்நோ ஹ்ய
நிருத்தஶ்ச த்ரிவ்யூஹ இதி நிர்திஷ்ட ஓங்காரோ விஷ்ணுரவ்யய:।
பகவத்வாசக: ப்ரோக்த: ப்ரக்ருதேர்வாசகஸ்ததா। வ்யக்தாவ்யக்தோ வாஸு
தேவ: ப்ரபவ: ப்ரளயஸ்ததா என்று. இவ்விடத்தில் ஹிரண்யகர்ப்பன் கபி

---

நிராமய : விகாரங்களில்லாத தேவ : பகவான் அத்ருஷ்ட விக்ரஹ : நம்மால் பார்க்கப்படாத விக்ரஹத்தை யுடையவன் பாவக்ராஹ்ய : மனதினால் அறியத்தக்க வன் தஸ்ய அவனுக்கு ஓங்கார : ப்ரணவம் நாம பேராக ஸம்ருதம் நினைக்கப்பட்டது தேந அந்தப்பேரால் ஆஹூத : கூப்பிடப்பட்டவனாய் ப்ரஸீததி க்ருபை செய்கிறான் தஸ்மாத் ஆகையினால் பூர்வம் முதலில் ஓமிதி க்ருத்வா ப்ரணவத்தைச் சொல்லித்தபர: பகவானிடத்திலேயே மனதைச் செலுத்தியுஞ்ஜீத யோகத்தைச் செய்யக்கடவன் ஓங்காரவிதாநேந ப்ரணவத்தைச் சொல்லுவதினால் ப்ரஹ்ம ப்ரஹ்மத்தை தத்வேந உண்மையாக ப்ரதிபத்யதே அறிகிறான். த்ரிராத்மா மூன்று வித ஆத்மாவையுடைய த்ரிஸ்வபாவ: மூன்றுவிதமான ஸ்வபாவத்தையுடைய த்ரி வ்யூஹ : மூன்று வ்யூஹத்தையுடைய ஏஷ : இந்த ப்ரணவம் பஞ்சராத்ரே பாஞ்ச ராத்ர சாஸ்த்ரத்தில் பகவத்வாசக: பகவானைச்சொல்லுகிறதாக ஸ்ம்ருத: நினைக்கப் பட்டிருக்கிறது பலம் வீர்யம் தேஜ: தேஜஸ்ஸு ததா அப்படியே த்ரிராத்மா மூன்றுஆத்மா இதி என்று ஸம் ஜ்ஞித: சொல்லப்பட்டது ஜ்ஞானைச்வர்யேஜ்ஞான ம் ஐச்வர்யம் இவைகள் ததா அப்படியே சக்தி: சக்தியும் த்ரிஸ்வபாவ இதி மூன்று ஸ்வபாவ மென்று ஸ்ம்ருத: நினைக்கப்பட்டது ஸங்கர்ஷண: ஸங்கர்ஷணன் அதன்பிறகு ப்ரத்யும்ன: ப்ரத்யும்னன்தனைவச அப்படியே அனிருத்த: அனிருத் தனும் த்ரிவ்யூஹ இதி மூன்று வ்யூஹங்களென்று நிர்திஷ்ட: சொல்லப்பட்டது ஓங்கார : ப்ரணவமே அவ்யய : அழிவில்லாத விஷ்ணு : விஷ்ணு பகவத்வாசக : பகவானைச் சொல்லுகிறதாக ப்ரோக்த : சொல்லப்பட்டது ததா அப்படி ப்ரக்ரு தே: ப்ரக்ருதியையும் வாசக: சொல்லுகிறதாகவும் ப்ரோக்த: சொல்லப்பட்டது வ்யக்தாவயக்த: ப்ரகாசனும் ப்ரகாசமில்லாதவனுமான வாஸுதேவ: வாஸுதேவ னே ப்ரபவ: உத்பத்தி ஸ்தானம் ப்ரளய: லயத்தை அடையுமிடம்.

லர் அவாந்தரதபஸ்ஸு ஸநத்குமாரர் பரஹ்மிஷ்டர் பசுபதி இவர்களு டைய ஸித்தாந்தங்களில் வெவ்வேறு அர்த்தங்களைச் சொல்லியிருக்கிற தே அதுவும் அந்தந்த வஸ்துக்களுக்கு அந்தர்யாமியாகிய பரமபுருஷனி டத்தில் முடிவை நினைத்துக்கொண்டு என்று அறியவேண்டும். ஆகை யினாலே தான் விஷ்ணுவைச்சொல்லுவதாக மரணகாலத்தில நினைக் கத்தக்கதாக "ஓங்காரம் விபுலமசிந்த்யமப்ரமேயம் ஸூக்ஷ்மாவ்யயம் த்ருவமசரம் ச யத் புராணம்। தத்விஷ்ணோ: பதமிஹ பத்மஜப்ரஸூதம் தேஹா ந்தே மம மநஸி ஸ்திதிம் கரோது" என்று முடிக்கப்படுகிறது இவ்விடத் தில் ப்ரணவத்தினாலேயே பகவானுக்கு அர்ச்சனம் செய்யவேண்டு மென்று சொல்லப்படுகிறது "ஸர்வான் தேவான் ஸமாஹித: । ஸ்வலிங்கைர் மந்த்ரைரர்ச்சயேத் புஷ்பாணி நமஸ்காரேண யதாக்ரமம்। ஆவாஹநாதிகம் கர்ம யந்ந ஸூக்தம் மயேஹ। தத் ஸர்வம் ப்ரணவேநைவ கர்தவ்யம் சக்ரபாணயே। ய: புருஷஸூக்தேந புஷ்பாண்யப ஏவ வா। தத்யாத் தேநார்ச்சிதம் ஸ்யாஜ்ஜகதிதம் ஸர்வம் சராசரம்। விஷ்ணுர்ப்ரஹ்மா ச ருத்ரஸ்ச விஷ்ணுரேவ திவாகர:। தஸ்மாத் பூஜ்யதமம் நாந்யமஹம் மந்யே ஜநார்தநாத்" என்னும் வசனங்களால். அப்

---

பத்மஜ ப்ரஸூதம். ப்ரஹ்மாவினாலுண்டாக்கப்பட்ட யத் எந்த புராணம் அநா தியான ஓங்காரம் ப்ரணவம் விபுலம் விஸ்தாரமானது அசிந்த்யம் நினைக்கமுடியா தது அப்ரமேயம் அளவிடமுடியாதது ஸூக்ஷ்மாவ்யயம் ஸூக்ஷ்மம் என்று பேரு டையது த்ருவம் அழிவில்லாதது அசரம் அசைவில்லாததோ, தத் அதுவும் விஷ்ணோ: பகவானுடைய பதம் திருவடியும் தேஹாந்தே சரீரத்தின் முடிவில் மம என்னுடைய மனஸி மனதில் ஸ்திதிம் இருப்பை கரோது செய்யவேண்டியது ஸர் வான் எல்லா தேவான் தேவதைகளை ஸமாஹித: ஸாவதானத்தையுடையவனாய்க் கொண்டு ஸ்வலிங்கை: அந்த தேவதைகளின் பேர்களையுடைய மந்த்ரை: மந்த்ரங் களினால் அர்ச்சயேத் அர்ச்சனம் செய்யவேண்டும் புஷ்பாணி புஷ்பங்களை நமஸ் காரேண நம: என்பதினால் யதாக்ரமம் க்ரமப்படி விந்யஸேத் ஸமர்ப்பிக்கவேண் டியது இஹ இந்தவிடத்தில் மயா என்னால் ஆவாஹநாதிகம் ஆவாஹநத்தை முத லாகவுடைய யத் எந்த கர்ம கர்மமானது நஸூக்தம் நன்றாக சொல்லப்படவில்லை யோ தத் அது ஸர்வம் எல்லாம் சக்ரபாணயே பகவானுக்கு ப்ரணவேனைவ ப்ரணவத் தினாலேயே கர்த்தவ்யம் செய்யத்தக்கது ய: எவன் புருஷஸூக்தேந புருஷஸூக்தத் தினால் புஷ்பாணி புஷ்பங்களையாவது அப ஏவ வா ஜலங்கள் மாத்திரத்தை யாவது தத்யாத் கொடுப்பானோ தேந அவனால் சராசரம் ஸ்தாவரம் ஜங்கமமாகிய இதம் இந்த ஸர்வம் எல்லா ஜகத் லோகமானது அர்ச்சிதம் அர்ச்சனம செய்யப்பட்டதாக ஸ்யாத் ஆகிவிடும் விஷ்ணு: விஷ்ணுவும் ப்ரஹ்மா ச ப்ரஹ்மாவும் ருத்ரச்ச ருத்ரனும் திவாகர: ஸூர்யனும் விஷ்ணுரேவ விஷ்ணுதான் தஸ்மாத் ஆகையினால் ஜநார்த நாத் பகவானைத்தவிர அந்யம் வேறொருவனை பூஜ்யதமம் பூஜிக்கத்தக்கவனாக அஹம் நான் நமன்யே எண்ணவில்லை.

படியே பரம புருஷனை ஸாக்ஷாத் கரிப்பதற்குக் காரணமாக ப்ரணவத்தை உபாஸிக்கும் மாதிரியும் சொல்லப்படுகிறது [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] என்கிற வசனங்களால் யோகனுசாஸன ஸூத்ரமும் 1 '[illegible]' என்று சொல்லியிருக்கிறது. ஆகையினால் ப்ரணவம் பகவானைச் சொல்லுகிறது என்பதும், யோகம் செய்யும் தசை சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பும் தசை முதலிய தசைகளில் அந்த ப்ரணவத்தினாலேயே பகவானை நினைக்கவேண்டும் என்பதும் ஸித்தமாயிருக்கிறது 2 'ஹ்ருதய கமலத்தின் நாடிகள் நூற்று ஒன்று அவைகளுக்குள் தலையைக்குறித்துப் புறப்பட்டிருக்கிறது ஒன்று அதினால் உயரக்கிளம்புகிறவன் மோக்ஷத்தை அடைகிறான். மற்றவைகள் மற்ற இடங்களுக்குப்போக வழிகளாகின்றன' என்றர்த்தமுள்ள ஸ்ருதி வாக்யத்தையும் 3 '[illegible]' என்கிற ஸ்ம்ருதி வசனத்தையும் அனுஸரித்து இந்த ப்ராணவாயுவைத்தலையில் வைத்துக் கொள்ளல் மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுக்கு வெளியில் கிளம்புவதற்கு உபயோகமாகச் சொல்லப்படுகிறது. '[illegible] யாதி' என்பதற்கு விட்டு எவன் போகிறானோ என்றர்த்தம் ஆத்மாவை அடைய விரும்புகிறவனுக்கு அடையவேண்டிய ப்ரயோஜனம் ஆத்மாவே அதில் திரும்பிவருதல் இல்லாமையினால் [illegible]

---

1. பாதஞ்சலயோக ஸூத்ரம் 1 17 க்லேச பசிமுதலியவைகள் கர்ம புண்ய பாவங்கள் விபாக ஸுகதுக்கம் ஆசயபாஸனை இவைகளால் அபராம் ருஷ்ட: தொடப்படாத புருஷ விசேஷ: ஒரு புருஷன ஈச்வர: பகவான் தஸ்ய அவனை வாசக: சொல்லுகிறது ப்ரணவ: ப்ரணவம். 2. சாந்தோக்யோபநிஷத்-8-6-6 .

3 யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி 3—167 தேஷாம் அவைகளுக்குள் ய: எந்த ஏக: ஒன்று . ஸூர்யமண்டலம் ஸூர்ய மண்டலத்தை பித்வா பிளந்து கொண்டு ப்ரஹ்மலோகம் ப்ரஹ்மலோகத்தை அதிக்ரம்ய தாண்டி ஊர்த்வம் உபர ஸ்தித: இருக்கிறதோ தேந அதினால பராம்கதிம் உயர்ந்த கதியை யாதி அடைகிறான்.

பா] இப்படி ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கும் கைவல்யத்தை விரும்புகிறவர்களுக்கும் அவரவர்கள் அடையும் ப்ரயோஜனத்துக்குத் தக்கபடி பகவானை உபாஸனம் செய்யவேண்டிய மாதிரி சொல்லப்பட்டது, பிறகு ஜ்ஞானிக்கு பகவானை உபாஸனம் செய்யவேண்டிய மாதிரியையும், அவன் பகவானை அடையும் மாதிரியையும் சொல்லுகிறார்—

**அநந்யசேதா꞉ ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ꞉ ।**
**தஸ்யாஹம் ஸுலப꞉ பார்த்த² நித்யயுக்தஸ்ய யோகி³ந꞉ ॥ (௧௪)**

ப-ரை] பார்த்த² ஓ அர்ஜுந, ய꞉ எவன், நித்யஶ꞉ நித்யமாக, ஸததம் எப்பொழுதும், அநந்யசேதா꞉ வேறொரு இடத்திலும் மனதைச்செலுத்தாதவனாய், மாம் என்னை, ஸ்மரதி நினைக்கிறானோ, நித்யயுக்தஸ்ய எப்பொழுதும் என்னுடன் சேர்ந்துகொண்டிருக்கவேண்டும் என்கிற ஆசையையுடைய, தஸ்ய அந்த, யோகி³ந꞉ யோகிக்கு, அஹம் நான், ஸுலப꞉ ஸுலபமாக அடையத்தக்கவன். 14

---

*என்று சொல்லியிருக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'ப்ரக்ருதியை விட்டு' என்றாரம்பித்து. இந்த ஆகமானவை பரமமான கதி என்று சொல்லியிருக்கிறதென்பது இந்த ஸந்தாபத்தை அநுஸரித்து மாத்திரமல்ல. இந்த அத்யாயத்திலேயே இதைப்பற்றி இப்படிப்பட்ட ப்ரயோக மிருக்கிறதென்று சொல்லுகிறார்—'யஸ்ஸஸர்வேஷு' என்றாரம்பித்து.*

*தா] ஸங்கதியைச் சொல்லுவதற்காக இதுவரையிலும் சொன்னதை அநுவதிக்கிறார்—'இப்படி' என்றாரம்பித்து இந்த அத்யாயத்தின் ஆரம்பத்திலிருக்கும் கேள்வியிலும் அதின் பதில் வார்த்தையிலும் இதை ப்ரஸ்தாவித்த கீழ் அத்யாயத்தின் கடைசியிலும் இந்த க்ரமம் சொல்லப்படவில்லை அவைகளில் அதிபஜ்ஞம் அந்திம ப்ரத்யயம் இவைகள் மூன்று அதிகாரிகளுக்கும் ஸாதாரணம் என்று சொல்லுவதிலேயே தாத்பர்யமாதலால்; இவ்விடத்திலோ தனித்தனியான அர்த்தத்தை உபதேசம் செய்வதாக இருக்கிறபடியினால் மேல்மேலே சிறந்தவர்கள் என்று காட்டுவதற்காக ஐஶ்வர்யம் கைவல்யம் பகவானுடைய திருவடி இவைகளை விரும்புகிறவர்கள் க்ரமமாகச் சொல்லப்பட்டார்கள் என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'இப்படி' என்று சொல்லியிருக்கிறபடியினாலும், 'அவரவர்கள் அடையும் ப்ரயோஜனத்துக்குத் தக்கபடி' என்று சொல்லியிருக்கிறபடியினாலும் இந்த ஸங்கல்பம் மூன்று அதிகாரிகளையும் பற்றியது என்று ஸ்தாபிக்கக்கூடிய காரணங்கள் காட்*

தா] டப்பட்டன. அதாவது இவ்விடத்தில் சிலர் இப்படி ஆக்ஷேபிக்கக்கூடும் எப்படியெனில்—இவ்விடத்தில 1 'தே ப்ரஹ்ம தத்விது:' 2 'கிம் தத் ப்ரஹ்ம' 3 'அக்ஷரம் ப்ரஹ்ம பரமம்' என்கிற இடங்களிலிருக்கும் 'ப்ரஹ்ம' என்னும் பதம ஸரியானப்ரஹ்மத்தைச்சொல்லுவதில் என்ன விரோதம் இருக்கிறது; அந்த பரஹ்மமே எல்லாவற்றிற்கு மாத்மாவாகையினால் அத்யாத்மம் என்னும் பதத்தினாலும் அந்தப்ரஹ்மத்தின் ஸ்வபாவங்கள் முழுவதையும் சொல்லுவது உசிதமாயிருக்கும் 4 'மத்ஸ்தானி ஸர்வபூதானி' என்றும்லோகங்களின்ஸ்ருஷ்டியை ச்சொல்லுவதுயுக்தம், தேவதையைக் குறித்துத்ரவ்யத்தைக்கொடுத்தலாவது சொல்லப்படலாம். அதாவது நிவ்ருத்தி கர்மம் என்று சொல்லப்படுகிற யஜ்ஞங்கள்தான்—5 'ஸ்ரீயந்தே தக்ஷிணாபாவ:' என்பதினால், உண்டாகின்றன என்கிற வ்யுத்பத்தியினால் ப்ராணிகளின் கூட்டமும் 4 'மயா ததமிதம் ஸர்வம்' என்பதினால் அந்த பரப்ரஹ்மத்தின் ஒருவிக தசையாவதும், ஸமஷ்டியான ஜீவனாவதும், அதியஜ்ஞ: என்பதினால் 5 'யஜ்ஞோ வை விஷ்ணு' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறபடியினால விஷ்ணு என்று பேருடைய எல்லாயஜ்ஞங்களுக்கும் அபிமானியாகிய தேவதையும சொல்லபபடுகின்றன, 6 'அந்தகாலே ச' என்பது முதல் மூன்று ஶ்லோகங்களும் மோக்ஷத்தை விரும்புகிறவனுக்கே அந்திம ப்ரகபயத்தைபபற்றிச சொல்லப்பட்டன, கேள்வியைச் சொல்லுகிற ஶ்லோகங்கள் முன் அத்யாயத்தில் ப்ரஸ்தாபிக்கபபட்ட மூன்று அதிகாரிகளுக்கும் அறியவேண்டியவைகளையும அங்கீகரிக்கவேண்டியவைகளையும் பற்றினவையாக இருந்தபோதிலும் மேல் ஶ்லோகங்கள் ப்ரதானனாகையினால் மிகவும் துர்லபன் என்றுசொல்லப்பட்ட ஜ்ஞானியைப் பற்றியவைகள் என்பது யுக்தம் தான், அப்படிக்கில்லாவிடில் ''மாமேவஸ்மரந்' 7 'மாமேவைஷ்யஸி' என்றிவை முதலியவைகளுக்கு விரோதம் வரும்; ஆகையினாலேயே 8 'ப்ரயாணகாலே ச கதம்' ''அந்தகாலே ச மாமேவ' என்கிற ஶ்லோகங்கள் மூன்று அதிகாரிகளையும் பற்றியதாக இருந்தபோதிலும அதின் விவரணமாகிய இந்த ஶ்லோகங்களில் ஜ்ஞானி ஒருவனைச் சொல்லுகிறதென்று ஒப்புக்கொள்ளவேண்டியது, என்பதும் நிராகரிக்கபபட்டது; ஏனெனில்அந்த

1 பகவத்கீதை, 7,29. 2 பகவத்கீதை, 8,1. 3 பகவத்கீதை, 8,3. 4 பகவத்கீதை, 9,4. 5 சதபதப்ராஹ்மணம் 1-3-1. 6 பகவத்கீதை 8-5. 7 பகவத்கீதை 8-7. 8 பகவத்கீதை 8-2.

தா] ஶலோகங்களிலேயே மூன்று அதிகாரிகளையும் பற்றிப் பிரஸ்தாபம் தோன்றவில்லை, மேலும் ஐஶ்வர்யத்தை விரும்புகிறவனுக்கு பகவானைப் பற்றி அந்திமப்ரத்யயம் வேண்டியதென்பதில் ப்ரமாணமும் தெரியவில்லை, இப்படியே மேல் ஶலோகங்களிலும் ஒரே அதிகாரியும் அவனுக்குத் தெரிந்து கொள்ளவேண்டியதாயே ஒரு ப்ரஹ்மமோ அதுக்கு அநுவதித்து கொண்டு மிகவும் விசதமாகச் சொல்லப்படுகிறது, புனருக்தி என்னும் தோஷமுமில்லை, அடிக்கடிச் சொல்வது ஜ்ஞானி ப்ரதானன் என்பதற்கு அடையாளமாகையினால், 1 'ஸம்ஸித்திம் பரமாம் கதா:' 2 'யாதி பரமாம் கதிம்' 3 'தமாஹு: பரமாம் கதிம்' என்கிற இவைகள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று தோன்றுகிற தே அதுவும் விடத்தக்கதல்ல, முக்யமான அடையத்தகுந்ததைவிட 'பரமஸம்ஸித்தி' என்பது வேறல்ல, 3 ''தமாஹு: பரமாம் கதிம்' என்று மற்றொன்றைச் சொல்லுவதைப்போலச் சொல்லியிருப்பதும் 4 'புருஷஸ்ஸ பர: பார்த'' என்பதைப்போல இருக்கலாம், 5 'பரமம் புருஷம் திவ்யம்' 6 'ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம்' 'புருஷஸ்ஸ பர: பார்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா' என்கிற இவைகள் வெவ்வேறு அர்த்தங்களைச் சொல்லுகின்றன என்று கல்பிப்பதும் யுக்தமல்ல; அநேகமாக மற்றவர்கள் எல்லாராலும் ஒரே அபிப்ராயமாக இப்படியே வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறதே? என்றிப்படி தான். இதற்குப் பரிஹாரம் செய்யும் க்ரமமாவது 7 'ஜராமரணமோக்ஷாய' என்பதைப்போல நானே 'ப்ரஹ்மம் என்று சொல்லாமையினால் அத்யாத்மம் முதலியவைகளைப்போலவே 'ப்ரஹ்ம' என்பது பரப்ரஹ்மத்தைவிட வேறென்பது தோன்றுகிறது, 'ப்ரஹ்ம' என்னும் பதத்திற்குப்போல அக்ஷர என்னும் பதத்திற்குப் பரமாத்மாவினிடத்தில் அதிக ப்ரஸித்தியுமில்லை, அப்படியிருந்தாலல்லவோ அந்தப் பதத்தினால் ப்ரஹ்ம என்னும் பதத்திற்கு வ்யாக்யானம் செய்திருக்கலாம், 8 ''ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே। யே சாப்யக்ஷரமவ்யக்தம்'' என்றிவை முதலிய இடங்களிலும் பரமாத்மாவைவிட வேறாகிய உபாஸிக்கத்தகுந்த வஸ்து அக்ஷர என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று தோன்றுகின்றது, 9 ''தே(த்)வே ப்ரஹ்மணீ ... ... க்ஷராக்ஷரஸ்வரூபே தே ஸ

1 பகவத்கீதை 8-15. 2 பகவத்கீதை 8-13. 3 பகவத்கீதை 8-21: 4 பகவத்கீதை 8-22. 5 பகவத்கீதை 8-8. 6 பகவத்கீதை 11: 7 பகவத்கீதை 8-1. 8-பகவத்கீதை 12-1. 9-விஷ்ணுபுராணம், 1; 2, 55, 56 தஸ்ய, அந்த,ப்ரஹ்மண:—ப்ரம்மத்துக்கு,

தா] ஸர்வ பூதேஷு அக்ஷர: கூடஸ்த2 உச்யதே' என்றிவை முதலிய இடங்களிலிருக்கும் "அக்ஷரம் ப்3ரஹ்ம" என்னும் பதங்கள் பரிசுத்தமான ஜீவாத்மாவைச் சொல்லுகின்றன, என்று ஶாரீரக பாஷ்யத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது, ஆகையினு லிவ்விடத்தில் 1 "கிம் தத்3 ப்3ரஹ்ம" என்று கேட்டிருக்கும்பொழுது 'தத்3 ப்3ரஹ்ம' (நானே அந்த ப்ருமம்) என்று வ்யாக்யானம் செய்யாமையி னுல் தன்னைத் தவிர வேறொரு வஸ்துவைச சொல்லுகிற ப்ரஹ்ம என் னும் பதமானது பரம என்கிற விஶேஷணத்தை அடைந்திருப்பதினு லும் அக்ஷர என்னும் பதத்திற்கு அனுகுணமாக இருப்பதினுலும் ப்ர க்ருதியையும் பகவானையும்விட வேறுகிய பரிஶுத்தமான ஜீவாத்மா வை உபசாரமாகச் சொல்லுகிறது. மேலேயுமிந்த ஜீவாத்மாவே 2'அவ்ய க்தோக்ஷர இத்யுக்த:' என்று சொல்லப்படுகிறது, இந்த ஶ்லோகம் பரமாத்மாவைச் சொல்லுகிறது, என்று எண்ண வேண்டியதில்லை 3'யேத்வக்ஷரமவ்யக்தம்' 4 'யேசாக்ஷரமநிர்தே3ஶ்யம்' 5 'க்ஷரஶ்சாக்ஷர ஏவச' என்றிவை முதலிய இடங்களிலேபோல இவ்விடத்திலும் அக்ஷர என்னும் பதம் பகவானைத் தவிரவேறு வஸ்துவைச் சொல்லு கிறது என்கிறது ஏற்படுகிறபடியினுல், 'ஸ்வபா4வ:' என்னும் பதமும் 'பரமாத்மா' என்று சொல்லப்பட்ட ப்ரயோஜனத்தைவிட வேறு பட்டதாயும் உயர்ந்ததுமான ப்ரயோஜனத்தைத் தன்னுலும் 'ஸ்வ' என்னு முபஸர்கத்தினுலும் நன்ருக ப்ரகாசப்படுத்துகிறது, ஆகை யினுலேயே ஸ்வபாவம் முதலிய பதங்கள் மூன்று அதிகாரிகளுக்கும் அறியவேண்டியவையாகவும் அனுஷ்டிக்கவேண்டியவையுமான வஸ் துக்களைச் சொல்லுகின்றன, என்று சொல்லப்பட்டது, இப்படி இங் கிருக்கும் வாக்யத்தை யோசனைசெய்தும் முன் அத்யாயத்தில் ப்ரஸ் தாவிக்கப்பட்டதை ஆலோசித்தும் கேள்வியும் விடைகளும் மூன்று அதிகாரிகளையும் பற்றியது என்று ஏற்பட்டதேயானுல் அதற்கு மே

மூர்த்தஞ்ச பதத்னென்றும், அமூர்த்தமேவச முக்தனென்றும், த்வே இரண்டு, ரூபேரூபங்கள், தே அவைகள், க்ஷராக்ஷர ஸ்வரூபேமாறுதலை அடையக் கூடியதும் மாறுதலை அடையாததுமான ஸ்வபாவத்தை உடையது கள், ஸர்வ பூதேஷு எல்லா ப்ராணிகளிடத்திலும், ஸ்திதே இருப்பவைகள், அக்ஷரம் அக்ஷரமானது தத் அந்த பரம்ப்ரஹ்ம, பரிசுத்தமான ஜீவாத்மா, க்ஷர: க்ஷரமானது, ஸர்வம் - எல்லா, இதம் இந்த ஜகத் - லோகத்திலுள்ள ப்ராணிகள். 1 - பகவத்கீதை 8, 1. 2-பகவத்கீதை 8, 21. 3 - பகவத்கீதை 12, . 4 - பகவத் கீதை 12 3. 5 - பகவத்கீதை, 15, 16.

தா] மேலிருக்கும் க்ரந்தங்களும் ஸம்பவிக்கும் இடங்களுக்குந் தங்கா யடி- எல்லா அதிகாரிகளையும் பற்றியவை, என்பது யுக்தம், நிப் ப்ரஸ்தா விக்கப்பட்ட மூன்று அதிகாரிகளும் இங்கு 'யெ' என்கிற பதங்களி னால் அனுவாதம் செய்யப்பட்டிருக்கும்பொழுது கைவல்யம் பகவானை அடைதல் இவைகளைப்பற்றிமேலே ஸ்பஷ்டமாகச் சொல்லப்போகிற படியினால் 1 'அஹ்ராஸ' என்று ஆரம்பிக்கும் ஶ்லோகம் ஸ்ம்ருதியாக இருக்கிறபடியினாலே ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களைப்பற்றியதே. ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களுக்குப் பகவானைப்பற்றி அந்திம ஸ்மரணம் வேண்டியது என்பதற்கு ப்ரமாணமில்லை, என்று சொல்லப் பட்டதே அதுவும் யுக்தமல்ல. ஸ்ரீமத் பாகவதம் என்னும் புராணத்தில் த்ருவனுடைய சரித்திரத்தைச் சொல்லுமிடத்தில் 2 'ஹ்ரீம் ஹாஸ ஹவதிவஹாநு' என்றிவை முதலிய ஶ்லோகங்களினால் அது வேண்டும் என்று சொல்லியிருப்பதினால். ஆகையினால் கீழ் சொன்னபடியே அர்த்தம் சொல்லவேண்டும். 'வெ ஹ' வாஷா வாமதி' என்பவை முதலிய பதங்களினால் இங்கே எல்லாவிடத்திலும் பரமாத்மாவும் அவனிடத்தில் பக்தியும் அந்த ப்ரமாத்மாவை அடை தலுமே சொல்லப்படுகின்றனவாகத் தோன்றுகின்றன. ஆனாலும் அதினாலேயே ஒரே அதிகாரியைப்பற்றியது என்று சொல்லுவது யுக்தமல்ல. முதலில் மரணமடையும் காலத்தில் புருவங்களின் நடுவில் ப்ராணவாயுவை வைக்கவேண்டியது என்றும், அவ்விடத்திலேயே பர மாத்மாவை த்யானம் செய்யவேண்டியது என்றும் விதிக்கப்பட்டிருக் கிறபடியினாலும், பிறகு அதே காலத்தில் ஹ்ருதயத்தில் பரமாத்மாவை த்யானம் செய்யவேண்டியது என்றும், தலையில் ப்ராணவாயுவை வை க்க வேண்டியது என்றும் விதிக்கப்பட்டிருக்கிறபடியினாலும்; ஒன்றுக் கொன்று விருத்தமான இவை இரண்டும் காலம் வெவ்வேறு என் கிற காரணத்தைக்கொண்டு ஏற்படுத்தக்கூடியவைகளா வல்லது அதி காரிகள் வெவ்வேறு என்கிற காரணத்தினால் ஏற்படுத்தக்கூடியவை களா? காலம் வெவ்வேறு என்பது சொல்லப்படவில்லை. அதுவுமின் றிக் காலம் ஒன்று என்றே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் ஸ்ம்ருதியாகையினால் அதிகாரி வெவ்வேறு என்பது ஏற்பட்டது. மே லும் 3 ஹ்ருதயத்தினுடைய நாடிகள் நூற்றொன்று" என்று ஆரம்ப முள்ளவாக்யம் முதலான ஶ்ருதியில் தலையிலிருக்கும் நாடியினால் வெளிக்கிளம்புவது மோக்ஷத்திற்குக் காரணம் என்றும் மற்றநாடிகளி

1 பகவத்கீதை 8, 8. 2 ஸ்ரீபாகவதம் 4 12 18. 3 சாந்தோக்யம், 8,6,6,

பா] ஆரம்பம் முதல் எல்லாக் காலங்களிலும் வேறிடத்தில் மனதைச் செலுத்தாதவனாய். என்னிடத்தில் மிகவும் ப்ரீதி உள்ளவனாகையினால்

தா] னால் வெளிக்கிளம்புவது வேறு பலங்களுக்குக்காரணம் என்றும் ஏற்பட்டிருக்கிற படியினால் மரணமடையும் காலத்தில் புருவங்களின் நடுவிலும் தலையிலும் ப்ராணவாயுவை வைப்பது வெளிக்கிளம்புவதற்கு அங்கமாகையினால் அந்தந்த இடங்களிலிருக்கும் நாடிகளினால் வெளிக்கிளம்புவது தோன்றுகிறபடியினால் அதிகாரிகள் வெவ்வேறு என்பது ஸித்தமாய் ஏற்பட்டது. முன் அத்யாயத்தில் '1 சதுர்விதா பஜந்தே மாம்' என்றிவை முதலிய இடங்களில் இந்த அதிகாரிகள் வெவ்வேறு என்பது ப்ரஸ்தாவிக்கப்பட்டது, அதின் முடிவிலும் 2 'ஜராமரண மோக்ஷாய' 'ஸாதிபூதாதிதைவம் மாம்' என்கிற ஶ்லோகங்களில் 'யே' என்னும் பதத்தைத் திருப்பிச்சொல்லி இருக்கிறபடியினால் அதிகாரிகள் வெவ்வேறு என்று தோன்றுகின்றது, என்பது பாஷ்யத்தில் நிரூபிக்கப்பட்டது, அதுவே இவ்விடத்திலும் 4 'கவிம் புராணமநுஶாஸிதாரம்' 5 'யம் யம் வாபி ஸ்மரந்பாவம்' 'யோ மாம் ஸ்மரதி நித்யஶ:' என்று ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது. இவைபலவற்றையும் மனதில் வைத்துக்கொண்டு 'இப்படி ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கும்' என்று சொல்லப்பட்டது.

கிஞ்ச சொல்லப்பட்ட அதிகாரியே 'அநந்யசேதா:' என்கிற ஶ்லோகத்திலும் சொல்லப்படுகிறான், என்று மற்றவர்கள் சொன்ன அர்த்தத்தை நிராகரித்துக்கொண்டு இந்த ஶ்லோகத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்.—'பிறகு' என்று ஆரம்பித்து.

'நித்யஶ:' என்பதினால் ஆத்மாவை அனுபவித்தல் முதலிய வெவ்வேறு பலங்களினாலுண்டாகும் காலதாமதத்தில் விருப்பமில்லாமை சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'ஆரம்பம் முதல்' என்று. அப்படிக்கில்லாவிடில் 'ஸததம்' என்பதினால் புனருக்தியும் அர்த்தத்தைச் சுருக்கிச்சொல்லவேண்டிய ப்ரஸங்கமும் உண்டாகுமென்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லாக்காலங்களிலும்' என்று. 'அநந்யசேதா:' என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில்கொள்ளப்பட்ட த்யானம் பக்தியாகஇருக்கிறது என்பதைக்காட்டுகிறார்— என்னிடத்தில்' என்று. வேறொருஇடத்திலும் மனதைச்செலுத்தாதவனாகையினால் த்யானமும் இடைவிடாமல் இருக்கிறது. ஆசையிலும் ஸ்ம்ருதி என்னும் பதம்

1 பகவத்கீதை 7, 16. 2 பகவத்கீதை 7, 29. 3 பகவத்கீதை 7. 30, 4, பகவத்கீதை 8, 9. 5, பவத்கீதை 8, 12.

என்னுடைய த்யானம் இல்லாமற்போனால் ஆத்மாவைத் தரித்தலையே அடையாதவனாய் எல்லை இல்லாத ப்ரியமான த்யானத்தை எவன் செய்கிறானோ அப்படிப்பட்டவனாகிய என்னுடன் எப்பொழுதும் சேர்ந்திருக்க வேண்டுமென்கிற ஆசையை உடையவனுக்கு நானேஅடையத்தக்கவன் என்னுடைய ஸ்வபாவமாகிய ஐஶ்வர்யம் முதலியவை அல்ல. ஸுலபமாக அடையத் தகுந்தவனு மாகிறேன். அதாவது அவனுடைய பிரி

1. ஸாதராஶ ஸூபகாரவீரஶ' என்றிவைமுதலியஇடங்களிலுபயோகிக்கப்பட்டிருக்கிறது. கீழ்ச் சொன்னதை 'நித்யயுக்தஸ்யயோகிந:'என்று அனுவாதம் செய்திருப்பது, பரயோஜனம் தாமதமின்றிக்கிடைத்து விடுகிறது என்பதற்காக. இவ்விடத்தில் 'அஹம்' (நான்) என்னும் பதத்தினால் பகவானுடைய ஸ்வரூபம் நினைக்கப்படுகிறது. இதனால் அதற்கு விரோதமாகிய அக்ஷரம் முதலிய பலன்களை அடைதல் விலக்கப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'நான்' என்று இதை விவரிக்கிறார்—'என்னுடைய ஸ்வபாவமாகிய' என்று ஆரம்பித்து. பகவானை அடைவது மற்ற பலன்களைவிட மேலானது ஆகையினால் அவனைஅடைவதில அதிக ப்ரயாஸம் இருக்கக்கூடுமே, என்கிற ஸந்தேகத்தைவிலக்குவதற்காக 'ஸுலப:'என்னும் பதம்,என்கிறஅபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸுலபமாக அடையத்தகுந்தவனுமாகிறேன்' என்று. கஷ்டமில்லாமல அடையத்தகுந்தவன் என்று அர்த்தம் 'ஈஷத்து:ஸு-ஷு க்ருச்ச்ராக்ருச்ச்ரார்த்தேஷு கல்' என்று விதிக்கப்படுகிறது. தன்னை அடைந்தவர்களிடத்தில் மிகவும் பரிதியுள்ள ஈஶ்வரனுக்கு இந்த ஸுலபமான ஸ்வபாவம், அவனைப்பிரிவினாலுண்டானது. என்று சொல்லுகிறார்—'அவனுடைய பிரிவை' என்று ஆரம்பித்து. இப்படிச் சொன்னது அதிவாதம் மாத்திரமோ? என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக ஶ்ருதியி லேற்பட்டது,என்று சொல்லுகிறார்—'எவனை' என்று ஆரம்பித்து. இங்குவரிக்கிறது என்னும் பதத்தினால், என்ன சொல்லப்படுகிறது; மோக்ஷம் ஶரீரம் என்று ஒப்புக்கொள்ளுதல் சொல்லப்படவில்லை, அது எப்பொழுதும் இருக்கிறபடியினால அதற்கு விரோதமான ஆகாரமும் சொல்லப்படவில்லை.ப்ரமாணங்களுக்கு விருத்தமானதினால, தன்னுடைய பாபதிலைக்கொடுத்தலும்சொல்லப்படவில்லை. அவனாலடையத்தக்கவன்' என்கிற வாக்யத்தோடு

1 ச்ரீராமாயணம் அயோத்யாகாண்டம், 1-3,' 2 அஷ்டாத்யாயி 3 3. 126 கஷ்டம் கஷ்டமல்லாமையைச் சொல்லுகிற ஈஷத், துஸ்ஸு என்னும் பதங்கள் வந்தால், கல், என்றும் ப்ரத்யயம் வரும்.

வைப் பொறுக்காதவனுப் நானே அவனை வரிக்கிறேன் என்னை அடைவ தற்குத்த தந்த உபாஸனத்தின் பரிபாகத்தையும், அதற்கு விரோதிகளை நீக்குவதையும், அதிகமான என்னிடத்தில் ப்ரீதிமுதலியவைகளையும், நானே கொடுக்கிறேன் என்று அர்த்தம். * எவனை இந்தப் பகவான் வரிக்கிருனே அவனுல் இவன் அடையத்தக்கவன்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் இருக்கிறது. 2 'தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் । ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே ॥ தேஷாமேவாநுகம்பார்த்தமஹமஜ்ஞாநஜம் தம: । நாஶயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா ॥' என்றுமேலே சொல்லப்போகிறர். 14

பா] இதற்கு அப்புறம் மிகுதியான அத்யாயத்திஞல் ஜ்ஞானிக்கும் கைவல்யத்தை விரும்புகிறவனுக்கும் திரும்பிவருதல் இல்லை என்பதையும், ஐஶ்வர்யத்தை விரும்புகிறவனுக்குத் திரும்பிவருதல் உண்டு என்பதையும் சொல்லுகிறர்—

**மாமுபேத்ய புநர்ஜந்ம து:காலயமஶாஶ்வதம் ।**
**நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா: ॥**

---

*தா] புனருக்தி வருமாகையினுல், வேறொரு மாதிரியும்சொல்லப்படுகிறதில்லை, அவைகள் ஸம்பவிக்காததாகையினுல், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறர்—'என்னை அடைவதற்குத்த தந்த' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் பரிபாகமாவது இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருத்தல், நேரில் பார்த்ததுபோல் விஶதமாக இருத்தல் முதலியவை. அதற்கு விரோதிகளாவது பாபம், ரஜஸ்தமோ குணங்கள் ராகம் த்வேஷம் முதலியவைகள் 'அதிகமான ப்ரீதியாவது' எல்லை இல்லாத பக்தியாக இருக்கை. 'முதலிய' என்னும் பதத்தினுல் பரமபதத்திலிருக்கும் திவ்ய ஸிம்மாஸனத்தைக் கிட்டுகிறவரையில் நடுவில் ஏற்படுவதுவேண்டியவைதா அவை எல்லாம் சொல்லப்படுகிறது. 'நானே' என்பதற்கு மிகவும் தயையை உடைய என்னுடைய பாரம் இது,என்று தாத்பர்யம். 'தஸ்யாஹம் ஸுலப:' என்பதற்குக் கீழ்ச்சொன்ன அர்த்தமே உசிதம் என்பதை உறுதிபடுத்துவதற்காகக் கீழ் உதாஹரிக்கப்பட்ட ஶ்ருதியின் விவரணமாயும், இந்த அர்த்தத்தையே விஸ்தாரமாகச்சொல்லி இருப்பதுமான மேல் சொல்லப்போகிற வார்த்தையைக் காட்டுகிறர்—'தேஷாம்ஸததயுக்தாநாம்' என்று ஆரம்பித்து.* 14

---

1 முண்டகோபநிஷத் 3, 2, 3, 2 பகவத்கீதை 10, 11,

ப-ரை] மாம் என்னை, உபேத்ய அடைந்து, மஹாத்மாந: பெரிய மனத்தை உடையவர்களாய், பரமாம் உயர்ந்த, ஸம்ஸித்திம் நல்ல ஸித்தியை, கதா: அடைந்தவர்கள், து:காலயம் துக்கங்களுக்கு இருப்பிடமாயும், அஶாஶ்வதம் அழியக்கூடியதுமான, புநர்ஜந்ம மறுபடியும் பிறப்பை, நாப்நுவந்தி அடைவதில்லை. 15

பா] என்னை அடைந்து மறுபடியும் எல்லாத்துக்கங்களுக்கு மிருப்பிடமாயும் அழியக்கூடியதுமான ஜன்மத்தை அடைகிறதில்லை, எந்தக் காரணத்தினால் இவர்கள் பெரியமனத்தை உடையவர்களோ, அதாவதுஉள்ளபடியே இருக்கிற என்னுடைய ஸ்வரூபத்தைப்பற்றிய ஜ்ஞானத்தை

---

தா] இதற்கு முன் மூன்றுவித அதிகாரிகளுக்கும் அறியவேண்டியவைகளுடையவும், அனுஷ்டிக்க வேண்டியவைகளுடையவும், சிற்சில வ்யத்யாஸங்கள் நிரூபிக்கப்பட்டன, அதற்குப் பிறகு அதிகாரத்திற்கு உபயோகமுள்ளதாகையினால் அவஶ்யம் தெரிந்து கொள்ளவேண்டியதான பலம் ஸ்திரமாக இருக்கை, அஸ்திரமாக இருக்கை ஆகிற விஶேஷத்தைக்காட்டுகிறார், என்று சொல்லுகிறார்— 'இதற்குப் பிறகு' என்று ஆரம்பித்து. இதில் இந்த ஶ்லோகத்தினால் ஜ்ஞானிக்குத் திரும்பிவருதல் இல்லை, என்று சொல்லப்படுகிறது. துக்கம் எண்ணிறந்தது என்பது எல்லா ப்ரமாணங்களினாலும் ஏற்பட்டிருக்கிறபடியினாலும் விஶேஷணமில்லாத துக்க என்னும் பதத்தின் அர்த்தத்தை சுருக்கிச்சொல்வதற்குப் ப்ரமாணமில்லாததாலும், எல்லாத்துக்கங்களுக்கும், என்று சொல்லப்பட்டது. ஜன்மத்திற்கு அஶாஶ்வதம் என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற அழிவை உடைத்தாயிருக்கையாவது அந்த ஜன்மத்தோடு விட்டுப்பிரியாத தேகம் அதைக் கொண்டு அனுபவிக்கும் ஸுகதுக்கங்கள் முதலியவைகள் அழிவை உடையவைகளாக இருப்பது தான் இங்கே சொல்லப்படுகிறது. அன்றிக்கே ஜன்ம என்னும் பதமானது உத்பத்தியை உடையவற்றைச் சொல்லுகிறதாகவுமாம், 'மஹாத்மாந:' என்பது கேவலம் ஸ்தோத்ரமாக இருப்பதைவிட அதினால் சொல்லப்படுகிற மாஹாத்ம்யம் இவ்விடத்தில் ஸித்தியை அடைவதற்குக் காரணம் என்பது உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எந்தக்காரணத்தினால்' என்று. ஜ்ஞானிகள் பெரியமனத்தை உடையவர்கள் என்பது முன்பு விஸ்தாரமாகச் சொல்லப்பட்டதே, இவ்விடத்தில் அனுவாதம் செய்யப்பட்டது, என்பதைக்காட்டுகிறார்—'உள்ளபடியே இருக்கிற' என்று ஆரம்பித்து.

உடையவர்களாய், என்னிடத்தில் அதிக ப்ரீதி உள்ளவர்களாகையினால் என்னைவிட்டுப் பிரிந்து ஆத்மாவைததரிப்பதையே அடையாதவர்களாய், என்னிடத்திலேயே செலுத்தப்பட்ட மனதை உடையவர்களாய், என்னையே ஆஶ்ரயித்தவர்களாய், என்னையே உபாஸனம் செய்து மேலான ஸித்தியாகிய என்னையே அடைந்தார்களோ. 15

பா] ஐஶ்வர்யமாகிற ப்ரயோஜனத்தை அடைந்தவர்களுக்கும் பகவானை அடைந்தவர்களுக்கும் திரும்பிவருவதிலும் திரும்பிவாராமலிருத்தலிலும் காரணத்தை அடுத்த ஶ்லோகத்தில் சொல்லுகிறார்—

ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந।
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே ॥ 16

ப - ரை] கௌந்தேய குந்தியின் பிள்ளையாகிய, அர்ஜுந ஓ அர்ஜுன, ஆப்ரஹ்மபுவநாத் ப்ரஹ்மாவின் லோகம் வரையிலும், லோகா: லோகங்கள், புநராவர்திந: நாஶத்தை அடையக்கூடியவைகள், மாம் என்னை, உபேத்ய து அடைந்தோ வெனில், புந: மறுபடியும், ஜந்ம பிறப்பு, ந வித்யதே இல்லை. 16

பா] ப்ரஹ்மலோகம் வரையிலுமுள்ள ப்ரஹ்மாண்டத்திற்குள்ளிருக்கிற

---

இச்சிக்கப்பட்ட பலத்தை ஸித்தி என்று சொல்வது உசிதமாகையினாலும், பரம என்கிற விஶேஷணத்தின் ஸ்வாரஸ்யத்தினாலும் 'மேலான ஸித்தியாகிய என்னை' என்று சொல்லப்பட்டது. சிறந்த ப்ரயோஜனமாகிய என்று அர்த்தம் 'ஸம்ஸித்தி:' என்கிற பதத்திற்கு 'ஸமீசீந ஸித்தி:' (சிறந்த ப்ரயோஜனம்,) என்று அர்த்தம். 15

தா] ப்ரஸ்தாவ மில்லாததை மறுக்கக்கூடாதாகையினாலும், இங்கு மறுக்கப்படுகிறதற்கு ஸமீபத்திலிருக்கிற ப்ரஸ்தாவத்தை அங்கீகரிப்பது உசிதமாகையினாலும், நாஶத்தை அடையக்கூடிய ப்ரயோஜனமாகிய ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கு ஜன்மம் உண்டு என்பது, பகவானை அடைந்தவர்களுக்கு ஜன்மமில்லை என்று,கீழ் ஶ்லோகத்தில் மறுத்ததினால் ஞாபகப்படுத்தப்பட்டது. ஆகையினால் அந்த விஷயத்திலும் காரணம் மாத்திரம் சொல்லவேண்டியது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஐஶ்வர்யமாகிற ப்ரயோஜனத்தை' என்று, 'மாமுபேத்ய' என்று, பகவானை எதிராகச் சொல்லி இருப்பதினால் இங்கே 'ஆ' என்பது அதுவரையிலும் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரஹ்மலோகம் வரையிலுமுள்ள' என்று. ப்ரக்ருதி என்று பெயரை உடைய பகவா

போகம் ஐஶ்வர்யமிவைகளுக்கு இடமாக இருக்கிற எல்லாலோகங்களும் நாஶத்தை உடையவைகள். ஆகையினால் ஐஶ்வர்யத்தை அடைந்தவர்களுக்கு அடையப்படுமிடம் நஶித்துவிடுகிறபடியினால் அவர்களுக்கும் நாஶத்தை அடைதல் தள்ளமுடியாது. எல்லாம் தெரிந்தவனுயும் ஸத்ய ஸங்கல்பனுயும், எல்லாலோகங்களுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் இவைகளை விளையாட்டாக உடையவனுயும் மிகுந்த தயையை உடையவனுயும் எப்பொழுதும் ஒரேவிதமான ஸ்வபாவத்தை உடையவனுயும் இருக்கிற என்னை அடைந்தவர்களுக்கு நாஶத்தின் ப்ரஸ்தாவமே இல்லையாதலால் அவர்களுக்கு மறுபடியும் ஜந்மம் இல்லை. 16

---

னுடைய மாயையாகிய பெரிய ஸமுத்திரத்தில், ப்ரஹ்மாண்டங்களெல்லாம், நீர்க்குமிழிகள்போல இருக்கின்றன, என்றால் அதற்குள்ளிருக்கும் லோகங்களுக்குத் தனித்துச் சொல்லவேண்டியதே இல்லை, என்கிற அபிப்ராயத்தினால் 'ப்ரஹ்மாண்டத்திறகுள்ளிருக்கிற' என்று சொல்லப்பட்டது. இத்தால் பரமபதம் விலக்கப்பட்டது. ஐஶ்வர்யங்கள் அநித்யம் என்று நிரூபிக்கவேண்டியதற்காக—'போகம் ஐஶ்வர்யம் இவைகளுக்கு இடமாக இருக்கிற' என்று சொல்லப்பட்டது. 'ஹுவந' என்கிற பதத்தோடு சேர்ந்த 'லோக' என்னும் பதமானது ஜனங்களைச் சொல்லுகிறது என்பது பொருந்தாதாகையினாலும், லோகத்திற்கு போகுதலே இல்லாமையினால் திரும்பி வருதலும் இல்லாமையினால் 'புநராவர்திநஃ' என்னும் பதத்தினால் பரம்பரையாக நாஶமடைதலே லக்ஷணையாகச் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'நாஶத்தை உடையவைகள்' என்று 'புநராவர்திநஃ' என்னும் பதம் அஜஹல்லக்ஷணையினால் அந்த லோகங்களைச் சொல்லுவதற்கு அந்த லோகத்திலுள்ள ஜனங்கள் திரும்பி வருவதே காரணம் (அதாவது திரும்பிவருகிற புருஷர்களை உடையவைகள் என்று அர்த்தம்). முடிவான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்று. 'மாம்' (என்னை) என்கிற இடத்தில 'அஸ்மத்' என்னும் பதத்தினால் காட்டப்பட்ட திரும்பிவராமைக்குக் காரணமாகிய விஶேஷணங்களைக் காட்டுகிறார்—'எல்லாம் தெரிந்தவனுயும்' என்று ஆரம்பித்து. எல்லாவற்றையும தெரிந்துகொள்ளாததாகவும் அஸத்ய ஸங்கல்பமாகவும், ஸ்ருஷ்டிக்கப்படும் வஸ்துக்களில் சேர்ந்ததாகவும், தயை இல்லாததாகவும், ரஜோகுண தமோகுணங்களினு லுண்டாகிற ராகத்வேஷம் முதலிய அனேகவித மாறுதல்களை உடையதாகவு மிருக்கிற ஒரு அல்பமான தேவதையை அடைந்தவர்களுக் கல்லவோ வேறு தேவதையினுலாவது, அந்தத் தேவதையினுலாவது திரும்பிவருத லுண்டாகும் என்று, விஶேஷணங்களுக்குத் தாத்பர்யம். 16

பா] ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள லோகங்களுக்கும் அதற்குள்ளிருக்கும் வஸ்துக்களுக்கும் பரம புருஷனுடைய ஸங்கல்பத்தினலேற்படுத்தப்பட்ட உத்பத்தியாகும் காலம், நசிக்கும் காலம், இவைகளின் ஏற்பாட்டைச் சொல்லுகிறார்—

ஸஹஸ்ர யுகபர்யந்தமஹர்யத் ப்ரஹ்மணோ விது: |
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜநா: ||
அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹராகமே |
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே || கஅ
பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே |
ராத்ர்யாகமேऽவஶ: பார்த ப்ரபவத்யஹராகமே || (கக

ப-ரை] பார்த்த ஓ அர்ஜுன (எவர்கள்) அஹோராத்ரவித:— பகல்ராத்திரிகளின் கணக்கைத்தெரிந்த, ஜநா: ஜனங்களோ, தே— அவர்கள், யத்—எது, ப்ரஹ்மண: ப்ரஹ்மாவினுடைய, அஹ: பகலோ, (அதை) ஸஹஸ்ர யுகபர்யந்தம் ஆயிரம் சதுர்யுகமளவாக, ராத்ரிம் ராத்திரியையும், யுகஸஹஸ்ராந்தாம் ஆயிரம் சதுர்யுகமளவுள்ளதாயும், விது: தெரிந்துகொள்ளுகிறார்கள் அஹராகமே பகல் வரும் பொழுது, ஸர்வா: எல்லா, வ்யக்தய: ப்ரகாஶமான வஸ்துக்களும், அவ்யக்தாத் ப்ரக்ருதியின் பரிணமமாகிய ப்ரஹ்மாவின் ஶரீரத்திலிருந்து, ப்ரபவந்தி உண்டாகின்றன, ராத்ர்யாகமே ராத்திரி வரும் பொழுது, அவ்யக்தஸம்ஜ்ஞகே அவ்யக்தம் என்று பெயரை உடைய, தத்ரைவ அந்தப்ரஹ்மாவினுடைய ஶரீரத்திலேயே, ப்ரலீயந்தே லயத்தை அடைகின்றன, ஸோऽயம் அந்த இந்த, பூதக்ராமஏவ ப்ராணிகளின் கூட்டங்களே அஹராகமே பகல் வரும் பொழுது, ப்ரபவந்தி உண்டாகின்றன. ராத்ர்யாகமே ராத்திரி வரும்பொழுது, அவஶ: பரவஶமாக, பூத்வா பூத்வா உண்டாகி உண்டாகி, ப்ரலீயந்தே லயத்தை அடைகின்றன.　　17-18-19.

பா] எவர்கள் மனுஷ்யன் முதல் சதுர்முகன் வரையிலுள்ள வஸ்துக்

தா] இந்த மூன்று ஶ்லோகங்களுக்கும் முடிவான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ப்ரஹ்மலோகம் வரையிலுமுள்ள' என்று ஆரம்பித்து. ப்ரஹ்மா ஸ்வதந்த்ரனகையினல் ஸத்யலோகம் ஸ்திரமாக இருக்கலாமே? என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காகச்சொல்லுகிறார்—'பரம புருஷனுடைய ஸங்கல்பத்தினலேற்படுத்தப்பட்ட' என்று. பகவான்

களுக்கு என்னுடைய ஸங்கல்பத்தினால் ஏற்படுத்தப்பட்ட பகல், ராத்திரி இவைகளின் ஏற்பாட்டைத்தெரிந்த ஜனங்களோ. அவர்கள் சதுர்முக

---

ஸ்வதந்த்ரனாக இருப்பதே அதிகம் குறைவு இல்லாமல் பகல் ராத்திரி முதலிய விசித்திரங்களான ஏற்பாட்டிற்குக்காரணம், அப்படியே 1 'காலஸ்ய ஹி ம்ருத்யோஶ்ச' 2 'காலசக்ரம் ஜகச்சக்ரம்' என்பவை முதலிய வசனங்களினால் சொல்லப்படுகிறது. இப்படியே மற்றோரிடத்திலும் 3 'ததோ யுகஸஹஸ்ராந்தே ஸம்ஹரிஷ்யே ஜகத் புந: । க்ருத்வா மத்ஸ்தாநி பூதாநி ஸ்தாவராணி சராணி ச ॥' என்றிவை முதலானது சொல்லப்பட்டது. மனுஸ்ம்ருதியில 4 'ததே யுகஸஹஸ்ராந்தம் ப்ராஹ்மம் புண்யமஹர்விது: । ராத்ரிஞ்ச தாவதீமேவ தே(அ)ஹோராத்ரவிதோ ஜநா: ॥' என்று சொல்லி இருக்கிறதே அவ்விடத்தில் 'யே' என்று சொல்லி இருப்பதினால் காமப்படியே அன்வயம் சொல்லலாம். ஸஹஸ்ர' என்னும் இந்த ஸ்லோகத்தில 'யத்' என்னும் பதத்திற்கு 'அஹ:' என்பதோடு அன்வயம் பொருந்தும். ஆகையினால் 'தே' என்பதற்கு 'யே' என்னும் பதம் முன்பு இருக்கவேண்டியது அவஸ்யம். அப்படியிருந்தாலும் 'யே விது: தே அஹோராத்ரவிதோ ஜநா:' (எவர்கள் தெரிந்து கொள்ளுகிறார்களோ அவர்கள் பகலிரவு, தெரிந்தவர்கள்) என்று அன்வயம சொல்லில் இவ்விடத்தில் ப்ரஸ்தாவமில்லாத பகலிரவைத் தெரிந்தவர்கள் இன்னார் என்று காட்டுகிறதாகவும், அவர்களை ஸ்தோத்திரம் பண்ணுகிறதாகவும், இந்த ஸந்தர்ப்பத்திற்குப் பொருந்தாத வாக்யமாகும். ஆகையினால யே அஹோராத்ரவிதோ ஜநா:

---

1 மஹா பாரதம் உத்யோகபர்வம் 37-13 காலஸ்ய-காலத்துக்கும். ம்ருத்யோஶ்ச-யமனுக்கும், (பகவான் யஜமானனாகிறான், என்று சேர்த்துககொள்ளவும்

2 மஹாபாரதம் உத்யோகபர்வம் 67-21 காலசக்ரம்-காலசக்ரத்தையும, ஜகச்சக்ரம்-ஜகச்சக்ரத்தையும், பகவான் ஏவுகிறான் என்று சேர்த்துக்கொள்ளவும்.

3 தத:-பிறகு, யுகஸஹஸ்ராந்தே ஆயிரம் சதுர்யுகஙகளின் கடைசியில், சராணி சரங்களும், ஸ்த்தாவராணி-ஸ்த்தாவரங்களுமாகிய, பூதாநி- ஜந்துக்களை, மத்ஸ்த்தாநி-என்னிடத்திலிருப்பவைகளாக, க்ருத்வா, செய்து, புன:-மறுபடியும், ஜகத்-லோகத்தை, ஸம்ஹரிஷ்யே-ஸம்ஹாரம் செய்யப்போகிறேன்.

4 மனுஸ்ம்ருதி, 9-23 எவர்கள், யுகஸஹஸ்ராந்தம்-ஆயிரம் சதுர்யுகங்களில் முடிவாகிறதாக, புண்யம்-பரிசுத்தமான, ப்ராம்ஹம் ப்ரும்ஹாவினுடைய, , தத், அந்த-அஹ:-பகலை, விது:- தெரிநதுகொள்ளுகிறார்களோ, ராத்ரிஞ்ச-ராத்திரியையும், தாவதீமேவ அவ்வளவாகவே, (தெரிநதுகொள்ளுகிறார்களோ,) தே-அவர்கள, அஹோராத்ரவித:-பகலிரவைத் தெரிந்த ஜநா:-ஜனங்கள்.

ப்ரஹ்மாவுக்கு எது பகலோ அதை ஆயிரம் சதுர்யுகம் வரையிலுள்ள தாகவும், ராத்திரியையும் அப்படிப்பட்டதாகவுமே தெரிந்துகொள்ளுகி ருர்கள். அதில் ப்ரஹ்மாவுக்குப் பகல் வரும்போழுது மூன்று லோகங் களுக்குள்ளடங்கிய தேஹங்கள், இந்திரியங்கள், அனுபவிக்கப்படும் வஸ்

---

தெவஜநாவிஞா:' (எவர்கள் பகலிரவைத்தெரிந்தவர்களோ அவர்களி ப்படிச்சொல்லுகிறார்கள்) என்கிற அன்வயமே இப்படிக்காலத்தினேற் பாடு,ப்ரமாணத்தை அனுஸரித்தது,என்றுகாட்டக்கூடியதாகையினுல் இவ்விடத்திலேயப்புக்கொள்ளத் தகுந்தது. என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்—'எவர்கள்' என்று ஆரம்பித்து. இங்கே அனுவதிக்கப்ப டுகிற பகல் ராத்திரிகளைத் தெரிந்தவனாக இருக்கை ப்ரஸித்தியை அனு ஸரித்து, எல்லோரையும் பற்றியதாகவே இருக்கவேண்டும். இத்தால் இது ப்ரஹ்மாவுக்கும் மனுஷ்யர்களுக்கும் ஸமானம், என்பது காட்டப் பட்டதாகவுமாம்,என்கிற அபிப்ராயத்தினுல்'மனுஷ்யன் முதல்'என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டது. இவ்விடத்திலிருக்கும் ப்ரஹ்மா என் னும பதம் பரமாத்மாவைசசொல்லுகிறது, என்கிற ப்ரமத்தை நீக்குவ தற்காக'சதுர்முகன்' என்னும் பதம் சொல்லபபட்டிருக்கிறது. அவருக் கல்லவோ ஆயிரம் யுகங்களென்கிற ஏற்பாட்டோடுகூடிய பகல் ராத்தி ரிகளின் பிரிவு ப்ரஸித்தமாக இருக்கிறது, என்று தாத்பர்யம். விசேஷ ணத்தோடு கூடிய விதியும், விலக்கும், விசேஷணத்திலும் அன்வயிக் கும் என்கிற ந்யாயத்தினுலும் 'அஹொராத்ரவிஜநாः' என்று பகலிரவைத்தெரிந்துகொண்டவர்களாகஇருக்கை அனுவதிக்கப்படுகிற படியினுலும். ஆயிரம் சதுர்யுகம் வரையிலுள்ளதென்பதைத் தெரிந்து கொள்ளுகையே இங்கே விதிக்கப்படுகிறது, என்கிற அபிபராயத்தி னுல் 'அதை ஆயிரம் சதுர்யுகம் வரையிலுள்ளதாகவும்' என்று இவை முதலியது சொல்லப்பட்டது. ஆயிரம் யுகங்கள் எதற்கு அளவோ அது 'ஸஹஸ்ரயுகபர்யந்தம்' என்று சொல்லப்படுகிறது. யுக என்னும் பதம் இவ்விடத்தில், மற்ற பரமாணங்களை அனுஸரித்துச் சதுர்யுகங்களைச் சொல்லுகிறது. ப்ரஹ்மாவுக்குப் பகலிரவுகளி னேற் பாடு இப்படியே இருக்கட்டும், இத்தால், கீழ் ப்ரஸ்தாவித்ததற்கு என்ன ஸாதகம்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் · 'அவ்யக்தாத்' என்கிற ச்லோகம் அதின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதில்' என்று ஆரம்பித்து. இதின் கருத்தாவது. இவ்விடத்தில் 'வ்யக்தய:' என்னும் பதமானது மஹான் முதலியதைப் பற்றியதல்ல. அவை ப்ர ஹ்மாவுக்கு முன்னமேயே உண்டாகிறபடியினுல்; ஆகையினுல் ப்ரஹ்

துக்கள், அனுபவிக்குமிடங்கள், ஆகிய இந்த வஸ்துக்கள், ப்ரஹ்மாவுக்குத் தேஹமாக மாறி இருக்கும் ப்ரக்ருதியினிடத்தில் இருந்து உண்டாகின்றன. அந்த ப்ரக்ருதியின் மாறுதலாகிய ப்ரஹ்மாவினுடைய தேஹத்திலேயே ராத்திரி வரும்போழுது லயத்தை அடைகின்றன. கர்மங்களுக்கு வஶப்பட்ட இந்தப்ராணிகளின் கூட்டம் பகல் வரும்பொழுது உண்டாகி

---

மாவினால் ஸ்ருஷ்டிக்கப்படுகிற வஸ்துக்களைப் பற்றியதே இந்தப்ரகரணம். ப்ரகாஶம் செய்யப்படுகின்றன என்கிற வ்யுத்பத்தியினால் 'வ்யக்தய:' என்று சொல்லப்படுகின்றன. அதிலும் ஸத்யலோகம் முதலியவைகளுக்கு ஒவ்வொரு கல்பத்திலும் நாஶமில்லையாதலால் மூன்று லோகங்களுக்கு உள்ளடங்கிய தேஹம் இந்த்ரியம் முதலிய வஸ்துக்களை மாத்ரம் சொல்லுகிறது, என்று ஒப்புக்கொள்ள வேண்டியது. அவைகளுக்கு உத்பத்தியும் ப்ரஹ்மாவின் ஶரீரத்திலிருந்தே. ஆகையினாலேயே 'அவ்யக்த' என்னும் பதமும் மூலப்ரக்ருதியைச் சொல்லுகிறதல்ல. பின்னை எதையென்னில் அவைகளுக்கு உபாதான காரணமாகிய ப்ரஹ்மாவின் ஶரீரத்தையே சொல்லுகிறது, ஶரீரத்தில் 'அவ்யக்த' என்னும் பதத்தை ப்ரயோகிக்கலாமென்பது ஸூத்ரத்திலேயே 1 'ஸூக்ஷ்மம் து ததர்ஹத்வாத்' என்று நிரூபிக்கப்பட்டது. இப்படிப்பட்ட ஸ்ருஷ்டி ப்ரளயம், இவைகளுக்குக் காரணத்தையும் அதற்கு நாஶமில்லாமையினால் ஸ்ருஷ்டி ப்ரளயமிவைகளின் வரிசை இடைவிடாமலிருக்கிறது என்பதையும், செய்யப்படாத கர்மங்களுக்குப் பலமும் வரலாம், செய்யப்பட்ட கர்மங்களுக்குப் பலமில்லாமலும் போகலாமே, என்கிற ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரத்தையும், இப்படிக் கீழ்ச்சொன்ன அர்த்தம் எல்லாக் கல்பங்களிலும் ஸமமாகவே வ்யாபரித்து இருக்கிறது என்பதையும், முன்போலவே ஸ்ருஷ்டிக்கிறான் என்பதையும், 'பூதக்ராம:' என்கிற ஶ்லோகம் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கர்மங்களுக்கு' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் 'பூத' என்னும் பதமானது, அசேதனங்களோடு சேர்ந்திருக்கும் ஜீவாத்மாக்களைச் சொல்லுகிறது. இங்கு ஸ்ருஷ்டிக்கப்படுவதற்கும் ஸம்ஹரிக்கப்படுவதற்கும் காரணமாகிய பரவஶமாக இருக்கை கர்மங்களைப் பொறுத்ததே என்கிற அபிப்ராயத்தினால் 'கர்மங்களுக்கு வஶப்பட்ட' என்று சொல்லப்பட்டது. 'அஹராகமே' என்னும் பதத்தை 'பூத்வா' என்கிற இடத்திலும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. என்கிற அபிப்ராயத்தினால் 'பகல் வரும்போழுது உண்டாகி' என்று

---

1 ஶாரீரகஸூத்ரம் 1-4-2. ஸூக்ஷ்மமான அவ்யக்தமே ஶரீரமாகிறது அப்படியானபிறகே காரியங்களுக்குத் தகுதியாகிறபடியினால்.

உண்டாகி ராத்திரி வரும்பொழுது லயத்தை அடைகிறது. மறுபடியும் பகல் வரும்பொழுது உண்டாகிறது. அப்படியே நூறாவது வருஷத்தின் முடிவாகிய, ஆயிரம் சதுர்யுகங்களின் கடைசியில் ப்ரஹ்மலோகம் வரையிலுமுள்ள லோகங்களும் ப்ரஹ்மாவும் * பூமி, ஜலங்களில் லயத்தை அடைகிறது. ஜலங்கள் தேஜஸ்ஸில்லயத்தை அடைகின்றன'' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களில் சொல்லுகிற க்ரமப்படி, அவ்யக்தம், அக்ஷரம் தமஸ்ஸு வரையிலும் என்னிடத்திலேயே லயத்தை அடைகின்றன. இப்படி என்னைத்தவிர மற்றதெல்லாம் காலங்

---

*அன்வயம் சொல்லப்பட்டது. இந்த நைமித்திக ப்ரளயத்தைச் சொன்னது ஶ்ருதி முதலியவைகளில் மேற்பட்ட ப்ராக்ருத ப்ரளயத்திற்கும் உபலக்ஷணம் ஆகையினால் ஸத்ய லோகத்திற்கும் நாஶம் ஏற்பட்டது. 'ஆப்ரஹ்மபுவநால்லோகா:' என்றல்லவோ ஆரம்பிக்கப்பட்டது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அப்படியே' என்று. அதன் பின்பே 'ராத்ர்யாகமே' (ராத்திரி வரும்பொழுது) என்னும் பதமே ப்ரஹ்மாவின் கடைசி ராத்திரியின் வருதலையும் நேராகவே சேர்த்துச் சொல்லுகிறது, என்று தாத்பர்யம். இதுவும்—'நூறாவது வருஷத்தின் முடிவாகிய ஆயிரம் சதுர்யுகங்களின் கடைசியில்' என்பதினால் காட்டப்பட்டது. அப்படியே ஸ்ம்ருதியில் 1 'நிஜேந தஸ்யமாநேந ஆயுர்வர்ஷஶதம் ஸ்ம்ருதம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே, 'அஹராகமே' (பகல்வரும்பொழுது) என்னும் பதமும் முதல் பகலையும்சேர்க்கிறது. ப்ரதிவீ முதலிய வஸ்துக்களே நாஶமடையும்பொழுது அவைகளினுண்டாக்கப்பட்ட ப்ரஹ்மலோகம் ப்ரஹ்மாவின்ஶரீரம், ப்ரஹ்மாண்டம் முதலியவைகளுக்கு ப்ரஸ்தாவமேது என்கிற அபிப்ராயத்தினால் ப்ரதிவீ என்று ஆரம்பித்தஶ்ருதிவாக்யம்எடுக்கப்பட்டது. தமஸ்ஸென்னும் தசையை உடைய அசேதநவஸ்துவுக்கு லயம்பரமனான தேவனிடத்தில் என்று ஶ்ருதியில் சொல்லப்படுகிறது. இந்தக் கீதையிலும் 2 'அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலய:' என்றிவை முதலானது சொல்லப்படுகிறது, என்கிற அபிபராயத்தினால், 'என்னிடத்திலேயே' என்று சொல்லப்பட்டது. இப்படியே 4 'எவன் முதலில் ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டிக்கிறானோ' என்றும் 3 'ஒரு நாராயணனே இருந்தான் ப்ரஹ்மாவுமில்லை, ருத்திரனுமில்லை,' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களில் சொல்லிய க்ரமப்படி மறுபடி ப்ரஹ்மா முதலியவர்களுக்கு ஸ்ருஷ்டியும் மறுபடியும் ப்ரளயமும், என்றிவை முதலியது அறிய*

---

* ஸுபாலோபநிஷத், 2,

1 *தஸ்ய-அந்த ப்ரம்மாவுக்கு, நிஜேந-தன்னுடையதான, மாநேந-அளவினால்-வர்ஷஶதம்-நூறுவருடங்கள் ஆயு:-ஆயுஸ்ஸாக, ஸ்ம்ருதம்-சொல்லப்பட்டது.*

2 பகவத்கீதை 7-6. 3 ஶ்வேதாச்வதரோபநிஷத் 6-18. 4 மஹோபநிஷத் 1-1.

களின் ஏற்பாட்டின்படி என்னிடத்திலிருந்து உண்டாகிறபடியினாலும், என்னிடத்தில் லயத்தை அடைகிறபடியினாலும் அவைகளுக்கு உத்பத்தி நாஶங்களை உடைத்தாயிருக்கை தள்ளமுடியாது. ஆகையினால் ஐஶ்வர்யமாகிற ப்ரயோஜனத்தை அடைந்தவர்களுக்குத் திரும்பி வருதல் பரிஹரிக்கமுடியாது. என்னை அடைந்தவர்களுக்கோ வெனில் திரும்பி வருதலின் ப்ரஸ்தாவமே இல்லை 17-18-19.

பா] பிறகு கைவல்யத்தை அடைந்தவர்களுக்கும் திரும்பிவருதல் இல்லை என்று சொல்லுகிறார்— 20-21.

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ (௨०)
अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ (௨௧)

ப-ரை] तस्मात् அந்த, अव्यक्तात् அசேதநமாகிய ப்ரக்ருதியைவிட, अन्यः வேறானதாயும், परः மேலானதாயுமிருக்கிற, भावः வஸ்துவானது, अव्यक्तः வேறொரு ப்ரமாணத்தினாலேயும் அறியத்தகாதது, सनातनः அநாதியானது. यः எந்த வஸ்துவானது, सर्वेषु எல்லா, भूतेषु ஆகாஶம் முதலிய பஞ்சபூதங்களானவை, नश्यत्सु நாஶமடையும் பொழுதும், न विनश्यति நசிக்கிற தில்லையோ, सः அந்த ஆத்மா, अव्यक्तः அவ்யக்தம் என்றும், अक्षरः அக்ஷரம் என்றும், उक्तः சொல்லப்பட்டது, तम् அந்த ஆத்மாவை, परमाम् உயர்ந்த, गतिम् அடையத்தகுந்த வஸ்துவாக, आहुः சொன்னார்கள், यम् எந்த ஜீவா

வேண்டியது. இப்படிப்பட்ட ஸ்ருஷ்டியையும், ப்ரளயத்தையும் நிரூபித்ததற்கு ப்ரக்ருதத்திலுபயோகத்தைக்காட்டுகிறார்—'இப்படி' என்று ஆரம்பித்து. ஸ்ருஷ்டியையும் ப்ரளயத்தையும் சொல்லும் மற்றெல்லா ஸந்தர்ப்பங்களிலும் இதுவே தாத்பர்யம் என்று அறிய வேண்டியது. 'என்னைத் தவிர மற்றதெல்லாம்' என்பதினால் 1'अहं कृत्स्नस्य' என்று கீழ்ச்சொன்னது ஞாபகப்படுத்தப்பட்டது. மோக்ஷதர்மத்திலும் 2 'नित्यं हि नास्ति जगति भूतं स्थावरजङ्गमम् । ऋते तमेकं पुरुषं वासुदेवं सनातनम्' என்று சொல்லப்பட்டது. ()

1 பகவத்கீதை, 7, 6.

2 மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மம், 34 32,

ஏகம்- ஒருவனாகிய, ஸநாதனம்- அநாதியாகிய, தம்- அந்த, புருஷம்- புருஷனை, வாஸுதேவம்ருதே- வாஸுதேவனை தவிர, ஜகதி- உலகத்தில், ஸ்தாவரஜங்கமம்- ஸ்தாவரமாகவும் ஜங்கமமாகவுமுள்ள, பூதம்- ப்ராணியானது, நித்யம்- நாஸ்திஹி- நித்யமானதன்றல்லவா, (அழிவுள்ளது) என்று அர்த்தம்.

த்மாவை, ப்ராப்ய அடைந்து, நநிவர்த்தந்தே திரும்புகிறரில்லையோ, தத் அந்த ஜீவாத்மஸ்வரூபமானது, மம எனக்கு பரமம் மேலான, தாம (நியமிக்கும்) இடம், அன்றிக்கே பரமம் மேலான, தாம ஞானமாகிற ப்ரகாஶத்தை உடைய, தத் அந்த ஆத்மாவானது, மம எனக்கு ஶேஷபூதம்.
20-21

பா] அந்த அசேதனமாகிய ப்ரக்ருதியைவிட ப்ரயோஜனமாக இருக்கையில் சிறந்ததான ஆத்மா என்னும் வஸ்துவானது, ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாக உடையதாகையினல் அதைவிட வேறுபட்டது. ஒரு ப்ர

தா] 'பர:' என்று ஆரம்பித்து இரண்டு ஶ்லோகங்களின் அர்த்தத்தைச் சொல்லுகிறர்—'பிறகு' என்று இதின் கருத்தாவது பகவானை அடைந்தவர்களுக்குத் திரும்பிவருதல் இல்லை. என்பது முன்னமே சொல்லப்பட்டது. அவ்யக்தத்தைவிட மேலானதாகச் சொல்லப்பட்ட அக்ஷரமும் ஜீவனுகவே இருக்கவேண்டும் 1 'ஜராமரணமோக்ஷாய' என்பவை முதலியவைகளின ஞாபகம் வருவதினல், கைவல்யத்தை விரும்புகிறவர்களுக்குத தாழ்நத கதியை அடைதல் இல்லாமையினல திரும்பிவருதல் இல்லைஎன்று, சொல்லவேண்டியதும அவஶ்யம்தான். ஆகையினுல் அதையே சொல்லுகிறது இவ்விரண்டு ஶ்லோகங்களும், என்று. அவ்யக்தமே முன்பு ப்ரஸ்தாவிக்கப்பட்டபடியினல் இங்கும் 'அவ்யக்தாத்' என்றே பதம் பிரித்துக்கொள்ள வேண்டியது. இதற்கு அவஶ்யம் வேண்டியதாகையினல் 'பரஸ்தஸ்மாத்து' என்கிற இரண்டு பதங்களுடனும் அன்வயம் சொல்லிக்கொள்ள வேண்டியது. அதிலும் புனருக்தி என்னும் தோஷத்தை விலக்குவதற்காகச சிறநதது என்பதைச் சொல்லிக்கொண்டு அதின் வழியாக ப்ரயோஜனம் என்பதைக் காட்டுகிறது. 'பர:' என்னும் பதம். அதினலேயே ஸ்வரூபம் வெவ்வேறு என்பது ஏற்பட்டபடியினல் 'அந்ய:' என்னும் பதம ஸ்வபாவம் வேறு என்பதைக் காட்டுகிறது. அப்படிப்பட்ட வேறான ஸ்வபாவமும் சேதனமாக இருக்கையே என்று பரமாணத்திலேற்பட்டது, என்கிற அபிப்ராயத்தினல் சொல்லுகிறா—'அந்த' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் 'பாவ:' என்னும் பதமானது வஸ்து என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. 'வ்யக்த:' என்று பதம் பிரிப்பது யுக்தமல்ல. 'அவ்யக்தோக்ஷர:' என்று இங்கேயே சொல்லப்போகிற படியினுலும அறியமுடியாத ஜீவாத்மாவினிடத்தில் 'வ்யக்த:' என்னும் பதத்தை ப்ரயோகிப்பது பொருந்தாதாகையினுலும், என்கிற அபிப்ராயத்தினல்

1 பகவத்கீதை 7-5.

மாணத்திஞலும் ப்ரகாஶம் செய்யப்படாததாகையிஞல் அவ்யக்தம். அதாவது தன்ஞலேயே அறியக்கூடிய தனக்கு அஸாதாரணமான ஸ்வபாவத்தை உடையது. உத்பத்தி, நாஶம் இவைகளை அடையத்தகாத தாகையிஞல், நித்யம். எந்த ஆத்மாவானது ஆகாஶம் முதலிய எல்லாப் பூதங்களும் தங்கள் தங்கள்காரணங்களுடனும்,காரியங்களுடனும் நாஶத்தை அடையும்பொழுது, அந்தந்தப் பூதங்களுக்குள் தான் இருந்தபோதிலும் நாஶம் அடைவதில்லையோ, அந்த ஆத்மா அவ்யக்தம் என்றும் அக்ஷரம்

சொல்லுகிறார்—'ஒரு ப்ரமாணத்திஞலும்' என்று ஆரம்பித்து. ஜீவனை அவ்யக்தம் என்பது யுக்தமல்ல; ப்ரத்யக்ஷம், அநுமானம், ஶாஸ்த்ரங்கள், இவைகளிஞல் அததற்குத் தக்கபடி ஆத்மா ப்ரகாஶம் செய்யப்படுகிறான் ஆகையிஞல். அப்படிக்கில்லாவிடில் 1 ஆகாஶத்தாமரைப் பூப் போலாகவேண்டும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'தன்ஞலேயே' என்று ஆரம்பித்து. மற்ற ப்ரமாணங்கள் பொதுவாக ஆத்மாவை நிரூபிக்கின்றன, என்று தாத்பர்யம். இது நித்யம் என்பதில் இரண்டாவது அத்யாயத்தில் சொல்லப்பட்ட காரணங்களை ஞாபகப்படுத்துகிறது—'உத்பத்திவிநாஶங்களை அடையத்தகாததாகையிஞல்'என்பது. இவ்விடத்தில் 'ஹ-ஞெஷு'என்கிற பதம் பஞ்ச பூதங்களைச் சொல்லுகிறது. அவைகள் நாஶமடைந்தபோதிலும் ஆத்மா நிற்கிறது என்று சொல்லுகிறபடியிஞல் நித்யம் என்பது ஶ்ரமமில்லாமல் கிடைப்பதிஞல். இவ்விடத்தில் 'ஸவெ-ஷு' என்கிற பதத்திஞுடைய அபிப்ராயத்திஞல் காரணங்களோடு கூட இருக்கையும் காரியங்களோடு கூட இருக்கையும் ஏற்பட்டது, என்கிற அபிப்ராயத்திஞல் சொல்லுகிறார்—'ஆகாஶம் முதலிய' என்று ஆரம்பித்து. ப்ரஸ்தாவத்துக்கு வந்ததேயாஞல் அப்படிப்பட்ட நாஶம் ஜீவனுக்கு கிடையாது; என்று தடுக்கவேண்டும். அப்படி ஜீவனுக்கு நாஶம் வரவேண்டிய ப்ரஸ்தாவமும், நாஶமடையும் வஸ்துக்களுக்குள் ப்ரவேஶித்திருப்பதிஞல். எப்படிக்கெனில், எள்ளு கொளுத்தப்பட்டதேயாஞல் அதற்குள்ளிருக்கும் எண்ணெய்,எவ்விதம்கொளுத்தப்படுகிறதோ அப்படி; ஆகையிஞல் 'ஸவெ-ஷுஹ-ஞெஷு நஶ்யத்ஸு' (எல்லா ப்ராணிகளும் நாஶமடைந்த போதிலும்) என்பதின் ஸாமர்த்யத்திஞல் ஏற்பட்டஅர்த்தம்—'அந்தந்தப் பூதங்களுக்குள் தானிருந்தபோதிலும்' என்று சொல்லப்பட்டது. 'யஸ்ஸவெ-ஷு' என்கிற இடத்தில் 'ஸஃ' என்கிற பதத்திற்கு அதிக ப்ரயோஜனமில்லாமையிஞல் மேலே அவஶ்யம் வேண்டி இருக்கிறபடியிஞலும், 'அந்த ஆத்மா அவ்

1 இல்லாமல் போகவேண்டும் என்று கருத்து.

என்றும் * 'யெக்ஷரநிர்தேஶ்ய மவ்யக்தம் பர்யுபாஸதே † கூடஸ்தோக்ஷர உச்யதே' என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்டான். அந்த ஆத்மாவையே வேதம் தெரிந்தவர்கள் உயர்ந்த கதியாகச் சொன்னார்கள். இந்த ஆத்மாவே ‡ 'யஃ ப்ரயாதி த்யஜந்தேஹம் ஸயாதி

---

யக்தமென்றும் அக்ஷரமென்றும்' என்று அன்வயம் சொல்லப்பட்டது. அன்றிக்கே அங்கே இருக்கும் பதத்தை இங்கே இழுத்துக் கொண்டதாகவுமாம் 'சொல்லப்பட்டது' என்பதற்கு எவ்விடத்தில் என்று கேட்கில் ஸமாதானம் சொல்லுகிறார்—"யெதா" என்று ஆரம்பித்து இந்த ஸந்தர்ப்பங்களில் 'க்ஷரஃ' என்னும் பதம் ஜீவனைச் சொல்லுகிறது என்பது அந்தந்த இடங்களிலேயே தெளிவாக இருக்கிறது. 'உத்தமஃ புருஷஸ்த்வந்யஃ' என்றிவை முதலியவைகளினால் பகவானை விடவேறு என்று சொல்லப்பட்டிருக்கிறபடியினால்; ஆகையினால் இந்த அத்யாயத்திலும், 'அக்ஷரம் ப்ரஹ்மபரமம் அவ்யக்தோக்ஷரஃ' என்கிற இடங்களிலிருக்கும் அக்ஷர என்னும் பதங்களினால் பரிபூர்ணத்தனை ஜீவனே சொல்லப்படுகிறான். "யெதா" என்கிற ம்லோகத்தில் அவ்யக்த அக்ஷர என்கிற இரண்டு பதங்களையும் ப்ரயோகித்திருக்கிறபடியினால் இவ்விடத்திலும் 'அவ்யக்தோக்ஷர இத்யுக்தஃ' என்று அந்த இரண்டு பதங்களும் சொல்லப்பட்டிருக்கிறபடியினால் அந்த ம்லோகத்தின் ஞாபகம் உண்டாகிறபடியினால், என்று தாத்பர்யம். மேல்வரப் போகிற ஸந்தர்ப்பத்திலிருக்கிற ம்லோகம் இவ்விடத்தில் "உக்தஃ" சொல்லப்பட்டது. என்கிற பதத்தோடு அன்வயித்ததாக எப்படி எடுக்கப்படுகிறது. என்னில் அந்தந்த ஸந்தர்ப்பங்களில் விவரணம் செய்யக்கூடிய ப்ரக்ருதி வாக்யங்களை நினைத்துக்கொண்டு அந்த அந்த ம்லோகங்களை எடுத்திருக்கிறது. அன்றிக்கே 'நிஹதாஃ பூர்வமேவ' என்பதைப்போலத் தன்னுடைய ஸங்கல்பத்தில் தோன்றி இருக்கிறபடியினால் அப்படிச்சொல்லப்பட்டது. 'ப்ராஹுஃ' (சொன்னார்கள்) என்கிற இடத்தில் கர்த்தா எவர்கள் என்று அபேக்ஷை உண்டாகில் 1 'யதக்ஷரம்வேதவிதோவதந்தி' என்று கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்டதாய் இவ்விடத்திற்கு உசிதமுமான கர்த்தாவைச் சேர்த்துக்கொண்டு சொல்லுகிறார்—'வேதம் தெரிந்தவர்கள்' என்று. 'ஸயாதிபரமாம்கதிம்' என்று, பொதுவாகச்சொன்னது இத்தால் விமேஷித்துக் காட்டப்பட்டது, என்று சொல்லுகிறார்—இந்த 'ஆத்மாவே' என்று ஆரம்

---

* பகவத்கீதை-12-3.　† பகவத்கீதை-15-16.　‡ பகவத்கீதை 8-13.
1 பகவத்கீதை- 8-11.

வாசௌமகிம்' என்கிற இடத்தில் 'வாசௌமகிம்' என்கிற பதத்தினால் சொல்லப்பட்ட ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தைவிட்டு நீங்கித் தன்னுடைய ஸ்வரூபத்துடன் இருக்கும் ஆத்மா, என்று அர்த்தம். எந்த இப்படிப்பட்ட தன்னுடைய ஸ்வரூபத்துடன் இருக்கும் ஆத்மாவை அடைந்து திரும்பி வருவதில்லையோ அது, எனக்குச் சிறந்த நியமனம் செய்யும் இடம். அதாவது அசேதனமாகிய ப்ரக்ருதி, ஒரு நியமனம் செய்யுமிடம். அவைகளோடு சேர்ந்திருக்கும் ஜீவாத்மா, இரண்டாவது நியமனம் செய்யுமிடம். அசேதனத்தின் ஸம்பந்தத்தை விட்டு நீங்கித் தன்னுடைய ஸ்வரூபத்துடன் கூட இருக்கும் முக்தாத்மாவின் ஸ்வரூபம் மேலான நியமிக்குமிடம்,

---

பித்து. அன்றிக்கே இவ்விடத்தில் 'தசாஹஂவாசௌமகிம்' என்று சொன்னது 'ஸயாதிவாசௌமகிம்' என்று முன்பு சொன்னதை ஞாபகப்படுத்துவதற்காக, என்று தாத்பர்யமாகவுமாம். அந்த ஆத்மாவினிடத்தில் 'சுக்ஷ்ம வாசமதி' என்னும் பதங்களைப் ரயோகிப்பதற்கு யோக்யதை உண்டு என்று காட்டுகிறார்—'ப்ரக்ருதியின்ஸம்பந்தத்தை' என்று ஆரம்பித்து. திரும்பிவராமைக்குக் காரணமாக இது சொல்லப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால், 'இப்படிப்பட்ட' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டது. 'தஷாசவாசஂசச' என்று கேவலம் ஸ்தானம் மாத்திரத்தைச் சொல்லுவது முன்னமே ஏற்பட்டிருக்கிறபடியினாலும், இடம, என்றால் எவனுடையது என்கிற கேள்வியை உடையதாகையினால், '1 எவன்ஆத்மாவிலிருக்கிறானோ' என்கிற அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்ட பகவானால் அதிஷ்டானம் செய்யக்கூடிய இடம் 'யாச' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. என்று சொல்லுகிறார்—'நியமனம் செய்யும் இடம்' என்று. வேறு எது நியமனம் செய்யுமிடம்? அந்த இடத்தை விலக்குவதற்காக இங்கே சிறந்த என்னும் பதம் சொல்லி இருக்கிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அசேதனமாகிய' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் 'வாசஂயாச' என்று சொல்லி இருக்கிறபடியினால் பரிசுத்தமான ஆத்மாவைச்சொல்லுகிறது, என்பது ஏற்பட்டது; ஆகையினால் அமுக்தனான ஜீவனும் சிறந்ததல்ல என்றே சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'அவைகளோடு சேர்ந்திருக்கும்' என்றுஆரம்பித்து. முக்தியை அடைந்தவனும்பரமாத்மாவுக்குப பராதீனனாக இருந்தால் அப்பொழுது ஸ்வதந்த்ரனாகிய பரமாத்மாவினால் மறுபடியும் ஸம்ஸாரமாகிய பள்ளத்தில் தள்ளப்படட்டுமே? என்கிற

---

1 ப்ருஹதாரண்யகம் 5-7-22 மாத்யமதின பாடம்.

என்று அர்த்தம். அதற்கு மேன்மையாவது, திரும்பிவருதலில்லாமை. அதுவுமன்றிக்கே, 'யாஜ' என்னும் பதமானது ப்ரகாஶம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. இவ்விடத்தில் ப்ரகாஶமாவது ஞானம். ப்ரக்ருதியோடு சேர்ந்தவனுய், சுருங்கிய ஞானத்தையே ஸ்வரூபமாக உடைய ஆத்மாவைவிடச் சுருக்கமில்லாத ஞானத்தை ஸ்வரூபமாக உடையவனுகையினுல் முக்தாத்மாவின் ஸ்வரூபம் மேலான ப்ரகாஶம். 20-21

---

*ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறுர்—'அதற்குமேன்மையாவது' என்றுஆரம்பித்து. இதின் கருத்தாவது—அவித்யை முதலியன அல்லவோ ஸம்ஸாரத்திற்குக் காரணம், பராதீனனுக இருக்கை மாத்திரம் அல்ல. அவித்யை முதலியவைகள் முழுமையும் நாஶமடைந்து விடுகிறபடியினுலும், பகவானுடைய க்ருபை முதலியவைகள் ஸ்வபாவத்திலேயே உள்ளவைகளாகையினுலும் முக்தனுக்கு ஸம்ஸாரம் என்னும் வாஸனேயே இல்லை, என்று அர்த்தம். அன்றிக்கே பகவானே அடைதல் மாத்திரம் திரும்பிவருத வில்லாதது,என்பதில்லை; பின்னே எதென்னில்,பரிஶுத்தனுன ஜீவாத்மாவை அடைதலும் தாழ்ந்தகதிக்கு வருதலில்லாததினுல்அப்படியே, என்று தாத்பர்யம் 'நியமனம்செய்யுமிடம் என்று தன்னே அடைந்தவனேக் குறித்து விஶேஷணம சொல்வதில் அத்ருப்தியினுல் சொல்லுகிறுர்—'அதுவுமன்றிக்கே' என்று ஆரம்பித்து. தேஜஸ்ஸு என்னும் அர்த்தத்தைசசொல்லுகிற 'யாஜ' என்னும் பதமும்ப்ரகாஶத்தைச் சொல்லட்டும்; அதற்கு இவ்விடத்தில் எப்படி அன்வயம்என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறுர்--'இவ்விடத்தில் ப்ரகாஶமாவது' என்று. இந்த விஶேஷணத்தினு லேற்பட்ட அர்த்தத்தைக் காட்டுகிறுர்—'ப்ரக்ருதியோடு சேர்ந்தவனுய்' என்று ஆரம்பித்து. ப்ரகாஶத்தைசசொல்லுகிறது,என்னும் பக்ஷத்தில இக் அந்த 'வரமம்' (சிறந்த) 'யாஜ' (ப்ரகாஶம் என்கிற ஞானத்தை ஸ்வரூபமாக உடைய ஆத்மாவானது 'மம' (எனக்கு) (ஶேஷம்) என்று வாக்யத்திற்கு அர்த்தம் சொல்ல வேண்டியது, 'ஸர்வஶேஷம்' என்கிற ஶ்லோகத்தினுல் முன்னமேயே, ஆத்மாக்களெல்லாம் தனக்கு ஶேஷம் என்பது சொல்லப்பட்டது ஆனுலும் அவ்விடத்தில் ஸமஷ்டி ஆத்மாக்களே மாத்ரம் பற்றியது என்று தோன்றுகின்றது. இவ்விடத்திலோ முக்தாத்மாவும் தனக்கு ஶேஷபூதன் என்று சொல்லப்படுகிறது. ஆகையினுல் புனருக்தி இல்லை.* 20-21

பா] ஞானிக்கு அடைய வேண்டிய பலமோவெனில், அதைவிட மிகவும் வேறுபட்டது என்று சொல்லுகிறார்—

**புருஷஸ்ஸ பர: பார்த² ப⁴க்த்யா லப்⁴யஸ்த்வநந்யயா ।**
**யஸ்யாந்த:ஸ்தா²நி பூ⁴தாநி யேந ஸர்வமித³ம் ததம் ॥ (௨௨)**

ப-ரை] பார்த² அர்ஜுந, பூ⁴தாநி எல்லா ப்ராணிகளும், யஸ்ய எந்தப்பரம புருஷனுடைய, அந்த:ஸ்தா²நி உள்ளிருக்கின்றனவோ, யேந எந்தப் பரமபுருஷனால், இத³ம் இந்த, ஸர்வம் எல்லாம், ததம் வ்யாபிக்கப்பட்டதோ, ஸ: அந்த, பர: மேலான, புருஷ: புருஷன், அநந்யயா வேறொரிடத்திலும் செலுத்தாத, ப⁴க்த்யா பக்தியினால், லப்⁴ய: அடையத்தக்கவன். 22

பா] '* மத்த:பரதரம் நாந்யத் கிஞ்சித³ஸ்தி த⁴நஞ்ஜய। மயி ஸர்வமித³ம் ப்ரோதம் ஸூத்ரே மணிக³ணா இவ॥ † மாமேப்⁴ய:பரமவ்யயம்' என்றிவை முதலியவைகளினால் சொல்லப்பட்ட தான எந்தப்பரமாத்மாவின் உள்ளே எல்லாப்ராணிகளும் இருக்கின்றனவோ, எந்தப்பரம புருஷனால் இவை

---

தா] 'புருஷஸ்ஸ பர:' என்கிற ஶ்லோகத்தில் 'து' என்கிற பதமிருப்பதினால், வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்று ஏற்படுவதினாலும். 'அநந்யயா ப⁴க்த்யா' என்கிற பதங்களின் ஸாமர்த்யத்தினாலும், 'புருஷ:' என்னும் பதத்திற்குப் பரமாத்மாவினிடத்தில், ப்ரக்ருதிக்குள் வஸித்தல், எங்கும் நிறைந்திருத்தல், எல்லா வஸ்துக்களுக்கும் முந்தி இருத்தல், தன்னை ஆஶ்ரயித்தவனுக்கு அவன் கேட்டதைவிட அதிக பலத்தைக்கொடுத்தல் முதலிய காரணங்களினால் '1 ஆயிரம் தலைகளை உடைய புருஷன்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் அதிகமாகப்ரயோகம் இருக்கிறபடியினாலும், 'பரம்' என்கிற விஶேஷணமிருப்பதினாலும் கீழ்ச்சொல்லிய பலத்தை விட அதிக பலத்தைச்சொல்லவந்தது இந்த ஶ்லோகம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஞானிக்கு' என்று ஆரம்பித்து. 'வேறுபட்டது' என்பதோடு வேறாக்கக்கூடிய ஸ்வபாவங்களினால் என்று சேர்த்துக்கொள்ளவும், அன்றிக்கே சிறந்தது, என்றாவது அர்த்தம் சொல்லிக்கொள்ளவுமாம். ஆகாஶம் முதலியவைகள் உள்ளே ப்ரவேஶித்திருந்தபோதிலும் அவைகளுக்கு மேன்மை இல்லையாதலால் அது ஸித்திப்பதற்காக 'யஸ்ய' என்றுபராஸித்தமாக இங்கே சொல்லி இருப்

---

* பகவத்கீதை 7-7. † பகவத்கீதை 7-13.

யெல்லாம் வ்யாபரிக்கப்பட்டிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பரம புருஷன் '‡ அநந்யசேதா꞉ ஸததம்' என்று சொல்லியபடிக்கு வேறொரிடத்திலும் செலுத்தாதபக்தியினால் அடையத்தக்கவன். 22

பா] பிறகு ஆத்மாவினுண்மையைத் தெரிந்துகொண்டவனுக்கும், பரம புருஷனிடத்தில் நிஷ்டையை உடையவனுக்கும் பொதுவாகிய அர்ச்சிராதிகதியைச் சொல்லுகிறார்; இந்த இருவர்களுக்கும் அர்ச்சிராதிகதி ஶ்ருதியில் சொல்லப்பட்டது. அந்தக் கதியும் திரும்பிவாராமையை லக்ஷணமாக உடையது. அப்படியே பஞ்சாக்னி வித்யையில் * 'எவர்கள இந்த ஜீவாத்மாவை இப்படித் தெரிந்துகொள்ளுகிறார்களோ, எந்த இவர்கள் காட்டிலிருந்து கொண்டு ஶ்ரத்தையோடுகூடியவர்களாய் ப்ரஹ்மத்தை இவ்விதமாக உபாஸிக்கிறார்களோ' இவ்விரண்டு பெயர்களும் அக்னியை அடைகிறார்கள். அக்னியினிடத்திலிருந்து, பகலை அடைகிறார்கள்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அச்சிராதி கதியினால் சென்றவனுக்கு ப்ரஹ்மத்தைஅடைதலும், திரும்பிவருதலில்லாமையும் † 'அந்த வைத்யுதன் இவர்களை ப்ரஹ்மத்தை அடைவிக்கிறான். இந்த வழியினால் சென்றவர்கள இந்த மனுஷ்யர் முதலியவருடையதான அடிக்கடித் திரும்புகிறதான ஸம்ஸாரத்தைக் குறித்துத் திரும்புகிறதில்லை' என்கிற அர்த்தமுள்ள வாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது இந்த அர்ச்சிராதி கதியைச் சொல்லுகிற ஶ்ருதி ப்ரஜாபதி வாக்யம் முதலிய இடங்களில் சொல்லப்பட்டதாய் பரவித்யைக்கு அங்கமான ஆத்மாநுபவத்தைப்பற்றிச் சொல்லுகிறதுமல்ல. ‡ 'எந்த இவர்கள் காட்டிற்சென்று ஶ்ரத்தையை உடையவர்களாய் ப்ரஹ்மத்தை இவ்விதமாக உபாஸிக்கிறார்களோ' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்

*பது கீழ்ச்சொல்லிய மேன்மையைச் சொல்லுகிறது, என்று காட்டுகிறார்—'ஊத்த꞉' என்று ஆரம்பித்து. அநுவாதம், புரோவாத மிவ்விரண்டும், ஒரே அர்த்தத்தை உடையது என்று தாத்பர்யம் '1 எதைவிட வேறு மேலான வஸ்து இல்லையோ' என்று அர்த்தமுள்ள வாக்யம் ஆரம்பித்து, அந்தப் புருஷனால இவையெல்லாம நிறைந்திருக்கிறது என்றர்த்தமுள்ள வாக்யம். வரையிலுமுள்ள ஶ்ருதிவாக்யங்களை ஞாபகப்படுத்துவதற்காக, 'எந்தப் பரமபுருஷனால்' என்று சொல்லப்பட்டது. 'பக்திவேறொரிடத்திலும் செலுத்தப்படாமை' எபபடிப பட்டது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அநந்யசேதா꞉' என்று ஆரம்பித்து.* 22

1 *ஶ்வேதாஶ்வதரோபநிஷத்* 3-9.

‡ *பகவத்கீதை* 8-14. * *சாந்தோக்யம்* 5-10-1. ‡ *சாந்தோக்யம்* 4-15- 6.

தில் பரவித்யையைத் தனித்துச் சொல்லி இருப்பது வ்யர்த்தமானதினால் பஞ்சாக்னி வித்யையிலும் $ இவ்விதமாக ஐந்தாவது ஆஹுதியில் ஜலங்கள் புருஷனென்று பெயர்பெற்றவைக ளாகின்றன. ‡"நல்ல நடத்தை உடையவர்கள், கெட்ட நடத்தை உடையவர்கள்" என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யங்களினால், புண்யபாவங்களைக் காரணமாக உடைய மனுஷ்யன் முதலியனவாதலை மற்று நான்கு பூதங்களுடன் கலந்த ஜலத்திற்கே. ஆத்மாவுக்கோவெனில் அவைகளோடு ஸம்பந்தம் மாத்திரம் தான், என்று அர்த்தமுள்ள வாக்யத்தில் சேதனம். அசேதனம் இதுகளின் பேதத்தைச்சொல்லி இந்த ஆத்மாவை* எவர்கள் இப்படித் தெரிந்துகொள்ளுகிறார்களோ அவர்கள் அக்னியை யடைகிறார்கள்.இந்த ஸம்ஸாரத்தைக் குறித்துத் திரும்புவதில்லை" என்று அர்த்தமுள்ள வாக்யங்களினால் வெவ்வேறான இந்தச்சேதநாசேதன வஸ்துக்களைவிட வேண்டியதாகவும்அடையவேண்டியதாகவும் எவர்களிப்படித் தெரிந்துகொள்ளுகிறார்களோ அவர்களர்ச்சிராதி கதியினால் போகிறார்கள் மறுபடித் திரும்புவதில்லை. என்று சொல்லப்பட்டது. ஆத்மாவினுண்மையைத் தெரிந்து கொண்டவனுக்கும் பரமபுருஷனிடத்தில் நிஷ்டையைஉடையவனுக்கும்¶ அந்த வைத்யுதன் அவர்களைப்ரஹ்மத்தை அடைவிக்கிறான் என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் ப்ரஹ்மத்தை அடைதல் உண்டு,என்று சொல்லி இருப்பதினாலும் ப்ரக்ருதியைவிட்டு நீங்கின ஆத்மா தத்க்ரது ந்யாயத்தினாலும் தனக்கு அந்தர்யாமியாக உடையதாகையினால் ப்ரஹ்மத்துக்கு ஶேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடையது, என்று அனுஸந்தானம் செய்ய வேண்டும். பரமாத்மாவுக்கு ஶேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடையது, என்பதும், ‡‡ 'எவன் ஆத்மாவினிடத்தி லிருந்து கொண்டு' என்று அர்த்தமுள்ள வாக்யமாரம்பித்து, 'எவனுக்கு ஆத்மா ஶரீரமோ' என்று அர்த்தமுள்ள வாக்யம் வரையிலுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளினால் ஏற்பட்டது.

*யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகிந: ।*
*ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥* (௨௩)

*அக்நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।*
*தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா: ॥* (௨௪)

---

$ சாந்தோக்யம், 5-11-1 ‡ பாந்தோக்யம், 5-10-7 * சாந்தோக்யம், 5-9-1.
¶ சாந்தோக்யம் 4-15-6 ‡‡ சதபதப்ராஹ்மணம் 14-6-5-30

நிஷத்து 3-9. ஶ்வேதாஶ்வதரோபநிஷத்து 3-9.

ப-ரை] ஸாதஷம — ஓ அர்ஜுன, யத்ர — எந்த, காலே — வழியில், ப்ரயாதா: — போன, யோகிந: — யோகிகள், அநாவ்ருத்திம் — திரும்பி வாராமையையும், ஆவ்ருத்திமேவ — திரும்பிவருதலையும், யாந்தி — அடைகிறார்களோ, தம் — அந்த, காலம் — வழியை, வக்ஷ்யாமி — சொல்லப்போகிறேன், அக்நி: — அக்னி என்கிற, ஜ்யோதி: — ப்ரகாசமுள்ளவஸ்துவும், அஹ: — பகலும், ஶுக்ல: — சுக்கிலபக்ஷமும், ஷண்மாஸா: — ஆறுமாதங்களடங்கிய, உத்தராயணம் — உத்திராயணமும், (ஆகிய) தத்ர — அந்த வழியில், ப்ரயாதா: — போன, ப்ரஹ்மவித: — ப்ரஹ்மத்தை உபாஸநம்செய்த, ஜநா: — ஜனங்கள், ப்ரஹ்ம — ப்ரஹ்மத்தை, கச்சந்தி — அடைகிறார்கள். 23-24

தா] 'யத்ரகாலே' என்று ஆரம்பித்து 1 'யோகயுக்தோபவார்ஜுந' என்கிற வரையிலும் உள்ள க்ரந்தத்தின் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் — 'பிறகு' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் தூமாதி மார்க்கத்தைச் சொன்னது, இது விடத்தகுந்தது என்று, தெரிவிப்பதற்காக அர்ச்சிராதி மார்க்கத்தைச் சொன்னதோவெனில் அதை அனுஸந்தானம் செய்யவேண்டியதற்காக. ஆகையினால் இந்த அர்ச்சிராதி மார்க்கத்தைச்சொல்லுவதிலேயே தாத்பர்யம், என்று கருத்து. பரமபுருஷனிடத்தில் நிஷ்டையை உடையவனுக் கல்லவோ அர்ச்சிராதிகதி. அது இவ்விடத்தில் பொது, என்று எப்படிக்குச் சொல்லப்படுகிறது. என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார் — 'இந்த இருவர்களுக்கும்' என்று. ஆத்மாவை உபாஸிக்கிறவனுக்குத் திரும்பிவருதல் இல்லையென்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறபடியினால் அவனுக்கும் அர்ச்சிராதிகதிதான், என்று காட்டுவதற்காகச் சொல்லுகிறார் — 'அந்தக்கதியும்' என்று. பொது என்பதற்கும் திரும்பி வருதலில்லை என்பதற்கும் ப்ரக்ருதியைக் காட்டுகிறார் — 'அப்படியே' என்று. அங்கியின் ப்ரயோஜனமோ அங்கத்திலும் சொல்லப்படுகிறது, என்றுக்ஷேபித்துக் கொண்டு ஸமாதானம் சொல்லுகிறார் — 'இந்த அர்ச்சிராதிகதியை' என்று ஆரம்பித்து. காரணத்தைச் சொல்லுகிறார் — 'எந்த இவர்கள்' என்று ஆரம்பித்து. அங்கியின் பலத்தையே அங்கத்திலும் சொல்வது யுக்தம் தான், ஆனாலும் அங்கியோடு கூட அங்கத்தை ஸமமாகத் தனித்துச் சொல்லி அந்த அங்கியின் பலத்தை அங்கத்திற்குச் சொல்வது ஸரியல்ல, என்று தாத்பர்யம்.

1-பகவத்கீதை 8-27.

இத்தால் முதல் ஆறு அத்யாயங்களில் சொல்லப்பட்ட ஜீவாத்மாவின் அனுபவத்தைவிட இவ்விடத்தில் சொல்லப்படுகிற ஜீவாத்மாவின் உண்மையைப் பற்றிய அனுஸந்தானம் வேறு, என்று காட்டப்பட்டது. "எவர்கள்" என்று ஆரம்பிக்கும் ஶ்ருதிவாக்யம் ஜீவாத்மாவினிடத்தில் நிஷ்டையை உடையவர்களைச் சொல்லுகிறது, என்பது எப்படி? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'பஞ்சாக்னி வித்யையிலும்' என்று ஆரம்பித்து. 'ஜலங்கள் புருஷன் என்று பெயர் பெற்றவைகளாகின்றனவோ' என்று, த்ரிவ்ருத்கரணம் செய்யப்பட்ட ஜலங்களை சொல்லப்படுகிறபடியினால் மற்ற பூதங்களோடு ஸம்பந்தமும் ஏற்பட்டது. 'ஜலத்திற்கே' என்று, ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லை என்று நீக்குவதற்காகச் சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட ஶரீரத்தின் ஸம்பந்தம் கூட வேறொரு காரணத்தினால் ஏற்பட்டது, என்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'புண்யபாபங்களைக் காரணமாக உடைய' என்று. 'நல்ல நடத்தையை உடையவர்கள் நல்ல ஜன்மத்தை அடைகிறார்கள்.' 'கெட்ட நடத்தையைஉடையவர்கள்கெட்ட ஜன்மத்தைஅடைகிறார்கள்'. என்று அர்த்தமுள்ள வாக்யங்களிருக்கிற படியினால் இந்த ஸங்கல்பம் கேவலம் அசேதனங்களை மாத்திரம் பற்றியதல்ல. 'அந்த ஜீவாத்மாவை எவர்களிப்படித் தெரிந்து கொள்ளுகிறார்களோ எவர்கள் காட்டில் ஶ்ரத்தையுடன் ப்ரஹ்மத்தை இவ்விதமாக உபாஸிக்கிறார்களோ' என்று அர்த்தமுள்ள வாக்யங்களிலிருக்கும் 'யே' (எவர்கள்) என்கிற இரண்டு பதங்களின் அர்த்தங்களும் "அவர்கள் அர்ச்சிஸ்ஸை" என்கிற வாக்யத்திலிருக்கும் 'தே' (அவர்கள்) என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறபடியினால் அர்ச்சிராதிகதி இவ்விருவருக்கும் ஸமம், என்றுதெரிவிப்பதற்காக அந்த இரண்டுவாக்யங்களும்எடுக்கப்பட்டது கள்'இப்படி' என்பதினால் அனுவதிக்கப்பட்ட கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஆகாரத்தைக் காட்டுகிறார்—'வெவ்வேறான'என்று ஆரம்பித்து. அந்த ப்புருஷன் அமானவன். அவன் இவர்களை ப்ரஹ்மத்தை அடைவிக்கிறான். 'என்று அர்த்தமுள்ள வாக்யத்தினால அர்ச்சிராதிகதியினால் சென்றவனுக்கு ப்ரஹ்மத்தை அடைதல் ஶ்ருதியில் சொல்லப்படுகிறது. அப்படிக்கிருக்க, ஜீவாத்மாவை மாத்திர முபாஸனம் செய்தவனுக்கு ப்ரஹ்மத்தை அடைவிக்கக் கூடிய அர்ச்சிராதிகதியை அடைதல் எவ்வாறு ஸம்பவிக்கும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஆத்மாவின் உண்மையை' என்று ஆரம்பித்து. இந்

தப் பஞ்சாக்னி வித்யாநிஷ்டன் கேவலம் ஜீவாத்மாவை மாத்திரம் உபாஸிக்கிறவனல்ல. பின்னை எப்படி எனில்? ப்ரஹ்மத்தைத் தனக்கு அந்தர்யாமியாக உடைய தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்தை உபாஸனம் செய்கிறவன், என்று தாத்பர்யம். அப்படிக்கில்லாவிடில் தத்க்ருது ந்யாயத்திற்கு விரோதம் வரும். என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தத்க்ருது ந்யாயத்தினாலும்' என்று 'ந்யாயத்தினாலும்' என்பதினாலிவை இரண்டும் சேர்ந்து காரணம், என்று ஏற்படுகிறது. உள்ளபடியே இருக்கும் ஆத்மாவை அனுஸந்தானம் செய்வதாவது பகவானுக்கு சேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக உடையது, என்று அனுஸந்தானம் செய்வது தான், என்பதற்கு ப்ரமாணம் சொல்லுகிறார்— 'எவன் ஆத்மாவினிடத்தில்' என்று ஆரம்பித்து. 'முதலியவைகளினால்' என்னும் பதத்தினால் 'இந்த 1 ப்ரபஞ்சத்திற்கு யஜமானனாகிய' என்றும் 2 'இந்த்ரியங்களுக்கும் யஜமானனாகிய ஜீவனுக்கும் யஜமானன்' என்றும் அர்த்தமுள்ள வாக்யம் முதலான அனேகம் ஶ்ருதி வாக்யங்கள் க்ரஹிக்கப்படுகின்றன. இவ்விடத்தில் ஶாரீரக பாஷ்யம் முதலியவைகளுக்கு விரோதம் வருகிறது, என்று மூடர்களினால் எண்ணப்படுகிறது. இவ்விடத்தில் ஶ்ருதி, ஸூத்ரம், பாஷ்யம் முதலியவைகளிலும், மற்ற க்ரந்தங்களிலும், பஞ்சாக்னி வித்யாநிஷ்டன், பரமாத்மாவை அந்தர்யாமியாக உடைய, தன்னுடைய ஆத்மாவை அனுஸந்தானம் செய்கிறவன் என்பதும், அவனுக்கு அர்ச்சிராதி கதி உண்டு என்பதும், ஸமமாகச் சொல்லப்படுகிறது. அந்த அர்ச்சிராதிகதி ப்ரஹ்மத்தை அடைவிக்கிறது என்பதும் ஶ்ருதி முதலியவைகளிலும் இவ்விடத்தில் 'தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா:' என்பதினாலும் ஏற்படுகிறபடியினால் பஞ்சாக்னி வித்யாநிஷ்டனுக்கும் பரமாத்மாவை அடைதல் உண்டென்றே ஒப்புக்கொள்ள வேண்டும். அப்படி அடைவதில் ஞானிகளுக்குப் பரமாத்மா, தன்னை ஶரீரமாக உடையவனாக அனுபவிக்கப்படுகிறான். ஜீவாத்மாவின் உண்மையில் நிஷ்டையை உடையவர்களுக்கோ வெனில் தன்னுடைய ஸ்வரூபமே முதலில் அனுபவிக்கப்படுகிறது. வஸு முதலியவர்களின் ஸ்தானத்தை முதலில் அடைந்து, அப்புறம் ப்ரஹ்மத்தை அடைவதற்கு ஸாதனமாகிய மதுவித்யை முதலியவைகளைப் போலவே கடைசியில் ப்ரஹ்மத்தை அடைதலுண்டாகிறது. இப்படிப்பட்ட வரிசை க்ரமத்தின் ஏற்பாடும் முன்பு உண்டான ஆசையின் வ்யதயா

1 . தைத்திரீயம் நாராயணம் 6-11-3. 2 ஶ்வேதாஶ்வதரம் 3-9.

ஸத்தினுல், அதுவும் பழைய கர்மவிசேஷத்தினுல் என்று 1'சதுர்விதா பஜந்தே மாம்' என்கிற ஸ்லோகத்தில் முன்னமே சொல்லப்பட்டது. இவ்விடத்தில் ஆத்மாவின் உண்மையைத் தெரிந்து கொண்டவன் ஜிஜ்ஞாஸுவைவிட வேறுபட்டவன் என்று பாஷ்யத்தில் சொல்லப்படவில்லை. ஜிஜ்ஞாஸுவுக்குத் தெரிந்துகொள்ள வேண்டியதாக கீழ்ச் சொல்லப்பட்ட ஸ்வபாவம் விஸர்கம் இவைகளே, இவ்விடத்திலும் பஞ்சாக்னி வித்யையைச் சொல்லியிருக்கிறபடியினால். நடுவிலுள்ளதனால் பந்தத்தை விரும்புகிறவனுக்கே தலைமையிருக்கும்படியினால் வெளிக்கிளம்புதலும், திரும்பிவருதலில்லாமையும் சொல்லப்பட்டது. ஆத்மயாதாத்ம்ய, அக்ஷரயாதாத்ம்ய, என்கிற பதங்கள் வெவ்வேறு வஸ்துக்களைச் சொல்வன அன்று. அவன் செய்யும் உபாஸனத்தில் தான் விசேஷமுண்டு. அதாவது, ஆத்மாவின் உண்மையை உபாஸிக்கிறவர்கள் பரமாத்மாவுக்கு ஸரீரமாக இருக்கும் தன்னுடைய ஆத்மாவை உபாஸனம் செய்கிறவர்கள். ஞானிகளோவெனில் தன்னுடைய ஆத்மாவை ஸரீரமாகவுடைய பரமாத்மாவை உபாஸனம் செய்கிறவர்கள். இப்படிப்பட்ட விசேஷம்தான், 2'எவர்கள் இப்படித் தெரிந்துகொள்ளுகிறார்களோ, எவர்கள் காட்டிலுபாஸிக்கிறார்களோ' என்று பிரித்துச் சொல்லி இருப்பதின் அபிப்ராயம். என்று ஸ்ரீபாஷ்யம் முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டது. வேதாந்த ஸாரத்திலும் 3'உபயேபி ஹி வர்த்மபேதேந ப்ரஹ்மோபாஸதே ஸ்வாத்மஸரீரகம் ப்ரஹ்ம கேசந, ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநமிதரே' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினாலேயே ஏழாவது அத்யாயத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜிஜ்ஞாஸு பரமாத்மாவையே அடைய வேண்டும் என்கிற ஆசையை உடைய ஞானியைவிட வேறுபட்டவனாதலினால் ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாக உடையது என்கிற அனுஸந்தானமில்லாமல் கேவலம் தன்னுடைய ஆத்மாவை மாத்திரம் உபாஸிக்கிறவன், என்று ப்ரமிக்க வேண்டியதில்லை. அவனையும் உதாரர்களின் கும்பலில் சேர்த்தது, தன்னுடைய ஆத்மாவை அனுபவிப்பதினாலுண்டான தாமதத்தைப் பொறுக்காத ஞானியைவிட வேறுபட்டவனாகையினால். அர்ச்சிராதிகதி

1 பகவத்கீதை 7-16. சாந்தோக்யம 5-10-1.

3-வேதாந்தஸாரம், 4-3-14 உபயேபிஹி இருவரும், வர்த்மபேதேந வெவ்வேறு வழியாக, பரிபூர்ணம் நிறைந்த, ப்ரஹ்ம ப்ரம்மத்தை, உபாஸதே உபாஸிக்கிறார்கள், கேசந சிலர், ஸ்வாத்மஸரீரகம் தன்னுடைய ஆத்மாவை ஸரீரமாக உடைய, ப்ரஹ்ம ப்ரம்மத்தையும், இதரே மற்றவர்கள் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநம் ப்ரம்மத்தை அந்தர்யாமியாக உடைய தன்னுடைய ஆத்மாவையும், உபாஸிக்கிறார்கள்.

இல்லை என்று, சொல்லி இருப்பதேதெனில் பரஹ்மத்தை அந்தர்யாமியாக உடையவன் என்கிற அநுஸந்தானமில்லாமல் தன்னுடைய ஆத்மாவை மாத்திரம் உபாஸிக்கிறவனைப்பற்றியது. இதுவும் பாஷ்யம் முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டது. 1 '[illegible]' என்றிவை முதலிய வாக்யங்களில் வ்யக்தமாகச் சொல்லப்பட்டது. 2 '[illegible]' என்று, சொல்லி இருக்கிறதே யெனில்? அவ்விடத்திலும் ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதினுலுண்டாகும் ஸுகம் ஸ்திரமில்லையாதலால் '[illegible]' (நழுவுதலையே ஸ்வபாவமாக உடையவர்கள் என்று சொல்லப்பட்டது. அதினுல் மறுபடி ஸம்ஸாரமுண்டாகும் என்கிற ப்ரஸ்தாவமில்லை. 3 'இந்த்ரலோகாத் பரிப்ரஷ்டோ மம லோகபராயண:। ஸர்வஸம்ஸாரை: ப்ரமுக்தோ மம லோகம் ச கச்சதி॥' என்கிற வசனத்திலும் 4 'இந்த ஜீவன் இந்த லோகத்தைவிட்டு நழுவினவனுகித் தேவலோகத்தை அடைகிருன்' என்று அர்த்த

1-ஶாரீரகபாஷ்யம், 4-3-16 தஸ்மாத் ஆகையினுல், அசின்மிச்ரம் அசேதனதோடு சேர்ந்தாவது, கேவலம்வா அதைவிட்டுப் பிரிந்தாவதிருக்கிற, சித்வஸ்து ஆத்மாவை. ப்ரம்மத்ருஷ்ட்யா இதுவே ப்ரம்மம் என்கிற அநுஸந்தானத்தினுலும் தத்வியோகேந அந்த அநுஸந்தானமில்லாமலாவது, யே எவர்கள் உபாஸதே உபாஸிக்கிருர்களோ, தாந் அவர்களை நயதி அழைத்துக்கொண்டு போவதில்லை, அபிது பின்னையென்னவெனில், பரம் ப்ரம்ஹ பரப்ரம்மத்தை, உபாஸிநான் உபாஸனம்செய்தவர்களையும் ப்ரக்ருதி வியுக்தம் ப்ரக்ருதியை விட்டு நீங்கின, ஆத்மாநஞ்ச ஜீவாத்மாவையும், ப்ரம்மாத்மகம் ப்ரம்மத்தை அந்தர்யாமியாக உடையதாக, உபாஸீநான் உபாஸித்தவர்களை ஆதிவாஹிகோகண:—ஆதிவாகிகர் என்றுசொல்லப்பட்ட கூட்டம், நயதி அழைத்துக்கொண்டு போகிறது.

2-இரண்டாவது வால்யூம் 53-வது பக்கம் பார்க்க.

3, வராஹபுராணம், 139, 98.

**இந்த்ரலோகாத்-இந்த்ரலோகததிலிருந்து, பரிப்ரஷ்ட: - நழுவினவனுய், மமலோகபராயண:-என்னுடைய லோகததையே அடையவேண்டிய ஸ்தானமாக உடையவனுப், ஸர்வஸம்ஸாரை:-எல்லா ஸம்ஸாரஙகளினுலும், ப்ரமுக்த:-விடப்பட்டவனுய, மம-என்னுடைய,லோகம்-லோகத்தை,கச்சதி-அடைகிருன்.**

**4, யஜுர்வேதம், 6 வது காண்டம், முதல் ப்ரஶ்னம, முதல் அநுவாகம், 5 வது பஞ்சாதி**

முள்ள ஸ்ருதி வாக்யத்திலும் போல மேன்மேலும் சிறந்த இடத்தை அடைந்தபோதிலும் முன்னிருந்த இடத்தைவிட்டு நீங்கின மாத்திரத்தினாலே நழுவுதலை யடையும் ஸ்வபாவமுடையவன், என்று சொன்னதற்கு விரோதமில்லை. ஸ்வல்பஸுகத்தை அனுபவிப்பதினாலுண்டான தாமதத்தினால் அந்த ஸமயத்தில்எல்லையில்லாத ஸுகத்தின் அனுபவத்தைவிட்டதினால் அப்படி நிந்தித்திருக்கிறதாகவுமாம். உபாஸிக்கும் பொழுது அனுபவிக்கப்பட்ட பரமாத்மாவைப்பற்றிப் பலத்தை அனுபவிக்கும் பொழுது சிலகாலம் இடையில் அனுபவமில்லாமல் விட்டுப்போனதினால் கிடைத்ததின் தவறுதலாகிய, நழுவுதலை அடையும் ஸ்வபாவமுடையவன் என்பதும் பொருந்தும். 'வ்யதிஷக்தோ மோக்ஷமாக்ஷ' என்பதினால் ஞானி இடையில் ஒன்றினாலும் தாமதமில்லாமல் மோக்ஷத்தை அடைகிறான் என்பது ஏற்படுகிறது. அதைமாத்திரம் கொண்டு இந்த ஜ்ஞானஸுவுக்கு மோக்ஷம் இல்லை என்பது இல்லை. 1 'புக்த்வா ச விபுலாந் போகாந் த்வமந்தே மத்ப்ரஸாதத꞉ | மமாநுஸ்மரணம் ப்ராப்ய மம லோகமவாப்ஸ்யஸி ||' என்கிற இடத்தில்போல் இங்கும் விரோதம் இல்லையாகையினால். எப்படி மோக்ஷத்தை விரும்புகிற சிலருக்கு நடுவில் ப்ரமமாவின் ஸரீரத்தை அடைதலாகிய ஸுகம் சொல்லப்படுகிறதோ அப்படியே இவ்விடத்திலும் ஓரிடத்தில் நின்று தன்னுடைய ஆத்மாவை அனுபவிப்பதினாலுண்டாகிய தாமதமும் சொல்லப்படுகிறது. 2 'அதவா நேச்சதே தத்ர ப்ரஹ்மகாயநிஷேவணம் | உத்க்ராமதி ச ஸீதீபூதோ நிராமய꞉' என்றிவை முதலிய வசனங்களினால் ப்ரஹ்மாவின் ஸரீரத்தை அடைவதினுண்டாகு மாகையிலிருந்து விடுபட்டவன் தேவயானம் என்கிற வழியினால் பரமபதம் போகிறான் என்று சொல்லப்படுகிறதோ அப்படியே இவ்விடத்திலும் தன்னுடைய ஆத்மாவை அனுபவிக்குமிடத்திலிருந்து நழுவினவனுக்குப்

---

1, விஷ்ணுபுராணம், 5, 19, 26.

*விபுலான்-விசேஷமான, போகான்-ஸுகங்களை, புக்த்வா-அனுபவித்து, த்வம்-நீ, அந்தே-கடைசியில் மத்ப்ரஸாதத:-என்னுடைய அனுக்ரஹத்தினால், என்னுடைய, அனுஸ்மரணம்-த்யானத்தை, ப்ராப்ய-அடைந்து, மம-என்னுடைய, லோகம்-லோகத்தை. அவாப்ஸ்யஸி-அடையப்போகிறாய்.*

2, *அதவா- அதுவுமில்லாமல், தத்ர - அவ்விடத்தில், ப்ரஹ்மகாயநிஷேவணம்-ப்ரும்மாவின் ஸரீரத்தை அடைதலை, நேச்சதே - ஆசைப்படவில்லையேயானால், மார்க்கஸ்த்த:- வழியை அடைந்தவனாய், ஸீதீபூத:- குளிர்ந்த ஸ்வாபவமுடையவனாய், நிராமய:- ஒருவித வியாதியு மில்லாமல், உத்க்ராமதி-வெளிக் கிளம்புகிறான்.*

பரமபதம் அடைதலும் ஸம்பவிக்கும். இவனுக்கு அர்ச்சிராதிகதியும் இடையில்வந்த பலத்தை அனுபவித்த பிறகு உண்டாகிறது, என்றும் சொல்லலாம். அன்றிக்கே அர்சசிராதிகதியின் நடுவில் தக்ஷிணாயனத்தில் மரணம் அடைந்தவனுக்குச் சந்திரனுடைய ஸாயுஜ்யம வருவதுபோல விடாய்தீர்தல் மாத்திரம், இந்த நடுவில் வந்த பலத்தை அனுபவிப்பது. என்றுமாகவுமாம். இந்த இரண்டு விதத்தினாலும் எவ்வித விரோதமுமில்லை. இத்தால் இந்த ஆத்மானுபவத்தை அனுபவித்த பின்புதான் இவன் அப்ராதீகாலம்பனன் ஆகிறான், என்பதும் நிராகரிக்கப்பட்டது. மதுவித்யையைப் போலவே ஆரம்பத்திலேயே அது பொருந்துமாகலாம். ஆத்மாவை அனுபவிக்கும் இடம் மோக்ஷத்தை அனுபவிக்கும் இடத்தைவிடத் தாழ்ந்தது, என்று ருஷிகள் 1 'யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம் । ஸதாத்யாநமயா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹி யே ॥ தேஷாம் ததாபரம் ஸ்தாநம் யத்வை பச்யந்தி ஸூரய:॥' என்று சொல்லி இருக்கிறார்கள். அம்ருதம என்று சொல்லப்பட்ட ஆத்மாவை அனுபவிக்குமிடத்தி லிருக்கிறவர்களை முக்தர்கள் என்று சொல்லி யிருப்பதும், கிழத்தனம் மரணம் இவைகள் இல்லாமையினாலும், மறுபடியும் ஜன்மத்துக்குக் காரணமான புண்ணியபாபம் இல்லாமையினாலும். ஸ்தூலமான தேஹத்தை விட்டவர்களுக்கும் சிற்சில உபாஸநங்களினால் உண்டாகக் கூடிய மோக்ஷத்தைவிடத் தாழ்ந்த பலங்கள் உண்டு, அவைகளையும் ப்ரக்ருதி லயம் முதலிய பதங்களினால் ஸாங்க்யர்கள் 2 'தர்மேண கமநமூர்த்வம் கமநமதஸ்தாத் பவத்யதர்மேண

1 விஷ்ணுபுராணம், 1, 6 38.

ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்- தன்னுடைய ஆத்மாவினால் ஸந்தோஷத்தை அடைகிற, யோகினாம்- யோகிகளுடைய, அம்ருதம்-அழிவில்லாத, ஸ்த்தானம்- இடம், யே-எவர்கள், ஸதா - எப்பொழுதும், ப்ரஹ்மத்யாயின: - ப்ரஹ்மத்தை தியானம செய்துகொண்டிருக்கிற, ஏகாந்தின: - ஒரே நிசசயத்தை உடைய, யோகின: - யோகிகளோ, தேஷாம் - அவர்களுக்கு, யத் - எந்த இடத்தை ஸூரய: - நிதயஸூரிகள், பஶ்யந்தி - பாாககிறார்களோ, தத் - அப்படிப்பட்ட, பரமம் - உயர்ந்த, ஸ்த்தானம் - இடம்.

2, ஸாங்க்யதத்வகௌமுதீ.

தர்மேண- தர்மத்தினால், ஊர்த்வம்-மேலே, கமனம் - போகுதலும், அதர்மேண - அதர்மத்தினால், அதஸ்தாத்-கீழே, கமனம்- போகுதலும், பவதி- உண்டாகிறது. ஜ்ஞானேன ச- ஜ்ஞானத்தினால், அபவர்க்க: - மோக்ஷமும், விபர்யயாத்- அஜ்ஞானத்தினால், பந்த: - ஸம்ஸாரபந்தமும், இஷ்யதே - ஒப்புக்கொள்ளப்படுகிறது, வைராக்யாத் - விரகதியினால், ப்ரக்ருதிலய: - ப்ரக்ருதிலயமும்,

ண। ஜ்ஞாநேந சாபவர்கோ விபர்யயாதிஷ்யதே பந்த:॥ வைராக்யாத் ப்ரக்ருதிலய: ஸம்ஸாரோ பவதி ராஜஸாத்ராகாத்। ஐஸ்வர்யாதவிகாதோ விபர்யயாத்தத்விபர்யாஸ:॥ 'என்கிற இடத்தில் சொல்லியிருக்கிறார்கள். விபர்யயாதிஷ்யதே பந்த: என்கிற இடத்தில் வாசஸ்பதி என்பவரால் விபர்யயாத் தத்வஜ்ஞான மில்லாமையினால் பந்தஸ்ஸம்ஸார பந்தம் இஷ்யதே ஒப்புக்கொள்ளப்படுகிறது. அந்தபந்தம் ப்ராக்ருதிகம், வைக்ருதிகம், தாக்ஷிணிகம், என்று மூன்றுவிதம். அதில் ப்ரக்ருதியில் ஆத்மா என்கிற ஜ்ஞானத்தினால் ப்ரக்ருதியை எவர்கள் உபாஸிக்கிறார்களோ. அவர்களுக்கு ப்ராக்ருதிக பந்தமுண்டாகிறது. இதுதான் புராணத்தில் ப்ரக்ருதிலயங்களை நிரூபிக்க ஆரம்பித்து 1 'பூர்ணம் வர்ஷஸஹஸ்ரம் து திஷ்டந்த்யவ்யக்தசிந்தகா:' என்று சொல்லப்படுகிறது. எவர்கள் ப்ரக்ருதியின் விகாரங்களாகிய பஞ்சபூதங்கள், இந்த்ரியங்கள், அஹங்காரம், புத்தி, இவைகளை இது ஆத்மா என்கிற புத்தியினால் உபாஸிக்கிறார்களோ. அவர்களுக்கு வைக்ருதிகபந்தம் உண்டாகிறது. அவர்களைக் குறித்துப் புராணத்தில் 2 'தசமந்வந்தராணீஹ திஷ்டந்தீந்த்ரியசிந்தகா:। பௌதிகாஸ்து ஸதம் பூர்ணம் ஸஹஸ்ரம் த்வாபிமாநிகா:। பௌத்தா தசஸஹஸ்ராணி திஷ்டந்தி விகதஜ்வரா:॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. எவர்களுக்கு வைக்ருதிகபந்த முண்டாயிருக்கிறதோ அவர்கள் தேஹமில்லாதவர்கள், என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. இப்படியே ப்ரக்ருதி முதலிய வஸ்துக்களை உபாஸிக்கிறவர்களுக்குப் போலவே ஜீவாத்மாவை உபாஸிக்கிறவர்களுக்கும் அதற்குத் தகுந்த இடத்தில் அதற்குத்தகுந்தகாலம் வரையிலும் கீழ்ச்சொல்லியவைகளை

---

ராஜஸாத்- ரஜோகுணத்தினாலுண்டாகிற, ராகாத- ஆசையினால், ஸம்ஸார: - ஸம்ஸாரமும், பவதி- உண்டாகிறது, ஐஸ்வர்யாத்- ஸாமர்த்தியத்தினால், அவிகாத: - தடை இல்லாமையும், விபர்யயாத்- ஸாமர்த்திய மில்லாமையினால், விபர்யய: - தடங்கலும், பவதி - உண்டாகிறது.

1, அவ்யக்தசிந்தகா:-ப்ரக்ருதியை த்யானம செய்கிறவர்கள், பூர்ணம்-நிறைந்த, வர்ஷஸஹஸ்ரம்-ஆயிரம் வருஷம், திஷ்டந்தி - நிற்கிறார்கள்.

2, இந்த்ரியசிந்தகா:இந்த்ரியங்களை த்யானிப்பவர்கள், இஹ-இந்த லோகத்தில், தசமந்வந்தராணி- பத்து மந்வந்தரகாலம, திஷ்டந்தி- இருக்கிறார்கள், பௌதிகாஸ்து - பஞ்சபூதங்களை உபாஸிக்கிறவர்களோவெனில், பூர்ணம் - நிறைந்த,ஸதம்-நூறு மன்வந்தரகாலம் திஷ்டந்தி-இருக்கிறார்கள், ஆபிமானிகா: - அஹங்காரத்தை உபாஸிக்கிறவர்கள், ஸஹஸ்ரம்-ஆயிர மன்வந்தரங்களும், பௌத்தா:-புத்தியைஉபாஸிக்கிறவர்களும்,விகதஜ்வரா:-தாபமில்லாதவர்களாய், தச ஸஹஸ்ராணி-பதினாயிரம் மன்வந்தரங்கள், திஷ்டந்தி- இருக்கிறார்கள்.

விட மேலான பலம் கிடைக்கிறது, என்பது உசிதம் தான். ஆகையினாலேயே 1 பூமவித்யையில் ஜீவாத்மாவை உபாஸிக்கிறவனை அதிவாதி, என்று சொல்லியிருக்கிறது. ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாக உடைய தன்னுடைய ஆத்மாவை அனுஸந்தானம் செய்தால் அது, ப்ரஹ்மத்தை அடைதலில் முடிகிறபடியினால், மறுபடியும் திரும்பிவருதல் இல்லையென்பது விசேஷம். ஆகையினாலேயே இந்த ஆத்மானுபவம் அழியக் கூடியதாகில், அதை விரும்புகிறவன் ஐஶ்வர்யத்தை விரும்புகிறவனைப் போல, மோக்ஷத்தை விரும்பும் அதிகாரியைவிட வேறானவன் என்பது எப்படிப்பொருந்தும்? என்கிற ஆக்ஷேபமும் நிராகரிக்கப்பட்டது. வெளியில் இருக்கும் அனுபவிக்கத்தக்க வஸ்துக்களுடையவும், உள்ளிருக்கும் அனுபவிக்கத்தக்க வஸ்துக்களுடையவும் வ்யத்யாஸத்தினாலும், திரும்பிவருவதற்குத்தக்க போக்யதையினுடையவும் திரும்பிவாராமைக்குத்தக்க போக்யதையினுடையவும், வ்யத்யாஸத்தினாலும், இவ்விருவருக்கும் வ்யத்யாஸமுண்டாகையினால். காலதாமதத்தையும் பொறுக்காதவர்களுக்கோவெனில்2 ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந் । லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தே வ்ரஜம் விபோ' என்று சொல்லப்பட்டநிஷ்டை. 3'கைவல்யம் ஶதவந்தம் ச த்வாம் ச ஸாதயிஷ்யதி।' என்றிவை முதலிய இடங்களில் கைவல்ய பதத்தினால் ஆத்மாவை மாத்திரம் அனுபவிப்பதினாலுண்டான ஸுகம், அத்தை விரும்புகிறவர்களினால் அடையத் தகுந்தது, என்று சொல்லப்பட்டது. இதுவும் தடைகளில்ஒன்றாகையினால் ஞானிகள் முதலிலேயே ஊக்கத்தை உடையவர்களாய் இத்தைப் பரிஹரிக்கிறார்கள். சிலர், ப்ரஹ்மத்தின் அனுபவமில்லாமல் ஆத்மாவை மாத்திரம் அனுபவிப்பதினாலுண்டாகும் ஸுகம் நித்யம் என்று சொல்லுகிறார்கள். இந்த விஷயத்தில் பாஷ்யகாரர் முதலியவர்களின் ஸம்ப்ரதாயத்தையாவது ப்ரமா

1 சாந்தோக்யோபநிஷத்தில் 7 ப்ரபாடகத்தில் சொல்லப்படுகிற ப்ரஹ்ம வித்யை

2 ஸர்வதர்மாம்ச எல்லா தர்மங்களையும் ஸாக்ஷராந் கைவல்யத்துடன் கூடிய, ஸர்வகாமாம்ச எல்லா ப்ரயோஜனங்களையும், ஸந்த்யஜ்ய விட்டு, லோக விக்ராந்த லோகங்களை அளந்த விபோ பகவானே தே உம்முடைய சரணௌ திருவடிகளை சரணம் சரணமாக வ்ரஜம் அடைந்தேன்.

3 வ்ருத்தஹாரீத ஸ்ம்ருதி 3-40 அயம் இந்த மந்த்ர:மந்திரமானது கைவல்ய ம்கைவல்யத்தையும் பகவந்தம்ச பகவானையும் ஸாதயிஷ்யதி ஸாதிக்கப்போகிறது.

பா] இவ்விடத்தில் 'காலே' என்னும் பதமானது இந்த வழி, பகல் முதலாக வருஷம் [illegible] காலத்துக்கு அபிமானி தேவதைகளினால் நிறைந்திருப்பதினால் வழியைக் குறிக்கிறது எந்த வழியில் சென்று உபாஸனம் செய்தவர்கள் திரும்பி வாராமையையும், புண்யகர்மங்களைச் செய்தவர்கள் திரும்பி வருதலையும் அடைகிறார்களோ, அந்த வழியைச்

---

*னைத்தைகபாவது, யுக்தியைபாவது, நாம் கண்டறியவில்லை எனெனில், கர்மங்கள் மிகுதி இல்லாமல் நசித்துவிட்டால் ஸ்வபாவத்திலே இருக்கிற ஆகாரம் ப்ரகாஶிக்கிறபடியினாலே ப்ரஹ்மத்தின் அநுபவம் அவஶ்யமாக இருக்கவேண்டியதாகையினாலும், மிகுதிகர்மம் இருந்தால் ஸம்ஸாரம் வரவேண்டியது அவஶ்யமாகையினாலும கிழத்தனம் ஜன்மம் இவை முதலியவைகளுக்குக் காரணமான கர்மம முழுமையும் நஶித்துவிடுகிறபடியினால் ஸம்ஸாரமில்லை, அவ்வளவு மாத்திரத்தைக் கொண்டு மோக்ஷத்தைஅடைந்தவன் என்று சொல்லப்படுகிறது. ப்ரஹ்மத்தைஅநுபவிப்பதற்குத்தடையான கர்மங்கள் நாஶம் அடையவில்லையாதலினால் அந்த ப்ரஹ்மத்தின் அநுபவம்இல்லை,எனில்? இப்படியே இருக்கட்டும ஆனாலும் இந்தக் கர்மம் மேலும் நஶிக்கப்போகிறதில்லை என்பதற்கு ஒரு காரணமும் இல்லை. என்று இப்படியே ஊஹித்துக் கொள்ளவும் 1 'பகவானை அடைதல் முதலியது இல்லாமல் நித்யமாக ஒரு கைவல்யத்தைக் கல்பிப்பது ஸூத்ரம் பாஷ்யம் ஶ்ருதி ஸ்ம்ருதி இவைகளுக்கு விரோதமில்லாமல் ஸித்திக்காது. ஆகையினால் அதிகாரிகள் வெவ்வேறு என்கிற காரணத்தினால், வெவ்வேறு தன்மையை அடைந்த. ஜீவாத்மாவைப் பற்றிய வேறொரு வழியையும் நம் பூர்வாசாரியர்கள் கல்பித்தார்கள். அவைகளுடன், திரும்பி வருதல் பகவானை அடையாதிருத்தல் முதலியவைகள் பொருந்தாதாகையினால் நாம் சொன்ன அர்த்தமே ஶ்ருதி ஸ்ம்ருதி முதலிய க்ரந்தங்களுக்கு ரஸாயனம் போல இனிது, என்றறிக*

---

1 தேசிகனருளிச் செய்த சுருக்கமான ஶ்லோகங்களின் அர்த்தமிங்கே எழுதப்பட்டிருக்கிறது அந்த ஶ்லோகங்களை இங்கேஎழுதுகிறேன் [illegible]

சொல்லப்போகிறேன் என்று அர்த்தம். 'அக்நிர்ஜ்யோதிரஹஶ்ஶுக்லஷ்ஷண்மாஸாஉத்தராயணம்' என்று சொன்னது வருஷம் முதலியவைகளையும் குறிக்கிறது. 23-24

தா] அர்ச்சிராதி மார்க்கத்தைச் சொல்லுகிறார் என்று எப்படிச்சொல்லப்படுகிறது 'யத்ரகாலே' என்று ஆரம்பத்தில் காலம் அல்லவோ சொல்லப்படுகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—இவ்விடத்தில் 'காலே' 'என்னும் பதம்' என்று. ஶாரீரகஸூத்ரத்தில் தக்ஷிணாயனம் முதலிய காலங்களில் மரணம் அடைந்தவனுக்கும் மோக்ஷம் உண்டு என்று 2 'அதஶ்சாயநேபி தக்ஷிணே' என்கிற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டது. இந்தக் கீதையிலும் 3 'ஶுக்லக்ருஷ்ணே கதீஹ்யேதே' என்று மேலே சொல்லப்போகிறார். அப்படிக்கு மார்க்கத்தைச் சொல்லாவிடில் 'அக்நிர்ஜ்யோதி:' என்பதோடு விரோதமும் வரும். 4 'நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந்' என்று வழியை சொல்லுகிற பதத்தினால் நிகமனமும் செய்யப்படுகிறது. என்று தாத்பர்யம். 'யத்ரகாலே' என்பதற்கு 'ப்ரயாதா:' என்கிற தூரத்தில் இருக்கும் பதத்தோடு அன்வயத்தைக் காட்டிக்கொண்டு யோகிகளுக்குத் திரும்பி வருதல் எப்படி ஸம்பவிக்கும், என்கிற ஆக்ஷேபத்தையும் பரிஹரித்துக் கொண்டு 'யத்ரகாலே' என்கிற ஶ்லோகத்திற்கு அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'எந்த வழியில்' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் யோகிகளாவது ஞானிகளும், புண்ய கர்மங்களைச் செய்தவர்களும். இவ்விடத்தில் ஒரேமாதிரிகளானபதங்களுக்கு ஒரே வேற்றுமையில் ஒரு பதம் மிகுதியாக இருக்கிறது. அன்றிக்கே புண்ய கர்மங்கள் செய்தவர்கள் என்று வைத்துக் கொள்ளப்பட்டதாகவுமாம். 5 'அவர்கள் அக்னியை அடைகிறார்கள். அக்னியினிடத்திலிருந்து பகலையும், பகலிலிருந்து ஶுக்லபக்ஷத்தையும், ஶுக்லபக்ஷத்திலிருந்து, எந்த ஆறு மாஸங்களை வடக்குதிக்கில் ஸூர்யன் சேருகிறானே அந்த ஆறு மாஸங்களையும், அந்த மாஸங்களிலிருந்து வருஷத்தையும் அடைகிறான். என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தை அநுஸரித்து வருஷம் முதலியவைகளையும் குறிக்கிறது, என்று சொல்லப்பட்டது. இதின் விரிவு 'அர்ச்சிராதி பாதத்தில்' காண்க. அவ்வி

2 சாரீரக ஸூத்ரம் 4-2-19 அதச்ச ஆகையினாலேயே தக்ஷிணே அயனேபி தக்ஷிணாயனத்தில் (மரணமடைந்தவனுக்கும் மோக்ஷமுண்டு) என சேர்த்துக் கொள்ளவும்.

3 பகவத்கீதை 8-26 4 பகவத்கீதை 8-27 5 சாந்தோக்யோபநிஷத் 5-10-1.

தூமோ ராத்ரிஸ் ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் |
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்த்ததே ||25

ப] யோகீ—புண்யங்களைச் செய்தவன், தூம:—புகை, ராத்ரி:—இரவு, ததா—அப்படியே, க்ருஷ்ண:—கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயநம்-தக்ஷிணாயனம் என்று சொல்லப்பட்ட, ஷண்மாஸா:—ஆறுமாஸங்கள், தத்ர—அந்த மார்கத்தில், சாந்த்ரமஸம்—சந்திரனாகிய, ஜ்யோதி:—ப்ரகாஶத்தையும். ப்ராப்ய—அடைந்து, நிவர்த்ததே—திரும்புகிறான். 25

பா] இதுவும் தூமாதி மார்க்கத்திலிருக்கிற பித்ருலோகம் முதலியவைகளைக் குறிக்கிறது. இவ்விடத்தில் யோகீ என்னும் பதம் புண்ய கர்மங்களுடன் சேர்ந்தவர்களைச் சொல்லுகிறது. 25

---

டத்தில வாதத்ருஎன்னும் அம்மாவால் [1] 'அவிர்ராஹஸ்ஸிதவக்ஷாஷு உத்தராயணாஷாட்மாஸான் தேவலோகம் வாயு அர்க்க அம்ஸிநம் வைத்யுதம் ஜா வதீநாதி வாஹிகாநாஹு:॥' என்று சுருக்கிச் சொல்லப்பட்டது. 'அக்நிர்ஜ்யோதி:' என்பதற்கு அக்னியாகிய ஜ்யோதிஸ்ஸு என்று அர்த்தம். இத்தால் தேவயானவழியில் முதலிலிருக்கும் அர்ச்சிஸ்ஸு சொல்லப்பட்டது. ஆகையினால் அக்னி ஜ்யோதிஸ்ஸு இவை இரண்டும் தனித்தனி தேவதைகள் என்றும், காலத்திற்கு அபிமானி தேவதைகள் என்றும், சொல்லுகிறவர்கள் நிராகரிக்கப்பட்டார்கள். 23-24

'பித்ருலோகம் முதலியவைகளை' என்னுமிடத்தில், முதலிய என்னும் பதத்தினால் ஆகாஶம சந்திரன் இவைகள் சொல்லப்படுகிறதுகள் யோகிக்குத் தூமாதி மார்கமும் திரும்பி வருதலும் உண்டு என்று எப்படிச் சொல்லப்படுகிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இவ்விடத்தில் யோகீ என்னும் பதம்' என்று இவ்விடத்தில் யோக என்னும் பதம் உபாயங்களைச் சொல்லுகிறது. ஸம்பந்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம். தூமாதி மார்கத்தின் ஶக்தியினால் புண்யகர்மமாகிற, 'ஸம்பந்தத்தை உடையவஸ்து ஏற்பட்டது, என்று தாத்பர்யம். பிறகு எந்த அவர்கள் க்ராமத்திலிருந்து யாகங்கள், குளம் வேட்டுதல் முதலியவை, தானம் செய்தல், முதலியவைகளைச் செய்கிறார்களோ அவர்கள் தூமத்தை அடைகிறார்கள், என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவை விவரிக்கப்பட்டன. 25

---

1 தத்வஸாரம் 101 ச்லோகம்.

ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே |
ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாவர்த்ததே புந: ‖ 26

பா] ஏதே-இந்த, ஶுக்லக்ருஷ்ணே-ப்ரகாசத்தோடு கூடியதும் இருண்டதுமான, கதீ- வழிகள், ஜகத:- உலகத்திலுள்ள ஜனங்களுக்கு, ஶாஶ்வதே-ஸ்த்திரங்களாக, மதே-எண்ணப்பட்டதுகள், ஏகயா-ஒரு வழியினல், (சென்றவன்), அநாவ்ருத்திம்- திரும்பி வராமையை, யாதி-அடைகிறுன், அந்யயா-மற்றெரு வழியினல், (சென்றவன்), புந:-மறுபடியும், ஆவர்த்ததே-திரும்புகிறுன். 26

பா] ப்ரகாசமுடைய கதியாவது அர்ச்சிராதிகதி. இருண்ட கதியாவது, தூமாதிகதி. ப்ரகாசமுடைய கதியினல் சென்றவன் திரும்பி வராமையை அடைகிறுன். இருண்டகதியினலோவெனில் திரும்பி வருகிறுன் இந்த ப்ரகாசமுள்ளதாயும் இருண்டதாயு மிருக்கிற இரண்டு கதிகளும் ஜ்ஞானிகளுக்கும், அனேகர்களானப் புண்ய கர்மங்களைக் செய்தவர்களுக்கும், ஶ்ருதியில் ஸ்த்திரங்களாகச்சொல்லப்பட்டன. எப்படியேனில் † அந்த ஆத்மாவை எவர் இட்படித் தெரிந்துகொள்ளுகிறுர்களோ, எந்த இவர்கள் காட்டில் ஶ்ரத்தையோடு ப்ரஹ்மத்தை இப்படி உபாஸிக்கிறுர்களோ அவர்கள அக்னியை அடைகிறுர்கள்.” என்றும் ¶ “பிறகு எந்த இவர்கள் க்ராமங்களி லிருந்துகொண்டு யாகம் முதலியவைகளையும் குளம் வெட்டுதல் முதலியவைகளையும் தானம் கொடுத்தல் முதலியவைகளையும் செய்கிறுர்களோ அவர்கள் தூமத்தை அடைகிறுர்கள்” என்று. 26

---

தா] *கீழ்ச் சொல்லிய இருவிதங்களான வழிகளும் ஶ்ருதியில் ப்ரஸித்தங்கள், என்பதைக் காட்டுகிறுர் இந்த ஶ்லோகத்தினல்—இவ்விடத்தில் ஶுக்லபக்ஷம் க்ருஷ்ணபக்ஷம் இவைகளின் ஸம்பந்தம் இருப்பதினலாவது, ஶுத்தமானது அஶுத்தமானது, என்கிற தாத்பர்யத்தினலாவது, அபிமானி தேவதைகளின் ஸ்வபாவமாகிய ப்ரகாசத்தை அவைகளினல் அபிமானிக்கபபடும் மார்கத்தில் ஆரோபணம் செய்தாவது, வழிகளை ஶுக்ல, கிருஷ்ண, என்கிற பதங்களினல் சொல்லி இருக்கிறது. இநத வழியில் அதிகாரமுள்ள இரண்டு வகுப்பினரையும் சொல்லுகிற “ஜகத:” என்கிற பதத்தின் அபிப்ராயத்தில் இருக்கிற அர்த்தத்தைக் காட்டி இருக்கிறது.* ‘ஜ்ஞானிகளுக்கும் அனேகர்களான புண்ய கர்மங்களைக் செய்தவர்களுக்கும்’*என்றது.* 1 “*யாகம்முதலியவைகளையும், குளம் வெட்டுதல் முதலியவைகளையும், தானம்*

---

† *சாந்தோக்யம்*, 5.10-1 ¶ *சாந்தோக்யம்*, 5-10-3

1 *சாந்தோக்யம்*, 5-10-3

நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந் யோகீ முஹ்யதி கஶ்சந।
தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுந ॥

பதரை] பார்த்த-ஓ அர்ஜுன, ஏதே-இந்த, ஸ்ருதீ-வழிகளை, ஜாநந்-தெரிந்துகொண்ட, கஶ்சந-ஒரு, யோகீ-யோகியும், ந முஹ்யதி-மோஹத்தை அடைவதில்லை, அர்ஜுந-ஓ அர்ஜுன, தஸ்மாத்-ஆகையினால், ஸர்வேஷு-எல்லா, காலேஷு-ஸமயங்களிலும், யோகயுக்த:-இந்த வழிகளை த்யானம் செய்துகொண்டு, பவ-இரு, 27

பா] இந்த வழிகளைத் தெரிந்துகொண்ட யோகீ ஒருவனும் மரணகாலத்தில் மோஹத்தை அடைவதில்லை. மற்றேப்படியேனில் தன்னுடையதாகிய, தேவயான வழியினாலேயே போகிறான். ஆகையினால் தினந்தோறும் அர்ச்சிராதிகதியை த்யானம் செய்வதாகிய யோகத்தைச் செய்து கொண்டிரு.

---

தா] முதலியவைகளையும் செய்கிறார்களோ" என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாகபத்தில் சொல்லப்பட்ட அந்தந்தக்கர்மங்களில நிஷ்டையுடையவர்களுடைய வ்யத்பாஸங்களை அபிபாயத்தில் வைத்துக்கொண்டு 'அனேகர்களான' என்று சொல்லபட்டது "ஹி" என்னும் பதத்தினால் ஶ்ருதியில் பரஸித்தமாக இருத்தல காட்டபபடுகிறது, என்று நினைத்து 'ஶ்ருதியில்' என்று சொல்லபபட்டது ஸ்த்திரமாக இருத்தலாவது பரம்பரையாக ஆற்றின் பெருக்கைப போல ஆரமபமும முடிவுமில்லாமல எப்பொழுதும நடந்துகொண்டு இருத்தல் 26
"நைதே ஸ்ருதீ" என்கிற ஶ்லோகத்தில அர்சிராதி வழியை த்யானம் செய்வதும உபாஸனத்தைப போலவே பகவானுடைய ப்ரீதிக்காகவே ஏற்பட்டது. ஆனாலும் வழியை அறிவது போகிறவன் ஸந்தேஹமில்லாமல் போவதறகு, என்பது உலகவழக்கத்தில ஏற்பட்டது. இவ்விடத்திலும் அப்படிபபட்ட உபதாரம் ஸம்பவிக்கும்பொழுது அது விடத்தக்கதல்ல. அதுவும அந்தப பகவானுடைய ஸங்கலபத்தினாலேயே ஸித்திக்கிறது, என்று சொல்லுகிறார், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் —இந்த என்று ஆரம்பித்து— மோஹத்தை அடைவதில்லை' என்பதறகு 1 'தத்ப்ரகாஶிதத்வாரஃ' என்று சொல்லி

---

1 சாரீரகஸூத்ரம் 4-2-16 தத் அந்தபபகவானுல், ப்ரகாஶித ப்ரகாசம் செய்யப்பட்ட, த்வார:-வழியை உடையவனுய்க் கொண்டு, போகிறான என்று சேர்த்துக சொல்லவும்.

பா] பிறகு இந்த இரண்டு அத்யாயங்களிலும் சொல்லப்பட்ட ஶாஸ்திரார்த்தத்தைத் தெரிந்து கொள்வதின் பலத்தைச் சொல்லுகிறார்.

வெதெஷு யஜ்ஞெஷு தபஸ்ஸு சைவ
　தாநெ ஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம் |
அத்யெதி தத்ஸர்வமிதம் விதித்வா
　யோகீ பரம் ஸ்தாநமுபைதி சாத்யம் ‖　　(28)

ஸ்ரீ கண்ணபிரான் அருளிச் செய்த
ஸ்ரீ பகவத்கீதையில், எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணாயபரப்ரஹ்மணெநம:



ப-ரை] வெதெஷு—வேதங்களிலும், (அதாவது வேதங்களை ஜபம் செய்வதிலும்), யஜ்ஞெஷு—யஜ்ஞங்களிலும், தபஸ்ஸுசைவ—தபஸ்ஸுக்களிலும், தாநெஷு—தானத்திலும், யத்—எந்த, புண்யபலம் புண்ய கர்மங்களின் பலம், ப்ரதிஷ்டம்—சொல்லப்பட்டிருக்கிறதோ, இதம்—இந்தக் கீழ்ச்சொல்லிய அர்த்தத்தை, விதித்வா—தெரிந்து கொண்டு, தத்—அந்த, ஸர்வம்—எல்லாவற்றையும், அத்யெதி—தாண்டிச் செல்லுகிறான், யோகீ—ஞானியாகி, பரம்—மேலான, ஆத்யம்—அநாதியான, ஸ்தாநம்—இடத்தை, உபைதி—அடைகிறான்.　　28

பா] ருக்கு, யஜுஸ்ஸு, ஸாமம், அதர்வணம், ஆகிய, வேதங்களை ஆவ்ருத்திசெய்தல் யஜ்ஞம், தபஸ்ஸு, தானம்செய்தல்,முதலிய,எல்லாப்

---

தா]இருக்கிறபடியே ஸ்பஷ்டமான வழியை உடையவனுகிறான்,என்று அர்த்தம். இரண்டு வழிகளையும் தெரிந்து கொள்வது விடவேண்டிய வழியை விடுவதற்காக, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்.— 'மற்றெப்படியேனில்' என்று. அர்ச்சிராதிகதியை த்யானம் செய்வதற்குப் பலத்தைச் சொல்லி, "தஸ்மாத்" (ஆகையினால்) என்று அதைக் காரணமாக எடுத்துக்கொண்டு உபாஸனத்தை விதிப்பது, பொருந்தாதாகையினால் யோக என்னும் பதம் இவ்விடத்தில் த்யானம் செய்தலை மாத்திரம் சொல்லுகிறது. அந்த த்யானமும் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்ச்சிராதிகதியை நினைத்துக் கொண்டிருத்தலாகவே இருக்க வேண்டும், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்று ஆரம்பித்து.

புண்ணிய கர்மங்களிலும் எந்தப்பலம் சொல்லப்பட்டதோ அவை எல்லா வற்றையும் இந்த இரண்டு அத்யாயங்களிலும் சொல்லப்பட்ட பகவானுடைய மஹிமையைத் தெரிந்து கொண்டுத் தாண்டுகிறான். இதைத் தெரிந்து கொள்வதிலுண்டான ஸந்தோஷத்தின் மிகுதியினால் அவை யெல்லாவற்றையும் த்ருணம் போல எண்ணுகிறான். ஞானியுமாகி, ஞானிக்கு அடையத் தகுந்ததாயும், சிறந்ததாயும், முதன்மையுமான, இடத்தை அடைகிறான். 28

*பகவத் ராமானுஜன் என்னும் உடையவர் அருளிச் செய்த ஸ்ரீ கீதா பாஷ்யத்தில் எட்டாவது அத்யாயம் முற்றிற்று.*

*ஸ்ரீ உடைராமாநுஜாய நம:*



தா] 'இதம் விதித்வா' (இதைத் தெரிந்துகொண்டு) என்று பொதுவாகச் சொல்லி இருப்பதினாலும் வேறொரு விசேஷமில்லாமையினாலும், ஒரே ஸந்தர்ப்பமாகிய இந்த இரண்டு அத்யாயங்களுடையவும் அர்த்தம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பிறகு' என்று ஆரம்பித்து. 'வேதேஷு' என்று யஜ்ஞம் முதலியவைகளைப் போலவே பலத்திற்குக் காரணமாக எடுத்திருக்கிறதேயல்லாமல், பலத்தைச சொல்லுகிறபடியினால் அல்ல. அப்படிக் கிருந்தால் யஜ்ஞம்முதலியவைகளின் பலத்தைத் தவிரமற்றவைகளின் பலத்தைப் பற்றியது, என்று அர்த்தத்தைச் சுருக்கிச சொல்ல வேண்டியதாகும். வேதத்தை ஆவ்ருத்தி செய்வதும் பாபத்தைப் போக்குதல் முதலிய பலங்களைக் கொடுக்கிறது, என்று ஶ்ருதி முதலியவைகளில் ஏற்பட்டிருக்கிறது. யஜ்ஞம்முதலியவைகளின் பலங்களைச சொல்லுகிறபடியினால் வேதத்தை இங்கே எடுத்திருக்கிறது என்னில். இப்பொழுது ப்ரஸ்தாவிக்கும் இரண்டு அத்யாயங்களின் அர்த்தமும் வேதங்களின் அர்த்தமாகையினால் அதைத் தாண்டுகிறது பொருந்தாதாகையினால் அதிலிருந்தும் சுருக்கிச் சொல்ல வேண்டியதாகும், இவை எல்லாவற்றையும் மனதில் வைத்துக்கொண்டு, வேதங்களை ஆவ்ருத்தி செய்தல்' என்று, சொல்லப்பட்டது. 'தாநே' என்கிற இடத்தில் இருக்கும் 'ச' என்பது, இங்கு சொல்லப்படாததையும் சேர்த்துக் கொள்வதற்காக, என்பதைத் தெரிவிப்பதற்காக 'முதலிய' என்னும் பதம் 'புண்ய ஃபலம்' என்கிற இடத்தில 'புண்ய' என்னும் பதத்தினால் பலங்களுக்கு விசேஷணங்களாக யஜ்ஞம் முதலிய புண்ணியகர்மங்களைப் பொதுவாகச சொல்லி இருப்பது, பலம் சிறந்தது, என்று காட்

டுவதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் ' யஜ்ஞம் முதலிய எல்லாப் புண்ணிய கர்மங்களிலும் ' என்று சொல்லப்பட்டது. 'இந்த இரண்டு அத்யாயங்களிலும் சொல்லப்பட்ட பகவானுடைய மஹிமையை' என்றதற்கு, ஏழாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் பகவானுடைய மஹிமை ஆரம்பிக்கப்பட்டது. அத்துடன் சேர்ந்ததாகையினால் மற்ற தெல்லாம் சொல்லப்பட்டது, என்று தாத்பர்யம் 'வரம்ஸ்தாநமுபைதி' என்று உபாஸனம் செய்வதினால் உண்டாக்கப்படுகிற ஸாக்ஷாத்கார பலம் தனித்துச் சொல்லப்படுகிற படியினாலும், இங்கும் அதையே சொல்லில் புனருக்தி வருகிறபடியினாலும், அதிகமான புண்ணியங்களின் பலத்தை அடைகிறான், என்று சொல்லில் லக்ஷணையின் மேல் லக்ஷணை சொல்ல வேண்டும் ஆகையினாலும், ஸம்ஸாரம் நிவ்ருத்திக்கிறது, என்று அர்த்தம் சொல்லில், புண்யபலம் என்கிற பதத்தினால் பாப பலத்தையும் சேர்த்துச் சொல்ல வேண்டியதாகிறபடியினாலும், 'அத்யேதி' என்கிற இந்த பதத்தறிவினால் உண்டாகிற விரக்தியைச் சொல்லுகிறது. மேலான பலத்தைத் தெரிந்துக் கொள்வது 1 'உபாஸாத் ப்ரீதிர்ந்யாயாஸாக்ஷ' என்கிற ந்யாயத்தினால் மற்ற பலங்களில் ஆசை இல்லாமைக்குக் காரணம் ஆகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதைத் தெரிந்து கொள்வதிலுண்டான' என்று பகவானுடைய மஹிமையைத் தெரிந்து கொள்வது மேலான இடத்தை அடைவதற்குக் காரணமாகையில் கீழ சொல்லிய விசேஷமான ஞானமாகிய வழியை 'யோகி' என்பதினால் காட்டி இருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் 'ஞானியுமாகி' என்று, சொல்லப்பட்டது. இடத்திற்கு மேன்மையாவது, தேசம், காலம், இவைகளின் ஸம்பந்தத்தினால். 2 ஸூர்யனுடைய வர்ணம் போன்ற வர்ணமுடையதாய் ப்ரக்ருதிக்கு மேலே இருக்கிற' என்றும் 3 'அது அழிவில்லாத மேலான ஆகாசத்தில் (உள்ளது)' என்றும் 'அர்த்தமுள்ள ச்ருதிவாக்யங்களும்' 4 'திவ்யம்ஸ்தாநமஜரம்சாப்ரமேயம்' 5 யத்கத்வா நிர

I. அனுபாஸாத் - வருத்தமில்லாமையினால், மந:ப்ரீதி: - மனஸ்ஸுக்கு ப்ரீதி உண்டாகிறது.2, புருஷஸூக்தம், 3, தைத்திரீயம் நாராயணம், 6 1, 2.

4. மஹாபாரதம், மௌஸலபர்வம், 5, 27, அஜரம் - நாசமில்லாததாயும் அப்ரமேயம் - அளவிடமுடியாததுமான, திவயம் உயர்ந்த, ஸ்த்தானம - இடத்தை, (அடையும் என்று சேர்த்துக்கொள்ளவும்.

5. மஹாபாரதம், சாந்திபர்வம், மோக்ஷதர்மம், 196, 31, தாத - ஓ குழந்தாய், பரமாத்மன:-பகவானுடைய, ஸ்த்தாநஸ்ய-இடத்திற்கு, ஏதே-இந்த ஸ்வர்க்கம் முதலிய லோகங்கள், நிரயா:- நரகங்கள்.

யாத்ஸாதத்யாநவஸ்யவாஶோத்தநஃ, என்றிவை முதலிய வசனங்கள் இருப்பதினாலும். 'ஆதி' என்பதற்கு அநாதியான என்று அர்த்தம். ஆதியில் இருக்கிற அதாவது காரணமான பரஹ்மத்தை, என்று மற்றவர்கள் சொன்ன அர்த்தமோவெனில் ஸ்தானம் என்னும் பதம் பொருந்தாதாகையினால் யுக்தமல்ல. 28

ஸ்ரீமத் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த

தாத்பர்ய சந்த்ரிகையில் எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நமஃ



ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹச்லோகம்.

## எட்டாவது அத்தியாயம் ஸங்க்ரஹம்.



ஐஶ்வர்யாக்ஷரயாதாத்ம்யபகவச்சரணார்த்திநாம் |
வேத்யோபாதேயபாவாநாம் அஷ்டமே பேத உச்யதே || 12

ப-ரை] ஐஶ்வர்யாக்ஷரயாதாத்ம்யபகவச்சரணார்த்திநாம் ஐஶ்வர்ய— ஐஶ்வர்யம், அக்ஷர—ஜீவாத்மாவின், யாதாத்ம்ய—உண்மை, அதாவது கைவல்யம், பகவச்சரண—பகவானுடையதிருவடிகள், இவைகளை, அர்த்திநாம்—விரும்புகிறவர்களுக்கு, வேத்யோபாதேயபாவாநாம் வேத்ய— அறியத் தகுந்தவைகளும், உபாதேய—அனுஷ்டிக்கத் தகுந்தவைகளுமான, பாவாநாம்—வஸ்துக்களினுடைய, பேத:—வ்யத்யாஸமானது அஷ்டமே—எட்டாவது அத்யாயத்தில், உச்யதே— சொல்லப்படுகிறது. 12

ஸ்ரீ மன்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

ஐச்வர்யமாவது இவ்விடத்தில் இந்த்ரன் ப்ரஹ்மா, ருத்ரன், இவர்களின் ஸ்தானங்களைவிட மேற்பட்ட ஸ்தானம். அக்ஷரயாதாத்ம்யமாவது, பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம். அறியவேண்டியவைகளாவது [1] 'அக்ஷரம் ப்ரஹ்ம பரமம்' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்ட பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் முதலியவைகள். அனுஷ்டிக்க வேண்டியவைகளாவது:— அவரவர்களால் விரும்பப்பட்ட பலன்களுக்குத் தக்கபடிப் பகவானை த்யானம் செய்தல், அந்திம ப்ரத்யயம், வழிகளை த்யானம் செய்தல், முதலியவைகள். 'பாவா:' இவைகளாகிற வஸ்துக்கள் அவைகளின் வ்யத்யாஸங்களாவன. அவரவர்கள் அதிகாரத்திற்குத் தகுந்த விசேஷங்கள். 12

ஸ்ரீ மன்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த
கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் எட்டாவது அத்யாயம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



1. பகவத்கீதை, 8, 3.

ஸ்ரீமன் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த
கீதார்த்த ஸங்க்ரஹம்.

சிறார்தூப்புல் திருவேங்கடமுடையான திருவடிகளே ஶரணம்.

ஆராதசெல்வமும் ஆருயிர்காணு மரும்பயனும்
பேராததன்கழற் கீழமரும் பெருவாழ்ச்சிகளும்—
சோராதுகந்தவர் தூய்மதிகோள்வதுஞ் செய்வனவும்
தோராவிசயனுக்குத் திருநாரணன் செப்பினனே. 9

ப-ரை] திருநாரணன்—ஸ்ரீயபதியான நாராயணன், ஆராத—தன்னிலேதான் பூர்ணமாகாத, அல்லது திருப்தியைப் பெறாத, செல்வமும்—ஐஶ்வர்யத்தையும்; ஆர்—நிறைந்த, உயிர்---ஜீவாத்மாவை, காணும்—அனுபவித்தலாகிற, அரும்---அருமையான, பயன்---ப்ரயோஜனத்தையும், பேராத---விட்டுப்பிரியாத அதாவது புனராவ்ருத்தி இல்லாத, தன்--தன்னுடைய, கழற்கீழ்---திருவடிகளின் கீழே அமரும்---அமர்ந்திருக்கிற, பெரு---பெரிய, வாழ்ச்சிகளும்---புருஷார்த்தங்களையும், சோராது--விடாமல், உகந்தவர்---ஆசைப்பட்டவர்கள், தூய்---பரிஶுத்தமான மதி---புத்தியில், கோள்வனவும்---அறியத் தக்கவைகளையும், செய்வனவும்---செய்யத் தக்கவைகளையும், தோரா---தோல்வியை அடையாத, விஜயனுக்கு---அர்ஜுனனுக்கு, செப்பினன்---சொன்னான். 9

க-ரை] ஆர்தல்-பூர்ணமாகுதல், ஆராத-தான்பூர்ணமாகாத, என்பதினால், ஐஶ்வர்யத்திற்காகப் பகவானை உபாஸிக்கிறவர்களுக்கு அந்த ஐஶ்வர்யம் தானே பூர்ணமாகாமல் மோக்ஷபர்யந்தம் ஆகும் என்று ஏழாவது அத்யாயம், இருபத்தி மூன்றாவது ஶ்லோகத்தில் அருளிச்செய்தது ஜ்ஞாபகப்படுத்தப்பட்டது அன்றிக்கே, ஆராத-த்ருப்தி இல்லாத, என்று அர்த்தம் சொல்லில் இந்த்ரன் ப்ரஹ்மா முதலியவர்களின் ஐஶ்வர்யத்தைவிட மேலான ஐஶ்வர்யத்தை பகவான் கொடுப்பதினால் அவைகளை அனுபவிப்பதினால் த்ருப்தி பிறப்பதில்லை என்றுத் தாத்பர்யமாவதினால், 1 ''அதிதைவதம்'' என்கிற பதத்தின் கருத்து விவரிக்கப்பட்டது. ''அதிதைவதம்'' இந்திரன் முதலியவர்களின் போகங்களுக்கு மேற்பட்ட போகங்களை அனுபவிக்கிற ஜீவன், என்றல்லவோ பாஷ்யத்தில் அர்த்தம் அருளிச் செய்யப்பட்டது. ஆருயிர் ஆர்-பூர்ணமான உயிர்-ஜீவாத்மா. இங்கே பூர்ணமாகுகையாவது 2 ''யம்ல

1. பகவத்கீதை, 4-8. 2. பகவத்கீதை, 6-22.

[illegible] நாயிகாதத:" என்று சொல்லுகிறபடியே இந்த ஜீவாத்மாவை அநுபவிக்கப்புக்கால் இதைவிட மேலான ப்ரயோஜனம் ஒன்றுளது என்று தோற்றாதபடி ஸுகம் நிறைந்திருக்கை. அன்றிக்கே 1 "தத்தாம பரமம்" என்கிற ச்லோகத்தில் அருளிச்செய்தபடிக்கு எல்லா வஸ்துக்களிலும் உள்ள ஜ்ஞானத்தை ஸ்வபாவமாக உடைத்தாய் இருக்கை. அப்பொழுது, ஆத்மபூத ஜ்ஞானத்தினால் எல்லா வஸ்துக்களிலும் நிறைந்த, என்று அர்த்தம் சொல்லிக்கொள்ளவும். அன்றிக்கே தனக்கு ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட, கர்மங்களுக்கு வசப்பட்டிராமை, கிழத்தனமில்லாமை, மரணமில்லாமை, துக்கமில்லாமை, பசி இல்லாமை, தாஹமில்லாமை, ஸத்யகாமனாக இருக்கை, ஸத்ய ஸங்கல்பனாக இருக்கை, ஆகிய; எட்டு குணங்களும் நிறைந்த, என்றாகவுமாம். அரும்பயனும், என்பதினால் மிகவும் ச்ரமப்பட்டு ஸம்பாதிக்கவேண்டும் என்பது ஏற்பட்டது இதனால் மற்ற பலங்களைப் போலவே இதற்கும் துக்கமூலத்வம் என்னும் தோஷம் உண்டு என்று காட்டப்பட்டது இது உபலக்ஷணம் இதற்கு அல்பமாக இருக்கல் முதலிய மற்ற தோஷங்களும் உண்டு என்று, தாத்பர்யம் பகவத் ப்ராப்தியைவிட மிகவும் தாழ்ந்ததான ஆத்மாநுபவ ஸுகத்திற்காகப் படும் கஷ்டங்கள் எல்லாம் மலையைக் கல்லி எலியைப் பிடிப்பாரைப்போல என்று, பரிஹாஸம் செய்வதில் தாத்பர்யம். "சோராதுகந்தவர்" என்பதினால், பகவானையும் அவனுடைய கல்யாண குணங்களையும் அநுபவிக்கச் செய்தே, தான் வந்த காரியத்தை மறந்து ஒரு திருவாட்டிப்பிள்ளை பெற்றவாறு என்னென்று விஸ்மயப்பட்ட விச்வாமித்திர மஹர்ஷியைப்போல, 2 "காலாழும் நெஞ்சழியும், கண்சுழலும்" என்று முன்னடித் தோற்றாமல் நிற்கவேண்டி இருக்கத் தாங்கள் கொண்டதையே பிடித்துக்கொண்டு அவனுடைய போக்யதையில் நெஞ்சம் செல்லாமல் இருப்பதே, என்கிற திருவுள்ளத்தினால் 3 "பிறவித் துயரற ஞானத்துள் நின்று, துறவிச்சுடர் விளக்கம் தலைப்பெய்வான், அறவனை ஆழிப்படை அந்தணனை, மறவியையின்றி மனத்துவைப்பாரே" என்று ஆச்சர்யப்படுகிறார். "தூய்மதி கோளவதும்" என்கிற இடத்தில் புத்திக்குத் தூய்மையாவது, 4 "காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேऽந்யதேவதா:" என்று சொல்லுகிறபடியே 5 "அ

1. பகவத்கீதை, 8-21. 2. பெரியதிருவந்தாதி, 34பாட்டு. 3. திருவாய்மொழி, 1 பத்து, 7-1. 4. பகவத்கீதை, 7-20. 5. திருவாய்மொழி, 1-1-4.

வாய்த்தபடி தமதமதறிவறி வகைவகை, அவரவரிறையவரென” அடி அடை பாயல் பகவானே ஸர்வபலப்ரதன் ஆகையினால் எல்லாப் பலங்களுக்கும் அவனே ஆராதிக்கத்தக்கவன், என்று தெரிந்து கொள்ளுதல். 1“ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந” என்றல்லவோ அருளிச்செய்யப்பட்டது. 9

ஸ்ரீ- உ- வே- ஸ்ரீ வித்வான், பகவத்விஷய,

நரஸிம்மாசாரியார், செய்த ஸ்ரீகீதார்த்தஸங்க்ரஹ

வ்யாக்யானத்தில், எட்டாவது பாட்டுக்கு

வ்யாக்யானம் முற்றிற்று.

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்

எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:



1. பகவத்கீதை, 7-16.




ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ பகவத்ராமாநுஜாய நம:

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகாய நம:

## ஒன்பதாவது அத்தியாயம்.

பா] உபாஸனம் செய்கிறவர்களின் வ்யத்யாஸங்களைப் பொறுத்த விசேஷங்கள் நிரூபிக்கப்பட்டன. இப்பொழுது உபாஸிக்கப்படுகிற பரமபுருஷனுடைய மஹிமையையும் ஜ்ஞானிகளின் விசேஷத்தையும் தெளிவாக நிரூபித்து, பக்தியாகிய உபாஸனத்தின் ஸ்வரூபமும் சொல்லப்படுகிறது.

---

தா] 1 ஸ்வமாஹாத்ம்யம் மநுஷ்யத்வே பரத்வம் ச மஹாத்மநாம் । விஶேஷோ நவமே யோகோ பக்திரூப: ப்ரகீர்த்தித: ॥ என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்தை வ்யாக்யானம் செய்துகொண்டு அதை அனுஸரித்து, எட்டாவது, ஒன்பதாவது அத்யாயங்களுக்கு ஸங்கதியைச் சொல்லுகிறார்— "உபாஸனம் செய்கிறவர்களின்" என்று ஆரம்பித்து. "விசேஷங்களாவது" அறியவேண்டியவைகளுடையவும், அனுஷ்டிக்கவேண்டியவைகளுடையவும் வ்யத்யாஸங்கள். பகவானுடைய மஹிமையும் ஜ்ஞானிகளின் விசேஷமும் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறபடியினால், அதைத் தெளிவாக நிரூபித்தல் மாத்திரம் இவ்விடத்தில் உபாஸனத்தோடும் அதின்பலத்தோடும் சேர்ந்ததாகையினால் செய்யப்படுகி

---

1. கீதார்த்த ஸங்க்ரஹம், 16 ஶ்லோகம்.

ஸ்ரீபகவாநுவாச - பகவானாகிய ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னார்.

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே |
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே(அ)ஶுபாத்

ப-ரை] அநஸூயவே--- 'பொறாமை இல்லாத,தே-உனக்கு, குஹ்யதமம்-மறைக்க வேண்டியவைகளுக்குள் மிகவும்முக்கியமான,விஜ்ஞாநஸஹிதம்---விசேஷமான ஜ்ஞானங்களோடு கூடிய, இதம்---இந்த ஜ்ஞாநம்---ஜ்ஞானத்தை, ப்ரவக்ஷ்யாமி---சொல்லப் போகிறேன்,யத்---, எந்த பக்தியாகிய ஜ்ஞானத்தை ஜ்ஞாத்வா---அறிந்து, அஶுபாத்---பாபங்களிலிருந்து, மோக்ஷ்யஸே---விடுபடப் போகிறாயோ.

ந்யு. இந்த அத்யாயத்துக்கு முக்யமான அர்த்தமோவெனில், உபாஸனத்தின் ஸ்வரூபத்தை நிரூபித்தலே, என்கிற அபிப்ராயத்தினால், 'தெளிவாக நிரூபித்து' என்று பிரித்துச் சொல்லி 'பக்தியாகிய' என்று தனித்துச் சொல்லப்பட்டது. இந்த அத்யாயத்திலும், மற்ற ஸந்தர்ப்பங்களிலும், ஒரே அர்த்தத்தைப்பற்றி,பக்தி,உபாஸனம்,என்கிற பதங்களை உபயோகித்து இருக்கிறபடியினால் ஸ்ருதியில் ஏற்பட்ட உபாஸனத்திற்கே பக்தி என்னும் பதத்தினால் விசேஷம் சொல்லப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் பக்தியாகிய உபாஸனத்தின் என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் "இதம் து தே குஹ்யதமம்" என்று ஜ்ஞானத்தைப்பற்றியே ஆரம்பிக்கிறபடியினாலும், 1 "மந்மநாபவ" என்று முடிக்கப்படுகிறபடியினாலும், இடையிலும் அநேக இடங்களில் பக்தியே அடிக்கடி சொல்லப்படுகிறபடியினாலும், ப்ரத்யக்ஷம்போலிருக்கை, மிகவும் ப்ரியமாக இருக்கை, திருநாமங்களைச் சொல்லுதல், அவனுடைய கைங்கர்யங்களில் ப்ரயத்தினம் செய்தல், நமஸ்காரம் செய்தல், முதலிய புதிய பக்தியின் ஸ்வரூபத்திற்குட்பட்ட விசேஷங்கள் சொல்லப்படுகிற படியினாலும், இதினால் உண்டாக்கப் படுகிற மிகவும் சிறந்த ப்ரயோஜனத்தைச் சொல்லுகிறபடியினாலும், 2 "ராஜவித்யா" என்று ஆரம்பித்து இதைப்பற்றியே ஸ்தோத்திரமாகிய அர்த்தவாதமிருக்கிறபடியினாலும் இந்த அத்யாயத்தில் ஆரம்பம் முடிவு முதலிய, அடையாளங்களினால் பக்தியின் ஸ்வரூபத்தைச் சொல்வதிலேயே இந்த அத்யாயத்திற்குத் தாத்பர்யம். அத்துடன் சேர்ந்திருக்கிறபடியினால் மற்றதும் இந்த அத்யாயத்தில் சொல்லப்படுகிறது, என்று தாத்பர்யம்.

1. பகவத்கீதை, 9-43. 2. பகவத்கீதை, 9-2.

பா] இந்த மறைக்கத் தக்கவைகளுக்குள் மிகவும் சிறந்ததான, பக்தி யாகிய உபாஸனம் என்று பெயரையுடைய ஞானத்தை, அந்த உபா ஸனத்தைச் சேர்ந்த விஶேஷ ஞானத்தோடு கூட, பொறாமை இல்லாத உனக்குச் சொல்லப்போகிறேன். அதாவது என்னைப் பற்றிய மற்றெல்லா

தா] 'ஊக்ஷ்யதே' என்கிற இடத்தில் மேல் சொல்லப்போகிறதே புத்தியில் தோன்றி இருக்கிறபடியினால் 'ஊக்ஷம' (இது) என்று சொல்லப் பட்டது. 1 'இவனே அதிவாதீர் செய்கிறான்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தில் ஜீவாத்மாவை உபாஸிக்கிறவனை விடப்பரப்ர ஹ்மத்தை உபாஸிக்கிறவன் மேலானவன் என்று ஏற்படுவதைப்போல இவ்விடத்திலும் 'து' என்னும் பதத்தினால் கர்மயோக ஞானயோகங் களைவிட மேல்சொல்லப்போகிறது மேலானது, என்று ஏற்படுகிறது. அவைகளுள், ஒன்று மறைக்கக் கூடியது, மற்றொன்று மறைக்கக்கூடி யதுள் சிறந்தது. இதுவோவெனில், மறைக்கக் கூடியவையுள் மிக வும் சிறந்தது. இதுவும், அதிகமான, கேழ்க்கவேண்டுமென்கிற ஆசை யை உண்டாக்குவதற்காகவும், அதிகமாக மறைக்க வேண்டியது என்ப தற்காகவும் சொல்லப்பட்டது. இதனால் விவரிக்கப்படுகிற வேதாந்த வாக்யங்களிலே போல இவ்விடத்திலும் ஞான என்னும் பதம் மேலே சொல்லப்போகிற விஶேஷமான ஞானத்தில் முடிவு பெறுகிறது, என்று தெரிவிப்பதற்காக--பக்தியாகிய உபாஸனம் என்று பெயரை உடைய' என்று சொல்லப்பட்டது. 'உபாஸனத்தைச் சேர்ந்த விஶேஷ ஞானத்தோடு கூட' என்பது. 2 முன்பு சொன்ன விஜ்ஞானத்தைவிட இவ் விடத்தில் சொல்லப்பட்ட விஜ்ஞானத்திற்கு பேதம். அதாவது முன்பு சொல்லிய விஜ்ஞானம், உபாஸனம் செய்யப்படுகிற வஸ்து முதலியவை களின் விஶேஷங்களைப் பற்றிய ஜ்ஞானம். இந்த உபாஸனத்தைச் சேர்ந்த விஶேஷங்களைப் பற்றியது. அதாவது உபாஸனம் செய்யும் மாதிரி. இந்த ஸந்தர்ப்பத்திற்கு உபயோகமான பொறாமை இல்லாமை யின் மாதிரியைக் காட்டுகிறார்---'என்னைப்பற்றிய' என்று ஆரம்பித்து. குணங்களைத் தோஷமாக ப்ரகாஶப் படுத்துவதற்கு காரணமான மனதின்வ்யாபாரம், பொறாமை, அதில்லாமையாவது குணங்களைக்குண மாக எண்ணுதல் அல்லவோ, என்று தாத்பர்யம். இதனால் உபதே ஶம் செய்யத் தக்கவன், தகாதவன், இவர்களைப் பிரித்துச் சிஷ்யர் களுக்குத் தெரிவித்திருக்கிறது. வித்யைகள் சொல்லும் வார்த்தையாக 3 'அஸூயகாயமாம்மாதா:' என்று ஸ்ம்ருதிகளில் சொல்லி இருக்கிறார்

1 சாந்தோக்யம், 7-16 2 பகவத்கீதை 7-2. 3 அஸூயகாய-பொறாமைக்கார னுக்குமாம்-என்னை, மாதா:—கொடுக்காதே.

பா] வஸ்துக்களையும் விடச்சிறந்ததாயும், அளவிடமுடியாத விசேஷங்களை உடையதாகவுமிருக்கிற மஹிமையைக் கேட்டு இப்படிக்கே இருக்கிறது, என்று நினைத்துக் கொண்டிருக்கிற உனக்குச் சொல்லப்போகிறேன் என்று அர்த்தம். எந்த ஜ்ஞானத்தை அனுஷ்டிக்கும் வரையிலாக அறிந்து கொண்டு என்னை அடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களிலிருந்தும், விடுபடப் போகிறாயோ. 1

ராஜவித்³யா ராஜகு³ஹ்யம் பவித்ரமித³முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவக³மம் த⁴ர்ம்யம் ஸுஸுக²ம் கர்துமவ்யயம் ॥ (2)

ப-ரை] இத³ம்-இது, ராஜவித்³யா-வித்யைகளுக்குள் ராஜா, (அதாவது சிறந்தது) ராஜகு³ஹ்யம்-மறைக்க வேண்டியவைகளுக்குள் சிறந்தது, உத்தமம்-மிகவும் சிறந்த, பவித்ரம்-பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியது, ப்ரத்யக்ஷாவக³மம்-ப்ரத்யக்ஷமாகக்கூடிய விஷயத்தை உடையது, த⁴ர்ம்யம்-தர்மத்தைவிட்டு விலகாதது. (அதாவது மேலானநன்மையைக் கொடுக்கக் கூடியது) என்று தாத்பர்யம்), கர்தும்-செய்வதற்கு, ஸுஸுக²ம்-மிகவும் ஸுகமானது, அவ்யயம்-அழிவில்லாதது. 2

தா] கள். இந்தக் கீதையிலும் 1 'இத³ந்தே நாதபஸ்காய' என்று ஆரம்பித்து 'நவாம்யோஸ்ய ஸூயடதி' என்று சொல்லப்போகிறார். 'ப்ரவக்ஷ்யாமி' என்பதற்கு எல்லாவற்றையும் ஸுலபமாகவும் ப்ரகாசமாகவும் சொல்லப்போகிறேன் என்று அர்த்தம். 'எந்தஜ்ஞானத்தை அனுஷ்டிக்கும்வரையிலாகஅறிந்துகொண்டு' என்பதற்குஅனுஷ்டிக்கவேண்டியதைத் தெரிந்துகொண்ட மாத்திரத்தினால், அதைஅனுஷ்டித்ததினாலுண்டாகும் பலம் உண்டாகாது அல்லவா, ஆகையினால் உபாஸனத்தின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டு அதை அனுஷ்டித்து அதின் வழியாக மோக்ஷத்தை அடையப்போகிறாய், என்று சொல்லப்படுகிறது, என்று தாத்பர்யம். கர்மம் முதலியவைகளினால் பக்தி உண்டாவதற்குத் தடையான பாபம்போக்கப்படுகிறது. பக்தியினாலோ என்னில், பகவானை அடைவதற்குத் தடையான பாபமெல்லாம் போக்கப்படுகிறது, என்றல்லவோ ப்ரமாணத்தில் ஏற்பட்டிருக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'என்னை அடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களிலிருந்தும்' என்று சொல்லப்பட்டது. 'அசுபா⁴' என்னும் பதம் இவ்விடத்தில் ஸ்வர்கம் முதலியவைகள் என்று பெயரை உடைய மோஹத்தை உண்டாக்கக்கூடிய நரகங்களுக்குக் காரணமாகிய, புண்யம் என்கிற பதத்தினால் சொல்லப்படுகிற பாபங்களையும் பற்றியது. என்பதும், 'எல்லா' என்கிற பதத்தினால் சொல்லப்படுகிறது. 1

1 பகவத்கீதை 18-67.

பா] வித்யைகளுக்குள் ராஜா, மறைக்கவேண்டியவைகளுக்குள்ராஜா, அதுவன்றிக்கே, ராஜாக்களுடைய வித்யை என்றும் சொல்லவுமாம். ராஜாக்கள் விஶாலமாயும் கம்பீரமாயுமுள்ள மனதை உடையவர்கள் அல்லவா, ஆகையினால் பெரிய மனதை உடையவர்களுடைய வித்யை இது, என்றும் அர்த்தம் பெரிய மனதை உடையவர்களே மறைக்க

---

தா] மற்ற உபாயங்களைவிட இந்த உபாயத்திற்கு மேன்மையை இந்த ஶ்லோகத்தினால் சொல்லுகிறார்--இவ்விடத்தில் ராஜா என்னும் பதமானது க்ஷத்திரியன் என்கிற ஜாதியை மாத்ரம் சொல்லுகிறதாக இருந்தாலும் 1 "விஶேஷவிதிர் ஶேஷநிஷேதபர்யவஸாயீ" என்கிற ந்யாயத்தினால், ப்ராஹ்மணன் முதலியவர்களுக்கு அதிகாரம் இல்லாமல் போக வேண்டியதாகும் ஆகையினால் ராஜாக்களின் வித்யை என்பதை அநாதரித்துவிட்டு அர்த்தம் சொல்லுகிறார்— 'வித்யைகளுக்குள் ராஜா, மறைக்க வேண்டியவைகளுக்குள் ராஜா' என்று கர்மதாரய ஸமாஸத்தின் தாத்பர்யத்தை அநுஸரித்து இது சொல்லப்பட்டது. பதத்திற்கு நேரான அர்த்தம் போவெனில், ராஜாவாகிய வித்யை என்று சொல்லவேண்டியது, அன்றிக்கே 2 "ராஜதந்தாதிஷு" என்கிற பதங்களின் ஸமூஹத்தில் படிக்கப்பட்டது, என்று ஊஹித்துக்கொள்ளவும். "வலிதஃஶுத்தம்" என்கிற இடத்திலிருக்கும் உத்தம என்னும் பதத்தின் அர்த்தத்தையே இங்கும் சொல்லவேண்டியது அவசியமானதினால், இவ்விடத்தில் ராஜா என்னும் பதம் சிறந்தது, என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. இப்படி ப்ரஸித்தமல்லாத அர்த்தத்தை சொல்வதினாலுண்டான வருத்தத்தைப் பொறுக்காதவராய்ச் சொல்லுகிறார்-'ராஜாக்களுடைய வித்யை' என்று ப்ராஹ்மணன் முதலியவர்களுக்கு இதில் அதிகாரமில்லை, என்று மறுக்கத்தாகிறதே என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்காக (இது உபசாரமாகச் சொல்லி இருக்கிறது என்று மனதில் வைத்துக்கொண்டு) அப்படிக்கு உபசாரமாகச் சொல்வதற்குக் காரணமான குணத்தைக் காட்டுகிறார்—'ராஜாக்கள்' என்று ஆரம்பித்தது. ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார் 'பெரியமனதை உடையவர்களு

---

1 பொதுவான ந்யாயம், தனித்து ஒருவனுக்குமாத்திரம் ஒன்றை விதித்தால் மற்றவர்களுக்கு அதுஇல்லை என்று தெரிவிக்கிறது. இங்கே ராஜாக்களுக்கு மாத்திரம் விதித்ததினால் மற்ற வர்ணத்தினருக்கு இல்லை என்பது அறியக்கடவதாகும்.

2 ராஜதந்த: என்று ஒருபதம் இம்மாதிரியான பதங்களுடன் ராஜபதத்தைச் சேர்த்தால் தந்தராஜ: என்று வருவதற்குப் பதிலாக ராஜதந்த: என்பதுபோல ராஜ பதம் முன்பே வரும் என்பது பொருள்.

வேண்டியவைகளை மறைத்தலில் ஸாமர்த்யமுடையவர்கள். ஆகையி ஞல், இது அவர்களாலேயே மறைக்கத்தக்கது. என்னை அடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களையும் போக்கக்கூடியது. "அவகமஃமே" (அறியப்படுகிறது) என்னும் வ்யுத்பத்தியினுல், "அவகமம்" என்றால் விஷயம்: ப்ரத்யக்ஷமாகத் தெரியும் விஷயத்தை உடையது. அதாவது பக்தியாகிய உபாஸனத்தினுல் உபாஸிக்கப்படுகிற நான், அப்பொழுதே உபாஸனம் செய்கிறவனுக்கு ப்ரத்யக்ஷமாகப் பார்க்கக் கூடியவனுய்

டைய' என்று ஆரம்பித்து. இங்கு 1 அஜஹல்லக்ஷணையாவது கௌணீ வ்ருத்தியாவது, சொல்லவேண்டும் என்று தாத்பர்யம். மற்றவர்களினுல் அறிய முடியாததாகையினுல், என்று அபிப்ராயம். இந்தவித்யை, ராஜகுஹ்யம், என்பதற்கும் ப்ரயோஜனம்உண்டாவதற்காக ஔபசாரிகமான அர்த்தத்தைக் காட்டுகிறார்—'பெரிய மனதை உடையவர்களே' என்று. உபாயத்திற்குத் தடையான பாபங்களை, நிவ்ருத்தி செய்யுமவைகளையும், சிற்சில பாபங்களை நிவ்ருத்தி செய்யுமவைகளையும், விலக்குவதற்காக—'உத்தம்' என்னும் பதத்தோடு சேர்ந்த—'பவித்ரம்' என்னும் பதத்தின் தாத்பர்யத்தைச சொல்லுகிறார்—'என்னை அடைவதற்கு' என்று ஆரம்பித்து. 'ப்ரத்யக்ஷாவகமம்' என்கிற இடத்தில் ப்ரத்யக்ஷமாகிற ஞானத்தைச் சொல்லுகிறதாக இருந்தால், ஒன்றன்பால், பொருந்தாததாகையினுலும், ஞானமே விசேஷ்யமாதலினுல், ப்ரத்யக்ஷமான ஜ்ஞானத்தை உடையது, என்று பஹுவ்ரீஹிஸமாஸம் சொல்வதும்பொருந்தாதாகையினுலும்,'அவகமம்'என்கிற பதத்திற்கு அறியப்படுகிற வஸ்து, என்று அர்த்தத்தைச சொல்லி பஹுவ்ரீஹி ஸமாஸத்தைப் பொருந்தச் செய்கிறார்—'அவகமஃமே' என்று ஆரம்பித்து. இது யுக்தமல்ல. உபாஸனம் என்பது, இடைவிடாமல் நினைந்துக் கொண்டு இருப்பது ஆகையினுலும், உபாஸிக்கப்படுகிற வஸ்து ப்ரத்யக்ஷமாகத் தெரியாது, என்று ஸ்ருதியில் சொல்லி இருப்பதினுலும், ப்ரத்யக்ஷமான மற்ற வஸ்துக்களுக்கு பக்தியில் ஸம்பந்தமில்லையாதலாலும், என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதாவது' என்று ஆரம்பித்து. 2 'ஜ்ஞாதும் த்ரஷ்டும்' என்றிவை முதலியது இங்கே நினைக்கத்தக்கது. அப்பொழுதே' என்று ஸமீபகாலத்திலுண்டாவதினுல் சொல்லப்பட்டது. தானே ப்ரயோஜனமாக இருப்பவைகளுக்கு வேறு ப்ரயோஜனங்களுக்கு ஸாதனமாக இருக்கையா

1 அஜஹல்லக்ஷணை, முதல்வால்யூம் 507-வது பக்கத்தின் புட்நோட்டைப்பார்க்க. கௌணீவ்ருத்தியாவது ஒன்றின்குணம் மற்றொன்றில்இருக்குமாயின் இதை அதுவாகவே சொல்லுதல. 2 பகவத்கீதை 11-54.

இருக்கையை அடைகிறேன், என்று அர்த்தம். அப்படிக்கிருந்தாலும் தர்மத்தைவிட்டு விலகாதது. தர்மம் என்பது, நன்மைக்கு ஸாதனமாக இருப்பது. ஸ்வரூபத்திலேயே மிகவும் ப்ரியமாகையினாலும், அப்படியேஎன்னுடைய ப்ரத்யக்ஷத்தை உண்டாக்கிறபடியினாலும், தானே நன்மையாக இருந்தாலும் மேலான நன்மையாயும், அழிவில்லாததாயும் இருக்கிற என்னை அடைவதற்கு ஸாதனம் என்று அர்த்தம். ஆகையினாலே ஸாதக

---

கிற தர்மமாக இருத்தல் பொருந்தாது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அப்படிக்கிருந்தாலும்' என்று 1 'தர்மபத்யர்த்தந்யாயாதநபேதே' என்கிற ஸூத்ரத்தை அனுஸரித்து 'தர்ம்ய' என்னும் பதத்திற்கு அர்த்தத்தைச் சொல்லுகிறார் — 'தர்மத்தைவிட்டு விலகாதது' என்று. அபிபராயத்தை விவரணம் செய்கிறார்— 'தர்மமென்பது' என்று ஆரம்பித்து. ப்ரீதி என்னும் அர்த்தமுடைய 'த்ருபியைச் சொல்லுகிற தாதுவின்மேல் காரணம் என்னும் அர்த்தத்தைச் சொல்வதாகத் தர்ம என்னும் பதம் ஏற்பட்டது, என்று தாத்பர்யம். பெரியோர்களாலும் 2 'தர்ம இதி உபஸம்ஹாரே லக்ஷ்யதே யச்ச்ரேயஸ்கரபாஷணம் । தத் தர்மபதவாச்யார்த்தநிரூபணவிவக்ஷயா ॥' என்று சொல்லப்பட்டது. அந்த நன்மைக்கு இவ்விடத்தில் ஒருவித அளவும் இல்லாமையினாலும் 3 'முக்தி: கைவல்யநிர்வாணஶ்ரேயோநிஶ்ரேயஸாம்ருதம்' என்று நிகண்டுவில் சொல்லி இருக்கிறபடியினாலும் 'மேலான நன்மையாயும்' என்றிவை முதலானது சொல்லப்பட்டது—'ஆகையினாலேயே' என்பதற்குத் தன்னுடைய ஸ்வரூபத்தினாலும், தன்னாலுண்டாக்கப்படுகிற வஸ்துவினாலும், ப்ரயோஜனமாக இருக்கிறபடியினால், என்று அர்த்தம். "கர்த்தவ்யம் ஸாதநம்" என்பதற்குச் செய்யும் பொழுதே ஸாதகமாக இருக்கிற, என்று அர்த்தம். செய்த பின்பு ஸாதக முண்டாகிறது, என்கிற அர்த்தம், என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லு

---

1 வயாகரணம், அஷ்டாத்யாயீ, 4-4-92. தர்ம, பதி, அர்த்த, ந்யாய, இவைகளோடு, விட்டுப்பிரியாத என்னும் அர்த்தத்தில், ய, என்பதுவரும். தர்ம்ய, பத்ய முதலியன.

2 தர்ம இதி-தர்மம் என்கிற, உபஸம்ஹாரே - லக்ஷ்யதத்தில், யத்-எந்த, ஶ்ரேயஸ்கரபாஷணம்-நன்மையைக் கொடுக்கிறதுஎன்று சொல்லி இருக்கிறதோ, தத்-அது, தர்மபத வாச்யார்த்த நிரூபணவிவக்ஷயா-தர்மம் என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற அர்த்தத்தை நிரூபிக்கவேண்டும் என்கிற எண்ணத்தினால்.

3 நாமலிங்கானுஶாஸனம், முதல்காண்டம், தீவர்க்கம், 46 ஶ்லோகம், இந்த முக்தி: கைவல்யம், நிர்வாணம், ஶ்ரேயஸ், நிஶ்ரேயஸ், அம்ருதம், முதலிய பதங்கள் மோக்ஷத்தைச் சொல்லுமவை.

மாகச் செய்யக்கூடியது. அதாவது மிகவும் ப்ரியமாய் அனுஷ்ட்டிக்கத் தகுந்தது. அழிவு இல்லாதது. என்னை அடைதலாகிய பலத்தைக் கொடுத்தும் தான் நாசிக்கிறதில்லை. அதாவது இப்படிப்பட்ட உபாஸனத்தைச் செய்தவனுக்கு என்னைக் கொடுத்த பிறகும் நம்மால் இவனுக்கு ஒன்றும் செய்யப்படவில்லையே, என்று எப்பொழுதும் எனக்குத் தோன்றுகிறது. 2

அஶ்ரத்தधாநா: புருஷா: தர்மஸ்யாஸ்ய பரந்தப।
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி ॥

ப-ரை] பரந்தப-சத்ருக்களை ஜயிக்கும் ஸ்வபாவமுடைய அர்ஜுன, அஸ்ய-இந்த, தர்மஸ்ய-தர்மத்தின் விஷயத்தில், அஶ்ரத்தधாநா:-ஶ்ரத்தை இல்லாத, புருஷா:-புருஷர்கள், மாம்-என்னை, அப்ராப்ய-அடையாமல் 'ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி-ம்ருத்யுவாகிய ஸம்ஸாரத்தின் வழியில், நிவர்த்தந்தே-எப்பொழுதும் இருக்கிறார்கள். 3

பா] மிகவும் ப்ரியனான என்னைப்பற்றியதாகையினால் தானும் மிகவும் ப்ரியமாகவும், சிறந்த நன்மையாகிய என்னை அடைவதற்கு ஸாதனமாக

தா] கிறார்—'ஸுகமாகச் செய்யக்கூடியது' என்று. "ஸு என்னும் உபஸர்கத்தினுடையவும் ஸுக என்னும் பதத்தினுடையவும், அபிப்ராயத்தி லிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'மிகவும்' என்று ஆரம்பித்து. ஸ்வரூபத்தினாலும் விஷயத்தினாலும் மிகவும் அனுகூலமாக இருக்கிறபடியினால், ஸுகமாக அனுஷ்டிக்கத் தக்கது என்று அர்த்தம். மற்ற எல்லாக் கர்மங்களும் அதனின் ப்ரயோஜனத்தினால் நாசம் செய்யக்கூடியதல்லவா? இதுவோவெனில் ஸுலபமாகச் செய்யக்கூடியதாக இருந்தாலும் பலத்தினாலும் நாசம் செய்யப்படுகிறதில்லை. மோக்ஷமாகிய பலமும், இதற்குப் போதாது, என்று இதன் மேன்மையைச சொல்லுகிறது—"அவ்யயம்" என்னும் பதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அழிவில்லாதது' என்று. அத்தை விவரிக்கிறா 'என்னை அடைதலாகிய' என்று ஆரம்பித்து. ஆனால், இத்தைவிட வேறாயும் மேலானதாயும் இதனால் உண்டாக்கப்படுகிற ப்ரயோஜனம் என்ன, என்று ஆக்ஷேபம் வரிலிதின் அபிப்ராயத்தைச் சொல்லுகிறார்—'இப்படிப்பட்ட' என்று ஆரம்பித்து. 2

கீழ்ச்சொல்லியபடி ஶ்ரத்தைவைக்கக்கூடிய ஜ்ஞானமும், அனுஷ்ட்டானமும் இல்லாவிடில் மோக்ஷம் ஸித்திக்காது, என்றுகாட்டிக்கொண்டு ஸ்வரூபத்தினாலும் ப்ரயோஜனத்தினாலும் எல்லையில்லாத ஸுகமாகிய இதை எல்லோரும் அனுஷ்ட்டிக்காமல் இருப்பதற்குக்காரணத்தையும் சொல்லிக்கொண்டு 1 'மோக்ஷத்திற்கு வேறு வழி இல்லை' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தை இந்த ஶ்லோகத்தினால் விவரிக்கிறார்—

1 புருஷஸூக்தம்.

வும், அழிவு இல்லாததாயும் இருக்கிற, இந்த உபாஸனம் என்று பெயரை உடைய தர்மத்தை அனுஷ்டிக்கத்தகுந்த தமையை அடைந்து, ச்ரத்தையுடன் கூடிய த்வரை இல்லாத புருஷர்கள், என்னை அடையாமல், ம்ருத்யுவாகிய ஸம்ஸாரத்தின் வழியில், எப்பொழுதும் இருக்கிறார்கள். ஐயோ இது மிகவும் ஆஸ்சர்யம் என்று அர்த்தம். 3

---

'அஸ்ய' (இந்த) என்பது, கீழ்ச்சொல்லிய எல்லா ஸ்வபாவங்களையும் குறிக்கிறது என்கிறார்—'மிகவும் ப்ரியனை' என்று ஆரம்பித்து. 'தர்மஸ்ய' என்று, பொதுவாய் ஸம்பந்தங்களைக் குறிக்கிற ஆறும்வேற்றுமைக்கு ஸரியான அன்வயத்தைக் காட்டுவதற்காகச் சொல்லுகிறார்—'அனுஷ்டிக்கத் தகுந்த தமையை அடைந்து' என்று. அன்றிக்கே, ஸ்ரத்தை இல்லை என்று மறுத்தது அதற்கு ப்ரஸ்தாவம் வருமானால் லவோ பொருந்தும், என்று அபிப்ராயமாகவுமாம். காரணமில்லாமற் போனது, கார்யமாகிய அனுஷ்டானமு மில்லாமற்போகு மளவும் முடிவுபெறும் என்று காட்டுவதற்காக ஸ்ரத்தையுடன் கூடியத்வரையில்லாதவர்கள், என்று சொல்லப்பட்டது. 'ம்ருத்யுவாகிய' என்பதற்கு, பாதகமாகிய என்று அர்த்தம். அதுவுமன்றிக்கே, மரணத்தையும் தன்னுள்ளடக்கிக் கொண்டிருப்பதினால் ம்ருத்யுவாக இருக்கை பொருந்தும், 'நிவர்த்தந்தே' என்கிற இடத்தில் திரும்பிவருகிறார்கள், என்று அர்த்தம் சொல்லில், எதிலிருந்து என்கிற கேள்வி உண்டாகிறபடியினால், அத்தை இங்கே சொல்லாமையினாலும், 'அப்ராப்ய மாம்' (என்னை அடையாமல்) என்று தனித்துச் சொல்லி இருக்கிறபடியினால், பகவானிடத்திலிருந்து, என்று கல்பிப்பது பொருந்தாதாகையினாலும், 'ஸம்ஸாரவர்த்மநி' (ஸம்ஸாரவழியில்) என்று ஏழாம் வேற்றுமை, அதிலிருக்கும் வஸ்து, ஒன்றை எதிர்பார்க்கிறபடியினாலும், உபஸர்கங்களுக்கு அனேக அர்த்தங்கள் உண்டாகையினாலும், 'எப்பொழுதும் இருக்கிறார்கள்' என்று சொல்லபட்டது. ஸ்வரூபத்தினாலும் ப்ரயோஜனத்தினாலும் மேலான புருஷார்த்தமாய் ஸுலபமாகச் செய்யக்கூடியதுமான உபாஸனத்தைத் தெரிந்துகொண்டும் ப்ரயோஜனங்களின் வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொண்ட புருஷர்களுமகூட இத்தைவிட்டு மிகவும் துக்கமாகிய ஸம்ஸாரத்தை ப்ரீதியுடன் அடைகிறார்களே, என்கிற ஆஸ்சர்யத்தோடுகூடிய பகவானுடைய வார்த்தை இது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஐய்யோ' என்று. பாபங்களின் ப்ரபாவம மிகவும ஆஸ்சர்யம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மிகவும் ஆஸ்சர்யம்' என்று. ஸ்ரத்தை இல்லாமைக்குக் காரணமாகிய மனதிலிருக்கும சத்ருக்களும உன்னால் நிராகரிக்கத் தக்கவைகள், என்று, 'சத்ருக்களை ஜயிக்கும் ஸ்வபாவமுடைய' என்று, அழைத்ததின் அபிப்ராயம. 3

பா] இப்போழுது அடையப்படுகிறவனாகிய என்னுடைய, மற்றொருவராலும் நினைக்கமுடியாத மஹிமையைக் கேள். 4

𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌦𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾 ।
𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌚𑌾𑌹𑌂 𑌤𑍇𑌷𑍍𑌵𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥ (4)
𑌨 𑌚 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌂 ।
𑌭𑍂𑌤𑌭𑍃𑌨𑍍𑌨 𑌚 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑍋 𑌮𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 ॥

ப-ரை] 𑌇𑌦𑌂-இந்த, 𑌸𑌰𑍍𑌵𑌂-எல்லா, 𑌜𑌗𑌤𑍍-லோகமும், 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾-ப்ரகாஶமில்லாத ஸ்வரூபத்தை உடைய, 𑌮𑌯𑌾-என்னால், 𑌤𑌤𑌂-வ்யாபிக்கப்பட்டது, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿-எல்லா ப்ராணிகளும், 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿-என்னிடத்திலிருக்கின்றன. 𑌅𑌹𑌂-நான், 𑌤𑍇𑌷𑍁-அந்த ப்ராணிகளுக்குள், 𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃-இருக்கவில்லை, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿-அந்த ப்ராணிகள், 𑌨 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿-என்னிடத்திலிருக்கவுமில்லை, 𑌮𑍇-என்னுடைய, 𑌐𑌶𑍍𑌵𑌰𑌂-பகவானென எனக்கே அஸாதாரணமான, 𑌯𑍋𑌗𑌂- ஸ்வபாவத்தை, 𑌪𑌶𑍍𑌯- பார். (நான்) 𑌭𑍂𑌤𑌭𑍃𑌤𑍍-எல்லா ப்ராணிகளையும் தரிப்பவன், 𑌨 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌃—அந்த ப்ராணிகளுக்குள்ளிருப்பவனல்ல, 𑌮𑌮-என்னுடைய, 𑌆𑌤𑍍𑌮𑌾- ஸங்கல்பமானது, 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃-எல்லா ப்ராணிகளையும் தாங்குவதும் நியமிப்பதும்

---

தா] இப்படி இந்த அநுபாயத்திற்கு முக்யமான அர்த்தமாகிய உபாஸனத்தின் மஹிமை சொல்லப்பட்டது பிறகு இத்தால் அடையப்படுகிற வஸ்துவின் மஹிமையைக்கொண்டும் அதுவே உறுதி செய்யப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்போழுது' என்று ஆரம்பித்தது. '𑌇𑌦𑌂𑌸𑌰𑍍𑌵𑌂' (இந்த எல்லாம்) என்று சொன்னது, ப்ரமாணத்திலேற்பட்ட எல்லா வஸ்துக்களையும் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்—'சேதனம் அசேதனமாகிய' என்று சொல்லப்பட்டது. '𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾' என்று விக்ரஹத்தைச் சொல்வதாய் இருந்தால் இவ்விடத்தில் உபயோகம் இல்லையாதலால், ஸ்வரூபத்தைப்பற்றி இது உபசாரமாக ப்ரயோகித்திருக்கிறது, என்று காட்டுவதற்காக—'ப்ரகாஶம் செய்யப்படாத ஸ்வரூபத்தை உடைய' என்று சொல்லப்பட்டது. ஆகாஶம்போல் உள்ளிருப்பது மாத்திரமாகிய வ்யாபித்திருக்கையை விலக்குவதற்காக, அநேக ப்ரமாணங்களிலேற்பட்ட வ்யாபித்திருக்கையின் மாதிரி, '𑌮𑌯𑌾' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது, என்று சொல்லுகிறார்—'அந்தர்யாமியாக'

பா] சேதனம் அசேதனமாகிய, இந்த லோகமெல்லாம், ப்ரகாசம் செய்யப்படாத ஸ்வரூபத்தை உடைய அந்தர்யாமியாகிய என்னால், இந்த லோகத்தைத் தரிப்பதற்காகவும், நியமனம் செய்வதற்காகவும், ஶேஷியாகி இருந்துகொண்டு வ்யாபரிக்கப்பட்டது. என்று, அர்த்தம். அப்படியே அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் † எவன் ப்ரதிவியி லிருந்துகொண்டு... எவனை ப்ரதிவீ தெரிந்துகொள்ளவில்லையோ, ‡ எவன் ஆத்மாவி லிருந்து

---

*என்று. கீழ்ச்சொல்லியவிதமாக வ்யாபரித்திருப்பதற்கு ப்ரயோஜனத்தையும், காரணத்தையும் காட்டுகிறார்---'இந்த லோகத்தை' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் தரித்தல்மேல் க்ரந்தத்தி லேற்பட்டது. அதினாலேயே நியமிப்பதும் தானாகவே ஏற்பட்டது. தரிப்பதும், நியமித்துக்கொண்டே, என்பது ஶ்ருதியில் சொல்லப்படுகிறது. ஶேஷியாக இருக்கையோ வெனில முன்னமே சொல்லப்பட்டது. இவைகளை ஶரீரமாக உடையவன் என்பதினால் தானாகவும் ஏற்பட்டது. ப்ரகாஶம செய்யப்படாத ஸ்வரூபத்தை உடையவனாகவும் நியமித்துக்கொண்டும் எல்லாவற்றிலும வ்யாபரித்து இருக்கை ஶ்ருதியில் சொல்லியிருக்கிறது, என்று காட்டுகிறார்—'அப்படியே' என்று ஆரம்பித்து. ப்ரதிவியை உதாஹரணமாகக் காட்டி இருக்கிறது, அந்த ஸந்தர்ப்பத்தில் சொல்லப்பட்ட எல்லா அசேதனங்களையும் குறிப்பதற்காக. கீழ்ச சொல்லியபடி வ்யாபரித்து இருப்பதைக் காரணமாக வைத்துக்கொண்டு 'மத்ஸ்தாநி'' என்பதினால் லோகம் தனித்து நிற்கிறது என்பது நிராகரிக்கப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—ஆகையினால், என்று ஸ்ரீ விஶ்வரூபாத்யாயம் முதலிய இடங்களில் எல்லா வஸ்துக்களும் பகவானுடைய விக்ரஹத்தை அடைந்திருக்கின்றன, என்பதும் சொல்லப்படுகிறது. இவ்விடத்திலோ வெனில் ஸ்வரூபத்தில நிற்கின்றன, என்று சொல்லப்படுகிறது, ஆகையினால் புனருக்தி என்னும் தோஷம் இல்லை என்று, தெரிவிப்பதற்காக 'அந்தர்யாமியாகிய என்னிடத்தில்' என்று சொல்லப்பட்டது. இந்தத் தரிப்பதும் நியமிப்பதும் வ்யாபரித்து இருப்பதுடன் கூடவே ஶ்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது, என்று,சொல்லுகிறார்—'அந்த அந்தர்யாமி ப்ராஹ்மணத்திலேயே' என்று. 'அவனுக்குவஶப்பட்ட ஸ்திதியும், அவன் நியமிக்கிறான் என்பதற்கு அவனுக்குவஶ*

---

† *ப்ருஹதாரண்யகம்*, 5-7-3.

‡ *ஶதபத ப்ராம்மணம், மாத்யம் தினபாடம்*, 14-6.

கொண்டு...எவனை ஆத்மா, தெரிந்துகொள்ளவில்லையோ'என்று அர்த்த முள்ள வாக்யத்தில், சேதனம் அசேதனமாகிய வஸ்துக்களின் கூட்டங்க ளினுல் பார்க்கப்படாத அந்தர்யாமியினுல் அந்தந்த இடங்களில் வ்யாபரிக் கப்பட்டமை சொல்லப்பட்டது. ஆகையினுல் எல்லா ப்ராணிகளும் அந்தர்யாமியாகிய என்னிடத்தில் இருக்கின்றன. அந்த அந்தர்யாமி ப்ராஹ் மணத்திலேயே † "எவனுக்கு ப்ரதிவீஶரீரமோ,எவன் ப்ரதிவியை உள் ளிருந்துகொண்டு நியமிக்கிருனே, ‡ 'எவனுக்கு ஆத்மாஶரீரமோ!எவன் ஆத்மாவை உளளிருந்துகொண்டு நியமிக்கிருனே' என்று அர்த்தமுள்ள வாக்யத்தில் ஶரீரமாக இருந்துகொண்டு நியமிக்கப்பட்டிருக்கையைச் சொல்லுகிறபடியினுல் அவனுக்கு வஶப்பட்ட ஸ்த்திதியும், அவன் நியமி க்கிருன் என்பதும்,அவனேஶேஷீ என்பதும், சொல்லப்பட்டன நானே வெனில் அவைகளுக்கு வஶப்பட்ட ஸ்த்திதியை உடையவன் அல்ல.

*ப்பட்ட ஸ்திதியும்,ப்ரவ்ருத்தியும் என்று,அர்த்தம். இவைகள் ஶரீரம், அவன் இவைகளை ஶரீரமா உடையவன், என்று சொல்லி இருக்கிறபடி யினுல், அவன் தரிக்கிருன், என்பதும், அவனே ஶேஷி,என்பதும் ஏற் பட்டது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'ஶேஷியாக இருக் கையும்' என்று. "ஃபாதஷிதம்ஸவஷ்" (இந்த எல்லாம் என்னுல் வ்யா பிக்கப்பட்டிருக்கிறது, என்று சொல்லி, உடனே, "நவாஹம்தெஷ்வ வஸ்திதஃ" (நான் அவைகளுக்குள் இருக்கவில்லை)என்று சொல்லி இருப் பது. ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கிறதே, "எவன் ப்ர திவியில் இருந்துகொண்டு. என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முத லியவைகளுக்கும் விருத்தமாக இருக்கிறதே? என்கிற ஆக்ஷேபத் திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—நானேவெனில், என்று ஆரம் பித்து. 'ஊஷாதிஸவஷுஹஸ்திதாதி' என்று கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்டமா திரியான ஸ்ததிதி இங்கே மறுக்கபபடுகிறது. 1 'ஓபகவானுகிய ஆசார் யனே அந்தப்பகவான் எதிலிருக்கிருர்?' என்கிற ஶிஷ்யனுடையகேள் விக்கு ஸமாதானமாக 2 'தன்னுடைய ப்ரபாவத்திலேயே இருக்கிருர் அன்றிக்கே ஒரு ப்ரபாவத்திலு மிருக்கவில்லை' என்றர்த்தமுள்ள வாக் யம் ஶ்ருதியில் சொல்லப்படுகிறதல்லவா என்று தாத்பர்யம். கீழ்ச்*

† ப்ருஹதாரண்யகம்- 5-7.

‡ சத்பதப்ராம்மணம்-14-6.

1 சாந்தோக்யம்- 7-24-1.

2 ப்ருஹதாரண்யகம்- 1-2-1.

அதாவது என்னுடைய ஸ்வரூபம் நிற்பதற்கு அவைகளால் ஒருவித உபகாரமுமில்லை, என்று அர்த்தம். அந்தப்ராணிகள் என்னிடத்தி லிருக்கவுமில்லை. ஜலம்முதலிய வைகளைக் குடம் முதலியவைகள்போல நான் அவைகளைத்தாங்கிக்கொண்டிருப்பவனுமல்ல. மற்றெப்படியெனில்? என்னுடைய ஸங்கல்பத்தினாலேயே.வேறொரிடத்திலும் ஸம்பவிக்காத எனக்கே அஸாதாரணமும் ஆஶ்சர்யமுமான யோகத்தைப்பார். என்ன

சொன்னதை விவரிக்கிறார்.—'என்னுடைய இருப்புக்கு' என்று 'ஒரு' என்பதற்கு ஸ்வரூபத்தினாலாவது, ஸங்கல்பத்தினாலாவது, அத்ருஷ்டத்தினாலாவது, என்று தாத்பர்யம். மத்ஸ்தானி, நசமத்ஸ்தானி (என்னிடத்திலே இருக்கின்றன. என்னிடத்தி லிருக்கவில்லை) என்பதும் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கிறதே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஜலம் முதலிய வைகளை' என்றாரம்பித்து, ரூபமுள்ள வஸ்து வல்லவோ மற்றொரு ரூபமுள்ள வஸ்துவைக் கீழே விழாமல் தாங்கிக்கொண்டிருக்கிறது. இவ்விடத்திலப்படி இல்லை என்று தாத்பர்யம். லோகத்தில் கண்டதற்கு விருத்தமாக ஸம்பவிக்காதே என்கிற அபிப்ராயத்தினா லாக்ஷேபிக்கிறார்—'எப்படி' என்று ஶரீரம் ஆத்மா இவைகளுக்குப போல ஸம்பவிக்கும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னுடைய ஸங்கல்பத்தினால்' என்று தன்னுடைய இஷ்டத்தினால் தாங்கிக் கொண்டிருத்தலல்லவோ விதிக்கப்படுகிறது. அயலாருக்குக் கீழ்ப்படிந்து தரித்துக்கொண்டிருத்தல் இல்லை என்று மறுக்கப்படுகிறது. ஆகையினால் விரோதமில்லை என்று கருத்து 'பஶ்ய' என்பதினால் வேறொருவருக்கும் ஸாதாரணமல்ல என்பது ஏற்பட்டது, 'பஶ்ய' என்பதினால் ஆஶ்சர்யம் என்பதும் காட்டப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'வேறொரிடத்திலும்' என்றாரம்பித்து 1 'யோகஸ்ஸந்நஹநோபாயத்யான ஸங்கதியுக்திஷு' என்று சொல்லி யிருக்கிறபடியினால் த்யானமாகிய ஸங்கல்பம இவ்விடத்தில் யோகம் என்று சொல்லப்படுகிறது. அன்றிக்கே உபாஸனம் செய்யப்படுகிற வஸ்துவின் ஸ்வபாவமாகவுமாம். 'பஶ்யமேயோகம்' (என்னுடைய யோகத்தைப்பார்) என்று சொன்ன பிறகு அந்த யோகத்தின் ஸ்வரூபமே சொல்லத் தக்கது ஆகையினால் அதற்குத்தகுந்த கேள்வியைக்காட்டுகிறார்—'என்னயோகமென்னில்' என்று. ஸ்வஸங்கல்பேந தஸ்ய என்கிறவிடத்தில் அர்த்தத்துக்கு உசிதமாக இருக்கிறபடியினால் அஹம்(நான்)என்பதே விஶே

1 நாமலிங்கானுஶாஸனம் 3காண்டம் நாநார்த்தவர்க்கம் 109 யோகம் என்னும் பதம் உத்ஸாஹம், உபாயம், ஸம்பந்தம்,த்யானம், யுக்தி இவைகளைச் சொல்லும்.

யோகம் என்னில்? எல்லாப்ராணிகளையும் தரிப்பவன் நான். அவைகளால் எனக்கு ஒருஉபகாரமும் இல்லை. என்னுடைய மனஸ்ஸாகிய ஸங்கல்பமே எல்லாப்ராணிகளையும் தாங்குவதும் நியமிப்பதும். (4-5)

---

ஷமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டியது. அன்றிக்கே 'மமாத்மா பூதபாவந:' என்கிற இடத்திலே போல 'மமாத்மா' என்று சொல்லப்பட்ட ஸங்கல்பமே விசேஷமானாலும் அதினால் கிடைத்த அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறதாகவுமாம்—'எல்லாப்ராணிகளையும் தாங்குகிறவன் நான், என்றிவை முதலியது 'தாத்மா' என்று விசேஷித்துச் சொன்னது ப்ரிஸங்க்யாவிதியின் ந்யாயத்தை அநுஸரித்து இதைத் தவிர மற்றொரு ஒத்தாசைக் காரணமில்லை என்று மறுப்பதற்காக என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—ஸங்கல்பமே என்று. மமாத்மா (என்னுடைய ஆத்மா) என்று தன்னைவிட வேறாகச் சொல்லியிருப்பதின் ஸ்வாரஸ்யத்தினால் ஏற்பட்ட ஆத்மா என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'மனஸ்ஸாகிய ஸங்கல்பமே' என்று இத்தால் லோகத்தாரின் அஜ்ஞானத்தை அனுஸரித்து தேஹம் முதலியவைகளின் கூட்டத்தில் நான் என்பதற்கு அர்த்தமாக இருக்கையை ஆரோபணம் செய்துகொண்டு சொல்லியிருக்கிறார்---என்று சங்கராசாரியர் சொல்லிய அர்த்தம் நிராகரிக்கப்பட்டது. மனஸ்ஸினால் உண்டாக்கப்படுவதாக வேறு இடங்களில் ப்ரஸித்தமாயிருக்கிற ஸங்கல்பமே இவ்விடத்தில் மனஸ்ஸைச் சொல்லுகிற ஆத்மா என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது. அன்றிக்கே இவ்விடத்தில் ஆத்மா என்னும் பதம் ஸங்கல்பம் என்கிற தசையையுடைய மனஸ்ஸைச் சொல்லுகிறதாகவுமாம் 1 'மநஸைவ ஜகத்ஸ்ருஷ்டிம்' என்கிறவசனமும்' 2 அந்தப்ரஹ்மம் (இப்படி) ஆகக்கடவேன் என்று மனஸ்ஸைச் செய்தது என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலிய ப்ரமாணங்களுமிருக்கிறபடியினால், இந்த அர்த்தத்தை ஞாபகப்படுத்துவதற்காக—'மனஸ்ஸாகிய என்கிற பதம். தரிப்பதும், நியமனம் செய்வதுமே கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்டபடியினால் அடுத்த மேல் ஶ்லோகத்திலும் சொல்லப்படுகிறபடியினால் ஸ்ருஷ்டிப்பதை அதற்கு மடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்போகிறபடியினால் பகவானுக்கு வஶப்பட்ட ஸ்திதியையும நியமிக்கப்பட்டிருப்பதையும் குறிக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தரிப்பதும்நியமிப்பதும்' என்று அன்றிக்கே ஸர்வபூதாநுவர்த்தித்வ: என்பதற்கே இது அர்த்தமாகவுமாம். 4-5

---

1. விஷ்ணுபுராணம் 5-22-15. மனஸ்ஸினாலேயே ஜகத்ஸ்ருஷ்டியும் லோகங்களின் ஸ்ருஷ்டியை (செய்கிறான்) என்று சேர்த்துக்கொள்ளவும்.

2. ப்ருஹதாரண்யகம்-1-2-1.

பா] இவையெல்லாம் தனக்கு வசப்பட்ட ஸ்த்திதி ப்ரவ்ருத்தி இவைகளையுடையது, என்பதற்கு உதாஹரணம் சொல்லுகிறார்.—

*யதாகாஶஸ்த்திதோ நித்யம் வாயுஸ்ஸர்வத்ரகோ மஹாந்।*
*ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய ॥* (௬)

ப-ரை] மஹாந் பெரிய, வாயு: காற்று, யதா-எப்படி, ஆகாஶஸ்த்தித: ஆகாசத்தில் இருந்துகொண்டு, ஸர்வத்ரக: எல்லாஇடத்திலும் ஸஞ்சரிக்கிறதோ, ததா அப்படியே ஸர்வாணி எல்லா, பூதாநி ப்ராணிகளும், மத்ஸ்தாநி என்னிடத்திலிருக்கின்றன, இதி என்று, உபதாரய தெரிந்துகொள்

பா] ஆதாரமில்லாத ஆகாசத்தில் பெரியகாற்று இருந்துகொண்டு எல்லாவிடத்திலும்ஸஞ்சரிக்கிறதோ, ஆதாரமில்லாதஅந்தக்காற்று, எனக்குவசப்பட்ட ஸ்த்திதியையுடையதுஎன்று, எப்படி அவஶ்யமாய் ஒப்புக்கொள்ளவேண்டியதோ. என்னாலேயே தரிக்கப்படுகிறது என்றும் தெரிந்துகொள்ள

---

தா] *இந்தஶ்லோகத்தில் தன்னிடத்தில் எல்லாப்ராணிகளுமிருப்பதற்கு, ஆகாசத்தில் காற்று இருப்பது உதாஹரணமாகச் சொல்லப்படுகிறது, என்று சிலர் சொன்னார்கள்; அது யுத்தமல்ல, ஏனெனில் ஆகாசத்திற்கு காற்றைக்குறித்து நியமனம் செய்யும் தன்மையும், தரிக்கும் தன்மையுமில்லாமையாலும், அப்படிப்பட்ட ஸ்த்திதியே இங்கு கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கிறபடியயினாலே அதற்கு உதாஹரணம் காட்டுவதற்காக இந்தஶ்லோகம், என்பதே உசிதமாகையினாலும், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—*'இவையெல்லாம்'*என்றாரம்பித்து.* *'ஆகாஶஸ்த்தித: ஸர்வத்ரக:' (ஆகாசத்திலிருக்கிற, எல்லாஇடத்திலும் ஸஞ்சரிக்கிறதோ,) என்னும் பதங்களினால் பகவானொருவனாலேயே தரிக்கத்தகுந்ததா யிருக்கையும், நியமனம் செய்யத்தகுந்ததா யிருக்கையும், சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—*'ஆதாரமில்லாத ஆகாசத்தில்'*. என்று பெரிதாயிருக்கையும மற்றவர்களால் இப்படிச் செய்யமுடியாதென்று தெரிவிப்பதற்காகச் சொல்லப்பட்டது. அபிப்ராயத்திலிருக்கும் உதாஹரணத்தின் மாதிரியை விசதப்படுத்துகிறார்—*'ஆதாரமில்லாத அந்தக்காற்று'* என்றாரம்பித்து. எப்படி ஆதாரமில்லாத ஆகாசத்தில் பக்ஷியின் ஶரீரம் முதலியவைகள் ஒருவித சேதனனால் அதிஷ்டானம் செய்யப்படுகிறதோ, அப்படியே காற்று முதலியவைகளும், என்று தாத்பர்யம். *'அவர்களால் பார்க்கப்படாத'* என்பதினால் நமக்குத் தெரியாமையினால் அப்படியில்லை என்று சொல்லுவதை நிராகரிப்பதற்காக, கீழ்ச்சொல்லிய ஶ்ருதி முதலியவை*

ப்படுகிறதோ, இப்படியே எல்லாப்ராணிகளும் அவைகளால் பார்க்கப்படாத என்னிடத்தில் இருக்கின்றன, என்னாலேயே தரிக்கப்படுகின்றன, என்று தெரிந்துகொள். இப்படியே வேதம் தெரிந்தவர்கள் 'ஜ்யோதீம்ஷ்யாஸ்தாம் ஸரித்வஸ்த்ரீர் தோவீஷ்யாம: ஸுஸ்ரிதாநியமேயா: । விஷ்ணோர் விஶ்வம் பதி ரூபம்ணாவிஶ்ணுவி த்தா: ஸ ஸஸஞ்ஜிரேயா: ॥' என்று சொன்னார்கள். ஶாபா: என்பதற்கு வேறொருவருக்கும் ஸாதாரணமாகாத விஷ்ணுவினுடைய பெரிய ஆச்சர்யங்கள என்று அர்த்தம், ‡ ஓகார்கியே இந்த அக்ஷரத்தினுடைய நியமனத்தில் ஸூர்யன் சந்திரன் இவைகள்

*களிலேற்பட்ட பார்க்கத்தகாமையைக் காட்டியிருக்கிறது. பகவானைப் பற்றிய அனுமானத்தை ஒப்புக்கொள்ளாதவர்களுக்கு இந்த உதாஹரணம் காட்டுவது எப்படிப்பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—இப்படியே என்றாரம்பித்து. வேதத்தை அனுஸரித்ததான, இப்படிக்கு ஸம்பவிக்கும் என்கிற யுக்தியைக்காட்டுகிறதென்று தாத்பர்யம். 'வேதம் தெரிந்தவர்கள்' என்பதினால் அவர்களால் அத்யயனம் செய்யப்படுகிற வேதத்தின் அர்த்தத்தை விவரிக்கிறதிது, என்பது காட்டப்பட்டது. நம்போலியர்களுக்குத் தெரியாத காரணங்கள், ஒத்தாசைக்கருவிகள், ப்ரயோஜனங்கள், இவை முதலியவைகளையுடைய ஒரேக்ஷணகாலத்தில் எல்லாதிக்குக்களிலும் பரவுகிறமேகங்கள் உண்டாகுதல், எல்லா லோகங்களையும் மிதக்கச் செய்யக்கூடிய ஸமுத்திரத்தின் ஆகாசத்தையளாவிக்கிளம்புகிற அலைகள் கரையினருகில் அடங்கித் திரும்புதல், ஒரேவிதமான ஏற்பாட்டையுடைய கலைகளின் வ்ருத்தி, குறைவு, நுனிகள் உயர்ந்துதோன்றுதல், முதலிய சந்திரனுடைய பிரிவுகள், இவ்விதமாகவரும் என்று நம்மால் யோசிக்க முடியாததாய் புல், மலை, மரங்களின் கூட்டம், இவைகளை யெல்லாம் முறிக்கக்கூடிய பெருங்காற்று முதலியவைகள் உண்டாகுதல், நெருப்பு, ஸூர்யன், சந்திரன், முதலிய வெளிச்சமுள்ள வஸ்துக்களொன்றுமில்லாத மழைககாலத்தில் ராத்திரிகளில் முன்பின் நிமிஷங்களில் தெரியாத மின்னல்களின் பிரிவுகள், ஆதாரமில்லாத ஆகாசத்தில் மிகவும் பெரிதான ஸூர்யமண்டலம், ஒரேவிதமான ஏற்பாடுகளுடைய பகல், இரவு, மாஸம், அயனம், வருஷம், முதலியவைகளைக் காட்டும்படி ஸஞ்சரிப்பது, இப்படிப்பட்ட இன்னும் சில பரிவேஷம், க்ரஹணம், பச்சைவில், கல்மழை, மேகத்தின் கர்ஜனம், இடிவிழுதல், பூகம்பம், காற்*

‡ *மனுஸ்ம்ருதி*, 1-8.

தாங்கப்பட்டவைகளாக நிற்கின்றன' என்றும் இந்தப் பகவானிடத்தி லிருந்து பயத்தினால் காற்றுவீசுகிறது. பயத்தினால் சூர்யன் உதயமாகிறான் அக்னியும் இந்திரனும் இவனிடத்திலிருந்து பயத்தினால் (தன்தன்காரியங் களைச் செய்கிறார்கள்.) என்றும் அர்த்தமுள்ளவாக்யம் முதலியவைகளும் ஶ்ருதியிலிருக்கின்றன.

பா] மற்றொன்றையும் அபேக்ஷிக்காத பகவானுடைய ஸங்கல்பத்தினால் எல்லா வஸ்துக்களுடையவும் ஸ்த்திதியும், ப்ரவருத்தியும்,உண்டாகிறது என்று சொல்லப்பட்டது. அப்படியே அந்தப்பகவானுடைய ஸங்கல்பத் தினாலேயே எல்லாவஸ்துக்களுடைய உத்பத்தியும், லயமும்,உண்டாகிற து என்று சொல்லுகிறார்.—

**ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்।**
**கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம்॥ (7)**

ப-ரை] கௌந்தேய அர்ஜுன, ஸர்வபூதாநி எல்லாப்ராணிகளு ம், கல்பக்ஷயே கல்பம் முடியும்பொழுது, மாமிகாம் என்னுடையதான, ப்ரக்ருதிம் மூலப்ரக்ருதியை, யாந்தி-அடைகின்றன, தாநி-அந்தப்ராணிக ளையே, கல்பாதௌ-கல்பத்தினாரம்பத்தில், புந: புந: - மறுபடி மறு படியும், அஹம் நான், விஸ்ருஜாமி-அநேகவிதமாக ஸ்ருஷ்டிக்கிறேன். (7)

---

*றின் சுழல்கள், முதலிய மிகவும் ஆஶ்சர்யமான ஸ்வபாவமுடைய எல் லாம், எல்லாவற்றிலும் வ்யாபித்தவனையும், எல்லா ஶக்தியையுமுடை யவனையுமிருக்கிற விஷ்ணுவினுடைய விசித்திரங்களான வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கக் கூடிய ஶக்தியின லுண்டானவைகளாக இருக்கவேண் டும்,என்று இந்த ஶ்லோகத்திற்கு அர்த்தம். 'மாயா:' என்னும் பதம் பொய் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது என்பதை நிராகரிப்பதற் காகச் சொல்லுகிறார்---'விஷ்ணுவினுடைய' என்றாரம்பித்து. பொது வான ஸம்பந்தம் நியமிக்கப் பட்டதாயிருக்கை, ஆகிற விஶேஷத்தில் முடிவாகிறது, என்று ,தெரிவிப்பதற்காக 'இப்படியே வேதம் தெரிந்த வர்கள சொல்லுகிறார்கள்' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளபபட்ட அர்த்தத்தை விவரிக்கிறார்---'ஓ - கார்கியே' என்று நியமனமாவது இவ்விடத்தில் ஒருவிதமான ஸங்கல்பம்—*

பா] ஸ்த்தாவரம் ஜங்கமங்களாகிய எல்லா ப்ராணிகளும் தமஸ்ஸு என்னும் பதத்தினால் சொல்லக் கூடியதாயும் பேர்ருபம் இவைகளால் பிரிக்க முடியாததாயும் எனக்கு ஶரீரமாகவும் இருக்கிற ப்ரக்ருதியை ப்ரஹ்மாவின் ஆயுஸ்ஸு முடிவு பெறும் காலத்தில் என்னுடைய ஸங்கல்பத்தினால் அடைகின்றன. அந்த ப்ராணிகளையே கல்பத்தின் ஆரம்பத்தில் மறுபடி

---

தா] இவ்விடத்தில் ப்ரஸ்தாவமில்லாத ஸ்ருஷ்டியையும், ப்ரளயத்தையும் சொன்னதற்கு ஸங்கதி சொல்லுகிறார்—'மற்றொன்றையும்' என்று ஆரம்பித்து. ப்ரவ்ருத்தியும், என்பது, ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லி இருக்கிறது. 'மாமிகாம்' (என்னுடையதான) என்பதினால் 'ஶேஷம் என்பது ஏற்பட்டது. அதுவும் ஶரீரமாக இருப்பதினால், என்று 1'எவனுக்கு தமஸ் ஶரீரமோ' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினால் அறியப்பட்டது, ஆகையினால்—எனக்கு ஶரீரமாகவும் இருக்கிற' என்று சொல்லப்பட்டது. 'ஸர்வபூதாநி' என்னும் பதத்தினால் கார்யதசையை உடைய எல்லா வஸ்துக்களும் சேர்த்துச் சொல்லப்பட்டபடியினால்—'தமஸ் என்கிற பதத்தினால் சொல்லக்கூடியதாயும், என்று சொல்லப்பட்டது 2'தமஸ் ஒன்றாய்ச சேர்ந்து விடுகிறது' என்பதைக்காட்டி இருக்கிறது—பேர், ரூபம் இவைகளினால் பிரிக்க முடியாததாயும், என்று. 'ஸர்வபூதாநி' என்னும் பதத்தினாலும் 'ப்ரக்ருதிம் யாந்தி' என்று சொல்லி இருப்பதினாலும், மஹா ப்ரளயமே இவ்விடத்தில் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'ப்ரஹ்மாவின் ஆயுள் முடிவுபெறும் காலத்தில்' 'கல்பக்ஷயே' என்பதற்கு, ப்ரஹ்மாவின் கடைசியான, தினம் முடியும் பொழுது, என்று அர்த்தம். அன்றிக்கே கல்பங்களின் முடிவில் என்றும் சொல்லலாம். அதுவுமன்றிக்கே இவ்விடத்தில் கல்ப என்னும் பதம் ப்ரஹ்மாவின் ஆயுளைச் சொல்வதாகவுமாம். 3 'ஸம்ஹர்த்தா ச ஸ்வயம் ப்ரபு:' 4 'ஜகத்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய:' என்றிவை முதலானது சொல்லி இருக்கிறபடியினாலும், இவ்விடத்திலேயே 'புநர் விஶாமி' என்று சொல்லி இருக்கிறபடியினாலும், என்னுடையதான ப்ரக்ருதியை அடைகி

1. ப்ருஹதாரண்யகம்- 5-7-13.

2. ஸுபாலோபநிஷத்- 5.

3. விஷ்ணுபுராணம்- 1-2-67 ப்ரபு பகவான் ஸ்வயம்தானே ஹர்த்தா ச ஸம்ஹாரம் செய்கிறவனும்.

4. விஷ்ணுபுராணம்- 5-22-15. மனஸைவ-மனஸ்ஸினாலேயே, ஜகத்ஸ்ருஷ்டிம்- லோகங்களினுடைய ஸ்ருஷ்டியையும், ஸம்ஹாரம்ச- ஸம்ஹாரத்தையும், ய: எவன், கரோதி- செய்கிறானோ.

யும் அனேக விதங்களாக நான் ஸ்ருஷ்டிக்கிறேன். அப்படியே மனு * 'ஆஸீதிதம் தமோபூதம்' என்றும் 'ஸோऽபித்யாய ஶரீராத் ஸ்வாத்' என்றும்சொன்னார். ஶ்ருதியும் † 'எவனுக்கு அவ்யக்தம் ஶரீரமோ' என்றும், ‡ அக்ஷரம் அவ்யக்தத்தில் லயத்தை அடைகிறது' என்றும்அர்த்தமுள்ள வாக்யம் முதலியவைகளில் சொல்லி இருக்கிறது. ¶ தமஸ் இருந்தது முதலில் பரப்ரஹ்மம் தமஸ்ஸினால் மறைக்கப்பட்டது' என்றும் சொல்லி இருக்கிறது. 7

---

றேன், என்று அபிப்ராயம் அத்தைப்போல சொல்லுகிறார்—'என்னுடைய ஸங்கல்பத்தால் அடைகின்றன' என்று 'அந்த' என்பதற்கு அவைகளைப் போன்ற என்று அர்த்தம். இந்த அபிப்ராயத்தினாலேயே 'அந்த ப்ராணிகளையே' என்று சொல்லப்பட்டது. 1 'யதர்துஷ்வ்ருதுலிங்கானி நானாரூபாணி பர்யயே। த்ருஶ்யந்தே தானி தான்யேவ' என்பதைப் போல. எப்படி,குந்தியினுடைய ஶரீரத்திலிருந்து நீ பிறந்தது உன்னால் அறியப்படாமல் இருந்தாலும் ஆப்தர்களின் வார்த்தையினால் உறுதியாக அறியப்பட்டதோ, அப்படியே என்னுடைய ஶரீரத்தில் இருந்து உலகம் உண்டானது, என்பதை, என்னுடைய வார்த்தையினாலேயே நம்பக்கடவாய், என்று 'க்ஷேத்ரஜ்ஞ' என்பதின் அபிப்ராயம். எனக்கு ஶரீரமாகவும், தமஸ் என்னும் பதத்தினால் சொல்லக்கூடியதாயும் என்று, தான் சொன்ன அர்த்தத்தை, மருந்துபோல ஜனங்களுக்கு நன்மையைத்தரும் மனுவினுடைய வசனத்தினால் உறுதிப்படுத்துகிறார்—அப்படியே, என்று ஆரம்பித்து. 'ஆஸீதிதம்'என்பதுமுதல் ஏழு ஶ்லோகங்களில் நாராயணனே முதன்மையான காரணம் என்பதும், ப்ரஹ்மா முதலிய மற்றெல்லாம் அவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது என்பதும், வ்யக்தமாகச் சொல்லப்பட்டது, என்பதை அறியவேண்டியது காரணமான தஶையை அடைந்த அசேதன வஸ்துவும் பரமாத்மாவுக்குச் ஶரீரமானதையினால் மிகவும் வேறுபட்டது, என்கிற விஷயத்திலும் தமஸ், என்கிற பதத்தினால் சொல்லப்படுகிறது என்பதிலும், மனுவினால் விவரிக்கப்படுகிற ஶ்ருதியைக்காட்டுகிறார்—ஶ்ருதியும், என்று. 7

---

* மனுஸ்ம்ருதி-1-5. † ஸுபாலோபநிஷத் - 7. ‡ ஸுபாலோபநிஷத் - 2. ¶ அஷ்டகம் 8 ப்ரச்னம் 9 அனுவாகம்.

1 விஷ்ணுபுராணம், 1-6-65. யதா எப்படி ருதுக்களில் ருதுலிங்கானி ருதுக்களினடையாளங்கள், நானாரூபாணி-அனேகவிதங்களாகின்றனவோ,(அப்படியே) பர்யயே—கற்பங்களிலும், தானிதான்யேவ-அந்தந்த வஸ்துக்களே, த்ருஶ்யந்தே காணப்படுகின்றன.

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புன: புன:।
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்னமவஶம் ப்ரக்ருதேர்வஶாத் ॥ 8

ப-ரை] இமம் இந்த, ப்ரக்ருதே: ப்ரக்ருதியின், வஶாத் வசத்தினால், அவஶம் பராதீனமாக இருக்கிற, க்ருத்ஸ்னம் எல்லா, பூதக்ராமம் ப்ராணிகளின் கூட்டத்தை, ஸ்வாம் என்னுடையதான, ப்ரக்ருதிம் ப்ரக்ருதியை, அவஷ்டப்ய அதிஷ்டானம் செய்துகொண்டு, புன: புன: அடிக்கடி, விஸ்ருஜாமி விசித்திரமாக ஸ்ருஷ்டிக்கிறேன். ௮

பா] என்னுடையதான விசித்ரங்களான மாறுதல்களை உடைய ப்ரக்ருதியை அதிஷ்டானம்செய்து, எட்டுவிதங்களான பரிணாமங்களை அடையும்படியாகச்செய்து இப்படி நான்குவிதங்களான தேவதை, பசு, மனுஷ்யன், ஸ்தாவரம், இவைகளாகிய, என்னுடையதான மோஹத்தை உண்டாக்

---

தா] 'விஸ்ருஜாமி' என்று கீழே சொல்லபபட்ட ஸமஷ்டியும், வ்யஷ்டியுமாகிய ஸ்ருஷ்டியின் மாதிரி இநத ஶ்லோகத்தினால் தெரிவிக்கப்படுகிறது. 1 'விகாரங்களை உண்டாக்கக்கூடியதும், அறிவு இல்லாததும், எட்டு விதங்களான பிரிவுகளை உடையதும், உத்பத்தி இல்லாததும், அழிவு இல்லாததுமான இந்த ப்ரக்ருதியை, ஸங்கல்பிக்கிறார். 'அந்தப் பகவானால் அதிஷ்டானம் செய்யப்பட்ட ப்ரக்ருதி விஸ்தாரமாகச் செய்யப்படுகிறது. மறுபடியும் ஸ்ருஷ்டிக்காக ஏவப்படுகிறது. அந்தப பகவானாலேயே, அதிஷ்டானம்செய்யப்பட்ட ஆத்யந்தமில்லாத வ்யஷ்டி- ஸமஷ்டி ஸ்ருஷ்டிகளுக்குக் காரணமாகிய அநத ப்ரக்ருதி உலகததையும், புருஷார்த்தத்தையும் உண்டாக்குகிறது' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளை அனுஸரித்து இநத ஶ்லோகத்துக்கு அர்த்தம் சொல்லுகிறார்.—'என்னுடையதான' என்று உபாதான காரணமாகிய வஸ்துவைக்கர்த்தா, அங்கீகரித்தல், அதிஷ்டானம். அதாவது, தனக்கு இஷ்டமான கார்யததைச்செய்யத்தக்க மத்யமமான தசையை அடையும்படிக்குச் செய்தல்தான், என்கிற அபிப்ராயத்தினால், எட்டு விதங்களான பரிணாமங்களை அடையும்படியாகச்செய்து, என்றுசொல்லபபட்டது. 2 'பூமிராப:' என்றுஆரம்பித்து இநத எட்டுவிதங்களும் முன்னமே சொல்லப்பட்டது. இபபடித்தானகவே ஏற்பட்ட ஸமஷ்டி- ஸ்ருஷ்டியின்மாதிரி சொல்லப்பட்டது. 'பூதக்ராமம்' என்னும் பதம் இவ்விடத்தில் தேவதைமுதலிய ஜாதிகளை உடையவ்யஷ்டியான ஜீவாத்மாக்களின் கூட்டத்தைச் சொல்லுகிறது, அசேதனத்தைச் சொல்லுவதாயிருந்தால், 'ப்ரக்ருதேர்வஶாத் அவஶம்' (ப்ரக்ருதியின வஶத்தினால்

---

1 மாந்த்ரிகோபநிஷத். 2 - பகவத் கீதை - 7 - 4.

கக்கூடிய ஸத்வம் முதலிய குணங்கள் நிறைந்த ப்ரகிருதியின் வஶத்தினால் பராதீனப்பட்ட ப்ராணிகளின் கூட்டத்தை அந்தந்தக் காலங்களில் அநேகவிதமாக ஸ்ருஷ்டிக்கிறேன். 8

பா] இப்படிக்கு ஆனால் வ்யத்யாஸமாக ஸ்ருடித்தல் முதலிய காரியங்கள் தயை இல்லாமைமுதலிய தோஷங்களை உண்டாக்குவதினால் உம்மைத் தோஷத்திற்கு உள்ளாக்குமே? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்.—

**ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தனஞ்ஜய ।**
**உதாஸீநவதாஸீநம் அஸக்தம் தேஷு கர்மஸு ॥** 9

ப-ரை] தனஞ்ஜய ஓ அர்ஜுனா, தாநி அந்த, கர்மாணி ஸ்ருஷ்டி முதலிய காரியங்கள், உதாஸீநவத் உதாஸீனனாக இருப்பவன்போல,

பராதீனப்பட்ட) என்பதோடு அன்வயிக்காதாகையினால். அதின் உட்பிரிவுகளோடுகூடிய நான்கு விதங்களையும் சேர்த்துச் சொல்வதற்காக 'க்ருத்ஸ்நம்' என்னும் பதம். இவ்விதமாகக் கார்யமாக இருப்பதற்கும் ப்ரக்ருதிக்குவஶப்பட்டு இருப்பதற்கும், இந்தப்ராணிகள் தகுந்தவைகளாகஇருக்கின்றன, என்று காட்டுவதற்காக 'இமம்' (இந்த) என்று சொல்லிஇருக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'இந்த நான்கு விதமான' என்று இவை முதலியது சொல்லப்பட்டது. நான்குவிதம் என்பதை விவரிக்கிறார்.—'தேவதை' என்றாரம்பித்து. 'வ்ருக்ஷகுல்மலதாவீருத்' என்கிற இடத்தில் அபிப்ராயத்தில்கொள்ளப்பட்டதும் 1'வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேக:' என்கிற இடத்தில்நேராகவே சொல்லப்பட்டதுமான பராதீனமாக இருக்கைக்குக்காரணம் 'மோஹத்தை உண்டாக்கக்கூடியதுமான' என்று சொல்லப்பட்டது. அதற்கும காரணம் ஸத்வம் முதலிய குணங்கள்நிறைந்திருக்கைஎன்பது 2 'த்ரிபிர் குணமயைர்பாவை:' என்றிவை முதலிய இடங்களிற் சொல்லப்பட்டது. 'புந: புந:' (மறுபடி மறுபடி) என்பதினால் அவைகள் உண்டாவதற்கும் ப்ரளயத்தை அடைவதற்கும் தகுந்த இரண்டு பரார்த்தம், ஆயிரம் சதுர்யுகம் முதலிய ஏற்பாடுகளை உடைய ஆதியந்தமில்லாமல் ஒரேவிதமாகப் பெருகிக்கொண்டிருக்கும்காலத்தின் ஒருவித அளவுகள் சொல்லப்படுகின்றன, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்.—'அந்தந்தக் காலங்களில்' என்று. 'விஸ்ருஜாமி' என்பதற்கு அனேகவிதங்களாக ஸ்ருஷ்டிக்கிறேன், அதாவது விசித்திரங்களான பேர் ரூபம், இடம், காலம், அனுபவம் இவை முதலியவைகளை உடையவைகளாகச் செய்கிறேன் என்று அர்த்தம். 8

1 பகவத்கீதை - 9-12. 2-பகவத்கீதை-7-13.

உதாஸீநம் இருக்கிற, தேஷு அந்த, கர்மஸு ஸ்ருஷ்டி முதலிய காரியங்களில், அஸக்தம் பற்றுதல் இல்லாமல் இருக்கிற, மாம் என்னை, நிபத்நந்தி தோஷத்திற்குள்ளாக்காது. 9

பா] அந்த வ்யத்யாஸமான ஸ்ருஷ்டி முதலிய காரியங்கள், என்னிடத்தில், தயை இல்லாமை முதலியவைகளை உண்டாக்காது. ஏனெனில் ஜீவாத்மாக்களினுடைய முன்செய்த கர்மங்களே தேவன் முதலிய வ்யத்யாஸங்களுக்குக் காரணங்களாகையினால். நானேவெனில் அந்த வ்யத்

---

தா] 'நசமாம்' என்கிற இந்த ஶ்லோகம் புண்யபாபங்களாகிற கர்மங்களைப் பற்றியதல்ல. அது கீழே ப்ரஸ்தாவிக்கப்படாததாகையினாலே, அவைகளை 'தாநி' (அந்த) என்று சொல்வது பொருந்தாததாகையினால். ஸ்ருஷ்டி ஸம்ஹாரம முதலியவைகள் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்டபடியினால், அவைகளைச் சொல்வதே உசிதமாகும். அவைகளே தோஷம, என்பதும் ஸ்ருஷ்டிக்கப்படும் வஸ்துக்களின் தேவன் முதலிய வ்யத்யாஸங்களினால், என்றும் கீழே காட்டப்பட்டது. ஆகையினால் அதை நிராகரிப்பதற்காக இந்த ஶ்லோகம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—அப்படிக்கானால், என்று ஆரம்பித்தது. 'ஸ்ருஷ்டித்தல் முதலிய' என்கிற இடத்தில் முதலிய என்பதினால், காத்தல், ஸம்ஹரித்தல், பரிக்ஷித்தல், அநுக்ரஹித்தல் முதலியவை சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. 'தயை இல்லாமை முதலிய' என்னுமிடத்தில் இருக்கிற முதலிய என்னும் பதத்தினால், பக்ஷபாதம் உள்ளவனாக இருத்தல், மனவுறுதி இல்லாதவனாக இருத்தல் முதலியவை சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. 'நிபத்நந்தி' என்பதினால் ஸம்ஸாரமாகிய பந்தம் சொல்லப்படவில்லை. லோகத்தை ஸ்ருஷ்டித்தல் முதலியன ஸம்ஸாரத்திற்குக் காரணம் என்பது ஶ்ருதியில் சொல்லப்படாமையினாலும், மற்றவர்கள் சொல்லியபடி தர்மம் அதர்மம் இவைகளின் ஸம்பந்தம் உண்டு என்கிற ஸந்தேஹத்திற்கு ப்ரஸ்தாவமே இல்லாமையினாலும், பகவானுக்குக் கெட்ட ஸ்வபாவமிருந்தபோதிலும் வேறொருவன் நியமிக்கிறவன் இல்லாமையினாலும். ஆகையினால் தயை இல்லாமை முதலிய தோஷங்களின் ஸம்பந்தமே இவ்விடத்தில் ஸந்தேஹிக்கப்பட்டது. அதுவே தடுக்கப்படுகிறது, என்று சொல்லுகிறார்.—'என்னிடத்தில்' என்று ஆரம்பித்து 'ச' என்பது, ஸந்தேஹத்தின் நிவ்ருத்தியைக்காட்டுகிறது. ஸ்ருஷ்டியில் வ்யத்யாஸம உண்டாவதற்குக்காரணமாக நினைக்கப்பட்டதைச் சொல்லுகிறார்.

யாஸங்களில் பற்று இல்லாதவன். அந்த விஷயத்தில் உதாஸீனன்போல இருப்பவன். இப்படியே ஸூத்ரக்காரரும் † 'வைஷம்யநைர்க்ருண்யே **ந ஸாபேக்ஷத்வாத்** ‡ **ந கர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத்**' என்றும் சொல்லி இருக்கிறார். 9

'ஏனெனில்' என்று ஆரம்பித்து. 1 '[illegible]' 2 'கர்மபிர்ப்ராமிதா: [illegible]', 3 'ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா ஜகதந்தர்வ்யவஸ்திதா:। ப்ராணிந: கர்மஜநிதஸம்ஸாரவசவர்த்திந:॥ 4 'வாசிகை: பக்ஷிம்ருகதாம்.' 5 'அவித்யா கர்மஸம்ஜ்ஞாந்யா த்ருதீயா சக்திரிஷ்யதே। யயா க்ஷேத்ரஜ்ஞசக்தி: ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வகா॥ ஸம்ஸாரதாபாநகிலாநவாப்நோத்யதி ஸந்ததாந்। தயா திரோஹிதத்வாச்ச சக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா॥ ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்ததே' என்றிவைமுதலிய வசனங்களினால்இவ்வர்த்தம் ஏற்பட்டது. 'தேஷு கர்மஸாபேக்ஷம்' என்கிற இடத்தில, தனக்குக்கர்த்ருத்வம் இல்லை, என்கிற ப்ரமம் உண்டாகும், அதை நிராகரிப்பதற்காக 'அந்த வ்யத்யாஸங்களில், என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டது. 'பற்றுதல் இல்லாதவன், என்பதற்குக் காரணமாக இருக்கையாகிற ஸம்பந்தம் இல்லாதவன், என்று அர்த்தம். அப்படிப்பற்றுதலில்லாமைக்கு உதாஹரணம் சொல்லப்படுகிறது. உதாஸீனன் போல, என்று.எப்படி ஒருகாரியத்தில் உதாஸீனனாக இருப்பவன் அதில் காரணமாக இருக்கையாகிற ஸம்பந்தம் இல்லாமல் இருப்பானோ, அப்படியே இந்தப பகவான் கர்த்தாவாக இருந்தபோதிலும், அந்த வ்யத்யாஸம் என்கிற பாகத்தில் உதாஸீனன்போல இருக்கிறான் என்று அர்த்தம். இத்தால் கர்மங்களை அனுஷ்ட்டிக்கும்பொழுது அதின்வ்யத்யாஸங்களில் பகவான்

† முதல் வாலயூம் 345-பக்கம் 1 புட்னோட்டைப்பாக்க.

‡ 345-பக்கம் 2 புட்னோட்டைப்பாக்க!

1 முதல்வால்யூம் 498 பக்கம் புட்னோட்டைப்பார்க்க.

2 முதல்வால்யூம் 499 பக்கம் 3 புட்னோட்டைப்பார்க்க.

3 விஷ்ணுதர்மம் 104 அத்யாயம் 23 ஆப்ரஹ்ம ப்ரஹ்மா முதல ஸ்தம்பபர்யந்தா: புழுவரையிலுள்ள ஜகதந்தர்வ்யவஸ்திதா: உலகங்களுக்குள்பட்ட பிராணிந: ப்ராணிகள் கர்மஜநித ஸம்ஸார வசவர்த்திந: கர்மத்தினால் உண்டாக்கப்பட்ட ஸம்ஸாரத்திற்கு வசப்பட்டவைகள்.

4 மனுஸ்ம்ருதி 12-9 வாசிகை: வாயினாலுண்டாகும் பாவங்களினால் பக்ஷிம்ருகதாம் பக்ஷியாயும் ம்ருகமாயும் இருக்கையை (அடைகிறான்.)

5 முதல்வால்யூம் 609 பக்கம் 1 புட்னோட்டைப்பார்க்க.

ஊயாயூ`ெக்ஷண ஓுகூுதிஃ ஸூயெதெ ஸசுராசுரமு |
ஹெதுநாநெநந களென்தெய ஜகஷி வுரிவதுதெதெ|| 10

ப-ரை] 'களெஞெய' குந்தியின் குமாரனுன அர்ஜுனா, 'ஓுகூுதிஃ'— ப்ரக்ருதியானது, 'அயூ`ெக்ஷண' எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷமாகப் பார்க்கிற, 'ஊயா' என்னுலே, (பார்க்கப்பட்டதாய்க் கொண்டு) 'ஸசுராசுரம்' ஸ்த்தாவர ஜங்கமங்களோடுகூடிய (லோகத்தை) 'ஸூயதெ'உண்டாக்குகிறது, 'அநெந' இந்த, 'ஹெதுநா' காரணத்தினுல், 'ஜகத்'லோகமானது, 'வுரிவதுதெதஹி' மாறிமாறி வருகிறதல்லவா, 10

பா] ஆகையினுல் ஜீவாத்மாக்களின் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸத்ய ஸங்கல்பனுயும், எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷமாகப்பார்க்கக்கூடிய வனுமான, என்னுல், பார்க்கப்பட்டதும், என்னுடையதுமான ப்ரக்ருதி ஜங்கமஸ்த்தாவரங்களுடன்கூடிய உலகத்தை உண்டாக்குகிறது.இந்தஜீவாத்மாக்களின் கர்மங்களுக்குத் தக்கபடி என்னுடைய பார்வையாகிற காரணத்தினுல் லோகம் மாறிமாறி வருகிறது ஆகையினுல் நான் எஜமானன் என்பதும், ஸத்ய ஸங்கல்பன் என்பதும், தயை இல்லாமை முதலிய தோ

---

*தா]உதாஸீனனுகஇருக்கிறுன்; என்பதுசொல்லப்படுகிறது. வ்யத்யாஸமான ஸ்ருஷ்டி கர்மங்களை ।அபேக்ஷிக்கிறது, என்கிற விஷயத்திலும ஜீவாத்மாக்களும் அவரவர்களின் காமங்களுடைய வரிசைகளும் அனுதியாகையினுல் அவைகள் ப்ரளயகாலத்திலும் இருக்கின்றன, என்கிற விஷயத்திலும், இரண்டு ஸூத்ரங்களை ப்ரமாணமாகக் காட்டுகிறுர்— 'இப்படியே' என்று ஆரம்பித்து.* 9

*வ்யத்யாஸமான ஸ்ருஷ்டி அவனவன் கர்மங்களுக்கு அனுகுணமாக இருந்ததேயானுல், மாறுதலை அடைதலையே ஸ்வபாவமாக உடைய ப்ரக்ருதியே அவரவர் கர்மங்களுக்குத் தக்கபடி மாறுதலை அடையட்டுமே, உம்மால் என்ன ப்ரயோஜனம் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் இந்த ஸ்லோகத்தினுல் சொல்லபபடுகிறது. 'ஸவுூஹூ தாநி' என்று ஆரம்பிக்கப்பட்ட ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் தன்னுடைய ஸங்கல்பத்திற்கு வஸப்பட்டு நடக்கின்ற, என்பதை முடிக்கிறது, இந்த ஸ்லோகம், என்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறுர்—ஆகையினுல், என்று. 'ஊயாயூ`ெக்ஷண' என்கிற இரண்டு பதங்களின் அபிப்ராயத்தினுல் ஏற்பட்டதும் ஸ்ருதியில் சொல்லப்பட்டதுமான அர்த்தத்தைச் சொல்லுகிறுர்.—'ஸத்யஸங்கல்பனுயும்'என்று ஆரம்பித்து,பார்க்கப்பட்*

ஷங்கள் அற்றவன் என்பதும், மற்றுமிவை முதலிய, வஸுதேவருக்குப் பிள்ளையாக அவதாரம் செய்த என்னுடைய பகவானுக்கு அஸாதாரண மான ஸ்வபாவங்களைப் பார். அப்படியே ஶ்ருதியிலும் † மாயைக்கு எஜ மானனாகிய பகவான் இந்த ப்ரக்ருதியிலிருந்து இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ரு

---

டதும், என்கிற வரையிலும். "1 கர்மங்களைப்ரத்யக்ஷமாக அறிகிறவனு ம், எல்லா ப்ராணிகளுக்கும் இருப்பிடமானவனும்" என்றும், 2 'எவன் இந்த ப்ரபஞ்சத்தை ப்ரத்யக்ஷமாகப் பார்க்கிறானோ' என்றும் 3 'அவன் ப்ரக்ருதியை ஸங்கல்பிக்கிறான், அவனால் அதிஷ்டானம் செய்யப்பட்ட ப்ரக்ருதி' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகள் இங் கே நினைக்கத்தக்கவைகள். அதிகமாக அனுபவிக்கிறபடியினால் அத்ய க்ஷன் என்று சொல்லபபடுகிறான், என்று சிலர் சொல்லுகிறார்கள். அந்த அர்த்தத்திலும் இந்த உலகத்தை என்று சேர்த்துக் கொள்ள வேண்டியது. முதல் பாதியில் சொல்லியிருக்கும் 'ஸசராசரம்' என் னும பதமானது, மேல் பாதியில் சொல்லியிருக்கும் 'ஜகத்' என்ப தோடும் அன்வயிக்கிறது என்கிற அபிபராயத்தினால், 'ஸ்தாவரஜங்க மங்களோடே கூடிய உலகத்தை' என்று சொல்லப்பட்டது. 'ஸூயதே' என்னும் பதத்தினால், 3 'ப்ரயோஜனங்களை உண்டாக்குகிறது' என்று அர்த்தமுள்ளஶ்ருதிவாக்யம் ஞாபகப்படுத்தப்பட்டது முன்பாதியில், ஸ்ருஷ்டிக்குக் காரணமாகச் சொல்லப்பட்டதே மேல்பாதியிலும் ஸம் ஹாரத்திற்குக் காரணமாக 'ஹேதுநாநேந' (இந்தக்காரணத்தினா ல்) என்று சொல்லத்தக்கதே யல்லாமல், ப்ரதானமாகச சொல்லப்பட்ட ஸ்ருஷ்டி சொல்லத்தக்கதல்ல. அது ப்ரளயம் முதலியவைகளைக் குறி த்துக் காரணமல்லவாகலால், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகி றார்.—'இந்த' என்று ஆரம்பித்து. இத்தால் இவ்விடத்தில் அத்யக்ஷ என்னும் பதம் விகாரமில்லாத ஜ்ஞானம் மாத்திரத்தைச் சொல்லுகி றது, என்று சொல்லுகிறவர்கள் 4 நிராகரிக்கப்பட்டார்கள். கர்மவஶ த்தினால் ஜீவர்களுக்கு போஷமாகிய இந்த உலகத்திற்கு நீர்எஜமானன் என்பது எவ்வாறு பொருந்தும்? மிகுந்த கருணை உடையவனாக இரு ந்தபோதிலும் கர்மங்களை அனுஸரித்துத் துக்கத்தை உண்டாக்குகிற

---

† சவேதாச்வதரம் 4 9,10

1 ச்வேதாச்வதரம் 6 11. 2 ருக்வேதம் 7-7-10. 3 மாந்திரிகோபநிஷத் 3 5.

4 கீழ்ச்சொல்லிய ப்ரமாணஙகளினால் பகவான் இதை அதிஷ்டானம் செ ய்கிறான் என்று ஏற்படுகிற படியினால்

ஷ்டிக்கிறன். அந்த ப்ரபஞ்சத்தில் மற்றொருவன் மாயையினால் தடுக்கப் பட்டிருக்கிறன் மாயையை ப்ரக்ருதி என்று அறியவேண்டும்; மாயியை மஹேஶ்வரன் என்று அறியவேண்டும். என்று அர்த்தமுள்ள வாக்யமும் சொல்லப்பட்டிருக்கிறது. 10

**அவஜாநந்தி மாம் மூடா: மாநுஷீம் தநுமாஶ்ரிதம் |**
**பரம் பாவமஜாநந்தோ மம பூதமஹேஶ்வரம் ||** 11

ப-ரை] மூடா: அறிவில்லாதவர்கள், மாநுஷீம் மனுஷ்யர்களுடையதாகிய, தநும் ஶரீரத்தை, ஆஶ்ரிதம் அடைந்திருக்கிற, பூதமஹேஶ்வரம் ப்ராணிகளுக்கு ஈஶ்வரனாகிய, மாம் என்னை, பரம் உயர்ந்த, பாவம் ஸ்வபாவத்தை, அஜாநந்த: தெரிந்து கொள்ளாதவர்களாய், அவஜாநந்தி அவமதிக்கிறார்கள். 11

---

உமக்கு ஸத்ய ஸங்கல்பனாக இருக்கை எவ்வாறு பொருந்தும், என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'நான் எஜமானன் என்பதும்' என்று ஆரம்பித்து 'பரஶ்ஶரீரம்' என்று கீழே ஆரம்பித்ததை நிரூபிக்கிறது இது, என்று தெரிவிப்பதற்காக 'என்னுடைய' என்பது முதல் சொல்லப்பட்டது. 'அவஜாநந்திமாம்' என்கிற மேல் ஶ்லோகத்திலிருக்கும் 'மம' என்கிற பதத்தை நினைத்துக்கொண்டதினால் இங்கும் 'மம' (என்னுடைய) என்று சொன்னது, எல்லையில்லாத ஸாமர்த்யனாக இருக்கும் தன்மையினால் மறைக்கப்பட்ட ஈஶ்வரனாக இருக்கும் தன்மையை உடைய இந்த க்ருஷ்ணாவதாரத்தை நினைக்கிறது. என்று நினைத்து 'வஸுதேவருக்குப் பிள்ளையாக அவதாரம் செய்த' என்று சொல்லப்பட்டது. இத்தால் 'மநுஷ்யத்வேபரத்வம்' என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்தின்பாகம் நினைக்கப்பட்டது. 'யுஜ்யதே' (பகவானிடத்தில் பொருந்துகிறது) என்கிற வ்யுத்பத்தியினால் தான் எஜமானனாக இருக்கை முதலியதும் இவ்விடத்தில் 'யோக' என்னும் பதத்திற்கு அர்த்தம், என்று சொல்லப்பட்டது. ப்ரக்ருதி பகவானுக்கு வஶப்பட்டு மாறுதலை அடைகிறது, என்பதிலும் ஜீவாத்மாக்கள் அவரவர்கள் கர்மங்களுக்குத் தக்கபடி ப்ரக்ருதிக்கு வஶப்பட்டு இருக்கிறார்கள் என்பதிலும் ஶ்ருதியை ப்ரமாணமாக உதாஹரிக்கிறார்.—'அப்படியே' என்று ஆரம்பித்து 10

1 கீதார்த்த ஸங்க்ரஹம் 13.

பா] இப்படி எல்லாப்ராணிகளுக்கும் ஈஶ்வரனுகவும், எல்லாம் தெரிந்தவனுகவும், ஸத்யஸங்கல்பனுகவும்,எல்லாலோகங்களுக்கும் ஒரேகாரணமாகவும், மிகுந்த கருணையை உடையவனுதலால் எல்லோராலும் ஆஶ்ரயிக்கத்தகுந்தவனுவதற்காக மனுஷ்யர்களின் ஶரீரத்தைஅடைந்தவனுகவும் இருக்கிற என்னைத்தங்களால்செய்யப்பட்ட பாபகர்மங்களினுல் மூடர்களாக இருப்பவர்கள் அவமதி செய்கிருர்கள். ஸாதாரண மனுஷ்யர்களுக்கு ஸமமாக நினைக்கிருர்கள், அதாவது எல்லா ப்ராணிகளுக்கும்

---

தா] மஹாத்மாக்களின் விஶேஷத்தைச்சொல்லுவதற்காக இந்த இரண்டு ஶ்லோகங்களினுல் மூடர்களின் ஸ்வபாவம் சொல்லப்படுகிறது. கீழ் ப்ரஸ்தாபித்ததோடு ஸங்கதி சொல்லவேண்டியதற்காக 'இப்படி' என்று சொல்லப்பட்டது. 'ஸ-ஹஸ்ரஶோ' என்னும் பதம் 'ஶாஸ்வ' என்னும் பதத்திற்கு விஶேஷணம் என்று சொல்வது பொருந்தாதாகையினுல், தூரத்திலிருந்தபோதிலும் அதற்கு 'ஶோ' என்பதோடு அன்வயம் சொல்லவேண்டும். 'ஸ-ஹஸ்ரஶோ' என்கிற பதத்தில் அபிப்ராயத்திலேற்பட்ட அர்த்தத்தைச்சொல்லி இருக்கிறது—'எல்லாம்தெரிந்தவனுகவும்' என்பது முதல். 'மனுஷ்யர்களுடையதாகிய' என்பதற்கு மனுஷ்யர்களுடைய ஶரீரத்தைப்போன்ற அமைப்பை உடைய, என்று அர்த்தம். எப்படிப் பொன்குடம், மண்குடம், இவ்விரண்டும் வஸ்து வெவ்வேருக இருந்தபோதிலும் அமைப்பு ஸமமாக இருக்கிறதோ? அவ்விதமாகவே இவ்விடத்திலும். இதுவும் மத்ஸ்யம் முதலியவைகளின் ஶரீரத்தை அடைந்து இருத்தலையும் குறிக்கிறது. மூடனுக இருக்கையும் பகவானுல் உண்டானதாகையினுல், அதினுலுண்டான தோஷத்தை விலக்குவதற்காக — 'தங்களால் செய்யப்பட்ட பாபகர்மங்களினுல்' என்று சொல்லப்பட்டது. அவமானம் செய்வதற்குக் காரணத்தைச்சொல்லுகிருர்.—'ஸாதாரண'என்று ஆரம்பித்து. 'ஶாஸ்வதனுஸ்ரிதம்' என்பதினுல் ப்ரமிக்கக் காரணமாகிய பேதம் தெரிந்துகொள்ளாமை சொல்லப்படுகிறது. 'பரம்பாவம்' 'ஜாநந்தோ' என்பதினுல் மற்றொன்றைப்போலிருக்கை சொல்லப்படுகிறது. இவை இரண்டுகளாலும் ஸாதாரணமான மனுஷ்யனுக்கு ஸமமானவன், என்கிற ப்ரமம் ஏற்படுகிறது. அதனுல், நேராகத் தெரியும் மேன்மையை எவ்விதத்திலாவது மறைத்துத் தாழ்வைச் சொல்வதாகிய அவமதிப்பு உண்டாகிறது. இவை எல்லாவற்றையும் விஶதப்படுத்துகிருர்.—'அதாவது'என்று ஆரம்பித்து. மனுஷ்யனுனதஶையை

ஶ்வரனாகிய என்னுடைய எல்லையில்லாத கருணை, ஔதார்யம், ஸௌஶீல்யம், ப்ரீதி. இவைகளைக்காரணமாகக்கொண்டு மனுஷ்யனான தசையை அடைந்திருப்பதாகிய இந்த மேலான ஸ்வபாவத்தைத் தெரிந்து கொள்ளாதவர்களாய் மனுஷ்யனான தசையை அடைந்திருக்கிற மாத்ரத்தினால், என்னை மற்றவர்களுக்கு ஸமமாக எண்ணி அவமதிக்கிறார்கள், என்று அர்த்தம். 11

**மோகாஶா மோககர்மாணோ மோகஜ்ஞாநா விசேதஸ:।**
**ராக்ஷஸீமாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ஶ்ரிதா:॥12**

ப-ரை] மோஹிநீம் மோகத்தை யுண்டாக்குகிற, ராக்ஷஸீம் ராக்ஷஸர்களுடையதாயும், ஆஸுரீம் சைவ அஸுரர்களுடையதாயுமிருக்கிற, ப்ரக்ருதிம் ஸ்வபாவத்தை, ஶ்ரிதா: அடைந்தவர்கள், மோகாஶா: வீணான ஆசையையுடையவர்களாகவும், மோககர்மாண: வீணான காரியங்களையுடையவர்களாகவும், மோகஜ்ஞாநா: வீணான ஜ்ஞானத்தையுடையவர்களாகவும், விசேதஸ: ஜ்ஞானமில்லாதவர்களாகவும், (ஆகிறார்கள்.) 12

பா] மனுஷ்யனாக அவதரித்திருக்கும் பொழுதே மிகுந்த தயை முதலிய என்னுடைய மேன்மையை மறைக்கிற ராக்ஷஸர்களுடையதாகவும்

---

*அடைந்து இருப்பதாகிய' என்பதற்குத் தன்னுடைய ஸ்வபாவங்களை விடாமல், மற்றொருவருக்கும் ஸாதாரணமில்லாத இப்படிப்பட்ட மனுஷ்யனான தசையை அடைதலும் வாஸ்தவத்தில் மேன்மையின் மேலேயே சேர்ந்தது, என்று தாத்பர்யம்.* 11

தா] *இந்த ஶ்லோகத்தினால் கீழ் ப்ரஸ்தாவித்ததற்குக் காரணமும் ப்ரயோஜனமும் சொல்லப்படுகிறது. மோஹத்தை யுண்டாக்குகிற ஸ்வபாவத்தை யடைந்திருக்கையன்றோ ப்ரயோஜனமில்லாத ஆசையையுடையவர்களாயிருக்கை முதலியவற்றுக்குக் காரணம் ஆகையினால மேல்பாதிக்கு முதலில் வ்யாக்யானம் செய்கிறார். 'ராக்ஷஸீம்' ராக்ஷஸர்களுடையதாகிய, தமோகுணம் மேலிட்ட 'ஆஸுரீம்' அஸுரர்களுடையதாகிய ரஜோகுணம் மேலிட்ட அதாவது கோபம் லோபம் இவைகள் நிறைந்த என்று அர்த்தம். 'ப்ரக்ருதிம்' என்பதற்கு ஸ்வபாவத்தை என்று அர்த்தம்.* 1 'யஜந்தே ஸாத்த்விகா தேவாந் யக்ஷரக்ஷாம

---

1 பகவத்கீதை. 17-4

அஸுரர்களுடையதாகவு மிருக்கிற ஸ்வபாவத்தை அடைந்தவர்கள் ப்ர யோஜநமில்லாத ஆசையை யுடையவர்களாகவும், ப்ரயோஜநமில்லாத ஆரம்பங்களை யுடையவர்களாகவும், என்னைச் சேர்ந்த ஜங்கம ஸ்த்தாவர ங்களாகிய எல்லா வஸ்துக்களின் விஷயத்திலும் மாறான ஜ்ஞானத்தை யுடையவர்களாதலினால் ப்ரயோஜநமில்லாத ஜ்ஞானத்தை யுடைய

---

ஸிராஜஸா:।ஸூத்ராந் ஷேத்ரமணாம் ஸ்வாந்யஜநைதாஸாஜநா:'
1 'ஐந்யக்ஷாம் ராக்ஷஸம் க்ருபயாதாஸோத்கடு। யஸ்மாக்ஷூீவ ஸிஹாவிந்தம்பாண்டவனுயநஞ்ஜயம்' என்றிவை முதலிய இடங்களிலே போல இங்கும் கண்டுகொள்வது. 'மோஹிநீம்' (மோஹத்தையுண் டாக்குகிற) என்பதினால் பகவானுடைய மேன்மையை மறைப்பது முதலியவை நினைக்கப்பட்டன. 'மோகாஶா:' என்கிற பதத்திற்குள் ளடங்கியிருக்கு மிரண்டு பதங்களுக்கும் அர்த்தம் சொல்லியிருக்கி றது—'ப்ரயோஜநமில்லாத' என்றாரம்பித்து. ப்ரயோஜனமுண்டாகும் வரையிலும் கர்மங்களின் ஸ்வரூபமே ஸித்திக்காது, என்கிற அபிப்ரா யத்தினால் 'ப்ரயோஜநமில்லாத ஆரம்பத்தை யுடையவர்களாகவும்' என்று சொல்லப்பட்டது. ஆரம்பம் முதல் ப்ரயோஜன மற்ற வ்யா பாரத்தை யுடையவர்கள், என்றர்த்தம். ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜன மில்லாமையாவது தனக்குத்தான் ஸ்வாதீனமாக ப்ரவ்ருத்திப்பதாகிய, தான் எண்ணியிருந்த ப்ரயோஜனமில்லாமை. அதுவும் அந்த ஜ்ஞா னம் உண்மையல்லவாகையினால் உண்டானது, அதற்கு விஷயம் இன்னதென்று விஶேஷித்து குறிக்காமையினால் எல்லாவற்றையும்பற் றியது என்பதே உசிதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'என்னைச்சேர்ந்த' என்றாரம்பித்து. ஜ்ஞானம் மாறாகயிருக்கையாவது; ஸ்வாதீனமில்லாத ஆத்மாவை ஸ்வாதீனம் என்கையும், மற்றொருவ னுக்கு ஶேஷமாகிய ஆத்மாவைத் தனக்கு ஶேஷமென்கையும், தனக் குத்தானே ப்ரகாஶமாகவும் நித்யமாகவும் இருக்கும் ஆத்மாவை ஜடம் அநித்யம் என்கையும், அஸ்திரமான தேஹத்தை ஸ்திரமான ஆத்மா என்கையும், இவை முதலியவைகளும் என்றறிந்துகொள்ள வேண்டி யது. 'மோகஜ்ஞாநா:' (ப்ரயோஜனமில்லாத ஜ்ஞானத்தை யுடைய வர்களாகவும்) என்பதினால் ஒருவகையான ஜ்ஞானமுண்டென்று

---

1யஸ்மாத் எந்தக்காரணத்தினால் கோவிந்தம் க்ருஷ்ணனையும் பாண்டவம் பா ண்டுவின் பிள்ளையாகிய தநஞ்ஜயமச அர்ஜுனனையும் க்ஷிபஸி நிந்திக்கிறாயோ (ஆகையினால்) த்வாம் உன்னை தாமஸாத்மகம்தமோ குணம்மேலிட்ட ராக்ஷஸம் ராக்ஷஸனாக மந்யே. எண்ணுகிறேன்.

வர்களாகவும், அப்படியே எல்லா விஷயத்திலும் உண்மையான ஜ்ஞான மில்லாதவர்களாகவும், (ஆகிறுர்கள்) எல்லாவற்றிற்கும் ஈச்வரனுகிய என்னை மற்றவர்களுக்கு ஸமமாகவெண்ணிஎன்னைப்பற்றி என்ன செய்ய வேண்டும் என்று ஆசைப்படுகிறுர்களோ, எதை உத்தேசித்துக் காரியங் களைச் செய்ய ஆரம்பிக்கிறுர்களோ, அவையெல்லாம் ப்ரயோஜன மற்ற தாய் விடுகிறது, என்றர்த்தம். 12

𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃।
𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥ 13

ப-ரை] 𑌪𑌾𑌰𑍍𑌥 அர்ஜுன, 𑌦𑍈𑌵𑍀𑌂 தேவதைகளுடையதாகிய, 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 ஸ்வபாவத்தை, 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 அடைந்திருக்கிற, 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 மஹாத்மாக்களோ வெனில், 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌂 எல்லா ப்ராணிகளுக் கும் காரணமாகியும், 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 அழிவில்லாதவனுகவுமிருக்கிற, 𑌮𑌾𑌂 என் னை, 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 அறிந்துகொண்டு, 𑌅𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑌃 வேறு விஷயத்தில் மன தைச் செலுத்தாதவர்களாய், 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 பக்திசெய்கிறுர்கள். 13

---

*சொல்லப்பட் டிருக்கிறபடியினுலும் அதினுலேயே ஜ்ஞானத்திற்குக் காரணமே இல்லை என்று மறுபபதும் முடியாதாகையினுல்'𑌵𑌿𑌚𑍇𑌤𑌸𑌃' என்று மறுத்தது கீழ்க்குறித்த ப்ரயோஜனமில்லாத ஜ்ஞானம் தவிர மற்ற ஜ்ஞானமில்லை என்று காட்டுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர்—'*அப்படியே எல்லாவிஷயத்திலும் உண்மையான ஜ்ஞா னமில்லாதவர்களாகவும்'*என்று. ப்ரயோஜனமில்லாத ஆசையையுடைய வர்கள் என்பது முதலியவை ஏறபடாது. ஏனெனில்? ஸ்வர்கம் பசு முதலிய இஷ்ட பலங்கள் ஸித்திக்கிறபடியினுலும், அவைகளுக்கு உபா யங்களாகிய யாகம் முதலியவைகளைபபற்றி உண்மையான ஜ்ஞான முண்டாகிறபடியினுலும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல் லுகிறுர்—*'எல்லாவற்றிற்கும்' *என்றூரம்பித்து. இவ்விடத்தில் உண் மையான ஜ்ஞானமில்லாமையினுல் ப்ரயோஜனமற்ற ஜ்ஞானத்தை யுடையவர்களாகையும், அதினுலேயே ப்ரயோஜனமில்லாத ஆசையை யுடையவர்களாகையும், ப்ரயோஜனமில்லாத ஆரம்பத்தை யுடையவர்க ளாகையும் உண்டாகிறது என்று வரிசைக்ரமம் அறியவேண்டியது.* 12

பா] எவர்கள் தங்களால் செய்யப்பட்ட புண்யங்களின் கூட்டத்தினுல் என்னையே ஶரணமாக அடைந்து எல்லாப் பாவங்களின் பந்தத்தைப் போக்கிக் கொண்டவர்களாகி தேவதைகளினுடையதான ஸ்வபாவத்தை அடைந்த மஹாத்மாக்களோ; அவர்கள் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத,பேர்,வ்யாபாரம், ஸ்வரூபம்,இவைகளையுடையவனும்,மிகுந்த தயையையுடையனுவகயினுல் ஸாதுக்களைக் காப்பாற்றுவதற்காக மனுஷ்யானுக அவதாரம் செய்துமிருக்கிற என்னை அறிந்துகொண்டு என்னிட

---

தா] இப்படி உம்மை அவமானம் செய்வதற்குப் ப்ரவ்ருத்தி செய்கிற மூடர்கள் நிறைந்த இந்த லோகத்தில் உம்முடைய அவதாரம் ப்ரயோஜன மற்றது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக, தன்னுடைய அவதாரத்தை ப்ரயோஜனத்தோடு கூடியதாகச செய்கிற மஹாத்மாக்களின் நடத்தையைச் சொல்லுகிற வ்யாஜத்தினுல் இந்த ஶ்லோகத்தினுல் பக்தியை ப்ரஸ்தாவிக்கிருர்:—:'மஹாத்மாநঃ' என்னும் பதத்தினுலும் 'து' என்பதினுலும் ஏற்பட்ட பக்தி செய்வதற்குக் காரணமாகிய மேன்மையைக் காட்டிக்கொண்டு இந்த ஶ்லோகத்தில் அனுவாதம் செய்யப்படுகிற பாகம் விதிக்கப்படுகிறபாகம் இவைகளைப் பிரித்துக்காட்டுகிருர்:—'எவர்கள்' எம்ருரம்பித்து 1 'ஜநாஸ்ஸுக்ருதிநঃ 2 'மாமேவயே ப்ரபத்யந்தே' என்றிவை முதலாக முன்பு சொன்னதை ஞாகப்படுத்துகிருர்—'தங்களால்செய்யப்பட்ட புணயங்களின் கூட்டத்தினுல் என்னையே ஶரணமாக அடைந்து' என்று. 'தேவதைகளினுடைய தான' என்பதற்கு ஸத்வகுணம் மேலிட்ட என்றர்த்தம்'ஶ்ரிதாঃ' என்பதினுல் நாம் உபாஸனம் செய்யமுடியாத மேன்மை சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிருர்—'வாக்குக்கும் மனதிற்கும்' என்ருரம்பித்து. 'மாம்' என்பதினுல் அவதாரம் வரையிலும் வருகிற ஸௌலப்யமிருக்கும் தன்மையைக் காரணத்துடன் சொல்லுகிருர்—'மிகுந்த தயையை யுடையவனுகையினுல்' என்ருரம்பித்து. அவதாரம் தயை முதலியவைகளைக் காரணமாகவுடையது, கர்மத்தைக் காரணமாகவுடையதல்ல ஆகையினுல் அதில் ஜ்ஞானத்தின் சுருக்கம் முதலியவைகளில்லாமை 'அவ்யயம்' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறது. வேறு விஷயத்தில் மனதைச் செலுத்தாம லிருத்தலைக் காரணத்துடன் விவரிக்கிருர்—'என்னிடத்தி

---

1 பகவத்கீதை 7-16.　2 பகவத்கீதை 7-14.

த்தில் உண்டான ப்ரீதியின் மிகுதியினால் என்னைக்குறித்து பக்திசெய்யா விடில் தங்களுடைய ஆத்மா மனது வெளி இந்திரியங்கள் இவைகளைத் தரிப்பதையே அடையாதவர்களாய் என்னைக்குறித்து பக்தி செய்வதையே ப்ரயோஜனமாக உடையவர்களாய் பக்தி செய்கிறார்கள். 13

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥ 14

ப-ரை] பக்த்யா பக்தியினால் ஸததம் எப்பொழுதும், மாம், என்னை கீர்த்தயந்த: சொல்லிக்கொண்டும், த்ருடவ்ரதா: உறுதியான ஸங்கல்ப த்தை உடையவர்களாய், யதந்தஶ்ச (என்னைச் சேர்ந்த கைங்கர்யங்க ளில்) ப்ரயத்னம் செய்துகொண்டும், நமஸ்யந்தஶ்ச நமஸ்காரங்களைச் செய்துகொண்டும், நித்யயுக்தா: எப்பொழுதும் என்னுடன் சேர்ந்திரு க்கவேண்டும் என்கிற ஆசையுள்ளவர்களாய், மாம் என்னை, உபாஸதே உபாஸனம் செய்கிறார்கள். 14

பா] அதிகமாக என்னிடத்தில் உண்டான ப்ரீதியினால் என்னைச் சொல் லுவது, என்னுடைய காரியங்களில் ப்ரயத்னம் செய்வது, என்னை நமஸ்

---

லுண்டான' என்றாரம்பித்து. இவ்விடத்தில் ஆர்த்தன் முதலிய வேறு அதிகாரிகளை விலக்கவேண்டியதற்காக வேறு ப்ரயோஜனத்தை அபே க்ஷிக்காதவனாய் என்பதைத் தாத்பர்யமாகக் கொள்வதே உசிதம் என்று சொல்லுகிறார்—'என்னைக் குறித்து பக்தி செய்வதையே ப்ரயோ ஜனமாக உடையவர்களாய்' என்று. 'வாயு' என்னும் பதத்தினால் இந்த்ரனுக்குப்பிள்ளையாகிய ஸ்ரீ தேவதைகளின் ஸ்வபாவமுள்ளவன் என்று காட்டப்பட்டது. 13

தா] 'ஸஜந்தி' என்று கீழ் உபாஸனம் ப்ரஸ்தாவிக்கப்பட்டது, பிறகு அதுவே நாமங்களைச் சொல்வது ப்ரயத்னம் செய்வது நமஸ்காரம செய்வது இவைகளில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்துகொண்டு அதிக மாக ப்ரியமாயிருக்கும் தசையையடைகிறதென்று விசேஷித்து இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது. சொல்வது முதலிய மூன்றும் வா க்குமனது சரீரம் இவைகளுடைய காரியம் என்பதையும், அவைகளு க்கே மற்ற ஸந்தர்ப்பங்களில் ஏற்பட்டிருக்கும் விசேஷத்தையும், 'ஸததம்' (எப்பொழுதும்) என்பது; சொல்வது, ப்ரயத்னம் செய்வது, நமஸ்காரம் செய்வது, தன்னோடு எப்பொழுதும் சேர்ந்திருக்கவேண் டும் என்கிற ஆசையை யுடையவர்களாயிருக்கை, உபாஸனம் செய்தல், இவைகளோடு ஸமமாக அன்வயிக்கிறதென்பதையும் சொல்லுகிறார்— 'அதிகமாக' என்றாரம்பித்து. 'அதிகமாக என்னிடத்தில் உண்டான ப்ரீ தியினால்' என்பது 'பக்த்யா' என்பதின் அர்த்தம். ஒரு நிமிஷத்தை பூமி

காரம் செய்வது, இவைகளில்லாவிடில் ஒரு நிமிஷத்தின் அல்பபாகத்தி லும் தன் ஆத்மாவைத் தரிப்பதை அடையாதவர்களாய் என்னுடைய குண விஶேஷங்களைச் சொல்லுகிற என்னுடைய நாமங்களை நினைத்துக் கொண்டு நெறித்த மயிர்களையுடைய எல்லா அங்கங்களை யுடையவர்க ளாய் ஸந்தோஷத்தினால் மழமழத்த ஸ்வரத்தை யுடையவர்களாய் நாரா யண, க்ருஷ்ண, வாஸுதேவ, என்றிவை முதலியவைகளை எப்பொழு

முதலியவைகளைப் போலப் பெரியவஸ்துவாகக் கல்பனை செய்து அதின் கடைசியாய்ச் சிறியபாகம் 'ஒரு நிமிஷத்தின் அல்பபாகத்திலும்' என்று சொல்லப்பட்டது. நாமங்கள் அதிக இனிமையுள்ளவைகள் என்று தெரியப்படுத்துவதற்காக 'என்னுடைய குணவிஶேஷங்களைச்சொல்லு கிற' என்று சொல்லப்பட்டது. நாமங்களைச்சொல்வது என்பது வ்யா பாரங்களைச் சொல்வதையும் குறிக்கிறது. குணங்களை அநுஸந்தானம் செய்யாமற்போனாலும் ஸ்வரூபத்தினாலேயே ப்ரீதியை யுண்டாக்கும் என்று தெரிவிப்பதற்காக மறுபடியும் 'என்னுடைய நாமங்களை' என்று சொல்லியிருக்கிறது. 'நெறித்தமயிர்களை யுடைய எல்லா அங்கங்களையு முடையவர்களாய்' என்பது முதலியது ஆங்காங்கு சொல்லியிருக்கும் பதங்களை எடுத்துக்காட்டியிருக்கிறது. அப்படியே 1 'தஜ்ஜாநோத்பூத புளக: தவாஸ்மரணஜ: சேதிபூமிப:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸந்தோஷத்தினால் மழமழத்த ஸ்வரத்தை யுடையவர்களாய்' என்பதி னால் '2 ஸ்வரநேத்ராங்கவிக்ரியா' என்றிவை முதலாக பக்தியின் லக்ஷ ணம் சொல்லியிருக்கும் க்ரந்தத்தை ஞாபகப்படுத்தியிருக்கிறது. 3 'க்ருஷிர்பூவாசக: ஶப்தோணஶ்ச நிர்வ்ருதிவாசக:' என்று சொல்லி யிருக்கிறபடியினால் க்ருஷ்ண என்கிற பதம் ப்ரயோஜனங்களுக்குக் கார ணம் என்று சொல்லிக்கொண்டு பரம் வ்யூஹம் முதலிய எல்லாதசை களுக்கும் பொது, என்று தெரியப்படுத்துவதற்காக வ்யாபகங்களான நாமங்களின் நடுவில் சொல்லப்பட்டது. மற்ற அவதாரங்களிலும் க்ருஷ்ண என்னும் பதம் 4 'அனேகம் கைகளையுடைய வராஹரூபியான க்ருஷ்ணனால் எடுக்கப்பட்டவளாகிறாய்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்

1 தத் அந்தபகவானுடைய நாம பெயர்களின் ஸ்மரண நினைத்துக்கொள்வதி னால் உத்பூத உண்டான புளக: மயிர் நெறிப்பையுடைய சேதி பூமிப: சிசுபாலன்.

2 ஸ்வர ஸ்வரங்களுடையவும் நேத்ர கண்களுடையவும் அங்க அவயவங்களு டையவும் விக்ரியா மாறுதல். 3 2-வது வால்யூம் 57 பக்கம் 1 புட்னோட்டைப்பா ர்க்க. 4 தைத்திரீயம் நாராயணம் 1 அனுவாகம்.

னும் சொல்லிக்கொண்டு, அப்படியே என்னுடைய கைங்கரியங்களாகிய ஆராதனம் முதலியவைகளிலும் அதற்கு உபகாரமாகிய கோயில் கட்டு

---

யத்தில் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. அன்றிக்கே 'நாராயண' என்பதினால் மேன்மையை அநுஸந்தானம் செய்திருக்கிறது, 'க்ருஷ்ண வாஸுதேவ' என்பதினாலோ வெனில் அவதார விசேஷத்தைச் சொல்லுகிறபடியினால் ஸௌலப்யமுமிருக்கும் தன்மையை அநுஸந்தானம் செய்திருக்கிறது. '1 யஜ்ஞேஶாச்யுத கோவிந்த மாதவாநந்த கேஶவ। க்ருஷ்ண விஷ்ணோ ஹ்ருஷீகேஶேதி ராஜா ஸ கேவலம் ॥' '2 நாம்நோ ஹி யாவதீ ஶக்தி: பாபநிர்ஹரணே ஹரே:' '3 கமலநயந வாஸுதேவ விஷ்ணோ தரணிதராச்யுத ஶங்கசக்ரபாணே' '4 ஏதாவதாலமகநிர்ஹரணாய பும்ஸாம்' '5 ஸங்கீர்த்ய நாராயணஶப்தமாத்ரம்' என்றிவை முதலிய எல்லா இடங்களிலும் நாமங்களைச் சொல்லுவதின் ப்ரபாவம் ப்ரஸித்தமாக இருக்கிறது. ஏகாந்தத்திலும் ஜனங்கள் இருக்கும் இடத்திலும் வெட்கம் முதலியவை இல்லாமையும் ஸததம் (எப்பொழுதும்) என்பதினால் காட்டப்பட்டது. 'அப்படியே' என்பதற்கு எப்பொழுதும் பக்தியினால் என்று அர்த்தம் 'என்னுடையகாரியங்களாகிய - என்பது முதல் பக்தியோகத்திற்கு அஸாதாரணமான ப்ரயத்

---

1 யஜ்ஞேச யாகங்களுக்கு எஜமானனே அச்யுத கோவிந்த மாதவ அனந்த கேசவ க்ருஷ்ண விஷ்ணுவே இதி என்று ஸ: அந்த ராஜா ராஜன் ஆஹ சொன்னான்.

2 ஹரே: பகவானுடைய நாம்ன: நாமத்திற்கு பாபநிர்ஹரணே பாபத்தைப் போக்குவதில் யாவதீ எவ்வளவு சக்தி: சக்தி அஸ்தி இருக்கிறதோ, (அவ்வளவு பாபம் நம்மால் செய்யமுடியாது) என்று மேலே வாக்யம்.

3 விஷ்ணு புராணம் 7-33 யமபடர்களைப்பார்த்து யமன் சொல்லுகிறான் ஓ படர்களே கமலநயன தாமரைப் புஷ்பங்களைப் போன்ற கண்களையுடையவனே வாஸுதேவ விஷ்ணுவே தரணிதா பூமியைத்தரித்துக் கொண்டிருப்பவனே அச்யுத சங்க சக்ரபாணே சங்க சக்ரங்களைக்கையில் தரிப்பவனே (இப்படி எவர்கள்) சொல்லுகிறார்களோ அவர்களை தூரத்தில் விட்டுவிடுங்கள்) என்று மேல்வாக்யம்.

4 ஸ்ரீபாகவதம் 6-3-24 பும்ஸாம் மனிதர்களுடைய அகநிர்ஹரணாய பாபங்களைப்போக்குவதற்கு ஏதாவதா இவ்வளவு (அதாவது பகவானுடைய நாமத்தைச்சொல்வது) மாத்ரம்) அலம்போதும்.

5 நாராயண சப்தமாத்ரம் நாராயண என்னும் பதத்தைமாத்திரம் ஸங்கீர்த்ய சொல்லி (துக்கத்தை நீக்கி ஸுகத்தை அடைகிறார்கள்) என்று மேல்வாக்யம்.

வது, பூந்தோட்டம் உண்டாக்குவது, முதலியவைகளிலும், உறுதியான ஸங்கல்பத்தை யுடையவர்களாய் ப்ரயத்னம் செய்துகொண்டும், பக்தியின் மிகுதியினுல் வணக்கப்பட்ட மனது புத்தி அஹங்காரம் இரண்டு கால்கள் இரண்டு கைகள் தலை ஆகிய எட்டங்கங்களினுலும் தூசி சேறு பருக்காங்கல் இவைகளை யோசிக்காமல் பூமியில் தடிபோல் விழுந்து நமஸ்காரம் செய்துகொண்டும், எப்பொழுதும் என்னை, என்னோடு எப்பொழுதும் சேர்ந்திருக்கவேண்டும் என்கிற ஆசையை யுடையவர்களாய், அதாவது தங்கள் ஆத்மா உள்ளவரையிலும் எனக்குக் கைங்கரியம் செய்ய வேண்டும் என்கிற ஆசையை யுடையவர்களாய் உபாஸனம் செய்கிறுர்கள். 14

---

*னத்தின் விஷயத்தைக் காட்டியிருக்கிறது. அவனுடைய காரியங்களில் ப்ரயத்னம் செய்யும்போது உறுதியான ஸங்கல்பத்தை யுடையவர்களாகை பெரிய ஆபத்து வந்தாலும் ஸம்பத்து வந்தாலும் வேறொன்றை அடைவதைப் பரிஹரிப்பதற்காக.* 'பக்தியின் மிகுதியினுல் வணக்கப்பட்ட' *என்பது முதல் நமஸ்காரம் செய்வது தன்னுசையினுல் ஏற்பட்டது என்று தெரிவிப்பதற்காகச் சொல்லியிருக்கிறது.* 1 'மனோபுத்த்யபிமாநேந ஸஹ ந்யஸ்ய தராதலே। கூர்மவச்சதுர: பாதாந் ஶிரஸ்தத்ரைவ பஞ்சமம்' *என்று அஷ்டாங்க நமஸ்காரம் சொல்லப்பட்டது.* 'நித்யயுக்தா:' *என்பது ஆசையைச் சொல்லுகிற* க்த *என்னும் ப்ரத்யயத்தை முடிவிலுண்டயது என்று சொல்லுகிறுர்*—'எப்பொழுதும் என்னோடு சேர்ந்திருக்கவேண்டும் என்கிற ஆசையை யுடையவர்களாய்' *என்று* 2 'தாஸபூதா:' *என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்ட ஸ்வரூபத்திற்குத் தக்கபடி நித்யமான ஸம்பந்தத்தை விசேஷித்துச் சொல்லுகிறுர்*—'தங்கள் ஆத்மா உள்ளவரையிலும்' *என்றுரம்பித்து.* 14

---

1 *பாஞ்சராத்ரம் ஸாத்வதஸம் ஹிதை* 6-187 *மனோபுத்த்ய பிமானேந மனது புத்தி அஹங்காரம் இவைகளோடு சதுர: நான்கு பாதான் கால்களையும் கைகளிரண்டையும் சேர்த்து நான்கு என்று சொல்லியிருக்கிறது) கூர்மவத் ஆமையைப் போல் தத்ர அதில் பஞ்சமம் ஐந்தாவதாக சிரச்சைவ தலையையும் தராதலே பூமியில் ஸஹந்யஸ்ய கூடவைத்து.*

2 *மந்த்ரராஜபதஸ்தோத்ரம் (எல்லா ஆத்மாக்களும் பகவானுக்கு) தாஸபூதா: அடிமையானவர்கள்.*

ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விஶ்வதோமுகம் ॥ 15

ப-ரை] அந்யே அபி சில மஹாத்மாக்கள், ஜ்ஞாநயஜ்ஞேந ச ஜ்ஞானமாகிய யாகத்திலுைம். யஜந்த: ஆராதனம் செய்துகொண்டு, பஹுதா அனேக உட்பிரிவுகளையுடைய, ப்ருதக்த்வேந வ்யஷ்டியாஸத்திஞல், விஶ்வதோமுகம் ப்ரபஞ்சரூபமா யிருக்கிற, மாம் என்னை, ஏகத்வேந ஒருவஞக, உபாஸதே உபாஸனம் செய்கிருர்கள். 15

பா] வேறு சில மஹாத்மாக்கள் முன்சொல்லிய நாமம் சொல்லுவது முதலியவைகளோடு ஜ்ஞானமென்கிற பேருடைய யாகத்திஞலும் ஆராதனம் செய்துகொண்டு என்னை உபாஸனம் செய்கிருர்கள் எப்படி? யெனில் லோகங்களாகிற ஆகாரத்திஞல் ப்ரபஞ்சத்தை விஶேஷணமாக உடைய

தா] 1'ஸஜந்யாநந்யமநஸ:' என்று உபாஸனம் வேறு விஷயத்தில் மனதைச் செலுத்தாமல் இருக்கவேண்டும் என்று விஶேஷித்துச் சொலப்பட்டது, பிறகு நாமம் சொல்லுவது முதலிய அங்கங்களைக்கொண்டு நிரூபிக்கப்பட்டது, இப்பொழுது த்யானம் செய்யப்படுகிற ஆகாரத்தைக் காண்பித்துக்கொண்டு அதுவே விஶேஷித்துச் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகம் முதல் 19 வது ஶ்லோகம் வரையிலும். 'ச' என்பது முன்பு சொன்ன நாமம் சொல்லுவது முதலியவைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று தெரிவிப்பதற்காக. 'அபி' என்பது 'அந்யே' என்பதோடு அன்வயிக்கிறது, இல்லாவிடில் வ்யர்த்தமாய் விடுகிறது என்கிற அபிப்ராயத்திஞல் சொல்லுகிருர்-'வேறு சில' என்று. வேறு என்கிறபதம் பூர்ணமாக உபாஸிக்கிறவர்களைச் சொல்லுகிறது. 'யஜந்த:' என்பதற்கு ப்ரீதி உண்டுபண்ணிக்கொண்டு என்று அர்த்தம். 'பஹுதா' 'ப்ருதக்த்வேந' என்பதிஞல் ஸமஷ்டி, வ்யஷ்டி அதின் உட்பிரிவுகள் ஆகிய எல்லாவற்றையும் சேர்த்துச்சொல்லியிருக்கிறது, என்றுசொல்லுகிருர்—'லோகங்களாகிறஆகாரத்திஞல்' என்று. 'விஶ்வதோமுகம்' என்பதற்கு இந்த ஸந்தர்ப்பத்தில் கூடச் சேர்ந்திருக்கும் பதங்களுக்கு அனுகுணமான தாத்பர்யத்தைச் சொல்லுகிருர்—'ப்ரபஞ்சத்தை விஶேஷணமாக உடைய' என்று ஒருவஞகவும் தனித்தனியாகவும் உபாஸிக்கிருர்கள், என்று ஏன் அர்த்தம் சொல்லவில்லை; ஒன்ருக இருப்பதற்கே அனேகமாக இருப்பது எப்படிப் பொருந்தும்? அப்படியாகில் விகாரத்தை அடைந்திருக்கை ஸம்ஸாரியாயிருக்கை முதலிய

1 பகவத்கீதை 9-12.

என்னை ஒருவனாக உபாஸிக்கிறார்கள். இத்தால் சோல்லப்பட்டதாவது ; பகவானாகிய வாஸுதேவனே பேர் ரூபம் இவைகளால் பிரிக்கமுடியாத மிகவும் ஸூக்ஷ்மமான சேதனம் அசேதனம் இவைகளைத் தனக்கு சரீரமாக உடையவனாய்க் கோண்டு ஸத்யஸங்கல்பனாகிய அந்த ஒருவனே அனேக விதங்களாகப் பிரிக்கப்பட்ட போ ரூபம் இவைகளை உடைய ஸ்தூலமான சேதனம் அசேதனம் ஆகிய வஸ்துக்களை சரீரமாக உடையவனாகக் கடவேன் என்று ஸங்கல்பித்து தேவதை, பசு, மனுஷ்யன் ஸ்த்தாவரம் என்று பேருடைய விசித்திரமான லோகத்தை சரீரமாக உடையவனாக இருக்கிறன். என்று அனுஸந்தானம் செய்துகோண்டும் என்னை உபாஸிக்கிறாகள், என்று. 15

---

தோஷங்களும் வருமே? அனேகமாக இருபபதை ஒன்றென்று உபாஸனம் செய்கிறவனுக்கு 1 த்ருஷ்டிவிதியை ச்செய்பவனுக்குப்போல ப்ரமமும் வருமோ? என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம சொல்லுகிறார்:- ‘இத்தால்சோல்லப்பட்டதாவது’ என்றாரம்பித்து. இத்தால் மற்றவர்கள் சொன்னமாதிரியாக உபாஸனத்தின் மூன்றுவிதமான பிரிவுகளைச் சொல்லுகிறது என்பதும் பேதமும் அபேதமும் சொல்லப்பட்டதென்பதும் நிராகரிக்கப்பட்டது. ‘பகவானாகிய’ என்பதினால் ஸ்ருஷ்டிப்பது முதலியவைகளுக்கு உபயோகமான குணங்களின் கூட்டத்தைக்காட்டியிருக்கிறது. ‘வாஸுதேவன்’ என்னும் பதத்தில், வாஸு’ என்கிற முதல் பாகத்தினால் எல்லா வஸ்துக்களுடன் சேர்த்துசசொல்லுவதற்குக் காரணமாகிய எல்லாவற்றையும தனக்குச் சரீரமாக உடையவனாய்க் கொண்டு எலலா வஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கை சொல்லப்படுகிறது ‘தேவன்’ என்கிற இரண்டாவது பாகததினால் ஸ்ருஷ்டிப்பதற்கு ப்ரயோஜனம் தன்னுடைய லீலையே என்று சொல்லப்படுகிறது. இந்த இரண்டு பாகங்களினாலும் வேறு விஷயததில் மனதைச் செலுத்தாமல் உபாஸனம் செய்கிற ஏகாந்திகள் எப்பொழுதும் த்யானம் செய்துகொண்டிருக்கும் மந்திரமும் ஞாபகபபடுத்தப்பட்டது. பூமி முதலிய வஸ்துக்கள் அனேகம் என்பது மாத்திரம் ப்ரத்யக்ஷம் முதலியவைகளாலேயே ஏற்பட்டிருக்கிறபடியினால் ஒன்றாயிருக்கிற வஸ்துவே அனேகமாக யிருக்கிறது என்பதல்லவோ ஶாஸ்திரத்தினாலறியவேண்டியது. ஆகைபினால அபபடிப்பட்ட ஒன்றாகயிருக்கையிலேயே வாக்யத்திற்குத் தாத்பர்யம், அதுவும் ஒன்றே எல்லாவற்றிற்கும் ஆத்மா என்கிற காரணத்தினால் ஸ்தாபிக்கபபட்டிருக்கிறது ஆகையினால் ஒரு தோஷமுமில்லை. 15

---

1 முதல் வால்யூம் 514 வது பககம் புட்னோட்டைப்பார்க்க.

பா] அப்படியே நான் ப்ரபஞ்சத்தை சரீரமாக உடையவனுக இருக்கி றேன் அல்லவா என்று சொல்லுகிருர்.—

அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வதாஹமஹமௌஷதம் |
மந்த்ரோஹமஹமேவாஜ்யமஹமக்நிரஹம் ஹுதம் || 16

ப-ரை] க்ரது: யாகம், அஹம் நான், யஜ்ஞ: மஹாயஜ்ஞம், அஹம் நான், ஸ்வதா ஸ்வதா என்னும் மந்திரம், அஹம் நான், ஔஷதம் செடி முதலியவைகளிலுண்டாகும் ஹவிஸ்ஸும், அஹம் நான், மந்த்ர: மந் திரம், அஹம் நான், ஆஜ்யம் நெய், அஹமேவ நானே, அக்நி: அக்னி, அஹம் நான், ஹுதம் ஹோமம், அஹம் நான். 16

பா] ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்கள் நானே மஹாயஜ்ஞங்களும் நானே பித்ருக்களின் கூட்டத்திற்குத் திருப்தியையுண்டாக்குகிற ஸ்வதா

---

*தா] பரம் வ்யூஹம் முதலிய ரூபங்களினுல் ஒன்ருயிருக்கையும் அநே கமா யிருக்கையும் சொல்ல முடியும், ஆனுலும் மேலக்ரந்தத்தை அனு ஸரித் திருக்கிறபடியினுல் சொன்னதே அர்த்தம் என்கிற அபிப்ராயத் தினுல் 'அஹம்க்ரது:' என்ருரம்பித்து நான்கு ஶ்லோகங்களுக்கு இந்தஸந்தர்ப்பத்தில் ஸங்கதியையும்அர்த்தத்தையும் சொல்லுகிருர்— 'அப்படியே' என்ருரம்பித்து. 'ஜ்யோதிஷ்டோமம் முதலிய' என்பதி னுலும், 'மஹாயஜ்ஞங்களும்' என்பதினுலும் அர்த்தம் வெவ்வேறு என்று தெரிவித்திருக்கிற படியினுல் 'க்ரது: யஜ்ஞ:' என்னும் பதங்களுககுப் புனருக்தி என்னும் தோஷத்தைப் பரிஹரித்திருக்கி றது. சரீரத்தினுல் செய்யப்படுகிற கர்மம் மனதினுல் செய்யப்படுகிற கர்மம் என்றும், ஶ்ருதியில் சொல்லிய கர்மம ஸ்ம்ருதியில் சொல்லிய கர்மம் என்றும் பிரித்தது ப்ரஸித்தியை அனுஸரித்ததல்ல என்று தாத்பர்யம். மஹாயஜ்ஞமாவது ப்ரம்ஹயஜ்ஞம் முதலிய 1 ஐந்து யஜ் ஞங்கள் 'அஹ' என்பது பொதுவாக எல்லா இடத்திலும் அன்வயிக்கி றது. யாகங்களையும் அதின் அங்கங்களையும் ப்ரஸ்தாவித்திருக்கிற படி யினுலும், 'ஸ்வதா' என்னும் பதத்தோடு சேர்த்துச் சொல்லியிருக்கிற படியினுலும், நெய்யைத் தனித்து மேலே சொல்லியிருக்கிற படியினு*

---

1 *ப்ருமஹயஞ்ஞம், தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மனுஷ்ய யஜ்ஞம், பூதயஜ் ஞம் ஆக ஐந்தும் பஞ்சமஹா யஜ்ஞஙகள் என்று சொல்லப்படுகிறது.*

என்னும் மந்திரமும் நானே செடி முதலியவைகளிலிருந்து உண்டாகிற ஹவிஸ்ஸும் நானே மந்திரமும் நானே நெய்யும் நானே இது மற்ற வைகளேயும் குறிப்பதற்காக, ஸோமம் முதலிய ஹவிஸ்ஸும் நானே என்று அர்த்தம். ஆஹவநீயம் முதலிய அக்னியும் நானே ஹோமமும் நானே.　16

பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ரமோங்கார ருக்ஸாம யஜுரேவ ச ॥　17

ப-ரை] அஸ்ய இந்த, ஜகத: லோகத்திற்கு, பிதா தகப்பனும், மாதா தாயும், தாதா உத்பத்திக்கு ஒத்தாசைக்காரணமும், பிதாமஹ: பாட்டனும், அஹம் நான், பவித்ரம் பரிசுத்தியைக் கொடுக்கக்கூடிய, வேத்யம் அறியத்தகுந்த வஸ்துவும், (நான்) ஓங்கார: ப்ரணவமும், (நான்) ருக் ருக்வேதமும், ஸாம ஸாமவேதமும், யஜு: யஜுர்வேதமும் (நான்)　17

---

னும், இங்கிருக்கும் 'ஔஷதம்' என்னும் பதம் செடி முதலியவைகளிலிருந்து உண்டாகும் ஹவிஸ்ஸைச் சொல்லுகிறது என்றுசொல்லுகிறார்.—'செடி முதலியவைகளி லிருந்து உண்டாகும் ஹவிஸ்ஸும்' என்று. இத்தால் 'ஸ்வதா, ஔஷதம்' என்னும் பதங்கள் அன்னத்தையும் மருந்தையும் சொல்லுகின்றன என்று வ்யாக்யானம் செய்தது நிராகரிப்பட்டது. ஒன்றைத் தனித்துச் சொன்னது மற்றது இல்லை என்று தெரிவிப்பதற்காகவோ என்கிற ஸந்தேஹத்தைப் பரிஹரிக்கிறார்.—'மற்றவைகளேயும் குறிப்பதற்காக' என்று. இப்படியே மேலும் பிதாமஹன் முதலியவர்களேச் சொன்னதுப்ரபிதாமஹன் முதலியவர்களேயும் குறிப்பதற்காக என்றறிந்து கொள்ளவும். இவ்விடத்தில் 'அக்நி:' என்னும் பதம் இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்து மூன்ருவது பூதமாகிய நெருப்பை மாத்திரம் சொல்லுகிறது என்பது யுக்தமல்ல, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார். 'ஆஹவநீயம் முதலிய அக்னியும்' என்று ஹவிஸ்ஸுக்கள் முன்பே சொல்லப்பட்டிருக்கிற படியினால் 'ஹுதம்' என்னும் பதம் ஹோமத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்.—'ஹோமமும்' என்று.　16

பா] ஸ்த்தாவரமும் ஜங்கமமுமாகிய இந்த லோகத்திற்கு அந்தந்த இடத்தில் தகப்பனாகவும் தாயாகவும் உத்பத்திக்கு ஒத்தாசைக் காரணமாகவும் பாட்டனாகவும் இருப்பவன் நானே. இவ்விடத்தில் யாதா என்னும் பதம் தகப்பன் தாய் இவர்களைத் தவிர வேறாயும் உத்பத்திக்கு ஒத்தாசைக் காரணமுமான ஜீவனைச்சொல்லுகிறது. பரிசுத்தியைக்கொடுக்கக்கூடிய

---

தா] 'வபிதாஹஸ்ய' என்றிவை முதலிய இடங்களில் பகவான் தானே நேரில் பிதா என்பது சொல்லப்படவில்லை, பின்னை எதென்னில் பிதாவாக லோகத்தில் கண்டறியப்பட்டவைகள் தன்னை அந்தர் யாமியாக உடையதுகள் என்பது சொல்லப்படுகிறது, அப்படியிருந்தால் தான் இந்த ஸந்தர்ப்பத்துக்குப் பொருந்தும் என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'ஸ்த்தாவரமும்'என்றாரம்பித்து. ஸ்தாவரங்களிலும் அந்தந்தக்காரணங்கள் பகவானுக்குச் சரீரங்கள் ஆகையினால் அவைகளிலும் பகவான் பிதா என்று சொல்லியிருக்கிறது. 'யாதா' என்னும் பதம் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கிற ஒருஜீவனைசசொல்லுகிறது என்று ப்ரஸித்தமாயிருக்கிறது. அப்படியாகில் இவ்விடத்தில் புனருக்திவரும் என்று ஆக்ஷேபித்துக்கொண்டு ஸமாதானம் சொல்லுகிறார்—'இவ்விடத்தில்' என்று. 1 கோபலீவர்தந்யாயத்தினால் என்று தாத்பர்யம். ஒருவனே எல்லாவற்றிற்கும் பிதா என்பதில்லாமையால் தனித்தனியான பிதாவைச்சொல்லுகிறதென்று தெரிவிப்பதற்காக 'அந்தந்த இடத்தில்' என்று சொல்லப்பட்டது. 'இவ்விடத்தில்' என்பதற்கு பிதா முதலியவர்களோடு சேர்ந்திருக்கிறபடியினால் என்று அர்த்தம். ருத்ரன் இந்த்ரன் முதலியவர்களோடு சேர்ந்திருந்தாலல்லவோ சதுர்முகனைச் சொல்லும் என்று தாத்பர்யம். தாதுவின் அர்த்தமாகிய தரிப்பதின் மூலமாக உத்பத்திக்கு ஒத்தாசைகாரணமாயிருத்தல் சொல்லப்படுகிறது. அறியத்தக்கது என்பது எல்லாவற்றிற்கும் ஸாதாரணம் ஆகையினால் இவ்விடத்தில் ஸம்பவிக்கக்கூடியதாகத் தோன்றுகிற 'வவித்ரம் வேத்யம்' என்கிற பதங்கள் ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யங்களாக அன்வயிக்கின்றன என்பது, அதற்கு ஒருபாதகமும் இல்லாமையினால் விடத்தகுந்ததல்ல என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'பரிசுத்தியைக்கொடுக்கக்கூடியதும்' என்றாரம்பித்து. வேதத்தை மேலே சொல்லப்போகிறபடியினாலும் பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியது என்

---

1 முதல் வால்யும் 423 வது பக்கம் 1 புட்னோட்டைப்பார்க்க.

தாய் வேதங்களைக்கொண்டு அறியத்தக்கவஸ்து எதுவோ, அதுவும் நானே அப்படிப்பட்ட வஸ்துவைத்தெரிவிக்கிற தாயும் வேதங்களுக்குக் காரண முமாகிய ப்ரணவமும் நானே ருக்ஸாம யஜுஸ் ஆகிய வேதமும் நானே.

**கதிர்பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்|**
**ப்ரபவ: ப்ரளய: ஸ்தாநம் நிதாநம் பீஜமவ்யயம் ||**　　18

ப-ரை] கதி: அடையவேண்டிய இடம், பர்தா தரிப்பவன், ப்ரபு: நியமிக்கிறவன், ஸாக்ஷீ எல்லாவற்றையும் நேராகப் பார்க்கிறவன், நிவாஸ: வஸிக்கும் இடம், ஶரணம் காப்பாற்றுகிறவன், ஸுஹ்ருத் நன்மையை விரும்புகிறவன், ப்ரபவப்ரளயஸ்தாநம் உத்பத்தியையும் ப்ர ளயத்தையும் அடையும் இடம், நிதாநம் அதில் உத்பத்தியையும் ப்ரளயத் தையும் அடையும் வஸ்து, அவ்யயம் அழிவில்லாத, பீஜம் காரணம், (இவை எல்லாம் நான் என்று சேர்த்துக் கொள்ளவும்).　　18

---

*கிற பதத்தின் ஸாமர்த்யத்தினாலும்'வேதங்களைக்கொண்டு அறியத்தக்க' என்று சொல்லப்பட்டது. ஒன்றன் பாலாகசசொல்லியிருக்கிற படியினு லும் விசேஷித்துச சொல்லுவதற்குக்காரணமில்லாமையினாலும் இங்கு சொல்லப்படாத வைகளாய் வேதங்களைக்கொண்டு அறியத்தக்க எல்லா வஸ்துக்களையும் சேர்த்துச் சொல்லியிருக்கிற தென்று தெரிவிப்ப தற்காக 'எதுவோ' என்று சொல்லியிருக்கிறது. 'பவித்ரம்' என்னும் பதம் அர்த்தத்தை சுருக்கிச் சொல்லவேண்டியதாகிய ஒரு வஸ்துவின் பெயரைச் சொல்லுகிறது என்பதை விலக்குவதற்காக 'பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியதாய்' என்று சொல்லப்பட்டது. மற்றொரு வஸ்துவின் ஸம்பந்தத்தைக் கொண்டு நிரூபிக்கவேண்டிய வஸ்துக்களின் நடுவே யிருக்கிறபடியினால் இதுவும் மற்றொரு வஸ்துவின் ஸம்பந்தத்தைககொ ண்டு நிரூபிக்கவேண்டிய வஸ்துவையே சொல்லுகிறது என்று தெரிவி ப்பதற்காக 'அப்படிப்பட்ட வஸ்துவைத் தெரிவிக்கிற' என்று சொல்லப் பட்டது. ருக்வேதம் ஸாமவேதம் யஜுர்வேதம் இவைகளைத் தனித் துச் சொல்லியிருந்தபோதிலும் அவைகளுக்குள்ளடங்கிய ப்ரணவத் தைத் தனித்துச் சொல்லியிருப்பதற்கு அபிப்ராயமென்ன என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'வேதங்களுக்குக்காரண மாகிய' என்று.*

பா] கம்யதே (அடையப்படுகிறது) என்கிற வ்யுத்பத்தியினால் கதி: என்பதற்கு அந்தந்த இடங்களில் அடையவேண்டிய இடம் என்று அர்த்தம். தரிப்பவன் நியமிக்கிறவன் நேராகப் பார்த்துக்கொண்டிருப்பவன் வஸிக்கும் இடமாகிய வீடு முதலியன; ஶரணம் ஆவது இஷ்டத்தைக்கொடுப்ப

தா] கதி: என்னும் பதம் இவ்விடத்தில் முன்பு சொன்னதை அனுஸரித்துப் பின் சொன்னதும் இருக்கவேண்டும் என்கிற ந்யாயத்தினால் வஸ்துவைச் சொல்லுகிறது என்பதே உசிதமாகையினால் போவது ஆகிய கார்யத்தைச் சொல்லுகிறதல்ல, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்.—'கம்யதே' என்றாரம்பித்து. எல்லா ஜனங்களுக்கும் ஸாதாரணங்களான வஸ்துக்களைச சொல்லிக்கொண்டு வரும்பொழுது அதின் நடுவில் ஸ்திரீகளுக்கு மாத்திரம் ஸம்பந்தமுள்ள (கணவன் என்னும்) வஸ்துவைச் சொல்லுவது யுக்தமல்ல பிஹதி— என்னும் தாதுவுக்கு தரிக்கிறான் என்னும் அர்த்தம் ப்ரஸித்தமாயிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்.—'தரிப்பவன்' என்று 'ப்ரபு:' என்னும் பதம் இவ்விடத்தில் ஸமர்த்தன் என்கிற அர்த்தத்தைச் சொல்லுவதா யிருந்தால் 1 'ஜகத:' என்னும் பதத்தோடு அன்வயிக்காது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்.—நியமிக்கிறவன்' என்று. 'நேராகப் பார்த்துக் கொண்டிருப்பவன்' என்பதற்கு2'ஸாக்ஷாத்த்ரஷ்டரிஸம்ஜ்ஞாயாம்' என்றல்லவோ 'ஸாக்ஷீ' என்னும் பதம் விதிக்கப்பட்டிருக்கிறது, என்று தாத்பர்யம். 'வஸிக்கும் இடமாகிய' என்பதற்கு இவ்விடத்திலும் வஸிப்பதாகிய காரியத்தைச் சொல்லுவது உசிதமல்ல ஆகையினால் இடத்தைச் சொல்லுகிறது இது, என்று தாத்பர்யம். கதி: என்கிற பதத்தோடு புனருக்தியைப் பரிஹரிப்பதற்காக 'வீடு முதலியன' என்று சொல்லப்பட்டது. கதி: என்னும் பதமோவெனில் ஸ்வர்கம் முதலிய போக வேண்டிய இடத்தைச் சொல்லுகிறதென்று முன்பே சொல்லப்பட்டது. அன்றிக்கே அந்தந்த இடங்களில் அனுபவிக்க வேண்டிய போக்யமான வஸ்துவைச் சொல்லுகிறதாகவுமாம். ஶரணம் என்னும் பதம் இவ்விடத்தில் நிவாஸ: என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட வீடு முதலிய அசேதனத்தைச் சொல்லுகிற தென்பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்.—'இஷ்டத்தை' என்றாரம்பித்து. இஷ்டத்தைக் கொடுத்தலும் அநிஷ்டத்தைத் தடுப்பதும் இஷ்டப்படி தனித்தனியாகவும் ஒன்று சேர்ந்தும் அன்வயிக்கிறது (அதாவது இஷ்டத்தைக் கொடுப்பதற்கு மாத்திரமும்

1 பகவத்கீதை 9-17.

2 அஷ்டாத்யாயீ 5-2-91 நேராகப்பார்த்தவனைப்பற்றி ப்பெயராகச்சொல்லும் பொழுது ஸாக்ஷீ என்று பதமாகிறது என்று கருத்து.

தற்காகவும் அநிஷ்டத்தைத் தடுப்பதற்காகவும் ஆஶ்ரயிக்கத்தகுந்த ஜீவன் எதுவோ அதுவும் நானே நன்மையை விரும்புகிறவனும் (நானே) எந்தவஸ்துவும் உத்பத்தியை அடைவதற்கும் ப்ரளயத்தை அடைவதற்கும் எதேது இடமோ, அதுவும் நானே. நிக்ஷிப்யதே (சேர்க்கப்படுகிறது) என்கிற வ்யுத்பத்தியினால் அதிலிருந்து உண்டாக்கப்படும் வஸ்துவும் அதில் ப்ரளயத்தை

அநிஷ்டத்தைத் தடுப்பதற்கு மாத்திரமும் இவை யிரண்டுக்காகவும் ஆஶ்ரயிக்கத்தக்க என்று அன்வயித்துக் கொள்ளவும்) 1 'ஶரணம் க்ருஹரக்ஷித்ரோ:' என்று சொல்லியிருக்கிற படியினால் இவ்விடத்தில் 'ஶரணம்' என்னும் பதம் காப்பாற்றுகிறவனைச் சொல்லுகிறது. 'நன்மையை விரும்புகிறவன்' என்பதற்கு, நல்லமனதை யுடையவன் என்றல்லவோ ஸுஹ்ருத் என்னும் பதத்திற்கு அர்த்தம், மனதிற்கு நன்மையாவது நன்மையை நினைத்துக் கொண்டிருக்கை தான், என்று தாத்பர்யம், 'எந்த வஸ்துவும்' என்பதற்கு கேவலம் ப்ரஹ்மா முதலியவர்களுக்காவது அவ்யக்தம் முதலிய வற்றுக்காவது உத்பத்தி அடைவதற்கும் ப்ரளயத்தை அடைவதற்கும் எது இடமோ அது என்று அர்த்தமல்ல, என்று அபிப்ராயம். ப்ரபவ: என்று பிரித்து மற்றவர்கள் சொன்ன பாடாந்தரம் ப்ரஸித்தமல்ல ஆகையினாலும் இந்த இடத்திற்குச் சேர்ந்திராமையாலும் தள்ளப்பட்டது. 'ப்ரபவப்ரளயஸ்தாநம்' என்று கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கிற படியினால் அந்த இடத்தில் எது உண்டாகிறதோ எது லயத்தை அடைகிறதோ அது இவ்விடத்தில் 'நிதாநம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்.—'நிக்ஷிப்யதே' என்றாரம்பித்து. இந்தப் பதத்தின் முடிவிலிருக்கும் ல்யுட் என்னும் விகுதி கர்மம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. இத்தால் நிதாநம் என்னும் பதம் ப்ரளயஸ்தாநம் என்பதற்கு விஶேஷணமாகையினால் பேர்ரூபம் இவைகளால் பிரிக்கப்படாத ப்ரக்ருதியைச் சொல்லுகிறதென்பது நிராகரிக்கப்பட்டது. ப்ரபவப்ரளயஸ்தாநம் என்கிற பதம் உபாதான காரணத்தைச் சொல்லுவதா யிருந்தால் பீஜம் என்கிற பதம் பொதுவாகக் காரணம் மாத்திரத்தைச் சொல்லுகிறது, பீஜம் என்கிற பதம் உபாதான காரணத்தைச் சொல்லுகிறது என்று ஒப்புக்கொள்

1 நாமலிங்கானுசாஸனம்.3 காண்டம் நாநார்த்தவர்கம் 209 ஶ்லோகம்சரணம் என்னும் பதம் வீட்டையும் காப்பாற்றுகிறவனையும் சொல்லும் என்று இதின் கருத்து.

அடைவிக்கப்படும் வஸ்துவும் நானே என்று அர்த்தம்·அந்தந்த வஸ்துவில் அழிவில்லாதகாரணம் எதுவோ அதுவும் நானே. 18

தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதம் சைவ ம்ருத்யுஶ்ச ஸதஸச்சாஹமர்ஜுன ॥ 19

ப-ரை] அர்ஜுன அர்ஜுனா, அஹம் நான், தபாமி வெப்பத்தை உண்டாக்குகிறேன்' அஹம் நான் வர்ஷம் மழையை, நிக்ருஹ்ணாமி அடக்குகிறேன், உத்ஸ்ருஜாமி ச விடுகிறேன், அம்ருதம் உயிரோடிருப்பதற்குக் காரணமும், ம்ருத்யுஶ்ச மரணத்தை அடைவதற்குக் காரணமும், (நானே)ஸத் இருப்பதும், அஸத் ச இல்லாததும், அஹம் நான். 19

பா] நெருப்பு ஸூர்யன் முதலியவைகளாக இருந்துகொண்டு நானே வெப்பத்தை உண்டாக்குகிறேன். க்ரீஷ்மம் முதலிய ருதுக்களில் நானே மழையை அடக்குகிறேன், அப்படியே வர்ஷாகாலங்களில் மழையை

ளும் பக்ஷத்தில் ஸ்தானம் ஸ்தீயதேऽஸ்மின் என்கிற பதம் விதைக்கு ஆதாரமாகிய பூமி முதலிய இடத்தைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர் — 'அந்தந்த வஸ்துவில்' என்றுரம்பித்து. 18

தா] இப்படி 1'வ்யாப்தாஸ்தௌ'என்று மேலே சொல்லப்போகிற மாதிரியாக லோகத்தில் அந்தந்தப் பதங்களினுல் சொல்லப்படுகிறவைகளாக ப்ரஸித்தங்களான சிறந்த வஸ்துக்களின்இருப்பு தன்னுடைய அதீனம் என்று சொல்லப்பட்டது, பிறகு அவைகளின் ப்ரவ்ருத்தி தனக்கு அதீனம் என்று இந்த ஶ்லோகத்தினுல் சொல்லப்படுகிறது. ஸ்வரூபத்தினுல் வெப்பத்தை உண்டாக்கக்காரணமல்லஆகையினுல் மற்றொன்றை சரீரமாக உடைய ஸ்வரூபத்தில் அதைக் காட்டுகிறுர்—'நெருப்பு ஸூர்யன் முதலிய' என்றுரம்பித்து. 'முதலிய' என்பதினுல் நெருப்பு முதலியவைகளினுல் கொளுத்தப்பட்ட வஸ்துவைச் சொல்லியிருக்கிறது. ஒருவனுல்செய்யப்படுகிற ஒன்றுக்கொன்று விருத்தங்களான காரியங்களைச் சொல்லி யிருந்தால் அதைக் காலங்கள் வெவ்வேறு என்று ஏற்படுத்தவேண்டும்என்கிறஅபிப்ராயத்தினுல்சொல்லுகிறுர்'க்ரீஷ்மம்முதலிய, ருதுக்களில்' 'வர்ஷாகாலங்களில்' என்று 'அஹம்க்ருதஶ்' என்றுரம்பித்து இதுவரையிலும் அயிவஜம் அயிவேஷம் அயஜ்ஞாதம் அயிசைவதம் இவைகளைச் சொல்லியிருக்கிறது என்று சிலர் சொல்லுகிறுர்கள்.

1 பகவத்கீதை 10-19.

நானே விடுகிறேன், எதனால் இந்தலோகம் உயிரோடிருக்கிறதோ, எதனால் மரணத்தை அடைகிறதோ, அவையிரண்டும் நானே. இந்த விஷயத்தில் அதிகமாகச் சொல்லி என்ன ப்ரயோஜனம்; எதிருக்கிறதோ, எதுமுன்னிருந்ததோ எது இனி உண்டாகப்போகிறதோ, எல்லா அவஸ்தைகளையும் உடையவைகளாக இருக்கிற அந்த எல்லாச் சேதனமும் அசேதனமுமாகிய வஸ்துக்களைச் ஶரீரமாக உடையவனாகையினால் அந்தந்த ரூபமாக

---

பிறகு ஸாதகமாகவும் பாதகமாகவும் சுருக்கிச் சொல்லப்படுகிறது. 'அம்ருதம்சைவ ம்ருத்யுஶ்ச, என்று. ம்ருத்யு:' என்னும்பதத்தோடு சேர்த்துச்சொல்லியிருக்கிறபடியினால் மரணத்தைத் தடுக்கிறவஸ்துவைச் சொல்லுகிறது இந்த அம்ருதம் என்னும் பதம், வாஸ்தவமானஅம்ருதத்தைச்சொல்லுவதாயிருந்தால் விஷத்தைச்சொல்லுகிற பதத்தோடு சேர்த்துச் சொல்லியிருக்கவேண்டும்; அம்ருதம் என்னும் பதத்தோடு சேர்த்துச் சொல்லப்பட்டபடியினால் ம்ருத்யு:என்னும் பதமும் யமன் முதலியவற்றைச் சொல்லுகிறதென்பதும் யுக்தமல்ல, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எதனால்' என்றாரம்பித்து. மூன்றுகாலங்களிலுமிருக்கும் எல்லா வஸ்துக்களையும் சுருக்கமாகச் சொல்லி முடித்திருக்கிறதிது வென்பதைக்காட்டுகிறார்—'இந்த விஷயத்தில்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் ஸத் என்னும் பதத்தைப்போலவே அஸத்என்னும் பதமும், இந்த மதத்தில் மற்றொரு வஸ்துவே இன்னொருவஸ்துவின் அபாவம் என்று சொல்லுகிறபடியினால் ஒருவிதமான வஸ்துவைச் சொல்லுகிறது, அப்படிக்கில்லாவிடில் நான்என்று தன்னோடு சேர்த்து சொல்லியிருப்பது பொருந்தாது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—எது இருக்கிறதோ எது முன்னிருந்ததோ, எது இனி உண்டாகப் போகிறதோ' என்று. அஸத் என்னும் பதம் இவ்விடத்தில் இப்பொழுதிருக்கும் வஸ்துக்களைத் தவிர மற்ற வஸ்துக்களைச் சொல்லுகிறது. மற்ற இடங்களிலேபோல இந்தப் பதங்கள் சேதனங்களையும் அசேதனங்களையும் சொல்லுகின்றன என்று ஏன் சொல்லவில்லை ? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'எல்லா அவஸ்தைகளையும் உடையவைகளாக இருக்கிற' என்றாரம்பித்து. எல்லாம் பகவானை ஆத்மாவாக உடையது, என்பதல்லவோ கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்டது, மூன்று காலங்களிலுமிருக்கும் எல்லா வஸ்துக்களையும் சேர்த்துச்

---

1 இங்கு எல்லாம் தனக்கு சரீரங்களாகையினால் அவைகள் நான் என்றுசேர்த்துச்சொல்லப்பட்டிருக்கிறது அபாவம் என்பது வஸ்துவல்ல ஆகையினால்அப்படி சேர்த்துச் சொல்லியிருப்பது பொருந்தாது என்று கருத்து.

நானே இருக்கிறேன் என்று அர்த்தம். இப்படி அனேகவித வ்யத்யாஸமுள்ளவைகளாகவும் பிரிக்கப்பட்ட பேர் ரூபம் இவைகளையுடையவைகளாகவும் இருக்கிற எல்லா லோகத்தையும் சரீரமாக உடையவனாகையினால் அந்தந்த ரூபமாக நானேஇருக்கிறேன் என்று ஒன்றேன்கிற ஜ்ஞானத்தினால் அனுஸந்தாநம் செய்துகொண்டு என்னை உபாஸனம் செய்கிறார்கள். 19

பா] இப்படி பகவானை அனுபவிப்பது ஒன்றையே ஸுகமாக உடைய மஹாத்மாககளாகிய ஜ்ஞானிகளின் நடவடிக்கையைச்சொல்லி அவர்களுக்கே விஶேஷத்தைத் தெரிவிப்பதறகாகத் தெரியாதவர்களாய் காம்ய பலங்களை விரும்புகிறவர்களின் நடவடிக்கையைச் சொல்லுகிறார்—

𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌾𑌂 𑌸𑍋𑌮𑌪𑌾𑌃 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃
𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇 ।
𑌤𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕𑌮𑍍
𑌅𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 ॥ 20
𑌤𑍇 𑌤𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂
𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 ।
𑌏𑌵𑌂 𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾
𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 ॥ 21

---

*சொல்லுவது உசிதமாகையினால் இப்பொழுதிருப்பவை முதலியவைகளை அர்த்தமாகச் சொன்னபோதிலும் செதனங்களையும் அசேதனங்களையும் விட்டுவிடவில்லை, இந்தவஸ்துக்களே அந்தந்ததசைகளையுடையவைகளாய்க் கொண்டு அந்தப் பதங்களுக்கு அர்த்தமாகிறபடியினால். அன்றிக்கே 'எல்லா' என்பது முதல் [1] 'ஸஹஸ்ர க்ருதவ:' என்றாரம்பித்துச்சொல்லப்பட்ட எல்லா ஶ்லோகங்களின் அர்த்தத்தைச் சொல்லியிருப்பதாக நினைதுக் கொள்ளவேண்டியதாகவுமாம். எல்லாம அந்தப் பகவானுக்கு அதீனமாக இருக்கிறது என்று சொல்லியிருப்பதை கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட உபாஸனத்தோடுசேர்க்கிறார்.—'இப்படி அனேகவித' என்றாரம்பித்து எல்லாவற்றையும் சரீரமாகஉடையவஸ்து ஒன்று என்பது இங்கே சொல்லப்படுகிறதேயல்லாமல்ப்ரளயதசையை அடைந்ததாய் பேர்ரூபம் இவைகளின் பிரிவு இல்லாத வஸ்து ஒன்றென்று சொல்லப்பட்டவில்லை. கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜ்ஞான யஜ்ஞம் இது என்று தெரிவிப்பதற்காக 'ஜ்ஞானத்தினால் அனுஸந்தானம் செய்து கொண்டு' என்று சொல்லப்பட்டது.* 19

---

[1] பகவத்கீதை 9-16.

ப-ரை] த்ரைவித்யா: ருக்யஜுஸ்ஸாம என்கிற மூன்று வேதங்களில் நிஷ்டையையுடையவர்கள், ஸோமபா: ஸோமலதையின் ரஸத்தைப் பானம் செய்தவர்களாய், பூதபாபா: போக்கப்பட்ட பாவங்களை யுடையவர்களாய், மாம் என்னை, யஜ்ஞை:யாகங்களினால், இஷ்ட்வா ஆராதனம் செய்து, ஸ்வர்கதிம் ஸ்வர்கலோகத்தையடைவதை, ப்ரார்த்தயந்தே ப்ரார்த்திக்கிறார்கள், தே அவர்கள், புண்யம் ஸுகமான, ஸுரேந்த்ரலோகம் தேவேந்திரனுடைய லோகத்தை, ஆஸாத்ய அடைந்து திவ்யான் ஸ்வர்கத்திலுண்டான, தேவபோகான் தேவதைகளாலனுபவிக்கக்கூடிய வஸ்துக்களை, திவி அந்த ஸ்வர்கலோகத்தில், அஶ்நந்தி அனுபவிக்கிறார்கள், தே அவர்கள், தம் அந்த, விஶாலம் விசாலமான, ஸ்வர்கலோகம் ஸ்வர்கலோகத்தை, புக்த்வா அனுபவித்துவிட்டு, புண்யே புண்யம், க்ஷீணே நாசத்தை அடைந்தபொழுது, மர்த்யலோகம் மனுஷ்யலோகத்தை, விஶந்தி அடைகிறார்கள், ஏவம் இப்படி, காமகாமா: காம்யபலங்களை விரும்புகிற, த்ரயீதர்மம் மூன்று வேதங்களிலும் சொல்லியிருக்கிற தர்மங்களை, அநுப்ரபந்நா: அடைந்தவர்கள், கதாகதம் போக்குவரத்தை, லபந்தே அடைகிறார்கள். 20-21

பா] ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் இம்மூன்றும் த்ரைவித்யம் என்னப்படுகிறது. இந்த த்ரிவித்யையில் நிஷ்டையையுடையவர்கள் த்ரைவித்யா: என்னப்படுகிறார்கள். வேதாந்தங்களில் நிஷ்டையையுடையவர்

தா] 'ஸததம் கீர்த்தயந்த:' என்றதற்குப் பிறகு 'த்ரைவித்யா:' என்பது முதலியது பொருத்தமில்லாதது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக முன்பின் க்ரந்தங்களில் தொடர்ந்து வருகிற இந்த ஸந்தர்ப்பத்தின் அர்த்தத்தைத் தெரிவித்துக்கொண்டு ஸங்கதியையும் சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. 'பகவானை அனுபவிப்பது ஒன்றையே ஸுகமாக உடைய, மஹாத்மாக்களாகிய, ஜ்ஞானிகளுடைய' என்கிற மூன்று பதங்களினாலும் '1 மஹாத்மாநஸ்து' 'ஜ்ஞாநேந' 1 'அநந்யமநஸ:' என்று முன்பு சொன்னதை ஞாபகப்படுத்தியிருக்கிறது. '2 அவஜாநந்தி' என்றிவை முதலியவைகளில் சொல்லியிருப்பதைவிட '1 மஹாத்மாநஸ்து என்றிவை முதலியவை ஜ்ஞானிகளின் விசேஷத்தைச் சொல்லுவதாயிருந்தபோதிலும் பக்தி செய்வது, நாமங்களைச் சொல்லுவது முதலியவை பக்தர்களின் ஸ்வரூபத்தை நிரூ

1 பகவத்கீதை 9-13. 2 பகத்கீதை 9, 11.

பிக்கிறபடியினால்—'நடத்தையைச்சொல்லி' என்று சொல்லப்பட்டது. மேலே சொல்லப்போகிற எல்லையில்லாத மேன்மையையுடைய ப்ரயோஜனம், ஸுலபமாகச் செய்யக்கூடியதாயிருக்கை முதலியவைகளும் இப்படி நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடைய அந்த மஹாத்மாக்களுக்கே விசேஷமாக யிருக்கவேண்டியது என்றெண்ணி—'அவர்களுக்கே விசேஷத்தைக் காட்டுவதற்காக' என்று சொல்லப்பட்டது. 'தெரியாதவர்களாய்' என்பதினால் '2 வாமஹாவஜாநகஃ' என்று முன்பு சொல்லப்பட்டவர்களே இவ்விடத்தில் அல்பமான பலங்களையுடைய யாகம் முதலியவைகளாலும் விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறார்கள், என்று காட்டப்பட்டது. 'ஜெத்ரவிஷ்யாஃ' என்கிற இடத்தில் இருக்கிற ஒரு விதக்கணக்கின் ப்ரஸித்தியினாலும், 'த்ரயீமுகம்' என்று மேலே சொல்லியிருப்பதைஅநுஸரித்தும் வித்யைகள் இன்னதென்றுகாட்டிக்கொண்டு பதத்தினர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ருக்வேதம்' என்றாரம்பித்து. இம்மூன்று வித்யைகளும் சேர்த்துச் சொல்லப்பட்டன, என்றறியவும் த்விகுஸமாஸமாகையினால் 'த்ரிவிஷ்யம்' என்று ஒருமையும், ஒன்றன்பாலும் உண்டானது. அகாரத்தைக் கடைசியிலுடைய பதம் முடிவில்வந்தால் பெண்பாலாகச் சொல்லவேண்டும் என்பதற்கு பாத்திரம் முதலிய கணங்களில் சொல்லப்பட்ட பதங்களுக்கு அப்படியில்லை என்று சொல்லவேண்டும் என்று அபவாத ஶாஸ்த்ரம் உண்டு. '1 தத்யீதெதவெத' என்கிற ஸூத்ரத்தினால் 'அண்' என்னும் விகுதி வந்திருக்கிறது என்று நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'த்ரிவித்யையில் நிஷ்டையை யுடையவர்கள்' என்று. எல்லா வேதங்களையும் சொல்லுவதா யிருந்தால் விரோதம் வருகிறபடியினால் கர்மபாகத்தை மாத்திரம் சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காக 'கேவலம்' என்னும் பதம். இதையே விசதப்படுத்துகிறார்—'வேதாந்தத்தில் நிஷ்டையை யுடையவர்களல்ல' என்று. இப்படி விஷயங்களை ஏற்படுத்துவதற்காக முன்பு சொல்லிய மஹாத்மாக்களும் வேதங்களின் ஒருபாகத்தில் நிஷ்டையை யுடையவர்கள் என்பதையும், எல்லாவேதங்களும் அந்தந்த வஸ்துக்களின் வழியாய் பகவானைச் சொல்லுகிறதென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்பதையும், சொல்லிக்கொண்டும், உண்மையான ஜ்ஞானத்தினால் விசேஷபலமாகிய மோக்ஷ

1 அஷ்டாத்யாயீ. 4, 2, 59, தத் அத்தை, அதீதே ஓதுகிறான். தத்—அத்தை, வேத தெரிந்துகொள்ளுகிறான், என்கிற அர்த்தத்தில் அண் என்னும் ப்ரத்யயம் வரும் என்று சேர்த்துக்கொள்ளவும்.

களல்ல, வேதாந்தங்களில் நிஷ்டையை யுடைய மஹாத்மாக்களோவென்னில் முன்பு சொல்லியபடி எல்லா வேதங்களினுலும் அறியத்தகுந்தவனுகிய என்னையே அறிந்துகொண்டு அதிகமான என்னிடத்தில் உண்டான ப்ரீதியினுல் செய்யப்பட்ட நாம கீர்த்தனம் முதலியவைகளினுலும் ஜ்ஞாநயஜ்ஞத்தினுலும் என்னையே ப்ரயோஜநமாக உடையவர்களாய்க்கொண்டே என்னையே உபாஸிக்கிருர்கள். மூன்றுவேதங்களில் நிஷ்டையையுடையவர்களோ வென்னில் வேதங்களில் சொல்லப்படுகிற கேவலம் இந்திரன் முதலியவர்களைக் குறித்துச்செய்யப்பட்ட யாகத்தில் மிகுதியான ஸோமத்

*மென்கிற ப்ரயோஜனத்தில் ஆசையையும், அதின் உபாயத்தில் நிஷ்டையையும் உடையவர்கள் என்கிற மாத்திரமாகிய விசேஷத்தினுல் வேறுஸித்தாந்தத்தில் நிஷ்டையை யுடையவர்கள் என்கிற ப்ரமத்தையும் விலக்கிக்கொண்டும் கேவலம் வேதங்களில் சொல்லிய தர்மங்களில் நிஷ்டையையுடையவர்களின் நடத்தையைச் சொல்லும்பொழுது அதினுல் விலக்கப்பட்ட எல்லா ஆகாரங்களையும் காட்டுகிருர்.—'* வேதாந்தங்களில் நிஷ்டையையுடைய*' என்ருரம்பித்து. இத்தால் வேறு ஸந்தர்பங்களில் நான்காவது வித்யை என்று மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய உபநிஷத்துக்களில் சொல்லப்படுகிற வித்யையே சொல்லப்படுகிறது, என்று தெரிவிக்கப்பட்டது அப்படியே ஜனகருக்கு யாஜ்ஞவல்க்யர் 1 'ஏஷா தே'ந்வீக்ஷிகீ வித்யா சதுர்த்தீ ஸாம்பராயிகீ' என்றும், 2 'சதுர்த்தீ ராஜசார்தூல வித்யைஷா ஸாம்பராயிகீ' என்றும் சொல்லியிருக்கிருர். 'வேதங்களில் சொல்லப்படுகிற' என்பதற்கு கர்மபாகத்தில் மாத்திரம் சொல்லப்படுகிற என்று அர்த்தம். மஹாத்மாக்களும் உபாஸனத்திற்கு அங்கமாகிய கர்மங்களில் ஸோமத்தைப்பானம் செய்வது உண்டாகையினுல் அதை விலக்குவதற்காக* 'கேவலம் இந்திரன் முதலியவர்களைக் குறித்துச் செய்யப்பட்ட யாகத்தில் மிகுதியான' *என்று சொல்லப்பட்டது. யஜ்ஞத்தின் மிகுதியில்லாத ஸோமத்தைப்பானம் செய்தல் அதர்மமாதலால்* யாகத்

1 *மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மம்,* 3234,7 *தே உனக்கு* **ஏஷா** *இந்த, ஆன்வீக்ஷிகீ நீதியைச்சொல்லுகிற, வித்யா வித்யையும், சதுர்த்தீ நான்காவதாகிய, ஸாம்பராயிகீ மோக்ஷத்தைக்கொடுக்கக்கூடிய, வித்யையும் சொல்லப்படுகிறது, என்று சேர்த்துக்கொள்ளவும்.*

2 *மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மம்,* 323, *ராஜசார்தூல ஓ ராஜஶ்ரேஷ்டனே, சதுர்த்தீ நான்காவதாகிய ஏஷா இந்த வித்யா—வித்யை, ஸாம்பராயிகீ மோக்ஷத்தைக்கொடுக்கக்கூடியது.*

தைப்பானம் செய்தவர்களாய் ஸ்வர்கம்முதலியவற்றை அடைவதற்குத் தடையான பாவங்களிலிருந்து விடுபட்டவர்களாய் கேவலம் இந்திரன் முதலியவர்களையே தேவதையாக உடையவை என்று தங்களால் நினைக்கப்பட்ட அந்த யாகங்களினால் வாஸ்தவத்தில் அந்தத் தேவதைகளைச்சரீரமாக உடைய என்னை ஆராதனம் செய்து அப்படியிருக்கிற என்னைத்தெரிந்து கொள்ளாதவர்களாய் ஸ்வர்கத்தை அடைவதை ப்ரார்த்திக்கிறார்கள்.

---

*தில் மிகுதியான' என்று சொல்லியிருக்கிறது* ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே *(ஸ்வர்கத்தை அடைவதை ப்ரார்த்திக்கிறார்கள்) என்று மேலே சொல்லப்போகிறபடியினால் அதற்குத் தடையான பாவங்களைப்போக்குவது மாத்திரம் தான் இவ்விடத்தில் ஸோமபானத்திற்குச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால்*'ஸ்வர்கம் முதலியவற்றை அடைவதற்குத் தடையான பாவங்களிலிருந்து விடுபட்டவர்களாய்' *என்று சொல்லப்பட்டது. இங்கு ஸ்வர்க என்னும் பதம் மற்றவைகளையும் குறிக்கிறது என்று தெரிவிப்பதற்காக* 'முதலியவற்றை'*என்னும்பதம்.* பூதபாபா: *என்பதற்குப்பரிசுத்தம் செய்யப்பட்ட பாவங்களை யுடையவர்களாய் என்று அர்த்தம் பாபங்களுக்குப் பரிசுத்தம் செய்யப்பட்டிருக்கையாவது போக்கப்பட்டிருக்கை தான் அதுவே புருஷனுக்கும் பரிசுத்தம் செய்யப்பட்டிருக்கை என்கிற அபிப்ராயத்தினால்,* 'பாவங்களிலிருந்து விடுபட்டவர்களாய்' *என்று சொல்லப்பட்டது. ஸ்வர்கம் முதலியவற்றை விரும்புகிறவர்களுக்கு பகவானைப்பற்றி உண்மையான ஜ்ஞானமில்லை என்பதும், பகவானைக்குறித்து யாகங்களைச் செய்பவர்களுக்கு பகவானை அடைவது உண்டாகும் என்பதும், கேவலம் இந்திரன் முதலியவர்களைக் குறித்துச் செய்யும் யாகங்களும் வாஸ்தவத்தில் பகவானுக்கு ஆராதனங்கள் என்பதும், இப்படி இவர்கள் தெரிந்து கொள்ளாமையினால் அவைகளுக்குப்பலம் பூர்த்தியாக உண்டாவதில்லை என்பதும்* 1 'யேப்யந்யதேவதாபக்தா:'*என்பது முதல் மூன்று ஸ்லோகங்களில் சொல்லப்போகிற படியினால்* 'யஜ்ஞைரிஷ்ட்வா' *(யாகங்களினால் என்னை ஆராதனம் செய்து) என்பது பகவானுடைய நினைவினால் உண்டான வார்த்தையல்லது யாகம்செய்கிறவனுடைய நினைவினாலுண்டான வார்த்தையல்ல. என்று தெரிவிப்பதற்காக* 'கேவலம் இந்திரன் முதலிய தேவதைகளையே' *என்பது முதல்* 'தெரிந்துகொள்ளாதவர்களாய்' *என்பது வரையிலும் சொல்லப்பட்டது. யாகங்களை அனு*

---

1 பகவத்கீதை, 9,23.

அவர்கள் துக்கத்தின் ஸம்பந்தமில்லாத தேவேந்திரனுடைய லோகத்தை அடைந்து அந்தந்த இடங்களில் ஸ்வர்கத்திலுண்டான தேவதைகளின்

---

ஷ்டிப்பது அதின் பலங்களில் ஆசையை முன்னிட்டதாக இருந்த போதிலும், யாகம் முடிந்த பிறகே பலத்தைக்கொடு, என்று அந்தத் தேவதையை ப்ரார்த்திக்கிறதாகையினால், 'யாகம்செய்து ப்ரார்த்திக்கிறார்கள்' என்று சொல்லி இருக்கிற க்ரமம் உசிதம்தான். புண்யகர்மங்களையும், அதினாலுண்டாகும் அபூர்வங்களையும் புண்யமான லோகம் என்று சேர்த்துச் சொல்வது பொருந்தாதாகையினாலும், பலமாக இருக்கும் தேவலோகம் பரிசுத்தமானது, என்றுஶாஸ்திரங்களில் சொல்லப்படாமையினாலும், அதிக துக்கத்தின் ஸம்பந்தமில்லாதது, என்று ஶாஸ்திரத்தில் சொல்லி இருப்பதினாலும், இந்தப் புண்யம், என்னும் பதமானது புண்யத்தினால் போக்கக்கூடிய பாபத்தின் கார்யமான துக்கம் இல்லை, என்பதைக் காட்டுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'துக்கத்தின் ஸம்பந்தமில்லாத' என்று சொல்லப்பட்டது. அன்றிக்கே புண்யத்தினாலுண்டாக்கப்படும் ஸுகம் நிறைந்தது, என்று லக்ஷணையாக அர்த்தம் சொல்லில் துக்கமில்லை, என்பது தானாகவே ஏற்பட்டதாகவுமாம், புண்யங்களினாலுண்டாக்கக்கூடிய என்று அர்த்தம் சொல்லில் புனருக்தி என்னும் தோஷம்வரும், 'தேவேந்திரனுடைய லோகத்தை அடைந்து' என்று சொல்லி இருந்தபோதிலும் மறுபடியும் 'திவி' (ஸ்வர்கலோகத்தில்) என்று சொல்லி இருப்பது விசித்திரங்களான போகங்களுக்கு இடமாகிய அதின் உட்பிரிவான இடங்களைக் குறிக்கிறது என்பது உசிதம், என்று நினைத்து 'அந்தந்த இடங்களில்' என்று சொல்லப்பட்டது. 'திவ்யாந்' என்றது மோஹத்தை உண்டாக்கத்தக்கது என்று தெரியப்படுத்துவதற்காக, 'பூமியிலுண்டானபோகங்களைவிட உயர்ந்தவை'என்று சொல்லி இருக்கிறது. 'திவ்யாந்' ஸ்வர்கலோகத்திலுண்டான 'தைவஹோமாந்' தேவதைகளால் அனுபவிக்கக்கூடிய வஸ்துக்களை என்று அர்த்தம். தேவதைகளால் அனுபவிக்கக்கூடிய பசு, புரோடாசம் முதலிய பூமியிலுண்டான வஸ்துக்களை விலக்குவதற்காக திவ்யாந், என்னும் பதம் சொல்லி இருக்கிறதாகவுமாம். தேவதைகள். ஸ்வரூபத்தினாலும் காலத்தினாலும் அளவிடப்பட்ட தங்களுடைய போகங்களை அல்லவோ தங்களைக் குறித்து யாகம் செய்கிறவர்களுக்கும் கொடுக்கிறார்கள். 'கூஶ்நந்தி' என்பதற்கு ஸாப்பிடுகிறார்கள்' என்று அர்த்தம், அதாவது அனுபவிக்கிறார்கள் என்று அர்த்தம். 'ஸுக்ஷா' என்றல்லவோ மேலேயும் சொல்லப்படு·

போகங்களை அனுபவிக்கிறார்கள். அவர்கள் அந்தவிசாலமான ஸ்வர்கலோகத்தை அனுபவித்து அதை அனுபவிப்பதற்குக் காரணமான புண்யம் நாசமடைந்தபொழுது மறுபடியும் மனுஷ்யலோகத்தை அடைகிறார்கள். இப்படி வேதாந்தங்களில் ஏற்பட்ட ஜ்ஞானமில்லாதவர்களாய் காம்யங்களான ஸ்வர்கம் முதலியவைகளில் ஆசையுள்ளவர்களாய் கேவலம் வேத

---

*கிறது. 'விஶாலம்' என்பதினால் பூமியிலுண்டான ஸுகங்களைவிட அதிகமானது என்று காட்டி இருக்கிறது 'ஸ்வர்கலோகத்தை அனுபவித்து' என்பதற்கு ஸ்வர்கலோகத்திலுண்டான போகங்களை அனுபவித்து என்று அர்த்தம். ஸ்வர்கத்தை அனுபவிப்பதினால், ஸம்ஸாரபந்தத்தை உண்டாக்கக் கூடியமற்ற புண்யங்கள் நாஶத்தை அடைவதில்லை. கர்மங்களின் மிகுதியினால், உயர்ந்த ஜாதி முதலியவைகளை அடைவதும் ஶ்ருதியில் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'அதை அனுபவிப்பதற்குக் காரணமான' என்று சொல்லப்பட்டது. இத்தால் 1 'ஸ்வர்கேபி பாதபீதஸ்ய' என்றிவை முதலியது காட்டப்பட்டது. 'மர்த்யலோகம்' என்னும் பதத்தினால், பூலோகமும் அஸ்திரம் என்பது காட்டப்பட்டது 'ஏவம்' (இப்படி) என்கிற பதத்தில் அபிப்ராயத்திலேற்பட்ட காரணத்தினால் 'த்ரயீ' என்னும் பதத்தின் அர்த்தத்திற்குச் சுருக்கத்தையும், காம்யமான பலங்களை ஆசைப்படுவதற்குக் காரணத்தையும் காட்டுகிறார். 'இப்படி வேதாந்தங்களிலேற்பட்ட ஜ்ஞானமில்லாதவர்களாய்' என்று. இப்படி அனுவாதம் செய்ததும் ஸ்வரூபத்தில் மோக்ஷத்திற்குக் காரணமான தர்மமும் வேறு மாதிரியாக மாறுவதினால் திரும்பிவருவதற்குக் காரணமாகிறது, என்று தெரியப்படுத்துவதற்காக. 'காமகாமா:' என்னும் பதத்தில் முதலிலிருக்கும் காம என்னும் பதம் ஆசைப்படக்கூடிய வஸ்துக்களைச் சொல்லுகிறது. என்று சொல்லுகிறார்.*—காம்யங்களான ஸ்வர்கம் முதலியவைகளில் ஆசையுள்ளவர்களாய், என்று மோக்ஷமும் *பலமாகையினால், ஆசைப்படக்கூடிய தாகையினாலே அதை விலக்குவதற்காக* 'ஸ்வர்கம் முதலிய' *என்னும் பதம்.* 'கேவலம்' *என்னும் பதத்தினால், வேதாந்தங்களிலேற்பட்டதாய் இவைகளுக்கு அங்கியுமாகிய உத்தமமான தர்மம் இல்லை, என்று சொல்லி இருக்கிறது. 'கதம்' என்றால் போகுதல், 'ஆகதம்' திரும்பிவருதல். இத்தையே அடைகிறான்,*

---

1 விஷ்ணுபுராணம், 6, 5, 50 ஸ்வர்கேபி ஸ்வர்கலோகத்திலும், பாதபீதஸ்ய விழுவதிலிருந்து பயந்தவனுக்கு, ஸுகமில்லை, என்று சேர்த்துக்கொள்ளவும்.

ங்களில் சொல்லிய தர்மங்களை அடைந்தவர்கள் போக்குவரத்தை அடைகிறார்கள்; அதாவது அல்பமும் அஸ்திரமுமான ஸ்வர்கம் முதலியவைகளை அனுபவித்துவிட்டு மறுபடிமறுபடி திரும்புகிறார்கள் என்றர்த்தம். 20-21

பா] மஹாத்மாக்களோ வெனில் எல்லையில்லாத ப்ரியமாகிய என்னுடைய த்யானத்தைச் செய்து, எல்லையில்லாத மேன்மையை உடைய ஆனந்தமாகிய என்னை அடைந்து, மறுபடியும் திரும்பிவருவதில்லை, என்று அவர்களுடைய விசேஷத்தைக் காட்டுகிறார்—

**அநந்யாஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே |**
**தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் || 22**

ப-ரை] யே எந்த ஜநா: ஜனங்கள், அநந்யா: வேறொரு ப்ரயோஜனத்தையும் உடையவர்களாக அல்லாமல், சிந்தயந்த: நினைத்துக்கொண்டு, மாம் என்னை, பர்யுபாஸதே பூர்த்தியாக உபாஸிக்கிறார்களோ, நித்யாபியுக்தாநாம் எப்பொழுதும் என்னுடன் சேர்ந்து கொண்டிருக்க வேண்டுமென்கிற ஆசையை உடைய, தேஷாம் அவர்களுக்கு, யோகக்ஷேமம் என்னை அடைவதாகிய யோகத்தையும், அது நீடித்திருத்தலாகிய க்ஷேமத்தையும், அஹம் நான், வஹாமி கொடுக்கிறேன். 22

---

*என்று அர்த்தம். போகுதலும் திரும்பிவருதலும் மாத்திரம் தோஷமல்லவே, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அல்பமும்' என்று ஆரம்பித்து. அவைகளை அனுபவிக்கும் பொழுதும் மிகவும் அல்பமாகையினாலும். [1] 'பசு எப்படியோ அப்படியே இவன் தேவதைகளுக்கு' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லி இருக்கிற மாதிரியாகவும் இதைவிட மேலான ப்ரஹ்மா முதலியவர்களின் ஸுகத்தைத் தெரிந்துகொள்வதினாலும் துக்கமாக இருக்கிறது. அதுவும் அஸ்திரம் என்று தெரிந்துகொள்வதினால் அதிக துக்கமாக இருக்கிறது. அதற்கு அழிவு உண்டாகும் பொழுதோ வெனில் மிகவும் அதிக துக்கமாக இருக்கிறது. ஏற்றத்தைப்போல அடிக்கடித் திரும்பிவருவதினாலும் கர்பத்தில் வஸிப்பதினாலும்வ்யாதி நாசம்இவை முதலியவைகளினாலுண்டாகும் துக்கம் சொல்லவே முடியாது. இப்படி எண்ணிறந்ததாய் பரம்பரையாக நடந்துகொண்டு இருக்கிறது என்று தாத்பர்யம்.* 20-21

---

1 *ப்ருஹதாரண்யகம்*, 3, 4, 10.

பா] வேறொரு ப்ரயோஜனத்தையுமுடைத்தாகாதவர்களாய்,என்னை த்யானம் செய்யாவிடில் ஆத்மாவைத் தரிப்பதே கிடையாமையினால், என்னை த்யானம் செய்வதொன்றையே ப்ரயோஜனமாக உடையவர்களாய், என்னை.எந்த மஹாத்மாக்கள் த்யானம் செய்து கொண்டு எல்லாக் கல்யாண

---

தா] உபாயமே ஸுகமாகயினாலும், ப்ரயோஜனம் அழிவில்லாததாகவும்,எல்லையில்லாத ஆனந்தமாகவும் இருப்பதினாலும் மஹாத்மாக்களுக்குவிசேஷம் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'மஹாத்மாக்களோவெனில்' என்று ஆரம்பித்து. 'அநந்யா:'என்கிற விசேஷணத்தினால் த்யானம் எல்லையில்லாத ஸுகம் என்பது ஸித்தித்தது. 'மாம்' (என்னை) முதலிய பதங்களினால் யோகக்ஷேமம் என்கிற பதத்தின் தாத்பர்யம் ஏற்பட்டது, 1 'யேப்யந்யதேவதா' என்று மேலே சொல்லப்படுகிறதை அனுஸரித்து இவ்விடத்திலும் வேறு தேவதைகளே தோன்றுகின்றன. ஆனாலும் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட காம்ய கர்மங்களை விலக்கவேண்டியதாகையினால், இவ்விடத்தில் உபாயத்தோடு சேர்ந்ததும் அதைவிட வேறானதுமான பலத்தை விலக்குவதற்காக 'அநந்யா:' என்னும் பதம். ஆகையினாலேயே ஒன்று என்கிற அனுஸந்தானத்தைச சொல்லுகிறது, என்பதும் யுக்தமல்ல, என்று காட்டுகிறார்—'வேறொரு ப்ரயோஜனத்தையு முடைத்தாகாதவர்ளாய்' என்று. அதின் காரணத்தைச் சொல்லுகிறார்—'என்னை த்யானம் செய்யாவிடில்' என்று. 'அநந்யாஶ்சிந்தயந்த:' என்று சேர்த்துச்சொல்லி இருப்பதினால், த்யானம் செய்வதைவிட வேறொரு ப்ரயோஜனமுமில்லை, என்று ஏற்பட்டது. ஒரு விசேஷணமுமில்லாத 'ஜநா:'என்னும் பதம் ஒருவிதமான மனிதர்களுடைய கூட்டத்தில் ப்ரயோகிக்கப்படுகிறபடியினால் அதை விலக்குவதற்காக இந்த ஸந்தர்ப்பத்தில் ஏற்பட்ட அர்த்தம்—'எந்த மஹாத்மாக்களாகிய ஜனங்கள்' என்று சொல்லப்பட்டது.அவர்களுக்கு அல்லவோ ஜன்மமடைந்ததின் ப்ரயோஜனமுண்டு, என்று தாத்பர்யம். 'பர்யுபாஸதே' என்கிற இடத்தில் ப்ரயோகிக்கப்பட்ட பரி என்னும் உபஸர்கம் வ்யர்த்தம் என்பது பொருந்தாதாகையினால், அற்தகாக பரித: என்று பிரித்து எல்லாவிதத்தாலும், என்கிற தாத்பர்யத்தை வைத்துக்கொண்டு வேறு ப்ரமாணங்களிலேற்பட்ட விசேஷத்தைக் காட்டுகிறார்—'எல்லாக் கல்யாணக் குணங்

---

1 பகவத்கீதை, 9, 23.

குணங்களோடும் கூடியவனாகவும் எல்லா விபூதிகளையுமுடையவனான என்னைக் குறைவில்லாமல் உபாஸிக்கிறார்களோ, எப்பொழுதும் என்னோடு சேர்ந்திருக்கவேண்டுமென்கிற ஆசையையுடைய அவர்களுக்கு, நான் என்னை அடைவதாகிய யோகத்தையும் திரும்பிவருதலில்லாமையாகிய க்ஷேமத்தையும் கொடுக்கிறேன்.　　22

யே'ப்யந்யதேவதாபக்தா யஜந்தே ஶ்ரத்தயாந்விதா: |
தே'பி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் ||　　23

ப-ரை] கௌந்தேய ஓ அர்ஜுன, யே அபி எவர்கள், அந்யதேவதாபக்தா: இதர தேவதைகளிடத்தில் பக்தியுள்ளவர்களாய், ஶ்ரத்தயா ஶ்ரத்தையோடு, அந்விதா: கூடியவர்களாய், யஜந்தே யாகம் செய்கிறார்களோ, தே அபி அவர்களும், அவிதிபூர்வகம் ஶாஸ்த்ரத்தைமுன்னிடாமல், மாம் ஏவ என்னையே, யஜந்தி யாகம் செய்கிறார்கள்.　　23

---

களோடும்' என்று ஆரம்பித்து. 1 ப்ரதீகோபாஸனத்தை விலக்குவதற்காக இது சொல்லப்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'குறைவில்லாமல்' என்று. குணங்கள் விபூதிகள் இவைகளில் ஒன்றும் குறைவில்லாமல் என்று அர்த்தம். 'அஹம்' (நான்) என்பதினால் மிகுந்த ஔதார்யம் ஸௌஶீல்யம் முதலிய குணங்கள் சொல்லப்படுகின்றன. மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு அவர்கள் விரும்பாமலிருக்கத்தானே போகங்களைக் கொடுத்தபோதிலும் மோக்ஷத்திற்கு உபயோகமில்லாத தேஹயாத்ரை முதலிய யோகக்ஷேமங்கள் கொடுக்கவேண்டியவைகளல்லவே, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னை அடைவதாகிய' என்று ஆரம்பித்து. இதுவரையிலும் கிடைக்காத வஸ்து கிடைத்தல் யோகம். கிடைத்ததைக்காப்பாற்றுதல் க்ஷேமம். இவை இரண்டையும் சேர்த்துச் சொல்லி இருப்பதினால் ஒருமையாகச் சொல்லியிருக்கிறது. 'வஹாமி' என்பதற்குக் கொடுக்கிறேன், என்று அர்த்தம்.　　22

---

1 பகவானுக்கு சரீரங்களாகிய சேதனாசேதனங்களை மாத்திரம் உபாஸனம் செய்தல்.

பா] இந்த்ரன் முதலிய தேவதைகளிடத்தில் பக்தியை உடைய கேவலம் வேதத்தில் நிஷ்டையைஉடைய எவர்கள் ஶ்ரத்தையோடு கூடியவர்களாய் இந்தரன் முதலிய தேவதைகளைக் குறித்து யஜ்ஞம் செய்கிறார்களோ அவர்களுக்கும் முன்பு சொல்லிய ந்யாயத்தினால், எல்லாம் எனக்கு ஶரீரமாகையினால் என்னையே ஆத்மாவாக உடையவைகளாகையினாலும் இந்த்ரன் முதலிய பதங்களும் என்னையே சொல்லுகிறபடியினால், உண்மையில் என்னைக்குறித்தே யாகம் செய்கிறார்கள். ஆனால் விதியை முன்னிடாமல் யாகம் செய்கிறார்கள். இந்த்ரன் முதலிய தேவதைகளுக்குக் கர்மங்களில் ஆராதிக்கப்படுகிறபடியினால் ஸம்பந்தமுண்டு என்று "நான்கு ஹோதாககளை உடைய கர்மங்கள் எந்தப் பகவான் ஆத்மாவாக இருக்கும்பொழுது தேவதைகளினால் பெருமையை அடைகின்றனவோ" என்று அர்த்தமுள்ள வாக்யம் முதலிய வேதாந்த வாக்யங்கள் எப்படி

தா] எல்லாத் தேவதைகளும் உமக்கு ஶரீரமாகையினால் 'ஸெ஢தெ விஷ்ணோ' என்று கீழே சொல்லியபடிக்கு உண்மையில அவைகள் உம்முடைய ஆராதனம் என்று தெரிந்துகொண்ட நீர் கேவலம் கர்மங்களைச் செய்தவர்களுக்கும் மோக்ஷமாகிய யோகக்ஷேமத்தை ஏன் கொடுப்பதில்லை. என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் இந்த இரண்டு ஶ்லோகங்களினால் சொல்லப்படுகிறது. 'தூ' என்பது ஆக்ஷேபத்திற்கு பரிஹாரத்தைக் காட்டுகிறது. 'அந்யதேவதாஃ' என்பதின் சேர்க்கையினால் ஏற்பட்டது 'இந்த்ரன் முதலிய தேவதைகளை' என்பது. 'முன்பு சொல்லிய ந்யாயத்தினால்' என்பதற்கு '1 உயிஷவ஡ம' என்றிவை முதலிய இடங்களிலும், இந்த அத்யாயத்திலும் '2 மயா ததமிதஂஸவ஡ம' என்றிவை முதலிய இடங்களிலும். என்று தாத்பர்யம். 'என்னைக்குறித்தே யாகம் செய்கிறார்கள்' என்கிற வரையிலும் ஆக்ஷேபத்தை அனுவாதம் செய்கிறது. மேல்பாகம் விதிக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆனால்' என்று. விதி, தன்னைப்பற்றிய ஞானத்தின் வழியாய் எந்த அனுஷ்டானத்திற்குக் காரணமாக இருக்கிறதோ அது 'வி஧ிபூ஢வக஡ம' (விதியை முன்னிட்டது). அப்படிக் கல்லாதது 'அவிதிபூ஢வக஡ம' (விதியை முன்னிடாதது). ஶாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களுக்கு விதியை முன்னிடாமை எப்படிப் பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இந்த்ரன் முதலிய தேவதைகளுக்கு' என்று ஆரம்பித்து. 'அதை முன்

1 பகவத்கீதை, 7, 7. 2 பகவத்கீதை, 9, 4.

விதிக்கின்றனவோ அதை முன்னிட்டுக்கொண்டு யாகம் செய்கிறதில்லை. வேதாந்த வாக்யங்கள் பகவானுக்கு ஶரீரமாக இருக்கிற இந்த்ரன் முதலிய தேவதைகளே ஆராதிக்கப்படுகிறார்களென்பதைவிதித்துக்கொண்டு அவைகளுக்கு ஆத்மாவாகிய பகவானே நேரில் ஆராதிக்கத் தகுந்தவன் என்பதை விதிக்கின்றன. நான்கு ஹோதாக்களை உடைய கர்மங்களாவன அக்னிஹோத்ரம், தர்ஶ பூர்ணமாஸம் முதலிய கர்மங்கள். எந்தப் பரமாத்மா அந்தர்யாமியாக இருந்தால் மட்டும் அவனுக்கு ஶரீரமாகிய இந்த்ரன் முதலிய தேவதைகளினால் பெருமையை அடைகின்றனவோ,

---

னிட்டுக்கொண்டு' என்பதற்கு, *அப்படிப்பட்ட விதியின் ஞானத்தை முன்னிட்டுக்கொண்டு, என்று அர்த்தம்.* எப்படி விதிக்கின்றனவோ *என்று கீழ்ச் சொல்லியதை விவரிக்கிறார்*—'வேதாந்த வாக்யங்கள்' *என்று ஆரம்பித்து. இந்த்ரன் முதலிய தேவதைகள் ஆராதிக்கப்படு கிறார்கள் என்பது மாத்திரம் கர்மபாகத்திற் சொல்லப்பட்டது. அந்தத்தேவதைகளின் உண்மையான ஸ்வரூபம் வேதாந்தங்களில் சொல்லப் படுகிறது; ஆகையினால் விரோதமில்லை.* 'நேரில்' *என்பதற்கு ஒரு காரணமுமில்லாமல் என்று அர்த்தம். அன்றிக்கே முக்யம் என்று ஆகவுமாம். ஹவிஸ்ஸுக்கு தேவதையாகிய பகவானுக்குவிசேஷணமாகையினால், இந்த்ரன்முதலியவர்களும் தேவதைகளாகச்சேர்க்கப்பட்டார்கள். ப்ரதர்தனவித்யை முதலியவைகளில் எப்படி உபாஸிக்கத் தகுந்தவர்களாகச் சேர்க்கப்பட்டார்களோ அப்படியே, என்றுதாத்பர்யம். கீழ்ச் சொல்லிய ஶ்ருதிவாக்யத்திற்கு இதுவே அர்த்தம் என்பதெப்படி, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்*—நான்குஹோதாக்களை உடைய கர்மங்களாவன'*என்று ஆரம்பித்து. இது உபலக்ஷணம் என்று நினைத்து* 'அக்னிஹோத்ரம்தர்ஶபூர்ணமாஸம்' *என்று சொல்லப்பட்டது.* "1 *எல்லா ஜனங்களுக்கும் உள்ளே ப்ரவேசித்து நியமிக்கிறவன், ஆகையினால் எல்லாவற்றிற்கும் ஆத்மா" என்றிவை முதலிய இடங்களில் ப்ரஸித்தமான 'யத்' என்னும் பதத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது,* 'எந்தப் பரமாத்மா' *என்று ஆரம்பித்து* "2 *எவனுக்கு ஸூர்யன் ஶரீரமோ" என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளை நினைத்துக்கொண்டு,* 'அவனுக்கு ஶரீரமாகிய' *என்றிவை முதலியது சொல்லப்பட்டது. கர்மங்களுக்குத் தேவதைகளினால் உண்டாக்கப்படுகிற பெருமையாவது அவர்களுக்கு ஆராதனம் என்கிற மேன்மைதான். அதாவது கடைசியில் பலத்திற்கு ஸாதன*

---

1 *யஜுர்வேதம், ஆரணம்,* 3, 10, 2. *ப்ருஹதாரண்யகம்* 5, 7, 9.

அதாவது இந்தக் கர்மங்கள் இந்த்ரன் முதலிய தேவதைகளுக்கு ஆராதனங்கள், என்கிற இந்தப் பெருமையை அடைகின்றனவோ, என்று அர்த்தம். 23

பா] ஆகையினால் மூன்று வேதங்களிலும் நிஷ்டையை உடையவர்கள் இந்தக் கர்மங்கள் இந்த்ரன் முதலியவர்களை ஶரீரமாக உடைய பகவானுடைய ஆராதனங்கள் ஆராதிக்கப்படுகிறவனும் அந்தப்பகவானே. என்று தெரிந்துகொள்வதில்லை. அவர்கள் அல்பபலத்தை அடைந்தவர்களாயும் நழுவுதலையே ஸ்வபாவமாக உடைவர்களாகவுமாகிறார்கள். இத்தையே சொல்லுகிறார்—

**அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச ।**
**ந து மாமபிஜாநந்தி தத்த்வேநாதஶ்ச்யவந்தி தே ॥** 24

ப-ரை] அஹம் ஹி நானல்லவோ, ஸர்வயஜ்ஞாநாம் எல்லா யஜ்ஞங்களுக்கும், போக்தா ச அனுபவிக்கிறவனும், ப்ரபுரேவ ச பலத்தைக் கொடுக்கிறவனும், மாம் என்னை, தத்த்வேந இவ்விதமாக, நாபிஜாநந்தி தெரிந்துகொள்வதில்லை, அத: ஆகையினால், தே அவர்கள் ச்யவந்தி நழுவுகிறார்கள். 24

பா] 'ப்ரபுரேவ ச' என்பதற்கு அந்தந்தக் கர்மங்களிலும் பலத்தைக்

---

மாகும் தன்மையிலேயே முடிவுபெறுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்.—'அதாவது' என்று ஆரம்பித்து. 23

தா] 'அஹம் ஹி' என்கிற ஶ்லோகம், விதியை முன்னிடாதது, என்பதை விவரிக்கிறது என்பதையும், அப்படிப்பட்ட கர்மம் மிகவும் ப்ரயோஜனமற்றதோ, என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறது, என்பதையும் காட்டுகிறார்—'ஆகையினால்' என்று ஆரம்பித்து. 'ஸர்வ' என்னும் பதத்தினால் இந்த்ரன் முதலியவர்களைக் குறித்துச் செய்கிறவர்களுக்கும் என்று தாத்பர்யம். 'அராதிக்கப்படுகிறவனும்' என்று 'போக்தா' என்கிற பதத்தின் தாத்பர்யத்தைச் சொல்லி இருக்கிறது. 'ச்யவந்தி' (நழுவுகிறார்கள்) என்பதினால் வேறோரிடத்திலிருந்து என்று ஏற்பட்டது. அந்த இடமும் அந்தந்தக் கர்மங்களினாலுண்டாக்கப்படுகிற அஸ்திரமான பலமே என்பது 'யாந்தி' என்கிற மேல் ஶ்லோகத்தினாலும் வேறு ப்ரமாணங்களினாலும் ஏற்பட்டது. அத்தையே சொல்லுகிறார். 'அல்பபலத்தை' என்று ஆரம்பித்து. பலம் அல்பமாக இருக்கை

கொடுக்கிறவனும் நானே, என்று அர்த்தம். 24

பா] அஹோ இது பெரிய விசித்திரம்? எது வென்னில் ஒரே கர்மத்தில் இருப்பவர்கள் ஸங்கல்பம் மாத்ரம் வேறுபட்டதினாலேயே சிலர் மிகவும் அல்பமான பலத்தை அடைந்தவர்களாயும் நழுவுதலை அடையும் ஸ்வபாவமுள்ளவர்களாயும் ஆகிறார்கள், சிலர் எல்லை இல்லாதமேன்மையை உடைய ஆனந்தமான பகவானை அடைதலாகிய பலத்தை அடைந்தவர்களாகவும், திரும்பிவராதவர்களாகவும் ஆகிறார்கள், என்கிற இது, என்று சொல்லுகிறார்—

யாந்தி தேவவ்ரதா தேவாந் பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா: ।
பூதாநி யாந்தி பூதேஜ்யா: யாந்தி மத்யாஜிநோऽபி மாம் ॥ 25

ப-ரை] தேவவ்ரதா: தேவதைகளை ஆராதனம் செய்கிறோம் என்கிற ஸங்கல்பமுடையவர்கள், தேவாந் தேவதைகளை, யாந்தி அடைகிறார்கள், பித்ருவ்ரதா: பித்ருக்களை ஆராதனம் செய்கிறோம் என்கிற ஸங்கல்பமுடையவர்கள், பித்ரூந் பித்ருக்களை, யாந்தி அடைகிறார்கள், பூதேஜ்யா: பூதங்களைக்குறித்து யாகம் செய்கிறவர்கள், பூதாநி பூதங்களை, யாந்தி அடைகிறார்கள், மத்யாஜிநோऽபி என்னைக்குறித்து யாகம் செய்கிறவர்களும் மாம் என்னை, யாந்தி அடைகிறார்கள். 25

---

யாவது. இடத்தினாலும், காலத்தினாலும், ஸ்வரூபத்தினாலும். ஆகையினால் அதை அடைந்தவர்களுக்கு, நழுவுதலை அடையும் ஸ்வபாவத்தை உடைத்தாய் இருக்கை. இவ்விடத்தில் 'ப்ரபு:' என்னும் பதம் 'ப்ரதிஷ்டா ப்ரபு:' என்கிற இடங்களிலேபோல நியமிக்கிறவன், என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது. என்பதை விலக்குவதற்காக இவ்விடத்திற்குப் பொருத்தமுள்ள அர்த்தத்தைச் சொல்லுகிறார்— 'அந்தந்தக் கர்மங்களிலும்' என்று ஆரம்பித்து. ஸூத்ரமும், 1 'ஃபலமத உபபத்தே:' என்றுசொல்லி இருக்கிறது. எப்படி இந்த்ரன் முதலியவர்களுக்கு ஆராதனமாகச் செய்தபோதிலும் அந்தந்தக்கர்மங்களிலும் பலத்தைக் கொடுக்கிறவன் நானேயோ, அப்படி என்னுடைய ஆராதனத்தில் பலத்தைக்கொடுக்கிறவன் வேறொருவனும் இல்லை, என்று 'ப்ரபு' என்பதின் அர்த்தம். 24

---

1 ஶாரீரகஸூத்ரம், 3, 2, 37, அத:—இந்தப்பகவானிடத்திலிருந்து, பலம் ப்ரயோஜனம் (கிடைக்கிறது) உபபத்தே:—யுக்திக்குப் பொருந்தி இருக்கிறபடியினால்.

பா] இங்கே 'வ்ருதா:' என்னும் பதம் ஸங்கல்பத்தைச் சொல்லுகிறது. எவர்கள் தர்ஶபூர்ணமாஸம் முதலிய கர்மங்களினால், இந்த்ரன் முதலியவர்களை யாகம் செய்கிறோம், என்று, இந்த்ரன் முதலியவர்களைக் குறித்து யாகம் செய்வதில் ஸங்கல்பமுடையவர்களோ,அவர்கள் இந்த்ரன் முதலியவர்களை அடைகிறார்கள். எவர்கள் பித்ருயஜ்ஞம் முதலியவைகளினால் பித்ருக்களைக் குறித்து யாகம் செய்கிறோம் என்று பித்ருக்களைக்குறித்து யாகம் செய்ய ஸங்கல்பமுடையவர்களோ,அவர்கள் பித்ருக்களை அடைகிறார்கள். எவர்கள் யக்ஷர் ராக்ஷஸர்கள் பிசாசங்கள் முதலிய பூதங்களைக் குறித்துயாகம் செய்கிறோம் என்று பூதங்களைக்குறித்து யாகம் செய்வதில் ஸங்கல்பமுடையவர்களோ, அவர்கள் பூதங்களை அடைகிறார்கள். எவர்கள் அந்த யஜ்ஞங்களினாலேயே தேவதைகள்பித்ருக்கள்பூதங்கள்இவைகளை

---

தா] ஒரே கர்மத்திற்கு போகம் மோக்ஷங்களாகிய விருத்தங்களான பலங்களுக்கு ஸாதனமாக இருக்கை எப்படி ஸம்பவிக்கும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக, ஸங்கல்பம் என்கிற பெயரை உடைய ஒத்தாஸைக் காரணம் விசித்திரமாகையினால், அது பொருந்தும், என்று நினைத்து ப்ரயோஜனங்களின் வ்யத்யாஸம் இந்த ஶ்லோகத்தினால் காட்டபபடுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'அஹோ இது பெரிய விசித்திரம்' என்று ஆரம்பித்து. ஸங்கல்பம் வெவ்வேறாக இருப்பதினால், விசித்திரங்களான பலங்களுக்கு ஸாதனமாக இருக்கை 1 ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களிலும் ஸித்தமாக ஏற்பட்டிருக்கிறது. 'வ்ருதா:' என்னும்பதம் ஸங்கல்பத்தைச சொல்லுகிறது, என்பதற்கு இவ்விடத்தில் ஸங்கல்பம் வெவ்வேறாக இருப்பதினால் அல்லவோ பலம் வெவ்வேறாக இருக்கிறது, என்று தாத்பர்யம். 'தேவவ்ருதா:'என்றிவை முதலியஇடங்களில் யாகமும், 'ஸம்பூதேஜ்யா:' என்கிற இடத்தில் ஸங்கல்பமும் வேண்டி இருக்கிறபடியினாலே சேர்க்கப்பட்டது. இவ்விடத்தில் 'ஸம்பூத' என்னும் பதம் ப்ராணிகளைச் சொல்லுகிறது, என்பதை விலக்கி, ரஜோகுணம் மேலிட்டவர்களினாலும் தமோகுணம் மேலிட்டவர்களினாலும், ஆராதனம் செய்யத்தகுந்தவைகளின் கூட்டத்தைக்காட்டுகிறது, என்று தெரிவிக்கிறதற்காக 'யக்ஷர்' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. தேவதைகளைக்குறித்து யாகம் செய்தல, பித்ருக்களைக்குறித்து யாகம் செய்தல் முதலியவைகளைப் போல, இவ்விடத்தில் கர்மங்களின் ஸ்வரூபத்திற்கே பேதம் இல்லை, என்பது 'அந்த யஜ்ஞங்களினா

---

1 ஜ்யோதிஷ்டோமம் எல்லாப் பலங்களையும் கொடுக்கும் என்று ஶாஸ்திரங்களிலேற்பட்டிருப்பதினால், எவன் எந்தப் பலத்திற்காக, என்று ஸங்கல்பித்துக் கொள்ளுகிறானோ அந்தப் பலமுண்டாகிறது என்று ஏற்பட்டது,

ஶரீரமாக உடையவனுகவும், பரமாத்மாவாகவும், பகவானுகவு மிருக்கிற வாஸுதேவனை ஆராதனம் செய்கிறேம் என்று எண்ணி என்னை ஆராதனம் செய்கிறர்களோ, என்னைக் குறித்து யாகம் செய்கிற அவர்கள், என்னையே அடைகிறர்கள. தேவதை முதலியவர்களை ஆராதனம் செய்கிறேம் என்கிற ஸங்கல்பமுடையவர்கள், தேவதை முதலியவர்களை அடைந்து அவர்களோடுகூட அல்பமான ஸுகத்தை அனுபவித்து அவர்கள் நாஶமடையும் காலத்தில் அவர்களோடுகூட நாஶமடைந்தவர்களாகிறர்கள். என்னைக் குறித்து யாகம் செய்கிறவர்களோ வெனில், ஆத்யந்தமில்லாதவனுயும், எல்லாம் தெரிந்தவனுயும், ஸத்யஸங்கல்பனுயும், எல்லையில்லாத மேன்மையை உடைய, எண்ணிறந்த கல்யாணகுணங்

---

லேயே' என்று சொல்லப்பட்டது. வேறு வாக்யங்களினுல் விதிக்கப்பட்ட தேவதைகளைக்குறித்த யாகம் முதலியவைகளை அனுவாதம் செய்துகொண்டு இவ்விடத்தில் அவைகளுக்கு வேறே ப்ரயோஜனம் காட்டப்படுகிறதே யல்லாமல், ஜ்யோதிஷ்டோமம் முதலியவைகளை விதிக்கிற வாக்யங்களைப்போல் ப்ரயோஜனத்திற்காகப் புதிதாய் உபாயம் விதிக்கப்படுகிறதில்லை, என்று தெரிவிப்பதற்காக, எவர்கள், அவர்கள், என்கிற பதங்களைச் சேர்த்துகொண்டு வ்யாக்யானம் செய்யப்பட்டது. எவர்களுக்கு ஸங்கல்பம்தேவதைகளிடத்திலேயே அவர்கள் தேவவ்ருதர் என்று சொல்லப்படுகிறர்கள். எவர்களுடைய யாகங்கள் பூதங்களைக்குறித்தோ அவர்கள் பூதேஜ்யர் என்று சொல்லப்படுகிறர்கள் அவரவர்களினுல் அடையத்தகுந்தவர்களின் வ்யத்யாஸத்தைச் சொல்லி இருப்பது, அவரவர்களுக்கு ஸமமான இடம், காலம் போகம் இவைகளைச சொல்லுவதற்காக, என்று காட்டுகிறர்.—தேவதை முதலியவர்கள்' என்று ஆரம்பித்து. 'ஆத்யந்தமில்லாத' என்பதினுல், அடையத்தகுந்த வஸ்து அநித்யம் என்னும் காரணத்தைக கொண்டு திரும்பிவருதல் இல்லை, என்று பரிஹரித்திருக்கிறது. ' எல்லாம் தெரிந்தவனுயும்' என்பதினுல், விரோதிகளைத் தெரிந்துகொள்ளவில்லை என்கிற காரணத்தைக்கொண்டும், ஸத்யஸங்கல்பனுயும், என்பதினுல், அஶக்தியைக் காரணமாகக்கொண்டும், பகவான் ஸ்வதந்த்ரன் என்பதினுல் ஸந்தேஹிக்கக்கூடியதுமான திரும்பிவருதல் இல்லை, என்றுதெரிவித்திருககிறது. பக்தர்களைத்திருப்பி அனுபபமாட்டேன்' என்கிற ஸங்கல்பமும் ஸத்யம் தான் என்று தாத்பர்யம். ஸ்வரூபத்தினுல்அல்பமாக இருக்கையினுல், உண்டாகக்கூடிய ஸுகமும் அல்பம், என்கிற

களின் கூட்டங்களுக்கு இருப்பிடமாயும், எல்லையில்லாத மேன்மையை உடைய ஆனந்தமாயு மிருக்கிற என்னை அடைந்து மறுபடியும் திரும்புவ தில்லை, என்று அர்த்தம். 25

பா] என்னை ஆராதிப்பவர்களுக்கு இந்த விசேஷமும் இருக்கிறது, என்று சொல்லுகிறார்—

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி।
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: ॥ 26

ப-ரை] பத்ரம் இலையையாவது, புஷ்பம் பூவையாவது, பலம் பழத்தையாவது, தோயம் ஜலத்தையாவது, ய: எவன், மே எனக்கு, பக்த்யா பக்தியினால், ப்ரயச்சதி கொடுக்கிறானோ, பக்த்யுபஹ்ருதம் பக்தியினால் ஸமர்ப்பிக்கப்பட்ட, ப்ரயதாத்மந: பரிசுத்தமான மன தை உடையவனுடைய, தத் அந்த வஸ்துவை, அஹம் நான், அச்நாமி ஸாப்பிடுகிறேன். 26

பா] எல்லோருக்கும் ஸுலபமாகக் கிடைக்கக்கூடிய இலையையவாது, பூவையாவது, பழத்தையாவது, ஜலத்தையாவது எவன் பக்தியினால்

---

*ஸந்தேஹத்தை விலக்குவதற்காக, 'எல்லையில்லாத' என்று ஆரம்பித்து இரண்டு விசேஷணங்கள் சொல்லப்பட்டன. இத்தால் வேறு வஸ்துக் களில் ஆசையுண்டாகாமைக்கும் காரணமாதலினால், தன்னுடைய இஷ்டத்தைக் காரணமாகக்கொண்டும் திரும்பிவருதல் இல்லை, என்று விலக்கப்பட்டது.* 25

*தா] வருத்தம் ஸமமாக இருந்தபோதிலும் பரயோஜனத்தில் வ்யத்யா ஸம் சொல்லப்பட்டது. பிறகு உபாயத்தில் வ்யத்யாஸம் சொல்லப் படுகிறது, என்று சொல்லுகிறார்—'என்னை ஆராதிப்பவர்களுக்கு' என்று ஆரம்பித்து. என்னை ஆராதனம் செய்தலையே ஸ்வபாவமாக உடைய வர்களுக்கு, என்று அர்த்தம். 'இதுவும்' என்பதற்கு உபாஸிக்கப்படும் வஸ்து அதிக ஸுலபமாக இருப்பதினாலுண்டாகிய உபாயம் ஸுலப மாக செய்யக்கூடியதாய் இருக்கையாகிற இதுவும் என்று அர்த்தம். இலை, பூ, பழம், இவைகளுக்குள் முதலில் சொல்லப்பட்டதினால் பின் னாலே சொல்லப்பட்டது உண்டாக்கப்படுகிறபடியினால், வரிசையாகச் சொல்லப்பட்டது. அவைகளுக்குள் அந்தந்தக் காலத்திற்குத் தக்கபடி ஸம்பவிக்கக்கூடிய ஏதாவதொன்று கிடைக்கும் என்று தாத்பர்யம். பத்ரம் முதலிய பதங்களை ஒரே பதமாகச் சேர்த்துச் சொல்லாமையி*

ஞலும், வ முதலியவை இல்லாமையினுலும் ஒவ்வொன்றே போதுமானது என்று காட்டப்பட்டது. இதை ப்ரகாசப்படுத்துவதற்காக 'இலையையா வது' என்பது முதல் சொல்லப்பட்டது. ஒவ்வொன்றினுலேயே பகவான் ஸந்தோஷத்தை அடைகிருன் என்றல்லவோ 1 "[illegible] । [illegible] ॥" என்கிற வசனத்தில் சொல்லப்படுகிறது. மற்றென்றுமில்லாவிட்டாலும் ஜலம் ஸுலபமாகக்கிடைக்கக்கூடியது என்கிற அபிப்ரா யத்தினுல் அதைக் கடைசியில் சொல்லி இருக்கிறது. இது பொருள் செலவு முதலியவைகளினுல் ஸம்பாதிக்கக்கூடியதாகையினுல் தரித்திரர்களுக்குக் கிடைக்கத்தகாதது, என்பதில்லை, என்கிற அபிப்பிராயத்தி னுல், எல்லோருக்கும் ஸுலபமாகக் கிடைக்கக்கூடிய, என்று சொல்லப்பட்டது. வேறு இடத்திலும் 2 "[illegible] । [illegible] ॥" என்று சொல்லுகிறர்கள். 'யஃ' (எவன்) என்று பொதுவாகச்சொல்லியிருப்பதி னுல், அபராதம் செய்தவன், அபராதம் செய்யாதவன், மூடன், பண் டிதன் முதலிய வ்யத்யாஸங்களை நான் பார்ப்பதில்லை என்றபிப்ராயம். 3 '[illegible]' என்றிவை முதலியது மேலே சொல்லப்போகிருரல்லவா? '[illegible]' என்பதினுல் த்ருஷ்டத்திலாவது, அத்ருஷ்டத்திலாவது வரும் தோஷ

1, மஹாபாரதம், உத்யோக பர்வம், 87, 13 ஜநார்தன:-பகவான், பூர்ணத் நிறைந்த, அபாம் கும்பாத் அன்யத் தண்ணீர்க்குடத்தைத் தவிர வேறென்றையும் (அதாவது பூர்ண கும்பம்கொண்டு எதிர்வருதல் தவிரவேறென்றையும் என்று அர்த்தம்) பாதாவனே ஜனுத் அன்யத் திருவடிகளை அலம்புதல் தவிரவேறென்றை யும், குஶலஸம் ப்ரஶ்னுத் அன்யத் குஶலப்ரஶ்னம் பண்ணுதல் தவிர வேறென் றையும், நேச்சதி விரும்புவதில்லை.

2 கருடபுராணம், பூர்வகண்டம், 219,34 அக்ரீதலப்யேஷு விலைக்குவாங் காமல் கிடைக்கக்கூடிய, பத்ரேஷு இலைகள், புஷ்பேஷு பூக்கள், பலேஷு பழங்கள், தோயேஷு ஜலங்களும், ஸதைவ எப்பொழுதும் ஸத்ஸு இருக்கும்பொ ழுது பகத்யேகலப்யே பக்தி ஒன்றினுலேயே அடையக்கூடிய, புராணே அனுதி யான புருஷே பகவான், ஸத்யபி இருக்கும்பொழுதும், கிமர்த்தம் என் முக்தயை மோக்ஷத்திற்காக, யத்ன:-ப்ரயத்தினம், நக்ரியதே செய்யப்படுகிறதில்லை.

3 பகவத்கீதை 9-32.

எனக்குக்கொடுக்கிறுனே, அதாவது அதிகமாகிய என்னிடத்திலுண்டான ப்ரீதியினுல், அவைகளை ஸமர்ப்பித்தால் அல்லது ஆத்மதாரணத்தையே அடையாதவனுகையினுல் அவைகளை ஸமர்ப்பிப்பதொன்றையே ப்ரயோ

த்தைப் பரிஹரிப்பது, மற்றொரு ப்ரயோஜனம் இவைகளுக்குக் காரண மாக என்பது விலக்கப்பட்டது, இத்தையே ப்ரகாசப்படுத்துகிறுர்— 'அதிகமாகிய என்னிடத்திலுண்டான ப்ரீதியினுல்' என்று. "[illegible] நஃ" என்கிற பதத்திற்கு வ்யாக்யானம்செய்கிறுர்—அவைகளை 'ஸமர்ப் பிப்பதொன்றையே' என்று ஆரம்பித்து 1 "[illegible] । [illegible] ॥" "[illegible] ॥" என் றிவை முதலிய விடங்களிலே போல வேறுப்ரயோஜனங்களிலாசையில் லாமையாகிற அபேக்ஷத்தி யில்லாமையே இங்குப் பரிசுத்தமாக இருத் தல், என்று அர்த்தம். புண்யகர்மங்களிலும் ப்ரயோஜனத்திலாசையே மனஸ்ஸுக்கு அஶுத்தி. அதையும் 2 "[illegible] । [illegible] ॥" என்று சொன்னுர்கள். "[illegible]" (பக்தியினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட) என்று மறுபடியும் சொல் லியிருப்பது பகவானுல் ஆதரிக்கத்தகுந்ததாக இருப்பதற்குக்காரணம் இதுவே, என்று தெரிவிப்பதற்காக அப்படியே 3 "[illegible]

1 தஸ்ய அந்தப்பகவானுடைய, தாம்ரதலௌ சிவந்த உள்ளங்கால்களை உடை ய ஸுப்ரதிஷ்டிதௌ நன்ருக அமைக்கப்பட்ட, ஸுஜாதம்ருதுராக்தாபி: அழகாக வும், ம்ருதுவாகவும், சிவந்துமிருக்கிற, அங்குலீபி:-விரல்களினுல், அலங்க்ருதௌ அலங்கரிக்கப்பட்ட, சரணௌ திருவடிகள், ப்ரயதேந பரிஶுத்தனுக இக்கிற மயா என்னுலே, மூர்த்னு தலையினுல், க்ரஹீத்வா பிடித்து அபிவந்திதௌ ஸேவிக் கப்பட்டதுகள்.

2 மஹாபாரதம், ஆதிபர்வம், 1,301, தப:-தபஸ்ஸு, நகல்க:-தோஷமல்ல, அத்யயனம் வேதாத்யயனம் செய்தல், நகல்க:-தோஷமல்ல, ஸ்வாபாவிக:-ஸ்வபா வத்திலேயே ஏற்பட்ட,வேதவிதி:வேதங்களில்சொல்லப்பட்டகர்மானுஷ்டானம், நகல்க: தோஷமல்ல, ப்ரஸஹ்ய பலாத்காரம் செய்து, வித்தாஹரணம் கொள்ளை யடித்தலும், நகல்க: தோஷமல்ல, தான்யேவ அவைகளே? பாவோபஹதாநி எண்ணத்தினுல் கெடுக்கப்பட்டதுகளாய், கல்க: தோஷமாகின்றன.

3 பாஞ்சராத்திரம்.பக்தை:-பக்தர்களினுல், உபஹ்ருதம்கொண்டுவரப்பட்டது, அண்வபி ஸ்வல்பமாக இருந்தபோதிலும், மம எனக்கு, போகாய ஸுகத்தின்பொ ருட்டு, ஜாயதேஆகிறது, அபக்தோ பஹ்ருதம் அபக்தனுல் கொண்டுவரப்பட்டது, பூர்யபி அதிகமாக இருந்தபோதிலும், மே எனக்கு, போகாய ஸுகத்தின்பொருட் டு, நஜாயதே ஆகிறதில்லை.

ஜனமாக உடைய எவன், எனக்கு இலை முதலியவற்றை ஸமர்ப்பிக்கிரு ளோ அவைகளை ஸமர்ப்பித்தலொன்றையே ப்ரயோஜனமாக எண்ணு கையாகிற பரிஶுத்தியுடன்கூடிய மனதை உடைத்தான அவனுடைய அப்படிப்பட்ட பக்தியினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட அந்த வஸ்துவை ஸர் வேஶ்வரனுயும், ஸர்வலோகங்களுடையவும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார ம், இவைகளை லீலையாக உடையவனுகவும், எல்லா இஷ்டங்களையும் அடைந்தவனுகவும், ஸத்ய ஸங்கல்பனுகவும், எல்லை இல்லாதமேன்மை யையுடைய எண்ணிறந்த கல்யாண குணங்களின் கூட்டங்களைஉடை யவனுகவும் ஸ்வபாவத்திலேற்பட்ட எல்லை இல்லாத மேன்மையை

---

[Grantha text] ஹோமாயஜாயமேத" என்று தானே சொல்லி இருக்கிறுர். பலத்தி லாசையுள்ளவர்களுக்கும் ஒருவித பக்தியுண்டு ஆகையினுல் அதை விலக்குவதற்காக "தஸ" என்று சொல்லி இருக்கிறது. என்கிற அபிப் ராயத்தினுல் 'அப்படிப்பட்ட பக்தியினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட' என்று சொல்லப்பட்டது. இலை முதலிய அல்ப வஸ்துக்களை அங்கீகரிப்பதற்கு விரோதியாகிய ஸ்வபாவங்கள் "ஊஹம்" என்கிற பதத்தினுல் சொல் லப்படுகின்றன, என்று காட்டுவதற்காக 'ஸர்வேஶ்வரனுயும்' என்றி வை முதலியது சொல்லப்பட்டது. 'ஸர்வேஶ்வரனுயும்' என்பதற்கு இந்த்ரன் முதலியவர்கள் தங்களுக்கு ஶக்தி வ்ருத்தியடைவதற்காக ஹவிஸ் முதலியவற்றை எப்படி அங்கீகரிக்கிறுர்களோ, அப்படியல்ல நான். எல்லா வஸ்துக்களையும் [illegible] எக்காலத்திலுமுள்ள நியமன ஶக்தியை உடையவனுதலினுல, என்று தாத்பர்யம். 'ஸர்வலோகங்களு டையவும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளை லீலையாக உடைய வனுகவும்' என்பதற்கு, என்னுடைய லீலைக்குக் கருவியாகிய வஸ்து வைத் தவிர வேருகிய இலை முதலியது எனக்கு ஸமர்ப்பிக்கப்படுகிற தில்லையல்லவா, என்று தாத்பர்யம். 'எல்லா இஷ்டங்களையும் அடைந்த வனுகவும்' என்பதற்கு இதுவரையிலும் அடையப்படாததாய் இனி அடையவேண்டியதாகிய வஸ்து ஒன்றுமில்லை, என்று தாத்பர்யம். 'ஸத்யஸங்கல்பனுயும்' என்றதற்கு என்னுல் ஸம்பாதிக்க முடியாததா யும், அயலாரால் ஸமர்ப்பிக்கப்பட்டதொன்றும் என்னுல் அங்கீகரிக் கப்படவில்லை யல்லவா, என்று தாத்பர்யம். 'எல்லையில்லாத'என்றிவை முதலிய வாக்யத்திற்குக் குணங்களினுலும் ஸ்வரூபத்தினுலும் எல்லை யில்லாத ஆனந்தத்தை அனுபவித்து த்ருப்தியடைந்திருக்கிற என க்கு இந்த இலை முதலியது எவ்வளவு, என்று தாத்பர்யம். 'ஸ்வபாவத் திலேற்பட்ட' என்பதினுல் வேறொரு காரணம் வேண்டியதில்லை என்ப

உடைய ஆனந்தமயமான என்னுடைய ஸ்வரூபத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவனுயுமிருந்தபோதிலும் நான், நம்முடைய ஆசைக்குக்கிட்டாததான ப்ரியமான வஸ்துவை அடைந்தாற்போல ஸாப்பிடுகிறேன். அப்படியே மோக்ஷதர்மத்தில் ‡ 'யா: க்ரியா: ஸம்ப்ரயுக்தா: ஸ்யு: ஏகாந்தகதபுத்திபி: । தா: ஸர்வா: ஶிரஸா தேவ: ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம்' என்று சொல்லப்பட்டது. 26

---

தும். 'அனுபவித்துக்கொண்டிருப்பவனுயுமிருந்தபோதிலும்' என்பதினுல் நிவ்ருத்தி செய்யமுடியாதுஎன்பதும் சொல்லப்படுகிறது. 1"பரிபூர்ணோபி ... பக்தை: ... ஸாபேக்ஷவத்தத்தே தேந ப்ரீத: ..." என்கிற வசனத்தின் அர்த்தத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்கிருர்—'ஆசைக்குக்கிட்டாததான' என்று 'ஸாப்பிடுகிறேன்' என்பது அனுபவிக்கிறதை லக்ஷணையாகக் குறிக்கிறது. இததால், நிவேதனம் செய்யக்கூடிய வஸ்து கிடைக்காவிட்டால், இலை முதலியதும் நிவேதனம் செய்யககூடியதாகும், என்று காட்டப்படுகிறது. வேறு பலங்களைவிரும்பும் ஜனங்களினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட வஸ்துக்கள் பகவானுடைய திருவடியைச்சேருகின்றன என்று 2 "தத்ஸர்வம் தேவதேவஸ்ய சரணாவுபதிஷ்டதே" என்கிற ஶ்லோகத்தில் சொல்லி, பரமைகாந்திகளால் ஸமர்ப்பிக்கப்பட்டவைகள் பகவானுல், அதிக ப்ரீதியுடன் தலையினுல் அங்கீகரிக்கப்படுகின்றன, என்பது மோக்ஷ தர்மத்தில் சொல்லப்பட்டது, என்று சொல்கிருர்—அப்படியே' என்று ஆரம்பித்து. 26

---

‡ மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மம், 353, 64 தேவ:-பகவான், ஏகாந்தகதபுத்திபி:-ஒரே நிஶ்சயத்தை அடைந்த புத்தியுள்ளவர்களினுல், யா:-எந்த, க்ரியா:-ஆராதனங்கள், ஸம்ப்ரயுக்தாஸ்யு:-செய்யப்பட்டதுகளோ, தா:-அவைகளை, ஸர்வா:—எல்லாவற்றையும், ஸ்வயம் தானே, ஶிரஸா தலையினுல், ப்ரதிக்ருஹ்ணாதி அங்கீகரிக்கிருர்.

1 மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மம், 353, 64, பகவான் பகவானுனவர் பரிபூர்ணோபி எல்லாம் நிறைந்தவராக இருந்தபோதிலும், பக்தை:-பக்தர்களினுல், கிஞ்சித் ஸவல்பமாகிய யத் எது, ஈரிதம் ஸமர்ப்பிக்கப்பட்டதோ, தத்அத்தை ஸாபேக்ஷவத் ஆசையுள்ளவர்போல, ஆதத்தே அஙகீகரிக்கிருர், தேன அதினுல் ப்ரீத:-ப்ரீதி அடைந்தவராய்க்கொண்டு, அலம் அதிகமாக, ததாதி கொடுக்கிருர்.

2 மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மம 353, 63 தத்ஸர்வம் அவையெல்லாம், தேவதேவஸ்ய பகவானுடைய சரணௌ திருவடிகளை உபதிஷ்டதே அடைகின்றன.

பா] எந்தக் காரணத்தினால் மஹாத்மாக்களாகிய ஜ்ஞானிகளுடைய இந்த விசேஷமும் வாக்குக்கும் மனஸ்ஸுக்கும் எட்டாததோ, ஆகையினால் நீயும் ஜ்ஞானியாக இருந்து கீழ்ச்சொல்லிய அடையாளமுடைய பக்தியின் மிகுதியினால் வணக்கப்பட்ட உன்னையும் உன்னைச் சேர்ந்த வஸ்துக்களையு முடையவனுய்க் கொண்டு, என்னுடைய நாமங்களைச் சொல்லுதலையும், என்னுடைய கார்யங்களில்ப்ரயத்தினம் செய்வதையும், ஆராதனம் செய்வதையும், நமஸ்காரம் செய்வதையும் எப்பொழுதும் செய்துகொண்டே லோகத்தில் ஏற்பட்டதும் வேதத்திலேற்பட்டதுமான, நித்யநைமித்திக கர்மங்களை இவ்விதமாகச் செய், என்று சொல்லுகிறார்.—

யத்கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் ॥　　27

ப-ரை] கௌந்தேய-ஓ அர்ஜுன, கரோஷி(இதி) - செய்கிறாய் (என்பது) யத்- எதுவோ, அஶ்நாஸி (இதி)- ஸாப்பிடுகிறாய் (என்பது) யத்-எதுவோ, ஜுஹோஷி (இதி)- ஹோமம் செய்கிறாய் (என்பது) யத்-எதுவோ, ததாஸி (இதி)-தானம் பண்ணுகிறாய் (என்பது), யத்-எதுவோ, தபஸ்யஸி (இதி) - தவம் செய்கிறாய் (என்பது) யத் - எதுவோ, தத்-அதையே, மதர்ப்பணம் என்னிடத்தில் ஸமர்ப்பிக்கப்பட்டதாக, குருஷ்வ - செய். 27

பா] தேஹயாத்ரைக்கு அங்கமாக லோகத்திலேற்பட்ட கார்யங்களைச் செய்வதையும், தேஹத்தைத் தரிப்பதற்காக ஸாப்பிடுக்கிறாயே அதையும், வேதத்தில் சொல்லப்பட்ட ஹோமம், தானம், தபஸ்ஸு முதலியவைகளைச் செய்வதையும், இவை எல்லாவற்றையும் என்னிடத்தில் ஸமர்ப்பிக்கப்பட்டதாகச் செய். 'அர்ப்யதே' (ஸமர்ப்பிக்கப்படுகிறது) என்கிற வ்யுத்பத்தியினால் அர்ப்பணம், என்று சொல்லப்படுகிறது, அதாவது,

---

தா] கீழ்ச்சொல்லிய அர்த்தங்களினால் முடிவாக ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறதென்று மேல் ஶ்லோகத்திற்கு ஸங்கதி சொல்லுகிறார்—'எந்தக் காரணத்தினால்' என்றாரம்பித்து. மஹாத்மாக்களின் விசேஷம் கீழே சொல்லப்பட்டது, பிறகு அவர்களால் அங்கீகரிக்கப்பட்ட பக்தியோகத்தைச் சொல்லுவதற்காக அதற்கு அங்கமாகிய ஒரு வித புத்தியைச் சொல்லுகிறார், என்கிற அபிப்ராயத்தினால் 'இவ்விதமாகச் செய்' என்று சொல்லப்பட்டது. 'யத்கரோஷி' என்கிற இந்த ஶ்லோகத்தினால் ஸ்வபாவத்தினாலேற்பட்டவைகளும், ப்ரயோஜனத்திற்காக ஏற்பட்டவைகளும், ஶாஸ்திரங்களினால் ஏற்பட்டவைகளுமாகிய எல்லாக் கர்மங்களையும் பகவானிடத்தில் ஸமர்ப்பிப்பதைக் குறிக்-

கிற மந்திரமும் ஞாபகப்படுத்தப்பட்டது. இந்த ஶ்லோகத்தையே 1'யத்கரோஷி' என்று மாற்றி கௌந்தேய என்பதற்குப்பதிலாக ஹரஹரே என்று சேர்த்துக்கொண்டு மதர்ப்பணம் என்பதை ஶிவார்ப்பணம் என்று மாற்றி மந்திரமாகச் சிலர் அநுஸந்தானம் செய்கிறார்கள். இவ்விடத்தில் 'யத்கரோஷி' என்பது கோபலீவர்தந்யாயத்தினால் சுருக்கப்பட்டதாய் 2 ஸ்வபாவத்தினாலேற்பட்ட கர்மங்களை மாத்திரம்சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'தேஹயாத்ரைக்கு' என்றாரம்பித்து. 'யதஶ்நாஸி' என்கிற இது 3ப்ரயோஜனத்திற்காக ஏற்பட்ட கர்மங்களின் கூட்டத்தைக் குறிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—தேஹத்தைத் தரிப்பதற்காக' என்றாரம்பித்து. 'யஜ்ஜுஹோஷி' என்பது முதலியது ஶாஸ்திரத்தினால் ஏற்பட்ட எல்லாக் கர்மங்களையும் குறிக்கிறது என்பதையும் அப்படியே குறிக்கப்படுகிறவைகளைச் சேர்த்துச் சொல்லுகிற ஆகாரத்தையும் காட்டுகிறார்—'வேதத்தில் சொல்லப்பட்ட' என்பது முதல். இவ்விடத்தில் யத் என்னும் பதங்களெல்லாம் க்ரியையைச் சொல்லுகின்றன மதர்ப்பணம் என்னும் பதமும் ஸமர்ப்பிக்கிறதாகிற க்ரியையைச் சொல்லுவதாயிருந்தால் என்னிடத்தில் ஸமர்ப்பிக்கிறதை உடையவைகளாக என்று வ்யதிகரணபஹுவ்ரீஹி என்னும் ஸமாஸம் சொல்லவேண்டிய ப்ரயாஸம் வருகிறபடியினாலே தத்புருஷனென்னும் ஸமாஸம் சொல்லுவதற்குத்தக்கபடிகர்ம என்னும்அர்த்தத்தைச் சொல்லுகிற ப்ரத்யயத்தை முடிவிலுடையது,என்று வ்யுத்பத்திசொல்லுகிறார்:—'அர்ப்யத' என்றாரம்பித்து. 4 'க்ருத்யல்யுடோ பஹுலம்' என்கிற ஸூத்ரத்தில் சொல்லியபடி கர்ம என்கிறஅர்த்தத்தைச் சொல்லுகிற ல்யுட் என்னும் ப்ரத்யயம் இது. என்னிடத்தில் ஸமர்ப்பிக்கப்பட்டதாகச்செய்,என்று பதத்திற்கு அர்த்தம். ஸமர்ப்பிக்கிறதாவது வேறு இடத்தில் இருக்கிற நிலை நின்ற வஸ்துவை மற்றொரு இடத்தில் வைப்பதல்லவா,அது இவ்விடத்தில் ஒரு நிமிஷம் மாத்திரம் நிற்கக்கூடிய கர்மங்களில் எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்:—'அதாவது' என்றாரம்பித்து. ஜீவாத்மா

1 யத்கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத். யத்தபஸ்யஸி ஹரஹரே தத்கரோஷி ஶிவார்ப்பணம்॥ என்றநுஸந்திக்கிறார்கள்.

2 தேஹத்தின் ஸ்வபாவத்தினாலேற்பட்ட இமைக்கொட்டல் மூச்சுவிடுதல் முதலியவைகள். 3 பசிமுதலியவைகள் நீங்குவது முதலிய ப்ரயோஜனத்திற்காக ஏற்பட்டசாப்பிடுதல் முதலிய காரியங்கள். 4 அஷ்டாத்யாயீ 3-3-13

லௌகிகங்களாயும், வைதிகங்களாயு மிருக்கிற, எல்லாக்கர்மங்களுக்கும், கர்த்தாவாக இருக்கையும், ஆராதிக்கப்படுகிறவனுக இருக்கையும், எப்படி என்னிடத்தில், ஸமர்ப்பிக்கப்பட்டதாகிறதோ, அப்படிச் செய். இத்தால் சொல்லப்பட்டதாவது. யாகம், தானம் முதலிய கர்மங்களில், ஆராதிக்கப்படுகிறவர்களாகத் தோன்றுகிற தேவதை முதலியவர்களும் அந்தக் கர்மங்களுக்குக் கர்த்தாவாகவும், அதின் பலங்களை அனுபவிக்கிறவனுகவுமிருக்கிற நீயும், எனக்கு ஶேஷபூதர்களாகையினுலும், என்னுடைய ஸங்கல்பத்துக்கு வஶப்பட்ட ஸ்வரூபம், ஸ்திதி, ப்ரவ்ருத்தி இவைகளை உடையவர்களாகையினுலும் முக்யமான ஶேஷியாயும் முக்யமான கர்த்தாவாயுமிருக்கிற என்னிடத்திலேயே கர்த்தாவாகவும் போக்தாவாகவும் ஆராதனம் செய்கிறவனுகவு மிருக்கிற உன்னையும் ஆராதிக்கப்படுகிற

---

*கர்த்தா என்பதும், போக்தா என்பதும்* 1 ‘கர்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்’ *என்கிற அதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்டது, இந்திரன் முதலியவர்கள் ஆராதிக்கப்படுகிறவர்கள் என்பதும் ஶ்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது, அப்படியே தேவதைகள் வெவ்வேறு என்பதும் விசாரிக்கப்பட்டது. அவனிடத்தில் இல்லாததை அவனிடத்தில்இருப்பதாகஅனுஸந்தானம் செய்தால் ப்ரமமே ஏற்படும் ஆகையினுல் எப்படி பகவானிடத்தில் அவைகளை ஸமாப்பிப்பது; என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்:—*‘இத்தால் சொல்லப்பட்டதாவது’*என்றாரம்பித்து.* ‘முக்யமான கர்த்தாவாயுமிருக்கிற’*என்பதினுல்* 2 ‘பராத்து தச்ச்ருதே:’ *என்கிற அதிகரணத்தின் அர்த்தம் ஞாபகப்படுத்தப்பட்டது.* ‘கர்த்தாவாகவும், போக்தாவாகவும், ஆராதனம் செய்கிறவனுகவுமிருக்கிற’ *என்பவைகளுக்கு முன்,க்ரியைகளுக்கு,அதின் பலத்தை,அதைக்கொடுப்பவர்களை,என்பவைகளை முறையே சேர்த்துக்கொள்ளவேண்டியது முக்யமான கர்த்தாவாகையினுல் கர்த்தாவாகஇருக்கையை ஸமர்ப்பிக்கவேண்டியது,முக்யமான ஶேஷியானபடியினுல் ஆதிராதிக்கப்படுகிறவனுக இருக்கையை ஸமர்ப்பிக்கவேண்டியது, கர்த்தாவாகஇருக்கை முதலியவைகளை உன்னிடத்தில் ஸமர்ப்பித்துவிட்டால் நேராகக்கர்த்தாவான ஜீவாத்மா விஷயத்திலும்ஆராதிக்கப்படுகிற உமக்கு விஶேஷணங்களாகிய இந்திரன் முதலிய தேவதைகளின் விஷயத்திலும் அனுஸந்தானம் செய்யவேண்டியது என்ன? என்கிற கேள்விக்கு ஸமாதானமாக ஸமர்*

---

1, 2 *முதல் வால்யும் 393-வது பக்கம் 1, 2-வது புட்னேட்டுக்களைப் பார்க்க.*

தேவதைகளின் கூட்டத்தையும், ஆராதனமாகிற காரியங்களின் கூட்டத்தையும், இவை யெல்லாவற்றையும் ஸமர்ப்பணம் செய். அதாவது நீ என்னால் நியமிக்கப்படுகிறவன் என்கிறதைமுன்னிட்டு, நீ எனக்கு ஶேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வரூபமாக உடையவன் என்பதையும், ஆராதிக்கப்படுகிற தேவதை முதலியவைகளும் கீழ்ச்சொல்லிய ஸ்வபாவமுடையவைகள, என்பதையும் அதிக ப்ரீதியுடன் கூடியவனாக அனுஸந்தானம் செய்; என்பது. 27

ஶுபாஶுபப²லைரேவம் மோக்ஷ்யஸே கர்மப³ந்த⁴நை:।
ஸந்ந்யாஸயோக³யுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ‖ 28

ப-ரை] ஏவம் இப்படி ஸந்ந்யாஸயோக³யுக்தாத்மா ஸமர்ப்பிக்கிறதாகிறயோகத்தைச் செய்து கொண்டிருக்கிற மனதையுடையவனாகி ஶுபா ஶுபப²லை: நல்லதாயும் கெட்டதாயுமிருக்கிற பலங்களையுடைய கர்மப³ந்த⁴நை: கர்மங்களாகிற பந்தங்களால் மோக்ஷ்யஸே விடப்பட்டவனாகப்போகிறாய் விமுக்த: அவைகளால் விடப்பட்டவனாய் மாம் என்னை உபைஷ்யஸி அடையப்போகிறாய். 28

பா] இப்படி ஸமர்ப்பிப்பதாகிய யோகத்தைச் செய்து கொண்டிருக்கிற மனதை உடையவனாய் தன்னை எனக்கு ஶேஷமாயிருக்கை என்னால் நியமிக்கப்படுகிறவனாயிருக்கை இவைகளையே ஸ்வரூபமாக உடையனாகவும் எல்லாக் கர்மங்களையும் எனக்கு ஆராதனங்களாகவும் அனுஸந்தானம் செய்து கொண்டு லோகத்தில் ஏற்பட்ட கர்மங்களையும் வேதங்களில்

---

ப்பிப்பதை நன்றாக நிரூபித்துக்காட்டுகிறார்:—'நீ எனக்கு' என்றாரம்பித்து பக்தியைச்சொல்லும் ஸந்தர்ப்பமாகையினால் ப்ரீதியுடன் கூடியவனாக என்று சொல்லியிருக்கிறது. 27

தா] 'ஸந்ந்யாஸயோக³யுக்தாத்மா' என்பது பலத்தை விதிப்பதற்காக முன் ஶ்லோகத்தில் சொல்லிய அர்த்தத்தை அனுவாதம் செய்திருக்கிறதே யல்லாமல் ஜ்ஞானயோகம் கர்மயோகம் இவைகளைச் சொல்லுகிறதல்ல, என்கிற அபிப்ராயத்தினால் அன்வயத்தைச்சொல்லுகிறார்:—'இப்படி' என்றாரம்பித்து. இவ்விடத்தில் யோக என்னும்பதம் அனுஸந்தானத்தைச்சொல்லுகிறது. அதுவே கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸமர்ப்பணத்தைச சொல்லுகிற ஸந்ந்யாஸ என்னும் பதத்தினால் விஶேஷித்துச சொல்லப்படுகிறது. 'தன்னை' என்பது முதல் அதையே விவரணம் செய்கிறது. 'லோகத்தில் ஏற்பட்ட' என்பது முதல் ஸ்வபாவத்தில் ஏற்பட்டவைகளுக்கும ப்ரயோஜனத்திற்காக ஏற்பட்டவைக

சொல்லப்பட்ட கர்மங்களையும் செய்து கொண்டிருந்து நல்லதாயும் கெட்டதாயுமிருக்கிற பலங்களையுடைய எண்ணிறந்த பழைய கர்மங்கள் என்கிற பேரையுடைய என்னை அடைவதற்குத்தடையான எல்லாப் பந்தங்களாலும் விடுபடப்போகிறாய், அவைகளினால் விடப்பட்டவனாய் என்னையே அடையப்போகிறாய். 28

பா) மிகவும் உத்தமமான லோகத்திலில்லாத என்னுடைய இந்த ஸ்வபாவத்தைக்கேள்—

---

ளுக்கும் பொதுவாகச் சொல்லியிருக்கிறது. 'நல்லதாயும் கெட்டதாயும் இருக்கிற பலங்களையுடைய' என்பதற்கு அனுகூலமாயும் விரோதயும் இருக்கிற பலங்களையுடைய என்றர்த்தம். 'எண்ணிறந்த' என்பது பன்மையாகச் சொல்லியிருப்பதின் கருத்தைச் சொல்லியிருக்கிறது. ஸமர்ப்பிக்கப்படுகிறது என்கிற புத்தியுடன் செய்யப்படுகிற கர்மங்கள் பந்தத்தை உண்டாக்காதாகையினால் அவைகளை விலக்குவதற்காக 'பழைய' என்னும் பதம். இஷ்டப்பட்ட இடத்துக்குப்போகாமலிருப்பதற்குக்காரணமல்லவோ பந்தம், என்கிற அபிப்ராயத்தினால் 'என்னை அடைவதற்குத் தடையான' என்று சொல்லப்பட்டது. இத்தால் உபாயத்தைச் செய்யத்தடையான பாவங்கள் விலக்கப்பட்டன. இத்தாலேயே நல்ல பலத்தைக்கொடுக்கக்கூடிய கர்மங்களும், அதைவிடமேலான பலத்தை அடைவதற்குத்தடங்கலாகையினால் அவைகளும் விடத்தக்கவைகள் என்று காட்டப்பட்டது 'மாமுபைஷ்யஸி' (என்னை அடையப்போகிறாய்) என்பதின் ஸாமர்த்யத்தினால் 'எல்லா' என்று சொல்லப்பட்டது. 'மோக்ஷ்யஸே' என்று சொல்லப்பட்ட அர்த்தமே 'விமுக்த:' என்று அனுவாதம் செய்யப்படுகிறது, ஆகையினால் புனருக்தியில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்:—'அவைகளால் விடப்பட்டவனாய்' என்று. இவ்விடத்தில் விமுக்த: என்னும்பதம் 1 ஜீவன் முக்தியைச்சொல்லுகிறது என்று சொல்லுகிறவர்கள், அந்த ஜீவன் முக்தி ஸம்பவிக்காதாகையினாலேயே நிராகரிக்கத்தக்கவர்கள். கர்த்தாவாக இருக்கை,பலத்தைக்கொடுக்கிறவனாயிருக்கை,இவைகளைப் போலவே பலமாக இருக்கையும் தனக்கே என்கிற அபிப்ராயத்தினால் என்னையே அடையப்போகிறாய்' என்று சொல்லப்பட்டது. க்ரமமாக அடைவதினாலுண்டாகும் தாமதத்தை விலக்குவதற்காக என்னையே என்பது. 2 'மாமேவைஷ்யஸி' என்று மேலே சொல்லப்போகிறார்.28

---

1. இந்த லோகத்தில் உயிரோடிருக்கும்பொழுதே அத்வைதஜ்ஞானத்தினால் முக்தனாய் விடுகிறான் என்றும் அவர்களுக்கு ஜீவன்முக்தர்கள் என்று பேர் என்றும் அத்வைதிகள் சொல்லுகிறார்கள்.  2 பகவத்கீதை 9 34.

ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:।
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ॥ 29

ப-ரை) அஹம் நான், ஸர்வபூதேஷு எல்லா ப்ராணிகளிடத்திலும் ஸம: ஸமமானவன், மே எனக்கு த்வேஷ்ய: த்வேஷம் செய்யத்தகுந்தவன் நாஸ்தி இல்லை, ப்ரிய: ப்ரியனானவனும், ந இல்லை, யே து எவர்கள் மாம் என்னை, பக்த்யா ப்ரீதியினால், பஜந்தி உபாஸனம் செய்கிறார்களோ, தே அவர்கள், மயி என்னிடத்தில (இருக்கிறார்கள்) அஹமபி நானும், தேஷு அவர்களிடத்தில் (இருக்கிறேன்) 29

பா] தேவதை, பசு, மனுஷ்யன், ஸ்தாவரம் இவைகளாகப் பிரிந்திருக்

---

தா] கிடைக்கத்தகாதது, ஸுலபமாகக் கிடைக்கத்தக்கது. உயர்ந்தது, தாழ்ந்தது என்பவை முதலிய வஸ்துக்களின் தாரதம்யத்தைப் பாராமல் அங்கீகரிப்பது 1 'பத்ரம்' என்னும் ஶ்லோகத்தினால சொல்லப்பட்டது. அத்தால் ஸௌலப்யம் என்னும் குணம்சொல்லப்பட்டதாகிறது. 2 'யத்கரோஷி' என்றிவை முதலிய ஶ்லோகங்களினால் ஏற்கனவே செய்யப்படுகிற கர்மங்களே ஒருவிதமான அனுஸந்தானம் மாத்திரத்தினால் பகவானுக்கு ஆராதனங்களாய் விடுகிறபடியினால் அந்த ஸௌலப்யம் உறுதிப்படுத்தப்பட்டது பிறகு பக்தியோகம்செய்யும் அதிகாரியை ஸ்தோத்ரம் செய்கிற 'ஸமோஹம்' என்கிற இந்த ஶ்லோகத்திலேயெனில் ஜாதி ஆகாரம் முதலிய தாரதம்யத்தைப்பாராமல் பக்தர்களோடு தான் கலந்திருத்தல சொல்லப்படுகிறது; இத்தால் ஸௌசீல்யம் என்னும் குணம் சொல்லப்பட்டதாகிறது. கம்ஸன் முதலியவர்களைக் கொன்றபடியினாலும் 2'தானஹம் த்விஷத: க்ரூரான்' 3'க்ஷிபாம்யஜஸ்ரம்' 'ஆஸுரீஷ்வேவ யோனிஷு' என்றிவை முதலாகச் சொல்லியிருக்கிறபடியினாலும் உண்டாகிய,பகவானுக்கும் ப்ரீதி, த்வேஷம் இவைகள் உண்டோ என்கிற ஸந்தேஹம் நிராகரிக்கத்தக்கது,என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— மிகவும் உத்தமமான' என்றாரம்பித்து. இவ்விடத்தில 'அஹம்' என்னும் பதம் தன்னைத் தவிர மற்றவர்களுக்கு இப்படிப்பட்ட ஸ்வபாவமில்லை என்று மறுக்கிறது,என்கிற அபிப்ராயத்தினால் 'லோகத்திலில்லாத' என்று சொல்லப்பட்டது. 'ஸமோஹம்' என்பதற்கு எதிர்த்தட்டான வ்யத்யாஸம் 'ஸர்வ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்:— 'தேவதை' என்றாரம்பித்து.

---

1 பகவத்கீதை 9-26. 2 பகவத்கீதை, 9-27. 3 பகவத்கீதை, 9-28.

கிற, ஜாதியினாலும், ஆகாரத்தினாலும், ஸ்வபாவத்தினாலும், ஜ்ஞானத்தினாலும், மிகவும் உயர்ந்தவைகளாகவும் தாழ்ந்தவைகளாகவும் இருக்கிற எல்லா ப்ராணிகளிடத்திலும் ஆஶ்ரயிக்கத் தகுந்தவனாக இருக்கையில் நான் ஸமமானவன். இவன் ஜாதி ஆகாரம் ஸ்வபாவம் ஜ்ஞானம் முதலியவைகளினால் தாழ்ந்தவன் என்று ஆஶ்ரயிப்பதில் எனக்கு த்வேஷம்

'ஜாதியினாலும்' என்பதற்கு தேவதை, மனுஷ்யன், ப்ராஹ்மணன், க்ஷத்திரியன் என்பவை முதலியவைகளினாலும் என்றர்த்தம் 'ஆகாரத்தினாலும்' என்பதற்கு அழகுள்ளவன், ஸ்திரீ, புருஷன், ஸமமான அவயவங்களை உடையவன், ஏற்ற குறைவுள்ள அவயவங்களை உடையவன், என்பவை முதலியவைகளினாலும் என்றர்த்தம். 1 'யேஷி ஸம்ஸாரவயோநய: | ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ரா:' என்று மேலே சொல்லப்போகிறாரல்லவா. ஸ்வபாவத்தினாலும்' என்பதினால் ஸத்வகுணம் மேலிட்டிருக்கை, ரஜோகுணம் மேலிட்டிருக்கை முதலியது சொல்லப்படுகிறது. தேவதை முதலியவர்களுக்கும் பகவானை ஆஶ்ரயிப்பது உண்டென்று 2 ,தது பர்யபி பாதராயண: ஸம்பவாத்' என்கிற அதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. அதிக புண்யத்தினாலுண்டான விஶேஷ ஜ்ஞானமுடைய கஜேந்த்ரன் ஸுக்ரீவன் முதலியவர்களிடத்திலும் ப்ரஸித்தமாக இருக்கிறது ஆகையினால் திர்யகதிகரணத்திற்கும் விரோதமில்லை. ஸ்தாவரங்களிலும் சாபம் முதலிய காரணங்களினால் உண்டான சிலரிடத்தில் ஜ்ஞானமுண்டென்று மஹர்ஷிகள் சொல்லுகிறார்கள். ஆகையினால் மனதின் வ்யாபாரமாகிய பகவானை ஆஶ்ரயித்தல் எல்லாவற்றிலும் ஸம்பவிக்கும். 3 "ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:" என்கிற நிஷேதம் அவைகளின் ப்ரஸ்தாவத்தை அபேக்ஷிக்கிறபடியினால், ஜாதிமுதலியவைகளினால் உண்டான மேன்மையும் தாழ்வும் இங்கே மறுக்கப்படுகிற த்வேஷம் ப்ரியம் இவைகளின் ப்ரஸ்தாவத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்டன, என்று சொல்லுகிறார்—'இவன்' என்று ஆரம்பித்து. த்வேஷம் செய்யத் தகுந்தவனாக இருக்கையும் ப்ரியனாகஇருக்கையும் விடத்தகுந்தவனாவதற்கும் க்ரஹி

1 பகவத்கீதை, 9-32.

2 சாரீரகஸூத்ரம், 1-3-25. தத் - அந்த பகவானுடைய, உபாஸனம் உபர்யபி- நமக்கு மேலாகிய தேவதைகளிடத்திலும் உண்டு. ஸம்பவாத் அவர்களுக்கும் மோக்ஷத்தில் ஆசை உண்டாகலாமாகையினால் (என்று) பாதராயண:- வ்யாஸர் எண்ணுகிறார். 3 பகவத்கீதை, 7-17

செய்யத்தக்கவன் இல்லை, அதாவது அருவருக்குத் தக்கவனானபடியினால் விடத்தக்கவன் இல்லை, அப்படியே என்னை ஆஸ்ரயித்தவன் என்பதைத் தவிர ஜாதி முதலியவைகளினால் மிகவும் உயர்ந்தவன் இவன் என்று அவைகளையுடையவனாகையினால் என்னை ஆஸ்ரயிப்பதில் ப்ரியன் ஒருவனும் இல்லை அதாவது அங்கீகரிக்கத்தக்கவன் ஒருவனும் இல்லை. ஆனால் அதிகமாக என்னிடத்தில் உண்டான ப்ரீதியினால் என்னை உபாஸனம் செய்யாவிட்டால் ஆத்மாவைத் தரிப்பதையே அடையாதவர்களாகையினால் என்னை உபாஸிப்பது ஒன்றையே ப்ரயோஜனமாக உடையவர்களாய் எவர்கள் என்னை உபாஸிக்கிறார்களோ அவர்கள் ஜாதி முதலியவைகளினால் உயர்ந்தவர்களாயிருந்தபோதிலும், தாழ்ந்தவர்களாயிருந்தபோதிலும் எனக்கு ஸமமான குணங்களை உடையவர்களைப் போல

---

க்கத் தகுந்தவனாவதற்கும் காரணங்கள். ஆகையினால் காரணங்களாகிய த்வேஷமும் ப்ரியமும் இல்லை, என்று நிஷேதித்ததினால் அவைகளின் கார்யங்களும் இல்லை என்று ஏற்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் 'அருவருக்கத் தகுந்தவனாகையினால், விடத்தகுந்தவன் இல்லை' என்றும் 'க்ரஹிக்கத்தகுந்தவன் இல்லை' என்றும் சொல்லப்பட்டது. தன்னை ஆஸ்ரயிப்பதினாலுண்டாகும் ப்ரீதியைத் தடுக்கிறது, என்று அர்த்தமாகப்போகிறது, என்கிற பயத்தினால 'ஆஸ்ரயித்தவன் என்பதைத் தவிர' என்று சொல்லப்பட்டது. ப்ரீதிக்குக் காரணங்களான ஜாதி முதலியவைகளினாலுண்டான மேன்மையினால் ப்ரீதி இல்லை என்றால், வேறு எதனால் ப்ரீதி உண்டாகிறது, வேறொன்றினாலும் இல்லையெனில் 'ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம்' என்றிவை முதலிய ஸ்லோகங்களுக்கு விரோதம் வருகிறதே. என்கிற ஆக்ஷேபத்தை நிராகரிப்பதற்காக 'து' என்னும் பதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார். 'ஆனால்'என்று. 'ஹ்ருத்யா ஸஜந்தி' என்கிற இரண்டு பதங்களுக்கும் புனருக்தி என்னும் தோஷத்தைப் பரிஹரிப்பதற்காக அன்வயத்தைச்சொல்லுகிறார்—'அதிகமாக' என்று ஆரம்பித்து. "யே" (எவர்கள்) என்கிற இது, தாழ்ந்தவன் உயர்ந்தவன் என்கிற ஏற்பாடு இல்லை. என்கிற அபிப்ராயத்தைக் காட்டுகிறது, என்று சொல்லுகிறார்—அவர்கள் ஜாதி முதலியவைகளால்' என்று ஆரம்பித்து. ஸமானமானவர்களைப் போல ஒருவர்க்கொருவர் கலந்திருக்கை மயி என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால்'எனக்கு ஸமமான குணங்களை உடையவர்களைப்போல ஸுகமாக' என்று சொல்லப்பட்டது. யஜமானனாக உம்மை அநுஸந்தானம் செய்துகொண்டு பக்தி செய்கிறவர்கள் ஸம

ஸுகமாக என்னிடத்தில் இருக்கிறார்கள், நானும் அவர்களிடத்தில் என்னை விட உயர்ந்தவர்களிடத்திலே போல இருக்கிறேன். 29

ரா-பா) அதிலும்.

**அபிசேத் ஸுது³ராசாரோ ப⁴ஜதே மாமநந்யபா⁴க் |**
**ஸாது⁴ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்³வ்யவஸிதோ ஹி ஸ: ||** 30

ப-ரை) ஸுது³ராசாரோபி-அதிகக் கெட்ட நடத்தையை உடையவனாயிருந்தபோதிலும், மாம்-என்னை, அநந்யபா⁴க் - வேறொரு ப்ரயோஜனத்தையும் பற்றாமல், ப⁴ஜதே சேத்- பக்திசெய்கிறானேயானால், ஸ:-அவன் ஸாது⁴ரேவ- நல்லவனாகவே, மந்தவ்ய:- பஹுமானம் செய்யத்தக்கவன் ஹி-.எந்தக்காரணத்தினால், ஸ:- அவன் ஸம்யக் - நன்றாக, வ்யவஸித:- நிச்சயமுள்ளவனோ? 30

பா] அந்தந்த ஜாதிகளில் பிறந்தவனுக்கு, எங்கெந்த நன்னடத்தை அங்கீகரிக்கத் தக்கதோ, எது விடத்தக்கதோ, அவைகளை மீறி நடப்பவனாக இருந்தபோதிலும், கீழ்ச்சொல்லியபடி பக்தி செய்வதொன்றையே ப்ரயோ

---

*மான குணங்களை உடையவர்களைப்போல உம்மிடத்தில் இருக்கிறார்கள். என்பது எப்படிப் பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'தேஷு சாப்யஹம்' என்பதினால் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'நானும்' என்று ஆரம்பித்து. அதிகமான ஸௌசீல்யத்தினால் என்னைவிட உயர்ந்தவர்களைப்போல நான் 'ப்ரஸாதேஷு: வ்யதிகீர்ணாதி' என்று சொல்லி இருக்கும் விதமாக அவர்களை வெகுமதிக்கிறேன். அதினால் அவர்கள் என்னுடைய ஸர்வேச்வரனாயிருக்கும் தன்மையை அநுஸந்தானம் செய்வதினாலுண்டாகும் பயமில்லாதவர்களாய் ஸுகமாக என்னை உபாஸனம் செய்கிறார்கள், என்று தாத்பர்யம். நானும் அவர்களும் பிதா, புத்ரன் இவர்களைப்போல் ஒருவர்க்கொருவரிடத்தில் வைக்கப்பட்ட பாரத்தை உடையவர்கள், என்று திரண்ட பொருள். அவரவர் ஜாதிக்கு ஏற்பட்ட தர்மங்களைக்கொண்டு பக்தி செய்கிறபடியினால் தாழ்ந்த ஜாதியைச் சொல்லி இருக்கிறதற்கு விரோதமில்லை.* 29

*தா] இப்படிதன்னை ஆம்ரயிப்பதை அங்கீகரிப்பதில் ஜாதிமுதலியவைகளினாலுண்டான தாழ்மை ஒருவிதபாதகமும் செய்யாது என்று சொல்லப்பட்டது. அதற்குமேலே நடத்தையினாலுண்டான தாழ்மையும் ஒருவிதபாதகஞ்செய்யாது என்று இந்தம்லோகத்தினால் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதிலும்' என்று.*

ப்ராஹ்மணன் முதலியவர்களுக்கு நல்லதர்மமாகஇருப்பதே ஶூத்ரன் முதலியவர்களுக்கு அதர்மமாகிறது, ஶூத்ரன் முதலியவர்களுக்கு நல்லதர்மமாக இருப்பதே ப்ராஹ்மணன் முதலியவர்களுக்கு அதர்மமாகிறது. இப்படியே ப்ராஹ்மணன் முதலியவர்களுக்கு விலக்கப்பட்ட, கள் மாம்ஸம், ஶூத்ரன் முதலியவர்களுக்கு விலக்கப்படவில்லை, ஶூத்ரன் முதலியவர்களுக்கு விலக்கப்பட்ட,கபிலைமாட்டின்பால்,ப்ராஹ்மணனுக்குச சிறந்தது. ஆகையால் தங்கள்தங்கள் ஜாதி நியமத்திற்குக் கெடுதலானநடத்தை உள்ளவனாகஇருக்கைதோஷமாகும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'அந்தந்த' என்றாரம்பித்து. விதிககப்பட்டகார்யத்தைச செய்யாமையும், தடுக்கப்பட்ட கார்யத்தைச்செய்தலும, இவை இரண்டும் கெட்டநடத்தைதான், என்று தெரிவிப்பதற்காக, அங்கீகரிக்கத்தக்கதோ,விடத்தக்கதோ,என்றுசொல்லப்பட்டது. இவ்விடத்தில்''சேத்'' என்னும் பதம் ப்ரயோஜனமற்றது, என்பதைப்பரிஹரிபபதற்காக,'ஸுதுராசாரோபிபஜதே சேத்'என்று அன்வயம் காட்டப்பட்டது. 'கீழ்ச்சொல்லியபடி' என்பதற்கு எப்பொழுதும் நாமங்களைச்சொல்வது முதலியவைகளினால், என்று அர்த்தம். இந்த ஸந்தர்ப்பத்தினால் விஶேஷித்துக்காட்டபபட்ட 'அநந்யபாக்' என்பதின் அர்த்தம்,பக்திசெய்வதொன்றையே ப்ரயோஜனமாக உடையவனாய்' என்பது. அதினாலேயே வேறு தேவதைகளிடத்தில் பக்திசெய்வதற்கு ப்ரஸ்தாவமே தூரத்தில் நிராகரிக்கப்பட்டது. அப்படியே 1 'ப்ரஹ்மாணம் ஶிதிகண்டம் ச யாஶ்சாந்யா தேவதா: ஸ்ம்ருதா:। ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 2 'ஆசாரப்ரபவோ தர்மோ தர்மஸ்ய ப்ரபுரச்யுத:।' 3 'ஆசாரஹீநம் ந புநந்தி வேதா:' 4 'ஸந்த்யாஹீநோऽஶுசிர்நித்யமநர்ஹ: ஸர்வகர்மஸு'

1. முதல் வால்யூம் 308 பக்கம் 1 புட்நோட்டைப் பார்க்க.

2. பாரதம் ஆனுசாஸனிகபர்வம் 149 ஸஹஸ்ரநாமாத்யாயம் 124, தர்ம: - தர்மம் ஆசாரப்ரபவ: ஆசாரத்தைக்காரணமாக உடையது. தர்மஸ்ய- தர்மத்துக்கு- ப்ரபு: எஜமானன் அச்யுத: - பகவான்.

3. வாஸிஷ்டஸ்ம்ருதி 6-3 ஆசாரஹீனம் - ஆசாரமில்லாதவனை, வேதா: - வேதங்கள், நபுநந்தி பரிசுத்தம் செய்யாது.

4 தக்ஷஸ்ம்ருதி 2-22, ஸந்த்யாஹீந: - ஸந்த்யாவந்தனம் செய்யாதவன், நித்யம் எப்பொழுதும், அஶுசி: - பரிசுத்தமில்லாதவன்,ஸர்வகர்மஸு-எல்லாக் கர்மங்களிலும் அநர்ஹ: - தகாதவன்,

ஜனமாக உடையவனாய் பக்தி செய்கிறானேயானால், அவன் வைஷ்ணவர்களுக்குள் சிறந்தவனாகவே பஹுமானம் செய்யத்தக்கவன். அதாவது கீழ்ச் சொல்லியவர்களுடன் ஸமமானவன், என்று அர்த்தம். இது எத்தா

---

வஷ்கஶ்ஷவஸ்'என்றிவை முதலிய வசனங்களிருக்கும்பொழுது, கெட்ட நடத்தை உள்ளவனுக்கு எவ்விதத்தினால் ஸாதுவாக இருக்கை பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—வைஷ்ணவர்களுக்குள் சிறந்தவனாகவே' என்று. வேறொரு ப்ரயோஜனமுமில்லாமல் பக்திசெய்தல் வைஷ்ணவர்களுக்குள் சிறந்தவனாகுகைக்குக் காரணம். 1 'ஸாதவ: க்ஷீணதோஷாஸ்து' என்று பகவானாகியபராசரர் சொல்லியிருப்பதினாலும் நாபமடைந்த பாவங்களை உடையவர்களுக்கு க்ருஷ்ணனிடத்தில் பக்தி உண்டாகும் என்று சொல்லி இருப்பதினாலும் இவ்விடத்தில் ஸாது என்னும்பதம் வைஷ்ணவர்களுக்குள் சிறந்தவனைச்சொல்லுகிறது என்று எப்படிச்சொல்லப்பட்டது? நல்ல ஆசாரமில்லாதவனை ஶிஷ்டர்கள் அங்கீகரிக்க மாட்டார்களாகையினால் அவன் ஸாதுவல்ல, என்பதே உசிதம். என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'ஸம்யக்' என்று சொல்லப்படுகிறது, என்று காட்டுகிறார்-பஹுமானம் செய்யத்தக்கவன்' என்று. தானாகவே ஏற்பட்டதாகிய அறியத்தக்கவன் என்பதை மாத்திரம் சொல்லுவது ப்ரயோஜனமற்றது. ஸம் என்னும் உபஸர்கத்தை முன்னே உடைய 'ஶீ' என்னும் தாதுவுக்கு பஹுமானம் அர்த்தம். உபஸர்க்கத்தின் அர்த்தமும் தாதுவுக்குள்ளேயே அடங்கி இருக்கிறது, என்று தாத்பர்யம். ஶிஷ்டர்கள் அங்கீகரிக்காவிட்டாலல்லவோ அஸாது என்னும் ஆக்ஷேபமுண்டாகிறது, அதுவே இல்லை என்று சொல்லுகிறார்—கீழ்ச்சொல்லியவர்களுடன் ஸமமானவன்' என்று. 2 'விஷ்ணுவாகவே ஆகி' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலிய இடங்களில் ஸமம் என்கிற அர்த்தத்திலும் 'ஏவ' என்பது ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது, என்று தாத்பர்யம். 'கீழ்ச்சொல்லியவர்களுடன்' என்பதற்கு மஹாத்மாக்களுடன், என்று அர்த்தம். நல்ல நடத்தை உடையவர்களும் கெட்ட நடத்தை உடையவர்களும், பூர்ணமான உபாயத்தைச் செய்தவர்களும் குறைவான உபாயத்தைச் செய்தவர்களுமாகையினால் அவர்கள் உபாயத்தினால் ஸமமானவர்கள், என்பது இல்லை. ஆகையினாலேயே ப்ரயோஜன

---

1 விஷ்ணுபுராணம் க்ஷீணதோஷா: தோஷமில்லாதவர்கள் ஸாதவ: ஸாதுக்களாக ஸ்யு: ஆவார்கள்.

2 யஜுர்வேதம் 2 காண்டம் 1 ப்ரச்னம் 3 அனுவாகம் 13 பஞ்சாதி.

லேயெனில், எந்தக்காரணத்தினால் அவனுடைய நிஶ்சயமானது மிகவும்
நல்லதோ. அதாவது பகவானாகிய நாராயணனே, எல்லா லோகங்களுக்கும்
ஒரேகாரணம், பரப்ரம்ஹம், ஸ்த்தாவரம் ஜங்கமம் இவைகளுக்குஶேஷீ,
எனக்கு. ஸ்வாமீ, எனக்கு ஆசார்யன், எனக்கு ஸ்நேஹிதன், எனக்கு

---

த்தினால் ஸமமானவர்கள் என்பதுமில்லை, என்கிற ஆக்ஷேபத்திற்கு
ஸமாதானம் 'ஸஹ்யக' என்று ஆரம்பிக்கப்படும் வாக்யம், என்று அவ
தாரிகை சொல்லுகிறார். 'இது எத்தாலேயெனில்' என்று. எந்தக்காரண
த்தினால்' என்பதற்கு 'ஹி' என்னும் பதம் காரணத்தைச் சொல்லுகிற
து, என்று தாத்பர்யம். அவனுடைய நிஶ்சயம் நல்லது, என்பதை ப்ர
தானமாக அறியப்படுகிற விஷயங்களைக்கொண்டு விசதப்படுத்துகிறார்-
'பகவானாகிய' என்று ஆரம்பித்து. பகவான் என்பதற்கு3 இரண்டுவிதங்
களான அடையாளங்களையும் உடையவர் என்று அர்த்தம். எல்லாலோ
கங்களுக்கும் ஒரேகாரணம்' என்பதினால், இதுவே ப்ரம்ஹம் என்பத
ற்கு ஸாதகமாகிய ஶ்ருதியில் சொல்லப்படுகிற லக்ஷணம் சொல்
லப்பட்டது. இத்தால் 1 'ஜ்ஞாத்வாபூதாதிமவ்யயம்' என்று முன்
சொன்னதும் ஞாபகப்படுத்தப்பட்டது. பொதுவான ஶப்தம்
ஒரே ஸந்தர்ப்பத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஶேஷத்திலேயே
முடிவுபெறுகிறது, என்பதையும் 2 'நாராயணனே பரப்ரம்ஹம்' என்று
அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலிய தத்துவத்தைப்பற்றிய நிஶ்சய
த்தை உண்டாக்குகிற வாக்யங்களையும் அபிப்ராயத்தில் வைத்துக்
கொண்டு 'பரப்ரஹம்' என்று சொல்லப்பட்டது. 'ஸ்த்தாவரம் ஜங்கமம்
இவைகளுக்கு ஶேஷீ' என்கிற இடத்தில் 3 'லோகங்களுக்கு ஶேஷி
யாகவும் தனக்குத்தானே ஈஶ்வரனாகிய' என்றும் 4 'நமக்கு ஶேஷிக
ளானவர்களுக்கும் ஶேஷியாகிய' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம்
முதலியவை அறியத்தக்கது இப்படி மேன்மையைப்பற்றிய நிஶ்சயம் சொ
ல்லப்பட்டது. பிறகு ஸௌலப்யத்தைப்பற்றிய நிஶ்சயம் சொல்லப்படுகி
றது-'எனக்கு ஸ்வாமீ' என்றாரம்பித்து. நான் அவனுடைய விபூதிக்கு
வெளிப்பட்டவனல்லவே, தனக்கு ஶேஷமாகிய என்னை அடைவதற்கு
இவன்தானே யத்னம் செய்கிறான் என்று தாத்பர்யம். இப்படி இரண்
டு பதங்களினாலும் ஸ்வபாவத்தினாலேயே ஏற்பட்ட ஸம்பந்தம் காட்ட
ப்பட்டது. மிகவும் மூடனாகிய எனக்கு நல்ல ஜ்ஞானத்தைக்கொடுத்து
ப்பெரிய உபகாரம் செய்தவன் இவன் என்கிற அபிப்ராயத்தினால் 'என
க்கு ஆசார்யன்' என்று சொல்லப்பட்டது. எண்ணிறந்த மஹாபாதங்
களைச் செய்துகொண்டிருக்கிற என்னிடத்திலும் நல்ல எண்ணத்துட
ன் கூடிய மனதை உடையவன் இவன் என்கிற அபிப்ராயத்தினால்
'எனக்கு ஸ்நேஹிதன்' என்று சொல்லப்பட்டது. மிகவும் அல்பமாயும்

---

1 பகவத்கீதை.9-13 2 தைத்திரீயம் நாராயணம் 6-11

3 தைத்திரீயம் நாராயணம்.6-11 4 ச்வேதாச்வதரம். 6-7.

மிகவும் சிறந்த அநுபவிக்கத்தக்க வஸ்து, என்று ஒருவராலும் அடையக் கூடாத இந்த நிஶ்சயம், இவனால் செய்யப்பட்டதோ. அதின் கார்யமாகிய

---

*துக்கத்துடன் கலந்ததாயும் அழியக்கூடியதாயுமிருக்கிற ஸுகத்தின் திவலையில் ஆசையையுடைய எனக்கு எல்லையில்லாத மேன்மையை யுடைய தோஷங்களொன்றுமில்லாத அழிவில்லாத ஸுகத்திற்குஸமுத்திரமாகிய தன்னைக் காட்டித்தந்தான் என்கிற அபிப்ராயத்தினால்* 'எனக்கு மிகவும் சிறந்த அநுபவிக்கத்தக்க வஸ்து' *என்று சொல்லப் பட்டது. ஆசார்யனாகயிருக்கையும் ஸ்நேஹிதனாகயிருக்கையும் தன்னை அடைவிக்கும் தன்மையுள்ளவனாவதற்குக் காரணங்கள் அநுபவிக் கத்தக்கவனாயிருக்கையோவெனில் அடையப்படும் தன்மையுள்ளவனா வதற்குக்காரணம்.* 'ஒருவராலும் அடையக்கூடாத' *என்பதற்கு ஈலகட த்தை நிறைந்திருப்பவர்களிடத்திலும் இப்படிப்பட்ட நிஶ்சயம் கண் டறியப்படவில்லை, பொன்விளையும் இடத்திலும் கல்லின் துணுக் கை க்ரஹிக்கத்தக்கதல்ல, குப்பையிலும் ரத்னம் ஆதரிக்கததக்கது என்று தாத்பர்யம்.* 1 *'ஸுமஹாத்மா ஸுதுர்லப:' என்றல்லவோ இப் படிப்பட்ட நிஶ்சயம் சொல்லப்பட்டது. ஸ்ரீபௌஷ்கரஸம்ஹிதையி லும்* 2 *'ஜந்மகோடிபி:ஸித்தா:'* என்றும் 3 *'அநேகஸம்ஸார சிதே சிதேபாபஸமுச்சயே। நாஸ்தேக்ஷீணே'* என்றும் *சொல்லப்பட்டிருக் கிறது. ஸ்ரீசுகரைக்குறித்து ஜனகரும்* 4 *'ஜ்ஞாநஞ்ச வ்யவஸாயஶ்ச ப்ராப்திஹேதூ உபௌ। வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மநாஸாதயதி தத்பரம்' என்று சொல்லியிருக்கிறார். நிஶ்சயம் உண்டானமாத்திரத்தினால் பக்தி செய்துகொண்டிருப்பவர்களோடு ஸமமாக இருத்தல் எப்படி ஸம்ப விக்கும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்-* 'அதின் கார்யமாகிய' *என்று. 'ஹஜெதஷாஂ' என்கிற இடத்தில் நிஶ்சயமும்,*

---

1 *பகவத்கீதை,* 7-19.

2 *ஸ்ரீபௌஷ்கரஸம்ஹிதை என்னும் பாஞ்சராத்ரஸம்ஹிதையே எவர்கள் ஜன்மகோடிபி: கோடிஜன்மங்களினால ஸித்தா:ஸித்தியையடைந்தவர்களோ தேஷாம் அவர்களுக்கு அந்தே கடைசியில் அத்ர இந்தபக்தியில் ஸ்ம்ஸ்திதி:இருப்பு (உண்டாகிறது.)*

3 *அநேக ஸம்ஸாரசிதே அநேக ஜன்மங்களில் சேர்க்கப்பட்டபாபஸமுச்சயே பாவங்களின் கூட்டம் சித்தேமனதில் அக்ஷீணே நாசமடையாதிருக்கும்பொழுது நாஸ்தே (பகவான்) இருபதில்லை.*

4 *மஹாபாரதம் சாந்திபர்வம் மோக்ஷதர்மம்* 334-47 *ஜ்ஞானம் ஜ்ஞானமும் வ்யவஸாயச்சநிஶ்சயமும் தவௌ இவையிரண்டும் ப்ராப்திபாதகௌ. பகவானை அடைவிக்கக்கூடியவைகள் வ்யவஸாயாத்ருதே நிஶ்சயமில்லாவிட்டால் தத்அந்த ஜ்ஞானம் பரம் உயர்ந்த ப்ரம்ஹப்ரம்ஹத்தை நாஸாதயதி அடைவிக்கிறதில்லை.*

வேறொரு ப்ரயோஜனத்தையும் அபேக்ஷிக்காத இடைவிடாத பக்தியும், அவனுக்கு இருக்கிறதோ. ஆகையினால், அவன் ஸாதுவாகவே பஹுமானம் செய்யத் தக்கவன். இப்படிப்பட்ட நிஶ்சயமும், அதின் கார்யமாகிய கீழ்ச்சொல்லிய விதமான பக்தியும் உண்டாயிருக்கும் பக்ஷத்தில் அவனுக்கு ஆசாரத்தை மீறி நடத்தல் ஸ்வல்பமான குறைவானதினால், அவ்வளவு மாத்திரத்தினாலேயே அவன் அநாதரவு செய்யத்தக்கவனல்ல. பின்னை எப்படியெனில் பஹுமானம்செய்யத்தக்கவனே என்று அர்த்தம்.

ப] கெட்ட நடத்தையிலிருந்து ஓய்வை அடையாதவனும், காமக்ரோதங்களின் வேகங்களை அடக்காதவனும் ஸாவதானமில்லாத மனதை உடையவனும் அடக்கப்பட்டமனதை உடைத்தாகாதவனும்ஜ்ஞானத்தினால் அவனை அடையமாட்டான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவை களிருக்கிறபடியினால் நல்ல நடத்தையை மீறி நடந்தால் மேன்மேலே பக்தி உண்டாவதின் தொடர்ச்சியைத்தடுத்து விடுமே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—

**க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஶஶ்வச்சாந்திம் நிகச்சதி|**
**கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி||** 31

---

*வ்யவஸித:' என்கிற இடத்தில் பக்தியும் உள்ளடங்கியவைகள். வேறொரு ப்ரயோஜனத்தையும் உத்தேசிக்காமல் பக்தி செய்வதினாலுண்டாகக்கூடிய பஹுமானம் செய்யத்தகுந்தவனாவதற்குக்காரணமாகவன்றோ இந்த நிஶ்சயம் சொல்லப்பட்டது என்று தாத்பர்யம். குறைவில்லாமல் அனுஷ்டானம் செய்பவனைப்போலக் குறைவாக அனுஷ்டானம் செய்பவன் எப்படிபஹுமானம் செய்யத்தகுந்தவனாவான் என்கிறஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்.-'அப்படிப்பட்ட' என்றாரம்பித்தது. இப்படிப்பட்ட புருஷன் விஷயத்தில் ஸ்வல்பமான குறைவைக் காரணமாகக்கொண்டு அநாதரம் செய்வதே பெரிய அபசாரமாகும் என்று தாத்பர்யம். 1 'ஸ்ம்ருத: ஸம்பாஷிதோ வாபி பூஜிதோ வா த்விஜோத்தம' 2 'ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்' என்றிவை முதலிய ப்ரமாணங்களைக்காட்டவேண்டும என்கிறஅபிப்ராயத்தினால்முடிக்கிறார்— 'பின்னை யெப்படி என்னில்' என்றாரம்பித்து.* 30

---

1 **(என்னுடைய பக்தன) ஸம்ருத:நினைக்கப்பட்டவனாலும் ஸம்பாஷித:வா அபி வார்த்தை சொல்லப்பட்டவனானாலும் பூஜித:வா பூஜைசெய்யப்பட்டவனானாலும் த்விஜோத்தம ப்ராமஹண சரேஷ்டனே பரிசுத்தம் செய்கிறான்.**

2. **காருடபுராணம் பூர்வகாண்டம் 219 அத்தியாயம் அஹம்யதா நான் எப்படியோ (அப்படியே) ஸச அவனும பூஜ்ய: பூஜிக்கத்தக்கவன்.**

ப-ரை] க்ஷிப்ரம்-சீக்கிரமாக, தர்மாத்மா-பக்தியோகத்திலேயே மனதை உடையவனாக, பவதி-ஆகிருன், ஶஶ்வத்-அழிவில்லாத, ஶாந்திம்-சாந்தியை நிகச்சதி-அடைகிருன், கௌந்தேய-ஓ அர்ஜுன, மே பக்த:-'என்னுடைய பக்தன், ந ப்ரணஶ்யதி- நாஶமடைகிறதில்லை, (என்று) ப்ரதிஜாநீஹி-நீ ப்ரதிஜ்ஞைசெய். 31

பா] என்னிடத்திலுண்டான அதிகமான ப்ரீதியினுல் வேறொரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் என்னிடத்தில் பக்தி செய்வதினுல் போக்கப்

---

தா] மற்றவர்களுக்கு பஹுமானம் செய்யத்தக்கவன் என்பது இருக்கட்டும் தனக்குக் கார்யம் ஸித்திக்காதே, என்கிற ஆக்ஷேபத்தைமுன்னிட்டுக்கொண்டு மேல் ஶ்லோகத்திற்கு அவதாரிகை சொல்லுகிருர்-'கெட்ட நடத்தையிலிருந்து' என்று ஆரம்பித்து. ஶ்ருதிவாக்யத்திற்கு பகவானை அடைவதைமாத்திரம் மறுப்பதில் அபிப்ராயமில்லை. மற்று ஞானமும் உண்டாகாது, என்பதில் தாத்பர்யம். என்கிற அபிப்ராயத்திஞல், 'மேன்மேலும் பக்தி யுண்டாவதின் தொடர்ச்சியை' என்று சொல்லப்பட்டது. அப்படியே 1'பாபம் ப்ரஜ்ஞாம் நாஶயதி க்ரியமாணம் புந:புந: । நஷ்டப்ரஜ்ஞ: பாபமேவ நித்யமாரபதே நர:' என்று சொல்லப்படுகிறது. தடையாகிய ரஜஸ்தமோகுணங்களுக்குக் காரணமாகிய பாவங்களைப் போக்குவதற்காக அல்லவோ நல்ல ஆசாரம். அந்தப்பாவமும், என்னிடத்திலுண்டான பக்தியினுலேயே நிவ்ருத்தி செய்யப்பட்டிருக்கும்பொழுது உபாஸனம் செய்வதற்கு ஒரு தடையுமில்லை, என்கிற அபிப்ராயத்திஞல் சொல்லுகிருர்-'என்னிடத்திலுண்டான அதிகமானப்ரீதியினுல்' என்று ஆரம்பித்து அங்கங்களினுல் குறைந்த கார்யத்திற்குப் பலமுண்டாகத்தாமதிக்குமே, என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்காக 'க்ஷிப்ரம்' (சீக்ரம)என்று சொல்லியிருக்கிறது. இவ்விடத்தில் 'தர்ம' என்னும் பதம் இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்து வேறொருபலத்தையும் விரும்பாமல் செய்கிற பக்தியைச சொல்லுகிறது. 'ஆத்மா' என்னும் பதமும் அதற்குக்கருவியாகிய மனதைச்சொல்லுகிறது. 'அநந்யமனா:' 'மன்மனாபவ' என்றல்லவோ

---

1 மஹாபாரதம் உதயோகபர்வம 35-73 புன:புன: அடிக்கடி க்ரியமாணம் செய்யப்படுகிற பாபம் பாவமானது ப்ரஜ்ஞாம் ஜ்ஞானத்தை நாசயதிநாசம் செய்கிறது. ததீஜப்ராம்ஹணனேநஷ்டப்ரஜ்ஞ: நாசமடைந்த ஜ்ஞானத்தையுடையவன் பாபமேவபாவததையே காத்தும் செய்ய ஆரபதே ஆரம்பிககிருன்.

பட்ட பாவங்களை உடையவனாதலினால் அடியோடு போக்கப்பட்ட ரஜோ குணத்தையும் தமோ குணத்தையு முடையவனாய்க்கொண்டு சீக்கிரத்தி லேயே தடை இல்லாததாயும் அங்கங்களுடன் கூடியதாயு மிருக்கிற என்னைக்குறித்து பக்திசெய்வதொன்றிலேயே மனதை உடையவனாகிறான். இப்படிப்பட்ட பக்தியே அல்லவோ † 'ராஜவித்யா ராஜகுஹ்யம்' என்று இந்த அத்யாயத்தின் ஆரம்பத்திலேயே தர்மம் என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது. அழிவில்லாததாய் அதாவது மறுபடியும் திரும்பி உண்டாகாத தான என்னை அடைவதற்கு விரோதியான கெட்ட ஆசாரங்களின்

*நிவ்ருத்தியும் மேலும் சொல்லி இருக்கிறது. பக்தியே பக்தியுண்டாவதற்குத்தடைசெய்கிறவைகளை நிவ்ருத்திசெய்கிறது, என்பது எப்படிப்பொருந்தும், என்கிற ஆக்ஷேபமும் ஸரியல்ல. ஏனெனில் பரிபூர்ணமான பக்தியே ப்ரயோஜனமாகையினாலும் பக்தியிலாரம்பம் காரணமாகையினாலும், இத்தையே 'சொல்லுகிறார்-'சீக்கிரத்திலேயே' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் தர்ம என்னு பதம்வன் வர்ணாஶ்ரமதர்மங்களை மாத்திரம் சொல்வதாக இருக்கக்கூடாது' என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்-'இப்படிப்பட்ட' என்றாரம்பித்து பொதுவான பதம் அந்த ஸந்தர்ப்பத்தில் ஏற்பட்ட விஶேஷத்தைச் சொல்லுகிறதென்பதே ந்யாயத்தை அனுஸரித்தது. இதே பதம் இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் பக்தியாகிற விஶேஷத்தைப்பற்றியதாக ப்ரயோகிக்கப்பட்டது. என்று தாத்பர்யம். பக்தியின் ப்ரபாவத்தினால் பாவங்கள் நிவ்ருத்தியடைகின்றன என்பதிருக்கட்டும் அனுதாபமும் இல்லாமல் புத்தி பூர்வகமாகத் தொடர்ச்சியாகச் செய்யப்படுகிற கெட்ட நடத்தைகளின் கூட்டம் எப்படித்தடங்கல் செய்யாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதான் 'ஶஶ்வச்சாந்திம் நிகச்சதி' என்பது. என்னை அடைவதற்கு விரோதியான கெட்ட ஆசாரங்களின் நிவ்ருத்தியை' என்பது இந்த ஸந்தர்ப்பத்திலேற்பட்ட 'ஶாந்திம்' என்கிற பதத்தின் அர்த்தம். 'ப்ரதி ஜானீஹி' என்கிற இடத்தில் அறி என்று மாத்திரம் விதிக்கிறதாக இருந்தால் 'ப்ரதி' என்னும் உபஸர்கம் வ்யர்த்தமாகிறபடியினாலும் 'வாஸ்தோஷ்பதியே என்னைத்தெரிந்துகொள்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் வேறுகதி இல்லாமையினால் உபஸர்கம் வ்யர்த்தகம் என்பதை ஒப்புக்கொண்டு இருக்கிறபடியினாலும் இவ்விடத்தில் தெரிந்துகொள், என்று விதிப்பதற்கு ப்ரயோஜனமில்லாமையினாலும் க்ரம*

† பகவத்கீதை 9-33.

நிவ்ருத்தியை அடைகிறன்.அர்ஜுன? இந்த விஷயத்தில்நீயேப்ரதிஜ்ஞை செய். என்னைக்குறித்து பக்திசெய்ய ஆரம்பித்தவன் விரோதமான நடத்தைகள் உள்ளவனாக இருந்தபோதிலும் நாஶமடைவதில்லை. பின்னை எப்படியெனில், என்னைக்குறித்துச் செய்யும் பக்தியினுடைய ப்ரபாவத்தினால், எல்லாத்தடைகளுடைய கூட்டத்தையும் நாஶம்செய்து அழிவில்

---

*மாகத் தோன்றுகிற ப்ரதிஜ்ஞைசெய் என்கிற அர்த்தம், மிகவும் நிஶ்சயிக்கப்பட்டது, என்பதை ஸ்தாபிக்கிறபடியினாலே இவ்விடத்தில் அவஶ்யமாகையினாலும் சொல்லுகிறார்-*அர்ஜுன? இந்த விஷயத்தில் நீயே ப்ரதிஜ்ஞைசெய்' *என்று. ப்ரதிஜ்ஞை செய்கிறேன் என்றுதான் ப்ரதிஜ்ஞைசெய்வதைவிட, ப்ரதிஜ்ஞைசெய் என்றுகேட்பவனைப்ரதிஜ்ஞைசெய்யவிதிக்கதற்கு இது மிகவும் ஸ்த்திரம்,என்று அபிப்ராயம்,என்றுதெரிவிப்பதற்காக* 'நீயே' *என்று சொல்லப்பட்டது. 'ந மே பக்த: ப்ரணஶ்யதி' என்கிற இது ப்ரதிஜ்ஞைசெய்யப்படுகிறவிஷயம், என்று தெரிவிப்பதற்காக, இந்த விஷயத்தில்' என்று சொல்லப்பட்டது.பரிபூர்ணமான உபாஸனத்தைச் செய்பவனுக்கு நாஶம் வருவதற்கு ப்ரஸ்தாவமேஇல்லாமையினாலும் 1'க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா' என்று கீழேசொன்னதே இங்கே சொல்லி இருப்பதினாலும், சொல்லுகிறார்* - 'என்னைக் குறித்து பக்திசெய்ய ஆரம்பித்தவன்' *என்று. பக்திசெய்ய ஆரம்பித்தவனும் பக்தன் என்று சொல்லப்படுகிறான் அல்லவா.* 'பக்தனுக்கு நாஶமில்லை' *என்று சொன்னது 'ஶஶ்வச்' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்ட விரோதிகள் நாஶமடைவது முதலாக உபாஸனம் பூர்த்தியடையுமளவும் முடிவைக்காட்டுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*—'பின்னை யெப்படியெனில்'*என்று. இவ்விடத்தில் உபரிசரர்முதலியவர்களின் சரித்திரத்தை உதாஹரணமாக எடுத்துக்கொள்ளவேண்டியது.அதாவது பாஞ்சராத்ரதர்மத்தை அனுஷ்டித்துக் கொண்டிருந்த உபரிசரர் ஒரு ஸமயத்தில தேவதைகளுக்கும் ருஷிகளுக்கும் விவாதம் நேர்ந்தபொழுது ' மஹருஷிகளுககு விரோதமாக பிஷ்ட பஶுவைப் பற்றிய பொய்யைச்சொல்லி கீழே விழ்ந்தவராய் ஶீக்கிரத்திலேயே பகவானால் மேலுலகத்திற்கொண்டு விடப்பட்டார்.அப்படியே 2'உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம் ய: ஸதாபவத்' என்று ப்ரஸித்தியை அடைந்த ப்ரஹ்லாதனும் ஒரு ஸமயத்தில் பகவானை எதிர்த்து யுத்தம் செய்ய ஆரம்பித்து ஶீக்கிரத்திலே தானாகவே தெளிவை அடைந்தார். அப்படியே பாபியாகிய க்ஷத்ரபந்துவும் பகவானுடைய திருநாமங்*

---

1 *பகவத்கீதை*-9-30.

2 *விஷ்ணுபுராணம்*. 1-15-156. *ய: எந்த ப்ரஹ்லாதன் அஶேஷாணாம் எல்லா ஸாதூநாம் ஸாதுக்களுக்கு உபமானம் உதாஹரணமாக ஸதா எப்பொழுதும் அபவத் இருந்தானோ.*

லாத விரோதிகளுடைய நிவ்ருத்தியை அடைந்து சீக்கிரத்திலேயே பரி பூர்ணமான பக்தியை உடையவனுகிறன். என்று. 31

மாம் ஹி பார்த்த வ்யபாஶ்ரித்ய யேபி ஸ்யு: பாபயோநய:|
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ராஸ்தேபி யாந்தி பராம் கதிம்||

கிம் புநர்ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா |
அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் || 33

ப-ரை] பார்த்த-அர்ஜுன, யே-எந்த, பாபயோநய:- பாவஜன்மத்தில் பிறந்த, ஸ்த்ரிய:-ஸ்த்ரீகளும், வைஶ்யா:-வைச்யர்களும், ததா-அப்படியே ஶூத்ரா:-சூத்ரர்களும். மாம்-என்னை, வ்யபாஶ்ரித்ய-அடைந்து, ஸ்யு:-இருப்பார்களோ, தேபி-அவர்களும், பராம்-மேலான, கதிம்.-கதியை, யாந்தி-அடைகிருர்கள், புண்யா:-புண்யஜன்மத்தில்பிறந்த, ப்ராஹ்மணா: ப்ராஹ்மணர்களும், ததா-அப்படியே, ராஜர்ஷய:-ராஜருஷிகளும், பக்தா: பக்தர்களாகயிருந்துகொண்டு, கிம் புந:-கேழ்ப்பானேன், அதாவது அவர்கள் பக்திசெய்தால் நல்லகதியை அடைகிருர்கள் என்பதைப்பற்றிக் கேழ்க்கவேண்டியதில்லை என்று தாத்பர்யம் (ஆகையினுல்) அநித்யம்-அழியக்கூடியதாயும், அஸுகம்-துக்கத்துடன் கலந்ததாயுமிருக்கிற, இமம்-இந்த, லோகம்-லோகத்தை, ப்ராப்ய-அடைந்திருக்கிற நீ மாம்-என்னை, பஜஸ்வ அடை. 32, 33

பா] ஸ்திரீகள் வைச்யர்கள் சூத்ரர்கள் ஆகிய பாவஜன்மத்தில் பிறந்தவர்களும் என்னை ஆஶ்ரயித்து மேலான கதியை அடைகிருர்கள்.

தா] களின்ப்ரபாவத்திஞல் அடுத்தஜன்மத்தில்முன்ஜன்மத்திலேநடந்ததை நினைத்துக்கொண்டு அதிகதுக்கத்தை உடையவனுகிப் பகவானைக் குறித்துச் ஶரணுகதிசெய்து மோக்ஷத்தை அடைநதான். 'என்று' என்பதற்கு இந்த விஷயத்தில் என்பதோடுஅன்வயம் சொல்லவேண்டியது.

'க்ஷிப்ராம்யஜஸ்ரமஶுபாந்' என்று நடுவில் நேர்ந்தபாவங்களைச் சொல்லி இருக்கிறது. பிறகு பிறப்பிலேயே பாபிகளாக இருப்பவர்களுக்கு ஜாதி முதலியவைகளினுல் தாழ்வு இருந்தபோதிலும் தன்னை ஆஶ்ரயித்த மாத்திரத்திஞல் பலம் ஸித்திக்கும் என்று கீழே ப்ரஸ்தாவித்ததை விஸ்தாரமாக நிரூபித்து ஆகையினுலேயே ஜாதி முதலியவைகளினுல்மேன்மையும் இருந்து பக்தி பூர்ணமாகஇருந்ததேயானுல் கைமுதிகநியாயத்தையும் சொல்லி ஜாதி முதலியவைகளினுல் மேன்மையை உடைய நீ பலத்தில் ஸந்தேஹமில்லாமல் உபாயத்தைச்செய், என்று இந்த இரண்டுஶ்லோகங்களினுலே சொல்லப்படுகின்றது. ஸ்த்ரீ, வைஶ்ய சூத்ரர்களுக்கு மேலானகதிக்கு விரோதமாக ஸந்தேஹிக்கப்பட்ட ஆகாரங்களை அநுவாதம் செய்வதற்காக 'பாபயோநய:' என்

புண்ய ஜன்மத்தில் பிறந்த ப்ராஹ்மணர்களும் ராஜருஷிகளும் என்னி டத்தில் பக்திசெய்துகொண் டிருப்பவர்களாய் (மேலான கதியை அடை கிறார்கள் என்பது) கெழ்க்கவேண்டியதில்லை. ஆகையினால்ராஜருஷியாகி யும் அழியக்கூடியதாய் தாபத்ரயங்களினாலேகெடுக்கப்பட்டிருக்கிற படியி

---

னும் பதம். இவ்விடத்தில் 'யெவாவயொநயொவிஷூாः' என்று அன்வயம் சொல்லவேண்டியது. மூன்று வர்ணங்களுக்குட்பட்டவனும் வித்யை முதலியவைகளை உடையவனாகவுமிருக்கிற வைஶ்யனை ஶூ த்ரன் முதலியவர்களுடன்கூட பாபஜன்மத்தில் பிறந்தவர்களாக எண்ணி இருப்பது அவனுக்குஸத்ரமென்னும் யாகத்தில் அதிகாரமில் லாமையினால். ஸத்ரத்தில், யஜமானர்களெல்லோரும் ருத்விக்குகள் அல் லவோ. அப்படி ருத்விக்காக இருக்கக்கூடிய தன்மையும் ப்ராம்மணர் களுக்கே உள்ளது. அப்படிப்பட்ட ஸத்ரத்தில் அதிகாரமாகிய மேன் மையும் 1 ஆகையினால் வாஜபேயயாகம் செய்த க்ஷத்ரியன் ருத்விக்கு ஆவதற்குரியவன்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் க்ஷத்ரிய னுக்கும் உண்டு, என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'வாவயொநிः' என் கிறபதத்திற்கு ப்ரதிபாக இருப்பதினால், 'வுணூாः' என்னும் பதம் புண்யஜன்மத்தில் பிறந்தவர்கள் என்பதைச் சொல்லுகிறது, என்று காட்டப்பட்டது. 'கிஂவுநः' என்று ஆரம்பித்துக் கைமுதிகந்யாயத் தைச் சொல்லி இருப்பதினால் அவர்களுக்கு ஆயாஸமில்லை, என்பதைக் காட்டி இருக்கிறது. ராஜருஷிகளைக் குறித்திருப்பது அர்ஜுனனுக் குப் பலம் ஸித்திக்கும் என்று. சொல்வதற்காக, என்கிற அபிப்ராயத் தினால் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்று ஆரம்பித்து. ராஜருஷி யாகியும் என்னும்பதத்தினால் ஸாமர்த்தியமுண்டு, என்று காட்டப்பட் டது. 'அழியக்கூடியதாயும்' என்பது முதலிய வாக்கியத்தினால் பலத்தில் ஆசை உள்ளவனாக இருக்கை சொல்லப்படுகிறது. 'அநித்யம் என்னு ம் பதம்' 2 'ஷதவிகிூயா' என்று சொல்லி இருக்கிறபடி அடிக்கடி மாறுதலடையும் ஸ்வபாவத்தை உடையதென்று சொல்லுகிறது, என் று தெரிவிப்பதற்காக 'அழியக்கூடியதாயும்' என்று சொல்லி இருக்கிற து, இவ்விடத்தில் அஸுகம் என்னும் பதம் ஸுகத்தைவிட வேறான து என்கிற அர்த்தத்தினால் துக்கத்தைச்சொல்லுகிறது, என்பதையும் ஸம்ஸாரத்திலுண்டாகும் ஸுகமும் துக்கத்திலேயே சேர்ந்ததாகை யினால் ஸுகமில்லை, என்று சொல்லுகிறது என்பதையும், அபிப்ராயத் தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்- 'தாபத்ரயங்களினால்' என்று ஆரம்பித்து. ஐஂ (இந்த) என்பதினால் மிகவும் அல்பமானது, என்று காட்டப்பட்டது. ஷூாவு (அடைந்து) என்பது அநுவாதம், என்று

---

1 யஜுர்வேதம் அஷ்டகம். 2 பரமஸம்ஹிதை.

ஞால் துக்கரூபமாகிய இந்த லோகத்தை அடைந்திருக்கிற நீ என்னை அடை. 32-33

பா] பக்தியின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்—

𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁 |
𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑍈𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 | 34

ஸ்ரீகண்ணபிரான் அருளிச்செய்தகீதையில

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணாய பரமாத்மனே நம:

[ப-ரை] 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃-என்னிடத்தில் பக்தி உள்ளவனாய்க்கொண்டு, 𑌮𑌨𑍍𑌮𑌨𑌾𑌃-என்னிடத்தில் செலுத்தப்பட்டமனதை உடையவனாகவும், 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀-என்னை ஆராதனம் செய்பவனாகவும், 𑌭𑌵-ஆகிவிடு, 𑌮𑌾𑌂-என்னை, 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁-நமஸ்காரம் செய், 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌃-என்னையே முக்யமான ஆதாரமாக உடையவனாய்க்கொண்டு, 𑌏𑌵𑌂-இப்படி, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂-மனதை, 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾-என்னிடத்தில் செலுத்தி, 𑌮𑌾𑌮𑍇𑌵-என்னையே, 𑌏𑌷𑍍𑌯𑌸𑌿-அடையப் போகிறாய். 34

[பா - எல்லாவற்றிற்கும் ஈஶ்வரர்களாக இருப்பவர்களுக்கு மீஶ்வரனாக

[தா] தெரிவிப்பதற்காக 'அடைந்திருக்கிற' என்று சொல்லப்பட்டது. இப்படி அநித்யமாக இருப்பதையும் ஸுகமில்லாமலிருப்பதையும், அல்பமாக இருப்பதையும் அறிந்துகொள்வதினால் பக்திசெய்வதில, பராங்முகனாக இருப்பது நிவ்ருத்தித்துவிடும். (அதாவது பக்திசெய்ய ஆசையுண்டாகிவிடும்) என்று தாத்பர்யம். 32-33

'𑌯𑌜' என்று கீழ்ச்சொல்லிய பக்தியின் ஸ்வரூபத்தைப் பற்றிய நிரூபணம் அடுத்த ஶ்லோகத்தில் செய்யப்படுகிறதென்று ஸங்கதியைக் காட்டுகிறார்—'பக்தியின் ஸ்வருபத்தைச்சொல்லுகிறார்' என்று. பொதுவாக எல்லாப் பரவித்யைகளிலும் உபாஸிக்கத்தக்கவைகளாகவும் அதற்கு உபயோகமுள்ளவைகளாகவும் அனேக ப்ரமாணங்களினால் நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபம், ரூபம், குணம் முதலியவைகள் இங்கு 𑌮𑌾𑌂 என்னும் பதத்தினால் சொல்லப்படுகின்றன என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லாவற்றிற்கும்' என்றாரம்பித்து 1 'ஈஶ்வரர்களுக்கும் உயர்ந்த மஹேஶ்வரனாகிய அவனை' என்றும் 2 'அவனுக்கு ஒருவனும் ஈஶ்வரனுவதில்லை' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—எல்லாவற்றிற்கு மீஶ்வரர்களாக இருப்பவர்களுக்கு மீஶ்வரனாகவும்' என்று ஸாமர்த்தியமில்லாதவர்களை உபாஸிப்பதினால் ஒரு பலமும் கிடைக்காதல்லவா வேறு ப்ரம்ஹாண்டத்துக்கு ஈஶ்வரர்களாகாத பரம்ஹா ருத்ரன் இவர்கள் மோக்ஷத்தைக்

1 ஶ்வேதாஶ்வதரம் 6 7. 2 தைத்திரீயம் நாராயணம் 1 9.

வும், எல்லாக்கெட்ட குணங்களுக்கும் விரோதமாகவும், கல்யாணகுண ங்களுக்குமுக்யமான இடமாகவும், எல்லாம் தெரிந்தவனுகவும், ஸத்யஸங் கல்பனுகவும், எல்லாலோகங்களுக்கும் ஒரே காரணமாகவும், பரப்ரும்ம

---

கொடுக்க ஶக்தர்களல்லஎன்று தாத்பர்யம். 1,'க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஈஶ்வரஜ்ஞா நாத் விஶுத்திঃ பரமா மதா' என்றல்லவோ சொல்லப்படுகிறது. கெட்ட குணங்களுக்கிருப்பிடமாயும் நல்ல குணங்களில்லாதவனுகவும் இருப்ப வன்உபாஸிக்கத்தக்கவனல்ல ஆகையினுல் மற்றவர்களைவிட வ்யத்யாஸம் ஏற்படுவதற்காக 2 'ஸகுண ஶ்ருதிகளுக்கும் நிர்குணஶ்ருதிகளுக்கும் விஷயங்கள் ஏற்பட்டிருக்கிறபடியினுல் 3 இரண்டுவித அடையாளங்கள் உள்ளவன் என்பதைசசொல்லுகிருர் —'எல்லாக்கெட்ட குணங்களுக் கும்' என்ருரம்பித்து. எல்லா அனிஷ்டங்களையும் நிவ்ருத்தி செய்கிறவ னுகையினுலும் எண்ணிறந்த அனுபவிக்கத்தக்க குணங்கள் நிறைந்தவ னு யிருப்பதினுலும் இவனே உபாஸிக்கத்தக்கவன் என்றபிப்ராயம். எண்ணிறந்த கல்யாண குணங்களைக்காட்டுவதற்காக, த்யானிக்கத்தக்க வஸ்துவுக்கு லக்ஷணங்களாகச்சொல்லப்பட்ட லோகங்களுக்குக்காரண மாக இருக்கைக்கும் மோக்ஷத்தைக்கொடுக்கிறவனுக இருக்கைக்கும் உபயோகமான இரண்டு குணங்களும் 'எல்லாம் தெரிந்தவனுகவும் ஸத் யஸங்கல்பனுகவும்' என்று சொல்லப்பட்டன. 4 'எவன் எல்லாவற் றையும் தெரிந்துகொண்டவனே எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷமாகப்பார் க்கிருனே எவனுடைய ஸங்கல்பம் ஜ்ஞானரூபமோ அவனிடத்திலிரு ந்து பேர்ரூபம் இவைகளையுடையதாய் ஜீவர்களால் அனுபவிக்கக்கூடிய இந்த ப்ரக்ருதி உண்டாகிறது,' என்றும் 5 'ஸத்யகாமன் ஸத்ய ஸங்கல் பன' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்கள் இதில் ப்ரமாணங்கள் அனிஷ்டத்தைப்போக்குதல் முதலிய காரியங்களில் இவனுக்குத்தெரி யாததும் ஒத்தாசையை எதிர்பார்க்க வேண்டியவனுக இருக்கையும இல்லை என்று தாத்பர்யம். 6 'எந்த வஸ்துவினிடத்திலிருந்து இந்த ப்ராணிகளுண்டாகின்றனவோ' என்ருரம்பித்து 'அதை உபாஸனம் செய்' என்றும் 7 'காரணமாகிய வஸ்துவே த்யானம் செய்யத்தக்கது' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களை நினைத்துக்கொண்டு 'எல் லாலோகங்களுக்கும் ஒரேகாரணமாகவும்' என்று சொல்லப்பட்டது.

---

1 யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி 3-1-34 க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஜீவாத்மாவுக்கு ஈச்வரஜ் ஞானுத் பகவானை அறிவதினுல் பரமா உயர்ந்த விசுத்தி: சுத்தியாகமதா எண்ணப் பட்டது.

2 முதல் வால்யூம் 306வது பக்கம் 1 புட்னேட்டைப்பார்க்க.

3 முதல் வால்யூம் 456 வது பக்கம் 1 புட்னேட்டைப்பார்க்க.

4 முண்டகோபநிஷத் 1-1-9. 5 சாந்தோக்யம் 8-1-5. 6 தைத்திரீயம் ப்ருகு வல்லீ 1. 7 அதர்வஶிகா

மாகவும், புருஷோத்தமனுகவும், தாமரைப்பூவின்இதழ்கள்போலத் தெளிந்தும்விஶாலமுமானகண்களைஉடையவனுகவும், அழுக்கற்றகறுத்த மேகத்திற்கு ஸமமானவர்ணத்தை உடையவனுகவும், ஒரேகாலத்திலுதித்த ஆயி

'எல்லா' என்னும் பதத்தினுல் அவ்யக்தம் முதலியவைகளையும் ப்ரம ஹா ருத்ரன் முதலியவர்களையும் சேர்த்துச்சொல்லியிருக்கிறது. மும் மூர்த்திகளைவிட மேலான ஆகாசம் உண்டென்றும் பரம்ஹம் குணங்க ளற்றது என்றும் சொல்லுகிற வாதங்களை நிராகரித்திருப்பதையும் ஒரே இடத்திலிருக்கும் பொதுவான பதமும் விஶேஷத்தைச சொல்லு கிற பதமும ஒரே அர்த்தத்தைசசொல்லுமம என்பதையும் நினைத்துக் கொண்டு 'பரப்ரம்ஹமாகவும் புருஷோத்தமனுகவும்' என்று சொலலப் பட்டது. இத்தால் எலலாவற்றிற்கும் அந்தராத்மாவாக இருக்கையும் எல்லாவற்றையும் விட வேறுபட்டவனுக இருக்கையும் விருத்தங்க ளல்ல எனறு காட்டப்பட்டது நாராயணனுவாகமும் புருஷ ஸூக் தம் முதலியதும் ஞாபகப படுத்தபபட்டது. இவவளவால் எல்லா வற்றிற்கும் மேலான ஸ்வரூபம் சொல்லப்பட்டது, பிறகு எல்லா வேத ங்களிலும் ஓதபபடுகிற புருஷஸூக்தம் முதலியவைகளில் ஏற்பட்டதும் ஶாபாஶ்ரயத்தைப்பற்றிச சொல்லுமிடங்களில் விஸ்தாரமாகச சொல் லப்பட்டதுமான திவ்யமங்கள விக்ரஹமும், அதின் குணம முதலிய வைகளும சொல்லப்படுகிறது. 1 'அவனுடைய கண்கள ஸூர்யனுல் மலரச்செய்யப்பட்ட தாமரைப்பூ எபபடியோ அபபடி (யிருக்கின்றன) என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லபபட்ட மேன்மையின் அடையாளத்தைச் சொல்லுகிறுர்.—'தாமரைப் பூவி னிதழ்கள்போல' என்றுரமபித்து. 'அழுக்கற்ற' என்பது முத லிய வாக்யத்தினுல் 2 'கறுத்தநிறமுள்ள மேகத்தை நடுவிலே உடைய' என்றுரம்பித்துச் சொல்லுகிற ஶ்ருதிவாக்யம் நினைக் கப்பட்டது, அழுக்கற்றிருக்கையாவது ரத்தினம் கண்ணுடி ஜலம் முதலியவைகளைப் போல தூரத்திலிருக்கும் வஸ்துக்களை ப்ரகா சம் செய்யக் கூடியதுமான ஒருவிதமானதெளிவு 3 'திவிஸூர்யஸஹஸ்ரஸ்ய' என்று மேலே சொல்லப் போகிறதையும்' 4 ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற அவனையே எல்லாம் அனுஸரித்து பாகாசிக்கின்றன. என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தையும் அபிப்ராயத்தில் வைத்துக் கொண்டு 'ஒரே காலத்திலுதித்த' என்றுரம்பித்துச் சொல்லப் பட்டது. கைகள் உதாரமா யிருக்கையாவது ஶ்ருதி முதலியவைகளில் ஏற்பட்ட பலமுள்ளவைகளாக இருக்கையும் இஷ்டமான பலங்களைக் கொடுக்கை யும் எந்த இடத்தில் வேறு ரூபம் சொல்லப்பட வில்லையோ அந்த இட த்தில் இந்தக் கீதையைச சொல்லுகிற க்ருஷ்ணனுடைய ரூபமே சொ

1 சாந்தோக்யம் 1-6-7. 2 தைத்திரீயம் நாராயணம் 11-1 2.3 பகவத்கீதை 11,12. 4 முண்டகோபநிஷத் 2,2,10.

ரம் ஸூர்யன்களுக்கு ஸமமான காந்தியை உடையவனாகவும், அழகா கிற அம்ருதம்நிறைந்த ஸமுத்திரமாகவும், உதாரமாயும், பருத்துமிருக்கிற நான்கு புஜங்களை உடையவனாகவும், மிகவும் ப்ரகாசமுள்ள பீதாம்பரத்தைத் தரித்தவனாகவும், நிர்மலமான கிரீடம், மகர குண்டலங்கள், ஆரங்கள், தோள்வளைகள், கடகங்கள் இவைகளால் அலங்கரிக்கப் பட்டவனாயும், அளவில்லாத காருண்ணியம், ஸௌஶீல்யம், ஸௌந்

*ல்லப்படுகிறது. அதுவும் மற்ற எல்லா அவதாரங்களையும் குறிக்கிறது. நான்கு கைகளை உடைத்தாயிருக்கை பகவானாகிய க்ருஷ்ணனுக்கும் பரவாஸுதேவ ரூபத்திற்கும் ஸ்வபாவத்திலேற்பட்டது. இரண்டு கைகளை உடைத்தா யிருக்கை ஆயிரம் கைகளை உடைத்தாயிருக்கை முதலியவைகளெல்லாம் அந்தந்த ஸமயங்களில் வைத்துக்கொண்டவைகள் என்கிற அபிப்பிராயத்தினால் 'நான்கு புஜங்களை யுடையவனாகவும்' என்று சொல்லப்பட்டது. 1'அபவாபி வதுர்புஜம்' 2'தேவாஶ்சதுர்பிர்புஜை: ஸமுபேதம் விஶிஷ்டம் திவி ஸம்ஸ்திதம் ச | யதப்ரமேயம் புவி தத்ரூபம் ஸமர்ச்சயதா தஸ்மின் ஸதா நிவஸாமி தேவா: ||' என்பதுமுதலியது இவ்விடத்தில் நினைக்கத் தக்கது. திவ்யமான பீதாம்பரத்தின் சேர்த்தியைச் சொல்லுகிறார். 'மிகவும் ப்ரகாசமுள்ள' என்றாரம்பித்து. சிரஸ்ஸுமுதல் திருவடி வரையிலும் திவ்ய அவயவங்களிலிருக்கும் எல்லா ஆபரணங்களின் கூட்டங்களைக் குறிப்பதற்காகக் கிரீடம் முதலியவைகளைச்சொல்லியிருக்கிறது. 3 "த்யேயஸ்ஸதா என்றாரம்பித்து' " கேயூரவான் மகரகுண்டலவான் கிரீடீ என்பது முதலியது அறியத் தக்கது. மகரகுண்டலங்கள், என்னும் பதம் மகரம்*

1. *அதவாபி அதுவுமல்லாமல், சதுர்புஜம் நான்குகைகளை உடையவராக இருக்கிற,*

2 *தேவா:—ஓ தேவர்களே, சதுர்பி:—நான்கு, புஜை:—கைகளோடு, ஸமுபேதம் கூடிக்கொண்டதாயும், விஶிஷ்டம் உயர்ந்ததாயும், திவி பரமபதத்தில், ஸம்ஸ்திதம்ச இருப்பதாயுமிருக்கிற, அப்ரமேயம் அளவிடமுடியாத, யதத் இந்த, பூமௌ பூமியில், கதம் இருக்கிற, ரூபம் - ரூபத்தை, அர்ச்சயத - அர்ச்சனைசெய்யுங்கள், ஹி - எந்தக்காரணத்தினால், தஸ்மின் - அந்த ரூபத்தில், ஸதா - எப்பொழுதும் நிவஸாமி - வஸிக்கிறேனோ.*

3 *நாரஸிம்மபுராணம், 62,17, ஶ்லோகம், த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயணஸ்ஸரஸிஜாஸனஸன்னிவிஷ்ட:, கேயூரவான் மகரகுண்டலவான் கிரீடீஹாரீஹிரண்மயவபுர்த்ருத ஶங்கசக்ர: ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருக்கிற, ஸரஸிஜாஸனஸன்னிவிஷ்ட:—தாமரைப்பூவாகிற ஆஸனத்தில் எழுந்தருளி இருக்கிற கேயூரவான் - தோள்வளைகளை அணிந்திருக்கிற மகரகுண்டலவான் - மகரகுண்டலத்தைச்சாற்றிய, கிரீடீ - கிரீடமணிந்திருக்கும், ஹாரீ-ஆரங்களை அணிந்திருக்கும், ஹிரண்மயவபு:—ஸ்வர்ணமயமான திருமேனியை உடைய, த்ருதஶங்கசக்ர:—ஶங்கசக்ரங்களைத்தரித்துக்கொண்டிருக்கும், நாராயண:—பகவான், ஸதா-எப்பொழுதும் த்யேய:—த்யானம் பண்ணத் தகுந்தவர்.*

தர்யம், மாதுர்யம், காம்பீர்யம், ஔதார்யம், வாத்ஸல்யம், இவைகளுக்கு ஸமுத்திரமாகவும், வ்யத்யாஸங்களை யோசிக்காமல் எல்லா

போன்ற ஆகாரத்தை யுடைய குண்டலங்களைச் சொல்லுகிறது, தேஜஸ்ஸு நிறைந்திருக்கையையும் விரோதிகளால் பார்க்க முடியாமையையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'ஒரேகாலத்தி லுதித்த' என்பது முதலியது சொல்லப்பட்டது. 'அழகாகிற' என்பது முதலிய வாக்யத்திஞலோ வெனில் அதுவே ப்ரீதியுள்ளவர்களுக்கு அனுபவிக்கத்தக்கது என்பதும் மனதை இழுக்கத் தக்கது என்பது முதலியது சொல்லப்படுகிறது. கண்களுக்கு ஆனந்தத்தைத் தருகிற விசேஷமானதே ஐஸ்ஸல்லவோ அழகு என்று சொல்லப்படுகிறது. ஆகையினுலல்லவோ [1] 'தே தம் ஸ்ரீ க்ருஷ்ண ... ' என்று சொல்லப்படுகிறது. 'அளவில்லாத' என்பது முதலிய வாக்யத்திஞல்ஸௌலப்யத்துக்கு உபயோக முள்ளவைகளாகவும் அளவில்லாதவைகளாகவும் ஸௌந்தர்யம் முதலியவைகளோடு சேர்ந்தவைகளாகவும் ஆஶ்ரயிக்கதக்கவஞயிருப்பதற்கு அவஶ்யம் வேண்டினவைகளாகவும் இருக்கிற ஸ்வரூபம் ரூபம் இவைகளின் குணங்கள்சொல்லப்பட்டன. 3 'ஸர்வலோகஶரண்யாய'

1 தே அந்த ராஜாக்கள் தம் அந்த க்ருஷ்ணனை, ஆத்ருஷ்டிபதாத்புன:–கண்ணுக்குத்தெரியுமளவுமோ வெனில், லோசனை:–கண்களிஞல், அனுஜக்மு:–பின் சென்ருர்கள். ப்ரீதிஸமன்விதா:–ப்ரீதியோடு கூடியவர்களாய், க்ருஷ்ணம் க்ருஷ்ணனை,மனேபிசமனதுகளிஞலும்,அனுஜக்மு:–பின்சென்ருர்கள், கேஶவதர்ஶனே-க்ருஷ்ணனைப்பார்ப்பதில், ஏவம் - இப்படி, அத்ருப்தமனஸாம் -த்ருப்தி இல்லாதமனதை உடைய, தேஷாம் - அவர்களுடைய, சக்ஷுஷாம் - கண்களுக்கு, ப்ரியதர்சன:–ப்ரியமான பார்வையை உடைய, ஶௌரி:–க்ருஷ்ணன், க்ஷிப்ரம்மசீக்ரமாக, அந்தர்ததே - மறைந்தார், ஜனுர்தனம் - க்ருஷ்ணனை, ப்ரேக்ஷமாணு:–பார்த்துக்கொண்டிருக்கிற அந்த அரசர்கள், அம்ருதஸ்யேவ. – அம்ருதத்தின் விஷயத்திலேபோல, நாத்ருப்யன்-த்ருப்த்தியை அடையவில்லை.

2 ஸ்ரீமத் ராமாயணம், அயோத்தியா காண்டம், 17, 13, ராகவே ராமன்,அதிக்ராமதி தாண்டிச் செல்லும் பொழுது, கஶ்சித்:- ஒரு - நர:-மனிதனும், நரோத்தமாத்-புருஷோத்தமஞகிய, தஸ்மாத், அந்த ராமனிடத்தி லிருந்து, மன:-மனதையும், சக்ஷுஷீவா - கண் காளையாவது, அபாக்ருஷ்டும் இழுத்துக்கொள்ள, நஹி சக்ஞேதி - சக்தியுள்ளவஞக வில்லை யல்லவா,

3 ஸ்ரீமத் ராமாயணம், யுத்த காண்டம் – ஸர்வலோகஎல்லாலோகத்துக்கும் ஶரண்யாய சரணமாக அடையத் தகுந்தவஞகிய,

லோகங்களுக்கும் ஶரண்யனாகவும், எல்லாவற்றிற்கும் ஸ்வாமியாக வும் இருக்கிற என்னிடத்தில் எண்ணெயின் தாரையைப் போல் இடை விடாமல் வைக்கப்பட்ட மனதை உடையவனாக இரு·

---

1 'ஸதுஷ்டோ வா யதிவா துஷ்டோ வா' 2 'விபீஷணோ வா ஸுக்ரீவ யதிவா ராவண: ஸ்வயம்' என்பவை முதலியவைகளை நினைத்துக்கொண்டு காருண்யம் முதலியவைகளினால் ஏற்பட்ட குணத்தைச் சொல்லுகிறார் 'வ்யத்யாஸங்களை' என்றாரம்பித்து. தன்னை ஆஶ்ரயித்தவர்களைக் காப்பாற்றுவதைத் தன்னுடைய லாபமாக எண்ணி ப்ரவ்ருத்திக்கிறான் என்கிற அபிப்ராயத்தினால் 'எல்லாவற்றிற்கும் எஜமானனாகவும்' என்று சொல்லப்பட்டது. 3 க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம் என்று சொல்லப்பட்டது. 4 'த்யானம் செய்யத் தக்கவன்' என்றும் 5 'த்யானம் செய்யக்கடவன்' என்றும் 6 'இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருத்தல்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் 7 'ஆவ்ருத்திரஸக்ருதுபதேஶாத்' என்கிற ஸூத்ரம் இவை முதலியவைகளை நினைத்துக்கொண்டு இவ்விடத்தில் மந: என்னும் பதம் த்யானம் என்கிற பேருடைய மனதின் ஒருவித வ்யாபாரத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'எண்ணெயின் தாரையைப்போல்' என்றாரம்பித்து. என்னிடத்திலேயே மனதைச் செலுத்து என்று சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் 'மாமேவைஷ்யஸி' என்று பலத்தில் என்னையே என்று சொல்லியிருக்கிறபடியினால் உபாயத்திலும் என்னையே என்பது சொல்லப்படுகிறதென்று தோன்றுகிறது. அத்தால் வேறொன்றில் மனதைச் செலுத்தாமலிருத்தல் ஏற்பட்டது. அதினாலேயே எண்ணெயின் தாரையைப் போல இடைவிடாமலிருத்தலும் ஏற்பட்டது என்று தாத்பர்யம். 8 'இந்தப் பகவான் எவனை வரிக்கிறானோ அவனால்அடையத் தக்கவன்' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தின் ·அர்த்தத்தை

---

1 ஸ்ரீமத் ராமாயணம், யுத்தகாண்டம் 18-5 (இந்த ராக்ஷசன்) ஸதுஷ்டோ வா மிகவும் துஷ்டவனாக இருந்தாலும் ஸரி அதுஷ்டோவா நல்லவனாக இருந்தாலும்சரி. (நமக்கு என்ன கெடுதி செய்யமுடியும்).

2 ஸ்ரீமத் ராமாயணம், யுத்தகாண்டம் 18-35 சுக்ரீவ ஓ சுக்ரீவா விபீஷணோவா விபீஷணனாக இருந்தாலும் சரி ராவண: ராவணன் ஸ்வயம் யதிதானே வந்திருந்தாலும் சரி (அழைத்துக்கொண்டுவா). 3 முதல்வால்யூம் - 452 வது பக்கம் புட்னோட்டைப்பார்க்க 4 ப்ருஹதாரண்யகம். 6-5-6 5 முண்டகோபநிஷத் 2-2-6. 6 சாந்தோக்யம் 7-26-2. 7 சாரீரக ஸூத்ரம் 4-1-1 (த்யானத்தின்) ஆவ்ருத்தி ஆவருத்திசெய்வது அசக்ருத் அடிக்கடி (செய்யவேண்டியது) உபதேசாத் ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினால். 8 கடவல்லீ 1-2-23.

இதையே விசேஷித்துச் சொல்லுகிறார்—“மத்பக்த:” என்று அதிகமாக என்னிடத்தி லுண்டான ப்ரீதியோடு கூடியவனாய், என்னிடத்தில் செலுத்தப்பட்ட மனதை உடையவனாக இரு என்று அர்த்தம். மறு படியும் விசேஷித்துச் சொல்லுகிறார் —“மத்யாஜீ”. என்று. எல்லை இல் லாத மேன்மையை உடைய ப்ரியமாகிய என்னைப் பற்றிய அனுபவத்தி னால் செய்விக்கப்பட்ட என்னுடையஆராதனத்தில் எப்பொழுதும் ஆசை உள்ளவனாக இரு. ஆராதனமாவது பரிபூர்ணமான கைங்கர்யம். அதா

*விசதப்படுத்துகிறது, என்றபிப்ராயத்தில் வைத்துககொண்டு சொல் லுகிறார்—‘இதையே’ என்று. பக்தியும் ஒரு விதமானஜ்ஞானமாகையி னால் த்யானத்தை விசேஷித்துச் சொல்லுகிறார் என்பது பொருந்தும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் ‘அதிகமாக’ என்றாரம்பித்து. தனியான வேறர்த்தத்தை விதிக்கிறதோ என்கிற ஸந்தேஹத்தை நிராகரிப்பதற்காகச சொல்லுகிறார்— ‘மறுபடியும்’ என்று பக்தியின் ஸ்வரூபத்தின் விசேஷத்தை நிருபிக்கிற படியினால்அதற்கு அஸாதார ணமாயும் விசேஷமான ஶாஸ்த்ரங்களில் நிருபிக்கப்பட்டதாயு மிருக் கிற விசேஷமான பூஜையைச் சொல்லுகிறது இந்த யாஜீ என்னும் பதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—‘ஆராதனமாவது’ என் றாரம்பித்து. இதுவும் 1 ‘பத்ரம் புஷ்பம் பலம் தோயம்’ எனபது முத லியவைகளால் காட்டப்பட்டதும் பஞ்சராத்ரஶாஸ்த்ரத்தில் விஸ்தாரமா கச் சொல்லப்பட்டதுமான ஆராதனத்தைப் பற்றிய சுருக்கமான விதி ஆகையினால் இவ்விடத்தில் யாஜீ என்னும் பதம் தர்ஶபூர்ணமாஸம்முத லிய யாகங்களைச் சொல்லுகிற தென்று ப்ரமிக்க வேண்டிய தில்லை. 2 ‘யஜதேவபூஜாயாம்’ என்றே படிக்கப்பட்டிருக்கிறது. தேவதை யைக் குறித்து த்ரவ்யத்தைக் கொடுத்தல் யாகம் என்று சொல்லுகி றார்கள். அக்னி ஹோத்திரம் முதலியவைகளைவிட வேறாகிய பஞ்சம ஹாயஜ்ஞங்களிலும் யாகம் என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட் டிருக்கி றது. வேறிடத்திலும் 3 ‘க்ருஷ்ணவாக்யைரிஜ்யதே ஸம்ஶ்ருஶா னை:” என்றிவை முதலான ப்ரயோகங்களு மிருக்கின்றன. ஆகையி னால் இந்த இடத்தில் பஞ்சராத்ர ஶாஸ்த்ரம் முதலியவைகளில் விஸ் தாரமாகச் சொல்லப்பட்ட ஆராதனத்தைப பற்றியதே இந்த யாஜீ என்னும் பதம், என்கிற அபிப்ராயத்தினால் சொலலுகிறார்—அதாவது*

1 பகவத்கீதை 9-26 2 முதல் வால்யூம் 48 9 வது பக்கம் பார்க்க

3 மஹாபாரதம் ஆனுசாஸனிக பர்வம். 18-6 ஸம்ருசானை : பரம்ஹத்தை விசாரிக்கிறவர்களினாலே க்ருஷ்ண : க்ருஷ்ணன் வாக்யை : வார்த்தைகளினால் இஜ்யதே ஆராதனம் செய்யப்படுகிறான்.

வது ஔபசாரிகம் ஸாம்ஸ்பர்ஶிகம், ஆப்யவஹாரிகம், முதலிய எல்லா உபசாரங்களையும் ஸமர்ப்பித்தலாகிய யாகம். எப்படி என்னைப் பற்றிய அனுபவத்தினு லுண்டாக்கப் பட்ட எல்லை இல்லாத மேன்மையை உடைய ப்ரீதியினுல் செய்விக்கப்படுகிற என்னுடைய ஆராதனத்தில் ஆஶையுள்ளவனுக ஆகிருயோ அப்படி என்னிடத்தில் செலுத்தப்பட்ட மனதை உடையவனுய் இரு, என்று சொல்லப்பட்டதாகிறது. மறுபடி யும் அத்தையே விஶேஷிக்கிருர்—"ஶிரஂநஸ்கரு" என்று. எல்லையில் லாத மேன்மையையுடைய ப்ரியமாகிய என்னைப் பற்றிய அனுபவத்தி னுல் செய்விக்கப் பட்ட மிகவும் ப்ரியமான எல்லாக் கைங்கர்யங்களி லும் த்ருப்தியை யடையாமல் அந்தராத்மாவாகிய என்னிடத்தில் அதிகமா

---

என்று ஆரம்பித்து. ஔபசாரிகம் ஆவது (உபசாரத்திற்காக ஸமர்ப் பிக்க வேண்டிய ஆரத்தி முதலியவைகள். ஸாம்ஸ்பர் ஶிகம், ஆவது (தொட்டு அனுபவிக்கத் தக்க) மாலை சந்தனம் முதலியவை. ஆப்யவஹாரி கம், ஆவது (நிவேதனம் செய்யக்கூடிய) தளிகை முதலியவைகள். முதலிய, என்னும் பதத்தினுல். ஸாந்த்ருஷ்டிகமாகிய (பார்த்து அனு பவிக்கக் கூடிய தீபம் முதலியவைகளும் சேர்த்துச் சொல்லப்படுகி றது. வெளி இந்த்ரியங்களினுல் செய்யப்படுகிற கார்யத்தைச் சொல்லு கிற 'ஜேூாஜீ' என்னும் பதத்தினுல் மனதைச் செலுத்துகிறது எப்படி விஶேஷிக்கப்படுகிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல் லுகிருர்—எப்படி என்று ஆரம்பித்து. மறுபடியும், என்பது முதலியதும் முன்போலவே. முன் சொலலப்பட்டதைவிட அதிகமானது, என்று காட்டுவதற்காக 'த்ருப்தியை அடையாமல், என்கிற வரையிலும் சொ ல்லப்பட்டது. மிகவும் ப்ரியமான, என்பதினுல் அந்தக்கைங்கர்யம் ஸ்வ ரூபத்திற்குத்தகுந்தது, என்று சொல்லப்படுகிறது. 'அதிகமான, என்னும் பதத்தினுல் அந்த வணக்கம் எல்லை இல்லாத ஸுகம், என்பது காட்டப் பட்டது. மூன்று விதங்களான வணக்கங்களையும் சேர்த்துச்சொல்வ தற்காக 'நஜ' என்னும் தாதுவின் ஸ்வரூபத்தை நிரூபணம் செய்து வணக்கம்என்னும்பதம்ப்ரயோகிக்கப்பட்டது. 'ஶிக்ஷாவதஃ ஶிவ்யூதி யஜா ஶிவஹிஷாவாதிகாவரா। உத்க்ருஷ்டவாதிஶ்ஸ்தஜஸஃவரிதீய தெ' என்றல்லவோ நமஃ என்னும் பதம் வ்யாக்யானம்செய்யப்பட்டது. ஞானத்தையே விஶேஷிக்கிறது, என்று தெரிவிக்கிறதற்காக 'நிஶ

---

4 அஹிர்புத்ன்ய ஸம்ஹிதை 52-10 உத்க்ருஷ்டம் உயர்ந்தவனுகிய பரம்உத்தி ஶ்ய பரமாத்மாவைக்குறித்து ப்ரேக்ஷாவதஃ புத்திமானுடைய ப்ரஹ்வீ பாவாத்மிகா வணக்கமாகிய பராஉயர்ந்த ப்ரவ்ருத்திஃ வ்யாபாரம் யாஎதுவோதத் அது நமஃ நமஸ் காரம் (என்று) பரிகீயதே சொல்லப்படுகிறது.

ன வணக்கத்துடன் கூடிய நிஶ்சயத்தைச் செய். எவனுக்கு முக்யமாக அடைய வேண்டியவன் நானேயோ அவன் மத்பராயணஃ என்று சொல்லப்படுகிறான். என்னை விட்டுப் பிரிந்து ஆத்மாவைத் தரிப்பதே ஸம்பவிக்காதாகையினால் என்னையே ஆஶ்ரயித்தவனாய் என்றர்த்தம். இப்படி மனதைச் செலுத்தி என்னை ஆஶ்ரயித்துக் கொண்டிருக்கிற நீ இப்படி எல்லையில்லாத மேன்மையை யுடைய ப்ரீதியினால் என்னை அனுபவிக்கும் ஸாமர்த்யமுடைய மனதை அடைந்து என்னையே அடையப் போகிறாய். இவ்விடத்தில் ஆத்மா என்னும் பதம் மனதைச்சொல்லுகிறது. இப்படிப் பட்ட மனதினால் என்னை த்யானம் செய்து கொண்டும் என்னை நமஸ்காரம்செய்துகொண்டும் என்னை ஆஶ்ரயித்துக்கொண்டும் இருந்துஎன்னையே அடையப் போகிறாய் என்றர்த்தம். ஆகையினால் இப்படி லோகத்தில் ஏற்பட்ட

---

சயத்தை' என்று சொல்லுகிறது. 'பராயணஃ' என்கிற இடத்தில் பர என்கிற விஶேஷணத்தினுடைய ஸாமர்த்யத்தினால், 'என்னையே' என்பது அபிப்ராயமாகக் கொள்ளப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் 'நானேயோ' என்று சொல்லப்பட்டது. ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'என்னைவிட்டுப்பிரிந்து' என்று ஆரம்பித்து. இதுவே பக்தியின் உயர்ந்ததசை. பகவானை அடைவதற்கு அடுத்த முன்ஸமயத்தில வரக்கூடியது. ஆகையினால் பலத்தைப் பற்றிய ஆஶையைத் தெரிவிப்பதற்காக 'மத்பராயணஃ' என்று சொல்லி இருக்கிறார் என்று அபிப்ராயம். 'ஏவம்' என்னும் பதத்தினால் அனுவதிக்கப்படுகிறஅர்த்தத்தைசசொல்லுகிறார்—'எல்லை இல்லாத' என்று ஆரம்பித்து. 'ஆத்மானம் யுக்த்வா' என்கிற பதங்களுக்கு இவ்விடத்தில் உசிதமான அர்த்தத்தைக்காட்டிஇருக்கிறது—'மனதை அடைந்து' என்று. 'யுக்த்வா' என்பது அடைதல் என்கிற அர்த்தத்தையாவது யோகம் என்னும் அர்த்தத்தையாவது சொல்லுகிறது. இவ்விருவகையினாலும் 'மந்மநாபவ' என்று கீழ்ச்சொல்லிய அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்பது 'ஏவம், ஆத்மாநம்' என்கிற அனுவாதத்தினால் தோன்றுகிறது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இவ்விடத்தில் ஆத்மா என்னும் பதம்' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் மனதைச்சொன்னது த்யானத்திற்கு ஆதாரமாக இருப்பதினால்,என்று காட்டிக் கொண்டு ஶ்லோகத்தின் மொத்த அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'மத்பரஃ' என்று விஶேஷணம் சொல்லி இருப்பதினால் ஸுகமாக இருக்கிறது ; என்று ஏற்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால், என்னை அனுபவித்துக்கொண்டும், என்று சொல்லப்பட்டது. இனி ஸுகமாகத் தெரிந்துகொள்வதற்காக இந்த அத்யாயத்திற்கு முக்யமான அர்த்த

சரீரத்தைத்தரிப்பதற்காக ஏற்பட்ட கர்மங்களையும் வேதங்களில்ஏற்பட்ட நித்திய நைமித்திக கர்மங்களையும் என்னுடைய ப்ரீதிக்காக எனக்கு சேஷமாக இருக்கை ஒன்றையே ஸ்வரூபமாக உடைய நீ என்னால் செய்விக்கப்படுகிறாய் என்று செய்துகொண்டும் எப்பொழுதும் என்னுடைய நாமங்களைச் செல்லுவது என்னுடைய காரியங்களில் ப்ரயத்தினம் செய்வது என்னை நமஸ்காரம் செய்வது முதலியவற்றையும் ப்ரீதியினால் செய்துகொண்டும் என்னால் நியமிக்கப்படுகிற எல்லா லோகங்களும் எனக்கு சேஷமாக இருக்கையையே ஸ்வரூப்மாக உடையது என்று அனுஸந்தானம் செய்து கொண்டும் மிகவும் ப்ரியமான என்னுடைய குணங்களின் கூட்டத்தையும் அனுஸந்தானம் செய்துகொண்டும் கீழ்ச் சொல்லிய

---

*மாகிய எல்லா அங்க உபாங்கங்களோடும், ப்ரயோஜனத்தோடும்கூடிய பக்தியின் ஸ்வரூபத்தைச் சுருக்கமாக நிஷ்கர்ஷித்துச் சொல்லிக்கொண்டு முடிக்கிறார்—'இப்படி' என்று ஆரம்பித்து. 'ஆகையினால்' என்பதற்கு நீ, துக்கம் நிறைந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் விழுந்து இருக்கிறபடியினாலும் மேன்மை ஸௌலப்யம் முதலியவைகளை உடையநான், எல்லாத் துக்கங்களாகிற ஸமுத்திரத்தைதாண்டிக்கரை சேர்ப்பதில் கப்பற்காரனாக இருப்பதினாலும், உபாயமும் மிகவும் ஸுலபமாகச்செய்யக்கூடியதாக இருக்கை முதலிய குணங்களை உடைத்தாய் இருப்பதினாலும், என்று அர்த்தம். 'இப்படி' என்பதற்கு முன் கிரந்தங்களில் சொல்லியபடி, என்று அர்த்தம். 'லோகத்திலேற்பட்ட' என்று ஆரம்பித்து, 'செய்துகொண்டும்' என்கிறவரையிலும் 1 'யத்கரோஷி' என்பவை முதலியவையின் அர்த்தம். 'என்னால் நியமிக்கப்படுகிற' என்பவை முதலியது. 2 'மயா ததம்' என்பவை முதலியதின் அபிப்ராயத்தைச் சொல்லி இருக்கிறது. 'மிகவும் ப்ரியமான' என்பது. 3 'ஸமோஹம்' 4 'பத்ரம் புஷ்பம்' என்பவை முதலியதின் அர்த்தம். குணங்களை அனுஸந்தானம் செய்யும்படிச் சொல்லி இருப்பதும், புருஷனால் செய்யக்கூடிய கார்யமாகையினால், உபாஸனம் என்கிற பதத்தின் அர்த்தம் என்பது உசிதம்தான் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'என்னுடைய குணங்களின் கூட்டத்தையும்' என்று. 5 'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ' என்பது முதலியது இங்கே நினைக்கப்பட்டது. 'கீழ்ச்சொல்லிய விதமான' என்பது முதலியது 'மந்மநா பவ' என்பதின் தாத்பர்யம். மரணமடையும் தினம்வரையிலும் செய்ய*

---

1 பகவத்கீதை 9-27.　2 பகவத்கீதை 9-4.　3 பகவத்கீதை 9-29.
4 பகவத்கீதை 9-26.　5 பகவத்கீதை 10-8.

விதமான இந்த உபாஸனத்தை தினந்தோறும் செய்து கொண்டிருந்து என்னையே அடையப்போகிருய். 34

*பகவத் ராமானுஜன் என்னும் உடையவர் அருளிச்செய்த*

*ஸ்ரீகீதா பாஷ்யத்தில் ஒன்பதாவது அத்யாயம்*

*முற்றிற்று.*

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

*எம்பெருமானர் திருவடிகளே சரணம்.*

---

*வேண்டியது, என்று ஏற்படவேண்டியதற்காக* 'தினம்தோறும் செய்து கொண்டிருந்து' *என்று சொல்லப்பட்டது.* 'கீழ்ச்சொல்லிய விதமான' *என்பதற்கு வேறொரு ப்ரயோஜனத்தையும் ஆசைப்படாமலும், நமஸ்க்காரம் முதலியவைகளில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்யக்கூடியதும் என்னை ஒருவனையே தாரகனுக உடைத்தாய் இருக்கையாகிய தசைவரையிலுமான, எல்லை இல்லாத ப்ரியமாக இருக்கிற, என்று அர்த்தம்.* 34

*ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த*

*தாத்பர்ய சந்த்ரிகையில் ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.*

*ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:.*

*சீரார்தூப்புத் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*





ஸ்ரீமத்யாமுநமுநயே நம:

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகம்

ஒன்பதாவது அத்யாயம், ஸங்க்ரஹம்.

**ஸ்வமாஹாத்ம்யம் மநுஷ்யத்வே பரத்வஞ்ச மஹாத்மநாம் |**
**விஶேஷோ நவமே யோகோ பக்திரூப: ப்ரகீர்த்தித: 13**

ஸ்வமாஹாத்ம்யம் தன்னுடைய மஹிமையும் மநுஷ்யத்வே மனுஷ்யனாக அவதரித்திருக்கும் தசையிலேயே பரத்வஞ்ச மேன்மையும் மஹாத்மநாம் ஜ்ஞானிகளுடைய விஶேஷ: விசேஷமும் பக்திரூப: பக்தியாகிய யோக: யோகமும் நவமே ஒன்பதாவது அத்யாயத்தில் ப்ரகீர்த்தித: சொல்லப்பட்டது'

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிக னருளிச் செய்த

ஸ்ரீகீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

தன்னுடைய மஹிமை 1 'மயா ததமிதம் ஸர்வம்' என்றிவை முதலிய ஶ்லோகங்களில் நிரூபிக்கப்பட்டது. 2'அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாஶ்ரிதம் | பரம் பாவமஜாநந்தோ மம பூதமஹேஶ்வரம்' என்று மனுஷ்யனாக அவதரித்திருக்கும் தசையிலும் தன்னுடைய மேன்மைக்கு அழிவில்லை என்பது சொல்லப்பட்டது. இப்பொழுதிருக்கும் அவதாரத்தில் தாத்பர்யத்தினால் மனுஷ்யனாக இருக்கும் தசையைச் சொல்லியிருக்கிறது. அதின் மூலமாக எல்லா அவதாரங்களிலேயும் மேன்மையாகிய ஸ்வபாவம் அழியாதது என்று குறிக்கப்பட்டது. இது கூரத்தாழ்வானாலும்3 'பரோவா வ்யூஹோவா விபவ உதவார்ச்சாவதரணோ

---

1 பகவத்கீதை 9-4. 2 பகவத்கீதை 9-11.

3 வரதராஜஸ்தவம் 18 வர-எல்லோருக்கும் மேலானவனான வரதவரதனே பரோவா பரவாஸுதேவனாகவும் வ்யூஹோவா வ்யூஹாவதாரங்களை யடைந்தவனாகவும் விபவ: விபவாவதாரங்களை யடைந்தவனாகவும் உத அன்றிக்கே அர்ச்சாவதரணோவா அர்ச்சாவதாரங்களை யடைந்தவனாகவும் அந்தர்யாமீ அந்தர்யாமியாக பவந் இருந்துகொண்டும் யோய: எந்தெந்த தசையை அடைந்தவனாக பவஸி ஆகிறாயோ ஸஸ: அந்தந்த தசையுடன் கூடியவைகளெல்லாம் த்வம்ஸந்நேவ நீராகவே இருந்துகொண்டு ஐசாந் பகவானுடையவைகளான அகிலாந் எல்லா வரகுணகணாந் உத்தமமான குணங்களின் கூட்டங்களை பிப்ரத் வஹித்துக்கொண்டு பஜத்ப்ய: ஆஶ்ரயிப்பவர்களுக்கு ஏவம் இப்படிப்பட்டவனாக பாஸிதோன்றுகிறாய் இதரேப்யஸ்து மற்றவர்களுக்கோவெனில் இதரதா வேறுவிதமாக தோன்றுகிறாய்.

[illegible] ' என்றருளிச் செய்யப் பட்டது 4 '[illegible]' என்றிவை முதலிய ஶ்லோகங்களிலும் ஜ்ஞானிகளின் விசேஷம் நிரூபிக்கப்பட்டது. இந்த அத்யாயத்தில் பக்தியாகியயோக மேப்ரதானம் என்பது பாஷ்யத்தில்5'உபாஸனம் செய்கிறவர்களின்வ்ய த்யாஸங்களைப் பொறுத்த விஶேஷங்கள் நிரூபிக்கப்பட்டன, இப்பொழுது உபாஸிக்கப்படுகிற பரம புருஷனுடைய மஹிமையையும் ஜ்ஞானிகளின் விசேஷத்தையும் தெளிவாக நிரூபித்து பக்தியாகிய உபாஸனத்தின் ஸ்வரூபமும் சொல்லப்படுகிறது' என்று சொல்லப்பட்டது.

ஸ்ரீமன் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த கீதார்த்த
ஸங்க்ரஹ ரக்ஷையில்

## ஒன்பதாவது அத்யாயம்

*சீரார்தூப்புல் திருவேங்கட முடையான் திருவடிகளே சரணம்*
*ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக னருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்.*
*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*

தன்மேன்மையுந் தன்பிறப்பிற் றளராத் தனிமையையும்
பன்மேனி நண்ணினன்பாற் பிரியாவன்ப ராசைகளும்
புன்மேனி விண்ணவர்பாற் புரியாததன் பத்தியையும்
நன்மேனி நாரணன் றானரனுக்கு நவின்றனனே. 10

ப-ரை] நன்மேனி நாரணன் - நல்லதான திருமேனியை உடைய ஸ்ரீமன் நாராயணன், தன்மேன்மையும் - தன்னுடைய உத்கர்ஷத்தையும், தன் பிறப்பில் - தன்னுடைய அவதாரங்களில், தளரா - நழுவாத, தனிமையையும் - ஒப்பற்ற ஸ்வபாவத்தையும், பன்மேனி நண்ணினன்பால் - பல் - பலவிதங்களான, மேனி - ஶரீரங்களை, நண்ணினன்பால் - அடைந்தவனை தன்னிடத்தில், (அதாவது சேதநா சேதனங்களை ஶரீரமாக வுடைய தன்னிடத்தில் என்று அர்த்தம்) பிரியா - நீங்காததான அன்பர் - பக்தியை உடையவர்களுடைய, ஆசைகளும் - ப்ரீதிகளையும், புன்மேனி விண்ணவர்பால் - புல் - அற்பமான, மேனி - ஶரீரத்தை உடைய, விண்ணவர்பால் - இதர தேவதைகளிடத்தில், புரியாத - செய்யப்படாத, தன்பக்தியையும், தன்னைக்குறித்துச் செய்யும் பக்தியோகத்தையும், நரனுக்கு - அர்ஜுனனுக்கு, தான்-தானே, நவின்றனன்-சொன்னான். 10

5 கீதாபாஷ்யம் 9 அத்யாயத்தின் அவதாரிகை,

இங்குதன்மேன்மையும், என்பதினால் 1 'ஸௌஹார்த்ரம்' என்பதின் அர்த்தம் சொல்லப்பட்டது. அதாவது 2 'மயாததமிதம்ஸர்வம்' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்ட, ஸகலவஸ்துக்களுக்கும் ஆதாரமாக இருக்கையும் அந்தர்யாமியாக இருக்கையும், எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கையும் முதலிய மஹிமைகளும் சுருக்கிச் சொல்லப்பட்டன. தன் பிறப்பில், என்கிற இடத்தில் கீதையில் 3 'மாநுஷீம் தநுமாச்ரிதம்' என்றும், ஸங்க்ரஹ ச்லோகத்தில் 'மநுஷ்யத்வபரத்வம்' என்று சொல்லப்பட்டிருந்தபோதிலும் கீழ் ஏழாவது அத்யாயத்தில் 4 'நாஹம் ப்ரகாசஸ்ஸர்வஸ்ய' என்கிற ச்லோகபாஷ்யத்தில் 5 'மநுஷ்யத்வாதிஸம்ஸ்தாந ஸமாச்ரயணீயத்வ' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிற படியினாலும் ப்ரக்ருதத்திலிருக்கும் அவதாரம் மனுஷ்யாவதாரமாகையினாலும் இதின் மூலமாக எல்லா அவதாரங்களையும் குறிக்கிறது, என்று கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் தாம் அருளிச் செய்திருப்பது தெரிவிக்கப்பட்டது. தனிமை, என்பதினால் இப்படிப்பட்ட தன்னுடைய ஸ்வபாவங்கள் ஒன்றையும் விடாமல் அந்தந்த ஜாதிக்குத் தக்கவாறு அவதாரம் செய்வதும் வேறொருவருக்கும் ஸாதாரணமல்லாதது, என்றும், தளரா, என்பதினால் '1 நிலவரம்பில பலபிறப்பாய் ஒளிவருமுழுநலம்' '2 பின்னுமுரலோடு கட்டுண்ட பெற்றிமையும்' 3 'தேருமூர்ந்துதேசுயர்ந்த செல்வதெய்வநாயகா' என்றும் சொல்லுகிறபடியே அவனுடைய ஒப்பிலாத் தன்மை மென்மேலும் வளர்த்தியை அடைந்ததேயின்றித் தளர்ச்சியை அடையவில்லை, என்றும், காட்டப்பட்டது. பன்மேனி நண்ணினன், என்பதினால் 4 'ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விச்வதோமுகம்' என்றும் சொல்லுகிறபடி ஸமஸ்த வஸ்துக்களையும் சரீரமாக உடையவன் ஒருவனே, என்று உபாஸிக்கிறார்கள், என்று தாத்பர்யம், பிரியா, என்பதினால் வெவ்வேறு பலங்களுக்காகச் செய்யும் பக்தி, பலம் கிடைத்தவாறே பிரியக்கூடியதாகையினால், 5 'நித்யயுக்த:' என்றும், 6 'பிரிவகையின்றி' என்றும் சொல்லப்படுகிற அநன்ய ப்ரயோஜனமான பக்தி சொல்லப்படுகிறது. இதுவே 7 'அநந்யமநஸ:' என்று சொல்

1 கீதார்த்த ஸங்க்ரஹம் 13. 2 பகவத்கீதை 9-4. 3 பகவத்கீதை 9-11,
4 பகவத்கீதை 7-25. 5 மேற்படி பாஷ்யம்.

1 திருவாய்மொழி 1-ப-3-தி-2-பா. 2 பெரிய திருமடல்.
3 தேசிக ப்ரபந்தம் மும்மணிக்கோவை 8-பா, 4 பகவத்கீதை 9-15.
5 பகவத்கீதை 7-17. 6 திருவாய்மொழி 1-ப-6-தி-1-பா,
7 பகவத்கீதை 9-13.

லப்பட்டது. புன்மேனி, என்கிறதினால் மற்றத்தேவதைகளின் ஶரீர ங்கள் ப்ரக்ருதிஸம்பந்த முள்ளவைகள், அவைகள் கர்மங்களினாலேற் பட்டவைகள், என்றும் சொல்லப்பட்டது. புரியாத தன் பத்தியையும், என்பதினால் 1 'யேப்யந்யதேவதாபக்தா:' என்று மூடர்களைச்சொல்லி 2 'மஹாத்மாநஸ்து' என்று ஜ்ஞானிகளைச் சொல்லி இருக்கும்பொழுது 'து' என்பது மூடர்களின்ஸ்வபாவம் இவர்களுக்கு இல்லை, என்றுகாட்டு கிறது, என்று அபிப்ராயம். இத்தால் 3 'மஹாத்மநாம் விஶேஷ:' என் கிற ஸங்க்ரஹஶ்லோகம் விவரிக்கப்பட்டது. தன் பத்தியையும், என் பதினால் 3 'பௌமௌஹஸ்த்ரிஷு:' என்பதின் அர்த்தம் சொல்லப்பட் டது. நன்மேனி, என்பதினால் 4 'மந்மநாபவமத்பக்த:' என்கிற ஶ்லோ கத்தில் 'மத்' என்கிற பதத்தினால் குறிக்கப்படுகிற திவ்யமங்கள விக்ர ஹமும் அதின் ஸௌந்தர்யம் முதலிய குணங்களும், நாரணன், என்ப தினால், வாத்ஸல்யம் ஸௌலப்யம் முதலிய குணங்களும் சொல்லப்படு கின்றன. தான் என்பதினால் முன்பு பதரிகாஶ்ரமத்தில் நரனுக்கு நிவ் ருத்தி தர்மங்களை உபதேசித்த நாராயணன் தானே 5 'ஏஷ நாரா யண:ஸ்ரீமாந்'என்கிறபடியே கண்ணனாக அவதரித்து நரனுடைய அவ தாரமான அர்ஜுனனுக்கு உபதேசம் செய்தான் என்று தாத்பர்யம். அன்றிக்கே மற்ற அத்யாயங்களில் 6 'ததேகம்வத நிஶ்சித்ய' என்று ம், 7 'கிம்தத்ப்ரஹ்ம' என்னுமிப்புடைகளில் அர்ஜுனன் கேட்டுத்தான் உபதேசிக்கையன்றிக்கே தன் மிகுந்த கருணையினாலும், அர்ஜுனனு க்கு உள்ள ஶிஷ்யகுண பூர்த்தியைக்கண்டு 8 'இதம்து தே குஹ்யத மம்' என்று தானே உபதேசித்தான், என்றாகவுமாம்.

ஸ்ரீமன் நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த
கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டில் 10-வது பாட்டு 9-வது அத்யாயம்
முற்றிற்று.



1 பகவத்கீதை 9-23. 2 பகவத்கீதை 9-13
3 கீதார்த்த ஸங்க்ரஹம் 13. 4 பகவத்கீதை 8-34.
5 முதல் வால்யூம் 6 வது பக்கம் 1 புட்நோட்டைப்பார்க்க.
6 பகவத்கீதை 3-2. 7 பகவத்கீதை 8-1. 8 பகவத்கீதை 9-1.

ஶ்ரீ:

ஶ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

# ஸ்ரீமத் பகவத்கீதை.

## *பத்தாவது அத்யாயம்*



பா] கீழே அங்கங்களோடு கூடிய பக்தியோகம் சோல்லப்பட்டது. இப்பொழுது பக்தி உண்டாவதற்காகவும் அது வ்ருத்தி அடைவதற்காகவும் பகவானுடைய தடுக்கமுடியாத நியமிக்கும் தன்மை முதலிய கல்யாண குணங்களின் கூட்டம் அளவற்றது, என்பதும்‘ எல்லா லோகங்களும் அவனுக்கு ஶரீரமாகையினாலும் அவனையே ஆத்மாவாக உடையதாகையினாலும் அவனால் ப்ரவ்ருத்திப்பிக்கத் தக்கது, என்பதும், விஸ்தாரமாகச் சோல்லப்படுகிறது.

---

*தா] பத்தாவது அத்யாயத்திற்கு ஸங்கதி சொல்வதற்காக ஒன்பதாவது அத்யாயத்தின் அர்த்தத்தைபாவது, அன்றிக்கே ஏழு முதல் ஒன்பது வரையிலு முள்ள மூன்று அத்யாயங்களின் அர்த்தத்தையாவது சுருக்கிச் சொல்லுகிறார்—அங்கங்களோடு கூடிய, என்று ஆரம்பித்து. 1 ‘ஸ்வகல்யாணகுணாநந்த்ய க்ருத்ஸ்நஸ்வாதீநதாமதி:। பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்தா விஸ்தீர்ணா தஶமோதிதா’ என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்திற்கு வ்யாக்யானம் செய்துகொண்டு ஸங்கதியையும் சொல்லுகிறார்—இப்பொழுது என்று ஆரம்பித்து. முன் அத்யாயங்களில் அங்கங்களோடு கூடிய பக்தியின் ஸ்வரூபத்தை விஸ்தாரமாகச் சொல்வதில் தாத்பர்யமாகையினால் தன்னுடைய கல்யாண குணம் முதலியவைகளைச் சுருக்கிச் சொல்லி இருக்கிறது. இந்த அத்யாயத்திலோ வெனில் அதை விஸ்தாரமாகச்சொல்லி இருக்கிறது. என்பதும்இந்த ஸமயத்திலசொல்ல வேண்டியது என்பதும் புனருக்தி இல்லை, என்பதும் ‘விஸ்தீர்ணா’ என்பதினால் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் ‘இப்பொழுது விஸ்தாரமாகச் சோல்லப்படுகிறது என்கிற இரண்டு பதங்கள் சொல்லப்பட்டதுகள்.*

---

1 *கீதார்த்த ஸங்க்ரஹம்* 14.

ஶ்ரீ பகவாநுவாச பகவானாகிய ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னார்.

**பூய ஏவ மஹாபாஹோ ஶ்ருணு மே பரமம் வச:|**
**யத்தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ||** 1

ப-ரை] மஹாபாஹோ பாஹு பலமுள்ள அர்ஜுன, ப்ரீயமாணாய ப்ரீதியை அடைந்திருக்கிற, தே- உனக்கு, ஹிதகாம்யயா நன்மை உண்டாக வேண்டும் என்கிற ஆசையினால், அஹம் நான், யத் எந்த வார்த்தையை, வக்ஷ்யாமி சொல்லப்போகிறேனோ, மே என்னுடைய, பரமம் உத்தமமான, வச: அந்த வார்த்தையை, பூய ஏவ மறுபடியும், ஶ்ருணு கேள். 1

பா] என்னுடைய மஹிமையைக்கேட்டு ப்ரீதி அடைந்திருக்கிற உனக்கு என்னிடத்தில் பக்தி உண்டாவதும், அது வ்ருத்தி அடைவதுமாகிய

---

தா] அர்ஜுனனுக்கு மேலே சொல்லப்போகிற அர்த்தத்தைக்கேட்க யோக்யதை உண்டு என்பதையும், அந்த அர்த்தம் மேலான நன்மைக்கு ஸாதனம் என்பது முதலியதையும், சொல்லிக்கொண்டு அந்த அர்ஜுனனுக்கு இதில் ஆஸ்தையை உண்டாக்கிக் கொண்டு அவனை ஸாவதானமாக இருக்கும்படி இந்த ஶ்லோகத்தினால் செய்கிறார். அவன்கேட்காமலிருந்தாலும் தானே சொல்வதற்குக் காரணம் 'ப்ரீயமாணாய' என்பதினால் சொல்லப்படுகிறது, என்று அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு அந்த ப்ரீதியின் விஷயத்தைக்காட்டுகிறார்.—'என்னுடைய மஹிமையைக்கேட்டு' என்று. பாஹுபல முள்ளவர்களுக்கு அயலாருடைய மேன்மையைச்சொல்வது அஸூயைக்குக்காரணமாக இருக்குமல்லவா; உனக்கோவெனில் சிசுபாலன் முதலியவர்கள்நிறைந்தஇந்தஉலகத்தில் அத்ருஷ்ட வஶத்தினால் இப்படிப்பட்டப்ரீதி உண்டானது.என்று'மஹாபாஹோப்ரீயமாணாய'என்கிற பதங்களின் அபிப்ராயம்.அன்றிக்கே பாஹு பலம் இருக்கிறபடியினால் வெளியில் இருக்கிற சத்துருக்களை எவ்வாறு ஜயித்தாயோ அப்படியே என்னிடத்தி லுண்டான ப்ரீதியின் பலத்தினால் உள்ளிருக்கும் சத்துருக்களு முன்னால் ஜயிக்கப் பட்டார்கள், என்று தாத்பர்யம். இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்தும், வஸ்துவின் ஸ்வபாவத்தினாலும், நன்மையை விசேஷித்துக் காட்டுகிறார்—பக்தி உண்டாவதும் அது வ்ருத்தி அடைவதுமாகிய என்று 'ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே' என்றல்லவோ சொல்லப் போகிறார், என்று தாத்பர்யம் கீழே சொல்லப்பட்டது மாத்திரத்தை மறுபடியும் சொல்வதில்ப்ரயோஜனமில்லை யாகையினால் 'பூய ஏவ என்பதினால் கீழ் ஆரம்பிக்கப்

நன்மை உண்டாகவேண்டும் என்கிற ஆசையினால் மறுபடியும் என்னுடைய மஹிமையின் விஸ்தாரத்தைப்பற்றிய உத்தமமான எந்த வார்த்தையைச் சொல்லப்போகிறேனோ அதை ஸாவதானமான மனதை உடையவனாய்க்கேள். 1

ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்ஹி தேவாநாம் மஹர்ஷீணாம் ச ஸர்வஶ: ॥ 2

ப-ரை] மே - என்னுடைய, ப்ரபவம் - மஹிமையை, ஸுரகணா:— தேவதைகளின் கூட்டங்களும், மஹர்ஷய:-மஹர்ஷிகளும், நவிது:- தெரிந்துக்கொள்ளவில்லை, ஹி - எந்தக் காரணத்தினால், தேவாநாம் - தேவதைகளுக்கும், மஹர்ஷீணாம் - மஹருஷிகளுக்கும், ஸர்வஶ: - எல்லா விதங்களுக்கும், அஹம் - நான், ஆதி: - காரணமோ. 2

பா] தேவதைகளின் கூட்டங்களும் மஹர்ஷிகளும் இந்த்ரியங்களுக்கு

---

தா] பட்ட மிகவும் ரஹஸ்யமான அர்த்தத்தோடு ஸம்பந்தமுள்ள அர்த்தங்களை விஸ்தாரமாகச்சொல்லியிருக்கிறது. என்பது. சொல்லப்படுகிறது. என்கிற அபிப்ராயத்தினால், மறுபடியும் என்னுடைய மகிமையின் விஸ்தாரத்தைப் பற்றிய என்று சொல்லப்பட்டது. இத்தாலேயே வார்த்தை உயர்ந்தது, என்பதற்குக் காரணம் காட்டப்பட்டது. கேட்டுக் கொண்டே இருக்கிற அர்ஜுனனைக்குறித்து 'ஶ்ருணு' (கேள்)என்று மறுபடியும் விதித்தது விசேஷமான கேள்வியைச் சொல்வதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸாவதானமுள்ள மனதை உடையவனாய்' என்று. முன்பு பொறாமை இல்லாத உனக்குத் தோஷமில்லாமையினால் ரஹஸ்யமான அர்த்தம் மாத்திரம் சொல்லப்பட்டது. இப்பொழுது சொல்லப்படுகிற அர்த்தத்தில் ப்ரீதி உள்ள உனக்குக் குணமும் உண்டாய் இருக்கிறபடியினால். மிகவும் ரஹஸ்யமான அர்த்தம் சொல்லப்படுகிறது. ஆகையினால் நீ அதிக ஸாவதானமாக இருக்க வேண்டும் என்று தாத்பர்யம். 1

மேல் சொல்லப்போகிற ஞானம் துர்லபம் என்பது, இது அதிகமாக ஆதரம் செய்யத்தக்கது என்று தெரிவிப்பதற்காக சொல்லப்படுகிறது இந்த ஶ்லோகத்தினால். ஸுரகணா:, மஹர்ஷய: (தேவதைகளின் கூட்டம் மஹரிஷிகள்) என்கிற பதங்களினால் அறியவில்லை என்று மறுப்பதற்கு உபயோகமாகிய அறிவு ஸம்பவிக்கக்கூடிய இடங்களைக் காட்டியிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் 'இந்த்ரியங்களு

எட்டாத விஷயங்களை அறியக்கூடியவர்களாயும் மிகவும்அதிகமான ஜ்ஞானம் உடையவர்களாயும் இருந்தபோதிலும் என்னுடைய ப்ரபாவத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. அதாவது என்னுடைய நாமம், என்னுடைய கார்யங்கள், என்னுடைய ஸ்வரூபம், ஸ்வபாவம் முதலியவைகளை அறியவில்லை. எந்தக் காரணத்தினால் அந்தத் தேவதைகளுக்கும் மஹர்ஷிகளுக்கும் எல்லா விதத்திற்கும் நான் காரணமோ. அதாவது அவர்களுடைய ஸ்வரூபம், அவர்களுடைய ஜ்ஞானம் ஶக்தி முதலியவைகளுக்கும் நான்

---

க்கு எட்டாதவிஷயங்களை அறியக்கூடியவர்களாயும்' என்பது முதலியது சொல்லப்பட்டது. ப்ரபாவத்தைப்பற்றிய ஜ்ஞானம் அவர்களுக்கில்லை என்று மறுக்கப்படுகிறதே யல்லாமல் ப்ரபாவம் மறுக்கப்பட இல்லை, ஏனெனில் இரண்டையும் மறுப்பதாக அர்த்தம் சொல்லில் கௌரவம் வருமாதலினால். கர்மங்களினாலுண்டாகும் ஜன்மம் பகவானுக்குஇல்லாமையினாலேயே அத்தைத் தெரிந்து கொள்ளவில்லை என்று மறுப்பது யுக்தமல்ல ஆகையினாலும்; மேலேயும் 1 'பொரோ' என்று பரபாவத்தைப் பற்றிய ஜ்ஞானமே சொல்லப்படுகிறதேயன்றிஜன்மத்தின் ஜ்ஞானமல்ல 1 'ஸஜஂ' என்று சொல்லியிருக்கிறபடியினால் ஆகையினாலேயே அவதார ரஹஸ்யத்தைபபற்றியது என்பதும் இவ்விடத்தில் பொருந்தாது. மேலும் அது முன்னமேயே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது, இவ்விடத்திலோ வேறு சொல்லப்படுகிறது ஆகையினாலும், இவ்விடத்தில் தேவதைகளினால் அறியத்தகாததாயும் பகவானிடத்திலிருப்பதுமான ப்ரபவம் ஆவது ஶ்ரஷ்டண (மேலானவனாக) ஷவஃ (இருத்தல்) ஆகிய ப்ரபாவமாகவே இருக்கவேண்டும் என்கிற அபிப்ராயத்தினால் 'ப்ரபாவத்தை' என்று சொல்லப்பட்டது பரபாவத்தைப பிரித்துசசொல்லுகிறார்.—'அதாவது' என்றாரம்பித்து. ஜன்மத்தைப்பற்றிச்சொல்லுவதாயிருந்தால் மேலே சொல்லபபோகிற காரணம் பொருந்தாது என்கிற அபிப்ராயத்தினால் 'எந்தக்காரணத்தினால்' என்பதினால் ஹி என்பது காரணத்தைச் சொல்லுகிறது என்பது காட்டப்பட்டது. 'ஸவஶஃ' என்பதினால் தேவதைகள் எல்லோருக்கும் என்பது மாத்திரம் சொல்லப்படவில்லை, ஏனெனில் அது பன்மையாகச் சொல்லியிருப்பதற்குச் சுருக்கிச சொல்லக்காரண மில்லாமையினாலேயே ஏற்பட்டதாகையினால், ஆதலினால் அதின் அபிப்ராயத்தை பரகாசப்படுத்துகிறார்.—'அவர்களுடைய ஸ்வரூபம்' என்றாரம்பித்தது. இது ப்ரபாவத்தைத்தெரிந்து கொள்ளாமைக்கு எபபடிககாரணமாகும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக அபிப்ராயத்திலிருக்கும் காரணமாகும் விதத்தை

---

1 பகவத்கீதை 10-3.

காரணமோ தேவதை ஆவதற்கும், தேவர்ஷிகளாவதற்கும் காரணமாகிய அவரவர் புண்ணியங்களுக்குத் தக்கபடி என்றால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஞானம் அளவு உள்ளது. ஆகையினால் அளவிடப்பட்டஜ்ஞான முள்ள அவர்கள் என்னுடைய ஸ்வரூபம் முதலியவற்றை உள்ளபடிக் குத் தெரிந்துகொள்ளவில்லை. 2

பா] அப்படிப்பட்ட இந்த தேவதைகளுக்கும் அறியமுடியாத தன்னுடைய ப்ரபாவத்தைப்பற்றிய ஜ்ஞானம் பக்தி உண்டாவதற்குத் தடையாகிய பாவங்களை நீக்குவதற்கு உபாயம் என்று சொல்லுகிறார்.—

**யோ மாமஜமநாதிம் ச வேத்தி லோகமஹேஶ்வரம் |**
**அஸம்மூடஸ்ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ‖ 3**

ப - ரை] மர்த்யேஷு மனுஷ்யர்களுக்குள் அஸம்மூட: இதரர்களுடன் ஸமமானவன் என்கிற மோஹமில்லாத, ய: எவன், மாம் என்னை, அஜம் ஜன்மமில்லாதவனாகவும், அநாதிம் ஆதியில்லாதவனாகவும், லோகமஹேஶ்வரம் லோகத்திற்கு ஈஶ்வரர்களாக இருப்பவர்களுக்கு மீஶ்வரனாகவும், வேத்தி அறிகிறானோ; ஸ: அவன், ஸர்வபாபை: எல்லாப் பாவங்களினாலும், ப்ரமுச்யதே விடப்படுகிறான். 3

---

*விசதமாகச் சொல்லுகிறார்.—'தேவதை ஆவதற்கும்' என்றாரம்பித்து பகவானுக்குப் பக்ஷபாதம் தயையில்லாமை' இவைகளைப் பரிஹரிப்பதற்காகவும், அவர்களுடைய புத்திமிதமானது என்று ஏற்படுவதற்காகவும் 'புண்யங்களுக்குத்தக்கபடி' என்று சொல்லியிருக்கிறது. 1 'இந்த வஸ்துக்கள் யாரிடத்திலுண்டானவைகள் இவைகளின் ஸ்ருஷ்டி எதனாலுண்டானது என்பது எவன் நிஶ்சயமாகத்தெரிந்துகொண்டவன் எவன் சொன்னவன், தேவதைகள் இவனுடைய ஸ்ருஷ்டிக்குக் கீழ்ப்பட்டவர்கள். ஆகையினால் இவை எவனிடத்திலிருந்து உண்டானவை இவைகளின் ஸ்ருஷ்டி எதனாலுண்டானது அவன் (இவைகளைத்) தரித்துக்கொண்டிருக்கிறானோ இல்லையோ என்பதை யாரறிவார் இவைகளை ப்ரத்யக்ஷமாகப் பார்த்துக்கொண்டிருப்பவன் மேலான ஆகாயத்தில் இருக்கிறான் (பரமபதத்திலிருக்கிறான்) அவனே தெரிந்துகொண்டிருக்கிறானோ இல்லையோ என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தை அபிப்ராயத்தில் வைத்துககொண்டு சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. 2 'யந்தேவா ந மநுஷ்யா ந வாஹம் நவஶங்கர: । ஜாநந்தி பரமேஶஸ்ய தத்விஷ்ணோ: பரமம் பதம்' என்பதுமுதலிய வசனங்களும் இவ்விடத்தில் அறியத்தக்கது.*

---

1. *தைத்திரீயம் 2 அஷ்டகம் 8 ப்ரச்னம் 9 அனுவாகம் 76 பஞ்சாதி.*
2. *முதல் வால்யூம் 29 பக்கம் 1 புட்நோட்டைப் பார்க்க*

பா] 'நஜாயதே' (பிறக்கவில்லை) ஆகையினால் அஜன் இத்தால் விகாரத்தை அடைவதையே ஸ்வபாவமாக உடைய அசேதனமாகிய த்ருவ்யத்தைப் பார்க்கிலும், அத்துடன் சேர்ந்திருக்கும் ஸம்ஸாரியாகிய ஆத்மாவைப்பார்க்கிலும் வேறுபட்டவன் என்பது சொல்லப்பட்டது. ஸம்ஸாரியாகிய ஆத்மாவுக்கு கர்மங்களினாலுண்டாக்கப்பட்ட அசேதனத்துடன்

---

தா] தேவதை முதலியவர்களினால் அறியமுடியாது என்று கீழ்ச்சொன்னதற்கு மேலேசொல்லப்போகிறவிஷயத்தில் உபயோகத்தைத் தெரிவித்துக்கொண்டு இந்த ஶ்லோகத்தின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'அப்படிப்பட்ட' என்று ஆரம்பித்து. 'யோவேத்தி' என்று அநுவாதமாகத் தோன்றினாலும் ப்ரயோஜனத்தை அநுவதித்துக்கொண்டு உபாயத்தை விதிப்பதிலேயே இதற்குத் தாத்பர்யம், என்கிற அபிப்ராயத்தினால்,—'உபாயம் என்று சொல்லுகிறார்' என்று சொல்லப்பட்டது.—'அஜ' என்னும் பதத்திற்கு இதனால் விலக்கக்கூடிய வஸ்துவைத் தெரிவிப்பதற்காக அர்த்தத்தைச்சொல்லுகிறார்.—'நஜாயதே' என்று ஆரம்பித்து. இந்த விசேஷணத்தின் ஸாமர்த்தியத்தினால் ஏற்பட்ட இதரவஸ்துவைப் பார்க்கிலும் வ்யத்யாஸத்தைச் சொல்லுகிறார்—'இத்தால்' என்று ஆரம்பித்து. 'விகாரத்தை அடைதலையே ஸ்வபாவமாக உடைய' என்பதினாலும் 'அத்துடன் சேர்ந்திருக்கும்' என்பதினாலும் அவைகள் விலக்கத்தகுந்தவைகள், என்பது காட்டப்பட்டது. 1 'அஜோநித்ய:' என்றிவை முதலியவைகளினால் நித்யனாக ஏற்பட்ட ஜீவாத்மாவுக்கு அசேதனத்தோடு சேர்ந்திருக்கிற மாத்திரத்தினால், அஜ என்கிற பதத்தினால் விலக்கக்கூடியவனாக இருக்கை எப்படிப் பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொலலுகிறார்—'ஸம்ஸாரியாகிய' என்று ஆரம்பித்து. பகவானும் எல்லாவற்றையும் ஶரீரமாக உடையவனாதலினாலே அவனுக்கும் அந்தந்த அசேதனங்களோடும் சேர்க்கை இருப்பதினால் அதை விலக்குவதற்காக—'கர்மங்களினா லுண்டாக்கப்பட்ட' என்று சொல்லப்பட்டது. முக்தனான ஆத்மாவும் ஸ்வரூபத்தில் ஆதி இல்லாதவன், ஆகையினால் அவன் விலக்கத்தகுந்தவன் என்பது எப்படிப் பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'முக்தனாகிய ஆத்மாவுக்கு' என்று ஆரம்பித்து. அஜனாகவே அநாதியாக இருத்தல் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. ஸ்வரூபம் அநாதி என்று சொல்லப்பட்டால் புனருக்தி என்னும் தோஷம்வரும், என்று தாத்பர்யம். முக்தனாக இருக்கும் தஶையில் அசேதனத்துடன் சேர்

---

1 பகவத்கீதை 2-20.

சேர்க்கையே ஜன்மம். 'அநாதிம்' என்கிற பதத்தினால் ஜன்மமில்லாதவனாக இருந்தபோதிலும் ஆதி உள்ளவனாகிய முக்தனான ஆத்மாவைவிட வேறுபட்டவன் என்பது சொல்லப்பட்டது முக்தனாகிய ஆத்மாவுக்கு ஜன்மமில்லாமலிருத்தல் ஆதியை உடையதல்லவா? அவனுக்கு ஹேயமான ஜன்மத்தின் ஸம்பந்தம் முன்னிருந்தமையால் அதை அடையத் தகுந்தயோக்யதை இருக்கிறது, ஆகையினால் அநாதிம் என்பதினால் அதை அடையகூடிய யோக்யதைஇல்லாமையினால் அதற்குவிரோதமான ஸ்வபாவ முள்ளவனாக இருக்கை சொல்லப்படுகிறது. இது * "தோஷமில்லாத" என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தினாலும் சொல்லப்படுகிறது. இப்படிஜன்மத்தின்ஸம்பந்தத்திற்கு விரோதமான ஸ்வரூபமுடையவனாகையினால் அதற்குத்தகாதவனாகிய என்னைலோகத்தில் ஈஶ்வரர்களாக இருப்பவர்களுக்கும் ஈஶ்வரனாக, மனிதர்களுக்குள் ஸம்மோஹமில்லாத

---

*க்கை இல்லை. பழைய சேர்க்கையைச் சொல்லுவதாக இருந்தால் பத்தனான ஆத்மாவுக்கும் பழைய சேர்க்கை இல்லையாதலின் அநாதியாக வேண்டிவரும். ஆகையினால்அப்பொழுது இருக்கும் முக்தனானதசை யை அடைந்த ஆத்மாவைவிட வேறுபட்டவன் என்பது எப்படிச்சொல்லப்பட்டதாகும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்- 'அவனுக்கு' என்று ஆரம்பித்து. ஒத்தாசைக் கருவிகள் சேர்ந்த பொழுது கார்யத்தை உண்டாக்குதலும் அவை சேராதபொழுதுஉண்டாக்காமலிருத்தலும் அல்லவோ யோக்யதை, என்று தாத்பர்யம். காலவிஶேஷத்தைக் குறிக்காமல் தோஷமில்லாமையைச் சொல்லுகிற ஶ்ருதியினாலும்இந்தஅர்த்தம்ஏற்பட்டது,என்றுசொல்லுகிறார்—'இது' என்றுஆரம்பித்து.அன்வயத்தைஅனுஸரித்து அர்த்தம்சொல்லுகிறார்- இப்படி' என்று ஆரம்பித்து. தேவதைகளினாலும் மஹரிஷிகளினாலும் அடையக்கூடாத இந்த ஜ்ஞானம் அல்பமான ஜ்ஞானமுடைய மனிதர்களுக்குள் யெவனாவது ஒருவனுக்கு அத்ருஷ்டவஶத்தினாலுண்டாகிறது, ஆகையினால் மனிதர்களுக்குள் எவன் என்று தனித்துச்சொல்வது உசிதம். மேல் பாதியில் பலத்தைச், சொல்லுகிறபடியினால் 'அஸம்மூட:, மர்த்யேஷு' என்கிற பதங்களுக்கு அவ்விடத்தில் உசிதமான அன்வயமில்லை 1 'யோ மாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம்' என்று மேலே சொல்லப்போகிறதை அனுஸரித்திருக்கதலும் உசிதம், என்கிற அபிப்ராயத்தினால். 'மனுஷ்யர்களுக்குள் ஸம்மோஹமில்லாத எவன், என்று சொல்லப்பட்டது. 'அஸம்மூட:' என்*

---

* *ஶ்வேதாஶ்வதரம்* - 6 19.  1 *பகவத்கீதை* 15 19.

எவன் அறிகிறானோ. இதரர்களுக்கு ஸமானமாக ஒன்று சேர்த்து ப்ரமித்தல் ஸம்மோஹம் அதில்லாதவனாக என்று அர்த்தம். அவன் என்னிடத்தில் பக்தி உண்டாவதற்குத் தடையான எல்லாப் பாவங்களினாலும் விடப்படுகிறான். இத்தால் சொல்லப்பட்டதாவது. லோகத்தில் மனுஷ்யர்களுக்கு ராஜாவாக இருப்பவன் மற்றவர்களைப்போலவே மனுஷ்யஜாதி

---

*னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுவதற்காக, ஸம்என்னும் உபஸர்கத்தின் அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தை ப்ரகாசப்படுத்துகிறார்—'இதரர்களுக்கு' என்று ஆரம்பித்து. 2 'வ்வைகர் விஹஷிதிம யொமஂவ ஜஜயொவெக்ஷிதக தஃ। வொவிகஂவெய்ந யொமெந யாஜ்வெநாக்ஷ ஸஂமயஃ॥ என்று மேலே சொல்லப்போகிறபடியினால் இவ்விடத்திலும் அதற்கு உபயோகமானபாபநிவ்ருத்தியே அபிப்ராயமாகக் கொள்ளப்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் 'என்னிடத்தில் பக்தி உண்டாவதற்குத்தடையான' என்று சொல்லப்பட்டது. லோகமஹேஸ்வரனாகிய பரமாத்மா அறியப்பட்டாலும் அறியப்படாமற் போனாலும் மோஹத்திற்கு ப்ரஸ்தாவமே இல்லை. அப்படியிருந்தாலல்லவோ அதில்லாத என்று மறுக்கலாம், ப்ரஹ்மா ருத்ரன் ஸநகர் முதலியவர்கள் இருக்கும்பொழுது பரம புருஷனே லோகமஹேஸ்வரன் என்பது எப்படி, பத்தன் முக்தன் இவர்களைவிட வேறுபட்டவனாக இருந்தாலும் நித்யஸூரிகளைவிட வேறு பட்டவன் என்பது எப்படி? என்றிவை முதலிய ஆக்ஷேபங்கள் வரில் மோஹம் உண்டாகும் மாதிரியையும் அது நிவ்ருத்திக்கும் மாதிரியையும் விவரமாகச் சொல்லுகிறார்.—இத்தால் சொல்லப்பட்டதாவது' என்றாரம்பித்து. அவரவர்களின் அதிபதிகளும் லோகத்தில் அவரவர்களுக்கு ஸமமான ஜாதியையுடையவர்களாகவே பார்க்கப்பட்டிருககிறபடியினால் இவ்விடத்திலும் மொததமாக அறியப்பட்ட பகவானிடத்திலும் ஸந்தேஹத்திற்கு இடம் உண்டு. முனுஷ்யர்களுக்கும் தேவதைகளுக்கும் அதிபதி முதலியவர்களைப்போலவே அண்டங்களுக்கு அதிபதி முதலியவர்களும் ஒருவிதமான கர்மத்தினாலுண்டான அளவிடப்பட்ட இடம், காலம்விஷயங்கள் இவைகளை உடையதும் பகவானுடையஸங்கல்பத்தினாலுண்டாகியதுமான நியமன சக்தியை யுடையவர்களாகையினால் பகவானுக்கே மேலெல்லையில்லாத நியமனசக்தி. 'லொகமஹெஸ்வரம்' என்னும் பதத்தினால் தன்னைத்தவிரமற்றெல்லா வஸ்துக்களைப்பற்றிய நியமனமே சொல்லப்படுகிற தாகையினாலேயே நித்ய ஸூரிகளும் விலக்கப்பட்*

---

2 பகவத்கீதை 10 7.

யை உடையவன். ஒரு கர்மத்தினால் ராஜாவாக இருக்கையை அடைந்தவன். அப்படியே தேவதைகளுக்கு யஜமானனும் அவ்வாறே அண்டத்திற்கு யஜமானனும். இதரர்களான ஸம்ஸாரி ஆத்மாவுக்கு ஸமமானவர்களே. அவனும் மூன்றுவிதங்களான பாவனைகளுக்குள் அடங்கியவனாகையினால், † "எவன் ப்ரும்மாவை ஸ்ருஷ்டிக்கிறானோ" என்றுஅர்த்தமுள்ள

டார்கள் என்பது ஸித்தித்தது, என்று தாத்பர்யம். ஒரே ஜாதியையுடையவனுக்கு மேலானவனாக இருக்கை எப்படி ஸித்தித்தது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம். 'ஒரு கர்மத்தினால்' என்று சொல்லப்பட்டது. அண்டத்திற்கு அதிபதி அவனுக்கு அதீனங்களான ஸ்வரூபம் ஸ்திதி ப்ரவ்ருத்தி இவைகளையுடைய இதரர்களான ஸம்ஸாரிகளுக்கு ஸமமான ஜாதியையுடையவன் என்பது எப்படி பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்—'அவனும்'என்றாரம்பித்து. கர்மபாவனை, ப்ரஹ்மபாவனை, உபயபாவனை. என்கிறமூன்று பாவனைகள். அவர்களுக்கும மூன்று பாவனைகள் உண்டென்பது முதலியவை பகவானாகிய பராசரர் சௌனகர் முதலியவர்களினால 1·ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா: ஜகதந்தர்வ்யவஸ்திதா: ப்ராணிந: கர்மஜநிதஸம்ஸாரவஶவர்திந: । யதஸ்ததோ ந தே த்யாநே த்யாநிநாமுபகாரகா: என்றும் அவர்கள் ஜ்ஞானிகளினால் உபாஸிக்கத்தக்கவர்களல்ல என்பதும் பகவானுக்குக் கீழ்படிந்தவர்கள் என்பதும். ஐந்தாவது வேதமாகிய பாரதத்தில் 3 'ப்ரஹ்மாணம் ஶிதிகண்஠ம் ச யாஶ்சாந்யா தேவதா: ஸ்ம்ருதா: । ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம் ।' 4 'ஏதௌ த்வௌ விபுதஶ்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌ ஸ்ம்ருதௌ । ததாதர்ஶிதபந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ ॥' என்றிவை முதலிய

† ச்வேதாச்வதரம் 6 18.　1 முதல்வால்யூம் 669-வது பக்கம் 3 புட்னோட்டைப்பார்க்க.　2 மஹாபாரதம் விஷ்ணுதர்மம் 104 23 யத: எந்தக்காரணததினால் ஆப்ரஹ்மப்ரஹ்மா முதல் ஸ்தம்பபர்யந்தா· புழுவரையிலுள்ள ப்ராணின: ப்ராணிகள் கர்மஜநித ஸம்ஸாரவசவர்த்தின: கர்மததினாலுண்டாக்கப்பட்டஸம்ஸாரத்துக்கு வசப்பட்டிருக்கிறவர்களோதத: ஆகையினால் தே அவர்கள் த்யானினாம் த்யானம் செய்பவர்களுகக்கு த்யானே த்யானம் செய்வதில் நைவோபகாரகா: உபகாரம் செய்கிறவர்களலல.　3 முதல்வால்யூம் 308வது பககம் 1 புட்னோட்டைப்பார்க்க.

4 மஹாபாரதம் சாந்திபாவம் மோக்ஷதாமம் 350 19 ஏதௌ இந்தத்வௌ இரண்டுவிபுத ச்ரேஷ்டௌ தேவ சரேஷ்டர்களும் ப்ரஸாதக்ரோதஜௌபரஸாதத்தினாலும் கோபத்தினாலும் உண்டானவர்களாகவும் தா ததாசிதபந்தாநௌ அவனால் காண்பிககப்பட்ட வழியை உடையவர்களாய ஸ்ருஷ்டி ஸம்ஹாரகாரகௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரம் இவைகளை சசெய்கியவர்களாகவும்ஸம் ருதௌ எண்ணப்பட்டார்கள்

ஶ்ருதி வாக்யத்திலும் அப்படியே சொல்லி இருக்கிறபடியினாலே. மற்றும் சில அணிமாமுதலிய அஷ்ட ஐஶ்வர்யங்களை அடைந்தவர்களும் அப்படியே. லோக மஹேஶ்வரனாகிய இவனே வேனில், கார்யதசையுடனும் காரணதசையுடனும் கூடிய அசேதனங்கள், பத்தன் முக்தன், என்கிற ஆத்மாக்கள், ஆகிய தன்னால் நியமிக்கப்படுகிற வஸ்துக்களெல்லாவற்றையும்விட, எல்லாக் கெட்ட குணங்களுக்கும் விரோதமாயும், எல்லை இல்லாத மேன்மையை உடைய எண்ணிறந்த கல்யாணகுணங்களுக்கே

---

*வசனங்களினாலும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மாவுக்கு மூன்று விதங்களான பாவனைகளுண்டென்பதுடன் ஸ்ருஷ்டிக்கப்பட்டவன் என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டியதற்காக 'வாக்யத்திலும்' என்று சொல்லியிருக்கிறது. ஸநகர் ஸநத்குமாரர் ருத்ரன் முதலிய ப்ரஹ்மாவின் பிள்ளைகளின் கூட்டத்தை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'மற்றும்சில' என்று. 'அணிமா முதலியவைகளாவன' 5 'அணிமா மஹிமா லகிமா ப்ராப்தி: ப்ராகாம்யம் ஈஶித்வம் வஶித்வம் யத்ர காமாவஸாயிதா' என்று சொல்லப்பட்டவைகள். அவைகளும் கர்மங்களினாலுண்டான பகவானுடைய ஸங்கல்பத்தினாலுண்டானவைகள் தான் ருத்ரனுடைய அணிமா முதலிய ஐஶ்வர்யம் ஒன்றினால் உண்டானவையல்ல என்று சிலவிடத்தில் சொல்லியிருப்பதும் ஜன்மம் தொடங்கி ஏற்பட்டவைகள் என்றே தெரிவிக்கிறது; அப்படியில்லாவிடில் 1 'மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ' என்றிவை முதலிய வசனங்களுக்கு விரோதம் வரும் ஆகையினால். இவ்விடத்தில 'லோக' என்னும் பதம் 'லோக்யந்தே' (அறியப்படுகின்றன) என்கிறவ்யுத்பத்தியினால் எல்லாவற்றையும் சொல்லுகிறது. என்கிற அபிப்ராயத்தினால சொல்லுகிறார்—கார்யதசையுடனும்' என்றாரம்பித்து. 'எல்லாக்கெட்ட குணங்களுக்கும்' என்பது முதல் 'மஹா' என்னும்*

---

5 ஸாங்க்யகௌமுதி அணிமாசின்னதாகுகை மஹிமா பெரிதாகுகைலகிமா லேசாகுகைகரிமாகனமாகுகை வசித்வம் இந்திரியங்களை ஜயித்தல் அல்லது வசப்பட்ட சரீரம் முதலியவைகளையுடையவனாயிருக்கை ஐச்வர்யம் நியமிக்கும் ஸ்வபாவம் ப்ராப்தி: இஷ்டமான இடத்துக்குப்போகுதல ப்ராகாம்யம் தன்னிஷ்டப்படி விதித்தல இதி என்று யோக யுந்தஸ்யயோகம் செய்பவனுக்கு அஷ்ட எட்டு ஐச்வர்யாணி ஸித்திகள்.

1 மஹாபாரதம் சாந்திபர்வம் ராஜதர்மம் 20-12 மஹாத்மா மஹாத்மாவாகிய மஹாதேவ: ருத்ரன் ஸர்வமேதே ஸர்வமேதம் என்னும் யாகத்தில் ஆத்மானம் தன்னை ஹுத்வா ஹோமம் செய்து தேவதேவ: தேவதேவனாக பபூவ ஆனான்.

இருப்பிடமாக இருக்கிறபடியினாலும், இவைகளை நியமிப்பதோன்றையே ஸ்வபாவமாக உடையவனாகையினாலும் வேறுபட்டவன், என்று இதரர்களுக்கு ஸமானன், என்கிற அஜ்ஞானமில்லாத எவன் என்னைத் தெரிந்துக் கொள்ளுகிறானோ, அவன் எல்லாப் பாவங்களினாலும் விடப்படுகிறான். என்பது. 3

பா] இப்படி தன்னுடைய ஸ்வபாவத்தை அனுஸந்தானம்செய்வதினால் பக்தி உண்டாவதற்குத் தடையான பாவங்கள் நிராகரிக்கப்படுகின்றன என்பதையும் தடை நீக்கப்பட்டபடியினாலே தன்னாலேயே பக்தியுண்டாகும் என்பதையும் நிரூபித்து, தன்னுடைய ஐஶ்வர்யம் கல்யாண குணங்கள் இவைகளின் விஸ்தாரத்தை அனுஸந்தானம் செய்வதினால் பக்தி வ்ருத்தியடையும் விதத்தைச் சொல்லுகிறார்—

*பு₃த்₃தி₄ர்ஜ்ஞாநமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் த₃ம: ஶம: ।*
*ஸுக₂ம் து₃:க₂ம் ப₄வோऽபா₄வோ ப₄யம் சாப₄யமேவ ச ॥* 4

*அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ தா₃நம் யஶோऽயஶ: ।*
*ப₄வந்தி பா₄வா பூ₄தாநாம் மத்த ஏவ ப்ருத₂க்₃விதா₄: ॥* 5

ப - ரை] பு₃த்₃தி₄: புத்தி, ஜ்ஞாநம் விவேகம், அஸம்மோஹ: மோஹமில்லாமை, க்ஷமா பொறுமை, ஸத்யம் உண்மை, த₃ம: வெளி இந்திரியங்களை அடக்குதல், ஶம: மனதை அடக்குதல், ஸுக₂ம் ஸுகம், து₃:க₂ம் துக்கம், ப₄வ: மனம்தளராமை, அபா₄வ: மனம்குன்றுதல், ப₄யம் பயம், அப₄யமேவ பயமில்லாமையும், அஹிம்ஸா ஹிம்ஸை, செய்யாமை, ஸமதா தன்னையும் பிறரையும் ஸமமாக எண்ணுதல், துஷ்டி: ஸந்தோஷம், தப: தபஸ்ஸு, தா₃நம் கொடுத்தல், யஶ: கீர்த்தி, அயஶ: அபகீர்த்தி, (இவைமுதலிய) பூ₄தாநாம் ப்ராணிகளுடைய, ப்ருத₂க்₃விதா₄: தனித்தனியான, பா₄வா: மனதின் விகாரங்கள், மத்த ஏவ என்னிடத்திலிருந்து, ப₄வந்தி உண்டாகின்றன. 4 5

பா] பு₃த்₃தி₄: நிரூபணம்செய்யக்கூடிய மனதின் ஸாமர்த்த்யம், ஜ்ஞாநம்

---

*பதத்தின் தாத்பர்யத்தை விவரித்திருக்கிறது.* 'நியமிப்பதோன்றையே ஸ்வபாவமாக உடையவனாகையினாலும்' *என்பது* 'ஶர்வம்' *என்னும் பதத்தின் அர்த்தம்.* 3

தா] 'பக்த்யுத்பத்திவிவ்ருத்₃த்₄யர்த₂' *என்கிற இடத்தில் சொல்லப்படுகிற அர்த்தத்தை விவரித்துக்கொண்டு கீழ்ச்சொன்னதுடனும் அதினாலேற்பட்ட அர்த்தத்துடனும் மேலே சொல்லப்போகிறதற்கு ஸங்கதி சொல்*

சேதனமும் அசேதனமுமாகிய வஸ்துக்களின் விசேஷத்தைப்பற்றியநிஶ்சயம், அஸம்மோஹ: முதலில் பார்க்கப்பட்ட வெள்ளி முதலியவைகளை விடவேறாகிய சிப்பிமுதலிய வஸ்துக்களில் (இது அத்துடன்) ஒரேஜாதியுள்ளது என்கிற புத்தியில்லாமை, க்ஷமா மனது விகாரத்தை அடையக்

---

லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. 'புத்தி: ஜ்ஞானம்' என்கிற பதங்களுக்குப் புனருத்தியைப் பரிஹரிப்பதற்காக புத்திமானுகையினால் தெரிந்துகொள்ளுகிறான் என்கிற ப்ரயோகத்தை அனுஸரித்து லக்ஷணையினால் அறியும் சக்தியைச் சொல்லுகிற தென்றுவது, 'புத்த்யதேऽநயா' (இத்தால் அறிகிறான்) என்கிற வ்யுத்பத்தினாலாவது ஒன்று காரணத்தைச் சொல்லுகிறதாகவும், மற்றொன்று கார்யத்தைச் சொல்லுகிறதாகவும் வ்யாக்யானம் செய்கிறார்—'நிரூபணம் செய்யக்கூடிய' என்றாரம்பித்து. 'அஸம்மோஹ:' என்பதற்கு ஸமீபத்தி லிருக்கிறபடியினால் அதற்குக் காரணமாகிய ஜ்ஞானம் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'சேதனமும் அசேதனமும்' என்றாரம்பித்து. 'புத்தி: ஜ்ஞானம்' இந்த இரண்டு பதங்களும் நிஶ்சயத்தையும் மோக்ஷத்தைப்பற்றிய ஜ்ஞானத்தையும் சொல்லுவதாக வ்யாக்யானம் செய்தது இரண்டு பதங்களுக்கும் அர்த்தத்தைச் சுருக்கிச் சொல்லவேண்டியது முதலிய தோஷங்கள் வருகிறபடியினால் அனுதரிக்கப்பட்டது வேறு ஜாதியையுடைய வஸ்துவினிடத்தில் ஒரே ஜாதியையுடையது என்கிற புத்தி ஸம்மோஹம் அதற்கு உதாஹரணம் சொல்லுகிறார்—'முதலில்' என்றாரம்பித்து. 'முதலில் பார்க்கப்பட்ட' என்பதற்கு கடை முதலியவைகளில் இருக்கும்பொழுது பார்க்கப்பட்ட என்றர்த்தம். இது நினைத்துக்கொண்டிருக்கும் வஸ்துவைப் பற்றிய ப்ரமத்துக்கோ ருதாஹரணம். கோபம் என்கிற விகாரமில்லாத மாத்திரத்தைக்கொண்டு தூங்கும்பொழுது முதலியகாலங்களில பொறுமை என்னும் பதம் ப்ரயோகிக்கப்படுவதில்லை; பின்னை எப்பொழுதென்னில் கோபம் உண்டாவதற்குக் காரணமிருந்தபோதிலும் கோபமில்லாமையில் ப்ரயோகிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மனது விகாரத்தை அடைய' என்றாரம்பித்து. அபவாதம்சொல்லுதல் அடித்தல் முதலிய கோபத்திற்குக் காரணங்களிருந்தபோதிலும் என்றர்த்தம். காரணமிருந்தால் அதின் கார்யம் எப்படி உண்டாகாமல்போகும், அப்படியானல் அது காரணமென்பதே தகாததல்லவோ; என்னில் இதற்குஸமாதானம் சொலலுகிறோம் காரணமிருந்தால் காரியம் அவஶ்யம் உண்டாகவேண்டும் என்கிற நியமமில்லை, பின்னை எப்படி என்னில் தடங்கல்களொன்றுமில்லால் எல்லாக்காரணங்களும்

காரணமிருந்தபோதிலும் விகாரத்தை அடையாத மனதைஉடையவனாக இருக்கை ஸத்யம் தன்னால் கண்டறியப்பட்ட விஷயத்தைப்பற்றியதா யும் ப்ராணிகளுக்கு ஹிதமாயுமிருக்கிற வார்த்தை, அதற்குத்தகுந்த மன தின் வ்யாபாரம் இங்கே சொல்லப்படுகிறது மனதின் வ்யாபாரங்களைப்

---

சேர்ந்திருந்தால் உண்டாகும் என்று சொல்லப்படுகிறது அப்படிக்கில் லாவிடில் ஒவ்வொரு காரணங்கள் தனித்தனியாகவும் தடங்கல்களிரு ந்தபோதிலும் காரியங்களை உண்டாக்குமென்னில் எல்லாக்காரியங்க ளும் எப்பொழுதும் எல்லா இடத்திலு முண்டாகவேண்டிவரும் ஏனெ னில் நித்யங்களாய் எல்லாவிடத்திலு வ்யாபரித்திருக்கிற காலம் பக வான் முதலிய காரணங்களு மிருக்கிறபடியினால். ஆனால் பொறுமை யைப்பற்றி ஆம்சர்யமென்னவெனில் மணிமந்திரம் முதலியவைகளி னால் கொளுத்தும் சக்தி எப்படித் தடுக்கப்படுகிறதோ, அப்படியே ப்ர பலமாகிய விவேகமென்கிற தடங்கலினால் வேறொன்றினாலும் தடுக்க முடியாத கோபத்தின் காரணங்கள் தடுக்கப்படுகிறபடியினால், என்று தாத்பர்யம். வஸ்து உண்மையாயிருப்பதற்கு உள்ளபடியே கண்டறிவ தும் வேண்டியதுதான், ஆனாலும் கண்டறிந்தபடி சொன்ன மாத்திரத் தில் சொன்னவனுக்குக்குற்றமில்லை ப்ரமித்தது தைவாதீனமாக உண் டானதாகையினால் என்கிற அபிப்ராயத்தினால் 'தன்னால் கண்டறியப் பட்ட' என்று இவ்வளவு மாத்திரம் சொல்லப்பட்டது. உண்மையாக இருந்தபோதிலும் அயலானுடைய அனிஷ்டத்திற்குக் காரணமான வார்த்தை ஸத்யமல்ல என்று [1] 'ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்' என் றிவை முதலிய வசனங்களினால் தடுக்கப்பட்டிருக்கிறபடியினால் 'ப்ரா ணிகளுக்கு ஹிதமாயும்' என்று சொல்லப்பட்டது. 'ஸத்ய' என்னும் பதத்திற்கு மனதின் வ்யாபாரத்தைச் சொல்லுவதில் அதிக ப்ரஸித்தி இருப்பதின் பலத்தையும், முன்பு சொன்னதைப்போலவே பின்னால் சொல்லியதும் இருக்கவேண்டும் என்கிறந்யாயத்தையும் அபிப்ராயத் தில் வைத்துக்கொண்டு இங்கே 'ஸத்ய' என்னும் பதம் லக்ஷணையினால் அர்த்தத்தைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்.'—அதற்குத்தகுந்த' என்றாரம்பித்து 'தமஃ தமஃ' என்கிற பதங்களில் ஒவ்வொன்றேவெளி இந்திரியங்கள் மனது இவையிரண்டையும் அடக்குவதைச் சொல்லக் கூடியதாயிருந்தபோதிலும் புனருக்தியைப் பரிஹரிப்பதற்காக வெவ் வேறு அர்த்தம் சொல்லவேண்டியதவசயமாகையினால் அடக்குகிற க்ர

---

1 மனுஸ்ம்ருதி பூதஹிதம் ப்ராணிகளுக்கு ஹிதமான வார்த்தை ஸத்யம்ஸத் யம் என்று ப்ரோக்தம் சொல்லப்பட்டது

பற்றிச் சொல்லும் ஸந்தர்ப்பமாகையினால், தம: வெளி இந்தியங்களை ப்ரயோஜன மற்ற விஷயங்களிலிருந்து அடக்குதல், ஶம: மனதை அப்படியே அடக்குதல், ஸுகம் அனுகூலமாக அனுபவித்தல், து:கம் ப்ரதிகூலமாக அனுபவித்தல், பவ: வ்ருத்தி அதாவது அனுகூலமாக அனு

---

மத்தை அனுஸரித்து 'தம:ஶம:' என்னும் பதங்கள் முறையே வெளி இந்திரியங்களையும்மனதையும்பற்றியவை என்று சொல்லி இருக்கிறது. ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட காரியங்களிலிருந்து அடக்குதல் ஶாஸ்த்ரங்களாலே மறுக்கபட்டதாகையினல் 'ப்ரயோஜன மற்ற விஷயங்களிலிருந்து' என்று சொல்லப்பட்டது.'அப்படியே'என்பதற்கு ப்ரயோஜன மற்ற விஷயங்களிலிருந்து என்று அர்த்தம். அனுகூலமாக இருக்கையும் பிரதிகூலமாக இருக்கையும் மாத்திரமே ஸுகம் துக்கம் இவைகளுக்கு லக்ஷணம் ஆனபோதிலும் மனதின் வ்யாபாரமாக ஏற்படவேண்டியதற்காக 'அனுபவித்தல்' என்று சொல்லியிருக்கிறது. ஸுகம், து:கம், பயம், அபயம்' என்கிறபதங்களின் னடுவிலே சொல்லப்பட்டிருக்கிறபடியினல் 'பவோऽபாவ:' என்கிற இடத்திலும் ஒன்றுக்கொன்று விரோதமான அர்த்தம் சொல்லப்படுகின்றன என்பது ஸம்பவிக்கும்பொழுது விடத்தக்கதல்ல, ஆகையினுல் பவ: அபாவ: என்கிற பதங்களுக்கு இல்லாமை என்கிறஅர்த்தத்தைச்சொல்லுகிற அ என்னும் விகுதியின்பேதமொழிப வேறு அர்த்தத்தில் பேதமில்லை, அதிலும் பாவ: என்றே பதம் பிரிக்கவேண்டும், கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸுகதுக்கங்களை அவைகளுக்குக்காரணமென்பதும் உசிதம், ஆகையினல் பாவ: அழகாயிருக்கை பாவ: அபிப்ராயம் என்று மற்றவர்கள் வ்யாக்யானம் செய்ததும் உசிதமல்ல, இவை எல்லாவற்றையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டுசொல்லுகிறார்—'அனுகூலமாக'என்றாரம்பித்து. 'வ்ருத்தி' என்று அதிகமான ஸந்தோஷம் சொல்லப்படுகிறது, தளர்ச்சிக்கு எதிர்த்தட்டாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியினல். வாக்யகாரராலும் 'தல்லப்திர்விவேகவிமோகாப்யாஸக்ரியாகல்யாணாநவ

---

1 போதாயந வ்ருத்தி விவேக தோஷமில்லாத ஆகாரங்களைசாப்பிடுவதால் சரீரத்தை சுத்தமாக்கிக்கொள்ளுதல், விமோக ஆசையில்லாமை அப்யாஸ த்யானம் செய்யப்படும் வஸ்துவையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருத்தல், க்ரியா சக்திக்குத்தக்கபடி பஞ்சமஹாய ஜ்ஞங்களை அனுஷ்டித்தல், கல்யாண ஸத்யம் சொல்லுதலும் கபடமில்லாமையும் தயையும் கொடுத்தலும் அயலானுக்குப் பீடைசெய்யாமையும் அயலார்செய்த அபகாரத்தையே நினைத்துக்கொண்டிராமையும், அநவஸாத அதிக துக்கமில்லாமை, அனுத்தர்ஷ அதிக ஸந்தோஷமில்லாமை, இவைகளினலை தல்லப்த்தி: பக்தியோகம் கிடைப்பது. (உண்டாகும்).

பவிப்பதினுலுண்டாகும் மனதின் வ்ருத்தி, ஊஹாவ: ப்ரதிகூலமாக அனு பவிப்பதினுலுண்டாகும் மனதின் தளர்ச்சி, ஶயம் வரப்போகிற துக்கத் திற்குக் காரணத்தைப்பார்த்ததினுலுண்டாகும் துக்கம், ஊஶயம் அதுஇல்லா மை ' ஊஹிம்ஸா அயலானுடைய துக்கத்திற்குக்காரணமாயிராமை, ஸஉ தா தன்விஷயத்திலும் ஸ்நேஹிதன் விஷயத்திலும் ஶத்துரு விஷயத்தி லும் ப்ரயோஜனத்திலும் அனிஷ்டத்திலும் ஸமமான புத்தியையுடையவ

ஸாஊா நுாஷிஷெஷு ஹு:' என்று இந்தத் தளர்ச்சியில்லாமையும் அதிக ஸந் தோஷமில்லாமையும் சேர்த்துச் சொல்லப்பட்டன. ஸுகம்துக்கம் என் னும் பதங்களைக்கொண்டு வரும்புனருக்தியை நீக்குவதற்காக 'ஶயம் ஊஶ யம் என்னும்பதங்கள் ஸுகதுக்கங்களின் விஶேஷத்தைச் சொல்லுகின் றன என்று காட்டுகிறுர்—'வரப்போகிற' என்றுரம்பித்து. வரப்போகிற அநிஷ்டத்தை எதிர்பார்ந்தலே பயம், என்று லக்ஷணம் சொல்லி இரு ந்தபோதிலும் அந்தஜ்ஞானமே ப்ரதிகூலமாகையினுல் துக்கமாக இருக் கிறது. நம்முடைய ஸித்தாந்தத்தில் துக்கமென்று பெயரை உடைய வேறு குணம் ஒப்புக்கொள்ளவில்லை யல்லவா. அயலானுடைய துக்கத் திற்கு என்கிற இடத்தில் 'துக்கம் என்னும் பதத்தினுல் அஹிதமான துக்கம் சொல்லப்படுகிறது, வைத்தியம் முதலியது செய்யும்பொழுது ஹிதமாகிய துக்கத்தை உண்டாக்குவது ஹிம்ஸையல்ல வாகையினுல். இது முன்னமே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. அபயம், அஹிம்ஸை இவைகள் அபாவங்களாக இருந்தபோதிலும் வேருெரு வஸ்துவே நம் முடைய மதத்தில் அபாவமாகையினுல் மனதின் வ்யாபாரங்களாக இருக்கின்றன. ஸமமாக இருக்கும் விதங்கள் அனேகம் இருந்தபோதி லும், ஹிம்ஸை செய்யக்கூடாது என்று மறுத்திருக்கிற ப்ரஸ்தாவத்தி னுல், ஹிம்ஸை செய்வதற்கு விஷயமாகிய ஶத்துருக்களின் நினைவுவந் தது. ஆகையினுல் த்வேஷம் முதலியவைகள் இல்லாமையினுல் வெவ் வேறு இடங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட ஶத்துருக்கள் ஸ்நே ஹிதர்கள் விஷயங்களில் ஸமமாக இருக்கவேண்டும் என்பதே இவ்விடத் தில் சொல்லப்படுகிறது. என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர்— 'தன் விஷயத்திலும்' என்று ஆரம்பித்து. 2 'ஸஉதிராதஸுஹு்ஷிவ க்ஷவெக்ஷ' என்று பகவானுகிய பராஶரருடைய வசனம் இவ்விடத்தில் அந்தந்தப் பதங்களினுல் ஜ்ஞாபகப்படுத்தப்பட்டது. 'ப்யோஜனத்திலும்

2 விஷ்ணுபுராணம் 3-7-20 ஆத்ம தன்னிடத்திலும் ஸுஹ்ருத ஸ்நேகிதர் களுடையவும் விபக்ஷ சத்ருக்களுடையவும் பக்ஷ பக்கங்களில் ஸமமதி: ஸமான மான புத்தியை உடையவன் (எவனே அவனே விஷ்ணு பக்தனுக நினை) என்று மேலே சேர்த்துக்கொள்ளவும்.

ஞாக இருக்கை, துஷ்டிঃ எல்லா ஆத்மாக்களையும் அறிந்து ஸந்தோஷப் படுவதையே ஸ்வபாவமாக உடையவனாயிருக்கை, தபঃ ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி போகங்களைச் சுருக்கிக்கொள்வதாகிய சரீரத்தைக் கஷ்டப் படுத்தல், தாநம் தனக்கு அனுபவிக்கத்தகுந்த வஸ்துக்களை அயலாருக் குக்கொடுத்தல் யஶঃ குணஶாலீ என்கிற ப்ரஸித்தி, அயஶঃ குணங்களில் லாதவன் என்கிற ப்ரஸித்தி, இவை யிரண்டும் அதற்குத்தகுந்த இரண்டு விதங்களான மனதின் வ்யாபாரங்களென்று நினைக்கவேண்டியது, மனதின்

---

அனிஷ்டத்திலும்' என்கிற இடத்தில் தன்னுடைய ப்ரயோஜனத்திலும் அயலாருடைய ப்ரயோஜனத்திலும் தன்னுடைய அனிஷ்டத்திலும் அயலாருடைய அனிஷ்டத்திலும் என்று இப்படிப் பிரித்துப் பதத் தைச் சேர்த்துக்கொள்ள வேண்டியது. 'துஷ்டிঃ' என்பது 'ஸமதா' என்பதோடு சேர்த்துச் சொல்லப்பட் டிருக்கிறபடியினால் ஸமபத்து நிறைந்த ஶத்துருக்களையும் சேர்க்கவேண்டியதற்காக, 'எல்லா' என்னும் பதம். எல்லா இடத்திலும் ஸந்தோஷமே அல்லவோ ஆத்மாவுக்கு ஸ்வபாவத்தி லேற்பட்டது. விரோதத்தைப் பாவித்துக்கொள்ளல் முத லிய காரணங்களினால் உண்டாகின்றன அல்லவோ த்வேஷம் முதலிய வைகள்; என்கிற அபிப்ராயத்தினால் 'ஸந்தோஷப்படுவதையே ஸ்வபா வமாக உடையவனாக இருக்கை' என்று சொல்லப்பட்டது. இதுவும் மைத்ரீ முதலிய நான்கு விதமான குணங்களுக்குள் 'முதிதா' என்கிற பெயரை உடைய மனதின் பூஷணமாகிய குணம். வேதங்களுக்குப் புறம்பான ஶாஸ்த்ரங்களினா லுண்டாகும் காயக்லேஶம் தபஸ் அல்ல, என்று விலக்குவதற்காக 'ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி' என்று சொ ல்லப்பட்டது. ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி போகத்தைச் சுருக்கிக் கொள்ளுதலே வ்யாதி முதலிய காரணங்களினால் கஷ்டமாக இராத பக்ஷத்தில் அது தபஸ்ஸு அல்ல, என்று தெரிவிப்பதற்காக, 'ஶரீரத் தைக் கஷ்டப்படுத்தல்' என்று சொல்லப்பட்டது. தானம் செய்வதில் அயலாருடைய வஸ்துக்களையும், தன்னுடையதாக இருந்தபோதிலும் தள்ளவேண்டிய வஸ்துக்களையும், விலக்கவேண்டியதற்காக. 'தனக்கு அனுபவிக்கத்தகுந்த வஸ்துக்களை' என்று சொல்லப்பட்டது. 'அயலாருக் குக் கொடுத்தல்' என்பதற்கு அயலாருடைய த்ருவ்யமாகச் செய்தல் என்று அர்த்தம். 'அயஶঃ' என்னும பதத்தில் 'அ' என்பது அதிகமான ப்ரயோகத்தினால் ஏற்பட்டதாகிய விரோதி என்றும் அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்பதைச் சொல்லுகிறார்—'குணங்களில்லாதவன் என் கிற ப்ரஸித்தி' என்று. அதாவது தோஷங்களை உடையவன் என்கிற ப்ரஸித்தி, என்று தாத்பர்யம். ப்ரஸித்தி என்பது மாத்திரம் இரண் டுக்கும் பொது. ஆகையினால் 'குணஶாலீ என்கிற' என்றும், குணங்க

வ்யாபாரத்தைச் சொல்லும் ஸந்தர்ப்பமாகையினல். தபஸ்ஸு. தானம் இவை யிரண்டுமேப்படியே. இவை முதலிய எல்லாப்ராணிகளுடையவும் ப்ரவ்ருத்திக்குக் காரணங்களாகிய மனதின் வ்யாபாரங்கள் என்னுடைய ஸங்கல்பத்திற்கு வஶப்பட்டே உண்டாகின்றன. 4-5

எல்லா ப்ராணிகளின் கூட்டங்களினுடைய ஸ்ருஷ்டியையும் ஸ்த்தியையும் நடத்துகிறவர்களும் என்னுடைய ஸங்கல்பத்திற்கு அதீனமான வ்யாபாரத்தை உடையவர்கள், என்று சொல்லுகிறார்.—

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா ।
மத்பாவா மாநஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥

ப-ரை] யேஷாம் எவர்களுடைய லோகே வம்ஶபரம்பரையில், இமா: இந்த, ப்ரஜா: ஜனங்கள் (உண்டாகின்றனவோ) மாநஸா: ப்ரு

---

*ளில்லாதவன் என்கிற' என்றும் விஶேஷணங்கள் சொல்லப்பட்டன. இவை இரண்டும்' என்பது முதல் முன்போலவே. ஸிம்மம் பார்ப்பது போலப் பார்த்துக்கொண்டு சொல்லுகிறார். 'தபஸ்ஸு தானம்' என்று ஆரம்பித்து. 'அப்படியே' என்பதற்கு ஒருவிதமான மனதின் வ்யாபாரங்கள் என்று அர்த்தம். கீழ்ச்சொல்லியது மாத்திரம் என்பதை விலக்குவதற்காக இது உபலக்ஷணம் என்பதை அபிப்ராயத்தில் வைத்துக் கொண்டு, சொல்லுகிறார்—'இவை முதலிய' என்று. அபிப்ராயத்திலும் 'பாவா:' என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிற படியினல், இவ்விடத்திலும் 'பாவா:' என்னும் பதம் மனதின் வ்யாபாரங்களைச் சொல்லுகிறது. கர்த்தவாகியஜீவன் இந்த்ரியங்கள் முதலிய எல்லாவற்றி னுடையவும் ப்ரவ்ருத்தி தனக்கு அதீனமாக இருந்தபோதிலும இவ்விடத்தில் மனதின் வ்யாபாரங்களை மாத்திரம் சொல்லி இருப்பது இந்த ஸந்தர்ப்பத்தில் சொல்லப்படுகிற பக்தியாகிய மனதின் வ்யாபாரமும் தன்னுடைய ஸங்கல்பத்தின லுண்டாகிறது, என்று தெரிவிப்பதற்காக 'ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியும் தனக்கு அதீனங்கள்' என்பதில் கைமுதிக ந்யாயத்தைத் தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்குக் காரணங்களாகிய' என்று. 'மத்த:' என்கிற இடத்தில மற்றவர்களால் சொல்லப்பட்ட ஸமீபத்திலிருப்பது மாத்திரம், என்பவை முதலிய அர்த்தங்களை விலக்குவதற்காக ஐந்தாம் வேற்றுமையினல் சொல்லப்படுகிற காரணமாகஇருத்தல் நடுவில் ஏற்பட்ட வ்யாபாரத்தின் வழியாக, என்றுசொல்லுகிறார்- 'என்னுடைய ஸங்கல்பத்திற்கு' என்று. தனித்தனியாயும், ஒன்றுக்கொன்று விருத்தங்களாயுமிருக்கிற இவைகளுக்கும் நான் ஒருவனே காரணம், என்று 'மத்த' என்பதின் அபிப்ராயம்.* 4, 5

ம்மாவின் மனதிலிருந்து, ஜாதா: உண்டாயிருக்கிற, பூர்வே முன் கல்பத்திலுண்டான, ஸப்த ஏழு, மஹர்ஷய: ருஷிஸ்ரேஷ்ட்டர்களும், ததா அப்படியே, சத்வார: நான்கு, மனவ: மனுக்களும், மத்பாவா: என்னுடைய அபிப்ராயத்திற்கு அதீனமான அபிப்ராயத்தை உடையவர்கள், 6

பா] முன் நடந்தமன்வந்தரத்தில் இருந்த ப்ருகுமுதலிய எந்த ஏழு மஹர்ஷிகள் எப்பொழுதும் ஸ்ருஷ்டியைச் செய்வதற்காக ப்ரும்மாவின் மனஸ்ஸில் இருந்து உண்டானவர்களோ, எந்த ஸாவர்ணிகர்கள் என்று

---

தா] ஸ்ருஷ்டிக்கும் ஸ்த்திதிக்கும் காரணமாக ப்ரஸித்தர்களான பெரிய ப்ராணிகளிடத்திலும் இவை ஸ்வதந்த்ரங்கள் என்று புத்தி செய்யத்தக்கதல்ல, வேறொருவருடைய ஸங்கலபத்தின லுண்டாகிய வஸ்துக்களிடங்களிலும் என்னுடைய ஸங்கல்பத்தின லுண்டானவைகள், என்று அனுஸந்தானம் செய்யவேண்டியது, என்பதற்கு உதாஹரணமாக 'மஹர்ஷய:' என்று ஆரம்பித்துச் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்—'எல்லா ப்ராணிகளின்' என்று ஆரம்பித்து. 'யேஷாம் லோக இமா: ப்ரஜா:' என்பதின் அபிப்ராயத்தைச் சொல்லி இருக்கிறது, 'எல்லா ப்ராணிகளின் கூட்டங்களுடைய' என்பது.'ஸ்ருஷ்டியையும்,ஸ்த்திதியையும்' என்றது மஹர்ஷிகளிடத்திலும் மனுக்களிடத்திலும் முறையே அன்வயித்துக் கொள்ளவேண்டியது. ஸப்தருஷிகளுக்கு 'பூர்வே' (முன்னிருந்தவர்கள்) என்கிற விசேஷணத்தினுல் சொல்லப்படுகிற அர்த்தத்தைச சொல்லுகிறார்—முன் நடந்த மன்வந்தரத்தில்' என்று. 'ப்ருகு முதலிய' என்பதற்கு 1 'மஹர்ஷீணாம் ப்ருகுரஹம்' என்று மேலே ருஷிகளுக்குள் ப்ருகு முக்யமானவர் என்பது சொல்லப்படுகிறது, என்று தாத்பர்யம். 2 'ஸப்த ப்ரஹ்மாண இத்யேதே புராணே நிஸ்சயம் கதா:' என்றிவை முதலிய வசனங்களை ஜ்ஞாபகப்படுத்துவதற்காக 'ஸப்த' என்னும் பதம். ருஷிகளைச் சேர்ந்த கோத்ரங்களை வரிக்கவேண்டிய கார்யங்களில் வரிக்கத்தகுந்த கோத்ரங்களை உணடாக்கினவர்கள், என்கிற அபிபராயத்தினுல் சொல்லுகிறார்—'எப்பொழுதும் ஸ்ருஷ்டியைச் செய்வதற்காக' என்று. 'ப்ரும்மாவின் மனஸ்ஸிலிருந்து உண்டானவர்களோ'என்பதற்கு ஸபாலோப

---

1 பகவத்கீதை 10-25. 2 பாரதம் சாந்திபர்வம் மோக்ஷதர்மம் 207–5 ஏதே இவர்கள் ஸப்த ஏழுப்ரம்ஹாண: ப்ரம்ஹாக்கள் இதி என்று புராணேபுராணத்தில் நிஸ்சயம்நிச்சயத்தை கதா: அடைந்தவர்கள்.

பெயரை உடைய நான்கு மனுக்கள், எப்பொழுதும் ஸ்த்திதியைச்செய்

ஷத்தில்1 'அந்த ப்ரும்மா, மனஸ்ஸிலிருந்து உண்டான ஏழுபிள்ளைகளை உண்டாக்கினர்' என்று அர்த்தமுள்ள வாக்யம் அபிபராயம். நைமித்திக ஸ்ருஷ்டியை விலக்குவதற்காக—'எப்பொழுதும்' என்று சொல்லி இருக்கிறது. ப்ரும்மாவினுடைய ஒரு தினத்தில் பதினன்கு மனுக்கள் க்ரமமாக அதிகாரம் செலுத்திவருகிறார்கள். ஒரு மன்வந்தரத்திலோ வெனில், ஒருவரே. அப்படிக்கிருக்க, நான்கு பேர்கள் என்று எப்படிச் சொல்லி இருக்கிறது. என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறர். 'ஸாவர்ணிகர்கள் என்று பெயரை உடைய' என்று. 2 ப்ரும்மஸாவர்ணர், ருத்ரஸாவர்ணர், தர்மஸாவர்ணர், தக்ஷஸாவர்ணர், என்று தக்ஷ

1 ஸுபாலோபநிஷத் 1 கண்டம்.

2 இத்தால் தக்ஷப்ரஜாபதியின் பெண்ணினிடத்திலிருந்து உண்டானவர்கள் என்கிற காரணத்தினலே இந்த நாலு மனுக்களும் சத்வாரோமனவ: என்று சொல்லப்பட்டார்கள் என்றேற்படுகிறதுஆகையினல்ஸாவர்ணர் என்கிற பேர் ஸமமாக இருக்கிறபடியினலே இந்த நாலு மனுக்களையும் சொல்லில்மேருஸாவர்ணர் இந்திர ஸாவர்ணர் இவர்களையும் சேர்த்து ஆறு மனுக்கள் என்று சொல்லவேண்டுமே என்கிற ஆக்ஷேபம் பரிஹரிக்கப்பட்டது. அந்த இருவரும் தக்ஷப்ரஜாபதியின் பெண்ணினிடத்திலிருந்து உண்டாகவில்லை என்று விஷ்ணுபுராணத்தில சொல்லியிருக்கிறபடியினல் இவ்விடத்தில் ஊரா:ஜா:(இந்த ஜனங்கள்)என்று சொல்லியிருப்பதும்ஜாஹ்யஸ்ய என்கிறஸூத்ரத்திலும் இதற்குமூலமான ஶ்ருதியிலும் போலமூன்று காலங்களிலுமிருக்கும் ஜனங்களைக் குறிக்கிறதாக யிருந்தபோதிலும் முன்னிருந்த ஜனங்களையும் இப்பொழுது இருக்கும் ஜனங்களையும்இனிவரப்போகிற மனுக்கள் உண்டாக்கினர்கள் என்பது எப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை ஏனெனில் தக்ஷப்ரஜாபதியினல் உண்டாக்கப்பட்ட ஜனங்களே லோகத்தில் பரவி இருக்கின்றன, என்று பாகவதம், 4, 1, 11, ப்ரும்மாவின் பிள்ளையாகிய தக்ஷப்ரஜாபதிக்கு ப்ரஸூதி என்கிற பெண்ணைப்பகவானகிய மனு கொடுத்தார். எந்தத் தக்ஷப்ரஜாதியினல் செய்யப்பட்ட ஸ்ருஷ்டி இந்த மூன்று லோகங்களிலும் அதிகமாகப்பரவி இருக்கிறதோ" என்று அர்த்தமுள்ள "தக்ஷாயப்ரும்மபுத்ராய ப்ரஸூதிம் பகவான் மனு: ப்ராயச்சத்யத்க்ருதஸ்ஸர்க: த்ரிலோக்யாம் விததோமஹான்' என்கிற ஶ்லோகத்திலும் மேற்படி 6 4, 17-ல்" எவருடைய ஸ்ருஷ்டியினல் மூன்று லோகங்களும் நிரப்பப்பட்டதுகளோ" என்று அர்த்தமுள்ள "யஸ்ய ப்ரஜாவிஸர்கேணலோகா ஆபூரிதாஸ்த்ரய:" என்கிற ஶ்லோகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறபடியினல் தக்ஷப்ரஜாபதியின் பிள்ளைபேரன் முதலிய வரிசைக்கும் அவர் பெண்ணின் பிள்ளைகளாகிய ப்ரம்மஸாவர்ணர் முதலியவர்களைச் சேர்ந்த வம்ஶபரம்பரைகளாதலினல் "யேஷாம் லோக இமா: ப்ரஜா:" என்பது மிகவும் பொருத்தமுடையது. இவவிடத்தில் சிலர் முதலில் இருப்பவர்களைத் தாண்டிச் சொல்வதற்குக் காரணமில்லாமையினலும்

இப்பொழுது இருக்கும் ஜனங்கள் முன்னிருந்தவர்களின் ஸந்ததியைச் சேர்ந்த வர்கள், என்று சொல்வது உசிதமாகையினாலும் ஸாயம்புவர், ஸ்வாரோசிஷர்,ரைவதர், உத்தமர், என்று பெயரை உடைய நான்கு மனுக்களும் மனவ:" என்று சொல்லப்படுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள் அதைப்பற்றி விசாரிப்போம். அப்படியிருந்தாலும் ஆறு மனுக்கள் முன்னிருந்தவர்களாகையினால் அவர்களெல்லாரையும் சொல்லவேண்டி இருக்க நான்குபேர்களை மாத்திரம் தனித்து சொன்னது பொருந்தாது இந்த நான்கு மனுக்களையும் தெரிந்து கொண்டவன் ப்ரஜைகளை உடையவனாவான், என்று அர்த்தமுள்ள "ஸ்வாயம்புவம் ரோசிஷம் சரைவதம் சததோத்தமம், வேதயஸ்ஸ ப்ரஜாவான்" என்று கௌதமகிலத்திலிருப்பதாக ஏற்படுகிறபடியினால் இன் நான்கு மனுக்களுக கும் தங்களைத்தெரிநது கொண்ட மாத்திரத்தில் ப்ரஜையுண்டாக்கக்கூடிய மஹிமை இருப்பதினால் அவாகளைத் தனித்துச்சொல்லி இருக்கிறது. என்னில், அதுவும் உசிதமல்ல மேற்கூறிய வாக்யம் இப்பொழுது படிக்கப்படும் வேதங்களில்இல்லாமையினால் ஸந்தேஹிக்கத்தக்கதே. அவவிதமன்றிக்கு ப்ரமாணம் என்று ஒப்புக்கொள்வோமாயினும் மன்வந்தரங்களை யெல்லாம் கீழ்ச்சொல்லியபடிக்குக் கிரமமாகக்கேட்டு மனிதன் புண்யத்தையும்,அழிவில்லாத ஸந்ததியையும்அடைகிறான் என்று அர்த்தமுள்ள மாக்கண்டேய புராணம், 1006 'ஶ்ருத்வாமன்வந்தராணீத்தம் க்ரமேண முனிபுங்கவ புண்யமாப்னோதி மனுஜஸ்ஸததாக்ஷீணஞ்ச ஸந்ததிம்." என்கிற வசனத்தினால் பதினான்குமன்வந்தரங்களை அறிவதினாலும் ப்ரஜாவ்ருத்தி உண்டாகும் என்று ஏற்படுகிறபடியினால் இந்த நான்கு பேர்களை மாத்திரம் தனித்துச்சொன்னதற்கு அது காரணமாகாது. ஆகையினாலேயே கீழ்ச்சொல்லிய கிலவசனம் எல்லாமனுக்களையும குறிக்கிறது, என்றே சொல்லவேண்டியது. மேலும் ? நான்காவது மனுவாகிய தாமஸரைச் சொல்லவேண்டியது அவசியமாகையினால் அவரைவிட்டு ஐந்தாவது மனுவைச்சொன்னது உசிதமல்ல. தாமஸர் விஷ்ணுவினுடைய அவதாரமாகையினால் அவரைச்சேர்த்துச் சொல்லில் "மத்பாவா:'என்பது அன்வயிககாதாகையினால் அவரை விட்டிருக்கிறது, அவர் பகவானுடைய அவதாரம் என்பலு பாகவதத்தில் சதுர்த்த உத்தமப்ராதா மனுர் நாம்நாசதாமஸ: ஹரிரித்யாஹ்ருதோயேநகஜேந்த்ரோமோசி தோக்ரஹாத்'என்றுசொல்லப்பட்டது.என்னில் அதுவும் ஸரியல்ல அவவிடத்தில் மன்வந்தரங்கள் தோறும் யஜ்ஞம் முதலிய ரூபங்களைக் கொண்டு பகவான் அவதரிக்கிறார், என்று சொல்லித்தாமஸருடைய மன்வந்தரத்தில் ஹரி என்னும் ரூபத்தைக்கொண்டு பகவான் அவதரித்தார்.என்று சொல்லப்படுகிறது. அவவிடத்தில் இருக்கிற ஶ்லோகங்களாவன பாகவதம், 8, 1, 28, சதுர்த்த உத்தமபராதா மனுநாம்னாததாமஸ, "8, 1, 31, தத்ராபிஜஜ்ஞே பகவான் ஹரிண்யாம் ஹரிமேதஸ: ஹரிரித்யாஹ்ருதோயே நகஜேந்த்ரோமோசி தோக்ரஹாத்" இதின் அர்த்தம் உத்தமருக்குத்தம்பியாகிய தாமஸர் நான்காவது மனு அந்தமன்வந்தரத்திலும் ஹரி, என்று அழைக்கப்பட்ட பகவான் ஹரிமேதஸ் என்பவருக்கு ஹரிணீ என்னும் ஸ்தரீயினிடத்திலுண்டானர். எந்த ஹரியினால் யானை முதலையிலிருந்து விடுக்கப்பட்டதோ,என்று அந்தப் பாகவதத்திலேயே மன்வந்தரங்களின் கதையை முடிக்குமிடத்திலும் ஓ அரசனே எந்த யஜ்ஞம் முதலிய பகவானுடைய ரூபங்கள் கீழ்ச்சொல்லப்பட்டனவோ அவைகளினாலே வப்பட்ட

வதற்காக இருந்தார்களோ, எவர்களுடைய வம்ஶபரம்பரையாகிய இந்த லோகத்தில் உண்டான இந்த ஜனங்களெல்லாம் க்ஷணந்தோறும் ப்ரளய காலம்வரையிலும் பிள்ளைகளை உத்பத்தி செய்துகொண்டும், ரக்ஷித்துக்கொண்டும் இருக்கிறார்களோ, அந்த ப்ருகு முதலிய ருஷிகளும் மனுக்

ப்ரஜாபதியின் பெண்ணிடம் அந்த பருமமா முதலிய நான்கு பேர்களினால் மனதினுலுண்டாக்கப்பட்டவர்கள். 'ஊ்ஹ ரவா:' என்கிற இதுவே இவ்விடத்தில் விதிக்கப்படுகிறது, மற்றவைகள் புராணுதிகளில் ப்ரஸித்தங்களானவை அனுவதிக்கப்படுகின்றன, என்று தெரிவிப்பதற்காக—'எவர்கள்' என்று சொல்லியிருக்கிறது. 'வம்ஶ பரம்பரையாகிய' என்பதற்கு 'ஜநெபாயொகஃவெ ரக்ஷ:' என்று சொல்லி இருக்கிறபடியினால் இவ்விடத்தில் 'லோகமாவது வமஶபரம்பரைதான்' என்று தாத்பர்யம். 'எவர்களுடைய வம்ஶபரம்பரையி லுண்டான' என்பதற்கு எவர்களுடைய பிள்ளை பேரன் முதலியவர்களிடத்திலிருந்து உண்டான என்று அர்த்தம. 'ஊஶா:' (இந்த) என்று சொல்லி இருப்பது மற்றக்காலங்களிலிருக்கும நித்தியமான ஸ்ருஷ்டியையும சேர்த்துச சொல்லுகிறதே ஒழிய அதை விலக்குகிறதல்ல. பகவானுக்கு அவைகளும் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறபடியினுல், எனகிற அபிப்ராயத்தினுல சொல்லுகிறார்—'க்ஷணந்தோறும் ப்ரளயகாலம்வரையிலும்' என்று. 'உத்பத்தி செய்துகொண்டும், ரக்ஷித்துக்கொண்டும்' என்பது

வர்களாய் மனு முதலியவர்கள லோகஙகளின வயாபாரத்தை நடத்திவருகிறார்கள் என்று அர்த்தமுள்ள பாகவதம், 8, 16, 3 யஜஞாதயோயா: கதிதா: பௌருஷ்யஸ்தனவோங்ருப 1 மன்வாதயோஜகதயாத்ராம்யநத்யாபி:ப்ரசோதிதா: என்று சொ சொல்லி முடிக்கப்பட்டது. அப்படியே விஷ்ணுபுராணத்திலும் "ஒப்பில்லாத ஸத்வகுணம்மேலிட்ட லோகஙகளைக் காப்பாற்றுவதில் நிலைமை உடைய விஷ்ணுவினுடைய ஶக்தியானது எல்லாமன் வந்தரஙகளிலும் தேவதையாக அதிஷ்டானம் செய்கிறது. என்ற அர்த்தமுள்ள, விஷ்ணுபுராணம், 3, 28, விஷ்ணுஶக்திரநௌபம்யாஸத்வோதரிக்தா ஸ்திதிதௌஸ்த்திதா மன்பந்தரேஷ்வஸேஷேஷு தேவ த்வேநாதி திஷட்டதி என்று ஆரம்பித்து ஸ்வாயம் புவர் முதலியவர்களின் மன்வந்தரங்களில் யஜ்ஞம் முதலிய ரூபங்களைக் கொண்டு பகவான் அவதரிக்கிறார், என்று சொல்லி தாமஸருடைய மன்வந்தரம் வந்த பொழுது ஹர்யை என்கிற ஸ்த்ரீயினிடத்தில் ஹரிகளுடன் ஹரி என்று பெயரை உடையவராக உண்டானுர்என்பது, ˎ, 2, 2⁸ல் தாமஸஸ்யாந்தரே சாபிஸம்ப்ராப்தே புளரேவஹி, ஹர்யாயாம்ஹரிபிஸ்ஸார்த்தம் ஹரிரேவபபூவஹ" என்று சொல்லப்பட்டது. ஆகையினுல் தாமஸர் பகவானுடைய அவதாரம் என்கிற ப்ரஸ்தாவமே இல்லை. அப்படி அவா இருந்தபோதிலும் ஆரூவதாகிய சாக்ஷுஷமனுவும் முன்னிருந்தவராகையினுல் அவரைவிட்டு சத்வார:" என்பதற்கு அர்த்தம் சொல்லியதறகு ஒருயுக்தியும் ஏற்படாமையினுலும், பாஷ்யகாரர் அருளிச்செய்த அர்த்தமே உசிதம்.

களும், என்னுடைய அபிப்ராயத்தை அனுஸரித்த அபிப்ராயத்தை உடையவர்கள். 'மம' (என்னுடைய 'பாவநா' (அபிப்ராயமே) 'யேஷாம்' (எவர்களுக்கு) 'பாவ:' (அபிப்ராயமோ) 'தே' (அவர்கள்) 'மத்பாவா:' (மத்பாவர்கள்) என்று சொல்லப்படுகிறார்கள். அதாவது என்னுடைய இஷ்டப்படி நடப்பவர்கள். என்னுடைய ஸங்கல்பத்தை அனுஸரிக்கிற வர்கள். என்று அர்த்தம். 6

**ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்த்வத: |**
**ஸோ(அ)விகம்பேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்ஶய: ||**

ப - ரை] ய: - எவன், மம - என்னுடைய ஏதாம் - இந்த, விபூதிம் - நியமனத்தையும், யோகம் ச - கல்யாணகுணங்களையும், தத்த்வத: - உண்மையாக, வேத்தி - அறிகிறானோ, ஸ: - அவன், அவிகம்பேந - அசைக்கமுடியாத, யோகேந - பக்தியோகத்தோடு, யுஜ்யதே - சேருகிறான், அத்ர - இந்த விஷயத்தில், ஸம்ஶய: - ஸந்தேஹம், ந - இல்லை,

பா] விபூதியாவது நியமிக்கும் தன்மை. எல்லாவஸ்துக்களும் எனக்கு

---

ஸப்தருஷிகளையும் மனுக்களையும் முறையே குறிக்கிறது பெண்பாலாகப்பாடமிருக்கும் பக்ஷத்தில், 'ப்ரஜா:' என்கிற பதத்தோடு அன்வயம் சொல்லிக்கொள்ளவேணடியது 'மம' (என்னுடைய என்று ஆரம்பித்துச்சொன்னது ஸமாஸத்தினலேற்பட்ட அர்த்தத்தைச்சொல்லி இருக்கிறது. அன்றிகமே மத்யமபதலோபி (நடுப்பதம் தொக்கி இருக்கிற) ஸமாஸமாகவுமாம். ராஜாவினுடைய அபிப்ராயமே வேலைக் காரனுக்கும் அபிபாராயம் என்பதைபபோல அபிப்ராயம் மாத்திரம்ஸம ம், என்பதைப்பற்றி இப்படிச்சொல்லி இருக்கிறது, என்று காட்டுகி ருர்—'என்னுடைய இஷ்டப்படி நடப்பவர்கள்' என்று. ஸ்வாதீனமாக இருந்துகொண்டு அபிப்ராயம் மாத்திரம் ஸமம், என்பதையும், வேலைக் காரர் முதலியவர்களைப் போலப்புத்தி பூர்வமாக அனுஸரிக்கிருர்கள் என்பது மாத்திரத்தையும் விலக்குகிருர்—என்னுடைய ஸங்கல்பத்தை அனுஸரிக்கிறவர்கள், என்று. 6

தா] 'ஏதாம் விபூதிம் யோகம் ச' என்பது முன்பு சொல்லிய அர்த் தங்களைப் புத்தியில் தத்காலத்தில் தோன்றிய வரிசைப்படி அனுவாதம் செய்திருக்கிறது. 'ஸ்வகல்யாண' என்று ஆரம்பித்த ஸங்க்ரஹ ஶ்லோ கத்திலோவெனில் இந்த அர்த்தமே க்ரமப்படிச் சொல்லி இருக்கிறது. அதை அனுஸரித்துப் பதங்களின் அர்த்தத்தையும் வாக்யஙகளின் அர் த்தத்தையும் சொல்லுகிருர்—'விபூதியாவது நியமிக்கும் தன்மை' என்று

வமாப்பட்ட உத்பத்தி, ஸ்த்திதி, ப்ரவ்ருத்தி, இவைகளை உடையவைகள் என்பதாகிய விபூதியையும், என்னுடைய, கெட்ட குணங்களுக்கு விரோதமான கல்யாண குணங்களாகிய யோகத்தையும், எவன் உள்ளபடி

---

ஆரம்பித்து. 'எல்லாவஸ்துக்களும்' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தில் நியமனமாவது அவைகளைக்கொண்டு நிரூபிக்கவேண்டியதாக இருக்கிறபடியினால் உத்பத்தி முதலியவைகளோடு சேர்த்து 'என்பதாகி யவிபூதியை' என்று சொல்லி இருக்கிறது. உத்பத்தியும் ஸ்த்திதியும் பகவானுடைய ஸங்கல்பத்திற்கு அதீனமாக நடக்கிறபடியினால் நியமனத்துக்கு உட்பட்டவைகளே. ப்ரவ்ருத்தியாவது, தன்னுடைய கார்யத்திற்காகச் செய்யும் வ்யாபாரம், அசங்குதல் முதலியது எல்லா இடங்களிலும் ஸம்பவிக்காததாகையினால். 'விபூதிர் பூதிரைஶ்வர்யம்' என்று நிகண்டுவில் சொல்லி இருக்கிறது. விபு என்னும் பதமும் நியமிக்கிற புருஷனிடத்தில் ப்ரயோகிக்கப்படுகிறது. ஆகையினால் இவ்விடத்தில் விபுவாக இருக்கையாகிய நியமிக்கும்தன்மையையேசொல்லுகிறது. அதற்கு வ்யாபாரத்தைச்சொல்வதில் ஸ்வாரஸ்யமிருக்கையினாலும் அதற்கு ஒரு விரோதமும் இல்லாமையினாலும், வேறொருவஸ்துவைச் சொல்லும் பதங்களோடு சேர்த்துச் சொல்லப்பட்ட விபூதி என்னும் பதத்தில் நியமிக்கப்படுகிற வஸ்துக்களைச் சொல்வதாக மேலே சொல்லப்படுகிறது. 'யுஜ்யதே' (பகவானிடத்தில் சேர்ந்திருக்கிறது) என்னும் வ்யுத்பத்தியினால் இரண்டு விதங்களான அடையாளங்களை உடையவனாக இருக்கை இவ்விடத்தில் யோகம் என்று சொல்லப்பட்டது. பகவானிடத்தில் பகவானல்லாத வஸ்துக்களின் ஸ்வபாவங்களாகிய, பராதீனனாக இருக்கை, துக்கம், அஜ்ஞானம், முதலியவைகளை ஆரோபணம் செய்வதையும், பகவானல்லாத வஸ்துவினிடத்தில் ஈஶ்வரனுக்கு அதீனனாக இராமை, ஸ்வதந்த்ரனாக இருத்தல், தானாகவே உண்டானவனாக இருத்தல் முதலியவைகளை ஆரோபணம் செய்தலையும் விட்டு, என்று 'தத்த்வத:' என்பதின் தாத்பர்யம். 'அவிகம்பேந' என்கிற இடத்தில் தனக்குச் சலிப்பதில்லை, என்கிற அர்த்தத்தை மாத்திரம் நீக்கி, அனேகங்களான விரோதங்களினாலும் சலிப்பிக்கத் தகாமை சொல்லப்படுகிறது, என்று காட்டுவதற்காக, 'அசைக்க முடியாத' என்று சொல்லப்பட்டது. முன்பின் ஸந்தர்ப்பங்களை யோசித்துப்பார்த்தும், உபாஸனம் செய்கிறவனைப்பற்றிச் சொல்லுகிறயோக என்னும் பதம் பக்தியோகமாகிற விஶேஷத்தைப் பற்றிச் சொல்லுகிற

---

1 கீதார்த்தஸங்க்ரஹம், 14.

பா] * 'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே' என்று சுருக்கமாகச் சொல்லப்பட்ட உம்முடைய ஸ்ருஷ்டிக்கிறவனாக இருக்கை முதலிய யோகத்தையும் நியமனத்தையும் மறுபடியும் விஸ்தாரமாகச் சொல்லும், உம்மால் சொல்லப்படுகிற உம்முடைய மஹிமையாகிற அம்ருதத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிற எனக்கு த்ருப்தியில்லையல்லவா, என்னுடைய அத்ருப்தி உம்மாலேயே அறியப்பட்டது. 18

ஸ்ரீபகவாநுவாச பகவானாகிய ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னார்.—

ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீராத்மந: ஶுபா: ।
ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥

ப - ரை] குருஶ்ரேஷ்ட குருவம்ஶத்தில் பிறந்தவர்களுக்குள் சிறந்தவனாகிய அர்ஜுன, தே உனக்கு, ஆத்மந: என்னுடைய, ஶுபா: மங்களங்களான, விபூதீ: விபூதிகளை, ப்ராதாந்யத: முக்யமானவற்றை, கதயிஷ்யாமி சொல்லப்போகிறேன், ஹந்த ஆஶ்சர்யம், மே என்னுடைய, (விபூதிகளின்) விஸ்தரஸ்ய விஸ்தாரத்திற்கு, அந்த: முடிவு, நாஸ்தி இல்லை. 19

பா] குருவம்ஶத்தரசர்களுக்குள் சிறந்தவனாகிய அர்ஜுன? என்னுடைய

---

*தா] விரோதியான ஜனங்களை நரகம் முதலியவைகளை அடைவிக்கிறபடியினாலாவது, ப்ரீதியுள்ள ஜனங்களினாலே அவரவர்கள் இஷ்ட பலத்தை ப்ரார்த்திக்கப் படுகிறபடியினாலாவது ஜநார்தனன் என்னப்படுகிறான். விஸ்தாரத்தை அறியவேண்டும் என்கிற ஆசைக்குக் காரணத்தைத் தெரிவிப்பதற்காகவும், யோகம் என்னு பதத்தினால் சொல்லப்படுகிற அர்த்தத்தை ப்ரகாஶப் படுத்துவதற்காகவும், 'ஸ்ருய:' என்னும் பதத்தினாலே ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அஹம்ஸர்வஸ்ய' என்றாரம்பித்து அம்ருதம் என்னும் பதம் இவ்விடத்தில த்ருப்தியில்லை என்பதோடு சேர்ந்திருக்கிறபடியினால் மஹிமை போக்யம் என்பதைச் சொல்லுகிறது. மிகவும்போக்யம் என்று தெரிவிப்பதற்காக 'உம்மால் சொல்லப்படுகிற' என்று சொல்லப்பட்டது. உம்முடையமுகமாகிறசந்திரனிடத்திலிருந்து பெருகிவருகிற என்று தாத்பர்யம். 'ஹி' என்னும் பதத்தின் அபிப்ராயத்தை விவரிக்கிறார்.—'என்னுடைய' என்றாரம்பித்து.* 18

*இபபடி த்ருப்தியில்லாமையினால் கேழ்க்கிற அர்ஜுனனைக்குறித்து மிகவும் அனுக்ரஹத்தை உடையபகவான் அந்த அர்ஜுனனுடைய*

---

* *பகவத்கீதை* 10-8

வைகளாய் மங்களங்களா யிருக்கிற விபூதிகளை முக்யமானவற்றை உன க்குச் சொல்லப்போகிறேன் இவ்விடத்தில் ப்ராதாந்யத: என்னும் பத த்தினால் மேன்மை சொல்லப்படுகிறது. * பஹவோராயலா ஹ ஹ்ரவ்யம் ஹா' என்றல்லவோ மேலே சொல்லப்போகிறார் லோகத்தில் சிறந்த சில விபூதிகளைச் சொல்லப்போகிறேன், என்றர்த்தம். விஸ்தாரமாகச் சொல்லு வதற்கும் கேழ்ப்பதற்கும் முடியாது, அவைகளுக்கு முடிவில்லையாகை

உயர்ந்த குலத்தில பிறப்பு முதலியவைகளைச்சொல்லிக்கொண்டு அதின் மூலமாக அவனுக்கு இதைக்கேட்க யோக்யதை உண்டென்று காட்டிக்கொண்டு விபூதிகளை விஸ்தாரமாகத் தனித்தனியே சொல்ல வும் கேழ்க்கவும் முடியாதாகையினால் சில ஆகாரங்களினால் சுருக்கப் பட்ட விபூதிகளைச் சொல்லப்போகிறேன் என்று இந்த ஶ்லோகத்தி னால் சொல்லுகிறார்—'தே' (உனக்கு) என பதற்கு. பொறுமையில்லாமை ப்ரீதியை யுடையவனாக இருக்கை த்ருப்தி யில்லாதவனாக இருக்கை முதலிய குணங்கள் நிறைந்த உனக்கு, என்று தாத்பர்யம். குணங்க ளைக் குறித்து ஶேஷியாக இருக்கையாகிய ப்ரதானமாயிருக்கை சொல் லப்படுகிறதென்னில் எல்லா உதாஹரணங்களிலும் நிறைந்திராமையினா லும், குணங்களையும் ப்ரதானங்களாக மேலே சொல்லப்போகிறபடியி னாலும், எல்லாவற்றையும்சேர்த்துக்கொள்ளக்கூடிய அர்த்தத்தைச்சொ ல்லுகிறார்—'ப்ராதாந்யத: என்னும் பதத்தினால்' என்றாரம்பித்து. அது வே சொல்லப்படுகிறதென்பதை மேலே சொல்லப்போகிறதைக் கொ ண்டு உறுதிப்படுத்துகிறார்—'பஹவோராயலாம்' என்றாரம்பித்து. மொத் தார்த்தத்தைச் சொல்லுகிறார்—'லோகத்தில்' என்றாரம்பித்து. விஸ் தாரமாகச் சொல்லும் என்று கேட்டவனைக் குறித்து முக்யமானவற் றைச் சொல்லப்போகிறேன் என்று எப்படி சொல்லப்படுகிறது? என்று ஆக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானம் 'நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே' என்று சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் 'விபூதீநாம்' (விபூதிகளி ன்) என்று சேர்த்துக்கொள்ளவேண்டியது, 2 'விபூதேர்விஸ்தரோ மயா' என்றல்லவோ மேலே சொல்லப்போகிறார்—'நாஸ்தி' என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட முடியாமையைக் காட்டு கிறார்—'விஸ்தாரமாகச் சோல்லுவதற்கும்' என்றாரம்பித்து. இது சொல் லுகிறவருடையவும் கேழ்க்கிறவனுடையவும் ஶக்தியில்லாமையா லேற் பட்டதல்ல என்று சொல்லுகிறார்—'அவைகளுக்கு முடிவில்லை யாகை

* பகவத்கீதை 10-24. 2 பகவத்கீதை 10 40.

யினால். விபூதியாயிருக்கையாவது நியமிக்கப்படுவதாயிருக்கை. எல்லா ப்ராணிகளுடையவும் புத்திமுதலிய தனித்தனியான பாவங்கள் எனக்கு வசப்பட்டே உண்டாகின்றன என்று சொல்லி * 'ஏதாம் விபூதிம் யோகஞ்ச மம யோ வேத்தி தத்த்வத:' என்று சொல்லியிருக்கிறபடியினால். அப்படியே அவ்விடத்தில் யோகம் என்னும் பதத்தினால் சொல்லப்பட்டதாவது ஸ்ருஷ்டிப்பவனாகயிருக்கை முதலியது, விபூதி என்னும்

---

யினால்' என்று. இதுவே 'நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே' என்று சொல்லப்பட்டது. மேலே சொல்லப்போகிற வஸ்துக்களில் விபூதி என்னும் பதத்தை ப்ரயோகித்திருப்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—'விபூதியா யிருக்கையாவது' என்றாரம்பித்து. நியமிக்கப்படுகிற வஸ்துக்களைப்பற்றிச் சொல்லும் விபூதி என்னும் பதம் விபுவாக இருப்பதற்கு விஷயங்கள் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. வேறு இடத்திலும் 1 'ப்ரஹ்மா தக்ஷாதய: காலா:' 2 'விஷ்ணுர்மந்வாதய: காலா:' 3 'ருத்ர: காலாந்தகாத்யாஶ்ச' என்றிவை முதலிய இடங்களில் 'ஜநார்த்தநவிபூதய:' என்று நியமிக்கப்படுகிற வஸ்துக்களைப்பற்றி 'விபூதி' என்னும் பதத்தை ப்ரயோகித்திருப்பது காணப்பட்டிருக்கிறது. எத்தாலே என்னில் சொல்லுகிறார்—'எல்லா ப்ராணிகளுடையவும்' என்றாரம்பித்து. கீழே ப்ரஸ்தாவிக்கப் பட்டதாகிய பகவானுக்கு அதீனமாக யிருக்கை அல்லவோ 'ஏதாம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். அடுத்த ஶ்லோகத்தைக்கொண்டும் இந்த ஶ்லோகம் இந்த அர்த்தத்தையே சொல்லுகிறது, என்பதைக் காட்டுகிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. முன்பு இந்த ஶ்லோகத்தின் வ்யாக்யானத்தில் 'ஸௌஶீல்யம் வாத்ஸல்யம் ஸௌந்தர்யம் முதலிய கல்யாண குணங்களின் ஸம்பந்தத்தை' என்று அர்த்தம்சொல்லப்பட்டது, இவ்விடத்திலோவெனில் 'யோகம் என்னும் பதத்தினால் சொல்லப்பட்டதாவது ஸ்ருஷ்டிப்பவனாக இருக்கை முதலியது' என்று அர்த்தம் சொல்லப்படுகிறது, இவையிரண்டும் எப்படிப்பொருந்தும் என்னில்; இரண்டிடங்களிலும் இவையிரண்டும் முதலிய என்னும்

---

2 பகவத்கீதை 10 7.

1, 2, 3, விஷ்ணுபுராணம் 1-22-31, 32, 33 ப்ருஹ்மா தக்ஷ ப்ராஜாபதி முதலியவர்கள் காலம் விஷ்ணு மனு முதலியவர்கள், காலம் ருத்ரன் யமன் முதலியவர்கள். பகவானுடைய விபூதிகள்.

பா-அ] பதத்தினுல் சொல்லப்பட்டதாவது அவனுல் நியமிக்கப்படுவதாயிரு க்கை என்றல்லவோ சொல்லப்பட்டது மறுபடியும் * அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே। இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா:' என்று. 19

அதில் எல்லா ப்ராணிகளையும் ப்ரவ்ருத்திப்பிக்கிறதாகிய நியமனமாவது ஆத்மாவாக இருந்துகொண்டு என்கிற இந்த அர்த்தத்தையும், யோகம் என்னும் பதத்தினுல் சொல்லப்பட்டதாவது எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிப்பவனுக இருக்கையும், காப்பாற்றுகிறவனுக இருக்கையும், ஸம்ஹாரம் செய்கிறவனுக இருக்கையும் என்பதையும் நன்றுக ஸ்பஷ்டமாகச்சொல்லுகிருர்—

**அஹமாத்மா குடாகேஶ ஸர்வபூதாஶயஸ்தித:।**
**அஹமாதிஶ்ச மத்யம் ச பூதாநாமந்த ஏவ ச ॥**

ப - ரை) குடாகேஶ சோம்பலை ஜயித்தவனுகிய, அல்லது தூக்கத்தை ஜயித்தவனுகிய அர்ஜுன, அஹம் நான், ஸர்வபூதாஶயஸ்தித: எல்லா ப்ராணிகளுடையவும் ஹ்ருதயத்திலிருக்கிற, ஆத்மா ஆத்மா, அஹம் நான், பூதாநாம் எல்லா ப்ராணிகளுக்கும், ஆதி: காரணம், மத்யம் ஸ்த்திதிக்குக்காரணம், அந்தஶ்ச ப்ரளயத்திற்கும் காரணம். 20

---

*பதத்தினுல் சேர்த்துக்கொள்ளப்படுகிறதாகையினுலே ஒரே அர்த்தத்தைச்சொல்லுகிறபடியினுல் பொருந்தும், ஆகையினுலேயே 'ஏதாம் விபூதிம் யோகஞ்ச' என்கிற இடத்தில் 'கெட்டகுணங்களுக்கு விரோதமாகிய கல்யாணகுணங்களாகிற யோகத்தையும்' என்று மொத்தமாகச் சேர்த்துச் சொல்லப்பட்டது. 1'ஏதாம்விபூதிம்' என்பதற்கு முன்பு நியமனத்தைச்சொல்லுகிறதாக வ்யாக்யானம் செய்திருந்தபோதிலும் இவ்விடத்தில் அதை எடுத்தது, ஸம்பத்துமுதலிய வேறு அர்த்தங்களை விலக்கிக்கொண்டு வி என்னும் உபஸர்கத்தோடுகூடிய தாதுவின் அர்த்தத்தைப்ரகாசப்படுத்துவதற்காக. 'விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிஞ்ச' என்னுமிடத்திலோவெனில் 'யாபிர்விபூதிபி:' என்று கீழ் ஶ்லோகத்தில் சொல்லிய அர்த்தத்தையே சொல்லுவதுஸ்வாரஸ்யமுடையது ஆகையினுல் நியமனம் என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிறதாகச் சொல்லப்பட்டது. ஆகையினுல் கேள்விக்கும் பதிலுக்கும் உள்ள ஸ்வல்பவ்யத்யாஸம் ஸஹிக்கத்தக்கதுதான்.* 19

---

1 பகவத்கீதை 10-8,

பா] எனக்குச் சரீரங்களாக இருக்கிற எல்லாப்ராணிகளுடையவும் ஹ்ருதயத்தில் நான் ஆத்மாவாக இருக்கிறேன். ஆத்மாவாவது, சரீரத்திற்கு எல்லாவிதத்தாலும் ஆதாரமாகவும், நியமிக்கிறவனாகவும் ஸேஷியாகவும் இருப்பவன் அப்படியே '* ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச । † ஈஸ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஸேऽர்ஜுந திஷ்டதி । ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா ॥' என்று மேலே சொல்லப்போகிறார். ஸ்ருதியிலும் ‡ 'எவன் எல்

தா] 1'விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிஞ்ச' என்று கேழ்க்கப்பட்ட இரண்டு அர்த்தங்களையும் விஸ்தாரமாக நிருபிப்பதற்காக அதற்கு ஸமாதானமாகிய இரண்டர்த்தங்களும் 'அஹமாத்மா' என்கிற ஸ்லோகத்தினால சுருக்கிச சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால சொல்லுகிறார்—'அதில்' என்றாரம்பித்து. இத்தால் முன்பு சொல்லப்பட்டதும் இனிச சொல்லப்போகிறதுமாகிய ஒன்று சேர்த்துச் சொல்லி யிருக்குமிடங்களில் ஆங்காங்கு ஸம்பவிக்கிறதற்குத் தக்கபடி இரண்டுவித காரணங்கள் சொல்லப்பட்டதாகிறது. 'ஆத்மாவாக இருக்கிறேன்' என்றது தாதபர்யத்தி லேற்பட்ட அர்த்தத்தைக் காட்டியிருக்கிறது. 'ஆத்மா' என்னும் பதம் அனேக அர்த்தங்களைச் சொல்லுகிறதாக யிருந்தபோதிலும் சரீரத்தை உடையவனாக இருக்கும் ஆத்மாவைப்பற்றிச் சொல்லுகிறதாகவே அதிக பரஸித்தி இருக்கிறபடியினால் அத்துடன் சேர்ந்ததாகிய சரீரத்தை வேண்டுகிறது, ஆகையினால் ஒரே பதத்தின் நடுவிலிருநதபோதிலும், 'பூத' என்னும் பதம் புத்தியினாலே பிரித்து இங்கே சேர்த்துக்கொள்ளத்தக்கது, என்கிற அபிப்ராயத்தினால் 'எல்ப்ராணிகளுக்கும்' என்று சொல்லப்பட்டது ஜீவாத்மாக்களுக்குசசரீரங்களாக இருக்கிற எல்லா 'பராணிகளையும் ஜீவாத்மாவையும் குறித்து ஆத்மாவாக இருக்கை பகவானுக்கு எபபடிப் பொருநதும் ? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக ஆத்மாவின் லக்ஷணத்தைக் காட்டுகிறார்—'ஆத்மாவாவது' என்றாரம்பித்து. மூன்றும் சேர்ந்து ஒரே லக்ஷணம் என்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்லும் பக்ஷத்தில் ஸ்ருதிவாக்யம் முதலியவைகளை அனுஸரித்து உத்பத்திககுககாரணமாகயிருக்கை முதலிய மூன்றும் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் என்று சொல்லுகிற பக்ஷத்திலேபோல ஸநதேஹத்தை மாத்திரம் விலக்குகிறபடியினாலே மூன்றுக்கும் ப்ரயோஜனம் உண்டென்று நினைக்க

* பகவத்கீதை 15-15. † பகவத்கீதை 18-61. ‡ ப்ருஹதாரண்யகம் 5-7-15.

லா ப்ராணிகளிடத்திலும் இருந்துகொண்டு எல்லா ப்ராணிகளுக்கும் உள்ளே இருக்கிறானோ. எவனை எல்லா ப்ராணிகளும் அறியவில்லையோ, எவனுக்கு எல்லாப்ராணிகளும் சரீரமோ, எவன் எல்லாப்ராணிகளையும் உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறானோ, இவன் அழிவில்லாதவனும் உனக்கு அந்தர்யாமியுமான ஆத்மா' என்றும் † எவன் ஆத்மாவினிடத்தில்

*வேண்டியது. மற்றவர்கள் மூன்றும் தனித்தனியே மூனறுலக்ஷணங்கள் என்று சொல்லுகிறார்கள். அந்தப் பக்ஷத்தில் லக்ஷணத்தைப் பிரித்துச்சொல்லிக்கொள்ளவேண்டியது. 1:யஸ்யசேதநஸ்யயத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்தே நியந்தும் தாரயிதும் ச ஶக்யம்' என்றிவை முதலான சரீரத்தின் லக்ஷணத்தைச்சொல்லுகிற வாக்யமும் இங்கே நினைக்கத்தக்கது. சரீரத்துக்குச்சொல்லி இருக்கிற மற்றலக்ஷணங்கள் ஆங்காங்கு விஸ்தாரமாக நிராகரிக்கப்பட்டன. ஜ்ஞானத்தை உடைய வஸ்துவுக்கு விட்டுப்பிரியாத விஶேஷணமாகிய வஸ்து சரீரம், என்று பாஷ்யத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டதாகிய நம்முடைய நிஷ்கர்ஷம் இவ்விடத்தில் 'ஸர்வபூத' என்னும் பதத்தினால் சரீரங்கள் மாத்திரம் சொல்லப்படுகின்றன, என்னும்ஸந்தேஹத்தை நீக்குவதற்காகவும், ஆஶய என்னும் பதம் ஹ்ருதயத்தைச்சொல்லுகிறது, என்பதை ப்ரகாசப்படுத்துவதற்காகவும், ஆதாரமாக இருக்கை நியந்தாவாக இருக்கை ஆத்மாவுக்கு லக்ஷணம் என்பது ஸித்திப்பதற்காகவும், சொல்லுகிறார்.— 'அப்படியே' என்றாரம்பித்து. 'ஸர்வஸ்ய சாஹம்' என்கிற ஶ்லோகத்திற்குப்பிறகு 2 'த்வாவிமௌ புருஷௌ' என்றாரம்பித்து 2'க்ஷர: ஸர்வாணி பூதாநி' என்று சொல்லியிருக்கிறபடியினால் 'ஸர்வபூத' என்னும் பதம் எப்படி அசேதனத்தோடு சேர்ந்த ஜீவனைச்சொல்லுகிறது, என்று நிஶ்சயிக்கப்படுகிறதோ, அப்படியே இவ்விடத்திலும். அப்படியே அந்த ஸந்தர்ப்பத்திலே தானே 'உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:' என்றாரம்பித்து, 3 'யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர:' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் 'பிபர்த்தி ஈஶ்வர:' என்னும் இரண்டு பதங்களாலும் ஆதாரமாக இருக்கையும் நியந்தாவாக இருக்கையும் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டன. 'ஈஶ்வர:' என்னும் பதத்தின் ரூடிசக்தியினால் எஜமானாக இருக்கையும் ஏற்பட்டது, பாம்புகளை நியமிக்கிற கருடன் முதலியவைகளிடத்தில் பாம்புக்கு ஈச்வரன் என்னும் பதம் ப்ரயோகிக்கப்படுகிற*

† சதபத ப்ராம்ஹணம 14-5-30.
1 வேதார்த்த ஸங்க்ரஹம் 2 பகவத்கீதை 15-16.
3 பகவத்கீதை 15-17. 4 பகவத்கீதை 71-2.

இருந்துகொண்டு ஆத்மாவுக்குள்ளே இருக்கிறானோ, எவனை ஆத்மா அறியவில்லையோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ. எவன் ஆத்மாவை உளளே இருந்துகொண்டு நியமிக்கிறானோ, அவன் அழிவில்லாதவனும் உனக்கு அந்தர்யாமியுமான ஆத்மா' என்றும் அர்த்தமுள்ள வாக்யத்திலும் சொல்லப்படுகிறது. இப்படி எல்லாப்ராணிகளுக்கும் ஆத்மாவாக இருக்கிற நான் அவைகளின் உத்பத்திக்கும் ஸ்த்திதிக்கும் ப்ரளயத்திற்கும் காரணம் என்று அர்த்தம். 20

பா-அ] இப்படி அந்தந்தப்பதங்களோடு சேர்த்துச் சொல்லுவதற்குக்காரணமாகிய பகவான் தனக்கு விபூதிகளாகிய எல்லாவஸ்துக்களிலும் ஆத்மாவாக இருக்கிறான் என்பதை நிரூபித்து, விபூதி விசேஷங்களை பகவானைச் சொல்லும் பதங்களோடு சேர்த்துச் சொல்லுகிறார்—பகவான் ஆத்

---

*தில்லையல்லவா. 'ஸர்வஸ்ய;' என்னும் பதமும் 'அஹம்' என்னும் பதமும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்பது இங்கே இரண்டு ஸ்லோகங்களையு மெடுத்ததினால் காட்டபபட்டது. இநத ஸ்லோகத்திலிருக்கும் 'ஸர்வபூதாசய' என்னும் பதம ஜீவாத்மாக்களைசசொல்லுகிறது, 'யஸ்ய ஆத்மா சரீரம்' என்று சொல்லியிருக்கிறபடியினால். 'ஆசய' என்பதினால் நியந்தாவாக இருக்கை முதலியது ஏற்பட்டது. ஹ்ருதயத்தில் இருக்கிறான் என்று சொல்லியிருக்கிறபடியினால் '[1]மயி ஸர்வமிதம் ப்ரோதம்' என்றிவைமுதலிய இடங்களில சொல்லப்பட்ட ஆதாரமாக இருக்கையும் காட்டப்பட்டது. இப்படி சேதனமும் அசேதனமுமாகிய எல்லா வஸ்துக்களையும் சரீரமாக உடையவன் என்பதை 'ஸர்வபூதாசய' என்னும் பதத்துடனேயே சொல்லுகிற ஸ்ருதி வாக்யத்தைக் காட்டுகிறார்—'எவன் எல்லா ப்ராணிகளிடத்திலும்' என்றாரம்பித்து. ஜீவாத்மாவையும் அவனுக்கு சரீரம் என்று விவரிக்கிறவாக்யத்தை எடுக்கிறார்—'எவன் ஆத்மாவினிடத்தில்' என்றாரம்பித்து. ஆத்மாவாக இருபபது, உபாதான காரணமாக இருப்பதற்கும் நிமித்தகாரணமாக இருப்பதற்கும் உபயோகமானது ஆகையினால் முன்பாதியுடன் சேர்த்து மேல்பாதிக்கு வ்யாக்யானம் செய்கிறார்—'இப்படி' என்றாரம்பித்து. 'இப்படி...ஆத்மாவாகஇருக்கிறநான்' என்பதனால் மாறுதல்கள் ஒன்றுமிலலாத தானே உபாதான காரணம் என்பதை ஸ்தாபித்திருககிறது. இடத்தினாலாவது, காலத்தினாலாவது ஆதி நடுவு கடைசி என்பது மாத்திரம் உசிதமலல ஆகையினால் அவைகளால் உபசாரமாகச் சொல்லப்பட் அர்த்தத்தைச சொல்லுகிறார்— 'அவைகளின் உத்பத்திக்கும்' என்றாரம்பித்து.* 20

---

1 பகவத்கீதை 10-8

மாவாக இருக்கும்போழுது எல்லாப் பதங்களும் அந்தப் பகவானிடத்தி லேயே முடிவு பெறுகின்றன, எபபடி தேவன் மனுஷ்யன் பக்ஷீமரம் என்றிவை முதலிய பதங்கள் சரீரங்களைச் சொல்லிக்கொண்டு அததின் ஆத்மாவினிடத்தில் முடிவை அடைகின்றனவோ, அப்படியே. பகவான் அநதந்த வஸ்துக்களுக்கு ஆத்மாவாக இருப்பதே அந்தந்தப் பதங்களோடு சேர்த்துச் சொல்லுவதற்குக் காரணம் என்று விபூதியை முடிக்கு மிடத்தி லும் † 'ந ததஸ்தி விநா யத்ஸ்யாத் மயா பூதம் சராசரம்' என்று மேலே சொல்லப்போகிறார், எல்லா வஸ்துக்களும் தானில்லாமல் இருப்பதில்லை என்று சொல்லுகிறபடியினால். விட்டுப் பிரியாமையும் நியமிக்கப்படுவதா யிருக்கிறபடினால், என்று ‡ 'மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே' என்று ஆரம்பத்தி லேயே சொல்லப்பட்டது:—

ஆதித்யாநாமஹம் விஷ்ணுர்ஜ்யோதிஷாம் ரவிரம்ஶுமாந் |
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் ஶஶீ ||   21

ப - ரை| ஆதித்யாநாம் - பன்னிரண்டு ஸூர்யர்களுக்குள் உயர்ந்தவனாகிய, விஷ்ணு: - விஷ்ணு என்னும் ஸூர்யன், அஹம் - நான், ஜ்யோதிஷாம் - ப்ரகாஶமுள்ள வஸ்துக்களுக்குள், அம்ஶுமாந் - அதிக ப்ரகாஶ முள்ள, ரவி: - ஸூர்யன் (நான்), மருதாம் - நாற்பத்தோன்பது வாயுக்களுக்குள், மரீசி: - மரீசீ என்னும் வாயுவாக, அஸ்மி - ஆகிறேன், நக்ஷத்ராணாம் - அஶ்வினீ முதலிய நக்ஷத்திரங்களுக்கு (பர்த்தாவாகிய), ஶஶீ - சந்திரன், அஹம் - நான்.   21

பா] பன்னிரண்டென்று கணக்கிடப்பட்ட ஸூர்யர்களுக்குள் பன்னிரண்டாவதாகவும் சிறந்தவனாகவும் இருககிற விஷ்ணுவென்றுபேருடைய

தா] 'ஆதித்யாநாமஹம்விஷ்ணு:' என்றாரம்பித்து, 1'யச்சாபி ஸர்வபூதாநாம் பீஜம் ததஹமர்ஜுந' என்கிறவரையிலும் சேர்த்துச் சொல்லி யிருக்கிற ஸந்தர்ப்பத்திற்கு 2 'அஹமாத்மா' என்கிற கீழ் ஶ்லோகத் துடன் சேர்த்து அவதாரிகை சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம் பித்து. இத்தால் 'அஹமாத்மா' என்றிவை முதலிய எல்லாம் நான்கு விபூதிகள் என்னும் மற்ற மதங்கள் நிராகரிக்கப்பட்டன. 'விபூதி விஶேஷங்களை' என்பதற்கு 3 'ப்ராதாந்யத:' என்றல்லவோ ஆரம் பிக்கப்பட்டது. என்று தாத்பர்யம். சரீரத்தைச்சொல்லுகிற சரீரம் என்பது முதலிய பதங்கள் ஆத்மாவினிடத்தில் முடிவு பெறுவதில்லை

† பகவத்கீதை10-39. ‡ பகவத்கீதை10–8.

1 பகவத்கீதை 10-39. 2 பகவத்கீதை 10-20. 3 பகவத்கீதை-10-19.

ஸூர்யன் எவனோ,அவன் நான். லோகத்தில் ப்ரகாஶத்தை உண்டாக்கு கிற வஸ்துக்களுக்குள் அதிக ப்ரகாஶமுடைய ஸூர்யர்களுடைய கூட்

---

அதைப்போலவே இவ்விடத்திலும் லக்ஷணை ஒப்புக்கொள்ளுவதே நயா யத்தை அனுஸரித்தது சக்திகல்பிப்பது அப்படியல்ல, லாகவம் இருக் கிறபடியினாலும்; என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்-- 'பகவான்'' என்றாரம்பித்து. விட்டுப்பிரியாத விஶேஷணங்களைச்சொல் லுகிறபதங்கள் அந்தந்த விஶேஷணங்களின் வழியாய் அவைகளை உடைய வஸ்துக்களையும் முகயமான சக்தியினாலேயே சொல்லுகின் றன, என்கிற பொதுவான ஸ்வபாவத்தினாலேயே குணம் முதலியவை களிலும் இது ஏற்பட்டிருக்கிறபடியினால புதிதாய் சக்தி கல்பிப்பதினா லுண்டாகும் கௌரவமுமில்லை, என்று தாத்பர்யம். இது தான் 'முடி வுபெறுகின்றன' என்று சொல்லப்பட்டது. விட்டுப்பிரியாத விஶேஷண மாக இருக்கையைக்காரணமாக உடையதாகிய, சரீரத்தைச்சொல்லும் பதங்கள் அதநின் ஆத்மாவைச்சொல்லுகின்றன, என்பதைக்காட்டுகி றார்—'தேவன் மனுஷ்யன்' என்றாரம்பித்து. பகவானோடு மற்ற வஸ் துக்களைச்சேர்த்துச்சொல்லியிருப்பது பகவானையே அந்தந்த வஸ்துக் களாக ப்ரமிக்கிறபடியினால், என்கிற ஸந்தேஹத்தை விலக்குகிறார்.— 'பகவான் அந்தந்த வஸ்துக்களுக்கு ஆத்மாவாக இருப்பதே' என்று. ஆரம்பம் முடிவு இவைகளுக்கு விரோதமான அர்த்தம் நடுவில் ஒப்புக் கொள்ளத்தக்கதல்ல அல்லவா, ப்ரமமாகிற காரணத்தினாலாவது உண் மையாகவாவது ப்ரஹ்மத்திற்கே எல்லாக்கெட்டஸ்வபாவங்களும்நிறை ந்தவனாகஇருக்கையைஒப்புக்கொள்ளுவதுயுக்தமுமல்ல,என்று தாத்பர் யம். 'தானில்லாமல் இருப்பதில்லை என்று சொல்லி இருக்கிறபடியினால்: என்பதற்கு ஆத்மாவில்லாமல் சரீரம் இருக்காதல்லவா என்று தாத்பர் யம். நெருப்பில்லாமல் புகை முதலிய தில்லை, என்று சொல்லில் புகைமுதலியது பொய் என்றாவது, நெருப்பு முதலியவைகளே தான் புகைமுதலியது என்றாவது அர்த்தம தோன்றுகிறதில்லை யல்லவா அதைப்போலவே இவ்விடத்திலும். யஜ்ஞதத்தனல்லாமல வீட்டில் ஒருவருமில்லை, கயிறு அல்லாமல் பாம்பு இல்லை, என்று சொல்லில் ஒன்றே உண்மையானது மற்றது பொய்,என்று எப்படி அர்த் தமாகிறதோ,அப்படியே இவ்விடத்திலும் ஏனிருக்கக்கூடாது என்கிற ஆக்ஷேபத்திற்குஸமாதானம் சொல்லுகிறார்—''விட்டுப் பிரியாமையும்'' என்று.விரோதிகள்ஒன்று மில்லாத ஸமயத்தில் உண்டானஆரம்பத்தில் ஏற்பட்டஅர்த்தத்திற்குவிரோதமாகமுடிவில் அர்த்தம்சொல்லக்கூடாது என்பது1உபக்கிரமாதி காரணத்தில் ஏற்பட்டதென்றுதாத்பர்யம். 'நிய மிக்கப் படுவேதாயிருக்கிற படியினால்' என்பதினால் புகை நெருப்புமுதலிய

---

1 பூர்வமீமாஸா ஸூத்ரம் 3-3-1.

டம் எதுவோ, அது நான்; வாயுக்களுக்குள் சிறந்தவனாகிய மரீசி எவனோ, அவன் நான் 'நக்ஷத்ராணாமஹம் ஶஶீ' என்கிற இடத்தில் இருக்கும் ஆறும் வேற்றுமை அவைகளுக்குள் சிறந்தவனாகிய என்னும் அர்த்தத்

வைகளின் விட்டுப்பிரியாமையை விடவ்யத்யாஸம் காட்டப்பட்டது. இப்படி இவ்வளவுக் ரந்தத்தினால அஹமாத்மா குடாகேஶ ஸர்வபூதாஶயஸ்திதஃ என்பதினால் எல்லாச்சரீரங்களிலுமிருக்கும் ஜீவர்களும் ப்ரஹ்மத்துடன் ஒன்று என்பது சொல்லப்படுகிறது. என்கிறமதம் நிராகரிக்கப்பட்டது. ஆதித்யாநாம் என்பதற்கு அதிதியின் பிள்ளையாகிய ஸூர்யர்களுக்குள் என்றர்த்தம். 'ஜகன்யஜாதவரஜஃ' என்றிவை முதலிய வசனங்களை அனுஸரித்து 'பன்னிரண்டாவதாகவும் சிறந்தவனாகவும்' என்று சொல்லப் பட்டது. இவ்விடத்திலும்மேலும் அவர்களுக்குள் என்று தனித்துச் சொல்லு வதற்குக் காரணமாகிய விசேஷத்தைக் காட்டுவதற்காக 'சிறந்தவனாகவும்' என்னும் பதம், அதுவும் 'ஸர்வேஷாம் ஸ்வஶ்ரேஷ்ட்யம்' என்று மேலேசொல்லப்போகிற ஶ்ரேஷ்ட்யம் என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிற தாகையினால் வேண்டின இடங்களி லெல்லாம சேர்த்துக் கொள்ள பட்டது இவ்விடத்தில் தனித்துச் சொல்லப்படுகிற வஸ்துக்களுக்குள் சிலவஸ்துக்கள் ப்ரதானங்கள் என்பது ப்ரத்யக்ஷத்தினாலேற்பட்டது, சில வஸ்துக்கள் ப்ரதானங்கள் என்பதுஶாஸ்த்ரத்தினாலேற்பட்டது.சிலஇடங்களில் நேராகவும், சிலவிடங்களில ஜீவாத்மா மூலமாகவும் அந்தர்யாமியாகச்சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஜ்யோதிஷாம் என்கிற பதத்தினால் நக்ஷத்திரங்களைமாத்திரம் சொலலில் அதற்குள் சேராதவனாகவும் அவைகளின் ஸம்பந்தமுமில்லாத அம்ஶுமான் என்பவனை அவைகளுக்குள் என்றுதனித் தெடுத்திருப்பது பொருந்தா தாகையினால் 'ப்ரகாசத்தை உண்டாக்குகிற வஸ்துகளுக்குள்' என்று பொதுவாகச் சொலலப்பட்டது. லோகங்களுக்குக் காரணமான மேலான ஜ்யோதிஸ்ஸை உத்தேசித்து ஸூர்யன் மினுமினும் பூச்சிக்கு ஸமானமாகை யினால் அதை விலக்குவதற்காக 'லோகத்தில்' என்று விஶேஷித்துச் சொல்லப்பட்டது. அம்ஶுமான் என்கிற இடத்தில் மதுப்ப்ரத்யத்தினால் தனித்தெடுத்ததற்குக் காரணமாகிய மிகுந்தப் ப்ரகாசத்தின் ஸம்பந்தம் சொல்லப்படுகிறது, அப்படியில்லாவிடில் புனருக்திஎன்னும் தோஷம் வருகிறபடியினால். 'ரவிஃ' என்னும் பதம் பன்னிரண்டு ஸூர்யர்களுக்கும் பொதுவாகையினால் அதிலிருக்கும் ஒருமை

2 பகவத்கீதை 10 - 19. 3 ஜகன்யஜ: கடைசியிலுண்டானவர் அஜகன்ய: உயர்ந்தவர். 4 பகவத்கீதை 10-24.

தைச் சொல்லுகிறதல்ல, 'ஸேநாநீநாமஹம் ஸ்கந்த:' என்பதைப்போல.

---

கும்பலைக் குறிக்கிறது, என்று காட்டுவதற்காக 'ஸூர்யர்களின் கூட்டம்' என்று சொல்லப்பட்டது. 'மருத:' என்பதற்கு திதியின் பிள்ளைகளாகிய நாற்பத்தொன்பது வாயுக்கள் என்றர்த்தம், எவர் ஏழேழுபேர்கள் ஒவ்வொரு கணமாகவும் இப்படி ஏழுகணங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறார்களோ. சந்திரனும நக்ஷத்திரமாக இருந்தால் அப்போது நக்ஷத்திரங்களுக்குள் சந்திரன் என்று தனித்தெடுத்துச்சொல்லலாம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்கிற இடத்திலிருக்கும் என்றாரம்பித்து. பின்னை அர்த்த மென்னவெனில் சொல்லுகிறார்—'நக்ஷத்திரங்களுக்கு நாயகனாகிய' என்று 1 'வ்யாப்ய ந:' என்றல்லவோ ஆரம்பத்திலேயே சொல்லப்பட்டது, என்று தாத்பர்யம். முன்பின் எல்லா இடங்களிலிருக்கும் ஆறாம் வேற்றுமைகள் அவைகளுக்குள் என்னு மர்த்தத்தைச் சொல்லுவதாக இருக்கும்பொழுது, நடுவில் ஒன்றுக்கு மாத்திரம் பொதுவாக ஸம்பந்தம் அர்த்தம் என்பது யுக்தமல்ல 'நக்ஷத்ர' என்னும் பதத்தினால் ராத்திரியில் பாகாசிக்கிற வஸ்துக்களெல்லாம் 'ஸத்ரிண:' (குடைபிடித்தவர்கள்) என்கிற இடத்தில சொல்லியிருக்கிற ந்யாயத்தை அனுஸரிததுச்சொல்லத்தக்கவைகள், 2 எவைகள் நக்ஷத்திரங்களோ இவைகள் புண்யம் செய்தவர்களுடைய பாகாசங்கள்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்ய மிருக்கிறபடியினால். மேலும் சந்திரமண்டலமும் ஸ்வர்கத்தை அடைந்தவர்களுக்கு ஸுகத்தை அனுபவிக்கக்கூடிய இடமாகையினால் நக்ஷத்திர மென்னப்படுகிறது. 3 'எவன் இந்த லோகத்தில் யாகம் செய்கிறானோ அவன் அந்த லோகத்தை விடுகிறதே இல்லை. ஆகையினால் நக்ஷத்திரங்கள என்னப்படுகின்றன, தேவதைகளின் வீடுகளே நக்ஷத்திரங்கள்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்ய மிருக்கிறபடியினால், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொலலுகிறார்— 'ஸேநாநீநாமஹம் ஸ்கந்த:' என்பதைப் போல' என்று. முக்யமான அர்த்தம் ஸம்பவிக்கும்பொழுது லக்ஷணை சொல்லுவது ந்யாயத்தை அனுஸரித்ததல்ல. இவ்விடத்தில் எல்லா இடங்களிலும் ஆறாம் வேற்றுமை அவைகளுக்குள் என்னு மர்த்தத்தைச் சொல்லுகிற தென்பதும் பொருந்தாது. 4 'ஸேநாநீநாமஹம் ஸ்கந்த:' 5 ஸர்காணாமாதிரந்தஶ்ச மத்யம் சைவாஹமர்ஜுந' 'வாத:

---

1 பகவதகீதை 10-19. 2 யஜுர்வேதம் 5 காண்டம் 4-1-3. 3 யஜுர்வேதம் 1-அஷ்டகம் 5-2-10 4 பகவத்கீதை 10-22. 5 பகவத்கீதை 10-32.

நக்ஷத்திரங்களுக்கு நாயகனாகிய சந்திரன் எவனோ, அவன் நான். 21

வேதாநாம் ஸாமவேதோ(அ)ஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ: |
இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா || 22

ப - ரை] வேதாநாம் - வேதங்களுக்குள், ஸாமவேத: - ஸாமவேதமாக, அஸ்மி - ஆகிறேன், தேவாநாம் - தேவதைகளுக்குள், வாஸவ: - இந்திரனாக, அஸ்மி - ஆகிறேன், இந்த்ரியாணாம் - இந்திரியங்களுக்குள், மந: - மனஸ்ஸாகவும், அஸ்மி - ஆகிறேன், பூதாநாம் - ப்ராணிகளுடைய சேதநா - ஜ்ஞானமாக அஸ்மி - ஆகிறேன். 22

பா] ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வணவேதம் இவைக

---

தா] 'வேதாநாம்' 6 'த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச' 7 'உத்பவஶ்ச பவிஷ்யதாம்' 8 'த்யூதம் ச்சலயதாமஸ்மி' 8 'தேஜஸ்தேஜஸ்விநாமஹம்' 8 'ஜயோ(அ)ஸ்மி வ்யவஸாயோ(அ)ஸ்மி' என்றிவை முதலிய இடங்களில் அவைகளுக்குள் என்னும் அர்த்தமில்லாமையினால், ஆகையினால் இவ்விடத்தில் சந்திரன் நக்ஷத்திரங்களின் ஜாதியில் சேர்ந்தவனல்லாமையினால் அவ்விடத்திலிருக்கும் ஆறும் வேற்றுமையினால் சொல்லப்பட்ட பொதுவான ஸம்பந்தம் ப்ரமாணங்களில் ஏற்பட்ட விசேஷமான ஸம்பந்தத்தில் முடிவை அடைகிறது என்று தாத்பர்யம். 21

கானமல்லவோ ஸாம என்னும் பதத்திற்கு அர்த்தம், அதை வேதங்களுக்குள் தனித்தெடுத்தது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்தைத்தடுப்பதற்காக 'ஸாமவேதோ(அ)ஸ்மி' என்று சொல்லியிருக்கிறது என்றுகாட்டுகிறார்.—'ருக்வேதம்' என்றாரம்பித்து. கானத்தை ப்ரதானமாக உடையதாக இருக்கையினாலும் ஆயிரம் சாகைகளை உடையதாக இருக்கையினாலும் ஸாமவேதத்திற்கு மேன்மையும் மற்ற வேதங்களுக்கு இவையில்லாமையினால் தாழ்வும் உண்டு ப்ரமாணமாகவிருக்கையில் தாரதம்யத்தினாலல்ல. 'முதலில் ருக்கும் ஸாமமு மிருந்தன ஸா என்றுபேருடையருக்கு இருந்தது அம என்று பேருடைய ஸாமமும் இருந்தது இவை இரண்டும் ப்ரஜைகளை உண்டாக்குவதற்காக ஒன்று சேர்ந்

---

6 பகவத்கீதை 10-33. 7 பகவத்கீதை 10-34. 8 பகவத்கீதை 10-36.

ளுக்குள் சிறந்ததாகிய ஸாமவேதம் எதுவோ, அது நான். தேவதைகளுக்குள் இந்திரன் ஆகிறேன் நான். பதினொரு இந்திரியங்களுக்குள் சிறந்ததாகிய மனஸ்ஸு என்கிற இந்திரியம் எதுவோ, அது நான் ஆகிறேன். இது

---

தது என்று சொல்லுகிறார்கள் அதில்லை என்று சொல்லிற்று ஸாமமே சிறந்தது ஆகையினால் என்னுடைய மஹிமை' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினால் கானமாகிய ஸாமம் ப்ரதானமாகையினால் கான ரூபமாகிய ஸாமவேதம் ப்ரதானம என்பது சொல்லப்பட்டது. 1 'ருக் வேதத்திலிருந்து வைஶ்ய ஜாதி உண்டானதாகச் சொன்னார்கள் யஜுஸ் வேதத்தை க்ஷத்திரிய ஜாதிக்குக்காரணமாகச் சொன்னார்கள் ஸாம வேதம் ப்ராஹ்மணர்களுக்கு உத்பத்தி ஸ்த்தானம் என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமுமிருக்கிறது ' 'தேவாநாம்' (தேவதைகளுக்குள்) என்பதினால் ஸ்வர்கத்தில்வஸிப்பவர்கள் சொல்லப்படுகிறார்கள், ப்ராஹ்மா முதலியவர்களைச்சேர்த்துச் சொல்லுவது யுக்தமல்ல ஆகையினால. 'வாஸவ:' என்னும் பதத்திற்கு இந்திரன் என்கிற பதத்தினால் வ்யாக்யானம் செய்தது மேன்மையை ப்ரகாசப்படுத்துவதற்காக, இதி என்னும் தாது மிகுந்த ஐஶ்வர்யத்தைச்சொல்லுகிறதாகையினால். 2 'இந்திரியங்களைவிட விஷயங்கள்மேலானவைகள் விஷயங்களைவிட மனஸ்ஸு மேலானது' என்றும் 3 'இவனிடத்திலிருந்து ப்ராணவாயுவும்மனஸ்ஸும்எல்லா இந்திரியங்களு முண்டாகின்றன' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம்முதலிய இடங்களில் மனஸ்ஸைத்தனியாகச சொல்லியிருக்கிறபடியினால் 'இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி' என்று இந்திரியங்களுக்குள் என்றுசொல்லியிருப்பது எப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்குஸமாதானம சொல்லுகிறார்—'பதினொரு இந்திரியங்களுக்குள்' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது 4 'இந்த்ரியாணி தசைகம் ச' 5 ஏகாதசம் மநஶ்சாத்ர' என்றிவை முதலிய இடங்களில மனஸ்ஸும் இந்திரியம எனறு சொல்லியிருக்கிறபடியினால். சில இடங்களில் தனியாகச்சொல்லியிருப்பதும கோபலீவர்தந்யாயத்தினால என்று. பஞ்சபூதங்களுக்குள சேதனை என்று பேருடைய பூதம் ஒன்றுமில்லை, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதுவும்' எனறாரம்பித்து. இந்த

---

1 யஜுர்வேதம் காடகம் 3-9-50 2 கடவ்லீ 1-3-10.

3 முண்டகோபநிஷத் 2-1-3. 4 பகவத்கீதை 13-5.

5 விஷ்ணுபுராணம் 1-2-47 அத்ர இவைகளுக்குள் ஏகாதசம் பதினொராவது மனஶ்சமனது.

வும் அவைகளுக்குள் என்னு மர்த்தத்தைச் சொல்லுகிறதல்ல,அறிவுள்ள வஸ்துக்களுடைய ஜ்ஞானம் எதுவோ,அதுவும் நான் ஆகிறேன். 22

---

*ஆரும் வேற்றுமையும் என்று அர்த்தம். 1 'தேஜஸ்தேஜஸ்விநாம்', 'ஸத்வம் ஸத்வவதாம்' என்றிவைமுதலிய இடங்களிலேபோல விசேஷணம் விசேஷ்யம் சேர்ந்தவஸ்துவில் ஸாரமாகிய விசேஷணமாகச் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'அறிவுள்ளவஸ்துக்களுடைய' என்று சொல்லப்பட்டது. பூதங்களில் ஆறுவது பூதமாகச்சேதனை என்று பேருடைய ஒரு வஸ்து வேறு இடங்களில் சொல்லப்படுகிறது, எப்படி யென்னில் 2 'கம் வாயுரக்நிஸ்ததா ஹ்யாபஸ்ஸஹீ। ஷஷ்டம் சேதநாதாதுராத்மா ஸப்தமஉச்யதே ॥ மநோ'ஷ்டமம் ஜ்ஞேயம்' என்றும்,அப்படியே 3'ஷஷ்டம் சேதநாதாதுர்மநஇதி ஸ்ம்ருதம்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் சேதனைக்கு மனஸ்ஸு ஆதாரமாகையினால் சேதனையை மனதென்று சொல்லியிருக்கிறது,ஆகையினால் விரோதமில்லை. ஆகையினால் 'பூதாநாமஸ்மி சேதநா' என்கிற ஆரும் வேற்றுமை அவைகளுக்குள் என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிறதென்பது உசிதம் தான், என்னில்? உசிதமல்ல, ஏனெனில் பஞ்சபூதங்களில் ஆறுவது என்று சொல்லியிருக்கிற மாத்திரத்தினால் அது பூதம் தான் என்பது யுக்தமல்ல, வேறாக இருந்தாலும் கணக்கிட்டுச் சொல்லக்கூடு மாகையினால். இவ்விடத்தில் ஏழாவதாகச் சொல்லப்பட்டிருக்கும் ஆத்மாவும்,எட்டாவதாகச் சொல்லப்பட்டிருக்கும் மனஸ்ஸும் பூதங்கள் என்று ஒப்புக்கொள்ளப்படாமையினாலும்,சேதனை என்னும் பதத்திற்கும் ப்ரஸித்தமில்லாத அர்த்தத்தைச் சொல்லவேண்டியிருப்பதினாலும், ப்ரஸித்தமான அர்த்தத்தை ஒப்புக்கொள்வதே உசிதமாகையினாலும். ஆகையினால் இவ்விடத்தில் ஆறும் வேற்றுமை ஸம்பந்தம்மாத்திரத்தைச் சொல்லுகிறதென்பதே உசிதம்.*

---

1 பகவத்கீதை 10-36.

2 கம் ஆகாயம் வாயு: காற்று அக்னி: தேஜஸ்ஸு ஆப: ஜலம்ததா அப்படியே மஹீபூமியும் ஆகிய மஹாபூதாநி பஞ்சபூதங்களும் சேதநாதாது: சேதனை என்கிற தாதுஷஷ்ட: ஆறுவதாகவும் ஆத்மா ஜீவாத்மா ஸப்தம: ஏழாவதாகவும் உச்யதே சொல்லப்படுகிறது. மன: மனது அஷ்டமம் எட்டாவதாக ஜ்ஞேயம் அறியதக்கது.

3 ஷஷ்டம்து ஆறுவதாகிய சேதனாதாது: சேதனாதாதுவானது மன:இதி மனஸ்ஸு என்று உபதிஶ்யதே சொல்லப்படுகிறது.

ருத்ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோ யக்ஷரக்ஷஸாம் |
வஸூநாம் பாவகஶ்சாஸ்மி மேரு: ஶிகரிணாமஹம் ‖ 23

ப-ரை] அஹம் - நான், ருத்ராணாம் - ருத்ரர்களுக்குள், ஶங்கரஶ் - சங்கரன் என்று பேருடைய ருத்ரனாகவும், யக்ஷரக்ஷஸாம் - யக்ஷர்ராக்ஷஸர்கள் இவர்களுக்குள், வித்தேஶ: - குபேரனாகவும், அஸ்மி - ஆகிறேன், வஸூநாம் - வஸுக்களுக்குள், பாவகஶ் - பாவகன் என்று பேருடைய வஸுவாகவும், ஶிகரிணாம் - சிகரங்களை உடைய மலைகளுக்குள், மேரு: - மேருபர்வதமாகவும், அஸ்மி - ஆகிறேன். 23

பா] பதினொரு ருத்ரர்களுக்குள் சங்கரன் நான் ஆகிறேன். யக்ஷர் ராக்ஷஸர்கள் இவர்களுக்குள் குபேரன் நான். எட்டு வஸுக்களுக்குள் பாவகன் நான். சிகரங்களினால் சோபையையுடைய மலைகளுக்குள் மேரு நான். 23

---

தா] ருத்ரர்களுக்குள் ஒருவருக்கு சங்கரர் என்கிற பெயரினாலேயே இவர் சிறந்தவர் என்பது காட்டப்பட்டது. யக்ஷர் ராக்ஷஸர் இந்த இரண்டு ஜாதியரும் அதிக வ்யத்யாஸமில்லாதவர்கள் ஆகையினால் 'யக்ஷர் ராக்ஷஸர் இவர்களுக்குள்' என்று சொல்லப்பட்டதேயல்லாமல் குபேரன் ராக்ஷஸன் என்பதில்லை; அன்றிக்கே 'நக்ஷத்ராணாமஹம் ஶஶீ' என்பதைப்போலவே இரண்டு ஜாதியாருக்கும் எஜமானன் என்பது மாத்திரம் இங்கு சொல்லப்படுகிறதாகவுமாம். 'வித்தேஶ' (பணங்களுக்கு எஜமானன்) என்கிற பெயரினாலேயே குபேரனுக்கு அஸாதாரணமான, ஐஸ்வர்யத்தினாலுண்டான மேன்மை காட்டப்படுகிறது. 1 'ஸ்தாவராணாம் ஹிமாலய:' என்று எல்லா மலைகளையும்பற்றி மேலே சொல்லப்போகிறபடியினால் 'மேரு: ஶிகரிணாம்' என்கிற இடத்திலிருக்கும் 'ஶிகரி' என்னும் பதத்தினால் விசேஷமான மலைகள் சொல்லப்படுகின்றன. இந்தப் பதமும் அப்படிப்பட்ட விசேஷத்தைக் காட்டக்கூடியதுதான், என்கிற அபிப்ராயத்தினால் 'சிகரங்களினாலே சோபையையுடைய' என்று சொல்லப்பட்டது. இந்த விகுதி சிறந்தது என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்று தாத்பர்யம். மிகவும் ரத்தினங்கள் தங்கம் இவைகள் நிறைந்த சிகரங்களை உடையதாகையினால மேருபர்வதம் சிறந்தது. 23

---

1 பகவத்கீதை 10-25.

புரோதஸாஞ்ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் |
ஸேநாநீநாமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர: || 24

ப - ரை] பார்த்த அர்ஜுன, மாம் என்னை, புரோதஸாம் புரோஹிதர்களுக்குள், முக்யம் ப்ரதானராகிய, ப்ருஹஸ்பதிம் ப்ருஹஸ்பதியாக, வித்தி அறி, அஹம் நான், ஸேநாநீநாம் ஸேனாபதிகளுக்குள், ஸ்கந்த: ஸுப்ரம்மண்யனாக, அஸ்மி ஆகிறேன், ஸரஸாம் தேங்குகிற ஜலமுள்ள வஸ்துக்களுக்குள், ஸாகர: ஸமுத்திரமாக, அஸ்மி ஆகிறேன். 24

பா] புரோஹிதர்களுக்குள் சிறந்தவராகிய ப்ருஹஸ்பதி எவரோ, அவர் நானாகிறேன். சேனைத்தலைவர்களுக்குள் ஸுப்ரஹ்மண்யன் நானாகிறேன் ஜலம் தேங்குமிடங்களுக்குள் ஸமுத்திரமாகிறேன். 24

மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம் |
யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோऽஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய: || 25

ப - ரை] அஹம் நான், மஹர்ஷீணாம் மஹருஷிகளுக்குள், ப்ருகு: ப்ருகுமஹாருஷியாகவும், கிராம் வார்த்தைகளுக்குள், ஏகம் ஒரு, அக்ஷரம் எழுத்தாகிய ப்ரணவமாகவும், அஸ்மி ஆகிறேன், யஜ்ஞாநாம் யாகங்களுக்குள், ஜபயஜ்ஞ: ஜபமாகிறயாகமாகவும், ஸ்தாவராணாம் மலைகளுக்குள், ஹிமாலய: இமயமலையாகவும், அஸ்மி ஆகிறேன். 25

பா] மரீசி முதலிய மஹாருஷிகளுக்குள் ப்ருகுமஹாருஷி நான். அர்த்தத்

---

தா] ப்ருஹஸ்பதி என்னும் பெயரினாலேயே ப்ருஹதாம் பதி: என்கிற வ்யுத்பத்தியினால் அவர் சிறந்தவர் என்பது ஏற்பட்டது ; வாக்குக்களுக்கு எஜமானன் அல்லவோ அவர், என்று. 'ஸேநாநீ' என்னும் பதத்தினால் கர்மங்களுக்கு வசப்பட்ட சேனைத்தலைவர்கள் சொல்லப்படுகிறார்கள். ஸுப்ரஹ்மண்யனுக்கு மேன்மையாவது தேவதைகளுடைய ஸேநாபதியாயிருக்கை. 'ஸரஸாம்' என்னும்பதத்தினால் ஓடாமல் ஜலம் தேங்குமிடமெல்லாம் சொல்லப்படுகிறபடியினால் ஸமுத்திரத்தைச் சொல்லியிருக்கிறது. ஓடுகிற ஜலங்களைப்பற்றித் தனித்துச் சொல்லப்போகிறபடியினால். 24

1 'தேவர்ஷீணாம்' என்றும் 2 'முநீநாம்' என்றும் மேலே சொல்லப்போகிறபடியினாலும், மஹா என்னும் பதத்தினால் விசேஷித்துச் சொல்லப்படுகிறபடியினாலும் 'மஹர்ஷீணாம்' என்று ருஷிகளின்

1 பகவத்கீதை 10-26. 2 பகவத்கீதை 10-37

ைதச் சோல்லுகிற பதங்கள் வார்த்தைகள், அவைகளுக்குள் ஒரு எழுத்

ஒருவிதமான கூட்டம் சொல்லபபடுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல் 'மரீசி முதலிய' என்று சொல்லப்பட்டது. 'கிரம்' என்று ஓசை மாத்திரம் சொல்லப்படவில்லை, ஸமுத்திரத்தின் ஓசை முதலியவைகளில் 'கிர:' என்னும் பதம் ப்ரயோகிக்கப்படுகிறதில்லையாதலால், ஆகையினுலேயே எழுத்துக்கள் மாத்திரமுமில்லை. 1 'அக்ஷராணாமகாரோஸ்மி' என்று மேலே சொல்லப்போகிறபடியினுலும், ஆகையினுலேயே 'ஏகமக்ஷரம்' என்பதும் அ காரத்தைப்பற்றியதுமல்ல, 2 'ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம' என்றிவை முதலிய இடங்களில் ப்ரணவத்தில் ஏக என்னும் விசேஷணத்துடன் கூடிய 'அக்ஷரம்' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'அர்த்தத்தைச் சோல்லுகிற' என்று. அர்த்தத்தைச சொல்லுகிற பதங்களுக்குள் ப்ரணவம் சிறந்தது என்பது. எல்லாவற்றையுமவிட மேலான அர்த்தத்தைச் சொல்லுதல் முதலிய காரணத்தினுலும் 'நரம்புகளினுல் இலைகள்போல், எல்லா வார்த்தைகளும் ப்ரணவத்தினுல் நிறைந்து இருக்கின்றது' என்று ஶ்ருதி சொல்லி இருப்பதினுலும். யாகங்களுக்குள் ஜபயஜ்ஞம் சிறந்தது,என்பது வேறிடங்களில், 3'விதியஜ்ஞாஜ்ஜபயஜ்ஞோ விஶிஷ்டோ தஶபிர்குணை:' என்று சொல்லி இருப்பதினுலேற்பட்டது. மேலும் 4 'குர்யாத்க்ருதபஶும் ஸங்கே குர்யாத்பிஷ்டபஶும் ததா । நத்வேவ து வ்ருதா ஹந்தும் பஶுமிச்சேத்கதாசந' என்றும் 5'பஶுயஜ்ஞை: கதம் ஹிம்ஸ்ரைர்மாத்ருஶோ யஷ்டுமர்ஹதி । ஹிம்ஸாத்மகைஸ்தஸ்ய யஜ்ஞை: கார்யம் கேஶவ: பூஜித:' ।

1 பகவத்கீதை 10-33. 2 பகவத்கீதை 8-13

3 விதியஜ்ஞாத் செய்யப்படுகிற யஜ்ஞத்தைவிட ஜபயஜ்ஞ: ஜபமாகிய யஜ்ஞம்தஶபி: குணை: பத்துமடங்கு விஶிஷ்ட: சிறந்தது.

4 ஸங்கயேயாகத்தில் க்ருதபசும் நெய்யினுல் செய்யப்பட்ட பசுவைகுர்யாத் செய்யவேண்டும் ததா அப்படியேபிஷ்டபசும் மாவினுல்செய்யப்பட்ட பசுவைகுர்யாத் செய்யவேண்டும் வருதாவீணுக பசும் பசுவை ஹந்தும் கொல்லுவதற்கு நது இச்சேத் ஆசைப்படக்கூடாது.

5 மாத்ருச: என்னைப்போன்றவன் ஹிம்ஸ்ரை' ஹிம்ஸாருபங்களாகிய பசுயஜ்ஞை: பசுவைக்கொண்டு செய்யும் யஜ்ஞங்களினுல் யஷ்டும் யாகம் செய்யகதம் எப்படி அர்ஹதி தகுந்தவனுகிருன். தஸ்ய அந்த மஹாத்மன: மஹாத்மாவுக்குஹிம்ஸாத்மகை: ஹிம்ஸாரூபங்களானயஜ்ஞை: யாகங்களினுல் கிம் என்ன கார்யம் ப்ரயோஜனம் யேநஎவனுல் ப்ரஸ்வாபேச தூக்கத்திலும் ப்ரபோதேச விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும் கேசவ: பகவான்பூஜித: பூஜைசெய்யப்பட்டாரோ.

தாகிய ப்ரணவம் நானாகிறேன். யாகங்களுக்குள் சிறந்த ஜபயஜ்ஞமாகி றேன் மலைகளுக்குள் இமயமலை நான். 25

[illegible]’ என்றுமிவை முதலிய வசனங்களினால் அஹிம்ஸாரூபமாகிய யஜ்ஞங்களைச் செய்ய யோக்யதை இல்லாதவர்களுக்குஹிம்ஸாரூபமாகிய யஜ்ஞங்களைச்செய்ய அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. அவைகளிலும் ஶாஸ்த்ர விதியினால் ப்ரவ்ருத்திக்கிறபடியினாலும், பஶுக்களுக்கு அபகாரம் செய்ய வேண்டும் என்கிற எண்ணமில்லாமையினாலும், உபகாரமுண்டாகிறது என்று ஶ்ருதியில் சொல்லி இருக்கிறபடியினாலும், தேவதைக்கு ப்ரீதியை உண்டாக்குகிறபடியினாலும், தோஷமில்லை. பலத்தை விரும்புகிறவர்களுக்கோ வெளியில் அதனின் பலம் அல்பமாகவும் அஸ்திரமாகவும் துக்கத்தோடு கலந்ததாகவு மாகிறது அஹிம்ஸா ரூபங்களான யஜ்ஞங்களோவெனில் விசேஷமான. அதிகாரிகளைப் பொறுத்தவைகள். பகவானுக்கு மிகவும் ப்ரீதியை உண்டாக்கக் கூடியவைகளாகையினால் மோக்ஷத்திற்கு நெருங்கினவைகள். ஆகையினாலல்லவோ உபரிசரர் முதலியவர்கள் பிஷ்ட பஶுக்களைக் கொண்டு யஜ்ஞம் செய்தார்கள். இப்படி மற்ற யஜ்ஞங்களில் ஹிம்ஸைக்கு ப்ரஸ்தாவமும், விசேஷமான அதிகாரிகள் முதலிய காரணத்தினால் விஷயத்தை ஏற்படுத்துவதும்முதலிய அதிகஷ்டங்களுண்டு.ஜபயஜ்ஞத்திலோவென்றால் அவைகளுக்கு ப்ரஸ்தாவமேஇல்லாமையினாலும்,சீக்கிரத்தில் அர்த்தம்தோன்றுகிறபடியினாலே ஸபீஜயோகத்தின்வழியாய் ஶீக்கிரத்தில் ஸமாதியில் மனதைச்செலுத்துவதற்குக் காரணமாகையினாலும் மற்ற யஜ்ஞங்களைவிட ஜபயஜ்ஞம் எல்லா ஆஶ்ரமத்திற்கும் பொதுவாகையினாலும் மிகவும்சிறந்தது [1]‘[illegible]’என்று விதுரன் முதலியவர்களுக்கும் ஸித்தி உண்டாவதற்குக்காரணம் என்றுசொல்லி இருக்கிறபடியினால். சில மலைகள் முன்பு சொல்லப்பட்டபடியினாலும், மரங்களைப்பற்றி மேலே சொல்லப் போகிறபடியினாலும், இவை இரண்டையும் விலக்குவதற்காகவும், இமயமலைக்குஶைலராஜன் என்கிற ப்ரஸித்தி இருப்பதை அனுஸரித்தும் மலைகளுக்குள் என்று சொல்லப்பட்டது. 25

1 மனுஸ்ம்ருதி 2-86,87 எந்த ப்ராஹ்மண: ப்ராம்மணன் ஜப்யேனைவ ஜபத்தினாலேயே ஸம்ஸித்யேத் ஸித்தியை அடையக்கடவனோ அத்ர இதில் நஸம்சய: ஸந்தேஹ மில்லையோ அந்யத்வேறொன்றைகுர்யாத் செய்தாலும் செய்யட்டும் நவாகுர்யாத் செய்யாமற் போனாலும் போகட்டும் (அவன்) மைத்ர: மைத்ரன் என்று பேருடைய ப்ராக்ஹ்மண: ப்ராம்மணனாக உச்யதே சொல்லப்படுகிறான்.

𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌦𑌃 ।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌪𑌿𑌲𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃 ॥ 26

ப - ரை] 𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 மரங்களெல்லாவற்றிலும், 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 அரசமரமும், 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 தேவ ருஷிகளுக்குள், 𑌨𑌾𑌰𑌦𑌃 நாரதமுனியும், 𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 கந்தர்வாகளுக்குள், 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌃 சித்ரரதனும், 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 சித்தர்களுக்குள், 𑌕𑌪𑌿𑌲𑌃 கபிலர் என்று பெயரை உடைய 𑌮𑍁𑌨𑌿𑌃 ருஷியும் (நான்). 26

பா] மரங்களுக்குள் பூஜிக்கத்தகுந்ததாகிய அரசமரம் நான்; தேவ ருஷிகளுக்குள் நாரதர் நான். 26

𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌮𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌐𑌰𑌾𑌵𑌤𑌂 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌮𑍍 ॥ 27

ப - ரை] 𑌮𑌾𑌂 என்னை 𑌅𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 குதிரைகளுக்குள 𑌅𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 ஜலத்தில் உண்டான 𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌂 உச்சைஶ்ரவஸ் ன்னும் குதிரையாகவும் 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 உத்தமமான யானைகளுக்குள் 𑌐𑌰𑌾𑌵𑌤𑌂 ஐராவதம் என்னும் யானையாகவும் 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 மனுஷ்யர்களுக்குள் 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌂 ராஜாவாகவும் 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 அறி. 27

---

தா] 𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 (எல்லா மரங்களுக்குள்) என்றது உசிதமல்ல, பாரிஜாதம் முதலிய மரங்களைவிட அரசமரம தாழ்ந்ததாகையினால் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக 'பூஜிக்கத்தகுந்ததாகிய' என்று சொல்லப்பட்டது. பாரிஜாதம் முதலிய மரங்களுக்கும அரசமரத்தைப்போலப் பூஜிக்கத்தகுந்த யோக்யதையில்லை என்று தாத்பர்யம். தேவதைகளாக இருந்துகொண்டே மந்த்ரங்களைக்கண்டறிந்தவர்கள் தேவருஷிகள் தேவருஷிகளுக்குள் நாரதருக்கு அநேகவிதமானமேன்மையுண்டென்பது மஹாபாரதத்திலேயே அநேக இடங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. சித்ரரதன் என்பவன் கந்தர்வர்களுக்கு அரசன். 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 என்கிற இடத்தில் ஸித்தியாவது முன்பு செய்த ஸுக்ருத வசத்தினால் பிறப்பிலேயே அணிமா முதலிய அஷ்டைஶ்வர்யங்களின் ஸித்தி. ஆதிவித்வான் ஸித்தர் என்று கபிலரைச்சொல்லுகிறார்கள் '1 மஹானுகவே உண்டாக்கப்பட்ட கபிலரென்ற ருஷியை' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறது '2 𑌦𑌦𑍃𑌶𑍁𑌃 𑌕𑌪𑌿𑌲𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍' என்றும சொல்லி இருக்கிறார்கள் இவரும் பரசுராமன் முதலியவர்களைப்போலவே. 26

---

1-ச்வேதாச்வதர-5-2. 2-ஸ்ரீமத்ராமாயணம் பாலகாண்டம் -40-24 தத்ர அவ்விடத்தில்ஸநாதநம் அநாதியான வாஸுதேவம் வாஸுதேவனாகிய கபிலம் கபில ருஷியைததருசு: பார்த்தார்கள்.

ஆயுதாநாமஹம் வஜ்ரம் தேநூநாமஸ்மி காமதுக் |
ப்ரஜநஶ்சாஸ்மி கந்தர்ப: ஸர்பாணாமஸ்மி வாஸுகி: ‖ 28

ப - ரை] அஹம் - நான், ஆயுதாநாம் - ஆயுதங்களுக்குள், வஜ்ரம் - வஜ்ராயுதமாகவும், தேநூநாம் - பசுமாடுகேளுக்குள், காமதுக்-காமதேனுவாகவும், ப்ரஜந: - ப்ரஜைகள் உண்டாவதற்குக் காரணமான, கந்தர்ப: ச - மன்மதனுகவும், ஸர்பாணாம் - ஸர்பங்களுக்குள், வாஸுகி: - வாஸுகியாகவும், அஸ்மி - ஆகிறேன். 58

பா] காமதேனுவாவதிவ்விடத்தில் ஸ்வர்கத்திலிருக்கும், ஸுரபி. ப்ரஜைகள் உண்டாவதற்குக் காரணமாகிய மன்மதன்நானுகிறேன். ஸர்பங்களாவது ஒருதலையையுடைய பாம்புகள். 28

---

தா] உச்சைஶ்ரவஸம் என்பதினுல் பிறப்பினுல் மேன்மை காட்டப்படுகிறது. அம்ருதம் என்பது இவ்விடத்தில் ஜலம், அல்லது கடையப்படுகிற தசையையுடைய அம்ருதமாகவுமாம் கஜேந்த்ராணாம் (உத்தமமான யானைகளுக்குள்) என்பதினுல் திக்கஜங்கள் சொல்லப்படுகின்றன, அவைகளுக்குள் ப்ரதானமாகையினுல் திக் பாலகர்களுக்கு எஜமானனுகிய தேவேந்திரனுக்கு வாஹனம் ஐராவதம். உச்சைஶ்ரவஸம் என்பது காக்கையின் கண்ணைப்போல ஐராவதத்திலும் அன்வயிக்கிறது. ரதந்தரம் என்னும் ஸாமத்திலிருந்து உண்டானது என்பதும் அறியத்தக்கது. நராதிபம் என்னும் பதத்தினுலேயே நியமிக்கிறவனுக இருக்கையாகிற மேன்மை ஏற்பட்டது. 27

'ஆயுதாநாம்' என்பது ஸாதாரணங்களான ஆயுதங்களைச் சொல்லுகிறது, ஸுதர்சனமென்னும் பகவானுடைய சக்ரம் முதலிய ஆயுதங்களைவிடத் ததீசி ருஷியின் எலும்பினுலுண்டான வஜ்ரமும் தாழ்ந்ததாகையினுல் 'தேநூநாம்' என்பதற்கு பசுக்களுக்குள் என்றர்த்தம் 'ஸ்வர்கத்திலிருக்கும் ஸுரபி' என்பதற்கு இஷ்டத்தைக் கொடுக்கிற என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற 'காமதுக்' என்னும் பதமானது இவ்விடத்தில் ஸுரபி ஒன்றைச் சொல்லுகிறது, என்று தாத்பர்யம். 'ப்ரஜந:' என்பதினுல் ப்ரஜைகள் உண்டாவதற்குக் காரணமாகுகையாகிற மன்மதனுடைய அஸாதாரணமான மேன்மை சொல்லப்பட்டது. அது எனக்கு வசப்பட்டது என்று அர்த்தம். ப்ரஜைகள் உண்டாவதற்குக் காரணமாகாத மன்மதனை விலக்குவதற்காக 'ப்ரஜந:' என்று சொல்லியிருக்கிறதாகவுமாம். ஒரே அர்த்தத்தைச்சொல்லுகிற 'ஸர்ப, நாக' என்னும் பதங்களை ஏன் தனித்துச் சொல்லி

**𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨𑌾𑌗𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍁𑌣𑍋 𑌯𑌾𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।**
**𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌮𑌰𑍍𑌯𑌮𑌾 𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌯𑌮𑌃 𑌸𑌂𑌯𑌮𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥** 29

ப-ரை] 𑌨𑌾𑌗𑌾𑌨𑌾𑌂 - நாகங்களுக்குள, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 - ஆதிசேஷனாகவும் 𑌯𑌾𑌦𑌸𑌾𑌂 - ஜலத்தில் வஸிக்கும் ஜந்துக்களுக்குள், 𑌵𑌰𑍁𑌣𑌃 - வருணனாகவும், 𑌅𑌹𑌂 - நான், 𑌅𑌸𑍍𑌮𑌿 - ஆகிறேன், 𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌂 - பித்ருக்களுக்குள், 𑌅𑌰𑍍𑌯𑌮𑌾 𑌚 - அர்யமா என்கிற பெயரை உடையவனாகவும், 𑌸𑌂𑌯𑌮𑌤𑌾𑌂 - ஶிக்ஷிக்கிறவர்களுக்குள், 𑌯𑌮𑌃 - யமனாகவும். 𑌅𑌹𑌂-நான், 𑌅𑌸𑍍𑌮𑌿 - ஆகிறேன்.

பா] நாகங்களாவன, அநேகம் தலைகளை உடைய பாம்புகள். ‘𑌯𑌾𑌦𑌸𑌾𑌂’ என்றால் ஜலத்தில் வஸிப்பவர்கள், அவைகளுக்குள் நான் வருணன் ஶிக்ஷிக்கிறவர்களுக்குள் யமனும் நான்

**𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌲𑌯𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ।**
**𑌮𑍃𑌗𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌮𑍃𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌽𑌹𑌂 𑌵𑍈𑌨𑌤𑍇𑌯𑌶𑍍𑌚 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍍 ॥** 30

ப-ரை] 𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 அஸுரர்களுக்குள், 𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍍𑌚 ப்ரஹ்லாதனாகவும், 𑌕𑌲𑌯𑌤𑌾𑌂 ப்ராணிகளுக்கு அனிஷ்டத்தை எண்ணிக்கொண்டிருப்பவர்களுக்குள், 𑌕𑌾𑌲𑌃 ம்ருத்யுவாகவும், 𑌅𑌹𑌂 நான், 𑌅𑌸𑍍𑌮𑌿 ஆகிறேன், 𑌮𑍃𑌗𑌾𑌣𑌾𑌂 மிருகங்களுக்குள், 𑌮𑍃𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 சிங்கமும், 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌂 பக்ஷிகளுக்குள, 𑌵𑍈𑌨𑌤𑍇𑌯𑌶𑍍𑌚 கருடனும், 𑌅𑌹𑌂 நான்

---

தா]‘ ... இருக்கிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—‘ஸர்பங்களாவது’ என்று. 28

‘𑌯𑌾𑌦𑌸𑌾𑌂’ என்னும் பதத்தினால் வருணனையும் சேர்த்துக்கொள்ளவேண்டியதற்காகச் சொல்லுகிறார்—‘𑌯𑌾𑌦𑌸𑌾𑌂’ என்றால் ஜலத்தில் வஸிப்பவர்கள், என்று. அன்றிக்கே ஜலத்தில் வஸிக்கும் ஜந்துக்கள் மாத்திரம் சொல்லப்படுகிறதாகவுமாம். அவைகளுக்கு யஜமானன் ஆகையினால் வருணனுக்கும் அவைகளோடு ஸம்பந்தம் உண்டு. அவைகளுடைய ஜாதியைச் சேர்ந்தவனல்லாமையினால், என்று அறியவும். அர்யமா என்பவன் பித்ருக்களுக்கு ராஜன். ‘𑌸𑌂𑌯𑌮𑌤𑌾𑌂’ என்பதற்கு அடக்குகிறவர்களுக்குள் என்று அர்த்தம். இதைத் தான் சொல்லி இருக்கிறார். ஶிக்ஷிக்கிறவர்களுக்குள்’ என்று. 29

பா] 1 'அனிஷ்டத்தைச் செய்யவேண்டும் என்கிற ஆசையினால் எண்ணிக் கொண்டிருப்பவர்களுக்குள் ம்ருத்யு நான். 30

பவந: பவதாமஸ்மி ராம: ஶஸ்த்ரப்ருதாமஹம் ।
ஜஷாணாம் மகரஶ்சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹ்நவீ ॥ 31

2 - ரை] பவதாம் ஸஞ்சரிக்கிற வஸ்துக்களுக்குள் பவந: காற்றும் ஶஸ்த்ரப்ருதாம் ஆயுதங்களைத் தரிப்பவர்களுள் ராம: ராமனும் அஹம் நான் அஸ்மி ஆகிறேன் ஜஷாணாம் மீன்களுக்குள் மகர: மகரமென்னும் மீனும் அஸ்மி ஆகிறேன் ஸ்ரோதஸாம் ஓடுகிற ஜலங்களுக்குள் ஜாஹ்நவீ கங்கையும் அஸ்மி ஆகிறேன். 31

ஸஞ்சரிப்பதையே ஸ்வபாவமாக உடைய வஸ்துக்களுக்குள் காற்று

தா] 1 *'ப்ரஹ்லாதஶ்சாஸ்மி தைத்யானாம் யமஸ்ஸம்யமதாமஹம்' என்றிவை முதலியவைகளினால் ப்ரஹ்லாதனுக்கு மேன்மை சொல்லப்பட்டது. 2 'அஹமேவாக்ஷய:' என்று நித்யமான காலமாகிய வஸ்துவைப்பற்றி மேலே சொல்லப்போகிறபடியினாலும், யமனைப்பற்றி முன்பு சொல்லியிருக்கிறபடியினாலும், அவர்களைவிட வேறு புருஷன் இவ்விடத்தில் கால என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறான், அசேதனமாகிய காலத்திற்கு எண்ணிக்கொண்டிருக்கை பொருந்தாது. 'கலயதாம்' என்பது அறியும் தன்மையுள்ளவர்களை யெல்லாம் சொல்லும் பக்ஷத்தில் காலத்தை அவைகளுக்குள் என்று எடுத்தது யுக்தமல்ல, ஆகையினால் அதற்குஉசிதமான அர்த்தத்தைக்காட்டுகிறார்—'அனிஷ்டத்தை' என்றாரம்பித்து. மரணத்தைவிட மேலான அனிஷ்டமில்லையல்லவா என்று தாத்பர்யம். ம்ருகேந்த்ர என்னும் பதத்தினாலேயே சிங்கத்திற்கு மேன்மை ஏற்பட்டது. பக்ஷிகளுக்குள் கருடனுக்கு வேகமதிகமாகையினாலும், வேதஸ்வரூபமாகையினாலும் மேன்மை ஏற்பட்டது. 30*

*'பவதாம்' என்பதினால் காற்றுக்கே அஸாதாரணமான வீசுதல் ஆகிய க்ரியை சொல்லப்படுகிறதானால் அவைகளுக்குள் காற்றை தனித்தெடுத்திருப்பது பொருந்தாதாகையினால் அது உசிதமாவதற்காக 'ஸஞ்சரிப்பதையே ஸ்வபாவமாக உடைய' என்று சொல்லப்பட்டது. அதாவது எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற என்று அர்த்தம். காற்றினால் தள்ளப்பட்டவைகளாக அன்றோ நக்ஷத்திரம் முதலி*

1 *விஷ்ணுபுராணம்* 1-15-156 *ய: எந்தப்ரஹ்லாதன் அசேஷாணாம் எல்லா ஸாதூநாம் ஸாதுக்களுக்கும் உபமானம் உதாஹரணமாக ஸதா எப்பொழுதும்அபவத் இருந்தாரோ.* 2 *பகவத்கீதை* 10-33.

நான் ஆயுதத்தைத் தரிப்பவர்களுக்குள் ராமன் நான் இவ்விடத்தில் ஆயுதத்தைத்தரிப்பவனாக இருக்கை விபூதி, வேறு வஸ்து வில்லையாதலால் ஸூர்யன்முதலிய ஜீவாத்மாக்களும் அவர்களுக்கு ஆத்மாவாக இருக்கிற பகவானுக்குச் சரீரமாகையினாலே விசேஷணங்களாகையினால் ஆயுதத்தைத் தரிப்பவனாக இருக்கையைப்போலவே. 31

---

யவைகள் எப்பொழுதும் ஸஞ்சரிக்கின்றன. ஸோமலதையைப்பவனம் செய்தல் முதலிய இடங்களிலே போல பரிசுத்திசைச் செய்துகொண்டு ஸஞ்சரித்தல் இங்கே சொல்லப்படுகிறது. 'ராமஸ்ஸஸ்த்ரப்ருதாம்' என்பதினால் பரசுராமனை ஜயித்தவரும் ராவணனைக்கொன்றவருமான ராமன் சொல்லப்படுகிறார், ஆகையினால் அதற்குத்தகுந்த வீண்போகாத ஆயுதங்களை உடையவராக இருக்கைஆகிற மேன்மையைச் சொல்லுகிறார்—'ஆயுதத்தைத் தரிப்பவனாக இருக்கை விபூதி' என்று. முன்பின் ஸந்தர்ப்பங்களிலே போல ராமனை விபூதியாக ஏன் இருக்கக்கூடாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'வேறு வஸ்துவில்லையாதலால்' என்று. அதாவது இவ்விடத்தில் 'ஸஸ்த்ரப்ருத்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற,ஒருவித அசேதனமோ, தன்னைவிட வேறு சேதனமோ இல்லையாதலினால், என்று அர்த்தம். வேறு வஸ்துக்களைச் சொல்லிக்கொண்டு வந்து நடுவில் தனக்கே அஸாதாரணமான ஸ்வபாவத்தைச்சொல்லும் பக்ஷத்தில் ஆரம்பித்தக்ரமத்திற்கு விரோதம் வருமே என்கிற ஆக்ஷேபத்திற்குஸமாதானம் சொல்லுகிறார்—'ஸூர்யன் முதலிய' என்றாரம்பித்து. ஆயுதத்தைத் தரிப்பவனாக இருக்கைக்கும் மற்றவைகளுக்கும் பகவானாகிய ஒரு விசேஷ்யத்திற்கு விசேஷணமாக இருக்கை ஸமானம் ஆகையினாலே ஒரேக்ரமம் தான், சில இடங்களில அவைகளுக்குள் என்று சொல்லியிருப்பதும், சில இடங்களில் அப்படியில்லாததுமாகிய வ்யத்யாஸத்தைப் போலவே இதுவும் அல்பவ்யத்யாஸம் மாத்திரமாகையினால் தோஷமில்லை, என்று தாத்பர்யம் இவ்விடத்தில் 'ஸூர்யன்' என்னும் பதத்தினால் 1 ஜ்யோதிஷாம் ரவிரம்ஸுமாந்' என்று சொல்லப்பட்ட ரவி சொல்லப்படுகிறான், 2 'ஆதித்யாநாமஹம் விஷ்ணு:' என்று சொல்லப்பட்ட விஷ்ணுவேயெனில ராமனுக்கு ஸமமானவன் மகரமாவது, மீன்களுக்குள்சிறந்தது. ஓடுகிற ஜலங்களுக்குள் கங்கைக்கு மேன்மை, பகவானுடைய திருவடியிலிருந்து உண்டாகை, ஸவ்ர்ஜ்ஞன் என்று பேருடைய ருத்ரனுடைய தலையினால் தாங்கப்பட்டிருக்கை, மூன்று லோகங்களிலும் ஓடுகிறது முதலியகாரணங்களினால்.

---

1 பகவத்கீதை 10-21. 2 பகவத்கீதை 10-21.

𑌸𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌮𑌾𑌦𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚𑍈𑌵𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨।
𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌦𑌃 𑌪𑍍𑌰𑌵𑌦𑌤𑌾𑌮𑌹𑌮𑍍॥　　32

ப - ரை] 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 அர்ஜுன 𑌸𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌂 ஸ்ருஷ்டிக்கபடுகிற வஸ்துக்களுடைய 𑌆𑌦𑌿𑌃 காரணமும் 𑌅𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 கடைசியும் 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚 நடுவும் 𑌅𑌹𑌮𑍍 நான் 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 வித்யைகளுக்குள் 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 வேதாந்த வித்யையும் 𑌪𑍍𑌰𑌵𑌦𑌤𑌾𑌂 வாதம் செய்கிறவர்களுடைய, 𑌵𑌾𑌦𑌃 வாதமும், 𑌅𑌹𑌮𑍍 நான். 32

பா] '𑌸𑍃𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇' (ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன,) ஆகையினால் '𑌸𑌰𑍍𑌗𑌾𑌃' என்று சொல்லப்படுகின்றன. அவைகளுக்குக்காரணம், அதாவது, எப்பொழுதும் ஸ்ருஷ்டிக்கப்படுகிற எல்லா ப்ராணிகளையும் அந்தந்த இடத்திலிருந்து ஸ்ருஷ்டிக்கிறவர்களும் நானே, என்று அர்த்தம். அப்படியே ஸம்ஹாரம் செய்யப்படுகிற அந்தந்த வஸ்துக்களையும், அந்தந்த இடங்களிலிரு

---

தா] "𑌸𑌰𑍍𑌗" என்னும் பதத்தினால் ஸ்ருஷ்டியைமாத்திரம் சொல்லும் "பக்ஷத்தில் 𑌆𑌦𑌿𑌃 𑌅𑌨𑍍𑌤𑌃" என்கிற பதங்களோடு அன்வயம் பொருந்தாதாகையினால் இவ்விடத்திலிருக்கும் "𑌸𑌰𑍍𑌗" என்னும் பதம் ஸ்ருஷ்டிக்கப்படுகிற வஸ்துக்களைச் சொல்லுகிறது, என்றுசொல்லுகிறார்— "𑌸𑍃𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 என்று ஆரம்பித்து. "𑌆𑌦𑌿 𑌮𑌧𑍍𑌯 𑌅𑌨𑍍𑌤" என்னும் பதங்கள் இவ்விடத்தில் பாகங்களைச் சொல்லுகின்றன, என்பது யுக்தமல்ல. அதிக ப்ரயோஜன மில்லாமையினால், கால விசேஷங்களைச் சொல்லுகின்றன என்பது மில்லை. காலத்தை மேலே சொல்லப்போகிறபடியினால், இங்கே தனித்து அதைச் சொல்வதற்கு ப்ரயோஜன மில்லாமையினால், உத்பத்தி முதலிய கார்யங்களை மாத்திரம் சொல்லுகிறது, என்பதுமில்லை. 1 "𑌉𑌦𑍍𑌭𑌵𑌶𑍍𑌚 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌾𑌂" என்று மேலே சொல்லப்போகிறபடியினால். பகவானே காரணம் என்பது முதலியவை இங்கே சொல்லப்படுகின்றன வென்பதுமில்லை. 2 "𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚" என்று, முதல் ஆரம்பத்திலேயே சொல்லி யிருக்கிறபடியினாலும், இது பொதுவாக முன்பு சொன்னதை நிகமனம் செய்கிறது, என்பது மில்லை மேலேயும் சொல்லப்போகிறபடியினால். ஆகையினால் உத்பத்தி முதலியவைகளுக்குக் காரணங்களாக லோகத்தில் ஏற்பட்டவைகளைச் சொல்லுகின்றன என்பது உசிதம். அதிலும் உபாதான காரணத்தைப்பற்றி 3 "𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍀𑌜𑌂" என்று மேலே சொல்லப்போகிறபடியினால், நிமித்தகாரணம் மாத்திரமே இங்கே சொல்லப்படுகிறது. "𑌸𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌂" என்று பொதுவாகச் சொல்லி இருக்கிறபடியினால்,

---

1 பகவத்கீதை 10-34. 2 பகவத்கீதை 10-20. 3 பகவத்கீதை 10-39.

ந்து ஸம்ஹாரம் செய்கிறவர்களும் நானே அப்படியே ரக்ஷிப்பதும் நானே அதாவது எப்பொழுதும் ரக்ஷிக்கப்படுகிற வஸ்துக்களை அந்தந்த இடத்திலிருந்து ரக்ஷிக்கிறவர்களும் நானே. ஜல்பம், விதண்டை முதலியவைகளைச்செய்பவர்களுடைய, தத்வத்தை நிஸ்சயம் செயவதற்காக ஏற்பட்ட வாதம் எதுவோ, அதுவும் நான். 33

**அக்ஷராணாமகாரோஸ்மி த்3வந்த்3வ: ஸாமாஸிகஸ்ய ச |**
**அஹமேவாக்ஷய: காலோ தா4தாஹம் விஸ்வதோமுக2: ||**

ப - ரை] அக்ஷராணாம் எழுத்துக்களுக்குள், அகார: அகாரமாகவும், ஸாமாஸிகஸ்ய ச ஸமாஸங்களுடைய கூட்டத்திற்குள், த்3வந்த்3வ: த்வந்த்வமென்னும் ஸமாஸமாகவும், அஸ்மி ஆகிறேன், அக்ஷய: அழிவில்லாத,

*எல்லா இடங்களிலும எல்லாக காலங்களிலு மிருக்கிற ஸ்ருஷ்டிககப்படுகிற வஸ்துக்களைக் குறித்து நிமித்தகாரணங்களாகிய எல்லா வஸ்துக்களின் கூட்டமும் தனக்கு வசப்பட்டது, என்று அபிப்ராயம்; இவை யெல்லாம் 'எப்பொழுதும்' என்று ஆரம்பித்து. மூன்று வாக்கியங்களினால் தாத்பர்யமாகக் கொள்ளப்பட்டது. வேதாநத வித்யையாவது ஜீவாத்மா பரமாத்மா இவைகளின் உண்மையைப்பற்றிய வித்யை அது விஷயத்தினாலும் ப்ரயோஜனத்தினாலும் மற்ற வித்யைகளைவிடச சிறந்தது. "வாத:" என்பதினால் ஒருவருக்கொருவர் கலகம செய்வது மாததிரம சொல்லபபடுகிறதல்ல, அதில் வாதம் என்கிற விசேஷம் சொல்லப்படாமையினாலும். "அத்4யாத்மவித்3யா வித்3யாநாம்" என்று வித்யை ப்ரஸ்தாவம் வநதபடியினால், அதற்காக ஏறபட்ட ப்ரஸங்கத்தைச் சொல்லுகிறது, என்பதே யுக்தமாகையினாலும். 1 "ஸங்க்யம் ஸங்க்யவதாம்" என்பதைப்போல வாதமாகியஒருவித ப்ரஸங்கத்தைச் செய்கிறவர்களுடைய என்றும் அபிபராயமில்லை, மற்றவர்களைவிட இவன் சிறநதவன் என்பதைத் தெரிவிப்பது ஸம்பவிக்கும் பொழுது அத்தை விடுவது உசிதமல்லவாகையினால். ஆகையினால "வாத:" என்பதினால் மூன்று வித ப்ரஸங்கங்களுக்கும ஸாதாரணமான ஸ்வரூபம் இங்கே சொல்லப்படுகிறது. அத்தையே சொல்லுகிறார்—'ஜல்பம் விதண்டை முதலியவைகளைச் செய்பவர்களுடைய' என்று. 'தத்வத்தை நிஸ்சயம் செய்வதற்காக ஏற்பட்ட' என்பதினால் அல்பமான ப்ரயோஜனத்தை உடையதாகிய, ஜயிக்கவேண்டு மென்று ஆசையை உடையவர்களின் ப்ரஸங்கத்தைவிட வாதத்திற்கு, மேலான மோக்ஷத்தில் முடியும்படியான ப்ரயோஜனத்தை உடைத்தாயிருக்கையினால் மேன்மை காட்டப்பட்டது.* 32

1 பகவதகீதை 10-36.

காலஃ காலமும், அஹமேவ நானே, விஶ்வதோமுகஃ நான்கு திக்குக்களிலும் முகங்களை உடைய, தாதா ப்ரம்மாவும், அஹம் நான், 33

பா] எழுத்துக்களுக்குள் * 'அகராமே எல்லா வார்த்தையும்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்திலேற்பட்ட எல்லா அக்ஷரங்களுக்கும் காரணமாகிய அகாரம் நான் ஸமாஸங்களின் கூட்டம் 'ஸாமாஸிகம்' அதற்குள் த்வந்த்வம் என்கிற ஸமாஸம் நான், அது இரண்டு பதங்களினுடைய அர்த்தங்களையும் ப்ரதானமாக உடைத்தானதாகையினால் சிறந்தது. கலை

தா] பஹ்வ்ருசோபநிஷத்தில் 1 'அ' என்பது ப்ரம்மம், என்று அர்த்தமுள்ள வாக்யம். சொல்லப்படுகிறது. அப்படியே, 2 அகாரமே எல்லா வார்த்தையும். இது ஸ்பர்சங்களினாலும் ஊஷ்மாக்களினாலும் ப்ரகாஶம் செய்யப்பட்டதாய்க்கொண்டு அநேகமாகவும் அநேக ஸ்வபாவமுள்ளதாயும் ஆகிறது" என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தினாலே விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கையைச் சொல்லுகிறார்—எல்லா அக்ஷரங்களுக்கும் காரணமாகிய' என்று. தனித்துச் சொல்லுவதற்கு உபயோகமான ஸமாஸங்கள் அநேகம் என்பதைத் தெரிவிப்பதற்காக ப்ரத்யயத்தின் அர்த்தத்தைக் காட்டுகிறார்—'ஸமாஸங்களின் கூட்டம்' என்று. முன்பதம், பின்பதம், இவைஇரண்டையும்விட வேறு பதம், இவைகளை ப்ரதானங்களாக உடைய அவ்யயீபாவம் தத்புருஷம் பஹுவ்ரீஹி என்னும்ஸமாஸங்களை விட த்வந்த்வஸமாஸத்திற்கு மேன்மையைச் சொல்லுகிறார்—'அது' என் றாரம்பித்து. 'அக்ஷயஃ' (அழிவில்லாத) என்பதினால் 3 'கலைமுகூர்த்தம் காஷ்டை இவைகள்' என்று அர்த்தமுள்ளஶ்ருதி வாக்யத்திலும் 4 'அநாதிர்பகவான் காலஃ' என்கிற ஸ்ம்ருதி வசனத்திலும் ஏற்பட்டவைகளாயும் அநேகவித விகாரங்களாகிய லோகம் நாசமடைவதற்குக் காரணங்களாயுமிருக்கிற எண்ணிறந்த உட்பிரிவுகளிருந்த போதிலும் ஸ்வரூபத்தில் ஆதியுமில்லை அந்தமுமில்லை என்பது சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கலை' என்றாரம்பித்து. -' அநாதிர்பகவாந் காலஃ

1 பஹ்வ்ருசோபநிஷத் 1.

2 தைத்திரீயம்: நாராயணம் 1-8.

3 விஷ்ணுபுராணம் 4-1-84 கலைமுஹூர்த்தம் முதலிய காலம் எந்த நித்ய விபூதியின் மாறுதலுக்குக்காரண மில்லையோ.

4 விஷ்ணுபுராணம் 1-2-26 பகவான் பகவானாகிய காலః காலம் அநாதி: அநாதி த்விஜ ஓப்ராம்மண அஸ்ய இந்தக்காலத்திற்கு அந்த: முடிவு நவித்யதே இல்லை.

முகூர்த்தம் முதலியவைகளாகிய அழிவில்லாத காலமும் நானே. எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கிற நான்கு முகங்களை உடைய ப்ரம்மாவும் நானே. 33

ம்ருத்யுஸ்ஸர்வஹரஶ்சாஹமுத்பவஶ்ச பவிஷ்யதாம் ।
கீர்திஶ்ஶ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா த்ருதிః க்ஷமா ॥ 34

ப-ரை] ஸர்வஹர: - எல்லா ப்ராணிகளையும், ஸம்ஹாரம் செய்கிற, ம்ருத்யு: - ம்ருத்யுவும், பவிஷ்யதாம் - உண்டாகப்போகிற வஸ்துக்களின், உத்பவஶ்ச - உத்பத்தி என்னும் க்ரியையும், அஹம் - நான்- நாரீணாம் - ஸ்திரீகளுக்குள், கீர்தி: - கீர்த்தியும், ஶ்ரீ: - லக்ஷ்மியும், வாக்ச - வாக்கும், ஸ்ம்ருதி: - ஸ்ம்ருதியும், மேதா - மேதையும், த்ருதி:, த்ருதியும், க்ஷமா - க்ஷமையும் (நான்).

பா] எல்லா ப்ராணிகளுடையவும் ப்ராணனை அபஹரிக்கிற ம்ருத்யுவும்

---

தா] நாம்தொஸ்ய விஜவிஷ்ருதெ 1 காலோஸ்மி லோகக்ஷயக்ருத்ப்ரவ்ருத்தோ: நாம்தொநவாஷிநமூவ ஜேஷ்ஸி" என்றிவைமுதலிய வசனங்களினால் காலத்திற்கு அதிஷ்டாதா என்பது வ்யக்தமாக ஏற்படுகிறது. 'யாதா'' என்னும் பதத்தின் ரூடி சக்தியினாலும 'விஶ்வதோமுக:' என்கிற விசேஷணத்தினாலும் ப்ரம்ஹாவே இவ்விடத்தில் சொல்லப்படுகிறான்' என்கிற அபிப்ராயத்தினால சொல்லுகிறார்—'எல்லாவற்றையும்' என்றாரம்பித்து, யாதா என்னும் பதத்தினாலேயே அண்டத்துக்குள்பட்ட எல்லா வஸ்துக்களையும் ஸ்ருஷ்டிப்பவனாக இருக்கையாகிற மேன்மை ஏற்பட்டது என்று தெரிவிப்பதற்காக 'எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கிற' என்று சொல்லப்பட்டது. இத்தால் கர்மங்களின் பலங்களைக் கொடுக்கிறவன் என்று அர்த்தம் சொல்லி யிருக்கும் மற்ற வ்யாக்யானங்கள் நிராகரிக்கப்பட்டன. 'விஶ்வத:' என்பதினால் நான்கு திக்குகள மாத்திரம் இங்கே சொல்லப்படுகின்றன என்று தெரியப்படுத்துவதற்காக 'நான்கு முகங்களை உடைய' என்று சொலலப்பட்டது. நான்கு வேதங்களையும் பரவச்செய்தல் முதலியதும் இத்தால் குறிக்கப்பட்டது.

அவரவர்கள் கர்மங்களுக்குத்தக்கபடி பரிக்ஷைசெய்வதிலும் காலத்தின் அளவிலும் அதிகாரம் பெற்றவர்களாகிய யமனையும் காலனென்று பெயரை உடைய புருஷனையும் பற்றி முன்பே சொல்லப்பட்ட

---

1 பகவத்கீதை 11-32.

நான், உண்டாகப்போகிற வஸ்துக்களின் உத்பத்தி என்று பேருடைய க்ரியையும் நான் லக்ஷ்மியும் நான். கீர்த்தியும் நான். வாக்கும் நான். ஸ்ம்ருதியும் நான். மேதையும் நான். த்ருதியும் நான். க்ஷமையும் நான்.

---

படியினால் யமனுடைய உத்தரவின்படி நடக்கிறவனும் ப்ராணனை அபஹரிப்பதில் அதிகாரம் பெற்றவனுமாகிய புருஷன் இவ்விடத்தில் 'ம்ருத்யுஸ்ஸர்வஹரஃ' என்று சொல்லப்படுகிறான். என்று தெரிவிப்பதற்காக 'எல்லா ப்ராணிகளுடைய ப்ராணனையும் அபஹரிக்கிற' என்று சொல்லப்பட்டது. ப்ரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்கிற ஈஶ்வரன் இவ்விடத்தில் ம்ருத்யு என்னப்படுகிறான், என்று சிலர் சொன்னது அவ்வளவு உசிதமல்ல. 1 'ஹ்ருதாநாம் அந்த ஏவ ச' என்று முன்னமே சொல்லி இருக்கிறபடியினால் உத்பத்தியோடு சேர்த்துச் சொல்லி இருப்பதினால் இவ்விடத்தில் ம்ருத்யு என்னும் பதம் மரணத்தைச் சொல்லுகிறது, என்று சிலர் சொல்லுகிறார்கள். 'உத்பவஃ' என்னும் பதம் ஸ்வாரஸ்யமாக உத்பத்தியென்னும் க்ரியையைச்சொல்லுகிறது. உத்பத்தியாகுமிடம் முதலியதும் நிமித்தகாரணம்உபாதானகாரணம் முதலியதும் இவ்விடத்தில் தனித்துச் சொல்லப்பட்டதாகையினால் க்ரியையைச்சொல்லுகிறதுஎன்பதே உசிதம். என்கிறஅபிப்ராயத்தினால் 'உத்பத்தி என்கிற பெயரை உடையக்ரியை' என்று சொல்லப்பட்டது. குணவிஶேஷங்களாகிய கீர்த்தி முதலியவைகள் இவ்விடத்தில் சொல்லப்படவில்லை. அவைகள் புருஷர்களிடத்திலும் ப்ரகாஶமாக இருக்கிறபடியினாலே 'நாரீணாம்' என்கிற விஶேஷணம் பொருந்தாதாகையினால், இவ்விடத்தில் இருக்கும் 'நாரீணாம்'என்னும் பதம் ஸ்திரீலிங்கமான பதங்களின் அர்த்தங்களை எல்லாம் சொல்லுகிறதுமல்ல. முக்யமான அர்த்தத்திற்கு ஒருவிரோதமுமில்லாமையினால், ஆகையினால்ஸ்த்ரீகளுக்குள் விஶேஷமான ஸ்திரீகளைத் தனித்து எடுத்திருக்கிறது. அதிலும் லக்ஷ்மியே எல்லா ஸ்த்ரீகளிலும் சிறந்தவளாகையினால் அவளே முதலில்சொல்லத்தக்கவள். 'கீர்த்திஃஶ்ரீஃ'என்று பாடத்திலேற்பட்ட க்ரமமோவெனில் வஸ்துவின் யோக்யதையைபப்பற்றிய க்ரமத்தினால் தடுக்கப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'லக்ஷ்மியும் நான் கீர்த்தியும் நான்' என்று சொல்லப்பட்டது. இவைகள் பகவானுக்கு அஸாதாரணமானபத்னிகள். மற்றவஸ்துக்களிலோவெனில் அவரவர்களின் அபிமானத்தினால் அந்தந்தப்பதம் சொல்லப்படுகிறது.



---

1 பகவத்கீதை 10-20.

𑌬𑍃𑌹𑌤𑍍𑌸𑌾𑌮 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌛𑌨𑍍𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌮𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌮𑌾𑌰𑍍𑌗𑌶𑍀𑌰𑍍𑌷𑍋𑌽𑌹𑌮𑍃𑌤𑍂𑌨𑌾𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰𑌃 ॥

ப-ரை] 𑌤𑌥𑌾 அப்படியே, 𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 ஸாமங்களுக்குள், 𑌬𑍃𑌹𑌤𑍍𑌸𑌾𑌮 ப்ருஹத் என்கிற ஸாமமும், 𑌛𑌨𑍍𑌦𑌸𑌾𑌂 சந்தங்களுக்குள் 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 காயத்ரீ என்னும் சந்தமும் 𑌅𑌹𑌂 நான் 𑌮𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 மாஸங்களுக்குள, 𑌮𑌾𑌰𑍍𑌗𑌶𑍀𑌰𑍍𑌷𑌃 மார்கழிமாஸமும், 𑌋𑌤𑍂𑌨𑌾𑌂 ருதுக்களுக்குள், 𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰𑌃 வஸந்தருதுவும், 𑌅𑌹𑌂 நான். 35

பா] ஸாமங்களுக்குள் ப்ருஹத்ஸாமம் நான், சந்தங்களுக்குள் காயத்ரீயும் நான், '𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰'மாவது வஸந்தருது. 35

---

தா] ஸாமங்களுக்குள் ப்ருஹத் என்னும் ஸாமம் உயர்ந்தது என்பது ஸ்ருதியினாலேயே ஏற்பட்டது. 'முதலில் ப்ருஹத் என்றும்ரதந்தரம் என்னும் ஸாமமும் இருந்தது. வாக்கும் மனஸும் இருந்தது. வாக்கு என்பது ரதந்தரம். மனஸ் என்பது ப்ருஹத்து ப்ருஹத்து என்னும் ஸாமம் முதலில் தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ரதந்தரத்தை நினைத்து கொண்டது. அந்தரதந்தரம் கர்ப்பத்தைத்தரித்தது' என்று அர்த்த முள்ள ஸ்ருதிவாக்யமிருக்கிறது. காயத்ரீ எல்லாச் சந்தங்களுக்கும் தாயாராகையினால் சிறந்தது என்பது ஸ்ருதிகளிலும், சந்தோவிசிதி என்னும் கிரந்தத்திலும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. அப்படியே பஹ்வ்ருசோபநிஷத்தில் ''காயத்ரீ எல்லாச் சந்தங்களுக்கும் முதன்மையானது என்று' அர்த்தமுள்ள வாக்யம் இருக்கிறது. மாஸங்களுக்குள் மார்கழி மாஸத்திற்கு வருஷத்திற்குக் கர்ப்பமுண்டாகும் காலமாகையினாலும், மாஸங்களுக்குத் தேவதைகளாகிய கேசவன் முதலிய பன்னிருவர்களுக்குள் முதலாவதாகிய கேசவனுடைய மாஸ மாகையினாலும் எல்லா வ்ருதங்களும் ஆரம்பிக்கும் காலமாகையி னாலும் மேன்மையுண்டு. குஸுமாகர என்னும் பதத்தினாலேயே வஸந்த ருதுவுக்கு ப்ரத்யக்ஷத்திலேற்பட்டதாயும் எல்லா ப்ராணிக ளுடையவும் ஸுகத்திற்குக் காரணமாயு மிருக்கிற மேன்மை சொல் லப்பட்டது. ''ஒவ்வொரு வஸந்த ருதுக்களிலும் ஜ்யோதிஷ்டோம யாகச் செய்யவேண்டும்'' என்று அர்த்தமுள்ள ஸ்ருதி வாக்யத்தினா லும் '' 𑌵𑌸𑌨𑍍𑌤𑍇 𑌦𑍀𑌕𑍍𑌷𑍇𑌤 𑌮𑍁𑌖𑌂 𑌵𑌾 𑌏𑌤𑌦𑍃𑌤𑍂𑌨𑌾𑌂 '' என்கிற வசனம் முதலியவைகளினாலும் மேன்மை யேற்பட்டது. (35)

த்யூதம் ச²லயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் |
ஜயோऽஸ்மி வ்யவஸாயோऽஸ்மி ஸத்த்வம் ஸத்த்வவதாமஹம் ‖   36

ப - ரை] அஹம் நான், ச²லயதாம் மோசம் செய்பவர்களின். (மோசங்களுக்குள்) த்யூதம் சொக்கட்டானுகவும், தேஜஸ்விநாம் பராக்ரமத்தை உடையவர்களுடைய தேஜஃ பராக்ரமமாகவும், அஸ்மி ஆகிறேன், (ஜயிக்கிறவர்களின்) ஜயஃ ஜயமாகவும், அஸ்மி ஆகிறேன், (நிஶ்சயத்தை உடையவர்களுடைய) வ்யவஸாயஃ நிஶ்சயமாகவும், அஸ்மி ஆகிறேன், ஸத்த்வவதாம் மனோதைர்யத்தை உடையவர்களுடைய ஸத்த்வம் மனோதைர்யமும் அஹம் நான்.   36

பா] மோசம் செய்பவர்களின் மோசத்திற்கு இடமாகிய காரியங்களுக்குள் காய் முதலியவைகளைக் கொண்டு ஆடுகிற சொக்கட்டான் நான்; ஜயிக்கிறவர்களின் ஜயமும் நான் ஆகிறேன்; நிஶ்சயத்தை உடைய

---

தா] ச²லயதாம் என்கிற இடத்தில அதைச்செய்கிறன் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற, ணிஜ் என்னும ப்ரத்யயம் வந்திருக்கிறது என்கிற அபிப்ராயத்திஞல் 'மோசம் செய்பவர்களின்' என்று சொல்லப்பட்டது. காய்களை நடத்துகிற மாத்திரத்திஞல் ஜயம் தோல்வி இவைகளை ஆரோபித்து விடுகிறபடியினுல் ச²லம் (மோசம்) என்று சொல்லியிருப்பது உசிதம் தான் என்கிற அபிப்ராயததிஞல் 'காய்களைக்கொணடு ஆடுகிற' என்று சொல்லப்பட்டது. 'தேஜஸ்தேஜஸ்விநாமஹம்' என்றிவை முதலியவைகளைப்போல சொக்கட்டாடுகிறவர்களின் சொக்கட்டாட்டம் நான் என்று சொல்லாமல் மோசம் செய்வதை மாத்திரம் சொல்லியிருக்கிறபடியினுல் மோசத்திற்கு இடமாகிய விற்றல் வாங்குதல் கடன்வாங்குதல் பங்குபிரித்தல் ப்ரதிஜ்ஞை செய்தல் முதலிய மற்றக்காரியங்களைவிட சொக்கட்டாடுதல் மேலானதென்பது சொல்லப்படுகிறது. என்கிற அபிப்ராயத்திஞல் 'மோசத்திற்கு இடமாகிய காரியங்களுக்குள்' என்று சொல்லப்பட்டது. 'காய்முதலியவைகளை' என்பதஞல் ஜீவஞேடுகூடியதும் ஜீவனில்லாததுமான வஸ்துகளைக்கொண்டு ஆடுகிற எல்லா ஆட்டங்களும் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. அன்றிக்கே ஜீவனில்லாத வஸ்துக்களை மாத்திரம் சொல்லுவதற்காக 'காய் முதலியவைகளை' என்று சொல்லப்பட்டதாகவுமாம். அதற்கு மேன்மையாவது ப்ரயாஸமில்லாமலும் தர்மத்திற்கு விரோதமில்லாமலும் ஒப்புக்கொளளுவதிஞலேயே எல்லாப் பொருள்களையும் அபஹரிக்க முடியுமாகையிஞல் தேஜஸ்விநாம், ஸத்த்வவதாம் என்னும் பதங்கள் தேஜஃ, ஸத்த்வம், என்னும் பதங்களோடு அன்வயித்துவிட்ட

வர்களுடைய ஸத்வமும் நான் ஸத்வமாவது பெரியமனதை உடையவ னாக இருக்கை. 36

வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஸ்மி பாண்டவாநாம் தநஞ்ஜய: |
முநீநாமப்யஹம் வ்யாஸ: கவீநாமுஶநா கவி: || 37

ப — ரை] அஹம் - நான், வ்ருஷ்ணீநாம் - இடையர்களுக்குள், வாஸுதேவ: - வாஸுதேவனாகவும், பாண்டவாநாம் - பாண்டவர்களுக்குள, தநஞ்ஜய: - அர்ஜுனனாகவும், முநீநாம் - ருஷிகளுக்குள், வ்யாஸ: - வ்யாஸராகவும், கவீநாம் - கவிகளுக்குள், உஶநா: - சுக்கிராசார்யராகவும் அஸ்மி - ஆகிறேன். 37

பா] இவ்விடத்தில் வஸுதேவருக்குப் பிள்ளையாக இருக்கை விபூதி'

---

தா] படியினால், ஜயோஸ்மி, வ்யவஸாயோஸ்மி, என்பவைகளோடு அவைகளுக்கு அன்வயம்சொல்லுவது உசிதமில்லை, ஆகையினால் அதுடன் அன்வயிப்பதற்கு உசிதங்களாகிய ஜயிக்கிறவர்களின், நிஶ்சயத்தை உடையவர்களின், என்னும் பதங்கள்சேர்த்துக்கொள்ளப்படுகின்றன, என்கிற அபிப்ராயத்தினால 'ஜயிக்கிறவர்களின்' நிஶ்சயந்தை உடையவர்களுடைய' என்று சொல்லப்பட்டது. 'த்ருவ்யாஸுவ்யவஸாயேஷு ஸத்வ: ஸ்த்ரீஜந்துஷு' என்றிவை முதலிய வசனங்களினால் ஸத்வம் என்னும் பதத்திற்கு அநேக அர்த்தங்கள் ஏற்பட்டிருப்பதினாலும், வ்யவஸாயம் சொல்லப்பட்டபடியினாலும், ஸத்வத்தை உடையவன் என்னும் பதத்தின் ப்ரஸித்தியை அனுஸரித்து அதற்கு அர்த்தத்தைக் காட்டுகிறார். 'பெரிய மனதை உடையவனாக இருக்கை' என்று. இத்தால் அயலாரைத் தோல்வியடையும்படி செய்யக்கூடி சக்தியாகிய தேஜஸ்ஸைவிட ஸத்வத்திற்கு வ்பத்யாஸம் சொல்லப்பட்டது. 36
'வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஹம்' என்கிற இடத்திலும் ராமனைப் போலவே நேராகத் தன்னுடைய அவதாரமாகையினால் சொல்லுகிறார்—'இவ்விடத்தில் வஸுதேவருக்குப் பிள்ளையாக இருக்கை விபூதி' என்று. ராமனைப்பற்றிச் சொல்லும்பொழுது முன்னமேயே காரணம் சொல்லப்பட்டது என்று காட்டப்பட்டது. இவ்விடத்தில் வஸுதேவருக்குப் பிள்ளை என்கிற இது என்ன விபூதி? பிள்ளையாக இருக்கை மாத்திரத்தினால் மேன்மை இல்லையல்லவா, அது எல்லாரிடத்திலுமிருக்கிறபடியினால்; வஸுதேவரென்கிற தகப்பனுருக்குப் பிள்ளையாக இருப்பதினால் மேன்மை என்பதுமில்லை, அதுவும் அநேகம் பிள்ளைகளுக்குப் பொதுவாகையினாலே தனித்துச் சொல்வது பொருந்தாதாகையி

வேறு வஸ்து இல்லாமையினாலேயே பாண்டவர்களுக்குள் அர்ஜு-
னன் நான் முனிகளாவது மனனம் செல்வதினால் வஸ்துக்களின் உண்

---

ணால், வாஸுதேவன் என்கிற பதத்திற்கு அர்த்தமாக இருக்கை மாத்
திரத்தினால் மேன்மை என்பதுமில்லை, அது மேன்மைக்குக் காரண
மில்லாமையினால், வஸுதேவருக்குப் பிள்ளை என்பது இவ்விடத்தில்
உபதேசிக்கத் தக்கதுமில்லை, அர்ஜுனனால் அது அறியப்பட்டிருக்கிற
படியினால், ஆகையினாலேயே ஸாக்ஷாத்தாக அவதாரம் என்பது முசித
மல்ல, ஆகையினாலேதான் இவ்விடத்தில் 'வ்ருஷ்ணீநாமஹமஸ்மி' (இடையர்
களுக்குள் நானாகிறேன்) என்று சொல்லப்படவில்லை என்னில் இந்த
ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறோம் 'வாஸுதேவ' என்
னும் பதம் இவ்விடத்தில் லக்ஷணையினால் வஸுதேவர் வீட்டில் நான்கு
கைகளை யுடையவராக அவதாரம் செய்தது முதலாக மனுஷ்யர்
களைவிடச் சிறந்த குணங்கள் விக்ரஹம் பராக்ரமம் முதலிய இடை
யர்கள் வரையிலும் ப்ரஸித்தமான மேன்மையைக் குறிக்கிறது.
அதை அர்ஜுனனுக்குச் சொன்னதும் உதாஹரணம் காட்டுவதற்காக.
ஸர்வநாமமாகிய நீ என்பதை விட்டு நேராகப் பெயரையே சொன்னதி
னால் மிகவும் ஸமீபத்திலிருப்பது முதலியவைகளால மேன்மை இங்
கே சொல்லப்படுகிறது. தர்மத்தில தர்மபுத்திரனும் பலத்தில் பீமஸே
னனும் அழகு முதலியவைகளில மாத்ரீயின் பிள்ளைகளாகிய நகுல
ஸஹதேவர்களும் சிறநதவர்களாகையினால் 'அர்ஜுனன்' என்கிற
ப்ரஸித்தமான பெயரினாலே விவரிக்கப்பட்டது. இத்தால் தனக்கு
எதிரிலிருக்கும் அர்ஜுனனைக் குறித்து நீ என்று சொல்லாமை
யினால் இங்கே தனஞ்சயன் என்பவன் வேறொருவனோ என்கிற
ஸந்தேஹம் விலக்கப்பட்டது. இவ்விடத்தில் ப்ரத்யக்ஷமாகத் தெரிய
வில்லை என்பது மில்லை, ப்ரத்யக்ஷமாகத் தெரிகிற எலலா வஸ்துக்க
ளை எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷமாகப் பார்க்கிற பகவானால் சொல்லப்
படுகிறபடியினால். ருஷியாயிருக்கையாவது ஸுக்ருத விசேஷத்தினால்
இநதிரியங்களுக்குத் தெரியாத விஷயங்களைக் கண்டறிதல். அது
அனேகமாக முன்னமேயே சொல்லப்பட்டது, ஆகையினால் 'முநீநாம்'
என்கிற இடத்தில் வேறு அர்த்தம் நிருக்தியை அனுஸரித்தும், 'இந்தப்
பகவானைத் தெரிந்துகொண்டு முனியாகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதி
வாக்யத்தை அனுஸரித்தும், சொலலப்படுகிறது என்கிற அபிப்ராயத்தி
னால் சொல்லுகிறார்—'முனிகளாவது' என்று ஆரம்பித்து. பகவானுடைய
வ்யாஸருக்கு அப்படிப்பட்ட மேன்மையும் அவருடைய வார்த்தையி

மையைப் பார்க்கிறவர்கள், அவர்களுக்குள் வ்யாஸர் நான் கவிகளா வது புத்திமான்கள். 37

**दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम्।**
**मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम्॥ 38**

ப-ரை] अहं நான், दमयतां சிக்ஷிக்கிறவர்களுடைய, दण्डः சிக்ஷையாக, अस्मि ஆகிறேன், जिगीषतां ஜயிக்கவேண்டும் என்கிற ஆசையை உடையவர்களுடைய, नीतिः நீதியாகவும், अस्मि ஆகி றேன், गुह्यानां மறைக்கத்தகுந்தவார்த்தைகளை மறைப்பதில், मौनं चैव மௌனமாகவும், अस्मि ஆகிறேன், ज्ञानवतां ஜ்ஞான முள்ளவர்களின் ज्ञानं ஜ்ஞானமாகவும், अस्मि ஆகிறேன். 38

பா] நியமத்தை மீறிநடந்தால் சிக்ஷை செய்பவர்களின் சிக்ஷை நான். ஜயிக்கவேண்டுமென்கிற ஆசையை உடையவர்களுடைய ஜயத்துக்

---

தா] முன்பேயே ஏற்பட்டது 'कृष्णद्वैपायनं व्यासं सर्वप्राणिहिताय वै । को ह्येकं सन्निधानं यो नारायणस्तथा ॥' என்றிவை முதலியவைகளிலும் 'तपोविशिष्टादपि वै वसिष्ठान्निःसृतात्मनः । तन्निष्ठं श्रेष्ठतमं व्यासं ज्ञानवेदिनः ॥' என்றும் சொல்லப்பட்டது. இவரும் பகவானுடைய விபவாவதாரமாக 'वेदविद्भवान् कृष्णद्वैपायनः स्वयम्' என்று எண்ணப்படு படுகிறார். 'கவீநாம்' என்பதினால் பரபந்தம் செய்தவர்கள் என்பது சொல்லப்படவில்லை, அப்படியானால் வால்மீகி முதலியவர்கள் மற்றெல் லோரையும் விடச் சிறந்தவர்களாகையினால், நமக்குத் தெரியாத விஷ யங்களைக் கண்டறிகிறவன் கவி, என்று சொல்லப்படுகிறான். என்கிற அபிப்ராயத்தினால், சொல்லுகிறார்—'கவிகளாவது' என்று ஆரம்பி த்து. புத்திமான்களுக்குள் சுக்கிராசாரியருக்கு மேன்மையாவது நீதிசாஸ்த்திரத்தில் ஸாமர்த்தியம் முதலியவைகளால், இதுவும் 'नक्षत्राणां तेजांसि शुक्रस्य भार्गवाः । शेषवंश दितिसुतानां बृहस्पतिश्च' என்றிவை முதலிய இடங்களில் ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிறது. 37

'நியமத்தை மீறி நடந்தால்' என்பதினால் சிக்ஷிப்பதற்குத் தகுந்த வர்கள் என்பது சொல்லப்படுகிறது, சிக்ஷிக்கத்தகாதவர்களை சிக்ஷிப் பது நரகத்திற்குக் காரணமாகையினால. நீதியை உடையவர்களின் நீதி ஆகிறேன் என்று சொல்லவேண்டி இருக்க 'ஜிகீஷதாம்' (ஜயிக்கவே

குக் காரணமாகிய நீதியும் நானாகிறேன் மறைக்கவேண்டியவைகளின் மறைப்புகளில் மௌனமாகிறேன். ஜ்ஞானமுள்ளவர்களுடைய ஜ்ஞானமும்நான். 38

*𑌯𑌚𑍍𑌚𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍀𑌜𑌂 𑌤𑌦𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 |*
*𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌨𑌾 𑌯𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌯𑌾 𑌭𑍂𑌤𑌂 𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ||* 39

ப—ரை] 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 - அர்ஜுன, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 - எல்லா ப்ராணிகளுக்கும், 𑌬𑍀𑌜𑌂 - காரணம், 𑌯𑌤𑍍 - எதுவோ, 𑌤𑌦𑌪𑌿 - அதுவும், 𑌅𑌹𑌂 - நான், 𑌯𑌤𑍍 - எந்த, 𑌚𑌰𑌾𑌚𑌰𑌂 - ஜங்கமமும் ஸ்தாவரமுமாகிய, 𑌭𑍂𑌤𑌂 - ப்ராணி, 𑌮𑌯𑌾 𑌵𑌿𑌨𑌾 - என்னைவிட்டுப் பிரிந்து, 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 - இருக்குமோ, 𑌤𑌤𑍍 - அப்படிப்பட்டது, 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 - இல்லை. 39

---

*ண்டும் என்கிற ஆசையை உடையவர்களுடைய) என்பதோடு எப்படி அன்வயிக்கிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்*—ஜயிக்கவேண்டும் என்கிற ஆசையை உடையவர்களுடைய ஜயத்திற்கு உபாயமாகிய நீதி, *என்று. புத்தியின் ஒருவித வ்யாபாரம் இங்கே சொல்லப்படுகிறது. லோகத்தில் ப்ரஸித்தமாகிய வார்த்தை சொல்லாமையாகிய மௌனம் மறைக்கவேண்டிய தில்லையாகையினால் மறைக்க வேண்டிய வஸ்துக்களுக்குள் என்று சொல்வது உசிதமல்ல.* மௌனம் *என்னும் பதம் ஆத்மா முதலியவற்றைப்பற்றிய வித்யை முதலியவைகளைச் சொல்வதாக இருந்தால் ப்ரஸித்தமான அர்த்தத்தை விடவேண்டிவரும், மௌனம் மறைக்கவேண்டிய வஸ்துக்களின் ஸ்வபாவமுமில்லை. அப்படி இருந்தால் ஸத்வம்ஸத்வவதாம், என்பதைப்போலச் சொல்லிவிடலாம் என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறார்*—'மறைக்க வேண்டியவைகளின் மறைப்புகளில்' *என்று மறைக்க வேண்டிய வஸ்துக்களை மறைக்கவேண்டியது என்பதும் மௌனம் ஆறு காதுகள் ஸம்பந்தப்படாமல் யோசனை செய்வதைவிட மறைப்பதற்குச்சிறந்த உபாயம் என்பதும், ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையினால் இவ்விடத்தில் பொதுவாக* ஸம்பந்தத்தைச் *சொல்லுகிற ஆரும் வேற்றுமை மறைக்கப்படுகிறது, மறைக்கிறது ஆகிற* ஸம்*பந்தத்தில் முடிவுபெறுகிறது. '𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌚𑍇𑌤𑌨𑌾' என்று ஜ்ஞானம்மாத்திரம் முன்பு சொல்லப்பட்டபடியினால், இங்கு '𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑌾𑌂' என்று புருஷார்த்தத்தை அடைவதற்குக் காரணமாகிய விசேஷமானஜ்ஞானம் சொல்லப்படுகிறது. '𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂' என்பதைப்போல.*

பா] எல்லா அவஸ்த்தைகளையுமுடையவைகளாகிய எல்லா ப்ராணிகளுக்கும் அந்தந்த அவஸ்த்தைகளுக்குக் காரணமாக நமக்குத் தெரிந்ததும் தெரியாததுமாகிய வஸ்து எதுவோ அது நான். எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கிற என்னைவிட்டுப் பிரிந்து எந்த ப்ராணிகளின் கூட்டம் இருக்குமோ அப்படிப்பட்டதில்லை. * ஸஹஸ்ரேஷூதாநாம்ஜாயகேஶவஸ்வபூ ஸர்வப்ரதாஸமஷ்டிதஃ ।' என்று ஆரம்பித்திருக்கிறபடியினால் 'நத்வஹம்விநாயஸ்ஸ்யாத்பூதம் ஸ்வசராசரம்' என்கிற இடத்திலும் ஆத்மாவாக இருப்பதே சொல்லப்படுகிறது. எல்லா அவஸ்த்தைகளையுமுடைய எல்லா வஸ்துக்களின் கூட்டமும் அவைகளுக்கு ஆத்மாவாக இருக்கிற என்னுடன் சேர்ந்தே இருக்கும் என்று அர்த்தம். இத்தால் இங்கே மற்ற வஸ்துக்களுடன் சேர்த்து தன்னைச் சொல்லியிருப்பதெல்லாவற்றிற்கும் அவைக

---

தா] '*ஸர்வபூதாநாம்பீஜம்' என்று ப்ரக்ருதி மாத்திரம் சொல்லப்படவில்லை, அது நேரில் எல்லா ப்ராணிகளுக்கும் காரணமில்லை ஆகையினால். நெல் முதலிய விரைகளும் சொல்லப்படவில்லை, அது 'ஸர்வபூத' என்னும் பதத்தினால், சொல்லப்படுகிற ஜங்கமங்களிடத்தில் அன்வயிக்காதாகையினால ஆகையினால் பொதுவாக கார்யதசையையுடையதாய் உபாதானமாகிய வஸ்துவெல்லாம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*—'எல்லா அவஸ்த்தைகளையுமுடையவைகளாகிய' *என்று ஆரம்பித்து. இத்தால் ப்ராக்ருத ஸ்ருஷ்டியும் நைமித்திக ஸ்ருஷ்டியும் 'ஸஹஸ்ரேஷு' என்றாரம்பித்து முன்பு சொல்லப்பட்டபடியினால் இவ்விடத்தில் நிக்யமான ஸ்ருஷ்டிக்குக் காரணங்களாகிய அந்தந்த வஸ்துக்களைச் சரீரமாக உடையவனாகையினால் அவைகளுக்கு காரணமாக இருக்கையும் சொல்லப்பட்டது. 'யஷ்ராபி' என்பதினால் அபிப்ராயத்திற்கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்*—'நமக்குத்தெரிந்ததும், தெரியாததுமாகிய' *என்று. தெரியாதது என்பதற்கு ஊஹித்துத் தெரிந்துகொள்ளக்கூடிய என்று அர்த்தம் 'நத்வஹம்' என்றிவை முதலிய இடங்களில் தன்னைவிட வேறு வஸ்து இல்லை என்பது விதிக்கப்படுகிறது என்கிற ப்ரமத்தை நீக்குவதற்காக விட்டுப்பிரிவதில்லை என்கிற அர்த்தம் சொல்லப்பட்டது. ஆரம்பத்திற்கு விரோதமாக முடிவிருக்காது என்கிற அபிப்ராயத்தினால சொல்லுகிறார்.*—'எல்லாவற்றிற்கும்' *என்று ஆரம்பித்து. ஆத்மாவாகஇருக்கிற தன்னைவிட்டுப் பிரியாமையை நிரூபிக்கிறார். 'ஸஹஸ்ரேஷூதா' என்றாரம்பிதது. இப்படி என்னை விட்டுப்பிரிந்திருக்கிற வஸ்து இல்லை என்று சொன்னதினால் ஏற்பட்ட தாத்பர்யத்தைக்காட்டுகிறார்*—'எல்லா அவஸ்

ளுக்குத்தான் ஆத்மாவாக இருப்பதே காரணம் என்று ப்ரகாசப்படுத்துகிறார். 39

𑌨𑌾𑌨𑍍𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌮𑌮 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑍀𑌨𑌾𑌂 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 |
𑌏𑌷 𑌤𑍂𑌦𑍍𑌦𑍇𑌶𑌤𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌵𑌿𑌭𑍂𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍋 𑌮𑌯𑌾 ||40

ப - ரை] 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ஶத்துருக்களை வதம் செய்வதையே ஸ்வபாவமாக உடைய அர்ஜுன, 𑌮𑌮 என்னுடைய, 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 மங்களங்களாகிய, 𑌵𑌿𑌭𑍂𑌤𑍀𑌨𑌾𑌂 விபூதிகளுக்கு, 𑌅𑌨𑍍𑌤𑌃 முடிவு. 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 இல்லை, 𑌏𑌷𑌃 இந்த, 𑌵𑌿𑌭𑍂𑌤𑍇𑌃 விபூதியின், 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌃 விஸ்தாரமானது, 𑌮𑌯𑌾 என்னால், 𑌉𑌦𑍍𑌦𑍇𑌶𑌤𑌃 சுருக்கமாக, 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 சொல்லப்பட்டது. 40

பா] என்னுடைய மங்களங்களாகிய விபூதிகளுக்கு முடிவில்லை, இந்த விபூதியின் விஸ்தாரம் என்னால் சில காரணங்களால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது, 40

𑌯𑌦𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍇𑌵 𑌵𑌾 |
𑌤𑌤𑍍𑌤𑌦𑍇𑌵𑌾𑌵𑌗𑌚𑍍𑌛 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌮 𑌤𑍇𑌜𑍋𑌂𑌽𑌶𑌸𑌮𑍍𑌭𑌵𑌮𑍍 || 41

---

தா] தைகளையுமுடைய' என்றாரம்பித்து. ஆரம்பத்திலும் முடிவிலும் தன்னைவிட்டுப் பிரிவதில்லை என்று சொல்லியிருப்பதற்குப் பகவானுடைய அபிப்ராயத்திலிருக்கும் ப்ரயோஜனத்தைச் சொல்லுகிறார்.— 'இத்தால்' என்றாரம்பித்து. சில இடங்களில் வஸ்துக்களல்லாத குணம் முதலியவைகளோடு சேர்த்துச்சொல்லியிருப்பதும் அவைகளுக்கு ஆதாரங்களான வஸ்துக்களும் பகவானுக்குச் சரீரங்களாகையினால் என்று முன்பே விவரமாக நம்மால் சொல்லப்பட்டது. 39

முன்பு சொல்லப்பட்டதாகிய முழுமையும் சொல்ல முடியாதென்பதையே இந்த ஸ்லோகத்தினால் ஞாபகப்படுத்துகிறார்— '𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂' என்னும் பதத்தினால் பரமபதத்தில இருக்கிற என்னுமர்த்தம் சொல்லப்படுகிறதாக இருந்தால் முன் எல்லா இடங்களிலுமிருக்கும் வஸ்துக்களையும், பரமபதத்திலில்லாத வஸ்துக்களையும் விவரமாகச் சொல்லியிருப்பது விரோதியாகும், ஆகையினால் 'மங்களங்களாகிய' என்று சொல்லப்பட்டது. '𑌵𑌿𑌭𑍂𑌤𑍀𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌶𑍍𑌶𑍁𑌭𑌾𑌃' என்றல்லவோ ஆரம்பிக்கப்பட்டது. 𑌉𑌦𑍍𑌦𑍇𑌶𑌤𑌃 என்பதற்கு ஏகதேசத்தினால் அதாவது மொத்தமான ஆகாரங்களினால் விபூதிகளை எடுத்து என்று அர்த்தம் அந்த அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—சிலகாரணங்களினால்' என்றாரம்பித்து.

ப — ரை] யத்யத் - எந்தெந்த, ஸத்வம் - ப்ராணி, விபூதிமத் - விபூதிகளையுடையதோ, ஶ்ரீமத் - காந்தியையுடையதோ, ஊர்ஜிதம் - உத்ஸாஹத்தை உடையதோ, தத் தத்-அததை, த்வம்-நீ, மம - என்னுடைய, தேஜோம்ஶஸம்பவம் - ஶக்தியினுடைய ஒருபாகத்தினு லுண்டானதாக, அவகச்ச - அறி. 41

பா] எந்தெந்த ப்ராணிகளின்கூட்டம் நியமிக்கப்படும் வஸ்துக்களைஉடையதோ காந்தியையுடையதோ அன்றிக்கே பணமும் தான்யமும் நிறைந்ததோ, நல்ல காரியங்களை ஆரம்பிப்பதில் ப்ரயத்தினம் செய்துகொண்டிருக்கிறதோ அததை என்னுடைய தேஜஸ்ஸினுடைய அம்சத்தினுலுண்டா

---

தா] 'யத்யத்' என்று ஆரம்பித்து, விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட அர்த்தத்தையே கீழ்ச்சொல்லாதவைகளும், அவஶ்யம் சொல்லவேண்டியவைகளுமான முக்கியமான விபூதிகளின் சுருக்கத்தைச் சொல்லி முடிக்கிறார்—இந்த ஶ்லோகத்தில். விபூதி என்னும் பதத்திற்கு இந்த ஸந்தர்ப்பத்தில் சொல்லிக்கொண்டுவரும் அர்த்தத்தை நினைத்துக்கொண்டு 'நியமிக்கப்படும் வஸ்துக்களை உடையதோ' என்று சொல்லப்பட்டது. ஸத்வ என்னும் பதம் இவ்விடத்தில் ஜந்துக்களைச் சொல்லுகிறது. இரட்டித்துச் சொல்லி இருப்பதின் அபிப்ராயத்தை ப்ரகாசப்படுத்துவதற்காக 'கூட்டம்' என்னும் பதம் 'விபூதிமத் ஶ்ரீமத்' என்னும் பதங்களுக்குப புனருக்தி தோஷத்தைப் பரிஹரிக்கிறார்—'காந்தியை உடையதோ' என்று. கோபலீவர் தந்யாயத்தினுல், நியமிக்கப்படும் வஸ்துக்களில் சிலவற்றைச்சொல்லுகிறபடியினுலாவது, புனருக்தி பரிஹரிக்கப்படுகிறது, என்கிற அபிப்பிராயத்தினுல்சொல்லுகிறார்—''பணமும் தான்யமும் நிறைந்ததோ' என்று. 'ஊர்ஜிதம்' என்பதினுல் சிறந்தது என்கிற பொதுவான அர்த்தம் சொல்லப்படும் பக்ஷத்தில் மற்றவைகளைச் சொல்லியிருப்பது வ்யர்த்தமாகிறபடியினுல் விஶேஷமான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'நல்லகாரியங்களை' என்றாரம்பித்து 'ஊர்ஜ்' என்னும் பதம் தளர்ச்சியில்லாமையினுல் எப்பொழுதும் உத்ஸாஹத்தையே ஸ்வபாவமாக உடைத்தா யிருக்கையைச் சொல்லுகிறது 'விபூதிமத்' (விபூதிகளையுடையது) என்பது பலத்தைஉடையது முதலியவைகளையும்குறிப்பதற்காக. 'மமதேஜோம்ஶஸம்பவம்' என்று சொல்லியிருக்கு மிடத்தில் திவ்யமங்கள விக்ரஹத்தின் தேஜஸ்ஸினுல் உண்டானது என்னும் அர்த்தம்தோன்றும் அதை நீக்குவதற்காக·ப்ரக்ருதத்தி லுபயோகமுள்ள 'தேஜஃ' என்னும் பதத்

னதாக அறி, தேஜஸ்ஸாவது அயலாரை நிராகரிக்கும் சக்தி. ஒருவராலும் நினைக்கமுடியாத சக்தியையுடைய என்னுடைய நியமனசக்தியின் ஒரு பாகத்தினாலுண்டானது என்று அர்த்தம். 41

அதவா ப³ஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந |
விஷ்டப்⁴யாஹமித³ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்தி²தோ ஜக³த் ||

ஸ்ரீ கண்ணபிரானருளிச் செய்த ஸ்ரீ பகவத்கீதையில் விபூதி

பத்தாவது அத்யாயம்

முற்றிற்று

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்³ரஹ்மணே நம:.



---

தினர்த்தத்தைச்சொல்லுகிறார்—'தேஜஸ்ஸாவது' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில், நிராகரிப்பதாவது என்ன? அதில் பாகம் எப்படி இருக்கும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்.—என்னுடைய, என்று ஆரம்பித்து. 'ஒருவராலும் நினைக்கமுடியாத' என்பதினால் நினைக்கக்கூடிய பாகத்தைத் தெரிவிப்பதற்காக '28' என்பதின் அபிப்ராயம் விவரிக்கப்பட்டது. இத்தால் எல்லாவற்றையும் பற்றியது, ஒருவராலும் தடுக்கமுடியாதது, வேறொருவராலும் செய்ய முடியாததைச் செய்யக்கூடியது, என்பது முதலியவை ஏற்பட்டன. எப்படி மலைகளை யெல்லாம் அசைக்கக்கூடிய ஶக்தியையுடைய பெரும் காற்றிற்குப் புற்களைத்தாக்குவது அல்பவேகத்தினாலேயே உண்டாகிறதோ, அப்படியே இவ்விடத்திலும் என்று தாத்பர்யம். எதற்குத் தேஜஸ்ஸின் அல்ப பாகம் காரணமோ அது தேஜோம்ஶஸம்ஸவம் என்னப்படுகிறது.

ப - ரை] அர்ஜுந - ஓ அர்ஜுன, தவ - உனக்கு, ஏதேந - இந்த, பஹுநா - அதிகமான, ஜ்ஞாதேந - ஞானத்தினுல், கிம் - என்ன ப்ரயோஜனம், அஹம் - நான், இதம் - இந்த, க்ருத்ஸ்நம் - எல்லா, ஜகத் - லோகத்தையும், ஏகாம்சேந - ஒருபாகத்தினுல், விஷ்டப்ய - தாங்கிக்கொண்டு, ஸ்தித: - இருக்கிறேன் 42

பா] அதிகமாகச் சொல்லப்படுகிற, இந்த ஞானத்தினுல், என்ன ப்ரயோஜனம், சேதனுசேதனமாகிய கார்யதசையை உடையதும் காரணதசையை உடையதுமான, ஸ்தூலமும் ஸூக்ஷ்மமாயுமிருக்கிற, இந்த எல்லா லோகமும், ஸ்வரூபம் உண்டாவதிலும், இருப்பதிலும், ப்ரவ்ருத்திகளின் வ்யத்யாஸங்களிலும் எப்படி என்னுடைய ஸங்கல்பத்தை மீறி நடக்

---

தா] "ஸமாப்த:" என்று ஆரம்பித்தது முடிக்கப்பட்டது. பிறகு சுருக்கமாக முக்யமானதும், முக்யமல்லாததுமான எல்லா விபூதிகளையும் இந்த ஸ்லோகத்தினுல் சேர்த்துச்சொல்லுகிருர்—சொல்லப்படுகிற என்பதினுல் "ஏதேந" என்கிறபதம் வார்த்தை முடியவில்லை, என்பதைச்சொல்லுகிறது, என்று தாத்பர்யம். விபூதியின் முடிவைத்தெரிந்து கொள்வதாகிய ப்ரயோஜனம் ஸித்திக்காது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'என்னப்ரயோஜனம் என்று. "இதம்" (இந்த) என்பதினுல் அந்தந்த ப்ரமாணங்களில் ஏற்பட்டபடி விசித்ரமாக இருக்கை சொல்லப்பட்டது. என்கிற அபிப்ராயத்தினுல், 'சேதனுசேதனமாகிய' என்று சொல்லப்பட்டது. கார்யதசையை உடைய' என்பது முதலியவாக்யத்தினுல் 'க்ருத்ஸ்நம்'' என்னும் பதத்தின் அபிப்ராயத்தில் ஏற்பட்டதை விவரித்திருக்கிறது. 'ஸ்தூலமும் ஸூக்ஷ்மமாயுமிருக்கிற' என்பவைகளுக்குக் கார்யதசை காரணதசை இரண்டிலும் முறையே அன்வயம் சொல்லவேண்டியது. 'ஸ்வரூபம்' என்பது முதலிய வாக்யத்தினுல் தாங்கிக்கொண்டிருப்பதற்கு ப்ரயோஜனத்தைச்சொல்லி இருக்கிறது. அநித்யமான வஸ்துக்களில் ஸ்வரூபம் உண்டாவதாவது அவைகளின் உத்பத்தி. நித்யமான வஸ்துக்களில் மற்ற வஸ்துக்களை விடவ்யத்யாஸம்,நித்யமான வஸ்துக்களின் ஸ்வரூபமும் பகவானுடையநித்யமானஸங்கல்பத்தினுல்ஏற்பட்டதல்லவா;இதுவும் முன்னமே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் ஸ்வரூபத்தின் ஒரு பாகத்தையும், அவதாரம் செய்திருக்கும் திவ்யமங்கள விக்ரஹத்தையும் விலக்குவதற்காகவும், நியமனத்தைச்சொல்லிக்கொண்டு வரும்

காதோ, அப்படியே என்னுடைய ப்ரபாவத்தினுடைய கோடியில் ஒருபாகத்தினால் தாங்கிக்கொண்டு இருக்கிறேன். அப்படியே பகவானாகிய பராஶரரால் 'யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம்ஸ்திதா' என்று சொல்லப்பட்டது. 42

*பகவத்ராமாநுஜன் என்னும் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த*
*ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தில் பத்தாவது அத்யாயம்*
*முற்றிற்று.*

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

---

*ஸந்தர்ப்பத்தை அனுஸரிதநும், என்னுடைய ப்ரபாவத்தினுடைய என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் ப்ரபாவம் என்னும் பதத்தினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட நியமன ஶக்தியே சொலலப்படுகிறது. ஆகையினால தேஜோம்ஶ ஸம்பவம் என்பதின் அர்த்தமே இங்கும் சொல்லப்படுகிறது 'ஏக' (ஒரு) என்னும் பதம் மிகவும் அல்பமாகிய என்பதைச் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'கோடியிலொருபங்கினால்' என்று சொல்லப்பட்டது. 'தாங்குவதாவது' இவ்விடத்தில், தன் இஷ்டப்படி நடப்பதில் நின்றும் தடுத்தல். அன்றிக்கே தனக்கு வஶமாக்கிக்கொள்ளுவதாகிய அதிஷ்டானம் செய்தலாகவுமாம. 'ஏகாம்ஶேந' என்பதற்குத் தன்னால் சொல்லப்பட்ட அர்த்தத்தை உறுதிப்படுத்துகிறார்—'அப்படியே' என்று ஆரம்பித்து [விஶ்வஶக்தி: ' ப்ரபஞ்சமாகிற ஶக்தி அதாவது அநந்தக் கார்யங்களுக்கு உபயோகமுள்ள விஶேஷணமாகிய ப்ரபஞ்சம் என்று அர்த்தம. தேஜோம்ஶ ஸம்பவம், என்பதற்குப் பிறகு சொல்லி இருப்பதினால், ஏகாம்ஶேந என்கிற இடத்திலிருக்கும் அம்ஶ என்கிற பதமும் அந்தத் தேஜோம்ஶத்தைச் சொல்லுகிறது என்பதே ந்யாயத்தை அனுஸரித்தது, என்று தாத்பர்யம். 42*

*ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராகிய ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த ஸ்ரீகீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் பத்தாவது அத்யாயம்*
*முற்றிற்று.*

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.*

ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்
ஸ்ரீ. ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.

ஸ்வகல்யாணகுணாநந்த்ய க்ருத்ஸ்ந ஸ்வாதீநதாமதி: |
பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்தா விஸ்தீர்ணா தஶமோதிதா || 14

ப - ரை] பக்த்யுத்பத்திவிவ்ருத்த்யர்தா—பக்தி-பக்தியின், உத்பத்தி - உண்டாவதையும், விவ்ருத்தி – வ்ருத்தியடைவதையும், அர்தா . ப்ரயோஜனமாக உடைய, ஸ்வகல்யாணகுணாநந்த்யக்ருத்ஸ்நஸ்வாதீநதாமதி:—ஸ்வ - தன்னுடைய, கல்யாணகுண - கல்யாணகுணங்கள், ஆநந்த்ய - எண்ணிறந்தவை என்பதைப்பற்றியதாயும், க்ருத்ஸ்நஸ்வாதீநதா – எல்லாம் தனக்கு வஶப்பட்டது என்பதைப்பற்றியதாயுமிருக்கிற மதி:-புத்தி, விஸ்தீர்ணா. விஸ்தாரமாக, தஶமோதிதா - பத்தாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. 14

ஸ்ரீமன் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த
கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை.

*இவ்விடத்தில் ஒன்பதாவது அத்யாயத்துடன் ஸங்கதியைத்தெரிவித்துக்கொண்டு பக்ஷத்தில "அங்கங்களோடே கூடிய பக்தியோகம சொல்லப்பட்டது. இப்பொழுது பக்தி உண்டாவதற்காகவும், அது விருத்தி அடைவதற்காகவும் பகவானுடைய தடங்கலில்லாத ஐஶ்வர்யம் முதலிய கல்யாண குணங்கள் எண்ணிறந்தவை என்பதைச சொலலுவதற்காகவும் எல்லாலோகமும் அவனுக்குச ஶரீரமாகையினுலே அவனையே ஆத்மாவாக உடையதாகையினுலே அவனுலேயே ப்ரவ்ருத்திப்பிக்கத்தககது என்பதும் விஸ்தாரமாகசசொல்லப்படுகிறது" என்று சொல்லியிருக்கிறது. பதினுாவது அத்யாயத்தின் ஆரம்பத்திலும 'இப்படி பக்தியோகம் உண்டாவதற்காகவும், அது வ்ருத்தியடைவதற காகவும், மற்றெல்லா வஸ்துககளையும் விடசசிறந்ததாயும் ஸ்வபாவததினுலேயே ஏற்பட்டதாயும் பகவானுக்கே அஸாதாரணமாயுமிருககிற கல்யாணகுணங்களுடன் பகவான் எல்லாவற்றையும் சரீரமாக உடையவன் என்பதும், ஆகையினுலேயே அவனைத்தவிரமற்ற சேதனுசேதனமாகிய எல்லா வஸ்துக்களின்கூட்டமும் அவனுக்குச சரீரமாகையினுல அவனுக்கு வஶப்பட்ட ஸ்வரூபம் ஸ்த்திதி ப்ரவ்ருத்தி இவைகளை உடையது, என்பதும் சொல்லப்பட்டது. இபபடிப்பட்ட பகவானுக்கே அஸாதாரணமான ஸ்வபாவத்தையும், மற்றெல்லாம் அவனுக்கு வஶபபட்ட ஸ்வரூபம், ஸ்திதிப்ரவ்ருததி இவைகளை உடையது, எனபதையும் பகவானிடத்திலிருநது கேட்டு இது இப்படியே என்று நிஶ்சயம் செய்து, அபபடிப்பட்ட பகவானை நேரில் பார்க்கவேண்டும் என்கிற ஆசையையுடைய அர்ஜுனன் சொன்னுன்." என்று சொல்லப்பட்டது.*

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டு.

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*

எல்லையில்லாத தன்சீலமுமின்ன முதக்கடலும்
எல்லையில்லாத விபூதியெல்லாம் தனதா னமையும்
எல்லையில்லாத பத்தி யெழுவிக்கத் திருவருளால்
எல்லையி லீசனியம் பினனிந்திரன் மைந்தனுக்கே. 11

ப - ரை] எல்லையில்லாத - எண்ணிறந்த, தன் - தன்னுடைய, சீலமும் - ஸ்வபாவத்தையும், இன்னமுதக்கடலும் - இன் — போக்கியமான, அமுதக்கடலும் — அமிருத ஸமுத்திரத்தையும், எல்லையில்லாத எல்லாம் - அளவிடக்கூடாத எல்லாவஸ்துக்களும், தனது - தன்னுடைய, விபூதி ஆனமையும் - விபூதியாக இருப்பதையும், திருவருளால் - உத்தமமான க்ருபையினால், எல்லை இல்லாத - அளவில்லாத, பத்தி - பக்தியை, எழுவிக்க - உண்டாக்குவதற்காகவும் விருத்தி செய்வதற்காகவும், எல்லையில் - தனக்குமேற்பட்டவர்கள் ஒருவருமில்லாத, ஈசன் - பகவான், இந்திரன் மைந்தனுக்கு - இந்திரன் பிள்ளையாகிய அர்ஜுனனுக்கு, இயம்பினன் சொன்னான்.

*இதில் எல்லையில்லாத தன் சீலமு மின்ன முதக்கடலும் என்பதினால் ஶ்லோகத்தில் 'ஸுக்ஷ்ணாரஸுணா நஜே' என்பதின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. சீலமும் என்பதினால் 'ஈஹோதாரஸுரகெஸ' என்கிற ஶ்லோகத்தின் பாஷ்யத்தி லருளிச்செய்த எல்லா லோகங்களையும் ஸ்ருஷ்டிப்பவனாயிருக்கை முதலியதாகிய 'யொமு என்கிறபதத்தினர்த்தமும், இன்ன முதக்கடலும் என்பதினால் 'வஸதாஂவிஹூதிஂ யொமஂவ' என்கிற ஶ்லோகத்தின் பாஷ்யத்தில் யோகம் என்னும் பதத்திற்கு அர்த்தமாக அருளிச்செய்த கல்யாணகுணங்களும் சொல்லப்பட்டன. இந்த இரண்டிடங்களிலும் இரண்டும் அர்த்தங்கள் என்று 19 வது ஶ்லோகத்தின் தாத்பர்ய சந்திரிகையில் தம்மாலேயே அருளிச் செய்யப்பட்டிருக்கிறபடியினால் இவை இரண்டும் 'யொமு' என்னும் பதத்திற்கு அர்த்தங்கள் என்று காட்டுவதற்காக இவை தனித்துச் சொல்லப்பட்டன. அன்றிக்கே 'கொநஹிநு ஸாஂவஸ்தஂ ஜொகெஸுணவாநு கஸ்ூ வீபவாநு' என்பதைப்போல முதலில் ஆஶ்ரிதர்களுக்கு அதிக உபாகாரமாகிய முக்கியமான ஸௌஶீல்யத்தைச் சொல்லிப் பிறகு மற்ற குணங்களை இன்ன முதக்கடலும்*

என்பதினால் சொல்லி யிருக்கிறதாகவுமாம் தன் என்பதினால் இந்த குணங்கள் அம்ருதம்போல போக்யமாக இருப்பதற்குக் காரணம், ஶ்ரோணாஸ்த்ருஜ்ஞாநவத் ஸ்ருதய உதகஸூதயாஸோஹீஹஸ்ய யாதா: என்று சொல்லுகிறபடியே தன்னுடையவைகளாக இருப்பதே என்கிற அபிப்ராயத்தைக் காட்டுகிற 'விஹஸிதம் யொமஂவ ஐஐ' 'விஹஸிதீராதநஸ்தூஹா:' என்பவைகளின் அர்த்தம் குறிக்கப்பட்டது. இன்னமுதக்கடலாம் என்னும் பாடம் அப்போது அம்ருதஸமுத்திரம் போல போக்யமானஎன்றுஅர்த்தம்இது காகாக்ஷிந்யாயத்தினால ஸிலத்திலும் மேலே சொல்லப்போகிற விபூதிகளிலும் அன்வயிக்கிறது. இத்தால் விஷ்ணோணாதெநாயொமஂ விஹஸிதம் வஜநாஶூந । ஸஹஸ: கஶயத் வ்ஹிஷ்டு ஸ்ஹ்ணெதா நாஷ்டிஐ ஐ்தம் என்கிற ஶலோகத்தில் விபூதியையும் யோகத்தையும் அம்ருதம் என்று சொலலியிருப்பதின் தாத்பர்யம் சொல்லப்பட்டது. எல்லையில்லாத என்பதினால் 'நாஷ்த்ஜொவிஷ்யஸ்ஐ' 'நெஜொஷ்டிஐஜிவ்யா நாம விஹஸிதீநாம' என்று சொல்லியிருப்பது நினைக்கப்பட்டது.எல்லையில்லாத பத்தி என்பதினால் 'நேரிய காதலன் பிலின்பின் தேறலமுத வெள்ளத்தானும் சிறப்பை விட்டு ஒரு பொருட்கசைவோரசைக திருவொடுமருவிய வியற்கை மாயாப்பெருவிறலுலகம் மூன்றொடு நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே' என்றும் 'நின்புகழில் வைகுந்தம் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்தமென்றருளும்வான்' என்றுச் சொல்லுகிறபடியே மோக்ஷத்தையும் காற்கடைக்கொள்ளும்படியான பக்தியின்ஸாகாதிசயம் சொல்லப்படுகிறது. எல்லையில்லாத தனக்குமேற்பட்ட ஸாகம் ஒன்றுமில்லாத என்று அர்த்தமாகவுமாம் பத்தி எழுவிக்க என்பதினால ஜக்ஷூத்திவிவஜஷ்யஞா என்பதின் அர்த்தம் சொல்லப்பட்டது. எழுவதாவது உண்டாகுதலும் வ்ருத்தி அடைதலும் அருளுக்குத்திருவாவது. 'கநவாஸக்ஷாதி ஶணா ஐ தெவஸபோயவிஸவிதாஜொகா ‌। ஷாயநி வஷஜிஹீஸா' என்கிறபடியே எம்பெருமானையுமவன் குணங்களையும் தனக்குவசமாக்கிக் கொண்டிருப்பதினால் 'காஶணெகஹ ஶணெஷவஸாவடு ஜெஹீ' என்கிறபடியே அவனுடைய குணங்களுக்குள் ஆதிராஜ்யம் பெற்றதாயும், 'வஜஷஜிநிநாயஶணா: ஜ்ஞாநவெஜெஜஷடுவியடுஸக்தி ஐவா: ஜொஷாஹவெபஜெதெயதிநாஷியெகயா விநாஹஸிதா:' என்கிற படியே தன்னாலே அவனுடைய மற்றகுணங்களும் ஆஶ்ரிதர்களுக்குக் கார்யஸாதகங்களாகும்படியான ஏற்றத்தை உடையதாயும் 'க்ஷயாவ

யடுவாஜயஸ்' என்கிறபடி ஆஶ்ரிதரக்ஷணத்திற்கு முக்யகாரணமாயும் இருக்கை. ஆகையினாலேயே 'வ்யவஸாயத்வராணாம்நாயன' அனுக்ரஹமே விஞ்சியிருக்கும். ஈஶ்வரத்வம் கழற்றவொண்ணாமையாலே ஸ்வரூபத்தைப்பற்றியிருக்கும் என்று சொல்லியிருக்கிறார்கள். எல்லையிலீசன் என்பதினால் மத்த: பரதரம் நாந்யத் என்கிறபடியே தனக்குமேற்பட்டதொன்றுமில்லாமலிருக்கை சொல்லப்படுகிறது.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீ பகவத்கீதை

## பதினோராவது அத்யாயம்.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே பகவத்ராமாநுஜாய நம:

பா] இப்படி பக்தி யோகம் உண்டாவதற்காகவும், அது வ்ருத்திஅடைவதற்காகவும்,மற்றெல்லாவற்றையும் விட வேறுபட்டதாயும், ஸ்வபாவத்திலேயே ஏற்பட்டதாயும், பகவானுக்கே அஸாதாரணமாயும் இருக்கிற கல்யாணகுணங்களின் கூட்டத்துடன் கூட பகவான் எல்லாவற்றிற்கும் ஆத்மா, என்பதும் அவனைத் தவிர மற்றெல்லாச் சேதநாசேதநங்களாகிய வஸ்துக்களின்கூட்டமும் அவனுக்குச்சரீரமாகையினால் அவனுக்குஅடங்

---

தா] *விஶ்வரூபாத்யாயத்திற்கு அவதாரிகை சொல்லுவதற்காக விபூதி அத்யாயத்தின் அர்த்தத்தைச் சுருக்கிச் சொல்லுகிறார்— 'இப்படி' என்று ஆரம்பித்து.* 'பக்தி யோகம் உண்டாவதற்காகவும், அது விருத்தி அடைவதற்காகவும்' *என்னும் ப்ரயோஜனத்தைச் சொல்லி இருப்பதினால் பிறகு அர்ஜுனனுக்குப் பார்க்கவேண்டும் எனகிற ஆசை பக்தி வ்ருத்தி அடைந்ததினால் உண்டானது, என்றுகாட்டப்பட்டது.* 'மற்றெல்லாவற்றையும் விட வேறுபட்டதாயும்' *என்பதற்கு மற்றெல்லா வஸ்துக்களையும் விட வ்யத்யாஸத்தைக் காட்டக்கூடிய, என்று அர்த்தம். அன்றிக்கே மற்றெல்லா வஸ்துக்களின் ஸ்வபாவங்களை விட வேறுபட்டதாகவும், என்று அர்த்தமாகவுமாம். இத்தால் எல்லையில்லாத மேன்மையை உடையது, என்பது சொல்லப்பட்டதாகிறது. வேறொருவருக்கும் ஸாதாரணமில்லாததும் ஸ்வபாத்தில் ஏற்பட்டதும், எல்லை இல்லாத மேன்மையை உடையதுமாகிய, என்று சொல்லப்பட்டதே இவ்விடத்தில் வரிசையை மாற்றிச்சொல்லி இருப்பதாகத் தோன்றுகிறபடியினால்.* 'மற்றெல்லாவற்றையும் விட வேறு பட்டதாயும், பகவானுக்கே அஸாதாரணமாயும்' *என்பவைகள் ஒன்றுக்கொன்று காரணமாகவும் காரியமாகவும் அன்வயிக்கிறபடியினாலும்ஸமமானவர்களும்மேற்பட்டவர்களும்இல்லை, என்பதில் தாத்பர்யமானபடியினாலும், இவைகள் வ்யர்த்தங்கள் என்பது இல்லை. கேட்கப்பட்ட அர்த்தத்தின் நிஶ்சயத்தினால் உண்டாகிய பக்தியின் வ்ருத்திக்கு ப்ரயோஜனமாகிய பார்க்கவேண்டும் என்கிற ஆசையைக்காரணமாக உடைய மேல் அத்யாயத்திற்கு உபோத்காதமாகிய அர்ஜுனன் வார்த்தைக்கு அவதாரிகை சொல்லுகிறார்—*

கிய ஸ்வரூபம், ஸ்திதி, ப்ரவ்ருத்தி இவைகளைஉடையது, என்றும் சொல்லப்பட்டது, இப்படிப்பட்ட பகவானுக்கு அஸதாரணமான ஸ்வபாவத்தையும்,எல்லாம் அவனுக்கு வசப்பட்ட ஸ்வரூபத்தையும் ஸ்திதியையும், ப்ரவ்ருத்தியையும் உடையது என்பதையும், பகவானிடத்திலிருந்து கேட்டு இது இப்படியே, என்று நிச்சயம்செய்து அப்படிப்பட்ட பகவானை நேரில் பார்க்கவேண்டும் என்கிற ஆசையை உடைய அர்ஜுனன் சொன்னான். அப்படியே பகவானுடைய அனுக்கிரஹத்தினால் மேலே பார்க்கப் போகிறான். 'ஸர்வாச்சர்யமயம் தேவம் அநந்தம் விச்வதோமுகம் । தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் ப்ரவிபக்தமநேகதா' என்றல்லவோ மேலே சொல்லப் போகிறார்.

---

'இப்படிப்பட்ட' என்று ஆரம்பித்து. 'இப்படிப்பட்ட' என்பதற்கு எல்லாவஸ்துக்களையும்விட மேற்பட்டதாகிய, என்று அர்த்தம். 'இந்த'என்பதற்குக்கீழ்ச் சொல்லியவிதமான என்று அர்த்தம். 'பகவானிடத்தில் இருந்து' என்பதினால் நிச்சயமுண்டாவதற்குக் காரணமாகிய,உண்மையை அறிந்தவன் என்பதும், அறிந்தபடிக்கே சொன்னான் என்பதும் காட்டப்பட்டது. வேறொரு ஆசார்யனிடத்தில் இருந்து கேட்டிருந்தால் பார்க்கவேண்டும் என்கிற ஆசை இருந்தபோதிலும் பார்க்கவேண்டும் என்று பிரார்த்திப்பது பொருந்ாதல்லவா? என்றும் தாத்பர்யம் 'ஏவமேதத்' என்கிற ச்லோகத்தின் அர்த்தத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'இது இப்படியே என்று நிச்சயம் செய்து' என்று. 'ஏவமேதத்யதாத்த' என்று முன் சொல்லியதை ஒப்புக்கொண்டு 'த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம்' *என்று வேறு வஸ்துவினுடையரூபவிசேஷத்தைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசையினால் சொல்லி இருப்பதைப்போலத் தோன்றுகிறதே ஆகையினால் அப்படிப்பட்ட பகவானை நேரில் பார்க்கவேண்டும் என்கிற ஆசையை உடைய, என்று, எப்படிச் சொல்லப்படுகிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்.—'அப்படியே' என்று ஆரம்பித்து. அப்படியே என்பதற்குக் கீழ் கேட்ட மாதிரியே என்று அர்த்தம். இத்தையேவிவரிக்கிறார்—'ஸர்வாச்சர்ய'என்றுஆரம்பித்து. 'அநேகவக்த்ரநயநம்' என்பது முதலாக 'விஷ்வக்ஸேநோ க்ருத்ஸ்னம் ஸர்வம் ப்ரவிபக்தமநேகதா' என்பது வரையிலும் சொல்லப்பட்டஅர்த்தம் ஒருவித விசேஷமான விக்ரஹத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது என்றல்லவோ ஸ்பஷ்டமாகத் தோன்றுகிறது, என்று தாத்பர்யம்.

பா-அ] 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 — அர்ஜுனன் சொன்னான்.

𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍 |
𑌯𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑌚𑌸𑍍𑌤𑍇𑌨 𑌮𑍋𑌹𑍋𑌯𑌂 𑌵𑌿𑌗𑌤𑍋 𑌮𑌮 || 1

ப — ரை] 𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯 - என்னை அனுக்கிரஹிப்பதற்காக, 𑌪𑌰𑌮𑌂 - உத்தமமான, 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 - ரஹஸ்யமாகிய, 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌂 - ஆத்மாவைப்பற்றியது, என்று பெயரை உடைய, 𑌯𑌤𑍍 - எந்த, 𑌵𑌚𑌃 - வார்த்தை- 𑌤𑍍𑌵𑌯𑌾 உன்னால், 𑌉𑌕𑍍𑌤𑌂 - சொல்லப்பட்டதோ, 𑌤𑍇𑌨 - அதினால், 𑌅𑌯𑌂, இந்த, 𑌮𑌮 - என்னுடைய, 𑌮𑍋𑌹𑌃 - அஜ்ஞானம், 𑌵𑌿𑌗𑌤𑌃 - நீங்கிற்று. 1

பா] தேஹமே ஆத்மா என்கிற அபிமானமாகிய அஜ்ஞானத்தினால், மயக்கப்பட்டிருக்கிற என்னை அனுக்கிரஹிப்பதாகிய ஒருப்ரயோஜனத்திற்காக

---

தா] இவ்விடத்தில் நேராகப்பார்க்க வேண்டும் என்று ப்ரார்த்திப்பதற்காக "𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯" என்று ஆரம்பித்து மூன்று ஶ்லோகங்களினால் தான் க்ருதஜ்ஞனாக இருப்பதையும், ஆஸ்திகனாக இருப்பதையும், பக்தியை உடையவனாக இருப்பதையும் காட்டுகிறான். அதில் முதல் ஶ்லோகத்தினால் அத்தியாத்ம என்னும் பதத்தின் ஸ்வாரஸ்யத்தினாலும், '𑌭𑌵𑌾𑌪𑍍𑌯𑌯𑍌' என்கிற ஶ்லோகத்தினால் ஏழாவது முதலான அத்தியாயங்களின் அர்த்தங்களைத் தனித்துச்சொல்லி இருக்கிறபடியினாலும், ஆத்மாவின் உண்மையான ஸ்வபாவத்தையும் அதைப்பார்ப்பதற்குஉபாயத்தைக்கேட்டதினுடையவும் அதின்ப்ரயோஜனத்தினுடையவும் அனுவாதம் செய்யப்படுகிறது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தேஹமே ஆத்மா' என்று ஆரம்பித்து. "𑌮𑍋𑌹𑌃, 𑌵𑌿𑌗𑌤𑌃' என்று மேலே சொல்லி இருப்பதினால் "𑌮𑌮" என்பதினால், மோஹத்தை அடைந்திருந்த ஸ்வரூபம் சொல்லப்படுகிறது. என்கிற அபிப்ராயத்தினால், 'மயக்கப்பட்டிருக்கிற' என்கிற வரையில் சொல்லப்பட்டது. '𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯" என்பதினால், பகவானால் இதுவரையிலும் அடையப்படாததும் இனி அடையவேண்டியதுமாகியப் பிரயோஜனம் வேறொன்றுமில்லை. என்பது அபிப்ராயமாகக் கொள்ளப்பட்டது. என்று சொல்லுகிறார்—என்னை அனுக்கிரஹிப்பதாகிய, ஒரு ப்ரயோஜனத்திற்காக' என்று. யுத்தத்தில் உத்ஸாஹத்தை உண்டுபண்ணுவதற்காக மாத்திரம் சொல்லப்பட்டது, என்கிற ஸந்தேஹமும் இத்தால் விலக்கப்பட்டது. '𑌪𑌰𑌮𑌂' என்கிற பதத்தோடுசேர்ந்த '𑌗𑍁𑌹𑍍𑌯𑌂' என்கிற பதத்தினால் "𑌮𑍌𑌨𑌂𑌚𑍈𑌵𑌾𑌸𑍍𑌮𑌿𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑌾𑌂" என்று கீழே சொன்ன குஹ்யம் சொல்லப்படுகிறது' என்கிற ப்ரமத்தை விலக்குவ

உத்தமமான ரஹஸ்யமான ஆத்மாவின் விஷயத்தில் சொல்லவேண்டிய தாகிய, 'மத்அனுக்ரஹாய' என்று ஆரம்பித்து 'த்வத்த: கமலபத்ராக்ஷ' என்கிற வரையில் எந்த வார்த்தை உம்மால் சொல்லப்பட்டதோ அதினால் இந்த என்னுடைய ஆத்மாவைப்பற்றிய அஜ்ஞானமெல்லாம் வெகு தூரத்தில் தள்ளப்பட்டது. 1

பா] அப்படியே.

பவாப்யயௌ ஹி பூதாநாம் ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா ।
த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் ॥ 2

ப - ரை] கமலபத்ராக்ஷ - தாமரைப்புஷ்பங்களின் இதழ்களைப்போன்ற கண்களை உடைய க்ருஷ்ணா, பூதாநாம் - எல்லாப் பிராணிகளுக்கும், த்வத்த: - உம்மிடத்திலிருந்து, பவாப்யயௌ - உத்பத்தியும் லயமும், மயா - என்னால், விஸ்தரஶ: - விஸ்தாரமாக, ஶ்ருதௌ ஹி - கேட்கப்பட்டதுகள் அல்லவோ, அவ்யயம் - அழிவில்லாத, மாஹாத்ம்யமபி - (உம்முடைய) மஹிமையும், (கேட்கப்பட்டது). 2

---

தற்காக 'ரஹஸ்யமான' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. மிகவும் ரஹஸ்யமாகிய பக்தியோகத்தைச் சேர்ந்ததாகையினால் பரமம் என்கிற விஶேஷணம் சொல்லப்பட்டது என்பது, ஆதரத்துடன் 'உத்தமமான' என்று வ்யாக்யானம் செய்ததினால் காட்டப்பட்டது. ஆத்மாவைப்பற்றிச் சொல்லுகிறபடியினால் வார்த்தை அத்யாத்மம்என்னப்படுகிறது. என்று அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'ஆத்மாவின் விஷயத்தில் சொல்லவேண்டியதாகிய' என்று சொல்லப்பட்டது. உபோத்காதத்தைவிடவும், நடு ஆறு அத்தியாயங்களைப் பிரஸ்தாவிக்கிற ஶ்லோகங்களை விடவும், தனியாகப் பிரித்து அத்யாத்மம் என்பதினால் அனுவாதம் செய்யப்படுகிற ஜீவாத்மாவைப்பற்றிச் சொல்லுகிற பாகத்தைச் சொல்லுகிறார்—'மதனுக்ரஹாய' என்று ஆரம்பித்து. 'அத்யாத்மஸம்ஜ்ஞிதம்' என்பதை அனுஸரித்து 'அயம்' (இந்த) என்று நேராகச் சொல்லி இருப்பதின் அபிப்ராயத்தில் ஏற்பட்ட அர்த்தம், என்னுடைய ஆத்மாவைப்பற்றிய என்று சொல்லப்பட்டது. 'வி' என்னும் உபஸர்க்கத்தோடு சேர்ந்த 'கத:' என்னும்தாதுவினால் வாஸனையுடனும் மிகுதி இல்லாமல் நாஶம் அடைந்தது என்று சொல்லப்படுகிறது, என்று காட்டுவதற்காக, 'எல்லாம்' என்னும் பதம். 'வெகு தூரத்தில்தள்ளப்பட்டது' என்பதற்கு வாஸனையும் நீக்கப்பட்டபடியினால் மறுபடியும் உண்டாகாமல் இருக்கும்படி நாஶம் செய்யப்பட்டது. என்று அர்த்தம். 1

பா] அப்படியே ஏழாவது அத்யாயம் முதல் பத்தாவது அத்யாயம்வரை யிலும் உம்மைத் தவிர மற்றெல்லாப் பிராணிகளுக்கும் பரமாத்மாவாகிய உம்மிடத்திலிருந்து உத்பத்தியும் ப்ரளயமும் (உண்டாகின்றன) என்று விஸ்தாரமாய்என்னால்கேட்கப்பட்டது. தாமரஸப்புஷ்பங்களின்இதழ்கள்

---

தா] 'ஹவாவ்யயௌஹி' என்பது ப்ரஸ்தாவிக்கப்போகிறதற்குக் காரணம் என்கிற அர்த்தத்தை விலக்கி வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காகச சொல்லுகிறார்—'அப்படியே' என்று. ஏழா வது அத்தியாயம் முதல் பத்தாவது அத்தியாயம் வரையில் என்று பாஷ்யகாரர் தம்மால் நினைக்கப்பட்ட அத்தியாயத்தைச் சொல்லிஇருக் கிறபடியினால், அவ்விடத்தில் இருக்கும் வார்த்தைகளைக் குறிக்கிறார். பஹுவசனத்திற்குச் சுருக்கமில்லாமையினால் ஏற்பட்டதும் 'ஸஹம் க்ருத்ஸ்ந' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டதுமான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'உம்மைத்தவிர' என்று ஆரம்பித்து. மனுஷ்யன் என் கிற ப்ரமம் நிவ்ருத்தியான அர்ஜுனனுடைய வார்த்தை யாகையினால் த்வத்தஃ என்னும் பதத்தினால் உத்பத்தி அடைவதற்கும், ப்ரளயம் அடைவதற்கும் காரணமாகிய ஸ்வபாவத்தை உடையவனாக இருக்கை சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்—'பரமாத்மாவாகிய' என்று சொல்லப்பட்டது. 'ஸவ்யயஃ' என்னும் பதம் 'த்வத்தஃ' என்கிற இடத்தில் இருக்கும் ஐந்தாம் வேற்றுமையோடு பொருந்தா தாகையி னால் 'ஹவாவ்யயஃ' என்கிற பதத்தினால் ஸம்ஸாரமும் மோக்ஷமும் சொல்லப்படுகின்றன, என்கிற ப்ரமம் உண்டாகு மாகையினால அதை விலக்குவதற்காக உத்பத்தியும் ப்ரளயமும் என்று சொல்லப்பட்டது. நிமித்த காரணம் உபாதான காரணம் இரண்டுக்கும் பொதுவாகிய கார ணம் என்னும் அர்த்தத்தை மாத்திரம் இந்த ஐந்தாம் வேற்றுமை சொல்லுகிற தாகையினால் 'ஸவ்யயஃ' என்னும் பதம் அத்தோடு அன் வயிக்கும். உம்மிடத்திலிருந்து கேட்கப்பட்டது என்று அன்வயம் சொல்வதோ வெனில் அல்பமான ப்ரயோஜனத்தை உடையது, என்று தாத்பர்யம் 'கமலபத்ராக்ஷ' என்பதினால் அந்தராதித்ய வித்யை முதலிய இடங்களில் சொல்லபபட்ட தாமரைப் பூக்களைப்போ ன்ற கண்களை உடைய பரக்ருதியின் விகாரமில்லாத திவ்ய விக்ர ஹத்தை உடையவனாக இருக்கை இந்த அவதாரத்திலும் ஸ்பஷ் டமாகக் காணப்படுகிறது என்று காட்டப்பட்டது. தாமரைப்பூக்களைப் போன்ற கண்களை உடைய புருஷனுக்கே எல்லா லோகங்களுக்கும் எல்லா இஷ்டங்களுக்கும் ஈச்வரனாக இருக்கை முதலிய அழிவில்லாத

போன்ற கண்களை உடைய க்ருஷ்ண உம்முடையதாகிய அழிவில்லாத சேதனாசேதனங்களாகிய எல்லா வஸ்துக்களுக்கும் ஶேஷியாக இருக்கை ஞானம் பலம் முதலிய கல்யாணகுணங்களின் கூட்டங்களினால் நீரே மேலானவர் என்பதும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கை, நினைத்தல், இமைக்கொட்டுதல் முதலிய எல்லா வ்யாபாரங்களிலும் நீரேப் பிரவர்த்திப்பிக்கிறீர் என்பதும்,என்றிவை முதலிய அளவில்லாதமஹிமையும் கேட்கப்பட்டது. 'ஹி' என்னும் பதம் மேல் சொல்லப்போகிற பார்க்க வேண்டுமே என்கிற ஆசையைக் காட்டுகிறது. 2

ஏவமேதத்³யதா²த்த² த்வமாத்மாநம் பரமேஶ்வர।
த்³ரஷ்டுமிச்சா²மி தே ரூபமைஶ்வரம் புருஷோத்தம ॥ 3

ப-ரை] பரமேஶ்வர பரமேஶ்வரனாகிய, புருஷோத்தம புருஷஶ்ரேஷ்டனாகிய க்ருஷ்ண, ஆத்மாநம் உம்மை, த்வம் நீர், யதா² எப்படி, ஆத்த² சொன்னீரோ, ஏதத் இது, ஏவம் இப்படியே, தே உம்முடைய ஐஶ்வரம் பகவானுடையதாகிய, ரூபம் ரூபத்தை, த்³ரஷ்டும் பார்ப்பதற்கு, இச்சா²மி ஆசைப்படுகிறேன், 3

பா] ஓ பரமேஶ்வரனாகிய க்ருஷ்ண நீர் உம்மை எப்படிச் சொல்லுகிறீ

---

*மஹிமை, ஶ்ருதியில் அந்த வித்யையைச் சொல்லுமிடத்தில் சொல்லப் படுகிறது. மஹிமை என்கிற இடத்தில், 'த்வத்த꞉' என்பதை 'தவ' (உம்முடைய) என்று மாற்றிச்சேர்த்துக் கொள்ளவேண்டியது. ''அவ்யய'' என்னும்பதத்தினால்காலத்தினாலும்,விஷயங்களினாலும்கணக்கினாலும், மேன்மையினாலும், தனக்கு மேற்பட்டவனில்லை என்று முன்பு சொன்னதே இவ்விடத்திலும் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால்— 'அழிவில்லாத' என்று ஆரம்பித்து,அளவில்லாத' என்கிற வரையிலும் சொல்லப்பட்டது. ''ஹ்ரீராவ꞉' தத꞉ பரதரம் நாந்யத், நியமநம், ப்ராஜ்ஞாநம்'' என்பவைமுதலியவைகளினால் இந்த ஶேஷியாக இருக்கை முதலியது முன்புவிவரமாகச் சொல்லப்பட்டது. ''ஹி'' என்னும் பதம் மேலே சொல்லப்போகிற பார்க்கவேண்டுமே என்கிற ஆசையைக்காட்டுகிறது, என்பதற்குக் காரணமாயிருக்கை ப்ரஸித்தி முதலிய அர்த்தங்கள் இங்கே பொருந்தாதாகையினால் ப்ரகிருதத்தில் பொருந்தக்கூடிய அர்த்தமிதுவே என்று தாத்பர்யம்.* 2

*தா] பரமேஶ்வர, என்பதினால், வார்த்தையின் அர்த்தத்தை நம்புவதற்குக் காரணமாகிய உண்மையைக் கண்டறிகையும், அறிந்தபடி சொல்லுகையும், முதலியது சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஓ பரமேஶ்வரனாகிய க்ருஷ்ண' என்று ஆரம்*

ரோ, இது இப்படியே தான் என்று நிஶ்சயிக்கப்பட்டது. ஆஶ்ரயித்தவர்களிடத்தில் ப்ரீதிக்கு ஸமுத்திரமாகிய க்ருஷ்ணு உமக்கே அஸாதாரணமாயுள்ள, எல்லாவற்றையும் நியமனம் செய்வதிலும் காப்பதிலும், ஸ்ருஷ்டிப்பதிலும், ஸம்ஹாரம் செய்வதிலும், தாங்கிக்கோண்டிருப்பதிலும், கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாக இருப்பதிலும், எல்லாவற்றையும் விடமேலானதாக இருப்பதிலும் மற்றெல்லாவற்றையும் விடவேறு

---

*பித்து. இத்தைப் பிரகாஶப்படுத்துவதற்காகத்தான் ஒப்புக்கொண்டது மாத்திரம் அர்த்தம் என்பதை விலக்கிக் கேட்டது உறுதியென்று அறியப்பட்டது, என்பதற்காகச் சொல்லுகிறார்—'இது இப்படியே என்று நிஶ்சயிக்கப்பட்டது' என்று. ஆஶ்ரயித்த ஜனங்களிடத்தில் தோஷங்களைப் பார்க்கிறவர்கள் தாழ்ந்த புருஷர்கள் என்றல்லவோ சொல்லுகிறார்கள். ஆகையினால் இவ்விடத்தில் பார்க்கவேண்டும் என்கிற ஆஶையை உடைய தன்னிடத்தில் இருக்கும் தோஷங்களை அனுதாபம் செய்வதாகிய மேலான புருஷத்தன்மை 'புருஷோத்தம' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'ஆஶ்ரிதர்களிடத்தில் ப்ரீதிக்கு ஸமுத்திரமாகிய' என்று சொல்லப்பட்டது. 'ப்ருஷ, ஸேசநே' அதிகமாகக் கொடுக்கிறான், என்கிற வ்யுத்பத்தி இவ்விடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. 'தேவிஶ்வரூபம்' என்று சொல்லப்போகிறது, ஞாபகம் செய்யப்பட்டதாகவுமாம். இப்படி பரத்வமும், ஸௌலப்யமும், இந்த இரண்டுபெயர்களினாலும் சொல்லப்பட்டன. 'தே' என்று சொல்லி இருந்தபோதிலும் 'ஐஶ்வரம்' என்றுசொல்லி இருப்பது, ஈஶ்வரனுக இருக்கும் ஸ்வபாவத்தை ப்ரகாஶப்படுத்தக்கூடியவை என்பதைத் தெரிவிக்கிறது, என்கிற அபிப்ர யத்தினால் 'உமக்கு அஸாதாரணமாகிய' என்றுசொல்லப்பட்டது. இத்தையேமுன்பு விஸ்தாரமாகச் சொன்னபடி விவரித்திருக்கிறது, 'எல்லாவற்றையும்' என்பதுமுதல். இப்படிப்பட்ட ஸ்வபாவங்களை உடையவன் அல்லவோ ஈஶ்வரன் என்கிற பதத்திற்கு அர்த்தம். என்று தாத்பர்யம். நியமனம் செய்வது முதலியவைகளில் ரூபம் இருந்து கொண்டிருக்கையாவது. அதற்குத்தகுந்த குணம் உத்ஸாஹம் வ்யாபாரம், இவைகளினால்அவைகளைப் பிரகாசம் செய்கை. அன்றிக்கே நியமனம் செய்வதில் இருத்தலாவது "யதாஹம் கேஶவஸ்ய ஸத்யேன து வர்தே" என்கிற ந்யாயத்தினால் தன்னைப்பார்த்த மாத்திரத்தினாலே விரோதமான எண்ணத்தை நீக்கி நல்ல காரியத்தில் பிரவ்ருத்தி செய்வதற்குக் காரணமாக இருக்கையினால், கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாக இருப்ப*

பட்டதாக இருப்பதிலும் இருந்து கொண்டிருக்கிற ரூபத்தை நேராகப் பார்ப்பதற்கு ஆசைப்படுகிறேன்,      3

---

தில் இருத்தலாவது அவதாரங்களில் இருக்கும் விக்கிரஹங்களைப்போல அறியாமை முதலியவைகளை அபிநயம் செய்யத்தகாமை. காப்பதில் இருத்தலாவது. ஸத்வகுணத்தை உண்டாக்குதல் முதலியவைகளி ஞல். ஸ்ருஷ்டித்தலில் இருத்தலாவது தன்னுடைய அவயவங்களில் இருந்து ப்ருமா ருத்திரன் முதலியவர்களையும் உண்டாக்குகிறபடியி ஞல். ஸம்ஹாரம் செய்வதில் இருத்தலாது மேலே சொல்லப்போகிற விழுங்குதல் முதலியவற்றல் தாங்கிக்கொண்டிருப்பதில்இருக்தலாவது "தமெகூஸ்ம்" என்பவைகளிஞல் மேலே வியக்தமாகப்போகிறது. உயர்ந்தவர்களாக ஸந்தேஹிக்கப்பட்ட ப்ருமா ருக்திரன் முதலிய வர்கள் தன்னுடைய ஒரு பாகத்தில் இருக்கிறர்கள் என்பதாக "ஷைஹாணீமம்" என்று ஆரம்பித்து மேலே சொல்லப்போகிற படியிஞல் எல்லாவற்றையும் விட மேலானதாக இருப்பதில் இருத்த லும் உசிதம்தான். எல்லாவற்றையும்விட வேறு பட்டதாக இருப்பதி லும் என்பதேதாவெனில் கீழ்ச்சொல்லிய எல்லாவற்றையும் சேர்த்து முடித்திருக்கிறது. அவைகளிஞல் ஏற்பட்ட அர்த்தமாகவுமாம். பரமேஶ்வர, புருஷோத்தம என்று கூப்பிட்டதிஞல் ஏற்பட்ட அர்த் தத்தைச் சொல்லிஇருக்கிறதாகவுமாம். "வரு ஜெயாமஜெஶ்வரம்" என்று ஒன்பதாவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் சொல்லப்பட்ட தும், தன்ஞல் பொதுவாகத்தெரிந்து கொள்ளப்பட்டதுமாகிய அர்த் தத்தைப்பார்க்க வேண்டும் என்று ப்ரார்த்தித்திருப்பதை அனுஸரி த்து "ரூபமெஶ்வரம்" என்று சொல்லி இருக்கிறது. ரூபம் என் னும் பதம் ஸ்வரூபத்தைச்சொல்லுவதாக ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் ஐஶ்வரம் என்கிற ஒன்று மாத்திரம் ஔபசாரிகம். மற்றதெல்லாம் முக் கியம். ஸ்வரூபத்தைச் சேர்ந்ததாகையிஞல் விக்ரஹத்தைப் பார்க்க வேண்டும் என்கிற ஆசையும் உள்ளடங்கி இருக்கிறது. ரூபம் என்றும் பதம் ஸ்வரூபம் ரூபம் முதலிய அஸாதாரணமான எல்லா ஸ்வபாவங் களையும் சொல்லுகிறதாகவுமாம் அப்பொழுது ரூபம் என்பதற்கு ஸ்வபாவத்தை என்று அர்த்தம். த்ரஷ்டும் என்று சொல்லி இருப்ப தில் பார்ப்பதைபபோல விஶதமாகத் தெரிவதிலும், பார்ப்பதென்கிற பதம் ப்ரயோகிக்கப்படுகிறபடியிஞல் அதை விலக்குவதற்காகவும், கண்ணிஞல் கண்டறிவது மாத்திரத்தைச் சொலலுகிறது, என்பதை விலக்குவதற்காகவும், 'நேராகப் பார்ப்பதற்கு' என்று சொல்லப் பட்டது.      3

𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌯𑌦𑌿 𑌤𑌚𑍍𑌛𑌕𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍋 ।
𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰 𑌤𑌤𑍋 𑌮𑍇 𑌤𑍍𑌵𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ 4

ப - ரை] 𑌪𑍍𑌰𑌭𑍋 - ப்ரபுவாயும், 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰 - கல்யாணகுணங்களை உடையவனாகிய க்ருஷ்ணா, 𑌤𑌤𑍍 - அந்த ரூபமானது, 𑌮𑌯𑌾 - என்னால், 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 - பார்ப்பதற்கு, 𑌶𑌕𑍍𑌯𑌂 - முடியும், 𑌇𑌤𑌿 - என்று, 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌯𑌦𑌿 - எண்ணுகிறாயே யானால், 𑌤𑌤𑌃 - அதினால், 𑌤𑍍𑌵𑌂 - நீ, 𑌮𑍇 - எனக்கு, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 - உம்மை, 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 - முழுமையும், பூர்ணமாய் இருக்கும் படி, 𑌦𑌰𑍍𑌶𑌯 - காட்டு. 4

பா] அந்த எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கிறதாயும், எல்லாவற்றையும் நியமிப்பதாயும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் இருக்கிற உம்முடையரூபம் என்னால் பார்க்கமுடியும் என்று எண்ணுகிறாயேயானால், பிறகு யோகங்களுக்கு ஈச்வரனாகிய க்ருஷ்ணா, யோகமாவது ஜ்ஞானம்முதலிய கல்யாணகுணங்களின் ஸம்பந்தம். '𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌂' என்றல்லவோ மேலே சொல்லப்போகிறார்—உம்மைத் தவிர ஒருவருக்கும் உண்டாகாத,

---

தா] 'எல்லாவற்றையும்' என்று ஆரம்பித்து "𑌤𑌤𑍍" என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட கேழ்க்கப்பட்ட ஸ்வபாவங்களைச்சொல்லி இருக்கிறது. இவ்விடத்திலும் ரூபத்தைச்சொல்லுகிறதாக இருந்தால் முக்யமாக இருக்கிறது ரூபத்தைச் சொல்லுவதாக இருந்தாலும் பொதுவாக ஸ்வபாவத்தை மாத்திரம்சொல்லுவதாக இருந்தாலும்முன்போலவே அர்த்தம் சொல்லிக்கொள்ளவேண்டியது. 'யோகமாவது ஜ்ஞானம் முதலிய கல்யாண குணங்களின் ஸம்பந்தம்' என்பதற்கு இவ்விடத்தில் அணிமா முதலிய ஐச்வர்யங்களை அடைந்திருக்கும் சக்தியும் குணங்களுக்குள் சேர்ந்தது. யோகத்தை நிறைவேற்றி வைப்பது முதலியது மாத்திரமோவெனில் பார்க்கவேண்டும் என்று ஆசைப்படுகிற ரூபத்தைச்சேர்ந்ததல்லாமையினால் இங்கே சொல்லப்படவில்லை, என்று தாத்பர்யம். மேலே காட்டப்போகிற ரூபமல்லவோ இவ்விடத்தில் பார்க்கவேண்டும்என்றுஆசைப்படப்பட்டது. அர்ஜுனனுக்குஅஷ்டாங்கயோகம் முதலிய வேறு வஸ்துக்கள்காட்டப்படவில்லை அல்லவா? யோகஎன்னும் பதமும் மேலே சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'𑌪𑌶𑍍𑌯' என்று ஆரம்பித்து. ப்ரபோ என்னும் பதத்தினால்,நீர் நினைத்தீரேயானால் உமக்குச் செய்யமுடியாததொன்றுமில்லை, என்று அபிப்ராயம். விசேஷமான குணங்களை உடையவராக இருக்கையைக் காட்டுகிறார்—'உம்மைத்தவிர' என்று ஆரம்பித்து. அன்றிக்

ஜ்ஞானம் பலம், ஐச்வர்யம் வீர்யம் ஶக்தி தேஜஸ்ஸு இவைகளுக்கு இருப்பிடமாகிய க்ருஷ்ணா, உம்மை முழுமையும் எனக்குக் காட்டும் என்று அர்த்தம். 4

பா] இப்படி ஸந்தோஷத்தை உடையவனாய் ப்ரீதியினால் தழுதழுத்த குரலை உடையவனாகிய அர்ஜுனனால் ப்ரார்த்திக்கப்பட்ட பகவான் சொன்னார்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚:—ஸ்ரீபகவான் சொன்னார்.

**𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌶𑌤𑌶𑍋𑌽𑌥 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 ।**
**𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌨𑌾𑌨𑌾𑌵𑌰𑍍𑌣𑌾𑌕𑍃𑌤𑍀𑌨𑌿 𑌚 ॥** 5

ப-ரை] 𑌪𑌾𑌰𑍍𑌥 ஓ அர்ஜுனா, 𑌶𑌤𑌶𑌃 நூறுவிதமாகவும், 𑌅𑌥 அன்றிக்கே, 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 ஆயிரம் விதமாகவும், 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 அநேக விதங்களாயுமிருக்கிற, 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 ப்ரக்ருதிஸம்பந்தமில்லாத வைகளாகவுமிருக்கிற, 𑌨𑌾𑌨𑌾𑌵𑌰𑍍𑌣𑌾𑌕𑍃𑌤𑍀𑌨𑌿𑌚 அனேக விதங்களான வர்ணங்களையும் ஆகாரங்களையும் உடையவைகளாயுமிருக்கிற, 𑌮𑍇 என்னுடைய, 𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 ஆகாரங்களை, 𑌪𑌶𑍍𑌯 பார். 5

---

*க்கே '𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰' என்னும் பதத்தினால் தாத்பர்யமாகக் கொள்ளப் பட்ட அர்த்தத்தைச் சொல்லி இருக்கிறதாகவுமாம் '𑌅𑌶𑍍𑌵𑌪𑌤𑌿𑌃' (குதிரைகளுக்கு எஜமானன்) '𑌧𑌨𑌪𑌤𑌿𑌃' (பணங்களை உடையவன்) என்பவைகளைப்போல குணங்கள் அதிகமாக இருப்பதினாலாவது, குணங்களையும் நியமிப்பதினாலாவது. '𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰' என்னும்பதம் சொல்லிஇருக்கிறது, என்று தாத்பர்யம் '𑌆𑌤𑍍𑌮𑌾𑌨' (உன்னை என்பதற்கு, ஆத்மா என்னும் பதம் வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறது என்பது யுக்தமல்ல; ''𑌮𑌾𑌂'' என்று மேலே சொல்லப்போகிறார் என்று தாத்பர்யம். '𑌅𑌵𑍍𑌯𑌯𑌃' என்னும் பதம் ப்ரயோஜனமற்றது, என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காகவும், அழியக்கூடிய ப்ரபஞ்சமயமாகிய ரூபத்தைக்காட்டினதற்கு விரோதத்தைப் பரிஹரிப்பதற்காகவும், விஶேஷமாய்ப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டவனுக்கு வேண்டிய அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்று காட்டுகிறார்—அதினால் என்ன ஏற்பட்டது என்னில் சொல்லுகிறார்—'உம்மைமுழுமையும்' என்று. எல்லாக் குணங்கள், விபூதிகள், விக்ரஹங்கள் முதலியவைகளோடுகூடிய ரூபத்தை, என்று அர்த்தம்.* 4

பா] எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரமாகிய என்னுடைய ரூபத்தைப் பார். மேலும் நூறுகளாகவும், ஆயிரங்களாகவும், அநேக விதங்களாகவும் ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாதவைகளாகவும், வெளுப்பு கறுப்பு முதலிய,

---

தா] பகவான் தன்னைக் காட்டுவதற்குக் காரணமாயும் கேட்டிருப்பதின் ப்ரகாரத்தினால் ஏற்பட்டிருப்பது மாகிய அர்ஜுனனுடைய அவஸ்த்தையைக் காட்டிக்கொண்டு "பஶ்ய" என்றிவை முதலிய பகவானுடைய வாக்யத்திற்கு ஸங்கதி சொல்லுகிறார்—இப்படி, என்று ஆரம்பித்து. மேல்சொல்லப்போகிற விதத்தை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'எல்லா வஸ்த்துக்களுக்கும் ஆதாரமாகிய' என்று. பஹுவ்ரீஹியாகையினால் ஒன்றன் பாலாகச் சொல்லி இருக்கிறது. ஸூர்யமண்டலம் முதலிய எண்ணிறந்த ஸ்தானங்களை உடைய, என்று அர்த்தம் அன்றிக்கே ஆஶ்ரய என்னும் பதமானது. ஔபசாரிகமாக அடைந்திருக்கும் வஸ்துக்களைச் சொல்லுகிறதாகவுமாம். 'நூறுகளாகவும், ஆயிரங்களாகவும்' என்பதினால், "பரம், வ்யூஹம், விபவம், என்கிற பெயர்களினால் சேர்த்துச் சொல்லப்பட்ட எண்ணிறந்த ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத விக்ரஹங்களை உடையவனாக இருக்கை காட்டப்பட்டது. ஒரு ஸூர்ய மண்டலத்தின் நடுவில் இருக்கும் ரூபம் எதுவோ, அதைப்போன்ற எண்ணிறந்த ப்ரும்மாண்டங்களிலிருக்கும் ஸூர்ய மண்டலத்தில் இருக்கிற ரூபங்கள் எண்ணிறந்தவை. இப்படி ஸ்ரீவிஶ்வரூபம் முதலிய ரூபங்களிலும் கண்டுகொள்வது "ஒவ்வொரு வஸ்துக்களிலும் வியாபித்திருக்கிற ரூபத்தைஉடையவனாக ஆனான்," என்று அர்த்தமுள்ள ஶ்ருதியினாலும் இந்த அர்த்தம் சொல்லப்படுகிறது, என்று சிலர் சொல்லுகிறார்கள். எப்படியானால் பார்க்கப்போகிறாயோ அப்படிச் செய்கிறேன். என்கிற அபிப்ராயத்தினால் "பஶ்ய" என்று சொல்லி இருக்கிறது. "நாநாவிதாநி" (அனேக விதங்களாக இருக்கிற) என்பதினால் தனித்தனியே ஆபரணங்கள், ஆயுதங்கள், அடையாளங்கள், கைகள், இவைகளின், எண்கள், முதலிய ஸ்வபாவங்களினால், எண்ணிறந்தவைகள் என்பது, இவ்விடத்தில்சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'அனேகவிதங்களாய் இருக்கிற' என்று. 'ப்ரகிருதிஸம்பந்தமில்லாத' என்பதற்கு, இவ்விடத்தில் திவ்ய என்னும் பதத்தினால் பரமபதத்தில் இருக்கிறது என்பது மாத்திரம். சொல்லப்படவில்லை. பூமி முதலிய இடங்களில் வியாபரித்து இருப்பதையும் சொல்லப்போகிறபடியினால். வஸ்துவின் வ்யத்யாஸமானது அவஶ்யம் சொல்லவேண்டியது, என்று தாத்பர்யம். வாஸுதேவன் முதலிய வ்யூஹங்கள் நான்கிலும் வெவ்வேறு யுகங்களிலும் வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், கறுப்புமுதலிய ரூபங்கள் மாறுகிற

அனேக வர்ணங்களை உடையவைகளாகவும், அனேக ஆகாரங்களை உடையவைகளாகவும் இருக்கிற அவைகளைப்பார். 5

பஶ்யாதி³த்யாந்வஸூந்ருத்³ராநஶ்விநௌ மருதஸ்ததா² |
ப³ஹூந்யத்³ருஷ்டபூர்வாணி பஶ்யாஶ்சர்யாணி பா⁴ரத ||

ப - ரை] பா⁴ரத ஓ அர்ஜுன, ஆதி³த்யாந் ஸூர்யர்களையும், வஸூந் வஸுக்களையும், அஶ்விநௌ அஶ்வினீதேவதைகளையும், ததா² அப்படியே, மருத: மருத்துக்களையும், பஶ்ய பார், அத்³ருஷ்ட பூர்வாணி இதுவரையில் பார்க்கப்படாதவைகளும், ஆஶ்சர்யாணி ஆஶ்சர்யங்களாயுமிருக்கிற, ப³ஹூநி அனேகவஸ்துக்களை, பஶ்ய பார்,

பா] என்னுடைய ஒரு ரூபத்தில் பனிரண்டு ஸூர்யர்களையும், எட்டு வஸுக்களையும், பதினொரு ருத்திரர்களையும், இரண்டு அஶ்வினீ தேவதைகளையும், நாற்பத்தி ஒன்பது மருத்துக்களையும், பார். இது குறித்துக்காட்டுவேதற்காக, இந்த லோகத்தில் ப்ரத்யக்ஷத்தி

---

தா] படியினாலும், அந்தந்த அவதாரங்களிலும் அந்தந்த பலத்தை விரும்புகிறவர்கள் த்யானம் செய்வதற்கு அனுகுணமாக அனேக வர்ணங்களை உடையவராக இருக்கையுமுண்டு "ஆக்ருதி" ஆகாரம் என்னும் பதத்தினால், தேவதைகள் மனுஷ்யர் ம்ருகங்கள் முதலியவைகளுக்கு ஸமமான வ்யத்யாஸமுள்ள அமைப்பு, சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அனேகவிதங்களான ஆகாரங்களை உடையவைகளாய்' இருக்கிற' என்று.

"ஶததோ²ঽத² ஸஹஸ்ரஶ:" என்று தனக்கு அஸாதாரணங்களான எண்ணிறந்த ரூபங்களைக் கீழே ப்ரஸ்தாவித் திருந்தபோதிலும் இந்த ஸந்தர்ப்பததி லுபயோகப்பட வேண்டியதற் காகவும், இஹைகஸ்த்தம்" என்று ஒரு ரூபமே விஶேஷமாகக் காட்டப்படப்போகிறது, என்பதையும், நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'என்னுடைய ஒரு ரூபத்தில்' என்று. "ஆதி³த்யாந்" என்று ஆரம்பித்து, தேவதைகளுக்குள் முக்யர்களான முப்பத்தி மூன்று தேவதைகள் முதலில் சொல்லப்படுகிறார்கள், என்கிற அபிப்ராயத்தினால், 'பனிரண்டு' என்பது முதலான கணக்குகளை விஶேஷித்துக் காட்டி இருக்கிறது. மேலே சொல்லப்போகிறதை அநுஸரித்து, நம்மால் அறியப்பட்ட வஸ்துக்களுக்கு மாத்திரம் இருப்பிடம் என்பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'இது குறித்து காட்டுவேதற்காக' என்று. அர்ஜுனனாலும் மற்றவர்களினாலும், கண்டறியப்படாத வஸ்துக்களை என்று சேர்

ளுல் பார்க்கப்பட்டவைகளும் ஶாஸ்திரங்களினுல் அறியப்பட்ட வஸ்துக்களும் எவைகளோ, அவை எல்லாவற்றையும், மற்றும், எல்லா லோகங்களிலும், எல்லா ஶாஸ்திரங்களிலும் அறியப்படாதவையாகிய, அனேக ஆஶ்சர்யங்களையும் பார். 6

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்நம் பஶ்யாத்ய ஸசராசரம் |
மம தேஹே குடாகேஶ யச்சாந்யத்த்ரஷ்டுமிச்சஸி || 7

ப - ரை] குடாகேஶ சேம்பலை ஜயித்தவனுகிய அர்ஜுன, ஸசராசரம் ஜங்கமம்ஸ்தாவரங்களோடேகூடிய, க்ருத்ஸ்நம் எல்லா, ஜகத் லோகத்தையும் அந்யத் வேறு, யத் எதை, த்ரஷ்டும் பார்ப்பதற்கு, இச்சஸி விரும்புகிருயோ, (அதையும்) இஹ இந்த மம என்னுடைய, தேஹே ஶரீரத்தில், ஏகஸ்தம் ஒருபாகத்தில் இருப்பதாக, அத்ய இப்பொழுது, பஶ்ய பார். 7

பா] இந்த என்னுடைய ஒரு ஶரீரத்தில் அதிலும் ஒரு பாகத்தில் இருக்

---

தா]த்துக்கொள்ளவேண்டியது. "அத்ருஷ்டபூர்வாணி" என்பது, முன்பு கேட்கப்படாத வஸ்துக்களையும் குறிக்கிறது. அன்றிக்கே அறியப்படாதவைகள் என்கிற காரணத்தினுல் பொதுவாகச் சேர்த்துச் சொல்லுகிறதாகவுமாம், என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'எல்லா ஶாரஸ்திரங்களிலும்' என்று ஆரம்பித்து. இத்தால் இந்த்ரியங்களுக்குப் புலப்படாத வஸ்து ஶாஸ்திரத்தினுல் அறியப்பட்டபோதிலும் அதில், நேராகப்பார்ப்பதினுலேயே தெரிந்து கொள்ளக்கூடிய விஶேஷங்கள் அனேக மிருக்கின்றன என்று காட்டப்பட்டது. 6

"இஹதேஹே" என்று ஒருமையாகச் சொல்லி இருக்கிறபடியினுல், மேலே காட்டப்போகிற ஒரு ஶரீரம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'இந்த என்னுடைய ஒரு ஶரீரத்தில்' என்று. ஒருமையாகச்சொலலி இருப்பதினுலும்மேலேகாட்டப்போகிற ஶரீரத்தைப்பற்றிச் சொல்லி இருக்கிறபடியினுலும் ஒருஶரீரம் சொல்லப்படுகிறது, என்கிறது ஏற்பட்டபடியினுல் "ஏகஸ்தம்" என்கிற பதத்தினுல் ஒரு பாகத்தில் இருக்கிறது, என்பதே சொல்லப்படுகிறது, ஒரு அவயவியின் அவயவங்களாக இருக்கிறது, என்று சிலர் சொன்ன அர்த்தமோவெனில்,பகவானுடைய ஶரீரம் ப்ரக்ருதி ஸம்பந்தம் அற்றது, என்று ஸ்தாபித்திருக்கிறபடியினுல் நிராகரிக்கப்பட்டது என்கிற அபிப்ராயத்தினுல் 'அதிலும் ஒருபாகத்தில் இருக்கிற' என்று சொல்லப்பட்டது. அனறிக்கே எல்லா லோகமும் ஒன்றிலேயே இரு

கிற, ஜங்கமம், ஸ்தாவரம் இவைகளோடு கூடிய எல்லாலோகத்தையும் பார். இன்னும் எதேதைப்பார்க்க வேண்டுமென்று விரும்புகிறாயோ அதையும் இந்தஶரீரத்தின் ஒரு பாகத்திலே பார்.

ந து மாம் ஶக்யஸே த்ரஷ்டுமநேநைவ ஸ்வசக்ஷுஷா।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகமைஶ்வரம் ॥ 8

ப - ரை] அநேந இந்த, ஸ்வசக்ஷுஷைவ உன்னுடைய கண்ணினாலேயே, மாம் என்னை, த்ரஷ்டும் பார்ப்பதற்கு, ந து ஶக்யஸே சக்தியுள்ளவனாகமாட்டாய், தே உனக்கு, திவ்யம் திவ்யமான, சக்ஷு: கண்ணை, ததாமி கொடுக்கிறேன், மே என்னுடைய, ஐஶ்வரம் பகவானுக்கு அஸாதாரணமான, யோகம் ஸ்வபாவத்தை, பஶ்ய பார். 8

பா] நான் என்னுடைய சரீரத்தின் ஒருபாகத்தில் எல்லாலோகத்தையும் காட்டப்போகிறேன். நீயோவெனில் சிற்சில வஸ்துக்களை க்ரஹிக்கக் கூடியதும், கொஞ்சவஸ்துக்களை க்ரஹிக்கக்கூடியதுமாகிய ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள இந்தக் கண்ணினால் அப் டிப்பட்டவனாகவும் மற்றெல்லா வஸ்துக்களையும்விட வேறு பட்டவனாகவும், அளவில்லாதவனாகவுமிருக்

தா] க்கிறது என்று சொல்லி இருப்பதினால் ஒருபாகத்தில் இருக்கிறது, என்பதும் ஏற்பட்டதாகவுமாம். "யச்சாந்யத்த்ரஷ்டுமிச்சஸி" என்பதினால் பாண்டவர்கள் துர்யோதனாதிகள் இவர்களின் ஜயம் முதலியதும் சேர்த்துச சொல்லப்பட்டது. அதில் அதையும் என்று சேர்த்துச் சொல்லி இருப்பதினால் அதுவும் ஒரு ஶரீரத்தில ஒரு பாகத்திலேயே இருக்கிறது, என்று சொல்லுகிறார்—அதையும், என்று ஆரம்பித்து ?

"ந து மாம் ஶக்யஸே" என்கிற இடத்திலிருக்கும் "து" என்னும் பதத்தினால் குறிக்கப்பட்டதும், முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதுமான சக்தி இல்லாமையின் காரணத்தை எடுத்துக்காட்டுகிறார்—'நான்' என்று ஆரம்பித்து. "அநேநைவ" (இந்த) என்பதின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'சிற்சில' என்று ஆரம்பித்து. "திவ்யம்" என்று சொல்லி இருப்பதற்கு எதிர்த்தட்டாகையினால், 'ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள' என்று சொல்லபபட்டது. (அப்படிப்பட்டவனாகவும்) என்பது முதலிய வாக்யங்களுக்கு "மாம்" (என்னை) என்பதினால் இவ்விடத்தில் விக்ரஹம் முதலியவைகளை உடையவனாக இருக்கை சொலலப்படுகிறது, என்று தாத்பர்யம். இவ்விடத்தில் திவ்ய என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ப்ரக்ருதி

கிற என்னைப்பார்க்கச் சக்தி உள்ளவனாகப் போகிறாயில்லை. உனக்கு ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாததும், என்னைப்பார்ப்பதற்கு ஸாதனமுமாகிய கண்ணைக்கொடுக்கிறேன் எனக்கே அஸாதாரணமான ஸ்வபாவத்தைப் பார். அதாவது என்னுடைய அளவில்லாத ஞானம் முதலியவைகளின் ஸம்பந்தத்தையும், அளவில்லாத விபூதி முதலியவைகளுடைய ஸம்பந்தத்தையும் பார், என்று அர்த்தம்.

ஸஞ்ஜய உவாச ஸஞ்சயர் சொன்னார்.

ஏவமுக்த்வா ததோ ராஜந் மஹாயோகேச்வரோ ஹரி: |
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் || 9

ப - ரை] ராஜந் ஓ த்ருதராஷ்ட்ர மஹாராஜனே, மஹாயோகேச்வர: பெரிய ஆச்சரியங்களுக்கெல்லாம் ஈச்வரனாகிய, ஹரி: பகவான், ஏவம் இந்தமாதிரி, உக்த்வா சொல்லி, தத: பிறகு, பார்த்தாய அர்ஜுனனுக்கு, ஐச்வரம் பகவானுக்கு அஸாதாரணமாகிய, பரமம் உத்தமான, ரூபம் ரூபத்தை, தர்சயாமாஸ காட்டினார். 9

பா] இவ்விதமாகச்சொல்லி, ஸாரதியாக இருக்கிற அர்ஜுனனுடைய மாமன்குமாரராகியும், பெரிய ஆச்சரியங்களுக்கெல்லாம் ஈச்வரனாகியும்,

---

தா] ஸம்பந்தமில்லாததும்' என்று. 'என்னைப் பார்ப்பதற்கு ஸாதனமுமாகிய' என்று ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாமையினாலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லி இருக்கிறது. ஐச்வரம், என்னும் பதத்தின் அபிப்ராயத்திலிருக்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'எனக்கே அஸாதாரணமாகிய' என்று. இந்த ஸந்தர்ப்பத்தினால் கிடைத்ததும் ஐச்வரம் என்னும் பதத்தினால் காட்டப்பட்டதுமாகிய யோகஎன்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'எண்ணிறந்த' என்று. ஈச்வரனாக இருக்கையாவது, எல்லாவற்றையும் நியமிக்கும் சக்தி, அதைச்சேர்ந்த யோகமாவது அப்படி நியமிக்கத் தகுந்தவையான குணங்களுடையவும், விபூதிகளுடையவும், ஸம்பந்தமே. கண் திவ்யமாகையினால் ஞானம்முதலிய குணங்களைப்பார்ப்பதும் பொருந்தும். மேலேயும் அளவில்லாத வீர்யத்தை உடையவனாக இருக்கை முதலிய குணங்களை உடையவனாகப் பார்க்கிறேன். என்று சொல்லப்போகிறானல்லவா, என்று தாத்பர்யம்.

"மஹாயோகேச்வரோஹரி:" என்பதை மறைக்கக் கூடியதும் முன்பு தெரிந்து கொள்ளப்பட்டதுமான ரூபத்தைச்சொல்லுகிறார்—'ஸாரதியாகஇருக்கிற அர்ஜுனனுக்கு மாமன் குமாரராகிய' என்று. இத்தால் திவ்ய ரூபத்தைப்பிரகாசம் செய்வதற்குக் காரணமாகிய ப்ரீதி

பரப்பிரும்மமாகியு மிருக்கிற நாராயணன், உத்தமமாகியும் தனக்கே அஸா தாரணமாகியுமிருக்கிற ரூபத்தை, அதையாகிய குந்தியின் குமாரனாகிய அர்ஜுனனுக்குக்காட்டினார் அந்த ரூபம் அனேக விதங்களாயும் விசித்

யும் காட்டப்பட்டது. "மஹா" என்கிற விசேஷணமிருப்பதினால் யோகம் என்பது ஆஶ்சரியம் தான் என்றும், 'மஹா (பெரிய) என்பதை ஈஶ்வரனுக்கு விசேஷணமாகச் சொல்லுவதை விட யோக என்பதற்கு விசேஷணமாகச் சொல்வதே இவ்விடத்தில் விசேஷம், என்றும் அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பெரிய ஆஶ்சரியங் களுக்கு' என்று. மற்றவர்களிடத்தில் ஆஶ்சர்யங்களின ஸம்பந்தமிரு ப்பது இவனுக்கு அதீனப்பட்டது என்பது, 'ஈஶ்வரனாகிய' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. "மஹாயோகேஶ்வர:, ஹரி:" என் கிற இரண்டு பதங்களினாலும் அபிபாயத்தில் கொள்ளப்பட்ட பொதுவாயும் விசேஷமாகியுமுள்ள அர்த்தத்தைக் காட்டுகிறார்— "பரப்பிரும்மமாகிய நாராயணன்' என்று 'ஸர்வேஶ்வர ஐஶ்வரம் பரமம் ரூபம்' என்கிற இரண்டும் அதிகாரம் வ்யத்யாஸமில்லாமல் ஸமீபத்திலேயே சொல்லி இருப்பதினால் ஒரே அர்த்தத்தைச்சொல்லுகின்றன. 'ஐஶ்வரம் ரூபம் உபகாரம்' (ஈஶ்வரனுடையதாகிய ரூபத்தைக்காட்டினார்) என்று சொல்லி இருப்பதினால் தன்னைத்தவிர வேறொருவருடைய ரூபத்தைக்காட்டினார் என்று அர்த்தம், என்கிற ப்ரமம் உண்டாகும், ஆகையினால் அதை விலக்குவதற்காகத் 'தனக்கே அஸாதாரணமான' என்று சொல்லப்பட் டது. ரூப என்னும் பதம் இவ்விடத்திலும் தன்னைசசேர்ந்த எல்லா ஸ்வபாவங்களோடும் கூடிய ரூபத்தைச்சொல்லுகிறது, என்றாவது, அவைகளைப் பிரகாசம் செய்யக்கூடிய விக்ரஹத்தைச சொல்லுகிறது, என்றாவது, ஸ்வரூபம் முதலிய தனக்கே அஸாதாரணங்களாகிய எல் லா ஸ்வபாவங்களையும் சொல்லுகிறது, என்றாவது, அறிந்துகொள்ள வேண்டியது. இவ்விடத்தில் "ஸ்வரூப" என்னும் பதத்தினால் தன் னுடைய ஸ்வரூபத்தைக்காட்டுவதற்காக ப்ரீதிகருக்காரணமாகிய உறவு அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது, என்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'அத்தையாகிய குந்தியின் குமாரனாகிய' என்று. "பரமம் ஐஶ்வரம், ரூபம்" (உத்தமமான ஈஶ்வரனுடைய ரூபத்தை) என்று சொல்லி இருப்பதை விவரிக்கிறார்—'அந்தரூபமாவது' என்று ஆரம் பித்து. எல்லாலோகங்களுக்கும் இருப்பிடமாக இருக்கை ஸ்வரூபத்தி னாலும், விக்ரஹத்தின் மூலமாகவும். அன்றிக்கே "அநேகவக்த்ர

திரங்களாயுமிருக்கிற எல்லா லோகங்களுக்கு மிருப்பிடமாயும், எல்லாவற்றையும் நியமிக்கக்கூடியதாயு மிருக்கிறரூபம். 9

பா] அந்தரூபமுமிப்படிப்பட்டது.

அநேகவக்த்ரநயநம் அநேகாத்புததர்சநம் |
அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் ||
திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தாநுலேபநம் |
ஸர்வாச்சர்யமயம் தேவமநந்தம் விச்வதோமுகம் ||

ப-ரை] அநேகவக்த்ரநயநம் பலமுகங்களையும், கண்களையுமுடையதாயும், அநேகாத்புததர்சநம் பல ஆச்சர்யமான பார்வைகளை உடைத்தானதாயும், அநேக திவ்யாபரணம் அனேகங்களாயும் திவ்யங்களுமான ஆபரணங்களை உடையதாயும், திவ்யாநேகோத்யதாயுதம் திவ்யங்களாயும், அனேகங்களாயுமிருக்கிற உயரத்தூக்கப்பட்ட ஆயுதங்களை உடையதாயும் திவ்யமால்யாம்பரதரம் திவ்யமான மாலைகள் வஸ்திரங்கள், இவைகளை தரித்ததாயும், திவ்யகந்தாநுலேபநம் திவ்யமான சந்தனத்தைப் பூசிக்கொண்டதாயும், ஸர்வாச்சர்யமயம் எல்லா ஆச்சர்யங்களும் நிறைந்ததாகவும், தேவம் ப்ரகாசமுள்ளதாகவும், அநந்தம் அவில்லாததாகவும், விச்வதோமுகம் எல்லாத்திக்குக்களிலும்முகங்களை உடையதாகவும் (இருந்தது). 10, 11

பா]ரகாசமுள்ளதாகவம், மூன்று காலங்களிலுமுள்ள எல்லாலோகங்

தா]என்று ஆரம்பித்து மேலே சொலலப்போகிறதற்கு அவதாரிகைகாட்டி இருக்கிறதாகவுமாம். ஆகையினுலேதான் அந்தரூபமுமிப்படிப்பட்டது, என்று சேர்க்கப்பட்டது இந்த எல்லா லோகங்களுக்குமிருப்பிடமாகஇருக்கை "ஏகஸ்தம்" என்றிவை முதலிய ச்லோகங்களில் சொல்லப்பட்டது நியமனம் என்னும் பதத்திஞல் அதிஷ்டானம் சொலலப்படுகிறது. 9

வஸ்திரங்கள், ஆபரணங்கள், ஆயுதங்கள் இவைகள் அனேகம், என்பது ஜாதியின் வ்யத்யாஸங்களாலும் என்று அறியவேண்டியது. அனேகஜாதியான அனேகமுகங்கள் உண்டென்பது விச்வரூபத்தைப் பற்றியத்யானத்தைச் சொல்லுமிடத்தில் பாஞ்சராத்ர சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. அப்படிக்கில்லாவிடில் அனேகம் கண்களை உடையது. என்று சொல்லி இருப்பது வ்யர்த்தமாகிவிடும். முகம் அனேகம் என்பதுைலேயே கண்கள் அனேகம் என்பது ஏற்பட்ட

களுக்கு மிருப்பிடமாகையினுல், இடம், காலம், இவைகளினுல் அள

விட்டதினுல் எதினுடைய பார்வையானது, அனேகமான ஆஶ்சரிய மாக இருக்கிறதோ, அது அநேகாத்புத தர்சனம், அதாவது எல்லையில்லாதமேன்மையை உடைய ஆஶ்சர்யமாகப் பார்க்கப்படுகிறது, என்று அர்த்தம். திவ்யமாவது ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாதது. "ஸவாஶ்சய்யமயம்" என்பதற்கு ஆஶ்சர்யமாகிய எல்லாவஸ்துக்களுக்கு மிருப்பிடம் என்று அர்த்தம். ஆகையினுல் "அநேகாத்புததர்ஶநம்" என்பதோடுபுனருக்தி இல்லை. 1 "ஜகதேதந்மஹாஶ்சர்யம் ரூபம் யஸ்ய மஹாத்மந:" என்றிவை முதலியது நினைக்கத்தக்கது. 'தேவம்' என்னும் பதம் இவ்விடத்தி லுபயோக மில்லாத தேவஜாதியைச் சொல்லுகிறது, என்பதை விலக்குவதற்காகவும், திவ்ய விக்ரஹத்தோடு கூடிய பகவானைச் சொல்லுகிறது, என்று தெரிவிப்பதற்காகவும், 'ப்ரகாஶமுள்ளதாகவும்' என்று சொல்லப்பட்டது. அளவில்லாம லிருக்கும் விதத்தையும் அதற்குக்காரணத்தையும் சொல்லுகிறுர்—எல்லாலோகங்களுக்கும், என்று ஆரம்பித்து. எல்லாலோகங்களுக்கும் இருப்பிடம் என்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்ட படியினுல் மூன்று காலங்களிலிருக்கும் லோகங்களுக்கும் இருப்பிடம், என்பதும் ஏற்பட்டது. இவை இரண்டாலும் ஏற்பட்டதாகிய இடம் காலமிவைகளால் அளவிடமுடியாமையும் இவ்விடத்தில், எப்படி ஸம்பவிக்குமோ அவ்விதமாக விக்ரஹத்தின் வழியாகவும் நேராகவும் சொல்லவேண்டியது, வாஸ்தவத்தில் அளவில்லாமை ஸ்வரூபத்திலேதான் இருக்கிறது. இவ்விடத்தில் விக்ரஹத்தினுடைய விஶேஷணங்களின் கூட்டத்தில் நடுவிலிருப்பதினுல் விக்ரஹத்தையேசொல்லுகிறது 'ஆநந்த்யம்' என்கிற இடத்தில் 'அநந்தபாஹூதரம்' என்று விக்ரஹத்தைப்பற்றி மேலே சொல்லப்போகிறுர்' ஆகையினுல் மிகவும் விசாலமாக இருக்கை முதலியதைக் குறிப்பதில் தாத்பர்யம், என்று சிலர் சொல்லுகிறுர்கள். இப்படியே 'அநந்தபாஹூ' என்று இதை அனுவாதம் செய்திருக்குமிடத்திலும் அர்த்தம் சொல்லிக்கொள்ளவேண்டியது. எல்லா இடத்திலும் இந்த விக்ரஹம் வ்யாபரித்து இருந்தாலும் விஶேஷமான ஶக்தியினுல் ஓரிடத்திலும் தடையில்லாமலிருப்பதும் யுக்தம் தான், அஷ்டைஶ்வர்யம் பெற்ற யோகிகளுக்கும் பூமியில் முழுகுதல் வெளிக்கிளம்புதல் முதலிய சில ஸித்திகள் சொல்லப்படுகின்றன அல்லவா. ஆகையினுல் இந்த விஶ்வரூபம் ப்ரக்ருதி முதலிய எல்லா

1 விஷ்ணுபுராணம 5-11-7 மஹாஶ்சர்யம் மிகவும் ஆச்சரியமாகிய ஜகத் இந்த லோகம் யஸ்ய எந்த மஹாத்மந: மகாத்மாவுக்கு ரூபம் சரீரமோ.

விட முடியாததாகவும், எல்லாத் திக்குக்களிலும் இருக்கிற முகங்களை

---

லோகங்களுக்கும் இருப்பிடம் என்று மேலே சொல்லப்போகிறதும் அனுசிதமல்ல. ஆகையினாலேயே, அஸ்த்ரங்களாகவும், பூஷணங்களாகவும் இருக்கும் எல்லா லோகங்களுக்கும் இருப்பிடம் என்பது இங்கே சொல்லப்படுகிறது, என்பதுவும் ஸந்தேகிக்கவேண்டியதில்லை. 'தத்ர தேவதேவஸ்ய ஶரீரே' என்கிற இடத்தில் மேலே 'அநந்தாயாமவிஸ்தரே' (அளவில்லாத நிகளம், விஶாலமிவைகளை உடைய) என்று அந்த ஶரீரத்திற்கே விஶேஷணமாகச் சொல்லப்போகிறபடியினால். வடபத்ரஶாயியான பகவானுடைய விக்ரஹத்தைப்போல அகடிதகடனா ஶக்தியினால் சின்ன விக்ரஹத்திலும் ஸூக்ஷ்மமாக எல்லாம் அடங்கி இருப்பதாகக் காட்டப்பட்டது, என்றும் சொல்லமுடியாது. அப்படிச் சொல்லாமையினாலும், அதற்கு விரோதமாகச் சொல்லி இருப்பதினாலும். ஆகையினால் கீழ்ச்சொல்லியதே அர்த்தம். இதுவும் பாஷ்யத்திலாரம்பத்திலேயே அசிந்த்ய என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது. 'அநேகவக்த்ரம்' (அனேகம் முகங்களை உடைய) என்று சொல்லி இருப்பதே விஶ்வதோமுகம், என்னும் பதத்தினால் விஶேஷித்துச் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லாத் திக்குக்களிலுமிருக்கிற முகங்களை உடையதாகவும்' என்று நேரில் விக்ரஹத்தைப்பற்றிச் சொல்லுகிறபடியினால், 1 எல்லா இடத்திலும் கண்களை உடையவன், எல்லா இடங்களிலும் முகங்களை உடையவன்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளிலே போல எல்லா இடங்களிலும் முகங்களின் ஶக்தி உண்டு, என்பதும் சொல்லப்படுகிறதில்லை. எல்லா இடங்களிலும் முகங்களை உடையது, என்று மற்றவர்கள் சொன்ன அர்த்தமும் யுக்தமல்ல, கை, கால் முதலிய இடங்களில் முகமில்லாமையினால் என்று தாத்பர்யம். முதலில் அவிசதமாகத் தெரிந்து கொள்ளுதல், பிறகு விஶதமாகத் தெரிந்து கொள்ளுதல், என்கிற க்ரமத்தை அனுஸரித்து ஶ்லோகத்தில் சொல்லி இருக்கும் க்ரமத்தை அநாதரித்து தேவம் என்பது முதலியது முதலில் வ்யாக்யானம் செய்யப்பட்டது. தன்னிடத்திலிருக்கிற ஆகாரத்தைத் தெரிந்துகொண்ட பிறகல்லவோ தனித்திருக்கும் வஸ்துக்களோடு சேர்ந்திருத்தலைத் தெரிந்துகொள்ள முடியும். அப்படியே இவ்விடத்திலும் காட்டுவது உசிதம். என்கிற அபிப்ராயத்தினால் முதலில் சொல்லட்ட போதிலும் வஸ்திரம் முதலியது கடைசியில் நிரூபிக்

---

1 ஶ்வேதாஶ்வதரம் 3-3.

உடையதாகவும், தனக்குத் தகுந்த திவ்யங்களான வஸ்திரம், சந்தனம், மாலை, ஆபரணங்கள், ஆயுதங்கள், இவைகளை உடையதாகவும் இருந்தது. 10, 11

பா] முன்பு சொன்ன தேவம் என்னும் பதத்தினால் குறிக்கப்பட்ட, ப்ரகாசம் உள்ளதாக இருப்பதையே விசேஷித்துச் சொல்லுகிறார்—

*திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா |*
*யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத்பாஸஸ்தஸ்ய மஹாத்மந:* 12

ப - ரை] திவி - ஆகாசத்தில், ஸூர்யஸஹஸ்ரஸ்ய - ஆயிரம்ஸூரியன்களுடைய, பா: - காந்தியானது, யுகபத் - ஒரேகாலத்தில் உத்திதா - உதித்ததாக, பவேத்யதி - ஆகுமேயானால், ஸா - அந்தக் காந்தியானது, மஹாத்மந: - மஹாத்மாவாகிய, தஸ்ய - அந்தப்பகவானுடைய, பாஸ: - ப்ரகாசத்திற்கு, ஸத்ருசீ - ஸமமாக, ஸ்யாத் - ஆகும். 12

பா] தேஜஸ்ஸூ அளவில்லாதது. என்பதைக் காட்டுவதற்காக இது சொல்லப்பட்டது. அழிவில்லாத தேஜஸ்ஸையே ஸ்வபாவமாக உடையவன், என்று அர்த்தம். 12

*தத்ரைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தமநேகதா |*
*அபச்யத்தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா ||* 13

ப - ரை] பாண்டவ: - பாண்டுவின்மகனாகிய அர்ஜுநன், ததா - அப்பொழுது, தத்ர - அந்த, தேவதேவஸ்ய - பகவானுடைய, சரீரே - விச்வரூப விக்ரஹத்தில், அநேகதா - அனேகவிதமாக, ப்ரவிபக்தம் - பிரிக்கப்பட்டிருக்கிற, க்ருத்ஸ்நம்—எல்லா, ஜகத் - லோகத்தையும், ஏகஸ்தம் ஏகதேசத்திலிருப்பதாக, அபச்யத் - பார்த்தான். 13

---

*கப்பட்டது.—'தனக்குத் தகுந்த' என்று ஆரம்பித்து. இவ்விடத்திலும் ச்லோகத்தில் சொல்லியிருக்கும் வரிசையை அநாதரித்து வஸ்திரம் முதலாக வரிசையாகச் சொல்லி இருப்பது, அந்தரங்கம், பஹிரங்கம், முதலான வ்யத்யாஸத்தைக்காட்டுவதற்காக. இவ்விடத்திலும் 'தர்சயாமாஸ' (காட்டினார்) என்று முன் ச்லோகத்துடன் அன்வயம் சொல்லிக்கொள்ள வேண்டியது.* 10, 11

*'திவி' என்று ஆரம்பிக்கும் ச்லோகத்துக்கு ஸங்கதியைச் சொல்லுகிறார்—'முன்பு சொன்ன' என்று ஆரம்பித்து. கீழ்க் குறிக்கப்பட்ட ப்ரகாசத்திற்கே எல்லை இல்லாமையாகிற விசேஷம் சொல்லப்படுகிறது, என்று அர்த்தம். ஒரு கணக்கைக் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதினால் உண்டாகிய அளவிடப்பட்டது என்கிற ஸந்தேஹத்தைவிலக்குவதற்காகச்சொல்லுகிறார்—'தேஜஸ்ஸூ' என்று ஆரம்பித்து.* 12

பா] அளவில்லாத நிகளம், விஶாலமிவைகளை உடையதாயும், எண்ணிறந்த கைகள், வயிறுகள், முகங்கள் கண்கள் இவைகளை உடையதாயும், அளவில்லாத தேஜஸ்ஸை உடையதாயும் எண்ணிறந்த திவ்யாயுதங்களை உடையதாயும், தனக்குத்தகுந்த எண்ணிறத பூஷணங்களை உடையதாயும், திவ்யங்களான, மாலை வஸ்திரம் இவைகளைத் தரித்ததாயம், திவ்யசந்தனத்தினல் பூசப்பட்டதாயும் அளவில்லாத ஆஶ்சரியங்கள் நிறைந்ததாயு மிருக்கிற பகவானுடைய திவ்யஶரீரத்தில் ப்ரும்மா முதலாக அனேக விதங்களாயும் விசித்திரங்களாயு மிருக்கிற தேவதை, பசு, மனுஷ்யன் ஸ்தாவரம் முதலிய போக்தாக்களின் கூட்டம், பூமி, ஆகாஶம், ஸ்வர்க்கம், பாதாளம், அதலம், விதலம், ஸுதலம் முதலிய, அனுபவிக்கக்கூடிய வஸ்துக்கள் அனுபவிப்பதற்கு ஒத்தாசைக் கருவிகள், இவைகளின் வ்யத்யாஸங்களினல் பிரிக்கப்பட்டிருக்கிற ப்ரக்ருதியும், ஜீவனுமாகிய, 1‘ஸுஹம் ஸவஸ்ய ப்ரவவோ மத்தஸ்ஸவம் ப்ரவத்தெ’ 2‘ஹந்தெதகமயி வ்யாமிவிஹூதீராத்மஶுஹா:’ 3 ‘ஸுஹமாத்மாகுடாகெஶ ஸவஹூதாஶயஸ்திக:’ என்றும் 4 ‘ஆதித்யாநாமஹம் விஷ்ணு:’ என்று ஆரம்பித்து 5 ‘நதஸ்தி விநாயத்ஸ்யாந்மயா ஹூதம் வராவரம். விஷ்டஹ்யாஹமிஃம் க்ருத்ஸ்நம் ஏகாம்ஶேந ஸ்திதோ ஜகத்’ என்னுமளவாகச் சொல்லப்பட்ட எல்லா லோகத்தையும் ஏகதேஶத்தி லிருப்பதாகப் பகவானுடைய அனுக்ரஹத்தின லடையப்பட்ட அவனைப்பார்ப்பதற்குத் தகுந்த திவ்யமான கண்ணை உடைய அர்ஜுனன் பாரத்தான். 13

> ததஸ்ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தநஞ்ஜய: |
> ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரஹாஷத || 14

ப - ரை] தத: - பிறகு, ஸ: - அந்த, தநஞ்ஜய: - அர்ஜுனன், விஸ்மயாவிஷ்ட: - ஆஶ்சரியத்தை அடைந்தவனைக் கொண்டு, ஹ்ருஷ்டரோமா: ஹ்ருஷ்ட - நெஜித்துக்கொண் டிருக்கிற, ரோமா: - மயிர்களை உடையவனைக் கொண்டும், தேவம் - பகவானை, ஶிரஸா - தலையினல், ப்ரணம்ய - ஸேவித்து, க்ருதாஞ்ஜலி: - கைகளைக்கூப்பிக்கொண்டு, அஹாஷத - சொன்னன்.

---

1 பகவத்கீதை - 10 - 8.
2 பகவத்கீதை - 10 - 19.
3 பகவத்கீதை - 10 - 20.
4 பகவத்கீதை - 10 - 21.
5 பகவத்கீதை - 10 - 39.

பா] பிறகு அர்ஜுநன் பெரிய ஆஶ்சர்யங்களாகிய எல்லா லோகத்திற்கும் தன் ஶரீரத்தின் ஏகதேஶத்தினால் ஆதாரமாகவும், எல்லாவற்றையும் நியமிக்கிறவராயும், மிகவும் ஆஶ்சர்யங்களாகிய அளவில்லாத ஜ்ஞானம் முதலிய கல்யாணகுணங்களின் கூட்டத்தை உடையவராகவு மிருக்கிற பகவானைப் பார்த்து, ஆஶ்சர்யத்தை உடையவனாய், நெறித்துக்கொண்ட மயிர்களை உடையவனாயும் கொண்டு தலையினால் தடிபோல விழுந்து நமஸ்கரித்துக் கைகுவித்துக்கொண்டு சொன்னான். 14

அர்ஜுந உவாச — அர்ஜுனன் சொன்னான்.

பஶ்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே
ஸர்வாம்ஸ்ததா பூதவிஶேஷஸங்காந் |
ப்ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்தம்
ருஷீம்ஶ்ச ஸர்வாநுரகாம்ஶ்ச திவ்யாந் ||  15

ப - ரை] ஹே தேவ - பகவானே, தவ - உம்முடைய, தேஹே - ஶரீரத்தில், ஸர்வாந் - எல்லா, தேவாந் - தேவதைகளையும், ததா - அப்படியே, பூதவிஶேஷஸங்காந் - ப்ராணி விசேஷங்களின் கூட்டங்களையும், ப்ரஹ்மாணம் - ப்ரும்மாவையும், கமலாஸநஸ்தம் - ப்ரும்மாவினிடத்தில் அடங்கி இருக்கிற, ஈஶம் - ருத்திரனையும், ஸர்வாந் - எல்லா, ருஷீம்ஶ்ச - ரிஷிகளையும், திவ்யாந் - ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற, உரகாம்ஶ்ச - ஸர்பங்களையும், பஶ்யாமி - பார்க்கிறேன். 15

பா] ஓ, பகவானே உம்முடைய தேஹத்தில் எல்லாத் தேவதைகளையும் பார்க்கிறேன். அப்படியே எல்லாப்ராணி விஶேஷங்களின் கூட்டங்களையும், அப்படியே அண்டத்திற்கு யஜமானனாகிய சதுர்முகனையும், அப்படியே ப்ரும்மாவினிடத்திலிருக்கிற அதாவது ப்ரும்மாவினிஷ்டப்படி நடக்கிற ருத்ரனையும், அப்படியே தேவரிஷி முதலிய எல்லா ரிஷிகளையும் ப்ரகாஶித்துக்கொண் டிருக்கிற வாஸுகி, தக்ஷகன் முதலிய ஸர் பங்களையும் (பார்க்கிறேன்). 15

அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்
பஶ்யாமி த்வாம் ஸர்வதோऽநந்தரூபம் |
நாந்தம் ந மத்யம் ந புநஸ்தவாதிம்
பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப ||  16

ப - ரை] விஶ்வேஶ்வர - லோகங்களை நியமிப்பவனாகிய, விஶ்வரூப - ப்ரபஞ்சத்தை சரீரமாக உடைய பகவானே, அநேகபாஹூதரவக்த்ர

நேத்ரம் - அனேகங்களானகைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் இவைகளை உடைய, அநந்தரூபம் - அளவில்லாத ரூபத்தை உடைய, த்வாம் - உம்மை, ஸர்வத: - எல்லா இடங்களிலும், பஶ்யாமி - பார்க்கிறேன், தவ - உமக்கு, அந்தம் - முடிவையும், மத்யம் - நடுவையும், ஆதிம் - முதலையும், நபஶ்யாமி – பார்க்கவில்லை. 16

பா] அனேகங்களான, கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் இவைகளை உடைய முடிவில்லாத ரூபத்தை உடைய உம்மை எல்லா இடத்திலும் பார்க்கிறேன். ப்ரபஞ்சத்தை நியமிக்கிறவனும், ப்ரபஞ்சத்தை ஶரீரமாக உடையவராயு மிருக்கிற பகவானே எந்தக்காரணத்தினால் நீர் முடிவில்லாதவரோ ஆகையினால் உமக்கு முடிவையும் நான் பார்க்கவில்லை. நடுவையும் பாாக்கவில்லை. ஆதியையும் பார்க்கவில்லை 16

---

தா] 'ஸர்வதோऽநந்தரூபம்' (எல்லா இடத்திலும் முடிவில்லாதரூபத்தை உடைய) என்று அன்வயம் சொல்லில் 'ஸர்வத:' (எல்லா இடத்திலும்) என்னும் பதம் வ்யர்த்தமாகிவிடும். 'ஸர்வத: பஶ்யாமி' (எல்லா இடத்திலும் பார்க்கிறேன்) என்று சொல்வதோவெனில் திவ்யமான கண் கிடைத்ததற்கு அனுகுணமாக இருப்பதினால் யுக்தம். விஶ்வரூப என்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறது, 'விஶ்வேஶ்வர' என்னும் பதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரபஞ்சத்தை நியமிக்கிறவனும்' என்று வ்யாபரித்துக்கொண்டு நியமிக்கிறவனல்லவோ ஆத்மா 'நாந்தம்நமத்யம்' என்கிற இடத்தில் வாஸ்தவத்திலிருக்கிற முடிவுமுதலியவைகளைப் பார்க்கவில்லை, என்பது சொல்லப்படுகிறதில்லை. அர்ஜுனனுக்கு திவ்யமான கண் கிடைத்திருப்பதினாலே அது பொருந்தாதாகையினால், கீழிலும் அநந்தரூபம் என்று காரணத்தைக் காட்டிக்கொண்டு விஶேஷணம் சொல்லி இருப்பதினாலும். ஆகையினால் முயல்க்கொம்பு முதலியவற்றைப்போல உண்மையிலே இல்லாதவைகளைப் பார்க்காமையே சொல்லப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எந்தக் காரணத்தினால்' என்று ஆரம்பித்து. இது விஶ்வரூபம் என்னும் பதத்தினாலும் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் இடத்தினாலும், காலத்தினாலும், ஆதி, மத்யம், முடிவு, இல்லை, என்று மறுக்கப்படுகிறது, என்று அறியவேண்டியது. ஆதிமுடிவு ஆகிய அளவில்லாமையினால் அவை இரண்டைக்கொண்டும் நிரூபிக்க வேண்டியதாகிய மத்யமும் இல்லை, என்று ஏற்பட்டது, என்று தாத்பர்யம். 16

கிரீடிநம் கதிநம் சக்ரிணஞ்ச
தேஜோராஶிம் ஸர்வதோ தீப்திமந்தம் |
பஶ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்தாநலார்கத்யுதிமப்ரமேயம் || 17

ப - ரை] தேஜோராஶிம் - தேஜஸ்ஸுக்களின் கும்பலாகவும், ஸர்வத꞉ - எல்லா இடத்திலும், தீப்திமந்தம் - ப்ரகாஶமுள்ளவராயும், ஸமந்தாத் - நாலுபக்கத்திலும், துர்நிரீக்ஷ்யம் - பார்க்கமுடியாதவராகவும், தீப்தாநலார்கத்யுதிம் தீப்த-ப்ரகாசித்துக்கொண் டிருக்கிற, அநல - அக்னி, அர்க - ஸூர்யன், (இவர்களுக்குஸமமான) த்யுதிம் - காந்தியை உடையவராயு மிருக்கிற, அப்ரமேயம் - அளவிடமுடியாதவராயு மிருக்கிற, த்வாம் - உம்மை, கிரீடிநம் - கிரீடத்தை உடையவராகவும், கதிநம் - கதையை உடையவராகவும், சக்ரிணம் - சக்ராயுதத்தை யுடையவராகவும், பஶ்யாமி - பார்க்கிறேன். 17

தா] 'கிரீடிநம்' என்பவை முதலியவைகளுக்கு ஶ்லோகத்தில் சொல்லி இருக்கும் க்ரமத்தை அநாதரித்துத் தெரிந்துக்கொள்ளும் வஸ்துக்களில் வரிசையை அநுஸரித்து அன்வயம் சொல்லுகிறார்—'தேஜஸ்ஸுக்களின்கும்பலாகவும்' என்று ஆரம்பித்து. 'தேஜோராஶிம்' என்றுவஸ்துவின்ஸ்வரூபத்தைச்சொல்லி இருக்கிறது 'ஸர்வதோதீப்திமந்தம்' என்றதற்கு 1'அவனுடையகாந்தியினால்இந்த எல்லாம்ப்ரகாஶிக்கிறது' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளிலேபோல, எல்லா இடத்திலும் பரவியகாந்தியை உடையவனாகிய என்று அர்த்தம் 'ஸமந்தாத்' (நாலுபக்கங்களிலும்) என்று விக்ரஹத்தில் எல்லா இடங்களையும் பற்றிச் சொல்லப்பட்டது 'தீப்தாநலார்க' என்பது பார்க்கமுடியாமலிருப்பதற்குக்காரணம் இவ்விடத்தில் 'த்யுதி' என்னும்பதத்தினால்கிரணமாகியகாந்தி சொல்லப்பட்டது. ஆகையினால் 'தீப்திமந்தம்' எனபதோடு புனருக்தி இல்லை. அன்றிக்கே முன்பு எல்லா இடத்திலும் வ்யாபித்திருக்கிறது என்பதில் தாத்பர்யம். இவ்விடத்திலோ வெனில் பார்க்கமுடியாமைக்குக் காரணமாகிய அதிக க்ரூரம் என்பதில் தாத்பர்யமாகவுமாம். 'அப்ரமேயம்' இப்படிப்பட்டது, இவ்வளவு, என்று அளவிடமுடியாதது. இவ்வளவால் ஸாமாந்யமாகத் தெரிந்துகொண்டதைச் சொல்லி இருக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'உம்மை' என்று பிரித்துச்சொல்லப்பட்டது. இதுவரையிலும் பார்க்கப்படாத ரூபத்தைப் பார்த்தபோதிலும் உமக்கு அஸாதாரணமான அடையாளங்களினால் உம்மைத் தெரிந்துகொள்ளுகிறேன், என்கிற அபிப்ராயத்தினால் 'கிரீடிநம்' எபன்து முதல் சொல்லப்பட்டது 'கிரீடத்தை' என்பது ஆபரணங்

1 கடவல்லீ - 2 - 5 - 15.

கிஷ்டமான ஆதாரமாக இருப்பவரும் நீரே. அழிவில்லாதவரும் நீரே. அதாவது எவ்வித ஸ்வரூபத்தை உடையவராகவும், எவ்வளவு குணங்களை உடையவராகவும், எவ்வளவு விபூதிகளை உடையவராகவு மிருக்கிறீரோ இப்படிப்பட்ட ஸ்வபாவங்களை உடையராகவே எப்பொழுதும் இருக்கி

வைக்கப்படுகின்றது) என்கிற அர்த்தத்தினால் 'நிதாநம்' என்று சொல்லப்படுகிறது, ஆதாரமாகிய வஸ்துக்களுக்கும் ஆதாரமாகையினால் 'பரம் நிதாநம்' என்று சொல்லப்பட்டது. 'ஆகாஶாஸ்ஸம்விஶ்வ' என்றிவை முதலிய வசனங்களினால் சொல்லப்பட்ட ஜீவாத்மாவை விலக்குவதற்காகப் பரம் என்னும் பதம் 1 'பஞ்சபூதங்கள் ஜீவாத்மாவினிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஜீவாத்மாக்கள் பகவானிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன'. என்று அர்த்தமுள்ள வாக்கியம் ஶ்ருதியில் சொல்லப்படுகிறதல்லவோ. இவனுக்கு வேறொரு ஆதாரமுமில்லை என்பதற்காக 'உத்தமமான' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. 'அவ்யய' என்னும் பதத்தினால் 2 'அந்த அழிவில்லாத, என்றும் 3 அளவில்லாதவனும், அழிவில்லாதவனும், கவியுமாகிய' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகள் ஞாபகப்படுத்தப்பட்டன. ஸ்வரூபத்திற்காவது, குணத்திற்காவது, விபூதிக்காவது, எப்பொழுதாவது உண்டாகும் நாஶமல்லவோ வ்யயம், என்னப்படுகிறது. அது ஒன்றுமில்லை, என்று பொதுவாக அவ்யய என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. இப்பொழுது பார்க்கப்படுகிற ஆகாரத்தை அனுவாதம் செய்கிற 'த்வம்' (நீர்) என்னும் பதத்தினால் குறிக்கப்பட்ட வஸ்துவுக்கு அவ்யய, என்னும் பதம் விஶேஷணமாக இருப்பதினால் ஜீவன் முதலியவர்களுக்கு ஸாதாரணமாகிய ஸ்வரூபம் மாத்திரம் நித்தியம் என்பதைச் சொன்னால் ஒரு விஶேஷமுமில்லை, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதாவது எவ்வித ஸ்வரூபத்தை உடையவராகவும்' என்று ஆரம்பித்து. இவ்விடத்தில் விபூதி என்னும் பதத்தினால் நித்ய விபூதி சொல்லப்படுகிறது இரண்டு விபூதியையும் சொன்னால் வஸ்துக்களின் ஸ்வரூபத்திற்கு அதிகப்படுதலும் குறைதலுமில்லை, என்பது மாத்திரம் சொல்லப்படுகிறது. 'ஶஶ்வத்' (எப்பொழுது மிருக்கிறது) 'ஶாஶ்வத' என்று சொல்லப்படுகிறது. அழிவில்லாமைக்குக் காரணம், நித்யமாகிய வேதத்தில் சொல்லப்பட்டிருக்கை, என்கிற அபிப்ராயத்

1 கௌஷீதகீ - 3 - 9.

2 முண்டகம் - 1 - 1 - 6.

3 புருஷஸூக்தம்.

ஃவஉக்ஷாாஂ வாஉஂ வெஜிதவ்ூஂ
ஃவஉவஸ்ூ விஶ்வஸ்ூ வாாஂநியாநஂ ।
ஃவஉவ்ூயஶ்ாஶ்வதயஉ்ூெகாப்தா
ஸநாதநஸ்வஂ வாஈஷொ உதொ செ ॥ 18

ப - ரை] வெஜிதவ்ூஂ - அறியத்தகுந்ததான, வாஉஂ - உத்தமமான, அக்ஷாஂ - அக்ஷரம் என்று சொல்லப்பட்டதும், ஃவஂ - நீரே, அஸ்ூ - இந்த, விஶ்வஸ்ூ - ப்ரபஞ்சத்திற்கு, வாஂ - உயர்ந்த, நியாநஂ - ஆதார மும், ஃவஂ - நீரே, அவ்ூயஃ - அழிவில்லாதவரும், ஃவஂ - நீரே, ஶாஶ்வதய உ்ூெகாப்தா - நித்தியமான தர்மத்தைக் காப்பாற்றுகிறவரும் (நீரே), ஸநாதநஃ - அனாதியாகிய, ஃவஂ - நீர், வாஈஷஃ - புருஷனாக, உதஃ - எண்ணப்பட்டீர். 18

பா] உபநிஷத்துக்களில் 1 'இரண்டு வித்யைகள் அறியத்தக்கவைகள்' என்று அர்த்தமுள்ள வாக்யம் முதலியவைகளில் அறியத்தக்கதாகச் சொல்லப்பட்ட உத்தமமான அக்ஷரம் நீரே. இந்த லோகத்திற்கு முக்

களின் கூட்டங்களைக் குறிக்கிறது. அதிலும் கிரீடத்தைச் சொன்னது, அது இவன் ஸர்வேஶ்வரன் என்பதைத் தெரிவிக்கிறதானபடியினால். கிரீடம் என்றும், கரண்டிகை, என்றும் தலையில் அணியக்கூடிய மகுடம இரண்டு விதம், அவற்றுள் கிரீடம் உயர்ந்தவரால் தரிக்கக் கூடியது 'ஶஜிநஂவகிூணஂவ' என்பது, ஆயுதங்களின் கூட்டத்தைக் குறிக்கிறது, அதிலும சக்கரம் முதலியவற்றைச் சொல்லி இருப்பது அது பகவானுக்கு அஸாதாரணம் என்று ப்ரஸித்தமானபடியினால். 17

'ஃவஉக்ஷாாஂ' என்கிற ஶ்லோகத்தினால், இவ்விதமாகப் பகவானைப் பார்த்ததினால் 'அக்ஷாஂ வெஜிதவ்ூஂ அவ்ூயஸநாதந, வாஈஷ' முதலிய பதங்களினால், முண்டகோபநிஷத்து முதலிய ஶ்ருதிகளை ஞாபகப் படுத்துகிறான், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'உபநிஷத்துக்களில்' என்று. 'சொல்லப்பட்ட' என்கிற இடத்தில் 2 'பிறகு பரவிதயை, எந்த வித்யையினால் அந்த அக்ஷரம அறியப்படுகிறதோ' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளினால், என்று சேர்த்துக்கொள்ளவேண்டியது. 'விஷ்ணுவென்று பெயரை உடைய எல்லாவற்றிற்கும் ஆதாரமான ப்ரகாஶத்தை' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவற்றை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்— 'இந்த ப்ரபஞ்சத்திற்கு' என்று. 'நியீயதஅஸிநூ' (இந்த இடத்தில்

1 முண்டகம் - 1 - 1 - 3.
2 முண்டகம் - 1 - 1 - 5.

றீர். நித்யமான வேதத்தில் சொல்லப்பட்ட தர்மத்தை இப்படிப்போன்ற அவதாரங்களினுல் காப்பாற்றுகிறவரும் நீரே. அனுதியான புருஷனும் நீரே, என்று என்னுல் தெரிந்துகொள்ளப்பட்டீர். † 'நான் இந்தப் பெரிய புருஷனை அறிந்தேன்' என்றும் ‡ 'மேலானவனைவிட மேலான புருஷனை. என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லப்பட்ட அனுதியான புருஷன் நீரே, என்று என்னுல் அறியப்பட்டீர். அதாவது யதுகுலத்திற்குத் திலகமாகிய நீர் இப்படிப்பட்டவர் என்று இப்பொழுது என்னுல் பார்க்கப்பட்டீர் ; என்று அர்த்தம். 18

---

தினுல் 'வேதத்தில் சொல்லப்பட்ட' என்று சொல்லப்பட்டது. 'நாரா யணபராஸ்தயஊஷோமோஷூா' என்றிவை முதலிய இடங்களிலும் வேதத்தில் சொல்லப்பட்ட விஶேஷமான தர்மமே சொல்லப்படுகிறது. என்று அபிப்ராயம், ப்ரத்யக்ஷம், ஶாஸ்த்ரம் இவைகளினுல் ஏற்பட்ட அர்த்தம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல், 'இப்படிப்போன்ற அவதாரங்களினுல்' என்று சொல்லப்பட்டது. புருஷனைப்பற்றிச் சொல்லுகிற ஶ்ருதிவாக்யங்க ளிரண்டுகளாலும் உபாஸிக்கப்படுகிறவன், என்பதையும், அடையப்படுகிறவன், என்பதையும் காட்டி இருக்கிறது. 'முதலிய' என்னும் பதத்தினுல் 1 எதினுல அழிவில்லாதவனும், ஸத்யமுமான புருஷனை, அறிகிருனே' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம்முதலியதும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. 'ஸநாதந' என்னும்பதத்தினுல் ஸத்யம் என்கிற பதத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது. ஊத:, என்று தனனுடைய அபிமானம் மாத்ரத்தைச சொல்லுகிறது, என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிருர்—'தெரிந்துகொள்ளப்பட்டீர்' என்று இநத ஶ்லோகத்தில் 'க்ஷம' (நீர்) என்று பழயமாம்ஸமயமானக் கண்ணினுல் தெரிநதுகொளளபபட்ட ஆகாரத்தை அனுவாதம் செய்கிறது. மிகுதியினுலோவெனில் திவ்யமான கண்ணை அடைந்ததினுல நேராகப் பார்க்கப்பட்ட ஆகாரத்தைச சொலலி இருக்கிறது. ப்ரபாவததைபபற்றிய ஞானம் முன்னமேயே உண்டானபடியினுல், என்கிற அபிபராயத்தினுல் சொலலுகிருர். 'அதாவது யதுகுலத்திற்கு' என்று ஆரம்பித்து. பொதுவாக இருக்கிற ஊத:, என்னும் பதம் இவ்விடத்தில 'வஶ்ரீ' என்று கீழ்சசொல்லப்பட்ட நேராகப் பார்ப்பதாகிய விஶேஷத்தில் முடிவுபெறுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல் 'இப்பொழுது என்னுல் பார்க்கப்பட்டீர்' என்று சொல்லப்பட்டது. 18

---

† புருஷஸூக்தம்.

‡ முண்டகம - 31 - 2,- 8

1 முண்டகம் - 1 - 2 - 16

அநாதிமத்⁴யாந்தமநந்தவீர்யமநந்தபா³ஹும் ஶஶிஸூர்யநேத்ரம் | பஶ்யாமி த்வாம் தீ³ப்தஹுதாஶவக்த்ரம் ஸ்வதேஜஸா விஶ்வமித³ம் தபந்தம் ॥     19

ப - ரை] அநாதி³மத்⁴யாந்தம் ஆதி நடுவுமுடிவு இல்லாதவராயும், அநந்தவீர்யம் அளவில்லாத வீர்யத்தை உடையவராயும், அநந்தபா³ஹும் எண்ணிறந்த கண்களை உடையவராயும், ஶஶிஸூர்யநேத்ரம் சந்திரன் ஸூர்யன் இவர்களைப்போன்ற கண்களை உடையவராயும், தீ³ப்தஹுதாஶவக்த்ரம் தீ³ப்த எரிந்துகொண் டிருக்கிற, ஹுதாஶ அக்நியைப்போன்ற, வக்த்ரம் முகங்களை உடையவராயும், ஸ்வதேஜஸா தம்முடைய தேஜஸ்ஸிஞல், இத³ம் இந்த, விஶ்வம் ப்ரபஞ்சத்தை, தபந்தம் எரித்துக்கொண்டேயிருக்கிற, த்வாம் உம்மை, பஶ்யாமி பார்க்கிறேன். 19

பா] ஆதி, மத்யம், அந்தமில்லாதவராகவும், எல்லை இல்லாத மேன்மை

தா,] அநாதி³மத்⁴யாந்தம்' என்கிற இடத்தில் 'அந' என்னும் விகுதி அதை விட வேறு என்னும் அர்த்தத்தைச் சொல்லும் பக்ஷத்தில் 1 'அஹமாதி³ஶ்ச மத்⁴யம் ச பூ⁴தாநாமந்த ஏவ ச |' 2 'அஹமாதி³ஶ்ச மத்⁴யம் ச பூ⁴தாநாமந்த ஏவ ச' என்றிவை முதலியவைகளோடுவிரோதிக்கும், ஆகையிஞல் இல்லை, என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிருர்—'ஆதிமத்யம், அந்தம், இல்லாதவராயும்' என்று. 'நாஶம்ʼநாந்தம்' என்பது ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது, இது விக்ரஹத்தைப்பற்றிச் சொல்லுகிறது, ஆகையிஞல் புனருக்தி இல்லை. அன்றிக்கே உத்பத்தி, ஸ்திதி, நாஶம், என்கிற விகாரங்களில்லை என்று ஓரிடத்திலும், மற்ருேரிடத்தில் அவைகளுக்குக் காரணமில்லை என்றும் சொல்லுகிறது, என்று பிரித்துக்கொள்ளவுமாம். அதுவுமல்லாமல் காலத்திற்கு அபிமானியாகிய ரூபத்தைப் பார்க்கிறபடியிஞல் 3 'அநாதி³ர்ப⁴க³வாந்காலः' என்பதைப்போல காலம் என்கிற விபூதி நித்தியம என்பதைச் சொல்லுகிறதாகவுமாம். வீர்யம் அனந்தமாகவிருக்கையாவது-தாரதம்மியத்திஞலுண்டான அளவில்லாமை என்கிற அபிப்ராயத்திஞல் சொல்லுகிருர்—'எல்லை இல்லாத மேன்மையை உடைய வீர்யத்தை உடையவராகவும்' என்று குறித்தது மாத்ரம்தான் அர்த்தம் என்பதை விலக்குவதற்காக ஒரே இடத்தில் சொல்லி இருப்பவைகளுக்குள் ஒன்றைச சொன்ஞல் மற்றவைகளும் தானே ஏற்படுகின்றன, எனகிற அபிப்ராயத்திஞல் சொல்

1 பகவத்கீதை - 10 - 32     2 பகவத்கீதை - 10 - 20,
3 விஷ்ணு புராணம் - I - 2 - 16.

யை உடையவீர்யத்தை உடையவராகவும், இங்கு வீர்யம்,என்னும் பதம் மற்றவைகளைக் குறிப்பதற்காக, எல்லை இல்லாத மேன்மையை உடைய ஜ்ஞானம், பலம், ஐஶ்வர்யம், வீர்யம், ஶக்தி, தேஜஸ்ஸு, இவைகளுக்கு இருப்பிடமாகிய, என்று அர்த்தம், கணக்கில்லாத கைகளை உடையவராகவும், இதுவும் மற்றவைகளைக் குறிப்பதற்காக, கணக்கில்லாத கைகள், வயிறுகள், கால்கள், முகங்கள் முதலியவைகளை உடையவராகவும், சந்திரனைப்போலவும் ஸூர்யனைப்போலவும், அனுக்ரஹம், ப்ரதாபம், இவைகளை உடைய எல்லாக் கண்களையுமுடையவராகவும், அதாவது நமஸ்காரம் முதலியவைகளைச் செய்கிற அனுகூலரான தேவதைகள் முதலியவர்களைக்குறித்து அனுக்ரஹமும், அவர்களுக்கு விரோதிகளான அசுரர்கள் ராக்ஷஸர்கள் முதலியவர்களைக் குறித்து ப்ரதாபமும், [1]ரக்ஷாம

---

லுகிறார்—'இங்கு வீர்யம் என்னும் பதம் மற்றவைகளைக் குறிப்பதற்காக' என்று 'அநேகபாஹும்' என்று கைகள் அநேகம் என்பது மாத்ரம் முன்பு சொல்லப்பட்டது. 'அநந்தபாஹும்' என்று, இங்கே அவைகளுக்குக் கணக்கில்லை, என்பது சொல்லப்படுகிறது, ஆகையினால் புனருக்தி இல்லை, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கணக்கில்லாத கைகளை உடையவராகவும்' என்று. 'அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்' என்று முன்பு சொல்லப்பட்ட கும்பலில் ஒன்று கணக்கில்லாதது என்று சொன்னது மற்றவைகளையும் குறிப்பதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதுவும்' என்று ஆரம்பித்து. 'ஶஶிஸூர்யநேத்ரம்' என்கிற இடத்தில், சந்திரஸூர்யர்களையே கண்ணாக நிரூபித்திருக்கவில்லை, அப்படி நிரூபித்துச சொல்லும் ஸந்தர்ப்பமில்லாமையினாலும் இந்த ரூபம் கணக்கில்லாத கண்களை உடையதாகையினாலும், ஆகையினால் அவைகளுக்கு ஸமமான என்பதே சொல்லப் படுகின்றது. அதிலும் சில கண்கள் சந்திரனுக்கு ஸமமானவைகள் என்றும், சில கண்கள் ஸூர்யனுக்கு ஸமமானவைகள் என்றும் பிரித்துச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால் எல்லாக் கண்களுமே இரண்டுக்கும் ஸமம், என்பது சொல்லப்படுகின்றது. என்று சொல்லுகிறார்—'சந்திரனைப்போலவும்' என்று ஆரம்பித்து. ஒரேகாலத்தில் அனுக்ரஹம், ப்ரதாபமிவைகள் ஒன்றுக்கொன்று விருத்தங்களாகையினால், அவைகளுக்கு விஷயத்தைப் பிரித்துக் காட்டுகிறார—'அதாவது' என்று ஆரம்பித்து. அதையே மேலே சொல்லப்போகிறதைக்கொண்டு ஸ்த்தாபிககிறார்—'ரக்ஷாம்ஸி' என்று ஆரம்பித்து. 'தீப்தஹுதாஶவக்த்ரம்' என்று முன்புசொல்லி இருந்தபோதிலும் மறு,

---

1 பகவத்கீதை - 11 - 36.

ஸிஹீதாநிதிமௌக்ஷூவஷி ஸவெஃநக்ஸூஷி வஸீஜவஜ ாஃ" என்றல்லவோ மேலே சொல்லப்போகிறுர். மிகவும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற ப்ரளயகாலாக்நியைப்போல் எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதற்குத்தகுந்த முகங்களை உடையவராகவும், தேஜஸ்ஸாவது அயலாரை அடக்கும்படியான ஸாமர்த்தியம், உம்முடையதாகிய தேஜஸ்ஸிஞல் இந்த லோகத்தைத்தபித்துக் கொண்டிருக்கிற உம்மைப்பார்க்கிறேன். இப்படிப்பட்டவராயும் எல்லா வற்றையும் ஸ்ருஷ்டிப்பவராயும்.எல்லாவற்றிற்கு மாதாரமானவராகியும் எல்லாவற்றையும் நியமிப்பவராகியும், எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்பவராகியும், ஜ்ஞானம் முதலிய அளவில்லாத குணங்களுக்கு ஸமுத்ரமாகியும், ஆதிமத்யம் அந்தமில்லாதவராயும், இப்படிப்பட்ட திவ்விய விக்ரஹத்தை உடையவராயுமிருக்கிற உம்மை நீர் உபதேசம் செய்ததைப்போலவே நேரில் பார்க்கிறேன் என்று அர்த்தம். ஒரு திவ்

படியும், 'தீ்வஹுதாபாவக்த்ரம்' என்று விசேஷித்துச் சொல்லி இருப்பது முகத்திஞல் செய்யப்படுகிற லோகங்களை விழுங்குகிறதாகிற விசேஷத்தைச் சொல்லுவதில் தாதபர்யத்திஞல், என்கிற அபிப்ராயத்திஞல சொல்லுகிருர்—'மிகவும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற' என்று ஆரம்பித்து. 'எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதற்குத் தகுந்த' என்று இரண்டுக்கும் பொதுவான ஸ்வபாவத்தைச் சொலலுகிறது. இவ்விடத்தில் அக்நியே முகம், என்று மற்றவர்கள் சொல்லி இருப்பதைத் தள்ளுவதற்காக 'காலாநலஸந்நிபாநி' என்று மேலே சொல்லப்போகிறதை நினைத்துக்கொண்டு. 'காலாக்நியைப்போல்' என்று சொல்லப்பட்டது. வஸுக்களின கூட்டத்திற்குள்பட்ட பாவகன் தனியாகசசொல்லப்பட்டான் 'விஸ்வதீஶம்தவஷம்' என்று சொல்லி இருக்கிறபடியிஞல் இவ்விடத்தில் தேஜஸ்ஸு என்னும் பதத்திஞல் மற்றவர்களை ஸகாயமாக அபேக்ஷிக்காமை.சொல்லப்படுகிறதல்ல, ப்ரகருதத்தி லுபயோகப்படாமையிஞல், ஆகையிஞல் அதற்குத் தகுநத அர்த்தத்தைச்சொல்லுகிருர்—'தேஜஸ்ஸாவது' என்று 1 'காலஃவஷதிஹுதாநி' என்பவை முதலியவைகளுக்குக் காரணத்தைக்காட்டி இருக்கிறது இது, என்கிற அபிப்ராயத்திஞல் சொல்லுகிருர்—'உம்முடையதாகிய'என்று ஆரம்பித்து. முதலில் கேட்கப்பட்டதும், பிறகு திவ்வியக்கண்ணிஞல் நேராகப் பார்க்கப்பட்டதுமாகிய, எலலா ஆகாரங்களையும் சேர்த்துச் சொல்லுகிருர்—'இப்படி' என்று ஆரம்பித்து. ஒருதேகத்திற்கு அனேகம் கைகள் முகங்களிருப்பது முன்பு கேட்கப்பட்டு மிருக்கிறது, பார்க்கப்பட்டு மிருக்கிறது. வயிறு முதலியவைகள் அனேகம் என்பது எப்

1 மஹா பாரதம் உதயோக பர்வம்

விய தேஹகத்தில் அனேகம் வயிறு முதலியவைகள் எப்படி ஸம்பவிக்கும்? என்னில், இவ்விதமாகப் பொருந்தும். அளவில்லாத விசாலத்தை உடைய ஒரு இடுப்பிலிருந்து மேல்பாகத்தில் கீழ்ச்சொல்லியபடி அனேகம் வயிறு முதலியவைகளும் கீழ்ப்பாகத்தில் முன்பு சொல்லியபடி அனேகம்

---

படிப பொருந்தும், என்று ஆக்ஷேபிக்கிறார்—'ஒரு திவ்விய தேஹத்தில்' என்று ஆரம்பித்து. பரிஹரிக்கிறார்—'இப்படி' என்று ஆரம்பித்து, ஶாஸ்த்ரத்தில் சொல்லி இருப்பதற்குத் தக்கபடி எல்லாம் சொல்லவேண்டியது, என்று தாத்பர்யம். 'அளவில்லாத' என்பவை முதலியவைகளுக்குக் கருத்தாவது என்னவெனில்[1] 'அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்' என்று அவயவங்கள் அனேகம் என்பது மாத்ரம் சொல்லப்பட்டபடியினால் ரூபம் ஒன்று என்று ஏற்படுகிறது. ஒரே விக்ரஹத்தைப்பற்றிய முன்பின் ஸந்தர்ப்பங்களை பராமர்சிப் பதினாலும் இதுவே உசிதம் "பஶ்ய மே பார்த்த ரூபாணி" என்று ஆரம்பித்திருக்கிற படியினால் இவ்விடத்திலும் வயிறு முதலியவைகள் அனேகம் என்பது அனேகம் விக்ரஹங்களைப் பற்றியது, என்பதும் ஸரியல்ல. அப்படியானால் அனேக விக்ரஹங்களை உடைய, என்றிவ்வளவே சொல்லவேண்டியதாகும் அனேகம் ஶரீரங்களில் அனேகம் கைகள் அனேகம் வயிறுகள் இருக்கின்றன என்பவை முதலியது விஶேஷித்துச்சொல்ல வேண்டியதில்லையல்லவா. அனேகம் வயிறு முதலியவைகளை உடையரூபமும் பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில அறியப் படவில்லை, என்பதும் ஸரியல்ல. அந்த ஶாஸ்த்ரம் இப்பொழுது முழுமையும் பரவி இருக்கவில்லையாகையினால், நாரதர் முதலியவர்களால் பார்க்கப்பட்ட ரூபத்தையும், இப்பொழுது அந்த ஶாஸ்த்ரத்தில் நாம் பார்க்கவில்லை. இதைவிட வேறுவிதமான விஶ்வரூபமே நாரதரால் பார்க்கப்பட்டது. அதைவிட வேறு தருதராஷ்டிரனால் பார்க்கப் பட்டது. ஆகையினால் வெவ்வேறு ஸம்ஹிதைகளில், வராஹம், நரஸிம்மம் முதலிய ரூபத்திற்கு வெவ்வேறான அமைப்புகளும் வர்ணங்களும், கைமுதலியவைகளும் விசித்திரங்களாக எப்படி இருக்கின்றனவோ. அபபடிக்கே ஸ்ரீ விஶ்வரூபவிக்ரஹத்திலும் வசனம் சொல்லி இருப்பதைக்கொண்டு அந்தந்த விதமான விசித்ரங்களான தன்மைகளை அங்கீகரிக்கிறோம். ஆகையினால் கிளைகள் வேர்கள் அனேகங்களாக இருந்தபோதிலும் கட்டை ஒன்றாக இருப்பதினால் மரம் ஒன்றாக இருப்பதைப்போல் கைகள் வயிறுகள் முதலியவை அனேகங்களாக இருந்தபோதிலும் அனேகம் என்று சொல்லப்படாத ரூபம் ஒன்றாக

---

1 பகவத்கீதை - 11 - 16.

கால் முதலியவைகளும், அதில் ஒவ்வோரு முகத்திலும் இரண்டு கண்களும் இருக்கின்றனவாகையினால் விரோதமில்லை. 19

பா] இப்படிப்பட்ட உம்மைப்பார்த்து தேவர் முதலியவர்களும் நானும் பயப்படுகிறோம், என்று சொல்லுகிறான்,

𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌰𑌿𑌦𑌮𑌨𑍍𑌤𑌰𑌂 𑌹𑌿 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑍇
𑌨 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃। 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌽𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌰𑍂𑌪𑌮𑍁𑌗𑍍𑌰𑌂 𑌤𑌵𑍇𑌦𑌂 𑌲𑍋
𑌕𑌤𑍍𑌰𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍 ॥ 20

ப - ரை] 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍 பெரியமனதை உடைய க்ருஷ்ண, 𑌏𑌕𑍇𑌨 ஒருவராகிய, 𑌤𑍍𑌵𑌯𑌾 உம்மால், 𑌇𑌦𑌂 இந்த, 𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌃 ஆகாசம் பூமி இவைகளுடைய, 𑌅𑌨𑍍𑌤𑌰𑌂 நடுவானது, 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 வ்யாபிக்கப்பட்டது, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 எல்லா, 𑌦𑌿𑌶𑌃 திக்குக்களும், (வயாபரிக்கப்பட்டன) 𑌤𑌵 உம்முடைய, 𑌇𑌦𑌂 இந்த 𑌅𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 ஆச்சரியமாயும், 𑌉𑌗𑍍𑌰𑌂 பயங்கரமாயுமிருக்கிற, 𑌰𑍂𑌪𑌂 ரூபத்தை, 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 பார்த்து, 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌂 மூன்று விதமான ஜனங்களும், 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂 மிகவும் பயப்படுகின்றது.()

பா] 𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌃 என்னும் பதங்கள் மேலே இருக்கிற லோகங்களையும் கீழே இருக்கும் லோகங்களையும் குறிப்பதற்காக. இந்த லோகங்

---

*இருப்பதினால், ரூபம் ஒன்று என்பதும் உசிதம், என்று இவை எல்லாம் முன்பு சொல்லியபடி என்னும் பதத்தினால் குறிக்கப்பட்டது. ஒரு முகத்தில் இரண்டு கண்கள், என்பதற்கு ஒவ்வொரு முகத்திலும், என்று அர்த்தம்.* 19

*'இப்படிப்பட்ட' என்பதற்கு மிகவும் பயங்கரமான ரூபத்தை யுடைய என்றர்த்தம. '𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂' என்கிற விசேஷணத்தை அனுஸரித்து 𑌲𑍋𑌕 என்னும் பதம் ஜனங்களைச்சொல்லுகிறது. என்று சொல்லுகிறார்? 'தேவர்முதலியவர்களும்' என்று 1 '𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌽𑌹𑌮𑍍' என்று மேலே சொல்லப்போகிறதை யோசித்து 'நானும்' என்று சொல்லப்பட்டது. அளவில்லாததென்பது அனேக இடங்களில் சொல்லப்பட்டபடியினால் அளவிடப்பட்ட இரண்டு லோகங்களில் வ்யாபித்திருக்கிறதென்று சொன்னது அதனால குறிக்கப்பட்ட இரண்டுவித லோகங்களின் கூட்டங்களையும் குறிப்பதற்காக என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— '𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌃 என்னும் பதம்' என்று 2 '𑌅𑌨𑍍𑌤𑌰𑌮𑌵𑌕𑌾𑌶𑌾𑌵𑌧𑌿 𑌪𑌰𑌿𑌧𑌾𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌧𑌿𑌭𑍇𑌦*

---

1 *பகவத்கீதை* - 11 - 23.

2 *நாமலிங்கானு சாஸனம்* 3 - *காண்டம் நிரார்த்தவர்க்கம்* 347.

களின் ஆதார மாவது—இடம். எந்த இடத்தில் இந்த லோகங்களிருக்கின்றனவோ, அந்த இடங்களெல்லாமும் திக்குக்களெல்லாமும் நீர் ஒருவரால் வ்யாபரிக்கப்பட்டன அளவில்லாத நீளம் விசாலம் இவைகளையுடையதாயும் மிகவும் ஆஶ்சர்யமாயும் மிகவும் பயங்கரமாயும் இருக்கிற உம்முடைய இந்த ரூபத்தைப்பார்த்து யுத்தத்தைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசையினால் வந்திருக்கிற ப்ரும்மா முதலிய தேவர்கள் அஸுரர்கள் பித்ருக்களின் கூட்டம் ஸித்தர்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் ராக்ஷ

---

*தாதுமெஷு' என்று அனேக அர்த்தங்களைச்சொல்லுகிற ஆதாரம் என்னும் பதத்திற்கு ப்ரக்ருதத்திற்கு அநுகுணமான அர்த்தத்தைச் சொல்லுகிறார்.—'இடம்' என்று ஶக்தி விஶேஷத்தினால் தடங்கல் விரோதம் முதலியவைகளில்லைஎன்கிற அபிப்ராயத்தினால் இடத்தை விவரித்துக் கொண்டுசேர்ந்த அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'எந்த இடத்தில்' என்றாரம்பித்து, 'அளவில்லாதநீளம் விஶாலம்இவைகளையுடையதாயும்'என்பது முன்புசொன்னதைச்சேர்த்துச்சொல்லப்பட்டது. இதின்கருத்தாவது கீழ்மேல்வாக்யங்கள் விக்ரஹத்தைப்பற்றியவைகளானபடியினால் நடுவிலேஸ்வரூபம்வ்யாபரித்திருப்பது,என்று சொல்லுவதற்கு ப்ரயோஜனமில்லாமையினாலும்,விக்ரஹம்மிகவும்பெரிதுஎன்பதுஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியினாலும் இங்கு வ்யாபரித்திருக்கிறது என்று சொல்லியிருப்பது விக்ரஹத்தைப்பற்றியதுதான், எனறு. இவ்விடத்தில் 'லோகத்ரயம்' என்னும் பதத்தினால் பூமி முதலிய லோகங்கள் சொல்லப்படவில்லை, அவைகளில் 'ப்ரவ்யதிதம்' (மிகவும் பயந்துவிட்டது. என்று சொல்லியிருப்பது பொருந்தாதாகையினால், ஆகையினால் 'மஞ்சா: க்ரோஶந்தி' (கட்டில்கள் கூப்பிடுகின்றன) என்கிற இடத்திலேபோல அதிலிருக்கும் ப்ராணிகளையே சொல்லவேண்டும், ஆகையினால் லக்ஷணைசொல்லுவதைப் பார்க்கிலும் 'லோக' என்னும்பதமே முக்யமாகவே ஜனங்களைச் சொல்லுகிறதென்பது சிறந்தது. சத்ரு, மித்ரன், இரண்டு வகுப்பிலும் சேராதவன், என்று ஜனங்கள் மூன்றுவித மென்பதும் ப்ரஸித்தம் அவ்வித ஜனங்களெல்லாம் யுத்தத்தைப் பார்க்க வேண்டும் என்கிற ஆசையினால் வந்திருக்கின்றன, எனபதும் ஏற்பட்டிருக்கிறது, ஆகையினால் மூன்று லோகங்களிலு மிருக்கும் சிற்சில புருஷர்கள் பயந்ததைப் பார்த்ததினால் 'லோகத்ரயம்' என்று சொல்லியிருக்கிறது என்று ப்ரமிக்கவேண்டாம். இது அர்ஜுநனுடைய ஊஹமுமல்ல பார்த்ததையே முழுமையும் இங்கே சொல்லுகிறபடியினால் இதையெல்லாம் சொல்லுகிறார்—'யுத்தத்தை' என்றாரம்பித்து. இவ்விடத்தில் தேவர்கள் அஸுரர்கள் முதலியவர்களை எடுத்தது மனு*

ஸர்கள் இவர்களில் விரோதிகள் பக்திமான்கள மத்யஸ்தர்கள் ஆகிய மூன்றுவித ஜனங்களும் மிகவும் பயந்துவிட்டது மஹாத்மா அளவிட முடியாத மனதின் வ்யாபாரத்தையுடையவராகிய பகவானே. இவர்களுக்கும் அர்ஜுநனுக்குப்போலவே ப்ரபஞ்சத்திற்கு ஆதாரமாகிய தன்னுடைய ரூபத்தைப்பார்ப்பதற்குக் காரணமாகிய திவ்யமான கண் பகவானால் கொடுக்கப்பட்டது. எதற்காகவெனில் அர்ஜுநனுக்குத்தன்னு

---

ஷ்யர்களை விலக்குவதற்காக. யுத்தத்திற்காக வந்திருக்கிற எல்லோரும் பகவானுடைய விக்ரஹத்தைப் பார்க்கவில்லை யாகையினால், 'வ்' என்னும் உபஸர்க்கத்தோடு சேர்ந்ததாதுவின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'மிகவும் பயந்துவிட்டது' என்று. மஹாத்மா என்னும் பதம் கம்பீரமான புத்தியை யுடையவர்களிடத்தில ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிறபடியினாலும், விக்ரஹம் பயங்கரமாக இருப்பதைப்போலவே அபிப்ராயத்தை அறியமுடியாமையும் பயப்படுவதற்குக் காரணமாகையினாலும், இந்த அர்த்தமே இவ்விடத்தில் உசிதம், என்கிற அபிப்ராயத்தினால சொல்லுகிறார்—'அளவிடமுடியாத' என்றாரம்பித்து. இங்கு 1 'த்ரஷ்டுமிச்சாமி தே ரூபம்' என்றல்லவோ ஆரம்பிக்கப்பட்டது. அப்படியிருக்க மனுஷ்யர்களைப்போலவே மாம்ஸமயமான கண்ணையுடைய தேவர் முதலியவர்களுக்கும் பகவானுடைய விஶ்வரூப விக்ரஹத்தின் ஸாக்ஷாத்காரமுண்டாயிற்று என்று எப்படி சொல்லப்படுகிறது; என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இவர்களுக்கும்' என்றாரம்பித்து. ஶிஷ்யனாகவும் மிகவும் வணங்கினவனாகவும் மிகுந்த பக்தியை யுடையவனாகவும் இருக்கிற அர்ஜுநனுக்குத் தன்னுடைய ரூபத்தைக் காட்டவேண்டியது அவச்யம், அதற்காக அவனுக்கு மாத்திரம திவ்யமான கண் கொடுக்கப்பட்டது. 2 'தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்ஶனகாங்க்ஷிண:' என்று மேலே சொல்லவும் போகிறார், ஆகையினால் பொதுவாக எல்லா ஜனங்களுக்கும் திவ்யமான கண் கொடுப்பதற்குக் காரணம் தெரியவில்லை, என்கிற அபிப்ராயத்தினால் ஆக்ஷேபிக்கிறார்—'எதற்காக' என்று. ஸமாதானம் சொல்லுகிறார்-'அர்ஜுநனுக்கு' என்றாரம்பித்து. தேவர் முதலியவர்களுக்கும் இந்த ரூபத்தைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசை ஸம்பவிக்குமாதலாலும், அவதார ரூபத்தைப்போலவே இந்த ரூபத்தையும் பார்ப்பதற்குக் காரணமான ஸுக்ருதம் எல்லோருக்கும் ஒரேகாலத்தில் பரிபாகத்தை அடையலாமாகையினாலும், அல்பர்களைப்போலவேபெரியோர்களுக்கும்

---

1 பகவத்கீதை - 11 - 9.   2 பகவத்கீதை-11-52.

டைய ஐஶ்வர்யம் எல்லாவற்றையும் காட்டுவதற்காக, ஆகையினால் '𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌰𑍂𑌪𑌮𑍁𑌗𑍍𑌰𑌂 𑌤𑌵𑍇𑌦𑌂 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍' என்று சொல்லப்படுகிறது. 20

**𑌅𑌮𑍀 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌰𑌸𑌂𑌘𑌾 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌭𑍀𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌞𑍍𑌜𑌲𑌯𑍋 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 । 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌂𑌘𑌾𑌃 𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑍁𑌷𑍍𑌕𑌲𑌾𑌭𑌿𑌃 ॥** 21

ப - ரை] 𑌅𑌮𑍀 - இந்த, 𑌸𑍁𑌰𑌸𑌂𑌘𑌾𑌃 - தேவர்களின்கூட்டங்கள், 𑌤𑍍𑌵𑌾 - உம்மை, 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 - ப்ரவேசிக்கிறார்கள்(அதாவது ஸமீபத்தில் வருகிறார்கள் (அவர்களுக்குள்) 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 சிலர், 𑌭𑍀𑌤𑌾𑌃 பயந்தவர்களாய், 𑌪𑍍𑌰𑌾𑌞𑍍𑌜𑌲𑌯𑌃 கைகளைக்கூப்பிக் கொண்டவர்களாய், 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 (ஸ்தோத்திரங்களை)ச் சொல்லுகிறார்கள், 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌂𑌘𑌾𑌃 மஹாருஷிகள் ஸித்தர்கள் இவர்களின் கூட்டங்கள், 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 மங்களங்கள் உண்டாகவேண்டும் 𑌇𑌤𑌿 என்று, 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 சொல்லி, 𑌪𑍁𑌷𑍍𑌕𑌲𑌾𑌭𑌿𑌃 பூர்ணங்களான, 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 ஸ்தோத்திரங்களினால், 𑌤𑍍𑌵𑌾 உம்மை 𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 ஸ்தோத்திரம் செய்கிறார்கள். 21

பா] உயர்ந்தவர்களான இந்தத் தேவர்களின் கூட்டங்கள் ப்ரபஞ்சத்

---

*பயத்தை உண்டாக்குதல் முதலியவைகளினாலே தடங்கலில்லாத தன்னுடைய ஐஶ்வர்யத்தை பரகாசப்படுத்துவதினால் ப்ரக்ருதத்தில்உபயோகமிருப்பதினாலும், எல்லோருக்கும் திவ்யமான கண்ணைக் கொடுத்தார் என்று தாத்பர்யம். இதையே அர்ஜுநனுடைய வார்த்தையினாலும் உறுதிப்படுத்துகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து.* 20

*''𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿'' என்கிற இடத்தில், ஸம்ஹாரம் செய்தல் முதலியது சொல்லப்படவில்லை. ஸ்தோத்திரம் முதலியவைகளோடு சேர்த்துச் சொல்லி இருக்கிறபடியினாலும், த்ருதராஷ்டிரன் பிள்ளைகளைப்போல அவர்களுக்கும் ஸமீபத்தில் மரணமில்லாமையினாலும்,மற்றவர்கள்சொன்ன பூமியில் அவதாரம் செய்திருக்கிற தேவதைகளைச்சொல்லுகிறது. என்பதற்கோ,மேலே சொல்லப்போகிற''𑌵𑍀𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍇''என்பவைமுதலியவைகளோடு விரோதம் வருகிறபடியினாலும், ஆகையினால் இவ்விடத்தில் ஸமீபத்தில் வருவதாகிய ஸேவையின் ப்ரகாரம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'உயர்ந்தவர்களான' என்று ஆரம்பித்து. ''𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌭𑍀𑌤𑌾𑌃'' என்பதினால் தைர்யமில்லாதவர்களைப்பற்றித் தனித்துச்சொல்லி இருப்பதினால், இந்த வாக்*

திற்கு ஆதாரமாகிய உம்மைப்பார்த்து, ஸந்தோஷத்தோடேகூடிய மனதை உடையவர்களாய்க்கொண்டு உம்முடைய ஸமீபத்தை அடைகிறார்கள். அவர்களுக்குள்ளேயே சிலர் மிகவும் பயங்கரமாகவும் மிகவும் ஆஶ்சரிய மாகவுமிருக்கிற உம்முடைய ரூபத்தைப்பார்த்து, பயந்தவர்களாய்க் கைகளைக்குவித்துக்கொண்டு, தங்கள் ஜ்ஞானத்துக்குத் தகுந்தபடி ஸ்தோத்திரங்களாக இருக்கிற வாக்யங்களைச் சொல்லுகிறார்கள். இன்னும் சில

---

*கியத்தினால், கலக்கமுடியாத மனதை உடையவர்களாய் ஸந்தோஷத்தை உடையவர்கள் சொல்லப்படுகிறார்கள், என்று தெரிவிப்பதற்காக. ப்ரும்மா முதலிய எல்லாத் தேவதைகளும ஸேவிப்பதற்காக வந்திருக்கிறார்கள், என்பது முதலில் சொல்லப்படுகிறது.* ‘உயர்ந்தவர்களான’ *என்பதோவெனில் ‘ஸுர’ எனனும் பதத்தினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லி இருக்கிறது. நாசமடைவதற்காகப் பிரவேசிக்கிறதை விலக்குவதற்காக* ‘ஸந்தோஷத்தை உடையவர்களாய்’ *என்று சொல்லப்பட்டது. மேலே சொல்லப்போகிற, வாயில் ப்ரவேசிப்பதை விலக்குவதற்காக—*‘உம்முடைய ஸமீபத்தை’ *என்று சொல்லப்பட்டது. ‘கேசித்’* (சிலர்) *என்று சொல்லி இருப்பது. ஒருவித ஸமுதாயத்தை விரும்புகிறபடியினாலும் ‘ஸுரஸங்கா:’* (தேவஸமூகம்)*என்று கீழேப் ப்ரஸ்தாவித்திருக்கிறபடியினாலும், வேறு ஜாதியைச் சொல்லாமையினாலும்,* ‘அவர்களுக்குள்ளேயே’ *என்று சொல்லப்பட்டது.* ‘மிகவும் பயங்கரமாகவும் மிகவுமாஶ்சர்யமாகவு மிருக்கிற’ *என்று,பயம் முதலியவைகளுக்குக் காரணமாகிய கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஆகாரத்தைசொல்லி இருக்கிறது. ‘புஷ்கலாபி:’* (பூர்ணங்களான) *என்று, மேலே சொல்லப்போகிறபடியினால் இவ்விடத்தில் அது இல்லை, என்று சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்,* ‘தங்கள் ஜ்ஞானத்துக்குத் தகுந்தபடி’ *என்று சொல்லப்பட்டது.* ‘ஸ்தோத்திரங்களாக இருக்கிற வாக்யங்களை’ *என்பது ‘க்ருணந்தி’ என்பதற்குவேண்டியதான கர்ம சேர்த்துக்கொள்ளப்பட் டிருக்கிறது. ஶ்ருதி முதலியவைகளில் ஏற்பட்ட ஸ்தோத்திரங்களைச் சொல்லுவது மாத்திரம் தான்என்றுதெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—*‘சொல்லுகிறார்கள்’ *என்று.இத்தாலும் ‘கேசித்’ என்பது சில தேவதைகளைச் சொல்லுகிறது, என்பது ஏற்பட்டது. மற்றப் பிராணிகள் ஓடுகின்றன, என்று மேலே சொல்லப்போகிறபடியினால். ‘ஸ்வஸ்தி’ என்பது முதல் பிரித்துச் சொல்லி இருக்கிறபடியினாலும், மஹா என்கிற விசேஷணத்தினாலும் ஏற்பட்டிருக்கிற அர்த்தம்* ‘இன்னும் சில’ *என்கிற பதத்தினால் குறிக்கப்பட்டது. மஹருஷி*

பரதத்துவம் தாழ்ந்ததத்துவம் இவைகளின் உண்மையைத் தெரிந்துகொண்ட மஹருஷிகளின் கூட்டங்களும் ஸித்தர்களின் கூட்டங்களும் மங்கள முண்டாகக்கடவது, என்று சொல்லிப்பூர்ணங்களாய் உமக்குத்தகுந்ததுகளான ஸ்தோத்திரங்களினால் ஸ்துதிக்கிறார்கள். 21

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா:
விஶ்வேஸ்விநௌ மருதஶ்சோஷ்மபாஶ்ச ।
கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா:
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஶ்சைவ ஸர்வே ॥ 22

ப - ரை] ருத்ராதித்யா: ருத்திரர்களும், ஸூரியர்களும், யே எந்த வஸவ: வஸுக்களும், ஸாத்யா: ஸாத்தியர்களும், விஶ்வே விஶ்வே தேவர்களும், அஶ்விநௌ அஶ்வினீ தேவதைகளும், மருதஶ்ச மருத்துக்களும், ஊஷ்மபாஶ்ச பித்ருக்களும், கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா: கந்தர்வர்கள் யக்ஷர்கள், அஸுரர்கள் ஸித்தர்கள், இவர்களுடைய கூட்டங்களும், ஸர்வேசைவ எல்லோரும், விஸ்மிதா: ஆஶ்சரியத்தை அடைந்தவர்களாய்க்கொண்டு, த்வாம் உம்மை, வீக்ஷந்தே பார்க்கிறார்கள். 22

---

*களின் கூட்டங்களாவது ப்ருகு முதலியவர்களின் கூட்டங்கள். ஸித்தர்களின் கூட்டங்களாவது ஸனகர் முதலியவர்கள். மஹருஷிகளாக இருப்பதினால் குறிக்கப்பட்ட பூர்ணமாக ஸ்தோத்திரம் செய்வதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—'பரதத்துவம்' என்று ஆரம்பித்து. "ஜிதந்தே" என்றிவை முதலியவைகளைப் போலபகதிக்குப் பரவசர்களாய் மங்களாசாஸனம் செய்கிறதாகவுமாம். ஸேவிக்கத்தகுந்த பகவானைப்பார்த்த மாத்திரத்தில் ஸேவிக்கிறவன் சொல்லும் சப்தமாகவுமாம் 'ஸ்வஸ்தி' என்றது. ஸ்தோத்திரமோவெனில் அதற்கப்புறம் அவனுடைய குணங்களின் சிறப்பைச் சொல்லுகிறது. ஆகையினாலேயே பசுக்களுக்கும் ப்ராமணர்களுக்குமாவது உலகங்களுக்குமாவது க்ஷேமமுண்டாகட்டும், என்று மற்றவர்சொன்ன அர்த்தம் ப்ரக்ருதத்தில் பொருந்தாது. இவ்விடத்தில் ஸ்தோத்திரம் பூர்ணமாக இருக்கையாவது ப்ரமாணங்களில் ஏற்பட்ட ஸர்வேஶ்வரனாக இருக்கை முதலியவைகளைச் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'உமக்குத்தகுந்ததுகளான' என்று.* 21

பா] "ऊष्मपाः" என்பது பித்ருக்களை, † சுடுகையுள்ள வஸ்துக்களை பாகமாக உடையவர்களல்லவோ பித்ருக்கள் என்கிற அர்த்தமுடைய ஶ்ருதிவாக்யம் இருக்கிறபடியினால். இந்த எல்லோரும் ஆஶ்சரியத்தை அடைந்தவர்களாய் உம்மைப்பார்க்கிறார்கள். 22

रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महा
बाहो बहुबाहूरुपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं
दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥ 23

ப-ரை] महाबाहो - நீண்டகைகளை உடைய ஶ்ரீ க்ருஷ்ணா, महत् — பெரிதாயும், बहुवक्त्रनेत्रं — அனேகம் முகங்களையும், கைகளையும் உடையதாயும், बहुबाहूरुपादं - அனேகம் கைகள் துடைகள் கால்கள் இவைகளை உடையதாயும், बहूदरं - அனேகம் வயிறுகளை உடையதாயும், बहुदंष्ट्राकरालं - அனேகம் கோரைப்பல்லுகளினால் பயங்கரமாகவுமிருக்கிற, ते-உம்முடைய, रूपं - ரூபத்தை, दृष्ट्वा - பார்த்து, लोकाः - ஜனங்களும், तथा - அப்படியே, अहं - நானும், प्रव्यथिताः - பயந்தவர்களாக (ஆனேம்). 23

பா] அனேகங்களாகிய கோரைப் பற்களினால் மிகவும் பயங்கரமான ஆகாரத்தை உடைய உம்முடைய இப்படிப்பட்ட இந்த ரூபத்தைப் பார்

தா] தேவஜாதியின் பிரிவுகளுடன் சேர்த்துச் சொல்லி இருப்பதற்குத்தகுந்தபடி ஊஷ்மபா என்கிற பதத்திற்கு அர்த்தம்சொல்லுகிறார்— 'பித்ருக்களை' என்று. 22

'रुद्रादित्याः' என்கிற ஶ்லோகத்தினால் ஆஶ்சர்யம் சொல்லப்பட்டது, 'रूपं महत्ते' என்கிற ஶ்லோகத்தில் பயம் சொல்லப்படுகிறது. முன் ஶ்லோகத்தில சொல்லியிருக்கும் 'लोकत्रय' என்னும் பதமே இந்த ஶ்லோகத்திலிருக்கும் 'लोकाः' என்னும் பதத்தினால் ஞாபகப்படுத்தப் படுகிறபடியினால் இவையிரண்டும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன, என்று காட்டுகிறார்—'முன்பு சொல்லிய' என்றாரம்பித்து. 'இப்படிப்பட்ட இந்த' என்று ஸ்வபாவங்களையும்வஸ்துவையும் சொல்லியிருக்கிறது. 'प्रस्थानं' 'प्रहरणं' என்றிவை முதலிய இடங்களில் 'प्र' என்னும் உபஸர்க்கம் இல்லை என்னும் அர்

† யஜுர்வேதம்-1-அஷ்டகம் 3-10-61.

த்து, முன்பு சொல்லிய ப்ரீதியை உடையவர்கள், சத்ருக்கள், மத்யஸ்தர்களாகிய மூன்று விதங்களாகிய ஜனங்களும், நானும், மிகவும் பயந்தவர்களாகிறோம். 23

𑌨𑌭𑌃𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌂
𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌵𑌿𑌶𑌾𑌲𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 |
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾
𑌧𑍃𑌤𑌿𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 𑌶𑌮𑌂 𑌚 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋 || 24

ப - ரை] 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋 - ஓ விஷ்ணுவே, 𑌨𑌭𑌃𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 - பரமபதத்தை அளாவியிருக்கிற, 𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 - ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற, 𑌅𑌨𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌂 - அனேகவிதங்களான வர்ணங்களையுடைத்தா யிருக்கிற, 𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 - திறக்கப்பட்ட வாயை உடைத்தாயிருக்கிற, 𑌦𑍀𑌪𑍍𑌤𑌵𑌿𑌶𑌾𑌲𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 - ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற விசாலங்களான கண்களையுடைத்தாயிருக்கிற, 𑌤𑍍𑌵𑌾𑌂 - உம்மை, 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 - பார்த்து, 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 - பயந்தமனதை யுடையவனாய்க்கொண்டு, 𑌧𑍃𑌤𑌿𑌂 - தேஹத்தைத் தரிப்பதையும், 𑌶𑌮𑌂 - ஶாந்தியையும், 𑌨𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 - அடையவில்லை. 24

பா] இங்கே '𑌨𑌭𑌃' என்னும் பதம் † 'அந்தப் பரப்ரும்மம் அழிவில்லாத பரமபதத்தில் இருக்கிறது,' என்றும் ‡ 'தமஸ்ஸுக்கும் மேல் ஸூர்யனைப்போன்ற வர்ணத்தை உடைய' என்றும் ¶ 'இந்த ரஜஸ்ஸுக்கு மேலே இருக்கிற,' என்றும் () 'எவன இந்த லோகத்துக்கு யஜமானனோ அவன் பரமபதத்தில் இருக்கிறான்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் ஏற்பட்ட மூன்று குணங்களை உடைய ப்ரக்ருதி

*த்தத்தைச் சொல்லுவதைக் கண்டிருப்பதால் இங்கே அதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'மிகவும்' என்று. '𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌃' நடுங்கினோம்; அல்லது, பயந்தோம்: என்றர்த்தம்.* 23

*ஆகாசத்தைச் சொல்லுகிற அனேகம் பதங்களைப் பரமபதத்தில் ப்ரயோகித்து இருப்பதை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—"இங்கே '𑌨𑌭𑌃' என்னும் பதம்" என்று ஆரம்பித்து. 'மூன்று குணங்கள் நிறைந்த' என்று விஶேஷணம் சொல்லி இருப்பதினால் பரமபதம் சுத்த ஸத்வமயம் என்பது குறிக்கப்பட்டது. இவ்விடத்தில் ப்ரக்ருதியின் ஸம்பந்த முள்ள ப்ரஸித்தமான ஆகாசத்தைச்*

† *தைத்திரீயம் நாராயணம்-6-1-2.* ‡ *புருஷஸூக்தம்* ¶ *ஸாமவேதம்.*
() *யஜுர்வேதம்-2-அஷ்டகம்-8-9-6.*

யைக் காட்டிலும் வேறுபட்டதாகிய பரபமதத்தைச் சொல்லுகிறது. எல்லா விகாரங்களோடும் கூடிய ப்ரக்ருதி, எல்லா அவஸ்த்தைகளையுமுடைய ஜீவன் இவை எல்லாவற்றிற்கும் ஆஶ்ரயமாக இருந்துகொண்டு, 'நபஸ்ஸ்ப்ருஶம்' என்று சொல்லி இருக்கிறபடியினாலும், 'த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம் லோகத்ரயம் ப்ரவ்யதிதம்' என்று முன்பு சொல்லப்பட்டிருக்கிறபடியினாலும், ப்ரகாசித்துக்கொண்டும் அனேகமான வர்ணங்களை உடையவராகவும் திறக்கப்பட்ட வாயை உடையவராகவும், ப்ரகாசித்துக்கொண்டும் விசாலங்களாயுமிருக்கிற கண்களை உடையவராகவுமிருக்கிற உம்மைப்பார்த்து மிகவும் பயந்த மனதை உடையவனாய் தேஹத்தைத் தரிப்பதையே

சொல்லுவதாக இருந்தபோதிலும் தார்க்கி வித்யையில சொல்லப்பட்ட ஆகாச என்னும் பதத்தைப்போல மூலப்ரக்ருதியைச் சொல்வதாக இருந்தபோதிலும் என்னதோஷம்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'எல்லா விகாரங்களோடு கூடிய' என்று ஆரம்பித்து. "1 இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பஶ்யாத்ய ஸசராசரம்" '2 பஹூந்யத்ருஷ்டபூர்வாணி பஶ்ய' என்பவை முதலியவை முன்பு சொல்லப்பட்டதல்லவா, என்று தாத்பர்யம். இன்னொரு காரணமும் சொல்லுகிறார்—'த்யாவாப்ருதிவ்யோ:" என்று ஆரம்பித்து. ப்ரஸித்தங்களான பூமி முதலிய எல்லாலோகங்களிலும் வ்யாபித்திருக்கிறது என்றல்லவோ அங்கே சொல்லப்பட்டது. அப்படி இல்லாத பக்ஷத்தில் புனருக்திவரும், ஆகையினால் ப்ரக்ருதி புருஷன் முதலிய எல்லாவற்றிற்கும் ஆதாரமாய்க் கொண்டே நபஸ்ஸ்ப்ருஶம் என்று சொல்லியிருக்கிறது. ப்ரக்ருதியின் விகாரமாகிய ஆகாசத்தை அளாவியிருப்பதைப் பற்றியதல்ல, என்று தாத்பர்யம். அனேகங்களான வர்ணங்களையுடைத்தாயிருக்கையாவது அந்தந்த அவயவங்களில் தனித்தனியாக இருக்கிற வெளுப்பு சிவப்பு முதலிய வர்ணங்களால் நிறைந்திருக்கை, அப்படியே மற்ற இடங்களிலும் ஶ்ரீவிஶ்வரூபவிக்ரஹம் அனேக வர்ணங்களையுடைத்தாயிருக்கிறதென்று சொல்லப்பட்டது. அந்நமயம் முதலியவைகளைவிட மனோமயம் உள்ளேயிருக்கிறபடியாலும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைச்சொல்லுவதாக இருந்தால் 'வ்யதித:' (பயந்தேன்) என்று முன்பு சொன்னதைவிட அதிகப்ரயோஜனமில்லாமையினாலும், இவ்விடத்தில் அந்தராத்மா என்னும்பதத்தினால் மனதுசொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் 'மிகவும் பயந்த மனதை உடையவனாய்' என்று சொல்லப்பட்டது. அசேதனமாக யிருந்தபோ

1 - பகவத்கீதை-11-7.　2 - பகவத்கீதை-11-6.

அடையவில்லை. மனதிற்கும். இந்த்ரியங்களுக்கும் சாந்தியையும் அடைய வில்லை. எல்லா இடத்திலும் நிறைந்த பகவானே அதாவது, எல்லா இடத்திலும் நிறைந்தவராகவும் மிகவும் பெரியவராகவும் மிகவும் ஆஸ் சர்யமாகவும் மிகவும் பயங்கரமாகவுமிருக்கிற உம்மைப் பார்த்துதுத் தளர்ச்சியை அடைந்த எல்லா அவயவங்களையும் உடையவனாகவும் கலங்கின இந்த்ரியங்களை உடையவனாகவும் ஆகிறேன், என்று அர்த்தம் 24

ஒம்ஷ்ட்ராகராளானி ச தே முகானி
ஜ்ருஷ்ட்வைவ காலாநலஸந்நிபானி |
திஶோ ந ஜானே ந லபே ச ஶர்ம
ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ || 25

ப - ரை] காலாநலஸந்நிபானி - ப்ரளயகாலாக்னிக்கு ஸமானங்களாயும் தம்ஷ்ட்ராகராளானி - கோரைப் பல்லுகளினால் பயங்கரங்களாயு மிருக்கிற, தே - உம்முடைய, முகானி - முகங்களை, த்ருஷ்ட்வா - பார்த்து, திஶ: - திக்குக்களை, நஜானே - (நான்) அறியவில்லை, ஶர்ம - ஸுகத்தையும், நலபே - அடையவில்லை, ஜகந்நிவாஸ- லோகங்களுக்கு இருப்பிடமாயிருக்கிற, தேவேஶ - ப்ரும்மா முதலிய தேவதைகளுக்கு ஈஶ்வரனாகிய க்ருஷ்ணா, ப்ரஸீத - அனுக்ரஹம் செய்யும். 25

---

திலும் மனது பயந்தது என்று சொல்லியிருப்பது, அதிக பயத்தைக் குறிப்பதற்காக அதைச்சேதனமாக ஆரோபித்துக்கொண்டு சொல்லி யிருக்கிறது. 'நலபேசஶர்ம' என்று மேலே ஸுகத்தைப்பற்றிச் சொல்லப்போகிறபடியினால் இவ்விடத்தில் த்ருதி என்னும், பதம் ப்ரீதி என்னும பெயருடைய ஒருவித ஸுகத்தைச் சொல்லுகிறதல்ல. தரிப் பது என்னுமர்த்தத்தில் அந்தப் பதம் ப்ரஸித்தமாயிருக்கிறது ஆகை யினால் தரிக்கப்படுகிற வஸ்துவைச்சொல்லாமலிருந்த போதிலும் ஸந் தாபத்தினாலும் வஸ்துவின் ஸ்வபாவத்தினாலும தேஹத்தைத் தரிப் பதுதான் இது, எனகிற அபிப்ராயத்தினால்'தேஹத்தைத்தரிப்பதையே' என்று சொல்லப்பட்டது. 'மனதிற்கும் இந்த்ரியங்களுக்கும்' என்றதும் வஸ்துவின் ஸ்வபாவத்தினாலும்'ஶம' என்னும் பதத்தின் ப்ரஸித்தியினா லும் ஏற்பட்டது. அப்படியில்லாத பக்ஷத்தில் அவ்விடத்திலும் புன ருக்திவரும், என்று தாத்பர்யம். விஷ்ணோ என்னும் பதம் பேர் மாத் திரத்தைச்சொல்லுகிறது என்பதைப் பார்க்கிலும்,உபயோக முள்ளதா யும் நிர்வசனத்தினாலேற்பட்டதாயு மிருக்கிற அர்த்தத்தைச்சொல்லு கிறது என்பது உசிதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'எல்லா இடத்திலும் நிறைந்த' என்று. மொத்தார்த்தைச்சொல்லுகி றார்—'அதாவது' என்றாரம்பித்து. 24

பா] ப்ரளயகாலாக்னியைப்போல் எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்ய ப்ரவ்ருத்தித்துக கொண்டிருக்கிற மிகவும் பயங்கரங்களாயுமிருக்கிற உம்முடைய முகங்களைப் பார்த்து நான திக்குக்களை அறியவில்லை; ஸுகத்தையு மடையவில்லை. லோகங்களுக்கு இருப்பிடமாயிருக்கிற, ப்ரும்மா முதலிய ஈஶ்வரர்களுக்கும் உயர்ந்த ஈஶ்வரனாகிய க்ருஷ்ண (நீர் என்னைக் குறித்து) ப்ரஸந்நராகவேண்டும். எப்படி நான் ஸ்வபாவத்தை அடைந்தவனாக இருப்பேனோ, அப்படிச் செய்யும் என்றர்த்தம். 25

---

தா] மற்ற அவயவங்களைவிட முகங்கள் அதிக பயங்கரங்கள் என்பதைத்தெரிவிப்பதற்காக இந்த ஶ்லோகம் சொல்லப்படுகிறது, தான் அதிகமாகப் பயந்திருப்பதைத் தெரிவித்துக்கொண்டு, பகவானுக்குக் க்ருபையை உண்டாக்குவதற்காகவும் சொல்லப்படுகிறது. 'எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்ய ப்ரவ்ருத்தித்துக் கொண்டிருக்கிற' என்று, ப்ரளயகாலாக்கினியின் ஸ்வபாவத்தைசசொல்லி இருக்கிறது. காலத்திற்கு அபிமானி தேவதை ஆகையினால் அதின் வ்யாபாரத்தில் ஸம்பந்த முண்டு என்றும் தெரிவிக்கபபட்டது. 'மிகவும் பயங்கரங்களான' என்பது 'தம்ஷ்ட்ராகராளானி' என்பதின் அர்த்தம். கராள என்னும் பதம்,மேடு பள்ளமாக இருத்தலையாவது,விகாரமாகஇருத்தலையாவது சொல்லுகிறது. "ஜகந்நிவாஸ" என்னும் பதத்தில் லோகங்களை இடமாக உடையவன் என்று பஹுவ்ரீஹி சொல்லில் "ஜகத்ப்ரதிஷ்டம்" என்றிவை முதலிய இடங்களில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட, எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கையை அனுவாதம் செய்ததாக ஆகாது, லோகங்களுக்கு இருப்பிடம் என்று தத்புருஷன் சொல்லிலோ கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்த்தத்தையே சொல்லி இருக்கிறதாகும். என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்.—'லோகங்களுக்கு இருப்பிடமாக இருக்கிற' என்று. "தேவேஶ" என்னும் பதத்தினால 'ஈஶ்வரர்களுக்கெல்லாம் உயர்ந்த ஈஶ்வரனாகிய அந்தப் பகவானை' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் ப்ரஸித்தமாகிய எல்லா ஈஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனாக இருக்கை, உபதேசம் செய்ததைப்போலவே நேரில் பார்க்கப்பட்டது. என்று காட்டப்பட்டது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரும்மா முதலிய' என்று ஆரம்பித்து. இத்தால் ப்ரும்மாதிகளும் கூட உன்னைபபார்க்க சக்தி உடையவர்களல்ல, அல்பஜந்துவாகிய நான் சக்தியற்றவன்,என்பதைப் பற்றிக் கேட்கவேண்டியதே இல்லை, என்று அபிப்ராயம், என்று காட்டுகிறார்—'என்னைக்குறித்து' என்று அர்ஜுனனிடததில் பகவானுக்குக் கோபமோ, எதினால் அனுக்ரஹம் ப்ரார்த்திக்கப்படுகிறது ? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக அனுக்ரஹத்தின் ப்ரயோஜனத்தைச் சொல்லுகிறார்—'எப்படி நான்' என்று ஆரம்பித்து. 25

பா-அ] இப்படி எல்லா லோகங்களும் தனக்கு வசப்பட்ட ஸ்திதியையும் ப்ரவ்ருத்தியையு முடையது, என்பதைக் காட்டிக்கொண்டிருக்கிற அர்ஜுநனுக்கு ஸாரதியாகிய க்ருஷ்ணன், ராஜாக்கள் என்கிற வேஷத்தினால் மறைந்துகொண்டு இருக்கிற த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகளாயும் த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகள ஸமூகத்தில் சேர்ந்தவர்களாயுமிருக்கிற அஸுராம்ச மானவர்களைக் கொல்லுவதினால் தனக்கு இஷ்டமாயும் தானே மேல் செய்யப் போகிறதுமான பூபாரத்தை நீக்குவதை அர்ஜுநனுக்குக் காட்டினார். அந்த அர்ஜுநனும் பகவானுடைய, எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிப்பவனாக இருக்கை முதலிய எல்லா ஐஶ்வர்யத்தையும் நேராகப் பார்த்து எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கிற அந்தப் பகவானிடத்திலேயே, மேலே நடக்கப்போகிற த்ருதராஷ்டிரன் பிள்ளைகளின் ஸம்ஹாரத்தையும் அந்தப் பகவானுடைய அநுக்ரஹத்தினால் அடையப்பட்ட கண்ணினால் பார்த்து இந்த வார்த்தையைச் சொன்னான்—

> അമീ സർവ്വേ ധൃതരാഷ്ട്രസ്യ പുത്രാഃ
> സർവ്വൈഃ സഹൈവാവനിപാലസംഘൈഃ |
> ഭീഷ്മോ ദ്രോണസ്സൂതപുത്രസ്തഥാസൗ
> സഹാസ്മദീയൈരപി യോധമുഖ്യൈഃ || 26

> വക്ത്രാണി തേ ത്വരമാണാ വിശന്തി
> ദംഷ്ട്രാകരാളാനി ഭയാനകാനി |
> കേചിദ്വിലഗ്നാ ദശനാന്തരേഷു
> സന്ദൃശ്യന്തേ ചൂർണ്ണിതൈരുത്തമാംഗൈഃ || 27

ப. ரை] അമീ - இந்த, സർവ്വേ - எல்லா, ധൃതരാഷ്ട്രസ്യ - த்ருதராஷ்ட்ரனுடைய, പുത്രാഃ - பிள்ளைகளும், സർവ്വൈഃ எல்லா, അവനിപാലസംഘൈസ്സഹ - ராஜர்க்களின் கூட்டங்களோடுகூட, ഭീഷ്മഃ-பீஷ்மாசாரியரும், ദ്രോണഃ - த்ரோணாசாரியரும், തഥാ - அப்படியே, അസൗ - இந்த, സൂതപുത്രഃ - கர்ணனும், അസ്മദീയൈഃ - நம்முடையபக்ஷத்தைச் சேர்ந்த, യോധമുഖ്യൈസ്സഹാപി - ப்ரதானர்களான யுத்தவீரர்களோடு கூடவும், ദംഷ്ട്രാകരാളാനി - கோரைப்பற்களினால் விகாரங்களாக இருக்கிற, ഭയാനകാനി - பயங்கரங்களாயிருக்கிற, തേ - உம்முடைய, വക്ത്രാണി - வாய்களை, ത്വരമാണാഃ - அவஸரத்தோடு கூடியவர்களாய், വിശന്തി - நுழைகிறார்கள், കേചിത് - அவர்களுக்குள் சிலர்,

வஂசூணிதைருதமாஂகை: - பொடிபண்ணப்பட்ட, உத்தமாஂகை:-தலைகளினால்; தஶநாந்தரேஷு - பற்களின் சந்துகளில், விலக்நா: - ஒட்டிக்கொண்டவர்களாக, ஸந்த்ருஶ்யந்தே - காணப்படுகிறார்கள்.　　27

பா] இந்தத் துர்யோதனன் முதலிய த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகள் எல்லோரும், பீஷ்மரும், த்ரோணரும், கர்ணனும், அவர்கள் பக்ஷத்தில் சேர்ந்த எல்லா ராஜாக்களின் கூட்டத்துடனும், நம்முடைய பக்ஷத்தில் சேர்ந்த சில ப்ரதானர்களான யுத்தவீரர்களுடனும், அவஸரத்தோடு கோரைப்பற்களினால் விகாரங்களாயும் பயங்கரங்களாகவு மிருக்கிற உம்முடைய வாய்களைத் தாங்கள் நாசமடைவதற்காக நுழைகிறார்கள். அதில் சிலர் பொடியாக்கப்பட்ட தலைகளினால் பல்லுகளின் நடுவில் ஒட்டிக்கொண்டவர்களாகக் காணப்படுகிறார்கள்.　　26, 27

---

தா] 'அமீ' என்கிற ஶ்லோகம் உண்டானதற்குக் காரணத்தையும், அதற்குமுன்க்ரந்தத்தோடு ஸங்கதியையுமசொல்லுகிறார்—'இப்படி' என்று ஆரம்பித்து. அவச்யமாக வரப்போகிறபடியினால், 'தனக்கு இஷ்டமாயும்' என்று சொல்லப்பட்டது. தனக்கு இஷ்டமாகிய பூமிபாரத்தை நீக்குவதைக்காட்டினார், அதினால் யுத்தத்தில் உத்ஸாஹப்படுத்துவதும் தானே ஸித்தித்துவிடும், என்று தாத்பர்யம். மேலே சொல்லப்போகிற அர்ஜுநன் முதலியவர்கள் ஒததாசைமாத்திரம் என்பதையும், அர்ஜுனனுடைய வ்யாபாரமில்லாமலே தன்னாலேயேசெய்ய முடியும் என்பதையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'தானே செய்யப்போகிற' என்று சொல்லப்பட்டது. அப்பொழுது யுத்தபூமியில இருப்பவர்கள் இப்பொழுது சொல்லுகிற பகவானுடைய வாயில் ப்ரவேசிப்பது பொருந்தாதாகையினால் இந்த்ரஜாலம் முதலியவையாக இருக்கலாம் என்னும் ஸந்தேஹத்தைப் பரிஹரிக்கிறார்—'அந்தஅர்ஜுநனும்' என்று ஆரம்பித்து. பகவான் எல்லா வஸ்துக்களையும்பற்றி ஸ்ருஷ்டிப்பவனாக இருக்கை முதலியவைகளை நேராகப் பார்க்கும்பொழுது த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகள் முதலிய சில ஜந்துக்களை ஸம்ஹாரம் செய்தலைப் பார்ப்பது அதிகஆஶ்சர்யமில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அந்தப் பகவானிடத்திலேயே' என்று. 'ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:' என்று மேலே சொல்லப்போகிறபடியே, எல்லாவற்றையும் சரீரமாக உடையவனாக இருக்கையினால் எல்லா வஸ்துக்களாகவும், ஸத்யஸங்கல்பனாகவு மிருக்கிற பகவான் தானே த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகள் முதலியவர்களுடைய நாசத்திற்கும் எல்லாவிதமுமான காரணம், லோகத்தில் இருக்கும் ஜனங்களின் இந்த்ரியங்களுக்குத் தெரி

யாத ரூபத்தைக்கொண்டு இவைகளை விழுங்குகிற பகவான் முக்கிய மான காரணம், நம்மால் பார்க்கப்பட்ட அர்ஜுனனுடைய பாணம் முதலியவைகளோ வெனில் காகதாளீய ந்யாயத்தினால் ஸாதாரண காரணம் என்று தாத்பர்யம். 'மேலே நடக்கப்போகிற' என்பதற்கு லோகத்தில் இருக்கிற ஜனங்களின் பார்வை அல்லவோ அப்பொழுது இருக்கும் வஸ்துவை க்ரஹிக்கத்தக்கது, என்று தாத்பர்யம். 'இந்த' என்பதற்கு த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகளுடைய விசேஷங்களைப்பற்றிய என்று அர்த்தம். அன்றிக்கே மேல் நடக்கபபோகிறதையும் நேராகப்பார்ப்பதினால் இப்பொழுது நடக்கிறதைபபோலே சொலலுகிறான், என்று தாத்பர்யமாகவுமாம். 'ஸஹைவாஸ்மதீயைஃ' என்று தனித்துச் சொல்லி இருக்கிற படியினால் 'அவநிபாலஸங்கைஃ' என்பது எதிரிகளின பக்ஷத்தைப் பற்றியது, என்று தெரிவிப்பதற்காக 'அவாகள் பக்ஷத்தில் சேர்ந்த' என்று சொல்லபபட்டது. தார்யோதனாதிகள எல்லோரையும்போலவே அவர்கள் பக்ஷத்தில் இருக்கிறவர்களெல்லோரையும் யுத்தத்தில் வதம் செய்யபபோகிறபடியினால். 'எல்லா' என்று சொல்லப்பட்டது. 'நம்முடைய பக்ஷத்தில் சேர்ந்த' என்று சொல்லி இருபபதினால் தன்பக்ஷத்தில் இருப்பவாளுக்கு வதமும் தாங்கள் ஜீவித்திருப்பதும் சொல்லப்படுகிறது. சத்ருக்களைப்பற்றி எல்லா என்று விசேஷணம் சொல்லி இருப்பதினாலும், தன்னைச் சேர்ந்தவர்களைப்பற்றி ப்ரதானர்களான யுத்தவீரர்களுடனும் என்று சொல்லி இருப்பதினாலும், யுத்தத்தில் பாண்டவர்கள் பக்ஷத்திலிருப்பவர்களுக்கு முழுமையும வதம் இல்லை என்பதும், 'சில' என்று சொல்லப்பட்டது. சீக்கிரமாக ஸம்ஹாரம் செய்வது அவரவர்கள் அபராதத்தின் த்வரையினால் உண்டானது என்பது, 'த்வரமாணாஃ' என்னும் பதத்தினால் ஏறபடடது. அன்றிக்கே யுத்தத்தில் ஆரம்பம் முதலிய அவர்களுடைய எல்லா வ்யாபாரங்களும் தங்களை வதம் செய்துகொள்வதறகாக, என்று தாத்பர்யம், 'பயாநகாநி' என்று தனித்துச சொல்லிஇருக்கிறபடியினால இவ்விடத்தில் கராள என்னும் பதம் சந்துகளோடுகூடி இருத்தலையும் விகாரமாக இருத்தலையும் சொல்லுகிறது, அன்றிக்கே மேடுபள்ளமாக இருத்தலைச் சொல்லுகிறதாகவுமாம். 'கராளம்தந்துரே ரௌத்ரே' என்று அல்லவோ நிகண்டுவில் படிக்கப்பட்டிருக்கிறது. 'ஸந்த்ருச்யந்தே' என்கிற இடத்தில் க்ரியா பதம் சொல்லாமல் போனபோதிலும், 'ராஜவந்தஃ ஸபுத்ரா:' என்றிவை முதலிய இடங்களில்போல க்ரியாபதத்தைச் சேர்த்துக் கொணடு அர்த்தம் சொல்லவேண்டியது. அன்றிக்கே 'விசந்தி' என்று மேலே சொல்லப்போகிற பதத்தை இங்கே சேர்த்துக்

கொள்ள வேண்டியது. அது வன்றிக்கே "ஊர்த்வ்யஷிகா ஞாரநாபெயாநிஷ்டி" (பார்த்துப் பயந்தமனதை உடையவர்களாய்த் தைரியத்தை அடையவில்லை) என்று பதங்களை மாற்றி அன்வயித்துகொண்டுவாக்கியத்தை முடித்துக்கொள்ள வேண்டியது. இப்படிக்கல்லாமல் இரண்டு ஶ்லோகங்களும் ஒரு வாக்கியமாகச் சொல்லப் படவில்லை முதல் ஶ்லோகத்தில் "த்வா" (உம்மை) என்று கர்மமாகச் சொல்லி இருக்கிற படியினுலும், அடுத்த ஶ்லோகத்தில் "வக்த்ராணிதே" (உம்முடைய வாய்களை,) என்று சொல்லி இருக்கிற படியினுலும். "அமீசத்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ராஃ" என்றுவது,பாஷ்யகாரர் அபிப்ராயத்தில் இருக்கிற பாடமாம். த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகளெல்லாரும் என்று அர்த்தம் சொல்லி இருக்கிற படியினுல் ஆகையினுலேயே "விஶந்தி" (நுழைகிருர்கள்) என்று ஒரேவாக்கியமாக சொல்லப்பட்டது. ரக்ஷிப்பதற்காகப் பகவானிடத்தில் நுழைவதை விலக்குவதற்காக மேலே சொலலப் போகிறதை யோசித்து தாங்கள் நாஶமடைவதற்காக, என்று சொல்லப்பட்டது. அதில் என்பதற்கு த்ருதராஷ்டிரன் பிள்ளைகளுக்குள் என்றர்த்தம், அன்றிக்கே அந்த, வாய்களுக்குள, என்றர்த்தமாகவுமாம். சிலர் நாசமடைவதற்காக ப்ரவேசிக்கிருர்கள், சிலர் நாசமடைந்தவர்களாகக் காணப்படுகிருர்கள், என்று சொல்லப் பட்டதாகிறது. மூன்றுவது அத்யாயத்தில் "விஜ்ஞாநவிஜ்ஞாநநாஶநம்" என்பதற்குமேல் யாதவப்ராகாசனைச் சேர்ந்தவர்களால் சிலர் இவ்விடத்தில் ஐந்து ஶ்லோகங்கள் சொல்லுகிருர்கள் என்று எழுதி வ்யாக்யானம் செய்யப்பட்டது. அதாவது "அர்ஜுந உவாச அர்ஜுனன் சொன்னுன். பவேதேஷ கதம் க்ருஷ்ண கதம் சைவ விவர்ததே। கிமாத்மகஃகிமாசாரஃதந்மமாசக்ஷ்வ ப்ருச்சதஃ (1) ப - உ க்ருஷ்ண - கிஷ்ணு, ஏஷஃ - இந்தக் காமன், கதம் - எப்படி, பவதி - உண்டாகிருன், ஏஷஃ - இந்தக் காமன், கதம் - எப்படித்தான், விவர்த்ததே - வ்ருத்தி அடைகிருன், கிமாத்மகஃ - என்ன ஸ்வபாவ முடையவன், - கிமாசாரஃ என்ன நடத்தையை உடையவன், தத்-அத்தை, ப்ருச்சதஃ கேட்கிற, மம - எனக்கு, ஆசக்ஷ்வ - சொல்லும், (1)ஶ்ரீபகவாநுவாச-ஸ்ரீபகவான் சொன்னுர். (2) ஏஷஸூக்ஷ்மஃபரஃஶத்ருஃ தேஹிநாமிந்த்ரியைஸ்ஸஹ। ஸுகதந்த்ர இவாஸீநஃ மோஹயந்பார்த திஷ்டதி॥ (2) ப - உ) ஏஷஃ-இந்தக் காமன், தேஹிநாம் - ப்ராணிகளுக்கு, இந்த்ரியைஸ்ஸஹ - இந்த்ரியங்களோடு, ஸூக்ஷ்மஃ - ஸூக்ஷ்மமாக இருக்கிற,

வாம - மேலான, ஶத்ரு:- சத்துரு, பார்த - ஓ அர்ஜுந, தத்ர- அந்த இந்தரியங்களில், ஸுகம் - ஸுகமாக, ஆஸீநஇவ- உட்கார்ந்து கொண்டு இருக்கிறவன் போல, மோஹயந் - மோஹத்தை உண்டுப ண்ணிக்கொண்டு, திஷ்டதி - இருக்கிறுன். (2) காமக்ரோதமயோ கோர ஸ்திதிஹேதுஸநாதந: । அஹங்காராபிமாநாத்மா தரஸ்ஹாஸ்கா பாபகர்மபி: (3) ப - உ, காமக்ரோதமய: - காமம் கோபம் இவை களின் ரூபமாகிய, கோர: - பயங்கரமான, ஸ்திதிஹேதுஸநாதந: - அசையாமலிருத்தல், ஸந்தோஷம் இவைகளுக்குக் காரணமாகிய, அபிமாநாத்மா - அபிமானமாகிய, அஹங்கார: - அஹங்காரமானது, பாபகர்மபி: - பாபம் செய்தவர்களிஞல், துஸ்தர: - தாண்ட முடியாதது. (3) ஹர்ஷமஸ்ய நிவர்த்யைஷ ஶோகமஸ்ய ததாதிச । பயஞ்சாஸ்ய கரோத்யேஷ மோஹயம்ஶ்ச முஹுர்முஹு: (4) ஏஷ: - இந்த அஹங்காரம், அஸ்ய - இநத ஜீவனுக்கு, ஹர்ஷம் - ஸந்தோஷ த்தை, நிவர்த்ய - போக்கி, ஶோகஞ - துக்கத்தையும், ததாதி - கொடுக்கிறுன்; அஸ்ய - இந்த ஜீவனுக்கு, ஏஷ: — இநத அஹங்காரம், முஹுர்முஹு: - அடிக்கடி, மோஹயந் - மோஹத்தைச் செய்து கொண்டு, பயஞ்ச - பயத்தையும், கரோதி - செய்கிறுன் (4)ஸஏஷ கலுஷ: க்ஷுத்ர: சித்ராபேக்ஷீ தநஞ்ஜய । ரஜ: ப்ரவ்ருத்தோ மோஹாத்மா மநுஷ்யாணா முபத்ரவ: (5) ப - உ ஸஏஷ: - இந்த அஹங்காரம், கலுஷ: - மிகவும் பாபமுள்ளது, க்ஷுத்ர: - அல்பமானது, சித்ராபேக்ஷீ - இளைப்பதை எதிர் பார்ததது, தநஞ்ஜய - ஓ அர்ஜுந, ரஜ: ப்ரவ்ருத்த: - ரஜோ குணத்திஞல உண்டாககபபட்டது, மோஹாத் - மோஹத்திஞல், மநுஷ்யாணாம் - மனிதர்களுக்கு, உபத்ர வ:-உபத்திரவத்தைச செய்கிறது.) என்று. இவ்விடத்திலும்(1) நாநா ரூபைர்வபுர்பிஸ்ஸுயுத்ய மாநாவிஶஸ்த்ரைஶ்ச க்ருத்தாவிவிக்தாஶ்ச பலம்| யோதார்தார்ராஷ்ட்ராஶ்ச யோதாஶ்ச ஶஸ்த்ரை: க்ருத்தா விவிதைஸ்ஸர்வ ஸர்வ ॥ (1) ப - உ, தார்மபுத்ரா: -தர்ம புத்திரரைச் சேர்ந்தவர்களும், தார்தராஷ்ட்ராஶ்ச - த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகளைச் சேர்ந்தவர்களு மாகிய, யோதா: - யுத்த வீரர்கள், ஸர்வ - எல்லோரும், விவி தை: - அனேக விதங்களான, ஶஸ்த்ரை: — ஆயுதங்களிஞல், க்ருத்தா:-அறுக்கப்பட்டவர்களாய்க்கொண்டு, நாநாரூபை: - அனேக விதமான ரூபங்களை உடைய, பூருஷை: - புருஷர்களிஞல்,வஸ்த்ரா

நாஃ - சொல்லப்பட்டவர்களாய்க் கொண்டு, அசிந்த்யரூபம் - நினைக்க முடியாத ரூபத்தை உடைய, தே - உம்முடைய, வக்த்ரம் - வாயை, விஶந்தி - நுழைகிறார்கள் (1) திவ்யாநி கர்மாணி தவாத்புதாநி பூர்வாணி பூர்வே ருஷயஸ்ஸ்மரந்தி। நாந்யோஸ்தி கர்தா ஜகதஸ்தவைகோ தாதா விதாதா விபுரவ்யயஸ்ச (2) ப - உ, தவ - உம்முடைய, பூர்வாணி - முன் நடந்த, அத்புதாநி - ஆஶ்சர்யங்களான, திவ்யாநி - திவ்யங்களான, கர்மாணி - கர்மங்களை, பூர்வே - முன் இருந்த ருஷய: - ருஷிகள், ஸ்மரந்தி ஸ்தோத்திரம் செய்கிறார்கள், ஜகத: - லோகத்துக்கு அந்ய: - வேறொரு, கர்தா ஸ்ருஷ்டிப்பவன், நாஸ்தி - இல்லை, ஏக: - ஒருவராகிய, த்வம் நீர்யாதா ஸ்ருஷ்டிப்பவராகிய, விதாதா - பிரும்மாவும் விபு:, யஜமானனாகிய, அவ்யய: - ருத்திரனும், (3) தவாத்புதம் கிம் நு பவேதஸஹ்யம் கிம்வா ஶக்யம் பரத: கீர்த்தயிஷ்யே (1) கர்தாஸி லோகஸ்ய யதஸ்த்வமேக விபோ ததஸ்ஸர்வம் த்வயி ஸர்வம் த்வமேவ (3) ப - உ, தவ - உமக்கு, அத்புதம் - ஆஶ்சர்யமாகிய, கிம் நு - எது, அஸஹ்யம் - பொறுக்க முடியாததாக பவேத் ஆகும், கிம்வா - எதுதான், அஶக்யம் - செய்யமுடியாதது கிம்வா எதைத்தான், பரத: - இதற்குமேலே, கீர்த்தயிஷ்யே - சொல்லப்போகிறேன், விபோ - ப்ரபுவாகிய கிருஷ்ண, யத: - எந்தக் காரணத்தினால், த்வம் - நீரே, லோகஸ்ய - லோகத்திற்கு, கர்தா - ஸ்ருஷ்டிப்பவராக, அஸி - ஆகிறீரோ, ஸர்வம் - எல்லாம், த்வத்த: - உம்மிடத்திலிருந்து (உண்டாகிறதோ), த்வயி - உம்மிடத்திலிருக்கிறதோ, (ஆகையினால்) ஸர்வம் - எல்லாம், த்வமேவ - நீரே, (3) (4) அத்யத்புதம் கார்யம் நதுஷ்கரம் தே கர்மோபமாநம் நஹி வித்யதே தே। ந தே குணாநாம் பரிமாணமஸ்தி ந தேஜஸோ நாபி பலஸ்ய நர்த்தே: (4) ப-உ அத்யத்புதம் - மிகவும் ஆஶ்சரியமான, கார்யம் - காரியமானது, தே - உமக்கு, நதுஷ்கரம் - செய்யமுடியாததில்லை, கர்மோபமாநம் - கர்மங்களினால் உண்டான அளவும், தே - உமக்கு, நவித்யதே - இல்லை, தே - உம்முடைய, குணாநாம் - குணங்களுக்கு, பரிமாணம் - அளவு, ந - இல்லை, தேஜஸ: - தேஜஸ்ஸுக்கும், ந - அளவில்லை, பலஸ்யாபி - பலத்துக்கும், ந - அளவில்லை, ருத்தே: - ஸம்பத்திற்கும், ந - அளவில்லை, (4) என்றும் எழுதப்பட்டது. இவ்விடத்தில் திவ்யாநி என்பது முதலிய ஸ்லோகங்கள், நாராயணார்யராலும் எழுதப்பட்டன. 'ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஸ்ச' என்கிற ஸ்லோகத்திற்குப் பிறகு இன்னொரு ஸ்லோகமும்

எழுதப்பட்டது அதாவது (5) அநாதிநா ப்ரதிமப்ரபாவஸ்ய ஸர்வேச்வரஸ்ய ஸர்வவிபூதே: । நஹித்வதந்ய: கச்சிதீசோ(அ)ஸ்தி லோகத்ரயே(அ)பி த்ருச்யதே(அ)சிந்த்யகர்மா (5) ப-உ தேவ - கிருஷ்ண, (நீர்) அநாதிநா - ஆதி இல்லாதவர், அப்ரதிமப்ரபாவ: - ஒப்பில்லாத பெருமையை உடையவர், ஸர்வேச்வர: - எல்லாவறறிற்கும் ஈஸ்வரன், ஸர்வவிபூதி: - பெரிய விபூதி எலலாவற்றையு முடையவர், ஐஹ . இந்த லோகத்ரயேபி - மூன்று லோகங்களிலும், த்வதந்ய: - உம்மைவிட வேறு, அசிந்த்யகர்மா - நினைக்கமுடியாத கர்மங்களை உடைய, கச்சித் - ஒருவனும, நாஸ்திஹி - இல்லையல்லவா, த்ருச்யதே - காணப்படவுமிலலை (5) என்று இந்த ஸ்லோகங்கள் இருக்கின்றனவோ இல்லையோ பகவானுக்குத்தான் தெரியும். முன்பு வ்யாக்யானம் செயதவர்களால எடுக்கபபடாமையினுலும, அதயயனததில் ப்ரஸித்தமாக இல்லாமையினுலும பாஷ்யகாரரால ஆதரிககப்படவில்லை. கீதா ஸாஸ்த்ரத்தின் ஸ்லோகங்களின கணக்கு வ்யாஸர் முதலியவர்களால் சொல்லபபடவுமிலலை பிநதியவர்களோ நம்பத்தக்கவர்களில்லை. 26, 27

> யதா நதீநாம் பஹவோ(அ)ம்புவேகா
>
> ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி ।
>
> ததா தவாமீ நரலோகவீரா
>
> விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ॥ 28
>
> யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் பதங்கா
>
> விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா: ।
>
> ததைவ நாசாய விசந்தி லோகா
>
> ஸ்தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: ॥ 29

ப-ரை] யதா - எப்படி, நதீநாம் - ஆறுகளின், பஹவ: - அனேக விதங்களான, அம்புவேகா: - ஜலங்களின் ப்ரவாஹங்கள், ஸமுத்ரமேவ - ஸமுத்திரத்தையே, அபிமுகா: - எதிர் முகங்களாக, த்ரவந்தி - ஓடுகின்றனவோ, ததா - அப்படி, அமீ - இந்த, நரலோகவீரா: - மனுஷ்ய லோகத்தில் இருக்கிற வீரர்கள், தவ - உம்முடைய, அபிவிஜ்வலந்தி - நான்கு பக்கங்களிலும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற, வக்த்ராணி - வாய்களை, விசந்தி - நுழைகின்றன, யதா - எப்படி, ஸம்ருத்தவேகா: - பூர்ணமான வேகத்தை உடைய, பதங்கா: - விளக்கு விட்டில்கள், நாசாய - தாங்கள் நாசமடைவதற்காக, ப்ரதீப்தம் ஜ்வலநம் - எரிந்து கொண்டிருக்கிற அக்னியை, விசந்தி - ப்ரவேசிக்கின்றனவோ,

ததைவ - அப்படியே, லோகா: - ஜனங்கள், ஸம்ருத்தவேகா: - அதிக வேகத்தை உடையதுகளாய்க் கொண்டு. நாஶாய தாங்கள் நாசம் அடைய வேண்டியதற்காக, தவ - உம்முடைய, வக்த்ராணி - வாய்களை, விஶந்தி ப்ரவேசிக்கின்றன. 29

பா ] இந்த ராஜாக்களின் கூட்டங்கள் அனேக விதங்களான ஆறுகளின் ஜலப்பெருக்குகள் ஸமுத்திரத்தைப் போலவும், எரிந்து கொண்டிருக்கிற நெருப்பை விளக்கு விட்டில்கள் போலவும், நான்கு பக்கங்களிலும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற உம்முடைய வாய்களில் தாங்களேஅவஸரப்

தா] க்ஷராஶோணா:" என்று கீழ்ச் சொல்லியபடி தங்களுடைய வ்யபாரங்களாலே நாசமடைகின்றன' என்பதிலும் எல்லாம் ஒருவனிடத்தில் ஒடுங்குகின்றன, என்பதிலும், ஒருவன் எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்யத் தகுந்த பொதுவான ஆகாரத்துடன் இருக்கிறான், என்பதிலும் இரண்டு உதாஹரணங்கள் இரண்டு ஶ்லோகங்களினால் சொல்லப்படுகின்றன—'யதா' - என்று ஆரம்பித்து. பாண்டவர் முதலியவர்கள்எல்லோருக்கும் நாஶம் உண்டு, என்று சொல்லாமையினாலும், ஜ்வலத்வக்த்ராணி (லோகங்களைத் தபிக்கின்றன) என்றிவ்வளவு மாத்திரம் மேலேசொல்லப் போகிறபடியினாலும், "நரலோகவீரா:" என்று சொல்லப்பட்ட அர்த்தமே 'லோகா:' என்று சொல்லப்படுகின்றது. என்கிற அபிப்ராயத்தினால் இந்த ராஜாக்களின் கூட்டங்கள் என்று சேர்த்துச் சொல்லப்பட்டது, ஸம்ருத்தவேகா: - என்கிற இடத்தில் வேக என்னும் பதம் வேகத்தை உடைய வஸ்துவைச் சொல்லுகிறது. என்று தெரிவிப்பதற்காக 'பெருக்குகள்' என்று சொல்லி இருக்கிறது. அனேகம் அர்த்தங்களைச் சொல்லக் கூடிய "பதங்கா:" என்னும் பதம் பக்ஷி முதலியவைகளைச் சொல்லுகிறது, என்பதை விலக்குவதற்காக, 'விளக்கு விட்டில்கள்' என்று சொல்லப்பட்டது. 'ஜ்வலிதஜ்வலனம்' என்னும் பதம் முன் ஶ்லோகத்தில் இருந்தபோதிலும் அடுத்த ஶ்லோகத்தில் இருக்கிற அக்னியை உதாஹரணமாகச் சொல்லி இருப்பதற்கு உபயோகமானது என்று தெரிவிப்பதற்காக அக்னியை உதாஹரணமாகச் சொன்னபிறகு சொல்லப்பட்டது, 'ஸம்ருத்தவேகா:' என்கிற இது முன்பு சொல்லிய 'க்ஷராஶோணா:' என்கிற பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தை மனதில் வைத்துக்கொண்டு 'தாங்களே அவஸரப்பட்டுக்கொண்டு' என்று சொல்லப்பட்டது. 'விளக்கு விட்டில்கள். சப்பட்டைக்காற்று முதலியவைகளினால் விளக்கு முதலியவைகளை

பட்டுக்கொண்டு தாங்கள் நாஶம் அடைய வேண்டியதற்காக ப்ரவேசிக்கின்றன. 28 29

லேலிஹ்யஸே க்ரஸமாந: ஸமந்தால்
லோகாந் ஸமக்ராந் வதநைர் ஜ்வலத்பி: |
தேஜோபிராபூர்ய ஜகத் ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ || 30

ப - ரை] விஷ்ணோ விஷ்ணுவே, ஸமக்ராந்-எல்லா, லோகாந் - ராஜாக்களின் கூட்டங்களையும், ஜ்வலத்பி: எரிந்து கொண்டிருக்கிற, வதநை:' வாய்களினால், க்ரஸமாந: - விழுங்கிக்கொண்டு. ஸமந்தாத் - நான்கு பக்கங்களிலும், லேலிஹ்யஸே - நக்கிக்கொண் டிருக்கிறீர், தவ உம்முடைய, உக்ரா:- க்ரூரங்களான, பாஸ: - கிரணங்கள், தேஜோபி: - தேஜஸ்ஸுக்களினால், ஸமக்ரம் - எல்லா, ஜகத் - லோகத்தையும். ஆபூர்ய - நிறைத்துக்கொண்டு. ப்ரதபந்தி - தபிக்கின்றன 30

பா] எல்லா ராஜாக்களின் கூட்டங்களையும் எரிந்துகொண்டிருக்கிற வாய்

---

நாஶம் செய்வதும் ஸம்பவிக்குமாகையினால், அதை விலக்குதல் 'ப்ரதீப்தம்' என்கிற பதத்தினால சொலலப்படுகிறது, என்று தெரிவிப்பதற்காக, 'தாங்கள் நாஶமடைவதற்காக' என்று சொல்லப்பட்டது. ஆற்றின் பெருக்குக்கு நாஶமாவது, தனியாகப் பெருக்காக இருக்கும் ஆகாரத்தை விடுதல், அதாவது, எந்தக்காரணத்தினால் அதே வஸ்துவில் ஆற்றின் பெருக்கு என்னும் பெயர்மாறி விடுகிறதோ அதுதான். விளக்குவிட்டில்களுக்கோவென்றால வேறு வஸ்து, என்று சொல்லத் தகுந்த சாம்பலாகுதல், என்கிற ஆகாரத்தின் வ்யத்யாஸத்தைக் காட்டுவதற்காக இரண்டு உதாஹரணம் சொல்லி இருக்கிறது. அன்றிக்கே பெருக்கை த்ருஷ்டாந்தமாகச் சொன்னது, தன்னுடைய இஷ்டத்தினால் திரும்பமுடியாது, என்னும் அபிப்ராயத்தை உடையது. விளக்கு விட்டிலை உதாஹரணமாகச் சொன்னது, அப்படிப்பட்ட நாஶம் தன்னுடைய இஷ்டத்தினாலுண்டான வ்யாபாரத்தைக் காரணமாக உடையது என்று தெரிவிப்பதற்காக. பகவானுக்கும் இவை எல்லாம் பிரவேசித்த போதிலும் பூர்த்தி இல்லை என்கிற அபிப்ராயத்தினால ஸமுத்திரத்தை உதாஹரணமாகச் சொன்னது சீக்கிரத்தி லிவைகளை நாஶம செய்வதைத் தெரிவிப்பதற்காக அக்னியை உதாஹரணமாகச் சொன்னது.

இவைகளை ஸம்ஹாரம் செய்வதில் பகவான் ஒரு வ்யாபாரமும் செய்யாதவரா? எந்தக் காரணத்தினால் தாங்களே அவஸரப்பட்டுக் கொண்டு என்று சொல்லபடுகிறது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமா

களினால் விழுங்கிக்கொண்டு, கோபவேகத்தினால் அவர்களின் இரக்தத்தினால் நனைந்துகொண்டிருக்கிற உதடு முதலியவைகளை அடிக்கடி நக்குகிறீர். உம்முடைய மிகவும் க்ரூரங்களான கிரணங்கள் தங்களுடைய வெளிச்சங்களினால், எல்லா லோகங்களையும் நிறைத்துக்கொண்டு தபிக்கின்றன. 30

ஆக்2யாஹி மே கோ ப4வாநுக்3ரரூபோ
நமோऽஸ்து தே தே3வவர ப்ரஸீத3 ।
விஜ்ஞாதுமிச்சா2மி ப4வந்தமாத்3யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ 31

ப - ரை] உக்3ரரூப: - மிகவும் பயங்கரமான ரூபத்தை உடைய, ப4வாந் - நீர், க: - யார், ஆத்3யம் - ஜகத்காரணமாகிய, ப4வந்தம் -உம்மை,

---

தானம் 'லேலிஹ்யஸே' என்கிற ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது. ஸம்ஹாரம் முதலியவைகளுக்குக் காரணம் அந்தந்த ஜீவாத்துமாக்களின் வ்யாபாரங்கள். அவைகளாலுண்டான கோபம் முதலியவைகளை உடைய பகவான் ஸம்ஹாரம் முதலியவைகளைச் செய்கிறான், என்று தாத்பர்யம். 'ராஜாக்களின் கூட்டங்களை' என்பதற்கு முன்போலவே தாத்பர்யம் கல்பித்துக்கொள்ளவேண்டியது. 'எல்லா' என்பதற்கு யுத்தத்திற்காகக் கும்பலாகச் சேர்ந்திருக்கிற, என்று அர்த்தம். 'லேலிஹ்யஸே' என்பது ஸம்ஹாரம் செய்யவேண்டும் என்கிற எண்ணத்தினாலுண்டான வ்யாபாரம், என்று தெரிவிப்பதற்காக 'கோபவேகத்தினால்' என்று சொல்லப்பட்டது. 'அவர்களின் இரக்தத்தினால்' என்று ஆரம்பித்து, விழுங்குவதினாலும் நக்குவதினாலும் ஏற்பட்ட அர்த்தம் சொல்லப்படுகிறது. யங் என்னும் விகுதியானது அடிக்கடி காரியத்தைச் செய்கிறான் என்கிற அர்த்தத்தைச் சொல்லுவதற்காக ஏற்பட்டது. ஆகையினால் அடிக்கடி என்றாவது, அதிகமாக என்றாவது இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்— 'அடிக்கடி' என்று ஆரம்பித்து. 'பா4ஸ:, தேஜோபி4:' என்னும் பதங்களுக்கு புனருக்திதோஷம் வருகிறது, என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக 'கிரணங்கள் தங்களுடைய வெளிச்சங்களினால்' என்று சொல்லப்பட்டது. 'ப்ரதபந்தி' என்பதற்கு தபிக்கின்றன, என்று அர்த்தம். அதாவது, விழுங்குவதற்காகப் பாகம் செய்கின்றன, என்று அர்த்தம். அன்றிக்கே, பார்த்துக்கொண்டிருக்கும் ப்ரும்மா முதலியவர்களுக்கும் பொறுக்கமுடியவில்லை, என்று சொல்லுவதில் தாத்பர்யமாகவுமாம். 30

விஜ்ஞாதும் - தெரிந்துகொள்ள, இச்சாமி - விரும்புகிறேன், தவ - உம்முடைய, ப்ரவ்ருத்திம் யத்னத்தை - நஹி ப்ரஜாநாமி - நான் அறியவில்லை, ப்ரூஹி - சொல்லும், தேவவர — தேவச்ரேஷ்டனே, தே - உமக்கு, நம: - நமஸ்காரமானது, அஸ்து - இருக்கட்டும், ப்ரஸீத-அனுக்ரஹம் செய்யும். 31

பா] த்ருஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வர்யம் என்று உம்முடைய தடுக்கப்படாத ஐஶ்வர்யத்தை நேரில் பார்க்கவேண்டும் என்று என்னால் ப்ரார்த்திக்கப்பட்டவராய், அப்படித் தடுக்கப்படாத ஐஶ்வர்யத்தைக் காட்டுகிற உம்மால் மிகவும் பயங்கரமாகிய இந்த ரூபம் ப்ரகாஶம் செய்யப்பட்டது. மிகவும் பயங்கரமான ரூபத்தை உடைய நீர் யார். என்ன செய்ய யத்தனித்து இருக்கிறீர், என்று உம்மை அறிய விரும்புகிறேன் உம்முடைய அபிப்ராயத்தில்

---

*தா] இப்படி மிகவும் பயங்கரமான ரூபத்தைப் பார்த்துப் பொறுக்க ஶக்தி இல்லாத அர்ஜுனன் தன்னுடைய எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனாக இருக்கும் தன்மையை ப்ரகாஶம் செய்வதற்கு ஆரம்பித்த நீர் இப்படிப்பட்ட பயங்கரமான ரூபத்தை ப்ரகாசம் செய்ததற்குத் தாத்பர்யத்தைச் சொல்லவேண்டும் என்பதையும் மறுபடியும் ப்ரஸன்னமான ரூபத்தை அடைய வேண்டியதற்காக அனுக்ரஹத்தையும் ப்ரார்த்திக்கிறான்—'ஆக்யாஹி' என்கிற ஶ்லோகத்தினால். பகவானே! எனக்குப் பயங்கரமான ரூபத்தைக் காட்டினதற்கு என்ன அபிப்ராயம், என்று தெரியாமையினால் இப்படிக்கேட்கிறான், என்று சொல்லுகிறார்— 'ஆக்யாஹி' என்று ஆரம்பித்து. உபதேசத்தினாலும், நேராகப்பார்த்ததினாலும் பகவானை அறிந்துகொண்டிருக்கிற படியினால் 'கோபவான்' என்று கேட்டது ஸ்வரூபம் பெயர் முதலியதுகளை மாத்திரம் பற்றியதல்ல 'நஹிப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம்' என்று யத்தனத்தைக் கேட்டிருப்பதின் அபிப்ராயத்தினாலேயே, இவனால் அறியப்படாத அம்ஶம் இன்னது என்பதும் இவ்விடத்திலேயே குறிக்கப்பட்டது. ஆகையினால் அதைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டும என்கிற ஆசையினாலேயே இந்தக் கேள்வி கேட்கப்பட்டது, என்பது யுக்தம். என்கிற அபிப்ராயத்தினால், என்ன செய்ய யத்தனித்து இருக்கிறீர், என்று சொல்லப்பட்டது க்ருஷ்ணனுடைய ரூபத்தினால் மறைந்துகொண்டு வந்திருக்கிற அஸுரனால் ப்ரகாசம் செய்யபபட்ட வேறொரு ரூபமோ என்றிவை முதலிய ஸந்தேஹத்தினால் இந்தக் கேள்விகேட்கப்பட்டது, என்று சிலர் சொன்ன அர்த்தம் இத்தால் நிராகரிக்கப்பட்டது. அப்பொழுது பார்க்கப் படுகிற விக்ரஹம் முதலியவைகளின் வ்யாபாரம் மாத்திரத்தை விலக்*

இருக்கும் யத்தனத்தையும் நான் அறியவில்லை. இத்தை எனக்குச் சொல்லும் எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனே உம்மை நமஸ்கரிக்கிறேன். இப்படிச் செய்வதற்கு இந்த அபிப்ராயத்திஞல் இந்த ஸம்ஹாரம் செய்கிற ரூபம் என்னுல் ப்ரகாஶம் செய்யப்பட்டது, என்று சொல்லிவிட்டு ப்ரஸன்னமான ரூபத்தை உடையவராக ஆகிவிடும். 31

பா] ஆச்ரயித்தவர்களிடத்தில், அதிக ப்ரீதியிஞல், ஸகலத்திற்கும் ஈஶ்வரஞக இருத்தலைக் காட்டுகிற நீர், பயங்கரமான ரூபத்தைக் காட்டினதற்கு என்ன அபிப்ராயம், என்று அர்ஜுநஞல், பார்த்தஸாரதியாகிய, பகவான் கேழ்க்கப்பட்டவராய், தன்னுடைய அபிப்ராயத்தைச் சொல்லுகிறுர். அர்ஜுநனுடைய யத்தனமில்லாமலே துர்யோதனன் முதலிய எல்லாராஜாக்களுடைய ஸமூஹத்தையும் கொல்ல நானே துடங்கி இருக்கிறேன், என்று தெரிவிப்பதற்காக, தன்னுடைய பயங்கரமான ரூபத்தை ப்ரகாசப்படுத்தினது. அப்படிக் காட்டுவேதும், அர்ஜுநனைத் தூண்டுவேதற்காக, என்று,—

ஸ்ரீபகவாநுவாச— ஸ்ரீபகவான் சொன்னுர்—

> காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத்ப்ரவ்ருத்தோ
> லோகாந் ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த: ।
> ருதேऽபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
> யேऽவஸ்திதா: ப்ரத்யநீகேஷு யோதா: ॥ 32

ப - ரை] கால: - எண்ணிச்கொண்டிருக்கிற (நான்), லோகக்ஷயக்ருத் - லோகங்களுக்கு நாஶத்தைச் செய்பவனுய், ப்ரவ்ருத்த: - விருத்தி அடைந்குவதற்காக, அபிப்ராயத்தில் இருக்கிற, என்று சொல்லப்பட்டது. ப்ரும்மா ருத்திரன் முதலியவர்களைக் காட்டிலும், மிகவும் மேலானவன் என்பதைச் சொல்லுகிற 'தேவவர' என்னும் பதத்திஞல், மேலானவன் விஷயத்தில் நமஸ்காரம் தாஞகவே செய்யவேண்டியது, என்றுகாட்டப்படுகிறது, என்கிற அபிப்ராயத்திஞல். எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனே என்று சொல்லி இருக்கிறது. அப்படியே அஹிர்புத்னியனுலும் 'நதேவ்ருத்வாऽஸ்ம்ருஷீஸேஷாநதாநாஶம்ஸிதா:। நத்வந்தேவ்ராஸோயம்ந ப்யோஜநவதுவக:' என்று சொல்லப்பட்டது. ஶ்லோகத்தின் மொத்த அர்த்தத்தைச் சொல்லுகிறுர்—இப்படிச் செய்வதற்கு, என்று ஆரம்பித்து. 'ப்ஸீத' என்பதிஞல், ஏற்பட்ட அர்த்தம் சொல்லப்படுகிறது—ப்ரஸன்னமான, என்று ஆரம்பித்து. இதுவே மேலும் 'தவேதேவரூபம்' என்பவை முதலிய இடங்களிலும் விஸ்தாரமாகச் சொல்லப்போகிறது.

தவனாய், லோகாந் - லோகங்களை, ஸமாஹர்தும் - ஸம்ஹரிக்க, இஹ - இவ்விடத்தில், ப்ரவ்ருத்த: - ப்ரவ்ருத்திதவனாக, அஸ்மி - ஆகிறேன், (ஆகையினால்) த்வாம் ருதே அபி - நீ இல்லாமற்போனபோதிலும் (உன்னுடைய ப்ரயத்தனமில்லாவிட்டாலும்) யே - எந்த, யோதா: - யுத்தவீரர்கள், ப்ரத்யநீகேஷு - எதிரி ஸேனைகளில், அவஸ்திதா: - இருக்கிறார்களோ, ஸர்வே - (அவர்கள்) எல்லோரும், ந பவிஷ்யந்தி - ஜீவித்திருக்கப்போகிறதில்லை. 32

பா] 'கலயதி' (எண்ணிக்கொண் டிருக்கிறான், என்று 'கால:' என்று சொல்லப்படுகிறது அதாவது த்ருதராஷ்ட்ரன் பிள்ளை முதலிய எல்லோருடையவும் ஆயுஸ்ஸின் முடிவை எண்ணிக்கொண்டிருக்கிற நான் அவர்களை நாசம் செய்யப்போகிறவனாக இந்தப் பயங்கரமான ரூபத்துடன் விருத்தி அடைந்தவனாகவும் ராஜாக்களின் கூட்டங்களை எதிர்முகமாகஇருந்து

தா] 'காலோஸ்மி' என்பது முதல மூன்று ஶ்லோகங்களின் அர்த்தத்தைச் சேர்த்துமுதலில் ஸங்கதி சொல்லுகிறார்—'ஆஶ்ரிதாகளிடத்தில்' என்று ஆரம்பித்து, ஆஶ்ரிதர்களிடத்தில் அதிகப்ரீதியினால், என்பதினால் பயங்கரமான ரூபத்தை பரகாசம் செய்தது அனுசிதம் என்பது காட்டப்படுகிறது. இப்படிச செய்வதற்கு இநத அபிபராயத்தினால் என்று முன்பு சொலலிய வரிசைக கிரமத்தை அனுஸரித்து பதில் சொல்லுகிறார்—அர்ஜுநனுடைய ப்ரயத்தன மில்லாமலே' என்று ஆரம்பித்து • 'கால' என்னும பதம்கூ முஹூர்த்தம முதலிய காலமாகிய வஸ்துவைமாத்திரம் சொலலுவதாக இருநதால பகவானோடு சேர்ததுச சொல்லி இருப்பது பொருக்காதாகையினால இநதர பராணாதிகரணத்தில் சொல்லிய நியாயப்படி அதறகு அநதாயாமியான பகவானைச சொல்லுகிறது என்றுவது ஆகாஶாதிகரணததிலும் பராணாதிகரணததிலும் சொல்லிய நியாயத்தை அனுஸரிதது காரணததினால ஏறபட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறது என்றுவது, ஸ்ருஷ்டி காலம் ஸ்திதி காலம் இவைகளைவிட வேறுபட்டதான ஸமஹாரம செய்யும் காலத்திற்கு அபிமானி தேவதையான பகவானுடைய ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்வதற்கு அஸாதாரணமாகியத தியானம் செய்யத தகுநத விககிரக விசேஷததில இருப்பதையாவது சொலலுகிறது, என்றுவது ஒபபுக் கோள்ள வேண்டும். இந்த மூன்று பக்ஷங்களிலும கால என்னும பதததிற்குத் தோன்றுகிற காரணத்தினால ஏற்பட்ட அர்ததமானது ப்ரக்ருதத்தில் வேணடி இருக்கிறபடியினால் விடகததககதல்ல, என்கிற அபிபராயததினால் சொலலுகிறார்—கல யதி என்று ஆரமபித்து. ஸம்பநதம

ஸம்ஹாரம்செய்ய இவ்விடத்தில் ப்ரவ்ருத்தித்தவனாகவுமாகிறேன். ஆகையினால என்னுடைய ஸங்கல்பத்தினாலேயே உன்னுடைய ப்ரயத்தனமில்லாமலே த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகள் முதலிய உன்னுடைய எதிரிகளின் கூட்டங்களில் எந்த யுத்தவீரர்களிருக்கிறார்களோ அவர்கள் எல்லோரும் நாசமடையப்போகிறார்கள். 32

---

முதலிய அர்த்தங்களைப் பார்க்கிலும், எண்ணுவது இவ்விடத்தில் ஸம்ஹாரம் செய்வதற்குத் தகுந்திருக்கிற படியினால், எண்ணிக்கொண்டிருக்கிறேன்' என்று ஏற்பட்டது. பாக்ருதத்தி லிருக்கிற விசேஷத்தைச் சொல்லுகிறதாகச் சொல்லுகிறார்—அதாவது, என்று ஆரம்பித்து. லோகாநு என்னும் பதத்திற்கு ராஜாக்களின கூட்டங்களை என்று வ்யாக்யானம்செய்தது முன் போலவே. 'ப்ரவ்ருத்தஃ' என்பதினால் ரூபம் பெரிது என்பது சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—பயங்கரமான ரூபத்துடன் வ்ருத்தி அடைந்தவனாகவும், என்று. அன்றிக்கே, எல்லாவற்றையும் விழுங்க யத்தனம செய்துகொண்டு இருக்கிறவன் என்றும் தாத்பர்யமாகவுமாம். 'ஸமாஹர்தும்' என்கிற பதத்தினால் கும்பலாகச் சேர்ப்பது முதலியது சொல்லப்படுகிற தல்ல. ப்ராக்ருதத்தில் பொருந்தாதாகையினால். ஸம்ஹாரம் செய்யப்படுதல் மாத்திரமும் சொல்லப்பட்டதல்ல. 'லோகக்ஷயக்ருத்' என்பதோடு புனருக்தி வருவதினால். ஆகையினால் ஸம்ஹாரம்மாத்திரமே நடுவிலி நிக்கும், ஆ, என்கிற உபஸர்கத்தினாலும் விசேஷித்துச் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—எதிர்முகமாக இருந்து என்று. அதாவது ப்ரத்யக்ஷமாக நின்று, என்று அர்த்தம். வேலைக்காரரைக் கொண்டு சத்ருக்களைக் கொல்வது போல மறைந்து நின்று ஸம்ஹாரம் செய்வதலல இது. என்று தாத்பர்யம். எதிர்முகமாக நிறபதே ஸம்ஹாரம் செய்வதற்குக் காரணம் என்று தாத்பர்யமாகவுமாம். 'உதமெஸஜ்ஜஸூஹஷூம்ஸம்ஹாரஹேதுவாதிபஃ। தஸ்யாபி வக்ஷ்யமாணக்ரியாநுஷங்கவிஷயாஃ' என்றிவை முதலியவைகளை அனுஸரித்துச் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்று ஆரம்பித்து. ஒத்தாசை யாகிய நம்மால் வேலை செய்விக்கக் கூடிய ஆகாரம் நீ, என்று சொல்லபபடுகிறது, என்கிற அபிப்ராயத்தினால், உன்னுடைய ப்ரயத்தனமில்லாமலே' என்று சொல்லப்பட்டது. 'நபவிஷ்யந்தி' என்று சொல்லில், உண்டாகப போகிறதில்லை என்று அர்த்தம் தோன்றும், ஆகையினால் அதைவிலக்குவதற்காக இனிமேல இருக்கப்போகிறதில்லை. என்று மறுக்கிறது, என்று சொல்லுகிறார்—நாசமடையப் போகிறார்கள், என்று. 32

தஸ்மாத்த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ
ஜித்வா ஶத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந் ॥ 33

ப - ரை] ஸவ்யஸாசிந் - அர்ஜுநா, தஸ்மாத் - ஆகையினால், த்வம் - நீ, உத்திஷ்ட - எழுந்திரு, யஶ: - கீர்த்தியை, லபஸ்வ - அடை, ஶத்ரூந் - சத்துருக்களை, ஜித்வா - ஜயித்து, ஸம்ருத்தம் - பூர்ணமான, ராஜ்யம் — ராஜ்யத்தை, புங்க்ஷ்வ - அனுபவி, ஏதே - இவர்கள், மயைவ - என்னாலேயே, பூர்வமேவ - முன்பே, நிஹதா: - கொல்லப்பட்டார்கள், நிமித்தமாத்ரம் - ஒத்தாசைக் காரணமாக மாத்திரம், பவ - இரு. 33

பா] ஆகையினால் நீ அவர்களோடு யுத்தம் செய்ய எழுந்திரு, அந்தச் சத்ருக்களை ஜயித்து, கீர்த்தியை அடைவாய், தர்மமாகக் கிடைத்த பூர்ணமான ராஜ்யத்தையும் அனுபவி, என்னாலேயே அபராதம்செய்த இவர்கள் முன்பே கொல்லுவதற்காக ஏற்படுத்தப்பட்டார்கள். நீயோவெனில் அவர்களைக் கொல்லுவதில் ஒத்தாசைக் காரணமாக மாத்திரம் இரு. அதாவது என்னால் அவர்கள் கொல்லப்படும் பொழுது ஆயுதம் முதலியவைகளின்

---

தா] என்னுடைய ப்ரயத்தன மில்லாமலே த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகள் நசிக்கப் போகிறதானால் என்னை எதற்காக ப்ரயத்தனம் செய்யும்படித் தூண்டுகிறீர் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'தஸ்மாத்த்வம்' என் என்கிற ஶ்லோகம். என்னிடத்தில பக்தனாகிய உனக்கு ஜயம், கீர்த்தி, ராஜ்யம் முதலியவைகள் கிடைப்பதற்காக உன்னை தூண்டுகிறது, என்று ஸமாதானத்தின தாத்பர்யம் 'ஜித்வா ஶத்ரூந்' என்றது. கீர்த்தி ராஜ்யம் இவைகளுக்குப பொதுவான காரணம். பக்ஷபாதம் தயைஇல்லாமை இவைகளைப் பரிஹரித்துக்கொண்டு, கொல்லவேண்டும் என்கிற ஆசை உண்டாவதற்குக் காரணத்தைக் காட்டுவதற்காக அபராதம் செய்த என்று சொல்லப்பட்டது. முன்பே கொல்லப்பட்டார்கள்' என்பது ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தமாக இருக்கிறது. அப்படிக்கானால் அவர்களைக் கொல்லுவதற்காக நிமித்தமாத்ரம்பவ' என்று அர்ஜுநனைத் தூண்டுவதும் வ்யர்த்தம், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—(கொல்லுவதற்காக ஏற்படுத்தப்பட்டார்கள்' என்று. ஏற்படுத்துவதாவது, அதற்காக ஸங்கல்பம் செய்தல் அதாவது கொல்லத் தகுந்தவர்கள் என்று ஸங்கல்பிக்கப் பட்டார்கள், என்று அர்த்தம் ஸங்கல்பம் வ்யர்த்த மில்லாத தாகையினால் பலம் ஸித்திக்காமல் போகாதாகையினால், கொல்லப்பட்டார்கள் என்று சொல்லி இருக்கிறது. அப்படிக்கிரு

ஸ்த்தானத்திலே இரு. 'ஸவ்யஸாசிந்' 'ஷவஸஃவோயெ' என்கிற தாதுவா கையினால் இடது கையினுலும் பாணங்களைக் கும்பலாக விடக்கூடிய

---

ந்தபோதிலும் 'நிஷ்டா' என்னும் ப்ரத்யயம் எப்படிப் பொருந்தும், எனில் பகவானுடைய ஸங்கல்பம் முதல் பலம் வரையிலான காரியங் களின் கூட்டத்தில் ஸங்கல்பமாகிற ஒரு பாகம் முடிந்து விட்டபடியினு லும், ஒரு பாகத்தில் ஸமுதாயத்தில் ப்ரயோகிக்கும் சப்தத்தைப் ப்ர யோகிப்பது பொருந்துமாகையினுலும்; எதைப் போல வெனில் பாத்தி ரம், விறகு முதலிய கூட்டத்தில் ஒவ்வொன்றிலும் 'பசதி' (சமைக்கி றது)என்கிறப்ரயோகம் இருப்பதுபோல.ஒருகாரியத்தைச்செய்ய ஆசை ப்படுவதைச் சொல்லுகிற 'க்த' என்னும் விருதிவந்திருக்கிறது. என்று சிலர் சொல்லுகிறார்கள். 'ஊத்ர' என்று உபாதானகாரணமாக இருத் தலை மறுக்கிறது, என்று அர்த்தம் தோன்றும், அது விஷயத்தில் ப்ரஸ் தாவமே இல்லாமையினால், மறுப்பதும் உசிதமல்ல. என்கிற ஆக்ஷேப த்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்—'அதாவது'என்று ஆரம்பித்து. என் ஞல் ஒத்தாசையாகச் செய்யப்படும் அதைத் தெரிந்துகொண்டு மிரு க்கிற உன்னால் பாபம், தயை இல்லாமை, தோல்வி, இவை முதலியவை ளைப் பற்றி ஸந்தேகப் படவேண்டிய தில்லை என்று தாத்பர்யம் 'ஊத்ர என்னும் பதம் ப்ரதானமாக இருப்பதை விலக்குவதற்காக, என்கிற அபிப்ராயத்திஞல்சொல்லுகிறார்—'ஆயுதம் முதலியவைகளின் ஸ்தானத் தில்' என்று 'ஸவ்யஸாசிந்' என்னும் பதத்திஞல் அழைத்தது யுத்தத் திற்கு உபயோகமாகிய அஸாதாரணமான மேன்மைக் காட்டுவதற்காக என்கிற அபிப்ராயத்திஞல் வ்யுத்பத்தி சொல்லுகிறார்—'ஷவஸஃவோ யெ' என்று ஆரம்பித்து. ஸவ்ய என்னும் பதம் கரணத்தைச் சொல்லுகி றது, என்பதையும், தாதுவிற்குச் ஸந்தர்ப்பதிற்கு உசிதமான கர்மத் தையும் விருதி அத்தையேஸ்பாவமாக உடையவன் என்கிற அர்த்தத் தைச் சொல்லுகிறது, என்பதையும் காட்டுகிறார்—'இடதுகையினுலும்' என்று 'ஸஃவோயம்' ஆவது இவ்விடத்தில் பாணங்களைத் தொடுத்தல் பரிஸங்க்யா ந்யாயத்திஞல் வலது கையினால் பாணத்தைத் தொடுக்க ஶக்தி இல்லாதவன், என்று அர்த்தமாகும், என்கிற ஸந்தேஹத்தைப் போக்கிக்கொண்டு கால் முதலியவைகளுக்குப் பொதுவாகிய ஸவ்ய என்னும் பதத்திற்கு ப்ரக்ருதத்தி லுபயோகமுள்ள விஶேஷ்யத்தை யும் சொல்லுகிறார்—'இடது கையினுலும்' என்று. இங்கே இடது பக் கத்தைச் சொன்னது இடது கையினால் பாணம் விட முடியாது, என் பது இல்லை, என்கிற அர்த்தத்தைச சொல்லுகிறதே அல்லாமல் வே

வன் என்று அர்த்தம். அதாவது இரண்டு கைகளாலும் யுத்தம் செய்யச் சக்தியுள்ளவன் என்று தாத்பர்யம் 33

> 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂 𑌚 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂 𑌚 𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌂 𑌚
> 𑌕𑌰𑍍𑌣𑌂 𑌤𑌥𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑌿 𑌯𑍋𑌧𑌵𑍀𑌰𑌾𑌨𑍍।
> 𑌮𑌯𑌾 𑌹𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌜𑌹𑌿 𑌮𑌾𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾𑌃
> 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌜𑍇𑌤𑌾𑌸𑌿 𑌰𑌣𑍇 𑌸𑌪𑌤𑍍𑌨𑌾𑌨𑍍 ॥ 34

ப - ரை] 𑌤𑍍𑌵𑌂 - நீ, 𑌮𑌯𑌾 - என்னால், 𑌹𑌤𑌾𑌨𑍍 - கொல்லப்பட்ட, 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂 - த்ரோணாசாரியரையும், 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂 - பீஷ்மாசாரியரையும், 𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌂 - ஜயத்ரதனையும் 𑌕𑌰𑍍𑌣𑌂 – கர்ணனையும், 𑌤𑌥𑌾 - அப்படியே, 𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑍍 - மற்ற, 𑌯𑍋𑌧𑌵𑍀𑌰𑌾𑌨𑌪𑌿 - யுத்தவீரர்களுக்குள் முக்கியமானவர்களையும். 𑌜𑌹𑌿 - கொல்லு, 𑌮𑌾𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 - துக்கப்படாதே, 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 - யுத்தம்செய், 𑌰𑌣𑍇 - யுத்தத்தில், 𑌸𑌪𑌤𑍍𑌨𑌾𑌨𑍍 - சத்துருக்களை, 𑌜𑍇𑌤𑌾𑌸𑌿 - ஜயிக்கப்போகிறாய். 34

பா] அபராதம் செய்தவர்களானதினால் என்னாலேயே கொல்லுவதற்காக ஏற்படுத்தப்பட்ட, த்ரோணாசாரியர், பீஷ்மாசாரியர், கர்ணன் முதலியவர்களை நீ கொன்றுவிடு. ஸ்வர்கத்தில் ஆசையை உடையவர்களான ஆசாரியர்களையும், பந்துக்களையும் மற்றவர்களையும், எப்படிக் கொல்வேன், என்று அவர்களைக் குறித்துத் தர்மத்தை அதர்மமாக எண்ணுவதினால்

---

*ஒருகையினால் விட முடியாது என்று மறுப்பதற்காக இல்லை, என்று தாத்பர்யம் அதினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதாவது' என்று ஆரம்பித்து. பூமியின் பாரத்தைப் போக்கடிப்பதற்காக உனக்கு இப்படிப்பட்ட ஸாமர்த்தியம் என்னால் ஸங்கல்பிக்கப்பட்டது, என்று, 'சக்தி உள்ளவன்' என்பதற்கு அபிப்ராயம்.* 33

*அர்ஜுனனுக்குத் தகாத இடத்திலுண்டான ப்ரீதி, தயை, தர்மத்தை அதர்மமாக எண்ணுவதினாலுண்டான பயம், இவைகளினால் உண்டான, '𑌕𑌥𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂' என்பவை முதலிய வார்த்தைகளுக்கு நேராக பதில் சொல்லுகிறார்—இந்த ஸ்லோகத்தினால் '𑌮𑌾𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾𑌃' என்கிற இடத்தில் பூஜை செய்யத் தகுந்தவர்களாக நினைத்துக்கொண்டு என்று மிகுதிவாக்கியம் இருக்கவேண்டும். என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—ஆசாரியர்களையும், என்று ஆரம்பித்து. 'ஸ்வர்கத்தில் ஆசையை உடையவர்களான, ஆசாரியர்களையும் பந்துக்களையும்' என்கிற பதங்களினால், தர்மத்தை அதர்மமாக எண்ணுவதினால் உண்டான*

உண்டான பயத்தினாலும், பந்துக்களிடத்தில் ப்ரீதியினாலும், தயையினா லும், துக்கப்படாதே. எந்தக் காரணத்தினால் அபராதம் செய்தவர்களா கிய அவர்களஎன்னாலேயே கொல்லுவதற்காக ஏற்படுத்தப்பட்டார்களோ. ஆகையினால் ஸந்தேஹமில்லாமல் யுத்தம் செய். யுத்தத்தில் சத்துருக் களை ஜயிக்கப்போகிறாய். இவர்களைக் கொல்லுவதில் தயை இல்லாதவன் என்னும் பெயரின் லேசமும் இல்லை. பின்னை என்னவெனில் ஜயமே அடையப்படுகிறது என்று தாத்பர்யம். 34

---

பயம், பந்துக்களிடத்தில் ப்ரீதி, தயை, இவைகளுக்குக் காரணத்தைக் காட்டி இருக்கிறது. இவர்கள் விஷயத்தில் தர்மத்தை அதர்மமாக எண்ணுவதினால் உண்டானபயம் முதலியவைகள் வ்யர்த்தம, என்பது காரணம், என்று சொல்லுகிறார்—'அவர்களைக் குறித்து' என்று ஆரம் பித்து. தர்மத்தை அதர்மமாக எண்ணுவதினாலுண்டான பயம் முதலி யவை இருக்கட்டும், த்ரோணர் முதலிய சத்துருக்கள் அந்தந்தக் காரணங்களினால் ஜயிக்கமுடியாதவர்கள், யுத்தத்தில் ஜயமுண்டாவ தும் நிலை இல்லாதது, என்று நான்பயப்படுகிறேன், என்று சொல்லு கிறாயோ; அப்படிக்காகில் பயப்படாதே என்கிற அபிப்ராயத்தினால் 'ரோவ்யதிஷ்டா:யோத்வீரா' என்றிவை முதலியது சொல்லபபடுகிறது, என்று சொல்லுகிறார்—'எந்தக் காரணத்தினால்' என்று ஆரம்பித்து. 'ஜெதாஸி' என்கிற இடத்தில் 'ஸபத்நாந்' என்று இரண்டாவது வேற் றுமை இருப்பதினால், 'த்ருஜிச்' என்கிற ப்ரத்யயம் பொருந்தாதாகை யினால் 'த்ருந்' என்னும் விகுதி, வரப்போகிற அர்த்தத்தைச் சொல்லா தாகையினாலும், லுட்டாக ஒரேபதமாக இருக்கிறது. அதில் அதிக காலம் கழித்து வரப்போகிறது என்கிற தாத்பர்யமுமில்லை, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஜயிக்கபோகிறாய்' என்று. ஸந்தே ஹிக்கப்பட்ட அனிஷ்டம் நிவ்ருத்தியாவதிலும், இஷ்டம் கிடைப் பதிலும் இந்த ஶ்லோகத்திற்குத் தாத்பர்யம், என்று சொல்லுகிறார்— 'இவர்களை' என்று ஆரம்பித்து. அர்ஜுநனுக்குத் தோல்வி உண்டா கும் என்கிற ஸந்தேஹமே இல்லாமையினால் 'ரோவ்யதிஷ்டா:' என்றி வை முதலியது ஆரம்பத்தில் சொல்லியபடி தயை இல்லாமை உண் டாகுமே, என்கிற ஸந்தேஹத்தைப் பரிஹரிப்பதற்காக, என்று தாத் பர்யம். அனுகூலமாக இருப்பவர்களிடத்தில் அல்லவோ தயை இருக்க வேண்டும், என்கிற அபிப்ராயத்தினால் 'ஸபத்நாந்' என்னும் பதம் சொல்லி இருக்கிறது, என்றும் அபிப்ராயம். 34

ஸஞ்ஜய உவாச—ஸஞ்சயர் சொன்னார்—

ஏதச்ச்ருத்வா வசநம் கேஶவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்வேபமாந: கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ॥ 35

ப – ரை] கேஶவஸ்ய - பகவானுடைய, ஏதத் - இந்த, வசநம் - வார்த்தையை, ஶ்ருத்வா - கேட்டு, க்ருஷ்ணம் – க்ருஷ்ணனை, நமஸ்க்ருத்வா - ஸேவித்து, பீதபீத: - மிகவும் பயந்தவனாய்க் கொண்டு, பூய ஏவ - மறுபடியும், ப்ரணம்ய - ஸேவித்து, க்ருதாஞ்ஜலி: - கைகளைக் கூப்பிக் கொண்டு, வேபமாந: - நடுங்கிக்கொண்டிருக்கிற, கிரீடீ - அர்ஜுநன், ஸகத்கதம் - தேம்பிக்கொண்டே, ஆஹ - சொன்னான் 35

பா] ஆஶ்ரயித்தவர்களிடத்திலுண்டான ப்ரீதிக்கு ஸமுத்திரமான, பகவானுடைய இந்த வார்த்தையைக் கேட்டு அவரை ஸேவித்து, மிகவும் பயந்தவனாய், மறுபடியும் அவரை ஸேவித்து, கைகளைக் கூப்பிக் கொண்டு நடுங்கிக்கொண்டிருக்கிற அர்ஜுநன் தழுதழுத்த குரலுடன் சொன்னான். 35

---

தா] *'ஏதச்ச்ருத்வா' என்கிற ஶ்லோகத்தில், இரண்டுதரம் நமஸ்காரம் செய்ததற்குக் காரணத்தையும், சிதறி இருக்கும் பதங்களுக்கு உசிதமான அன்வயத்தையும் காட்டுகிறார்—'ஆஶ்ரயித்தவர்களிடத்தில்' என்று ஆரம்பித்து. வார்த்தையைக் கேட்டமாத்திரத்திலே பரவசனாகி முதலில் நமஸ்காரம் செய்தான். அதிகமாகப் பயந்து மேல் சொல்லப் போகிற வார்த்தையை ஆரம்பிப்பதற்காக மறுபடி ஸேவித்ததும் கைகளைக் கூப்பினதும். அபேக்ஷித்த மாத்திரத்திலே தன்னுடைய விக்ரஹம் முதலியவைகளை ப்ரகாசம் செய்ததுபோலவே தன்னுடைய அபிப்ராயத்தை ப்ரகாசிப்பித்ததும் ப்ரீதியினாலேயே செய்தான் என்கிற அபிப்ராயத்திலே சொல்லுகிறார்—'ஆஶ்ரயித்தவர்களிடத்திலுண்டான ப்ரீதிக்கு ஸமுத்திரமான' என்று. பருமாருத்திரன் இவர்களை ரக்ஷிப்பது முதலிய காரணங்களினால் கேசவன் என்னப்படுகிறான். ஆஶ்ரயித்தவர்களின் ஸம்ஸாரத்தை இழுத்து விடுகிறபடியினால் க்ருஷ்ணன் என்னப்படுகிறான். பகவானுடைய தாமரஸ புஷ்பங்கள் போன்ற திருவடிகளை நமஸ்கரித்ததினால் கிரீடத்தினால் அலங்கரிக்கப்பட்ட தலை க்ருதார்த்தமாக இருக்கையை அடைந்தது, என்கிற அபிப்ராயத்தினால் இவ்விடத்தில் கிரீடீ, என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. 'ஶாஶ்வதம் கிரீடஜுஷ்டம் பாதாம்புஜத்வந்த்வமநந்யகாமம்' என்றல்லவோ மஹர்ஷியினால் சொல்லப்பட்டது.* 35

ஸ்தானே ஹ்ருஷீகேஶ தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யநுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திஶோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்காः ॥ 36

ப - ரை] ஹ்ருஷீகேஶ - பகவானே, தவ - உம்முடைய, ப்ரகீர்த்யா-யஶஸ்ஸினால், ஜகத் - லோகமானது, ப்ரஹ்ருஷ்யதி - ஸந்தோஷத்தை அடைகிறது, அநுரஜ்யதே - ப்ரீதிசெய்கிறது, (உம்மைப்பார்த்து) ரக்ஷாம்ஸி - ராக்ஷஸர்கள், பீதானி - பயந்தவர்களாய்ச்சொண்டு, திஶः-திக்குக்களை குறித்து, த்ரவந்தி - ஓடுகிறார்கள், ஸர்வே - எல்லா, ஸித்த ஸங்காः - ஸித்தர்களின் கூட்டங்கள், நமஸ்யந்தி - ஸேவிக்கின்றன, (இவை எல்லாம்) ஸ்தானே - யுக்தம். 36

பா] யுத்தத்தைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையினால் வந்திருக்கிற ஸகலமான தேவதைகள் கந்தர்வர்கள், ஸித்தர்கள், யக்ஷர்கள், வித்யாதரர்கள், கிந்நராகள், கிம்புருஷர்கள, முதலிய லோகம், உம்முடைய அனுக்ரஹத்தினால் எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனாகிய உம்மைப்பார்த்து, உம்முடைய கீர்த்தியினால் எல்லாம் ஸந்தோஷப்படுகிறது. ப்ரீதியையும் செய்கிறது. உம்மைப்பார்த்து ராக்ஷஸாகள் பயந்தவர்களாய் எல்லாத்

---

தா] 'ஸ்தானேஹ்ருஷீகேஶ' என்கிற ஶ்லோகம் ஸ்ரீவிஷ்ணுபஞ்சரம் முதலியவைகளில் உபயோகபபடுததபபட்ட மந்த்ரம் என்று ப்ரஸித்தம். ஸ்தானே எனபது இடத்தில் என்கிற அாததத்தைச் சொலலுகிறது என்பதை விலக்குவதற்காகச சொல்லுகிறா—'யுக்தம்' என்று. இவ்விடத்தில் ஜகத என்னும் பதத்தினால் சொலலுகிற அர்த்தத்தையும் அதற்குக் கீர்த்தியினால் ஸந்தோஷம் உண்டாவதற்குக் காரணத்தையும் ப்ரகாஶப்படுத்துகிறார்—'யுத்தத்தை' என்று ஆரம்பித்து. 'ப்ரஹ்ருஷ்யதி' என்பதினால இஷ்டமான அதிதி வந்ததைபபோலக் கண் மனஸ்ஸு இவைகளுக்கு பரீதி சொல்லப்படுகிறது. அநுரஜ்யதே என்பதினாலோ தகப்பனார் முதலியவர்கள் இடங்களில் பிள்ளை முதலியவர்களுக்குப்போல ஸ்நேஹம சொல்லப்படுகிறது. ஆகையினால் புனருக்தி இல்லை. 'உம்மைப் பாாத்து' என்பதினால், ராக்ஷஸர்களுக்குப் பயமுண்டாவதற்குக் காரணத்தைக்காட்டி இருக்கிறது. கீர்த்தியினால் என்பதைச சேர்த்துக்கொள்வதோ விருத்தமாகையினால் யுக்தமல்ல.

திக்குக்களையும் குறித்து ஓடுகிறார்கள். ஸித்தர் முதலிய பக்திமான்க ளுடைய கூட்டங்கள் எல்லாம் நமஸ்காரம் செய்கின்றன. இவை எல் லாம் யுக்தம்தான், என்று முன் பதத்தோடு அன்வயம் சொல்லிக்கொ ள்ள வேண்டியது. 36

பா] யுக்தம் என்பதையே நிரூபிக்கிறார்.

*கஸ்மாச்ச தே ந நமேரந் மஹாத்மந்*
*கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ॥* 36½

ப - ரை] *மஹாத்மந்* - மஹாத்மாவாகிய க்ருஷ்ண, *கரீயஸே* - சிறந்த வராகிய, *ப்ரஹ்மணோऽபி* - சதுர்முகனுக்கும், *ஆதிகர்த்ரே* ஆதியாயும் கர்த்தாவாயு மிருக்கிற, *தே* - உம்மின்பொருட்டு, *கஸ்மாத்* - எந்தக் காரணத் தினால், *ந நமேரந்* - ஸேவிக்கமாட்டார்கள். 36½

பா] மஹாத்மாவாகிய க்ருஷ்ண சிறந்தவராயும் சதுர்முகனுக்கும் ஆதியா

---

*மற்றவர்கள் உம்முடைய குணங்களைச் சொல்வதினால் என்று சொல்வ தோவெனில் அநேகப்பதங்களைக் கல்பிக்கவேண்டி இருப்பதினால்; ச்ரம மானது தேவர்கள் அஸுரர் முதலியவர்கள் எல்லோரும் இந்த ரூபத்தைப் பார்த்தார்கள் என்பது 'வீக்ஷந்தே' என்று முன்னமே சொல்லப்பட்டது, என்று தாத்பர்யம். ஸித்த என்னும் பதம் இவ்விடத் தில் பக்திமான்களுடைய கூட்டம் எல்லாவற்றையும் குறிப்பதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் 'ஸித்தர் முதலிய பக்திமான்களுடைய கூட் டம்' என்று சொல்லப்பட்டது.* 36

*'கஸ்மாச்'* என்கிற ஶ்லோகத்தை முன் ஶ்லோகத்தோடு சேர்க் கிறார்—யுக்தம் என்பதையே, என்று ஆரம்பித்து *தே* என்பது முதல் வேற்றுமைப் பன்மைஎனகிற ப்ரமத்தைவிலக்குவதற்காக(உம்மின்போ ருட்டு) என்றுசொல்லி இருக்கிறது ஸேவிக்கிறவர்களோ தானாகவே ஏற் பட்டார்கள். கீழ் ஶ்லோகத்திலிருந்து சேர்த்துக்கொள்ளப்பட்டார்க ளாகவுமாம், என்று தாத்பர்யம், ப்ரும்ம, என்னும் பதம் அனேக வஸ் துக்களில் ப்ரயோகிக்கப் படுகிறபடியினால் இவ்விடத்தில் எல்லோரா லும் ஸேவிக்கத் தகுந்தவர் என்பதைத் தெரிவிப்பதற்கு உபயோகமா கையினால் 'சதுர்முகன்' என்கிற பதத்தினால் வ்யாக்யானம் செய்யப் பட்டது. *'ஆதிகர்த்ரே'* என்று விஶேஷணத்துடன் சொல்லி இருப்பதி னால்விலக்கப்படுகிறவனாய், புதிதாய் சதுர்முகனுக்குக் கர்த்தா ஒருவன் இருக்கிறானே என்கிற ஊஹத்தினால் உண்டாகும் ப்ரமத்தை விலக்கு வதற்காக 'ஆதியாகியும்' என்று பிரித்துச் சொல்லப்பட்டது. கர்த்

கியும் கர்த்தாவாகியு மிருக்கிற உம்மின்பொருட்டு அந்தச்சதுர்முகன் முதலியவர்கள் எந்தக் காரணத்தினுல் நமஸ்காரம் செய்யமாட்டார்கள். 36½

> அநந்த தேவேஶ ஜகந்நிவாஸ
> த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் ।
> த்வமாதிதேவ꞉ புருஷ꞉ புராண꞉
> த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம் ॥ 37½

ப - ரை] அநந்த — அந்தமில்லாதவராயும், தேவேஶ - தேவதைகளுக்கெல்லாம் ஈஶ்வரனாயும், ஜகந்நிவாஸ — லோகங்களை யெல்லாவற்றையுமிருப்பிடமாகவுடையவராயுமிருக்கிற (க்ருஷ்ண) த்வம்-நீர், அக்ஷரம்-அழிவில்லாத ஜீவாத்மா, ஸதஸத்-கார்யதசை காரணதசை இவைகளோடு கூடிய ப்ரக்ருதியும், யத்-எந்தப் பரிசுத்த ஆத்மாவானது, தத்பரம்-அவை இரண்டைக் காட்டிலும் மேலானதோ, அதுவும் (நீரே) த்வம் - நீர், ஆதிதேவ꞉ - ஆதியாகிய தேவன், புராண꞉ - அநாதியாகிய, புருஷ꞉ - புருஷன், த்வம் - நீர், அஸ்ய - இந்த, விஶ்வஸ்ய ப்ரபஞ்சத்திற்கு, பரம் - மேலான, நிதாநம் - இருப்பிடம், 37½

பா] அளவில்லாதவராகவும், தேவதைகளுக்கெல்லாம் ஈஶ்வரனுகவும், லோகங்களை யெல்லா மிருப்பிடமாகவுடையவராகவுமிருக்கிற க்ருஷ்ண, நீரே அக்ஷரம் 'நக்ஷரதி' (நாஶமடைகிறதில்லை)என்று ஜீவாத்மா அக்ஷ

---

*தா என்னும் பதத்தினுல் நிமித்தகாரணம் என்பது சொல்லப்பட்டபடியினுல் ஆதி, என்னும் பதம் உபாதானம் என்னும் காரணத்தைச் சொல்லுகிறது, தனக்கு வேருெரு காரணம் இல்லை, என்று மறுப்பதற்காகவுமாம் 'நமஃ' என்னும் பதத்தோடு சேர்ந்திருப்பதைப்போலவே, நமஸ்காரம் என்கிற அர்த்தம் சேர்ந்திருந்தபோதிலும் நான்காம் வேற்றுமை உண்டு என்று தெரியப்படுத்துவதற்காக நமஸ்காரம் செய்யமாட்டார்கள் என்று சொல்லப்பட்டது. 'பஶுபதயே ஸர்வாய க்ருஷ்ணாய தேவாய நமஃ' என்றிவை முதலிய ப்ரயோகங்களைப் போலவே இதுவும் 36½*

*'த்வமக்ஷரம்' என்று முன்னமே சொல்லப்பட்டதினுல் இவ்விடத்தில் 'த்வமக்ஷரம்' என்று சொல்லி இருப்பது அதைவிட வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறது என்பது உசிதம் 'தத்பரம்' என்பதின் ஸாமர்த்தியத்தினுலும் இவ்விடத்தில் அக்ஷரம், ஸத் அஸத், என்னும் பதங்*

ரம் என்னப்படுகிறது. †'இந்த ஜீவாத்மா பிறக்கிறதுமில்லை. மரணமடைகிறதுமில்லை' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லப்பட்ட ஜீவாத்மா நாஶமடைகிறதில்லை அல்லவா. ஸத்து அஸத்தும் நீரே, ஸத்து அஸத்து என்கிற பதங்களினால் சொல்லப்பட்டது காரியமாகவும், காரணமாகவு மிருக்கிற ப்ரக்ருதி. பெயர், ரூபம் இவைகளினாலுண்டான பிரிவுகளை உடைத்தாய் இருப்பதினால் கார்யதசையை உடைய ப்ரக்ருதி, ஸத்து என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது. அவைகளை அடையத்தகாததாகையினால் காரணதசையை உடைய ப்ரக்ருதி அஸத்து என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது. இவை இரண்டும் நீரே என்று தாத்பர்யம். அப்படிப்பட்ட ப்ரக்ருதியைப் பார்க்கிலும் ப்ரக்ருதியோடு சேர்ந்த ஜீவாத்மாவைப் பார்க்கிலும் வேறாகிய பரிசுத்தாத்மா எதுவோ

கள், தாழ்ந்த தத்வங்களைப்பற்றிச் சொல்லுகின்றன என்பது, நியாயத்தை அனுஸரித்தது அதிலும், பாவம், அபாவம் என்னும் பதங்களினால் சொல்லக்கூடிய விகாரங்களை அடைகிறபடியினால், ஸத் அஸத் என்னும் பதங்கள் அசேதனத்தைச் சொல்லுகின்றன, என்பதும், விகாரம் அற்றிருக்கையினால் அக்ஷரம் என்னும் பதம் ஜீவாத்மாவைச் சொல்லுகிறது, என்பதும் உசிதம், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'நக்ஷரதி' என்று ஆரம்பித்து. ஜீவாத்மாவின் ஸ்வரூபம் விகாரமற்றது என்பதில் ஶ்ருதியைக் காட்டுகிறார்—'இந்த ஜீவாத்மா' என்று ஆரம்பித்து. 'கார்யம் காரணம் இவைகளை' ஸத் அஸத் என்னும் பதங்களினால் சொல்லுவது 1 'இது முதலில் அஸத்தாகவே இருந்தது. அதிலிருந்து ஸத்து உண்டாயிற்று' என்று அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் ஏற்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால 'காரியமாகவும் காரணமாகவும்' என்று சொல்லி இருக்கிறது. ஒரு வஸ்துவினிடத்திலேயே ஸத் அஸத், என்கிற பதங்களை ப்ரயோகித்ததற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—'பெயர் ரூபம்' என்று ஆரம்பித்து. அக்ஷரம், ஸத் அஸத் என்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும் குறிக்கிறது, 'தத்' என்னும் பதம், விசேஷித்து ஒன்றையே சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால், எள்ளுக்குள் எண்ணெயைப்போலவும் மரங்களுக்குள் நெருப்பைப்போலவும், ஒன்றுக்கொன்று சேர்ந்திருக்கும் இந்தச் சேதனம் அசேதனம் இவ்விரண்டைப் பார்க்கிலும் பரிசுத்தமான ஆத்மா மேலானது என்றும் ப்ரஸித்தமாக இருக்கிறது, என்று 'ஸதஸத் தத்பரம் யத்' என்பதினால் அனுவதிக்கப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால், 'பரிசுத்தாத்மா' என்று

† கடவல்லீ 1-2-18. 1 தைத்திரீயம்-ஆனந்தவல்லி 7-1.

தவனும் தொடுவதினுலுண்டானதாய் விட முடியாத ஸுகதுக்கங்களில் விகாரமற்றவனும் தான் ப்ரயத்னம் செய்யாமல் கிடைத்ததாகிய ஏதாவதொரு தேஹத்தைத் தரிப்பதற்குக்காரணமாகிய வஸ்துவினுல் ஸந்தோஷத்தையுடையவனும் எப்பொழுதும் ப்ரக்ருதியைவிட வேறுபட்ட

---

*யாகவுமாம். இப்படியே 'மெத்ரீ:' என்னும் பதத்திலும். அவைகள் த்வேஷத்தையும் அபகாரத்தையும் செய்துகொண்டிருக்கும் பொழுதே, என்று 'ஏவ' என்பதற்குத் தாத்பர்யம். அஹங்காரமில்லாமை மமகாரமில்லாமைக்குக் காரணம். மமகாரத்திற்கு ப்ரஸ்தாவமிருக்குமிடத்திலல்லவோ மமகாரம் இல்லாமையை விதிக்கவேண்டும், என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'தேஹம் இந்த்ரியங்கள்' என்ருரம்பித்து. ஆத்மாவல்லாத வஸ்துவினிடத்தில் இது ஆத்மா என்கிற புத்தியல்லவோ இங்கே தடுக்கப்படுகிற அஹங்காரம் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'தேஹமே ஆத்மா என்கிற அபிமானமில்லாதவனும்' என்று. இத்தால் நான் என்கிற புத்தியற்றவனுப் என்று மற்றவர்கள் செய்த வ்யாக்யானம் நிராகரிக்கப்பட்டது, நான் என்னும் பதத்தின் அர்த்தமே ஆத்மா என்று நிர்ணயிக்கப்பட்டதினுல். 'ஆகையினுலேயே' என்பதற்கு மமகார மில்லாமையினுலும் அஹங்கார மில்லாமையினுலும் என்றர்த்தம். 'க்ஷமீ' என்பதினுல் அபகாரம் செய்தவர்களிடத்தில் பொறுமை சொல்லப்படவில்லை 'ஸமது:க' என்றிவை முதலிய பதங்களினுல் சொல்லப்பட்டபடியினுல், ஆகையினுல் 'தாம்ஸ்திதிக்ஷஸ்வ' என்று முன்பு சொல்லப்பட்ட விடமுடியாத தொடுவதினுல் உண்டாகிற ஸுகதுக்கங்களைப் பொறுப்பது ஞாபகப்படுத்தப்படுகிறது. அத்துடன் புனருக்தியைப் பரிஹரிப்பதற்காக 'ஸமது:கஸுக:' என்பது அபிமானத்தினு லேற்பட்டவைகளைப் பற்றியது இப்படியிருந்தால் மமகாரமில்லாமைக்கும், அஹங்காரமில்லாமைக்குமப்புறம் சொல்லியிருப்பதும் பொருத்தமுள்ளதாகிறது என்கிற அபிப்ராயத்தினுல்—'அபிமானத்தினுலேற்பட்ட' என்று சொல்லப்பட்டது. அஹங்காரமமகாரங்களாலுண்டான என்றர்த்தம் 'ஸந்துஷ்டோயேந கேநசித்' என்று மேலே சொல்லப்பட்ட படியினுலும், 'யத்ருச்சாலாபஸந்துஷ்ட:' என்று கீழே சொல்லப்பட்டபடியினுலும், அந்த ஸந்தோஷமே இவ்விடத்திலும் ஆகாரம் உண்டாவதற்காகச் சுருக்கமாய்ச்சொல்லப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'தான் ப்ரயத்னம் செய்யாமல்' என்ருரம்பித்து. வேறு இடத்திலும் 'யேநகேநசிதாச்சந்நோயேநகேநசிதாசித:| யத்ரக்வசநஶாயீஸ்யாத்தம்தேவா: ப்ராஹ்மணம்விது:||' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஶாஸ்த்ரங்களில்*

ஆத்மாவை நினைத்துக்கொண்டிருப்பவனும் அடக்கப்பட்ட மனதின் வ்யாபாரத்தையுடையவனும் வேதாந்தஶாஸ்த்ரங்களில் சொன்ன அர்த்தங்களில் உறுதியான நிஶ்சயமுடையவனும் பகவானுகிய வாஸுதேவனே பலத்தை விரும்பாமலனுஷ்டிக்கபடுகிற கர்மத்தினுல் ஆராதிக்கப்

---

சொல்லப்பட்டதும், தான் ப்ரயத்தினம் செய்யாமல் கிடைத்தவைகளுமான வஸ்துக்களில் அதிகம் கொஞ்சம், ரஸமுள்ளது ரஸமில்லாதது முதலிய வ்யத்யாஸங்கள் எண்ணத்தக்கவையல்ல' என்று தாத்பர்யம். இப்படியே அஜகராஹும் 'நவநிவதிதம்...' என்று சொல்லப்பட்டது. 'எப்பொழுதும்' என்றது யோகம் செய்யும் காலத்தில் உபகாரமாகிய வாஸனை ஸ்திரமாவதற்காக யோக என்னும் இவ்விடத்தில யோகமாகிய ஸாக்ஷாத்காரத்திற்கு உபகாரமாகிய முந்தின காலங்களில் அநுஸந்தானத்தைச் சொல்லுகிறது, நேரான யோகம் எப்பொழுதும் செய்ய முடியாதாகையினுல் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'எப்பொழுதும் ப்ரக்ருதியை விட வேறுபட்ட' என்று எப்பொழுதும் ஆத்மாவை நினைப்பதைப்போலவே ஆத்மாவல்லாத வஸ்துவின் நினைவில்லாமலிருப்பதும் யோகத்திற்கு உபகாரமானது, என்று 'யதாத்ம' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிருர்—'அடக்கப்பட்ட' என்ருரம்பித்து. மற்றவர்களுக்கு எந்தவிஷயத்தில் ஸந்தேகம் உண்டாகுமோ அந்தவிஷயத்தில் இவனுக்கு நிஶ்சயம் உண்டென்று சொல்லவேண்டும், அதுவும் அநுஷ்டானத்திற்கு உபகாரமாகக் கொள்ளவேண்டும் ஆகையினுல் சொல்லுகிருர்—'வேதாந்த ஶாஸ்த்ரங்களில் சொன்ன' என்ருரம்பித்து. 'மயி' என்பதினுல் '...' என்றுசொல்லப்பட்ட ஆராதிக்கப்படுகிறவனுக இருக்கையும் பலத்தைக் கொடுப்பவனுக இருக்கையும் இவ்விடத்தில் கர்மயோகத்தில் நிஷ்டையையுடையவனுக்கு மனதையும்புத்தியையும் செலுத்துவதற்காகச் சொல்லவேண்டியவைகளாகநினைக்கப்பட்டன, என்கிற அபிப்ராயத்தினுல்சொல்லுகிருர் 'பகவானுகிய' என்ருரம்பித்து. 'பகவானுகிய' என்னும் பதத்தினுல் எல்லாப்பலங்களையும் கொடுப்பவனுக இருப்பதற்கு உபயோகமாகிய இரண்டுவித அடையாளங்களையுமுடையவனுக இருக்கையைச் சொல்லியிருக்கிறது. 'வாஸுதேவனே' என்னும் பதத்தினுல் எல்லாக் கர்மங்களினுலும் ஆராதிக்கப் படுகிறவனுக இருக்கைக்கு உபயோகமாகிய எல்லாத் தேவதைகளுக்கும் அந்தராத்மாவாக இருக்கையைச் சொல்லியிருக்கிறது. உபதேசம் செய்கிறவனுடைய ரூபத்தைச் சொல்லுகிற

படுகிறான், அப்படி ஆராதிக்கப்பட்டவனாய் எனக்கு ஆத்ம ஸாக்ஷாத்கா ரத்தைக்கொடுக்கப்போகிறான், என்று என்னிடத்தில் வைக்கப்பட்ட மனது புத்தி இவைகளையுடையவனாயும் இருக்கிற எவன் இப்படிப்பட்ட கர்மயோகத்தினால் என்னை ஆச்ரயிக்கிறானோ, அவன் எனக்கு ப்ரியன்.

யஸ்மாந்நோத்விஜதே லோகோ லோகாந்நோத்விஜதே ச ய꞉ ।
ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர்முக்தோ ய꞉ ஸ ச மே ப்ரிய꞉ ॥ 15

ப - ரை] யஸ்மாத் - எவனிடத்திலிருந்து, லோக꞉ - லோகம், நோத்விஜதே - பயப்படுகிறதில்லையோ, ய꞉ - எவன், லோகாத் - லோகத்தினிடத்திலிருந்து, நோத்விஜதே ச - பயப்படுகிறதுமில்லையோ, ய꞉ - எவன் ஹர்ஷாமர்ஷபயோத்வேகை꞉—ஹர்ஷ - ஸந்தோஷம், அமர்ஷ - கோபம், பய - பயம், உத்வேக - வெறுப்பு இவைகளால், முக்த꞉ - விடப்பட்டவனோ, ஸச - அவனும், மே - எனக்கு, ப்ரிய꞉ - ப்ரியன்.　15

பா] கர்மயோக நிஷ்ட்டனாகிய எந்தப் புருஷனிடத்திலிருந்து லோகம்

---

தாகவுமாம். மனதைச் செலுத்துவதாவது ஆராதிக்கப்படுகிறவனாக த்யானம் செய்தல்; புத்தியைச் செலுத்துவதாவது பலத்தைக்கொடுக்கிறவன் என்று அனுஸந்தானம் செய்தல். அன்றிக்கே இரண்டு விஷயத்தைப்பற்றியும் நினைப்பதும், அனுஸந்தானம் செய்தலுமாகவுமாம். அன்றிக்கே மனதின் நிச்சயம் 'அத்யவஸாயம்' என்னப்படுகிறதாகவுமாம். அனுவாதம் செய்யப்படுகிற பாகத்தைப்பிரித்துச் சொல்லுகிறார்—'எவன்' என்று ஆரம்பித்து. சக்தியில்லாதவனுக்குச் செய்யக்கூடிய நிஷ்ட்டையைச் சொல்லுகிற ஸந்தர்ப்பமாகையினால் நேராக பக்தியோகத்தில் நிஷ்ட்டையையுடையவர்களிடத்திலிருந்து விலக்கிக்கொண்டு முதல் இரண்டு ம்லோகங்களின் மொத்தார்த்தத்தைச் சொல்லுகிறார்—'அப்படிப்பட்ட கர்மயோகத்தினால்' என்று. எந்த இடத்தில் விசேஷணங்களை ப்ரயோகித்ததற்கு வேறுகதியில்லையோ, அந்த இடத்தில் அனுவாதம் செய்யப்படுகிறதின் விசேஷணங்களிலும் தாத்பர்யம் உண்டென்று மீமாம்ஸகர்களினால் அங்கீகரிக்கப்பட்டது என்று தாத்பர்யம். 'ப்ரியன்' என்பதற்கு ப்ரீதிக்குப் பாத்திரம் என்று அர்த்தம். ப்ரீதியை யுடையவனாகிய நான் அவனுடைய இஷ்டபலத்தைக் கொடுக்கிறேன் என்று தாத்பர்யம்.　13-14

தா] பிறகு மமகாரம் அற்றவனாக இருக்கை முதலியவைகளுக்கு ப்ரயோஜனமாக இருக்கிற லோகத்திற்குப் பயத்தைத் தரக்கூடிய கார்யங்களை விடுவதாகிய குணத்தை விதித்துக்கொண்டு அதின் ப்ரயோஜன

பயப்படுகிறதில்லையோ, அதாவது எவன் லோகத்திற்கு பயத்தைத்தரக் கூடிய கார்யம் ஒன்றையும் செய்வதில்லையோ என்றர்த்தம். எவன் லோகத்தினிடத்திலிருந்தும் பயப்படுவதில்லையோ, அதாவது எவனைக்குறித்து பயத்தைத்தரக்கூடிய கார்யத்தை எல்லாலோகமும் இவன் ஒருவருக்கும் விரோதியல்ல என்கிற நிஶ்சயத்தினால் செய்கிறதில்லையோ.

---

*முண்டாவதையும் காட்டுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். 'யஃ' என்னும் பதத்தையே மறுபடியும் சொல்லியிருப்பதினால் மாத்திரம் உண்டாகிற இந்தஶ்லோகம் வேறு அதிகாரியைச் சொல்லுகிறது, என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக-கர்மயோக நிஷ்டனாகிய எந்தப் புருஷனிடத்திலிருந்து' என்று சொல்லப்பட்டது. லோகத்தினிடத்திலிருக்கிற பயமில்லாமையைக் கர்மயோக நிஷ்டனைக் குறித்து விதிக்கமுடியாததாகையினால் அந்தப் பயத்திற்குக் காரணமாகிய கார்யத்தைச் செய்யாமலிருப்பதே விதிக்கப்படுகிறதென்று தாத்பர்யம், என்று காட்டுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து. அபகாரமாக இல்லாமற் போனாலும் அநிஷ்டத்தைச்சொல்லுவது மாத்திரத்தினாலும் லோகத்திற்குப் பயம் உண்டாகிறது-என்கிற அபிப்ராயத்தினால் 'ஒன்றையும்' என்று சொல்லப்பட்டது இத்தால்' அத்வேஷ்டா'என்றாரம்பித்துமுன்னே சொல்லப்பட்டதையும் 'ஸந்துஷ்ட:' என்றாரம்பித்து மேலே சொல்லப்போகிறதையும் விட வ்யத்யாஸம் ஏற்பட்டது. 'யஸ்மாந்நோத்விஜதே' என்கிற இடத்திலும் காரணமில்லை என்பதில் தாத்பர்யம், அப்படியில்லாவிடில் முன்னும் பின்னும் சொல்லியிருப்பதுடன் புனருக்தி வருமாகையினாலும் இந்த ஶ்லோகத்திலும் 'ஹர்ஷாமர்ஷபயோத்வேகை:' என்று பயமில்லாமை விதிக்கப்பட்டிருப்பதினாலும் 'யஸ்மாந்நோத்விஜதே லோக:' என்று ஆரம்பித்த க்ரமத்திற்கு விரோதம் வருகிறபடியினாலும், என்கிற அபிபராயத்தினால் சொல்லுகிறார்—'எவனைக்குறித்து' என்றாரம்பித்து. லோகத்தினிடத்திலிருக்கிற இவனுக்குப் பயத்தைத்தரக்கூடிய கார்யத்தைச செய்யாமையும் இவனைக் குறித்து விதிக்கத் தக்கதல்ல, ஆகையினால் விதிக்கப்படுவதைக் காட்டுவதற்காக லோகம் இவனைக் குறித்து அப்படிப்பட்டகார்யத்தைச்செய்யாமைக்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—'இவன் ஒருவருக்கும்' என்றாரம்பித்து. எவ்விதமாக இருந்தால் கர்மயோக நிஷ்டனை லோகம் ஒருவருக்கும் விரோதியாகாதவனாக நிஶ்சயமாக அறியுமோ அவ்விதமாக இந்தக் கர்மயோக நிஷ்டன் நடக்கவேண்டும், என்றுசொல்லப்பட்டதாகிறது. 'யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி' என்று மேலே சொல்லப்போகிறதைப் பார்க்கிலும் இவ்விடத்தில் ஸந்தோஷம் முதலியவைகளுக்கு விஷயம்*

ஆகையினாலேயே ஒருவனைக்குறித்து ஸந்தோஷத்தினாலும், ஒருவனைக் குறித்துக் கோபத்தினாலும்,ஒருவனைக்குறித்துப் பயத்தினாலும்,ஒருவனைக் குறித்து வெறுப்பினாலும் விடப்பட்டிருக்கிறான்; எவன் இப்படிப்பட்டவனோ அவனும் எனக்குப்ப்ரியன். 15

அநபெக்ஷஃ ஶுசிர்தக்ஷஃ உதாஸீநோ கதவ்யதஃ ।
ஸர்வாரம்பபரித்யாகீ யோ மத்பக்தஸ்ஸ மே ப்ரியஃ ॥ 16

ப - ரை] அநபெக்ஷஃ - ஆத்மாவைத் தவிர மற்ற வஸ்துக்களை விரும்பாதவனாயும், ஶுசிஃ - பரிசுத்தனாயும், தக்ஷஃ — ஸாமர்த்தியமுள்ளவனாயும் உதாஸீநஃ - மற்ற கார்யங்களில் உதாஸீநனாயும், கதவ்யதஃ - நீங்கியிருக்கிற துக்கத்தையுடையவனாயும், ஸர்வாரம்பபரித்யாகீ - மற்றக் காரியங்களின் ஆரம்பத்தைவிட்டவனாயும் இருக்கிற, யஃ - எவன், மத்பக்தஃ - என்னை ஆஶ்ரயித்திருக்கிறானோ, ஸஃ—அவன், மெ ப்ரியஃ— எனக்கு ப்ரியன். 16

பா] ஆத்மாவைத் தவிர மற்றெல்லா வஸ்துக்களிலும் அபேக்ஷையில்லாதவனாயும் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட வஸ்துக்களினால் வ்ருத்தி

---

*வேறாகையினாலும் அவை நிவ்ருத்திப்பதற்குக் காரணங்கள் வேறாகையினாலும் வ்யத்யாஸமுண்டென்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்— ‘ஆகையினாலேயே ஒருவனைக் குறித்து’ என்றாரம்பித்து ‘ஆகையினாலேயே’ என்பதற்கு உபகாரம் அபகாரம் முதலிய காரணங்களின் வ்யத்யாஸங்களில்லாமையினால் என்றர்த்தம். ஒருவனைக் ‘குறித்து வெறுப்பினாலும்’ என்பதற்கு, பயம் முதலியவைகள் தனித்துச் சொல்லப்பட்டபடியினால் பயத்தினாலுண்டாக்கப்படுகிற கார்யமாவது, வெறுப்பாவது இங்கே ‘உத்வேகம்’ என்னப்படுகிறது. எனத்தாத்பர்யம்’ ‘யஸ்மாந்நோத்விஜதே’ என்றிவை முதலிய மூன்று வாக்யங்களினுடையவும் அர்த்தங்களைச்சேர்த்துச் சொல்லுகிறார்—‘இப்படிப்பட்டவன்’ என்று. முன் ஶ்லோகத்தில்.சொல்லப்பட்ட ஸ்நேஹம் கருணை முதலிய குணங்களின் கூட்டங்களில்லாமற் போனபோதிலும் லோகத்திற்குப் பயத்தைக் கொடுக்கக்கூடிய கார்யத்தைச் செய்யாமை மாத்திரத்தினால் ப்ரீதியையடைந்தவனாகிறேன், என்று ‘ஸஞ’ என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—‘அவனும்’ என்று. 15*

*தா] ஆத்மாவினிடத்தில் மாத்திரமபேக்ஷையையுடையவனாகையினால் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கார்யங்களில் மாத்திரம் ஊற்றமுடையவனாக இருக்கவேண்டும் என்பதையும், அதைத்தவிர மற்றக் கார்யங்களில் ஆசையில்லாமல்இருக்கவேண்டும் என்பதையும் சொல்லுகிறார்—*

செய்யப்பட்ட சரீரத்தையுடையவனும், ஶாஸ்த்ரங்களில் சொல்லப் பட்ட க்ரியைகளைச்செய்வதில் ஸாமர்த்ய முடையவனும் மற்றக்கார்யங் களில் உதாஸீநனும் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கார்யங்களைச் செய்து முடிக்கும்பொழுது விடமுடியாமல் நேரிடுகிற குளிர்ச்சி,உஷ்ணம், கடினமான ஸ்பர்சம்,முதலிய துக்கத்திற்குக் காரணங்களில் துக்கமில்லா தவனும் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கார்யங்கள் தவிர மற்றக்கார்

---

இந்த ஶ்லோகத்தினால் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட அதிகாரத்துடன் விரோதத்தை விலக்குவதற்காகப்பொதுவாக இருப்பதை விஶேஷத்தில் சேர்க்கிறார்—'ஆத்மாவைத்தவிர' என்றாரம்பித்து. மற்றவைகளில்சுருக் கிச்சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால் 'மற்றெல்லா' என்று சொல்லப்பட்டது. ப்ரயோஜனமாக இருக்கிற பரிசுத்தனாக இருக்கை ஸ்வரூபத்தினாலே விதிக்கமுடியாதாகையினால் அதின்காரணத்தில தாத்பர்யம் என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில்' என்றாரம்பித்து. வேறு விஷயங்களில் ஸாமர்த்யம் உபயோக மற்றதாகையினால் அத ற்கு உபயோகமாகிய அனுஷ்டானம் செய்வதில் ஸாமர்த்தியம் 'தக்ஷ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்-'ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட' என்றாரம்பித்து. விரோதத்தைப் பரிஹரிப்பதற்காக உதாஸீநனாக இருப்பது விதிக்கப்பட்ட கார்யங் களைத் தவிர மற்றவைகளைப்பற்றியது என்று சொல்லுகிறார்—'மற்ற கார்யங்களில்' என்றாரம்பித்து. விதிக்கப்படாதவைகளிலும் மறுக்கப் பட்டவைகளிலும் என்றர்த்தம். இவ்விடத்தில் உதாஸீநனாக இருக் கையாவது பக்ஷபாதமில்லாமை என்று அர்த்தம் செய்தவர்கள், 'ஸமஶ் ஶத்ரௌ' என்றுமேலே சொல்லப்போகிறதுடன் புனருக்தி வரு கிறபடியினால் நிராகரிக்கப்பட்டார்கள். இங்கே தடுக்கப்படுகிற துக்கத் தின் ப்ரஸ்தாவத்தைக்காட்டுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கார்யங்களை' என்றாரம்பித்து. விதிக்கப்பட்ட யோகத்தை ஆரம்பிப் பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப் பட்ட கார்யங்கள் தவிர' என்று. விடவேண்டும் என்கிற எண்ணத்துடன் விடுவது இங்கேசொல்லப்படுகிறபடியினால் மத்யஸ்தனாகஇருக்கையாகிற உதாஸீநனாக இருக்கையைவிட இதற்கு வ்யத்யாஸமுண்டு. ப்ரயத் தினம் செய்யாமலிருப்பதாகிய உதாஸீநனாக இருப்பதின் பலம், கர்மங் களின் ஆரம்பத்தை விடுதலாகவுமாம். இவ்விடத்தில் கர்மமாவாவது வாய், சரீரம்; இவைகளின் வ்யாபாரம் அதுவே ஆரம்பிக்கப்படுகிறபடி யினால் ஆரம்பம்; அதை அங்கீகரிப்பதாகவுமாம் இவை யெல்லாம் என் னிடத்தில பக்தியுடன் சேர்ந்துகொண்டே ப்ரியனாக இருப்பதற்குக்

யங்களை ஆரம்பிப்பதையே விட்டவனும் இருக்கிற எவன், என்னை ஆஶ்ரயித்தவனோ அவன், எனக்குப்ரியன். 16

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி |
ஶுபாஶுபபரித்யாகீ பக்திமாந்ய: ஸ மே ப்ரிய: || 17

ப-ரை] ய: - எவன், நஹ்ருஷ்யதி - ஸந்தோஷிப்பதில்லையோ, நத்வேஷ்டி - த்வேஷம் செய்வதில்லையோ, நஶோசதி — துக்கப்படுவதில்லையோ, நகாங்க்ஷதி - ஆசைப்படுவதில்லையோ, ஶுபாஶுபபரித்யாகீ— ஶுப - புண்யத்தையும், அஶுப - பாபத்தையும், பரித்யாகீ - விட்டவனாக இருக்கிற, ய: - எவன், பக்திமாந் - பக்தியை யுடையவனோ' ஸ: - அவன், மே - எனக்கு, ப்ரிய: - ப்ரியன். 17

பா] மனுஷ்யர்களுக்கு ஸந்தோஷத்திற்குக் காரணமாகிய ப்ரியமான வஸ்துக்களின் கூட்டம் எதுவோ, அதை அடைந்து எந்தக் கர்மயோகி ஸந்தோஷப்படுகிறதில்லையோ, அப்ரியம் எதுவோ அதை அடைந்து துக்கப்

---

காரணம், என்று 'ஸங்க:' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'எவன் என்னை ஆஶ்ரயித்தவனோ' என்று. 16

தா] பிறகு தைவாதீனமாக நேர்ந்த ப்ரியங்களிலும் அப்ரியங்களிலும் துக்கமும் ஸந்தோஷமும் இல்லாமையும், ஶாஸ்த்ரங்களில் மறுக்கப் படாதவைகளாக இருந்தபோதிலும் தனக்குக் கிடைக்காதவைகளில் ஆசையில்லாமையும், அதின் காரணத்தை விடுவதும்,—சொல்லப்படுகிறது. இந்த ஶ்லோகத்தினால். 'ஹர்ஷாமர்ஷ' என்று முன்பு சில புருஷர்களால் உண்டாகியஸந்தோஷம் முதலியது தடுக்கப்பட்டது. இவ்விடத்திலோவெனில், பணம் கிடைப்பது முதலியவைகளா லுண்டானது தடுக்கப்படுகிறது. ஆகையினால் வ்யத்யாஸம் உண்டு என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மனுஷ்யர்களுக்கு' என்றாரம்பித்து. 'ய:' என்பதற்கு வ்யாக்யானமாக இருக்கிற 'கர்மயோகி' என்பதினால் ஸந்தோஷமில்லாமைக்குக் காரணம் காட்டப்பட்டது. ஆத்மாவைத் தவிர மற்றவைகளில் ஆசையில்லாதவனல்லவோ இவன் என்று தாத்பர்யம். 'அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்' என்று முன்பு சொல்லியிருப்பதைவிட வ்யத்யாஸத்தைத் தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'அப்ரியம் எதுவோ' என்று ஆரம்பித்து. காரணங்களில்லாதபோது ஸந்தோஷம் த்வேஷம் துக்கம் முதலியவைகளில்லாமலிருப்பது எல்லா ஜனங்களுக்கும் ஸாதாரணமாகையினால் விகாரங்களுக்குக் காரணங்களிருக்கும் போது விகாரமற்றிருக்கையல்லவோ இவனுக்கு விதிக்கப்படுகிற விஶே

படுகிறதில்லையோ, அதாவது மனுஷ்யர்களுக்குத் துக்கத்திற்குக் காரணமாகிய பத்நீ,பிள்ளை,பணம், இவைகளின் நாஶம்முதலியதேதுவோ அதையடைந்து துக்கிக்கிறதில்லையோ, தனக்குக்கிடைக்காத அப்படிப்பட்டதை ஆசைப்படுவதுமில்லையோ, பாவத்தைப்போலவே புண்ணியமும் பந்தத்திற்குக் காரணமாக இருக்கையில் ஸமமாகையினால் இவை யிரண்டை

ஷம், என்று தெரிவிப்பதற்காக அந்தந்தக் காரணங்களைச் சொல்லியிருக்கிறது—'அதாவது'என்றாரம்பித்து. எப்படிஎன்னில் 1'மிதிலாயாம் ப்ரதீப்தாயாம் ந மே தஹ்யதி கிஞ்சந' என்பதைப்போல. கிடைத்திருக்கிற வஸ்துவில் விரும்பக்கூடியதாக யிருக்கையில்லை ஆகையினால் 'தனக்குக் கிடைக்காத' என்று சொல்லப்பட்டது. 'அப்படிப்பட்டதை' என்பதற்கு எதின் நாசத்தில் துக்கமுண்டாகிறதோ அப்படிப்பட்டதை, என்றர்த்தம், இத்தால் துக்கம் முதலியவைகளில்லாமைக்குக் காரணம் காட்டப்பட்டது அப்படியே பகவானாகிய பராசரராலும் 2'யாவத: குருதே ஜந்து: ஸம்பந்தாந் மநஸ: ப்ரியாந் । தாவந்தோஸ்ய நிகந்யந்தே ஹ்ருதயே ஶோகஶங்கவ:' என்று சொல்லப்பட்டது 'ஶோக, அஶோக' என்னும் பதங்கள் மங்களத்தையும் அமங்களத்தையும் மாத்திரம் சொல்லுகிறதாக ப்ரயோகிக்கப்பட்டிருந்தபோதிலும், அவைகள் மங்களங்களாக இருப்பதும் புண்ணியங்களாக இருப்பதினாலேயே ஆகையினால அதை மறுப்பதிலே தாத்பர்யம். அதில் பாவம் தூரத்திலேயே விலக்கப்பட்டதாகையினால் அதையிங்கே சொன்னது உதாஹரணம் காட்டுவதற்காக, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'பாவத்தைப்போலவே' எனறாரம்பித்து ஸ்வர்கம்முதலியவைகளுக்கு ஸாதனமாகியபுண்ணியம்விதிக்கப்பட்டிருந்தபோதிலும் அவைகளுக்கு ஸாதநமாகிய ஆகாரத்தினால் விடத்தக்கவைகள் என்பதற்குககாரணத்தைச் சொல்லுகிறார்—'பந்தத்திற்குக்காரணமாக இருக்கையில் ஸமமாகையினால்' என்று. இத்தால் ஸ்வர்கம் முதலியவைகளுக்குக் காரணமாகிய புண்ணியமும் மோக்ஷத்திலாசையையுடையவனைப் பற்றிப் பாவம்தான் என்று காட்டப்பட்

1 மஹா பாரதம் சாந்திபர்வம் - மோக்ஷகர்மம் 284-4. மிதிலாயம் மிதிலா பட்டணம், ப்ரதீப்தாயாம் எரிந்துகொண்டிக்கும் பொழுது, மே எனக்கு, கிம்சன ஒன்றும், நதஹ்யதே எரிக்கப்படவில்லை.

2 விஷ்ணு புராணம் 1-17-66. ஜந்து ப்ராணி, யாவத: எவ்வளவு, மநஸ: மனதிற்கு, ப்ரியாம் ப்ரியங்களான, ஸம்பந்தான் பற்றுதல்களை, குருதே செய்கிறானோ, தாவந்த: அவவளவு, ஶோகஶங்கவ: துக்கத்தின் முனைகள், அஸ்ய இவனுடைய ஹ்ருதயே மனதில், நிகந்யந்தே நாட்டப்படுகின்றன.

யும் விட்டவனுகிய இப்படிப்பட்ட எவன் பக்தியை யுடையவனே, அவனெனக்கு ப்ரியன். 17

ஸம꞉ ஶத்ரௌ ச மித்ரே ச ததா² மாநாபமாநயோ꞉ ।
ஶீதோஷ்ணஸுக²து³꞉கே²ஷு ஸம꞉ ஸங்க³விவர்ஜித꞉ ॥ 18
துல்யநிந்தா³ஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோ யேநகேநசித் ।
அநிகேத꞉ ஸ்தி²ரமதிர்ப⁴க்திமாந்மே ப்ரியோ நர꞉ ॥ 19

ப-ரை] ஶத்ரௌச — சத்துருவினிடத்திலும், மித்ரேச - ஸ்நேஹிதனிடத்திலும், ததா² - அப்படியே, மாநாபமாநயோ꞉ - பஹுமானம் அவமானம் இவைகளிலும், ஸம꞉ - ஸமமானவனுயும், ஶீதோஷ்ணஸுக²து³꞉கே²ஷு - ஶீத-குளிர்ச்சி, உஷ்ண - உஷ்ணம், ஸுக²-சுகம், து³꞉க² - துக்கம் இவைகளில், ஸம꞉ — ஸமமானவனுயும், ஸங்க³விவர்ஜித꞉ - பற்றுதல் இல்லாதவனுயும், துல்யநிந்தா³ஸ்துதி꞉—துல்ய - ஸமமான, நிந்தா³ - நிந்தித்தலேயும், ஸ்துதி꞉ - ஸ்தோத்திரத்தையு முடையவனுயும், மௌநீ - பேசாதவனுயும், யேநகேநசித் — ஏதாவதொரு வஸ்துவினுல், ஸந்துஷ்ட꞉ — ஸந்தோஷத்தை யடைந்தவனுயும், அநிகேத꞉ - வீடு முதலியவைகளில் அபிமானமில்லாதவனுயும், ஸ்தி²ரமதி꞉ - உறுதியான புத்தியையுடையவனுயும், ப⁴க்திமாந் - பக்தியையுடையவனுயுமிருக்கிற, நர꞉ - மனுஷ்யன், மே - எனக்கு, ப்ரிய꞉ - ப்ரியன். 18-19

பா] 'அத்³வேஷ்டா ஸர்வபூ⁴தாநாம்' என்றிவை முதலிய ஶ்லோகங்களினுல் சத்ரு ஸ்நேஹிதன் முதலியவர்களிடத்தில் த்வேஷம் முதலியவை

*டது. ஶாஸ்த்ரத்தைக்கொண்டறிய வேண்டியதாகிய அநிஷ்டத்திற்கு ஸாதநமானகார்யம் அல்லவோ பாவம்; ஶ்ருதியும் 1 'புண்ணியமுமில்லை பாவமுமில்லை' என்றர்த்தமுள்ள வாக்யத்தைச் சொல்லி 'எல்லாப் பாவங்களும் நீங்கிவிடுகின்றன' என்றர்த்தமுள்ள வாக்யத்தினுல் முடித்திருக்கிற படியினுல் புண்ணியமும் பாவமென்று சொல்லுகிறது.* 17

தா] *'ஸம꞉ ஶத்ரௌ' என்றாரம்பித்து இரண்டு ஶ்லோகங்களினுல் அனேகவிதமான ஸமமாக இருக்கை காரணத்துடன்சொல்லப்படுகிறது அதில் புனருக்தியைப் பரிஹரிப்பதற்காகச் சொல்லுகிறர்—'அத்³வேஷ்டா' என்றாரம்பித்து. ஸமீபத்திலேயே நேரிடக்கூடிய பஹுமானம், அவமானம் முதலிய இரட்டைகளுடன் சேர்த்துச் சொல்லியிருக்கிற படியினுல் சத்ருமித்ரன் இவைகளையும் ஸமீபத்தி லிருப்பவர்களை*

1 *சாந்தோக்யம்* 8-4-1.

களில்லாமை சொல்லப்பட்டது. இந்த இடத்தில் அவர்கள் ஸமீபத்தி லிருந்தபோதிலும் ஸமமான மனதையுடையவனாக இருக்கையாகிற அதைவிட மேலான விசேஷம் சொல்லப்படுகிறது. ஆத்மாவினிடத்

---

யே சொல்லியிருக்கிறது; ஸமீபத்திலிருப்பது அதிகமாக விகாரத்தை யுண்டாக்குகிறது அல்லவா. 'அதைவிடமேலான' என்பதற்கு, தூரத்தி லிருப்பதற்கும் ஸமீபத்திலிருப்பதற்கும் பொதுவாகிய த்வேஷமில்லா மை மாத்திரத்தைவிட மேலான என்றர்த்தம். ஒன்றிலும் பற்றுத லில்லாமையினால் சீதோஷ்ணங்களில் ஸமமாக இருக்கை; நிந்தையி லும் ஸ்தோத்திரத்திலுமோ, அவைகளின் ப்ரயோஜனமாகிய கோபமும் ப்ரீதியுமில்லாமையினாலே ப்ரயோஜனமற்றவைகளாக இருப்பதினால் ஸமமாக இருக்கை. 'மௌநீ' என்று இவ்விடத்தில் மனனம் சொல்லப் படவில்லை, அது 'ஸ்திரமதி:' என்பதினாலே ஏற்பட்டிருக்கிறபடியினால், அப்பொழுது மனனம் செய்பவன் முனி; முனியாக இருக்கை மௌநம் என்று ப்ரஸித்தமில்லாத அர்த்தத்தைச் சொல்லவேண்டியிருக்கிறது; ஒருவார்த்தையும் சொல்லாமலிருப்பதும் சொல்லப்படவில்லை. அது இவ்விடத்தில் அவஶ்யமாகவேண்டிய தில்லாமையினாலும், திருநாமத் தைச் சொல்லுவது முதலியவைகளை விதித்திருக்கையினாலும், சிலகா லங்களில் அவஶ்யமாகச் செய்யவேண்டியதாகிய மௌனவ்ருதமும் சொல்லப்படவில்லை; அது உபயோகமாக இருந்தபோதிலும், முன்பின் ஸந்தர்ப்பங்களுக்குப்பொருந்தவில்லையாகையினால். லோகத்திலிருக்கிற மனிதர்கள் தன்னை நிந்திக்கிறவர்களை நிந்திக்கிறார்களல்லவா; ஸ்தோத் திரம் செய்பவர்களையும் ஸ்தோத்திரம் செய்கிறார்கள். ஆகையினால் ப்ர ஸ்தாவத்திலேற்பட்ட நிந்தையையும் ஸ்தோத்திரத்தையும் செய்யா மையைச் சொல்லுகிறது, என்பதே உசிதம். 'ஸந்துஷ்டோ யேந கேநசித்' என்பதும் மௌனியாக இருப்பதற்கு மற்றொருகாரணத்தைச் சொல்லுகிறது. அப்படிக்கில்லாவிடில் 'ஸந்துஷ்ட: ஸததம் யோகீ' என்று முன்னேசொல்லியிருப்பதுடன் புனருக்தி வருமாதலால், ப்ரயத்தினம் செய்யாமல் கிடைத்த எதாவது ஒருவஸ்துவினால் த்ருப்தியடையாத வன் ஆசையுடையவனாகையினால், ஸ்தோத்திரம் செய்துகொண்டு ஒரு வனை யாசிக்கிறான்; கொடுக்காதவனைக்குறித்து த்வேஷம் செய்வான்; அன்றிக்கே ஒருவனை ஸ்தோத்திரம் செய்யவேண்டும் என்கிற தாத்பர் யத்தினாலாவது, மற்றொருவனை நிந்திக்கிறான். 'ஸ்திரமதி:' என்கிற இத ற்கு இந்த ஸந்தர்ப்பத்திலேற்பட்ட விஷயத்தைக் காட்டிக்கொண்டு எல்லாவற்றிற்கும் மேலே சொல்லப்பட்டிருக்கிற இது நேராகவாவது பரம்பரையாகவாவது முன்புசொல்லிய எல்லாவற்றிற்கும் காரணமென் பதைக்காட்டுகிறார்—ஆத்மாவினிடத்தில்' என்றாரம்பித்து. வீட்டைப்பற்

திலேயே ஸ்த்திரமான புத்தியையுடையவனுகையினுல் வீடு முதலிய வைகளிலாசை யில்லாதவன் அநிகேதஃ என்னப்படுகிருன் ஆகையினு லேயே பஹுமானம் அவமானம் முதலியவைகளிலும் ஸமமானவன், எவன் இப்படிப்பட்டவனுய் பக்தியையுடையவனே அவன் எனக்கு ப்ரியன். 18-19

பா-அ] இப்படிப்பட்டவனுகிய ஆத்மாவினிடத்தில் நிஷ்ட்டையையுடை யவனைப்பார்க்கிலும் பக்தியோகத்தில் நிஷ்ட்டையுடையவன் சிறந்தவன் என்பதை நிரூபித்துக்கொண்டு ஆரம்பித்ததை அனுஸரித்து முடிக்கிருர்—

---

*றிமறுத்தது கழணிமுதலியவைகளைமறுப்பதையும் குறிப்பதற்காகையி னுல் 'முதலிய' என்று சொலலியிருக்கிறது. இவ்விடத்தில் 'ஸமஃ' என் பது முதல் இரண்டு ஶ்லோகங்களும் ஸந்யாஸிகளைப்பற்றிச் சொல்லு கின்றன' என்று யாதவ ப்ரகாசர் வ்யாக்யானம் செய்ததற்குக்காரணம் ஒன்றும் தெரியவில்லை, சத்துருக்கள் ஸ்நேஹிதர்கள் இவர்களிடத்தில் ஸமமாக இருக்கை முதலிய குணங்கள் மோக்ஷத்திலாசையையுடைய க்ரஹஸ்த்தாஶ்ரமத்திலிருப்பவர்களுக்கு மவஶ்யம் வேண்டியவைகளா கையினுலும், 'அநிகேதஃ' என்பதற்கும், 'நவாஸிரஸ்யாவஸபவஸிய ஸ்யு' என்று சொல்லியிருப்பதை அனுஸரித்துப் பற்றுதலில்லாதவன் என்று அர்த்தம் சொல்லலாமாகையினுலும் க்ருஹஸ்த்தாஶ்ரமத்திலிரு ப்பவர்களைப்பற்றி வீடில்லாமலிருக்கவேண்டும் என்று மறுப்பது உப யோகமில்லாததாகையினுலும், வீடு இருப்பதும் சில இடத்தில் யோக த்திற்கு உபகாரமாகலாமாகையினுலும், அதில் பற்றுதல் மாத்திரம் தான் இங்கே மறுக்கப்படுவதாகத் தாதபர்யத்தில் கொள்ளப்பட்டது, என்று காட்டுவதற்காக 'ஆசையில்லாதவன்' என்று சொல்லப்பட்டது. ஆகையினுலேயே 'அத்வேஷ்டா' என்பது முதல் எல்லா ஶ்லோகங்களும் ஜீவாத்மாவை உபாஸனம் செய்கிற ஸந்யாஸியைப்பற்றியவை, என்று சங்கராசாரியர் சொன்ன அர்த்தம் நிராகரிக்கப்பட்டது. ஏதாவதொரு வஸ்துவினிடத்தில் பற்றுகலுள்ளவனுக்கல்லவோ ஸ்வரூபத்தினுலே யே ஸுகமல்லாத பஹுமானம் முதலியவைகளினுல் ப்ரீதி முதலிய வைகளுண்டாகின்றன, ஆகையினுல் ஒன்றிலும் ஆசையில்லாமையி னுல் பஹுமானம் முதலியவைகளில் ஸமமாக இருக்கை உண்டாகி றது என்று சொல்லுகிருர்—'ஆகையினுலேயே' எனறுரம்பித்து. முன் ஶ்லோகங்க ளிருப்பதைப்போலவே இங்கும் 'யஃ ஸஃ' என்னும் பதங் களைச் சேர்த்துக்கொண்டு அனுவதிக்கப்படுகிற பாகத்தினுடையவும் விதிக்கப்படுகிற பாகத்தினுடையவும் பிரிவைக் காட்டுகிருர்—'எவன் இப்படிப்பட்டவனுய்' என்றுரம்பித்து. 18-19*

*இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் கேட்டதின் பே ரில் பக்தியோக நிஷ்ட்டன், ஜீவாத்ம யோக நிஷ்ட்டனைவிடச் சிறந்த வன், என்பது சொல்லப்பட்டது. பக்தியோகத்தில் சக்தி இல்லாதவர்*

யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ஶ்ரத்தாநா மத்பரமா பக்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: ॥ 20

ஶ்ரீக்ருஷ்ணபரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ கண்ணபிரானருளிச்செய்த ஸ்ரீமத் பகவத்கீதையில்

பன்னிரெண்டாவது அத்யாயம் முற்றிற்று.

ப-ரை] யே து - எவர்கள், தர்ம்யாம்ருதம்-தர்ம்ய — தர்மத்தைவிட்டு விலகாததும், அம்ருதம் - அம்ருதம்போல போக்யமுமான, இதம் - இந்தப் பக்தியோகத்தை, யதோக்தம் - கீழ்ச்சொல்லியபடி, ஶ்ரத்தாநா: - ச்ரத்தையோடு கூடியவர்களாயும், மத்பரா: - என்னையே அடையவேண்டிய முக்யமான ப்ரயோஜனமாக உடையவர்களாய்க் கொண்டும், பர்யுபாஸதே - உபாஸிக்கிறார்களோ, தே - அந்த, பக்தா: - பக்தர்கள், மே - எனக்கு, அதீவ - மிகவும், ப்ரியா: - இஷ்டர்கள். 20

பா] தர்ம்யமாயும், அம்ருதமாயும் இருக்கிற அதாவது அடையவேண்டிய

---

களுடைய ப்ரஸ்தாவம் வந்ததின்மேல் ஜீவாத்ம யோகம் பரம்பரையாகப் பக்தியோகத்திற்கு ஸாதனம் என்பதும் அதற்குவேண்டிய குணங்களும் சொல்லப்பட்டதுகள். பிறகு கீழேவிவரமாகச் சொல்லப்பட்டிருக்கிற இந்த அத்யாயத்தின் ஆரம்பத்திலிருக்கிற கேள்வியின் பதிலை உபஸம்ஹாரம் செய்கிறார், என்று சொல்லுகிறார்—இப்படிப் பட்ட' என்று ஆரம்பித்து. 'மய்யாவேஶ்ய மநோயேமாம்' என்கிற ஶ்லோகமும் இந்த ஶ்லோகமும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறதாகத் தோன்றுகின்றன அல்லவா என்கிற அபிப்ராயத்தினால்—'ஆரம்பித்ததை அனுஸரித்து' என்று சொல்லப்பட்டது. அந்த ஶ்லோகத்தில் நித்ய யுக்தா: என்று சொல்லப்பட்ட அர்த்தமே இந்த ஶ்லோகத்திலும் 'மத்பரா:' என்பதினால் சொல்லப்படுகிறது. அந்த ஶ்லோகத்தில் 'ஶ்ரத்தயாபரயோபேதா:' என்று சொல்லப்பட்டது, இந்த ஶ்லோகத்திலும் அதுவே 'ஶ்ரத்தாநா:' என்று சொல்லப்படுகிறது அந்த ஶ்லோகத்தில் 'தேமேயுக்ததமாமதா:' என்று சொல்லப்பட்டது இந்த ஶ்லோகத்திலும் அதினாலேற்பட்டதாகையினால் 'பக்தாஸ்தேऽதீவ மேப்ரியா:' என்று சொல்லப்படுகிறது. ஆகையினால் அந்த அர்த்தமே இந்த ஶ்லோகத்திலும் உபஸம்ஹாரம் செய்யப்படுகிறது. இந்தஶ்லோகம் வேறு அதிகாரியைப்பற்றியது என்பதற்குக் காரணங்கள் து என்னும் பதமும், இன்னும் சில விஶேஷணங்களும், என்பது முன்

ப்ரயோஜனத்திற்கு ஸமமானதாயும், அடைவதற்கு உபாயமாகவுமிருக்கிற பக்தியோகத்தை எவர்கள, 'ஶ்ரத்தாநா மத்பரமா' என்றுஆரம்பித்துச் சொல்லப்பட்ட விதமாக உபாஸிக்கிறார்களோ அந்தப் பக்தர்கள் அதிகமாக எனக்கு ப்ரியர்கள். 20

*ஸ்ரீ பகவத் ராமாநுஜன் என்னும் உடையவர் அருளிச்செய்த*

ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தில் பன்னிரேண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

பகவதே பாஷ்யகாராய நமஃ

*எம்பெருமானார் திருவடிகளே சரணம்.*

---

*பே சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்திலேயே ஷட்கத்தின் முக்யமான அர்த்தமாகிய பக்தியோகத்தைப்பற்றியும் உபஸம்ஹாரம் செய்யப்பட்டதாகிறது. 'தர்ம்யாம்ருதம்' என்பதினால் சொல்லப்படுகிற இரண்டு ஆகாரத்தையும் சொல்லுவதற்காக அதற்கு உபயோகமாகிய கர்மதாரயஸமாஸம் என்பதைக்காட்டுகிறார்—'தர்ம்யமாயும் அம்ருதமாயுமிருக்கிற' என்று. தர்மத்தைவிட்டு விலகாதது தர்ம்யம் என்னப்படுகிறது. ஆகையினால் இவ்விடத்தில் 'தர்ம்யம்' என்னும் பதத்தினால் இஷ்டபலத்திற்கு ஸாதனம் என்று சொல்லப்படுகிறபடியினால் அம்ருதம் என்னும் பதத்தினால் மோக்ஷத்திற்கு ஸாதனம் என்பது சொல்லப்படுகிறதில்லை, ஆகையினால் ப்ரயோஜனத்தைப்போல போக்யம் என்பது சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து. பரம்பரையாக ப்ரஸ்தாவத்தினால்வந்திருக்கிற கர்மயோகத்தைச் சொல்லியிருப்பதை விலக்குவதற்காக—'ஶ்ரத்தாநா' என்பது முதலியது சொல்லப்பட்டது. முன்பு சொல்லப்பட்டவர்களுக்கும் பக்தர்களாக இருப்பது உண்டு, ஆகையினால் அவர்களை விலக்குவதற்காக— 'அந்த பக்தர்கள்' என்று விசேஷித்து சொல்லப்பட்டது. முன்பு சொலலப்பட்டவர்களிடத்தில் ப்ரீதி அவர்கள் உதாரர் என்பதினால் உண்டானது. இவர்களிடத்திலோ வெனில் தனக்கு மிகவும் இஷ்டமான அந்தராத்மா என்பதினாலுண்டானது, ஆகையினால் அதிகமாக ப்ரியர்கள் என்பது சொல்லப்பட்டது. முன்னமே 'உதாராஸ்ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்' என்றாரம்பித்து, 'ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்று சொல்லப்பட்டது. இத்தால் 'அத்வேஷ்டா' என்றாரம்பித்து ப்ரஸ்தாவித்துக்கொண்டு வரப்பட்ட தர்மங்களின் கூட்டம் 'யே து தர்ம்யாம்ருதம்' என்கிற ஶ்லோகத்தினால் உபஸம்ஹாரம் செய்யப்படுகிறது, என்று மற்றவர்கள் சொன்ன அர்த்தம் நிரா*

கரிக்கப்பட்டது, வேறு அதிகாரியைப்பற்றியது என்பது முன்பே நிரூபிக்கப்பட்டிருக்கிறபடியினால் 20

ஸர்வதந்த்ர ஸ்வதந்திரரான ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்
அருளிச் செய்த தாத்பர்ய சந்த்ரிகையில்

பன்னிரெண்டாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:

இரண்டாவது ஷட்கம் முற்றிற்று.



## ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்கிரகம்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

பக்தே: ச்ரைஷ்ட்யமுபாயோக்திரசக்தஸ்யாத்மநிஷ்டதா ।
தத்ப்ரகாராஸ்த்வதிப்ரீதி: பக்தே த்வாதச உச்யதே ‖ 16

ப - ரை] பக்தே: - பக்தியின், ச்ரைஷ்ட்யம் - மேன்மையும், உபாயோக்தி: - அதின் உபாயத்தை நிரூபிப்பதும், அசக்தஸ்ய - அதிலும் சக்தி இல்லாதவனுக்கு, ஆத்மநிஷ்டதா — ஆத்மாவினிடத்தில் நிஷ்டையை உடையவனாக இருக்கையும், தத்ப்ரகாரா: - அதற்கு வேண்டிய விதங்களும், பக்தே - பக்தனிடத்தில், அதிப்ரீதி: - அதிகமான ப்ரீதியும், த்வாதசே — பன்னிரெண்டாவது அத்யாயத்தில், உச்யதே - சொல்லப்படுகிறது.

ஸ்ரீமன் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச் செய்த

கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷை.

இந்த இடத்தில் பாஷ்யத்தில் பிறகு ஆத்மாவை அடைவதற்கு ஸாதனமாகிய ஆத்மாவைப்பற்றிய உபாஸனத்தைவிடப் பக்தியோகமாகிய பகவானைப்பற்றிய உபாஸனம் தன்னுடைய ப்ரயோஜனத்தை உண்டாக்குவதில் சீக்கிரமாக இருப்பதினாலும், ஸுகமாகச் செய்யக் கூடியதாகையினாலும், சிறந்தது என்பதும், பகவானைப்பற்றிய உபாஸனத்தின் உபாயமும், அதில் சக்தி இல்லாதவனுக்கு ஆத்மாவினிடத்தில் நிஷ்டையும, அதற்கு வேண்டியவைகளும் சொலலப்படுகின்றன, என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விடத்தில் 'அதிப்ரீதிர்பக்தே' என்பதைச்சொல்லியிருப்பது. இதுமுன்பு சொல்லியிருப்பதை உபஸம் ஹாரம்செய்திருக்கிறது என்று தெரிவிப்பதற்காக 'உபாயோக்திரசக்தஸ்யாத்மநிஷ்டதா'என்று ஆரம்பித்து இரண்டு ஶ்லோகங்களினால் செய்யப்பட்டிருக்கிறது. பகவானிடத்தில் மனதைச் செலுத்த ஶக்தி இல்லாதவனுக்குப் பகவானுடைய குணங்களை எப்பொழுதும் த்யானம் செய்துகொண்டு இருத்தலும், அதிலும் சக்தி இல்லாதவனுக்கு ப்ரீதியுடன் பகவானுக்கு அஸாதாரணங்களான கைங்கரியங்களைச் செய்தலும், அதிலும் சக்திஇல்லாதவனுக்குஜீவாத்மாவினிடத்தில் நிஷ்டையும் செய்யவேண்டியது, என்று க்ரமம்'தத்ப்ரகாரா:' என்பது கர்ம யோகம்முதலியவைகளுக்கு வேண்டியவைகளாகவும்'அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்' என்று ஆரம்பித்துச் சொல்லப்பட்டவைகளுமான அவச்யமாக அங்கீகரிக்கத்தக்க குணங்களின் ப்ரகாரங்கள், அப்படியே அந்த

ஶ்லோகத்தின் வ்யாக்யானத்தில் பாஷ்யத்தில் 'பலத்தை ஆசைப்படாமல் கர்மங்களில் நிஷ்ட்டையை உடையவனுக்கு அங்கீகரிக்கத்தக்க குணங்களைச் சொல்லுகிறார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'அத்வேஷ்டேதி' என்பது 'யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம்' என்று ஆரம்பித்து இந்த அத்யாயத்தின் கடைசி ஶ்லோகத்தினால் சொல்லப் பட்டது. அதின் தாத்பர்யமும், பாஷ்யத்தில் இப்படிப்பட்டவனாகிய ஆத்மாவினிடத்தில் நிஷ்ட்டையை உடையவனைப் பார்க்கிலும் பக்தி யோகத்தில் நிஷ்ட்டையை உடையவன் சிறந்தவன் என்பதை நிரூபித்துக்கொண்டு ஆரம்பித்திருப்பதை அனுஸரித்து முடிக்கிறார், என்று சொல்லப்பட்டது. 16

பன்னிரண்டாம் அத்யாயம் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமன் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டு.

*சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*

தன்கழலிற்பத்தி தாழாதது மதின்காரணமாம்
இன்குணர் சிந்தையு மீதறியார்க் கவ்வடிமைகளும்
தன்கருமங்க ளறியாதவர்க் கிலகு நிலையும்
தன்கழலன்பர்க்கு நல்லவன் சாற்றினன் பார்த்தனுக்கே. 13

ப - ரை] தன் - தன்னுடைய, கழல் — திருவடிகளில், அன்பர்க்கு - பக்தியுள்ளவர்களுக்கு. நல்லவன்-அனுக்ரஹமுடையவனுகிய பகவான், தன் - தன்னுடைய, கழலில் - திருவடிகளின் விஷயமான. பத்தி - பக்தியோகம், தாழாததும் - ஸாவகாசப்படாமையும், அதின் - அந்த பக்தி யோகத்திற்கு, காரணமாம் - காரணமாகிய, இன் - போக்யமான, குணர் - குணங்களை உடைய பகவானைப்பற்றிய, சிந்தையும் - த்யானமும், ஈத றியார்க்கு - இந்த அப்யாஸத்தைச் செய்ய அசக்தர்களுக்கு, அவ்வடிமை களும் - அப்படிப்பட்ட கைங்கரியங்களும், தன் கருமங்கள் - தனக்கு அஸாதாரணமான கைங்கர்யங்களை, அறியாதவர்க்கு - தெரிந்துகொள்ளா தவர்களுக்கு (அதாவது சக்தி இல்லாதவர்களுக்கு), இலகு நிலையும் - ஸுலபமாகச் செய்யக்கூடியதான ஆத்ம நிஷ்டையும், பார்த்தனுக்கு - அர்ஜுனனுக்கு, சாற்றினன் - சோன்னன். 13

*தன்கழலில் பத்திதாழாததும், என்பதினுல், ப்லோகத்திலிருக் கிற 'ஸ்ரேயோஹி' என்பதின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. இவ்விடத்தில் பொதுவாக ப்ரைஷ்ட்யம் என்று அனுஸந்திக்கப்பட்ட போதிலும் ஸுலபமாகச் செய்யக்கூடியதாக இருப்பதினுலும் ஸுக மாகச் செய்யக்கூடியதாக இருப்பதினுலும், எல்லாவற்றையும் விட மேலான பலத்திற்கு ஸாதனமானதினுலும், பக்தியோகம் சிறந்தது என்பது, பலஇடங்களிலும் கீழே சொல்லப்பட்டபடியினுல் இந்த அத் யாயத்தில் தன்பலத்தைச் சீக்கிரமாகக் கொடுப்பதினுலேயே மேன்மை சொல்லப்படுகிறது, என்று பாஷ்யகாரர் அருளிச்செய்திருப்பதினுல், 'ஸ்ரேஷ்டம்' என்பது சீக்கிரமாகப் பலத்தைக் கொடுப்பதினுல் உண் டான மேன்மையையே சொல்லுகிறது, என்று திருவுள்ளம். அன்றிக் கே தாழாததும் என்பதற்கே சிறந்ததாக இருப்பதற்கு என்றர்த்த மாகவுமாம். அப்பொழுது மற்ற மேன்மைகள் முன்னமே சொல்லப் பட்டபடியினுல் சீக்கிரமாகப் பலத்தைக் கொடுப்பதாகிய மேன்மையே இங்கே சொல்லப்படுகிறது, என்று தாத்பர்யமாகக்கொள்ளவேண்டி*

யது. அதின் காரணமாம் என்பது முதல் அவ்வடிமைகளும் என்கிற வரையிலும் பதங்களினுல் 'உபாயோக்ஷ:' என்பதின் அர்த்தம் விவரிக்கப்பட்டது இன என்பதற்கு போக்யங்களான என்றர்த்தம், இது குணங்களுக்கு விசேஷணம், அப்போது இப்படிப்பட்ட குணங்களையுடைய பகவானைப்பற்றிய சிந்தனம் ஸுலபமாகச் செய்யமுடியும் என்பதும், 'நின்று நின்றவன் குணங்களுள்ளி உள்ளம் தூயராய்' என்றும், 'மாற்பான் மனம் சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு' என்றும் சொல்லுகிறபடியே போக்யதையாலே அவன் குணங்களை அனுஸந்திக்க பாவம்தானுகவே நிவ்ருத்தித் துவிடும், மற்றவிஷயங்களில் வைராக்யமும் உண்டாகும் என்று ஸூசிப்பிக்கப்பட்டது. அன்றிக்கே இன் என்பதற்கு ஸுகரூபமான என்றர்த்தம். அப்பொழுது பகவானிடத்தில் த்வேஷம் முதலியவைகளில்லாமல் மிகுந்த ப்ரீதியுடன் த்யானம் செய்கிறபடியினுல் அந்தத்யானமும் ஸுகரூபமாக ஆகிறது. இத்தால் ஹிரண்யன் முதலியவர்களைப்போல த்வேஷத்தினுல் நினைக்கிறதை விலக்குகிறது. அவர்களுக்கும் மோக்ஷம் கிடைத்ததாக 'வைது நின்னை வல்லவா பழித்தவர்க்குமாறில் போர்செய்துநின்று செற்றதீயில் வெந்தவர்க்கு முன்றனை எய்தலாகும்' என்றும், 'காமாத்3வேஷாத்3 ப4யாத் ஸ்நேஹாத்3 யதா2 ப4க்த்யேஶ்வரே மன꞉' என்றும் சொல்லப்படவில்லையோ என்னில் அவர்கள் பகவானுடைய லோகங்களிலிருக்கும் த்வாரபாலகர்கள் என்றும், சாபத்தினுல் இவ்விதமாகப் பிறந்தார்கள், அதின்முடிவில் அந்த பகவானுடைய லோகத்திற்கே போனுர்கள் என்றும், அவரவர்களின் சரித்திரத்தினுலேயே ஏற்படுகிறபடியினுல் விரோதமில்லை, என்று கருத்து. இலகு நிலையும் என்பது ஆத்மாவின் ஸாக்ஷாத்காரத்தைப பலமாகக்கருதிக்கொண்டுசெய்யும் கர்மயோகநிஷ்டை. 'ஸஙூ கஊ ஹமுத்யாமஜுத' கூாமாயதாத்ம்வாநு' என்றல்லவோ சொல்லப்பட்டது. இத்தால் 'ஊமக்ஷ்ஸ்யாத்ம நிஷ்டா:' என்றதினர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. இங்கு நிலையும என்பதினுல் அந்த கர்மநிஷ்டைக்கு வேண்டியவைகளான அத்3வேஷ்டா என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட குணங்களும் குறிக்கப்படுகின்றன. தன்கழலன்பர்க்கு நல்லவன் என்பதினுல் இந்த அதயாயத்தின் கடைசி ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதாயும் 'அதீவ ப்ரியா:' என்று ஸங்க்ரஹத்தில் சொல்லப்பட்டதாயுமிருக்கிற அர்த்தம் அருளிச்செய்யப்பட்டது. 13

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.